ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட

ஆயிரம்மடங்கதிஶயித்த

பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்

ப்ரபந்நஜநகூடஸ்த்தராய் எழுந்தருளியிருக்கும்

மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

## பத்தாம்பத்து.

## மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்

இவை,

ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமாந்-ஆழ்வார்திருநகரி வடபத்ரஶாயி

அரையர்ஸ்வாமி அவர்களாலும்

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,

கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்

அநேகப்ரதிகளைக்கொண்டு பரிஶோதிக்கப்பட்டு

சென்னை: ராமாநுஜஸித்தாந்தஸபாத்யக்ஷராகிய

ஸ்ரீமாந்,

முதலியாண்டான் முன்னிலையில்

புலியனூர்-இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்

பு. கிருஷ்ணஸ்வாமிமுதலியார் அவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார் திருவவதாராதிவர்ஷம்-சுகஅஎ-பார்த்திவவர்ஷம்.

April 1886.



ஶ்ரீ

    

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

எம்பெருமானார்திருவடிகளேஶரணம்.

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## முதற்றிருவாய்மொழி.

### தாளதாமரை - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(தாளதாமரை) திருக்கண்ணபுரத்தி லெம்பெருமானை யநுபவித்து, இப்போது திருமோகூரி லெம்பெருமானை யநுபவிக்கிறார்..........*

### பன்னீராயிரப்படி.

பத்தாம்பத்தில், கீழ்ப்பத்திலே, சர்வேஶ்வரனுடைய பலரூபத்வத்தை நிரூபித்தருளி ததநுபவரூபமான பலத்தினுடைய அவாப்தி ப்ரகாரத்தை யிப்பத்திலே நிரூபித்தருளுவதாகக்கொண்டு; ஆப்தனான வவனுடைய கதிசாஹாய்யத்தையும், முன்புண்டான துரத்வ க்லேஶ சாந்தியைப்பண்ணும் போக்யநாமாதி யோகத்தையும், சம்ஶ்லிஷ்டனா யிருக்கச்செய்தே விஶ்லேஷ சங்கைபண்ணி க்லேஶிக்கும்படியான சாரஸ்யாதிசயத்தையும், அநந்யசாதநரோபாதி உபாஸகர்களுக்கும் ப்ராப்யனா மாகாரத்தையும், சப்ரகாரோபாஸநபரர்க்கும் அநிஷ்டநிவ்ருத்தீஷ்ட ப்ராப்திகளுக்குத் தானே நிர்வாஹகனென்னுமிடத்தையும், ததீயசேஷத்வபர்யந்தமாகத் தன்னை யாஶ்ரயித்தாருடைய சித்தாநுவிதாநம்பண்ணிக்கொண்டு பலப்ரதாநத்திலே உத்யுக்தனாம் படியையும், தன்பக்கல் ப்ரவணரானாருடைய சீராதிகளையும் தான் விரும்பாநின்று கொண்டு அவர்கள் அபேக்ஷைக்காக அவற்றை விடுவிக்கும்படியையும், யாத்ருச்சிகமான ஆநுகூல்யமே பற்றாசாக யதாவத் போகப்ரதனாகையும், போகஸித்திக்குறுப்

பான வர்ச்சிராதிமார்க்கத்தில் ஆதிவாஹிக சத்கார ப்ரதர்ஸநத்தையும், ஃதிசயிதை யான பரபக்திருபமான அபிநிவேசத்தையுடைய தமக்கு ஸ்ரீயஃபதியான தன்னோடு ண்டான ஸ்த்திர சாயுஜ்ய ப்ரகாசத்தைப் பண்ணினபடியையும் அபரோக்ஷித்து அத்யந்த ஹ்ருஷ்டராய், அவாப்தபலராய் முடித்தருளுகிறார்.........................*

முதற்றிருவாய்மொழியில், கீழ் ப்ரஸ்துதமான கைங்கர்யப்ரதிசம்பந்தித்வம் ஒருதேசவிசேஷத்திலே பூர்ணமாயிருக்கையால், இந்ததேசத்தில்நின்று மங்கேறப் போகைக்கு பாதகமான நம்முடைய விரோதியைக்கழித்து உகப்போடே வழிநடத்திக்கொண்டுபோவானொரு சஹாயபூதன் வேணும் என்றறுதியிட்டு; திருமோகூரிலே சந்நிஹிதனான சர்வேஸ்வரனுடைய நிர்ப்பாதகபோக்யமான வுதாரரூபதையையும், நித்யாநுபாவ்யத்வயுக்தமான நாமபூர்த்தியையும், நிகிலஜகத் ரக்ஷகத்வத்தையும், ரக்ஷணார்த்தமான வநந்தசாயித்வத்தையும், அசேஷஜநசம்ஸ்லேஷத்தையும், அநுபவப்ரீதிகரமான வாப்தத்வத்தையும், அகிலலோக ஸ்ரஷ்ட்ருத்வத்தையும், அவதாரப்ரயுக்தசீல சீதளத்வத்தையும், அவயவவைலக்ஷண்யத்தையும், ஆஸ்ரிதரக்ஷணத்தில் அபீஷ்டவிக்ரஹ பரிக்ரஹத்தையு மநுசந்தித்து, ஏவம்விதனான சர்வேஸ்வரனே நமக்கு வழித்துணையாவான் என்று காளமேகத்தின் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றி யருளுகிறார்...........................................................*

ஈடு.

“நாளேலறியேனெனக்குள்ளன” என்றார்; “மரணமானால்” என்றறுதியிட்டுக் கொடுத்தானீஸ்வரன். அவன் “செய்கிறோம்” என்று தலைதுலுக்கினால், அதுபெற்றதாய் மேல் நடக்கலாம்படியா யிருக்குமிறே கார்யம். ஆகையாலே, (காலாவதிபெற்றாராய்) போக்கிலேயொருப்பட்டார்; போமிடத்தில், முகம்பழகின தேஹத்தையும்விட்டு நெடுநாள் வாஸநைபண்ணின பந்துக்களையும் விட்டுத் தனியேயாய், போகிறவிடந்தான் கண்டறியாத நிலமாய், நெடுங்கைநீட்டாய், வழியிலே ப்ரதிபந்தகங்களும் குவாலாய் – அவித்யாகர்மவாஸநாருசிகளென்றுப்போலே சொல்லுகிறவற்றுக்கு மோரவதியில்லையிறே; இவற்றையடையப்போக்கி வழித்துணையாய்க்கொண்டு போம்போது சர்வேஸ்வரன்றன்னையே பற்றவேணும். அதுவென், இவன்தானே தனக்குத் துணையானாலோ வென்றால்; இன்றளவும் வர சம்சரிக்கைக்குக் காரியம்பார்த்துப் போந்தவனிறேயிவன்; இஸ்ஸரீரத்தோடே யிருக்கிறநாளிலே ஹிதசிந்தை பண்ணினானேயாகிலும் இவனுடைய பூர்வவ்ருத்தத்தைப்பார்த்தால் இவன்தான் தனக்குத் துணையாகமாட்டானே. வழிகொடுபோமிடத்தில் இவர்க்கு வரும் விரோதிகளை யறிகைக்கு சர்வஜ்ஞனாகவேணும், அறிந்தால் அவற்றைப் போக்கிக் கொடுபோகைக்கு சர்வசக்தியாகவேணும், “யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்” (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) இத்யாதி ப்ரமாணங்களாலே - சர்வேஸ்வரனை “ஸர்வஜ்ஞ, ஸர்வஶக்தி” (ஸர்வஜ்ஞன்,ஸர்வஶக்தி) என்னநின்றதே. சக்தியுண்டானாலும் ப்ரயோஜநமில்லையே, ப்ராப்தனாகவேணும். “மாதாபிதாப்ராதா” (மாதாபிதாப்ராதா) இத்யாதியாலே-அவ

னே சர்வவிதபந்துவுமாகச் சொல்லாகின்றதே; [ எம்மானுமெம்மனையு மித்யாதி ] ராகாந்தராய் ப்ரஜையைப்பெற்று "யௌவநவிரோதி" என்று பொகட்டுப்போவர்கள்; இவன்ருன் வாஸனைபண்ணின முகத்தாலே "அம்மே!" என்றபோதாக, பெண்குரலாலே "ஏன்" என்றும், "அப்பா" என்றபோதாக, ஆண்குரலாலே "ஏன்" என்றும், இப்படி முகங்கொடுத்துக்கொண்டு போகக்கடவனு யிருக்குமிறேயவன். சரீரமானது கட்டுக்குலைந்து ப்ராப்யபூமியிலே போய்ப் புகுமளவும் செல்ல நடுவுண்டான விரோதிகளைப்போக்கிக் கொடுபோகைக் கீடான விரகறியுமவனுக வேணும், விரோதிதன்னை யிருதுண்டமாகவிட்டுக் கொடுபோகவல்ல சக்திமானுகவேணும், தான் தனக்குத் தஞ்சமல்லாதவன்று இவன்றனக்குத் தஞ்சமென்று தன்னை யிவன்கையிலே காட்டிக்கொடுக்கும்படி யாப்தனுகவேணும். "ஸர்வஜ்ஞ, ஸர்வஶக்தி" (ஸர்வஜ்ஞன்,ஸர்வஶக்தி) என்று தானே ப்ரமாணப்ரசித்தன்; "தஞ்சமாகியதந்தைதாயொடுதானுமாய்" என்று இவர்தாமே "தஞ்சம்" என்றுரே. "மயர்வறமதிநலமருளினன்" என்று - தயாவானென்னுமிடம் தாமே கைகண்டார். இனி சேஷியாயிருக்கையாலே தானே ப்ராப்தனுயிருக்குமிறே.

ஆக, "நம்விரோதிகளைப் போக்கி ப்ராப்யபூமியளவும் கொண்டுபோய் வழிநடத்துவான் காளமேகம்" என்றத்யவசித்து; அருநிலங்களிலே வழிபோவார் "அகப்படை" என்று மிடுக்கராயிருப்பாரைக் கூட்டிக்கொண்டு தம் கைப்பொருளை அவர்கள் கையிலே கொடுத்து அமர்ந்தநிலத்திலே சென்றவாறே வாங்கிக்கொள்ளுவாரைப்போலே, சரீரவிஶ்லேஷசமயத்தில் காளமேகத்தின் பக்கலிலே ஆத்மநிக்ஷேபத்தைப் பண்ணி, "ப்ராப்யபூமியிலேபுக்கால் பின்னை நமக்காக்கிக்கொள்ளக்கடவோம்" என்று வழித்துணையாகப் பற்றுகிருர். இஸ்ஸ்வபாவங்க ளொன்றுமில்லையேயாகிலும், அவன்முன்னேபோகப் பின்னேபோகாநின்ருல் அவ்வடிவழகுதன்னை யநுபவித்துக்கொண்டுபோமதுவே ப்ரயோஜநமாகப் போரும்படியாய்த்திருப்பது. "வள்ளலேயுன்றமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல்" என்கிறபடியே, எதிரிகள் கூசிப்போம்படி மதிப்பனுயிருப்பானொருவனைப் பற்றவேணுமிறே. "பரிஹரமதுஸூதநப்ரபந்நாந்" (பரிஹரமதுஸூதந ப்ரபந்நாந்) என்று அவனும் சொல்லிவைத்தானிறே. .......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

தாளதாமரைப்ரவேஶே, கீழ்க்தார்த்தத்தை யநுவதித்துக்கொண்டு, இத்திருவாய்மொழியில் காளமேகத்தை வழித்துணையாகப் பற்றுகைக் குறுப்பான வுபபத்தியை யருளிச்செய்வதாக வதிஷ்ட்டிகை ( நாளேலித்யாதிவாக்யத்வயம். ) உக்திமாத்ரத்தாலே பெற்றதாமோவென்ன ( அவன்செய்கிறேமித்யாதி. ) இப்படி நிஶ்சயித்தாலும் தேசஸ்வபாவத்தையும் விரோதிபாஹுள்யத்தையும் பார்த்தால் சர்வே

ஸ்வரனையே துணையாகப் பற்றவேணுமென்கிறார் ( ஆகையாலேயித்யாதி. ) ஒருப்படுகை - உத்யோகப்படுகை. நெடுங்கைநீட்டாய் - அதிதூரமாய். குவாலாய்-அதிகமாய். குவாலானவை யெவையென்ன ( அவித்யேத்யாதி ; ) அவித்யாதிகளடியாக பாதிக்கிற யமகிங்கரரை நினைக்கிறது. பூர்வம் சம்சரித்தானேயாகிலு மிப்போது ஹிதசிந்தைபண்ணுகிறானே, அதுதுணையாகாதோ வென்ன ( இஸ்வரோத்யாதி ; ) ஆகையாலே சர்வேஸ்வரனே துணையாகவேணுமென்றபடி. ஹிதசிந்தைபண்ணினானே யாகிலுமென்றது - ப்ரபத்திபண்ணினானேயாகிலு மென்றபடி. அவனே துணையாகவேணுமென்கிற நிர்ப்பந்தமேதென்ன ( வழிகொடுவித்யாதி. ) "உலகுசெய்வான்" என்று - ஜகத்காரணத்வம் சொல்லுகையாலே, சர்வஜ்ஞத்வாதிகளும் சித்தம். அவனுக்கு சர்வஜ்ஞத்வாதிக ளுண்டென்னுமதுக்கு ப்ரமாணம் ( யஸ்ஸர்வஜ்ஞ இத்யாதி ) இயம் முண்டகோபநிஷதி. "பராஸ்யஶக்திர்விவிதைவ" ( பராஸ்யஶக்திர்விவிதைவ ) இத்யாதி, "ஸர்வஶக்தி" என்னுமதுக்கும். சர்வஜ்ஞத்வாதிக ளபேக்ஷிதமானவோபாதி சம்பந்தமும் வேணுமென்கிறார் ( சக்தியுண்டானாலுமித்யாதி. ) ப்ராப்திக்கு ப்ரமாணத்வயம் (மாதாபிதேத்யாதி, எம்மானுமித்யாதி) "மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண꞉" (மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண꞉) இதி ஸுபாலோபநிஷதி திருமொழி ஏழாம்பத்து இரண்டாந்திருமொழி மூன்றாம்பாட்டு, "எம்மானுமெம்மனையுமென்னைப்பெற்றொழிந்ததற்பின்-அம்மானுமம்மனையுமடியேனுக்காகிநின்ற-" என் பிதாவும் என் மாதாவும் என்னைப்பெற்று "யௌவநவிரோதி" என்று விட்டுப்போனபின்பு, அந்த பிதாவும் மாதாவு மடியேனுக்காகிநின்றவென்றுசப்தார்த்தம். எம்மான் - என் பிதா. எம்மனை - என் தாய். அம்மான் - தமப்பன். அம்மனை-தாய். இதுக்கர்த்தம் ( ராகாந்தராயித்யாதி. ) அபேக்ஷித குணாந்தர கதநார்த்தமாக கீழுக்தத்தை மீளவு மருளிச்செய்கிறார் ( சரீரமானதித்யாதி. ) "அசுரரைத்தகர்க்கும்," "துணிக்கும்வல்லரட்டன்" இத்யாதியையுட்கொண் டருளிச்செய்கிறார் ( விரோதிதன்னையித்யாதி. ) "திருமோகூராத்தன்" என்கையாலே - (ஆப்தன்.) ஜ்ஞாநசக்திகள் ப்ரமாண ப்ரசித்தங்களென் றருளிச்செய்யா நின்றுகொண்டு, இவனுடைய வாப்ததைக்கும் ப்ரமாணமருளிச்செய்கிறார் ( சர்வஜ்ஞனித்யாதி வாக்யத்வயத்தாலே.) இக்குணங்கள் கார்யகரமாம்போது தயைவேண்டாவோவென்ன (மயர்வறவித்யாதி.) கைகண்டாரென்றது - "அருளினன்" என்றத்தைப்பற்ற. கர்மோபாதிகமாய்வந்த பாந்தவமேயன்றிக்கே, நிருபாதிகசம்பந்தமு மிவனுக்குண்டென்கிறார் (இனிசேஷியாயித்யாதி.)

இப்படி விரோதிகளைப் போக்குகைக் கநுகுணமான குணங்களை தர்ஸிப்பித்தவநந்தரம், இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தைச் சேரப்பிடித் தருளிச்செய்கிறார் ( ஆகவித்யாதி. ) அருநிலங்கள் - பயாதிக்யத்தாலே போகவரிதான ப்ரதேசங்கள். அகப்படை - அந்தரங்கபரிகரம். அமர்ந்தநிலத்திலே வாங்கிக்கொள்வாரைப்போலே யென்றது - லௌகிகத்ருஷ்டார்த்தமத்தனையல்லது, அவன்கையிலே வாங்கிக்கொள்ளவில்லையிறே; அன்றிக்கே, "திருவேங்கடத்துக்கிவைபத்தும் பிடித்தார்பிடித்தார்-பெரியவானுள்நிலாவுவர்" என்கையாலே - இது ஆஸ்ரயணீயஸ்த்தலமும் அது போகஸ்த்தலமுமாகையாலே சொல்லுகிறானென்றால் நல்லது. இங்கு ஆத்மநிக்ஷேபமாவது - துணையாகவேணுமென்கிற ப்ரார்த்தனை. தேஹவிஸ்லேஷதசையிலு மாத்மசமர்ப்பணம் பண்ணவேணுமோவென்ன ; ஆர்த்த ப்ரபந்நராகையாலே பண்ணுகிறாரென்றருளிச்செய்வர்.

“தோளுநான்குடைச் சுரிகுழல்” இத்யாதியைப்பற்ற வருளிச்செய்கிருர் (இஸ்ஸ்வபாவங்களித்யாதி.) சக்தியுண்டானாலும் போராது, மதிப்பும் வேணுமென்கிருர் (வள்ளலேயித்யாதி.) மதிப்புக்கு ப்ரமாணம் (பரிஹரேத்யாதி) “𑌸𑍍𑌵𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑌭𑌿𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌪𑌾𑌶𑌹𑌸𑍍𑌤𑌂 𑌵𑌦𑌤𑌿 𑌯𑌮𑌃 𑌕𑌿𑌲 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌣𑌮𑍂𑌲𑍇। 𑌪𑌰𑌿𑌹𑌰 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑌹𑌮𑌨𑍍𑌯𑌨𑍃𑌣𑌾𑌂 𑌨 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌨𑌾𑌮𑍍” (ஸ்வபுருஷமபிவீக்ஷ்யபாஶஹஸ்தம் வததியமஃகிலதஸ்யகர்ணமூலே। பரிஹரமதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம்நவைஷ்ணவாநாம்) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. “வள்ளலே” என்கிறவிடத்திலே அவனுக்கு மதிப்புத் தோற்றிற்றில்லையேயாகிலும், அவன்தமர்க்கதுண்டாகையாலே அவனுக்கு கிம்புநர்ந்யாயசித்தமிறேயென்று கருத்து. சக்தியுண்டானல் போராதோ, மதிப்பும்வேணுமோவென்ன; “ருத்ரன் சக்திமானுயிருக்கச்செய்தேயும் மதிப்பில்லாமையாலே மார்க்கண்டேயன் நிமித்தமாக விழிப்புண்டானிறே” என்றருளிச்செய்வர்.

(ப்ராப்தனுயிருக்குமிறே) என்றவநந்தரம் (வள்ளலேயுன்தமர்க்கு) இத்யாதியை யநுசந்தித்து, அநந்தரம் (இஸ்ஸ்வபாவங்களொன்றும்) இத்யாதியையநுசந்தித்து, அநந்தரம் (ஆக நம்விரோதிகளைப்போக்கி) இத்யாதி வாக்யத்தையநுசந்திப்பது. (வள்ளலே) இத்யாதிக்கு ஸ்பஷ்டோர்த்தஃ. திருமொழி எட்டாம்பத்து பத்தாந்திருமொழி எட்டாம்பாட்டு, “வெள்ளைநீர்வெள்ளத்து” இத்யாதி. ......*





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## முதற்றிருவாய்மொழி.

## முதற்பாட்டு.

தாள்தாமரைத்தடமணிவயற்றிருமோகூர்
நாளுமேவிநன்கமர்ந்துநின்றசுரரைத்தகர்க்குந்
தோளுநான்குடைச்சுரிகுழற்கமலக்கட்கனிவாய்க்
காளமேகத்தையன்றிமற்றொன்றிலங்கதியே.

### ஆறாயிரப்படி.

பண்டுசெய்த வாஞ்ஜிதவிரோதி நிரஸநரூபமான பராக்ரமங்களைத் தோற்றுவிக்கிற திருத்தோள்களையும், அழகாலே நிரவதிகபோக்யமாயிருந்த திருக்குழல்களையும், திருக்கண்களையும்; திருப்பவளத்தையும், காளமேகம்போலே யிருந்த திருமேனியையு முடையனாய், திருநாட்டிற்காட்டிலும் திருமோகூரிலே அதிமாத்ரமாக ஸ்நேஹத்தைப் பண்ணி யெழுந்தருளியிருந்த வெம்பெருமானல்லது நமக்கு மற்றொரு ப்ராப்யமில்லை யென்கிறார். ...........................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனாய் நிரதிசயபோக்யபூதனான காளமேகத்தையொழிய நமக்கு சஹாயதயா கந்தவ்யரில்லையென்கிறார்.

தாள-தாளுரத்தையுடைய. தாமரை-தாமரைகளானவை. தடம் - தடாகங்களை. அணி-அலங்கரியாநிற்கிற. வயல்-வயலையுடைய. திருமோகூர்-திருமோகூரிலே. நாளும்மேவி-நித்யவாசம்பண்ணி. நன்கு-மிகவும். அமர்ந்துநின்று-ஸ்வயம்ப்ரயோஜநமாம்படி யுகப்போடே பொருந்திநிற்குமவனாய். அசுரரை-விரோதிகளானவசுரர்களை. தகர்க்கும் - புடைத்துப்பொகடும்படி. பரிகோபமமாய் வழிபோக்கில் நிழலைச் செய்யும்படி கற்பகப்பணைபோலேயிருக்கிற, நான்குதோளுடை - நாலுதிருத்தோளையுமுடையனாய். சுரிகுழல் - அத்வக்லேஶம்சமநமாய் துணையாகைக்கு யோக்யமான சுரிந்து துன்னுகுழலையுடையனாய். பின்பேவருகிற வென்னைப்புரிந்து கடாக்ஷிக்கைக்கீடான, கமலக்கண் - கமலம்போன்றகண்ணையுடையனாய். இளைப்பாறும்படி ஸ்மிதபாஷணம்பண்ணும், கனிவாய் - ஸ்நிக்தமான திருப்பவளத்தையுடையனாய்.

காளமேகத்தையன்றி - காளமேகம்போலே உதாரரூபத்தையுடையவனையொழிய. மற்றொன்றுகதி-வேறுநமக்குத்துணையாக கந்தவ்யமாயிருப்பதொருவஸ்துவை. இல ம்-உடையோமல்லோம்.

தாமரையைத்தடமணிந்ததா கவுமாம் ...........................................*

ஈடு - முதற்பாட்டு.

மரணமான மஹாபயத்துக்கு விரோதிநிரஸநசீலனான காளமேக மல்லது துணையில்லையென்று அவனைப்பற்றுகிறார்.

(தாளதாமரை) மலையைச் சுமந்தாப்போலே பூவின்பெருமை யைப் பொறுக்கவல்ல தாளையுடைய தாமரையென்கை. "உரம்பெற்றம லர்க்கமலமுலகளந்தசேவடிபோ லுயர்ந்துகாட்ட" என்னக்கடவதிறே. சேற்றின்நன்மையாலே யுரத்த தாளையுடைய தாமரையென்கை. (தடம ணி) இப்படிப்பட்ட பூக்களாலே யலங்கரித்தாப்போலே யிருக்குமாய்த் துத் தடம். [உரம்பெற்றமலர்க்கமலமுலகளந்தசேவடிபோலுயர்ந்துகா ட்ட] சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற கமலமானது ஓங்கியலர்ந் தபோது, திருவுலகளந்தபோதெடுத்த திருவடிகளுக்குப் போலியாயிருந் தது. [வரம்புற்றவித்யாதி] அப்போது, "ஸம்ஜ்ஞா ..." (ஸங் கைஸ்ஸூராணும்) என்கிறபடியே தேவர்கள் திரண்டு காலைநீட்டித் தலை யைவணங்கித் தெண்டனிட்டாப்போலே யிராநின்றதாய்த்து, செந்நெல் களானவை விழுந்து தலைசாய்ந்து கிடக்கிறபோது. இப்படிப்பட்ட தட ங்களையும் வயல்களையுமுடைத்தான திருமோகூர். ஊரில் போக்யதைய டைய வயலிலேகாணுமித்தனை. (நாளுமேவி) நாள்தோறு மத்யாதரத் தைப்பண்ணி. அவ்வூரில் விடிந்தவிடிவுதோறும், அவனுக்கு "ஸூப்ர ஹாதாஸமேநிஸா" (ஸூப்ரபாதாசமேநிஸா) என்னும்படியாய்த்திருப் பது. (நன்கமர்ந்துநின்று) இவ்வூரில் வாஸமொழிய வேறொருப்ரயோ ஜநத்தைக் கணிசியாதே இதுதானே ப்ரயோஜநமாக நின்று. (அசுரரித் யாதி) அசுரசங்கத்தைத் துணித்தடுக்கி விரோதியைப் போக்கிக்கொண் டு போகவல்லனென்று தோற்றும்படியான திருத்தோள்கள் நாலையுமு டைய. "இவரிப்போதறிந்தபடியெங்ஙனே" என்றுகேட்க, "விடுகாதா னலும்தோடிட்டுவளர்ந்த காதென்றுதெரியுங்காண்" என்றருளிச்செய் தருளினவார்த்தை. (சுரிகுழல்) நெடுநாட்பட சம்சாரத்திற்பட்ட சக லதாபங்களுமாறும்படி யிருக்குமாய்த்து, பின்னே போகிறவனுக்கு முன் னே போகிறவன் ஒருக்கால் திருக்குழலைக் குலைத்து நுழுந்த; "கேஸவ: க்லேஸநாஸந:" (கேஸவ:க்லேஸநாஸந:) (கமலமித்யாதி) க்ஷுத்ரவி ஷயங்களினுடைய பொய்யான நோக்கிலும் பொய்யான முறுவலிலுமகப் பட்ட நெஞ்சாறலெல்லாம் திரும்படி மெய்யானநோக்கும் மெய்யானமு றுவலுமிருக்கும்படி சொல்லுகிறது. (காளமேகத்தை) போம்போது

முன்னே மேகர் நீர்விடுமாபோலே, முன்னாய் காளமேகம் சௌந்தர்யாம்ருதத்தை வர்ஷித்துக்கொண்டுபோக, பின்னே அக்குளிர்வாசத்தையநுபவித்துப் போகலா யிருக்குமாய்த்து. (அன்றிமற்றொன்றிலம் கதியே) காளமேகத்தையொழிய வேறு வழித்துணையுடையோமல்லோம். .......*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (தாளதாமரையித்யாதி) "அசுரரைத்தகர்க்கும்" என்றுதொடங்கி "மற்றொன்றிலம்கதியே" என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை (மரணமானவித்யாதி.)

தாளில்லாத தாமரையில்லையேயாயிருக்க, "தாள" என்று விசேஷித்ததுக்கு பாவம் (மலையையித்யாதி) அப்படிப்பட்ட தாளுடைத்தோவென்ன (உரம்பெற்றவித்யாதி) சப்தார்த்தம் (சேற்றினித்யாதி) "தாளதாமரை-அணி-தடம்" என்றதன்வயித்தர்த்தம் (இப்படிப்பட்டபூக்களாலேயித்யாதி.) ப்ரஸ்துதமான "உரம்பெற்ற" இத்யாதிபாசுரத்துக் கர்த்தகதநார்த்தமாக ப்ரதிகோபாதாநம் (உரமித்யாதி) பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து ஒன்பதாந்திருமொழி எட்டாம்பாட்டு, "உரம்பற்றி" இத்யாதி. "உரம்பெற்ற" இத்யாதிக்கர்த்தம் (சேற்றுவாய்ப்பாலேயித்யாதி) "தாளதாமரை – அணி" என்றத்தை * தடத்துக்கும் * வயலுக்கும் விசேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (இப்படிப்பட்டதடங்களையுமித்யாதி) பலிதம் (ஊரிலித்யாதி) போக்யதாகதநத்தால்பாவம் (அவ்வூரில் விடிந்தவித்யாதி) அதாவது - அவ்வூர் நித்யாபூர்வபோக்யமா யிருக்கையாலே, அவனுக்குமாதரம் நித்யாபூர்வமாயிருக்கும்; இப்படியாகையாலே விடிந்தவிடிவுதோறும் அவனுக்கு "ஸுப்ரபாதாஸமேநிஶா" (ஸுப்ரபாதாசமேநிஶா) என்னும்படி யிருக்குமென்றபடி. "அத்யமே ஸபலம் ஜந்ம ஸுப்ரபாதா ச மே நிஶா । யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோர்த்ரக்ஷ்யாம்யஹம் முகம்" (அத்யமேஸபலம்ஜந்மஸுப்ரபாதாசமேநிஶா । யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோர்த்ரக்ஷயாம்யஹம்முகம்) இதிபஞ்சமேம்ஶே அக்ரூரஃ. "ஸங்கைஸ்ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ் ததா மநுஷ்யைர் ககநே ச கேசரைஃ । ஸ்துதஃ க்ரமாந்யஃ ப்ரசகார ஸர்வதா மமாஸ்து மாங்கல்ய விவ்ருத்தயே ஹரிஃ" (ஸங்கைஸ்ஸுராணாம்திவிபூதலஸ்தைஸ்ததாமநுஷ்யைர்க்ககநேசகேசரைஃ। ஸ்துதஃக்ரமாநுயஃப்ரசகார ஸர்வதாமமாஸ்துமாங்கல்யவிவ்ருத்தயே ஹரிஃ) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மேமாங்கல்யஸ்தவே. "நன்கமர்ந்துநின்று – நன்றாகப்பொருந்திநின்று" என்றத்தால்பாவம் (இவ்வூரிலித்யாதி.)

தோளைக்கண்டமாத்ரத்திலே "அசுரரைத்தகர்க்கும்" என்றுதோற்றுமோவென்கிற சங்கையை யநுவதிக்கிறார் (இவரித்யாதி) அதாவது - திருத்தோள்களும் * ஜ்யாகிணகர்க்கசங்களாகையாலே, அசுரநிரசநத்தைத்தோற்றுவிக்குமென்றபடி. நம்பிள்ளைகேட்க நஞ்சீயரருளிச்செய்தவார்த்தையென்றபடி. வழித்துணையாகப்பற்றுகிறவிவர் "சுரிகுழல்" என்று விசேஷிக்கிறதுக்குபாவம் (நெடுநாளித்யாதி) அப்படி தாபஹரமோவென்ன, ப்ரமாணம் (கேஶவ இத்யாதி) "நரகே பச்யமாநஸ்து யமேந பரிபாஷிதஃ । கிம் த்வயா நார்சிதோ தேவஃ கேஶவஃ க்லேஶநாஶநஃ" (நரகேபச்யமாநஸ்துயமேநபரிபாஷிதஃ। கிம்த்வயாநார்ச்சிதோதேவஃ

கேஸவக்லேஸநாஸநः ) இதி மஹாபாரதே. "கெஸவ:" (கேஸவ:) என்றதுக்கு-ப்ரஸஸ்தகேஸத்வத்திலே நோக்கு. சுரிகுழல்-சுருண்டகுழல். "கமலக்கட்கனிவாய்" என்றதுக்கும் ப்ரக்ருதாநுகுணமாகபாவம் (க்ஷுத்ரவிஷயங்களினுடையவித்யாதி.) "வழித்துணை" என்றதுக்கநுகுணமாக "காளம்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (ராஜாக்கள்போம்போதித்யாதி) மேகர்-மார்க்கசோதகர். நீர்விடுகிறவர்களுமாம். மேகசப்தம் "மிஹஸெசநெ" (மிஹஸேசநே) என்கிறதாது நிஷ்பந்நமாகையாலே, அத்தையுட்கொண்டு (வர்ஷித்துக்கொண்டுபோகவென்றது) குளிர்வாசத்தை - குளிர்ந்தவாஸனையை.

தாளதாமரை - அணி - தடம், தாளதாமரை - அணிவயல் திருமோகூரித்யாரப்யார்வய: ................................................................ *

# இரண்டாம்பாட்டு.

இலங்கதிமற்றொன்றெம்மைக்குமீன்றண்டுழாயி
னலங்கலங்கண்ணியாயிரம்பேருடையம்மா
னலங்கொளுன்மறைவாணர்கள்வாழ்திருமோகூர்
நலங்கழலவனடிநிழற்றடமன்றியாமே.

## ஆறாயிரப்படி.

( இலங்கதி ) நமக்கெற்றைக்கும் சமஸ்த கல்யாண குணோதயனானவன்றிருவடிகளின் நிழலாகிற குளிர்ந்த தடாகமல்லது மற்றொரு ப்ராப்யமில்லையென்கிறார். ................................................ *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யபூதனாய் நிரந்தராநுபாவ்யநாமமூர்த்தியையுடைய சர்வேஸ்வரன் றிருவடிகளையொழிய சர்வாவஸ்த்தையிலும் வேறொருகதியுமுடையோமல்லோ மென்கிறார்.

ஈன் - பூந்தாரையீன்கிற. தண்-குளிர்ந்த. துழாயின்-திருத்துழாயையுடைத்தாய். அலங்கல்-அசையாநிற்கிற. அம்-அழகிய. கண்ணி-மாலையையுடையனாய். ஆயிரம்பேருடை-அநுபாவ்யமாய் அஸங்க்யாதமான திருநாமங்களையுடைய. அம்மான்-நிருபாதிகசேஷியாய். நலங்கொள் - ஆந்ருஸம்ஸ்யாதி விலக்ஷணகுணங்களையுடையராய். நான்மறை-நாலுவேதங்களுக்கு. வாணர்கள்-நிர்வாஹகரானவர்கள். வாழ்-ரக்ஷகத்வாதி குணாநுபவத்தாலேவாழுகிற. திருமோகூர்-திருமோகூரிலேவர்த்திக்கிறவனாய். கலங்கழலவன்-ஆஸ்ரிததாரதம்யம்பாராதே நம்மைக்கிட்ட வழகிய வீரக்கழலையுடையவனுடைய. அடிநிழல்-பாதச்சாயையாகிற. தடமன்றி-தடாகமொழிய. யாம்-நாம். எம்மைக்கும்-எல்லாஜந்மத்திலும். கதி-கந்தவ்யமாக. மற்றொன்று-வேறொன்றை. இலம்-உடையோமல்லோம்.

இனியதுழாயென்றுமாம். அலங்கல் - மாலையாய், கண்ணி - தாராய், தொடையாகவுமாம். அலங்கல்-அலங்காரமாகவுமாம் ........................... *

## ஈடு - இரண்டாம்பாட்டு.

போகஹேதுவான வொப்பனையையும் உஜ்ஜீவநஹேதுவான திருநாமங்களையு முடையவனுடைய திருவடிகளல்லது வேறு, காலதத்வமுள்ளதனையும் புகலுடையோமல்லோமென்கிறார்.

( இலங்கதிமற்றொன்றெம்மைக்கும் ) ( எம்மைக்கும் - மற்றொன்று - இலங்கதி ) இவ்வார்த்தை ஒருஜந்மத்துக்கன்றியே, எல்லாஜந்மத்துக்குமிதுவேவார்த்தை. எல்லாக்காலத்துக்கு மிதொழிய வேறு துணையுடையோமல்லோம். ( ஈனித்யாதி ) தாரையும் குளிர்த்தியையு முடைய திருத்துழாயினொளியையுடைத்தான வழகியமாலை. ( அலங்கல் ) ஒளியென்னுதல், அசையென்னுதல்; பின்னே போகாநின்றால் அடிமாறியிடும்போது வளையமசைந்துவருகிறபடியென்னுதல், திருமேனியிலே சேருகையாலே வந்த புகரைச் சொல்லுதல். ( ஆயிரம்பேருடை ) தோளும் தோள்மாலையுமான வழகைக்கண்டு இவனைத்தப் புக்கால், இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி அஸங்க்யாதமான திருநாமங்களையுடையவன். (அம்மான்) வடிவழகுகண்டு அப்ராப்த ஸ்த்தலத்திலே யேத்திற்றாகவேண்டாதே, “ஆழியங்கையம்மானை யேத்தாதயர்த்து - வாளாவிருந்தொழிந்தேன்கீழ்நாள்களெல்லாம்” என்று ஏத்தாதநாளைக்கும் வயிறுபிடிக்கவேண்டும்படியான விஷயம். ( நலங்கொளித்யாதி ) “ஆந்ருஸம்ஸ்யமே வேதார்த்தம்” என்று வேததாத்பர்யம் கைவந்திருக்கு மவர்களாய், வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்லரானவர்கள் நித்யவாஸம் பண்ணுகிறதேசம். அவ்வூரில் வர்த்தநந்தானேயிறே வாழ்ச்சி. அத்தேசவாஸத்தாலே “ஆஶ்ரிதசம்ரக்ஷணமே பரமதர்மம்” என்று ஈஶ்வரனுக்குமதிலே நிஷ்ட்டனாகவேண்டும் தேசம். அவ்வூரிலே யாஶ்ரயிக்கச்சென்றால் “[illegible]” ( அஸ்மாபிஸ்துல்யோபவது ) என்னுமவர்கள். ( நலங்கழலவன் ) ஆஶ்ரிதருடைய குணதோஷநிரூபணம்பண்ணாததிருவடிகள். அவர்கள் தாங்கள் ப்ரோமாந்தராய் “[illegible]” (வத்யதாம்) என்றாலும் “[illegible]” (ந்த்யஜேயம்) என்னுமவன். ( அவனடிநிழற்றடமன்றியாமே ) அவனென்கிற பதம் இரண்டிடத்திலுமந்வயிக்கிறது. அவன் பாதச்சாயையாகிற பொய்கையை யொழிய நாம் வேறொருகதியுடையோமல்லோம். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (இலங்கதியித்யாதி) “ஈன் தண்டுழாய்” இத்யாரப்ய, “அம்மானடி நிழற்றடமன்றி - எம்மைக்கும் - மற்றொன்று - இலங்கதி” என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (போகஹேது வித்யாதி.)

“எம்மைக்கும்” என்றதுக்குபாவம் (இவ்வார்த்தையித்யாதி) எம்மைக்கும்- எல்லாஜந்மத்துக்கும். ஆனால் இவரின்னமு மொருஜந்மமுண்டாகச் சொல்லுகிறாரோவென்ன (எல்லாக்காலத்துக்குமித்யாதி.)

"ஈன்" என்று - தாராய், பூவென்னுதல். பூவை, ஈன்கிற - ப்ரஸவியாநிற்கிற வென்னுதல். உக்தார்த்த த்வயத்தையும் வ்யுத்க்ரமேண விவரிக்கிறார் (பின்னேயித்யாதி) கீழில் பதத்தையுங்கூட்டிபாவம் (தோளுமித்யாதி) கீழோடேகூட்டி "அம்மான்" என்றதுக்குபாவம் (வடிவழகித்யாதி) (ஆழியங்கையித்யாதி) பெரியதிருவந்தாதி எண்பத்திரண்டாம்பாட்டு, "தெரிந்துணர்வொன்றின்மையால்" இத்யாதி. அயர்த்து-மறந்து. வாளா-வ்யர்த்தமாக.

நலம்-க்ருபை; கொள்கை - உடைத்தாகை; ஆந்ருசம்ஸ்யத்தையுடையவர்களென்றபடி. "நலங்கொள்" என்றவநந்தரம் "நான்மறைவாணர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (ஆந்ருசம்ஸ்யமேயித்யாதி) நான்மறைவாணர்கள் - நாலுவேதங்களுக்கு நிர்வாஹகரானவர்கள். வாணர்-நிர்வாஹகர். வர்த்திக்கிறவென்னுதே, "வாழ்" என்றதுக்குபாவம் (அவ்வூரிலித்யாதி) இந்தபதப்ரயோகத்துக்குபாவம் (அத்தேஸேத்யாதி) "நலங்கொள் நான்மறைவாணர்கள்" என்றதுக்கு பலிதம் (அவ்வூரிலேயித்யாதி) "[illegible]" (தஸ்மாத்க்ஷிப்ரம் ஸஹாஸ்மாபிஸ் துல்யோபவ து ராகவ | விபீஷணோ மஹாப்ராஜ்ஞஸ் ஸகித்வஞ்சாப்யுபைது ந:) இதி யுத்தகாண்டே அஷ்டாதசே.

திருவடிகளுக்கு நன்மையேதென்ன (ஆஶ்ரிதருடைய வித்யாதி) "குணதோஷநிரூபணம்பண்ணுத" என்றத்தால்பலிதம் (அவர்கள் தாங்களித்யாதி) என்று ஏகார்த்தமாதல்; (ஆஶ்ரிதருடைய) இத்யாதிவாக்யம் - "நலம்" என்றத்தை * கழலுக்கு விசேஷணமாக்கி யர்த்தமாய், "அவர்கள் தாங்கள்" இத்யாதிவாக்யம்-அவனுக்குவிசேஷணமாக்கி அர்த்தாந்தரபரமாதல்.

ஈன்-தண்டுழாயினென்றுதொடங்கி, நலங்கழலவ னடிநிழற்றடமன்றியாம்-எம்மைக்கும் - மற்றொன்று - கதி - இலம் இத்யந்வய:. "அவன்" என்றது, கீழும் மேலு மந்வயிக்கிறது..........................................................*

---

## மூன்றாம்பாட்டு.

---

அன்றியாமொருபுகலிடமிலமென்றென்றலற்றி
நின்றுநான்முகனரனொடுதேவர்கணுட
வென்றிம்மூவுலகளித்துழல்வான்றிருமோகூர்
நன்றுநாமினிநணுகுதுநமதிடர்கெடவே.

### ஆறாயிரப்படி.

(அன்றியாம்) ஆதலால், அர்த்திகல்பகமாயிருந்தவவனைத் திருமோகூரிலேசென்று நம்முடைய க்லேஶமெல்லாம் போம்படிபுஜிப்போமென்கிறார்..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகிலஜகத்ரக்ஷண ஸ்வபாவனானவனுடைய திருமோகூரை, நமக்குத்துணை தேட்டமாம்படியான து:கம் கெடும்படி கிட்டுவோமென்கிறார்.

அன்றி-உன்னையொழிய. யாம்-நாங்கள். ஒருபுகலிடம்-வேறொருபுகலிடம், இலம்-உடையோமல்லோம். என்றென்றலற்றி - என்றுதளர்த்திதோன்றும்படி பல காலும் கூப்பிட்டு. நின்று-ப்ரயோஜநலாபத்தளவும்நின்று. நான்முகனரனொடு - ப்ரஹ்மருத்ரர்களோடுகூட. தேவர்கள்-தேவஜாதிகள். நாட-தேடியாஶ்ரயிக்க. வென்று-விரோதிகளைவென்று. இம்மூவுலகு - இந்தஜகத்ரயத்தையும். அளித்துழல்வான்-ரக்ஷிக்கையேயாத்ரையாயிருக்குமவனுடைய. திருமோகூர் - திருமோகூரை. நாம்-நாம். நமது-நம்முடைய. இடர்கெட-வழித்துணைதேட்டமான மநோதுஃகம் தீரும்படி. இனி - ரக்ஷகனானவன் சந்நிஹிதனானபின்பு. நன்று - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு. நணுகுதும்-கிட்டக்கடவோம்..........................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

சர்வரக்ஷகனானவன் வர்த்திக்கிற திருமோகூரை, நம்முடைய சகலதுஃகமும் கெடச்சென்று ப்ராபிப்போமென்கிறார்.

(அன்றியித்யாதி) ப்ரயோஜநாந்தரபரரும் அநந்யப்ரயோஜநருடைய பாசுரத்தைச்சொல்லுவர்களாய்த்து அவன்முகங்காட்டுகைக்காக. "தேவரையொழிய நாங்களொருபுகலுடையோமல்லோம்" என்று நிரந்தரமாக அடைவுகெடச்சொல்லிக்கூப்பிட்டு. (நின்று) அநந்யப்ரயோஜநரைப்போலே தங்கள்ப்ரயோஜநம் கைபுகுருமளவும் நின்று. (நான்முகனித்யாதி) சதுர்முகன், ருத்ரன், இவர்களோடேகூட தேவஜாதியடையவாஶ்ரயிக்க. (வென்றித்யாதி) அவர்கள் ப்ரதிபக்ஷத்தைவென்று, அவர்களுக்கு விஷயமான த்ரைலோக்யத்தையும் ரக்ஷித்து, அதுவே யாத்ரையாயிருக்குமவன்வந்து வர்த்திக்கிற தேசமாய்த்து. (நன்றுநாமினிநணுகுதும்) (இனி-நாம்-நன்று-நணுகுதும்) அவன் சர்வரக்ஷகனானபின்பு, ரக்ஷாபேக்ஷையுடைய நாம் நன்றாகக்கிட்டுவோம். ஸ்ரீமதுரையிலே காலயவநஜராசந்தாதிகள் கிட்டினாப்போலே யன்றிக்கே, "நீணகர்நீளெரிவைத்தருளாய்" என்று ப்ரஹ்மாதிகள் க்ஷீராப்தியைக் கிட்டினாப்போலுமன்றிக்கே, அநந்யப்ரயோஜநராய்க்கிட்டுவோம். (நமதிடர்கெடவே) "ஆவாரார்துணை" என்றிருக்கிற நம்முடையக்லேஶம்கெட ........ ......*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (அன்றியாமித்யாதி) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (சர்வரக்ஷகனானவனித்யாதி.)

ப்ரயோஜநாந்தரபரரானவர்கள் " அன்றியாமொருபுகல் " என்பானேன்னென்ன (ப்ரயோஜநாந்தரபரருமித்யாதி) சப்தார்த்தம் (தேவரையித்யாதி.) நாடுகை-தேடுகையாய், மநஸ்ஸாலேயாஶ்ரயிக்கை. " வென்று, இம்மூவுலகு" என்று பதச்சேதம்.

"நன்று" என்றவிசேஷணத்துக்குபாவம் (ஸ்ரீமதுரையிலே யித்யாதி) "நீணகர்" இத்யாதிக்கு - லங்கையை தஹிப்பிக்கவேணுமென்றர்த்தம். திருவிருத்தம், "பேணலமில்லாவரக்கர்" இத்யாதி.

அன்றியாமித்யாரப்ய, திருமோகூரா - இனி - நாம் - நமதிடர்கெட-நன்று-ஙணுகுதுமித்யர்வயஃ ......................................................................................*



# நான்காம்பாட்டு.

இடர்கெடவெம்மைப்போந்தளியாயென்றென்றேத்திச்
சுடர்கொள்சோதியைத்தேவருமுனிவருந்துடரப்
படர்கொள்பாம்பணைப்பள்ளிகொள்வான்றிருமோகூ
ரிடர்கெடவடிபரவுதுந்தொண்டீர்வம்மினே.

## ஆறுயிரப்படி.

(இடர்கெட) ப்ரஹ்மாதிகள் ஸ்வாபேக்ஷிதங்களை ப்ரார்த்திக்கைக் கெளியனுகைக்காகத் திருப்பாற்கடலிலே புகுந்தருளின வவன், அப்படியே நமக்கும் நம்முடைய வபேக்ஷிதத்தை ப்ரார்த்திக்கைக் கெளியனுய்க்கொண்டு திருமோகூரிலே புகுந்தருளினன், அவன்றிருவடிகளையே புஜிப்போம், வாருங்கோளென்கிறுர். ......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்ரக்ஷணுர்த்தமாக அநந்தசாயியானவனுடைய திருவடிகளையாஶ்ரயிப்போம் வாருங்கோளென்று, ருசியையுடையரான பாகவதரையழைத்தருளுகிறுர்.

இடர்கெட - விரோதிகளால் வந்த துஃகம் தீரும்படி. போந்து - எழுந்தருளிப்போந்து. எம்மை - எங்களை. அளியாய் - ரக்ஷிக்கவேணும். என்றென்று - என்று பலகாலும் தளர்த்திதோன்ற. ஏத்தி - ஸ்துதித்து. அத்தாலே, சுடர்கொள்-பேரொளியையுடைத்தான. சோதியை - தேஜோமயமாயுள்ள திருமேனியை. தேவரும்-ஈஶ்வராபிமாநிகளான தேவர்களும். முனிவரும் - ஐஶ்வர்யார்த்திகளாய் தபஸ்ஸுபண்ணுகிற ருஷிகளும். துடர - அநுவர்த்தித் தாஶ்ரயிக்கைக்காக. படர்கொள்-ஸ்வஸ்பர்ஶத்தாலே விரிவையுடைத்தாய். பாம்பணை - ஜாதிப்ரயுக்தமான மென்மைகுளிர்த்தி நாற்றத்தையுடைய திருவரவணையிலே. பள்ளிகொள்வான் - பள்ளிகொண்டருளுகிறவனுடைய. திருமோகூர் - திருமோகூரிலே. இடர் - நம்முடைய அசம்பவதுஃகம். கெட - போம்படியாக. தொண்டீர் - ஆஶ்ரயணருசியை யுடையீர்களான நீங்கள். அடி - அவன்றிருவடிகளை. பரவுதும் - ஸ்துதிப்போம். வம்மின் - வாருங்கோள். ......................................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

நம்முடைய சமஸ்தது:கங்களும் கெட, திருமோகூரிலேவந்து சுலபனுய் நிற்கிறவனை யாஶ்ரயிக்கவாருங்கோளென்று, ஸ்ரீவைஷ்ணவர்களையழைக்கிறுர்.

( இடர்கெடவித்யாதி ) "எம்மை - இடர்கெட-போந்தளியாய்" என்றுய்த்து ஈஶ்வராபிமாநிகளுக்கும், சாபாநுக்ரஹசமர்த்தர்க்கும் வார்த்தை. * வேதாபஹாராதி துஃகங்கள்போக. ( எம்மை ) முன்பு "ஈஶ்வரோஹம்" ( ஈஶ்வரோஹம் ) என்றிருந்தவர்கள், ஆபத்து மிக்கவாறே, "ஏஹிபஶ்யஶரீராணி" ( ஏஹிபஶ்யஶரீராணி ) என்னுமாபோலே தங்கள் வெறுமையை முன்னிடுமத்தனை. ( போந்தளியாய் ) அவதரித்து ரக்ஷிக்கவேணும் என்பர்கள். முன்பெல்லா முபேக்ஷித்திருந்தவர்கள், ஒன்றுகெட்டவாறே பாடிகாப்பானைப் பிடிக்குமாபோலே, நாங்களாபந்நராய்வர நீ கிடக்கிறதென் என்பர்கள். ( என்றென்றேத்தி - துடர ) தங்களாபத்தாலே இடைவிடாதே புகழ்ந்து வடிம்பிட் டாஶ்ரயிக்கைக்காக. ( சுடர்கொள்சோதியை ) "ஆபத்காலத்திலேயாகிலும் நம்பாடே வரப்பெற்றோமே!" என்று உஜ்ஜ்வலனாயிருக்குமவனை யென்னுதல், விலக்ஷணமான வழகை யுடையனாகையாலே ஸ்வயம் ப்ரயோஜநமானவனைக்கிடீர் துஃகநிவர்த்தகனாக நினைத்ததென்னுதல். ( தேவரும்முனிவரும் துடர ) தேவர்களும், ருஷிகளும். "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருப்பாரும், ஐஶ்வர்யார்த்தமாக யத்நம்பண்ணுவாரும். ( படர்கொள்பாம்பணைப்பள்ளிகொள்வான் ) அநந்யப்ரயோஜநரை யடிமைகொள்ளுகிறவன்கிடீர், ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுக்கைக்காக க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிறான். ( படர்கொள்பாம்பு ) ஸ்வஸ்பர்ஶத்தாலே வளராநின்றுள்ள திருவநந்தாழ்வான். (பள்ளிகொள்வான்) தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே சர்வஜ்ஞனானவனை அஜ்ஞரோபாதி நித்ரைக்கிடங்கொடுக்கும்படிபண்ணவல்லனாய்த்துத் திருவநந்தாழ்வான். ( திருமோகூர் ) தேவாதிகளுக்கு சுலபனானாப்போலே நமக்கும் சுலபனாகைக்காகத் திருமோகூரிலே நின்றருளினான். ( இடர்கெடவடிபரவுதும் ) அவனுடைய திருவடிகளை நம்முடைய சகலதுஃகங்களும் கெடும்படி யாஶ்ரயிப்போம். ( தொண்டீர்வம்மினே ) நம்மோடு ஸகோத்ரிகளா யிருப்பாரடங்கத் திரளுங்கோள்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( இடர்கெடவித்யாதி. ) "இடர்கெடவடிபரவுதும் தொண்டீர்வம்மின்" என்றத்தைக்கடாக்ஷித் தவதாரிகை ( நம்முடையவித்யாதி. )

"தேவரும்முனிவரும்" என்றத்தையும் கடாக்ஷித்து, "இடர்கெடவெம்மைப்போந்தளியாய்" என்றதுக்கு, ஈடுபாடுதோற்றவர்த்தமருளிச்செய்கிறார் (எம்மையித்யாதி.) "இடர்கெட" என்றதுக்கர்த்தம் ( வேதாபஹாரோத்யாதி. ) "எம்மை" என்றதுக்கு ஹார்த்தபாவம் ( முன்பீஶ்வரோஹமித்யாதி. ) "ஏஹிபஶ்யஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் । ஹதாநாம் ராக்ஷஸைர்கோரைர் பஹூநாம் பஹுதா வநே" ( ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் । ஹதாநாம்ராக்ஷஸைர்கோரைர்ப் பஹூநாம்பஹுதாவநே ) இத்யாதி

ண்யகாண்டே தண்டகாரண்யவாஸிநோ மஹர்ஷய:. முன்பிவனைக்கொண் டொரு கார்யமில்லையென்றிருந்தவர்கள், ஆபத்துவந்தவாறே, இவன்பக்கலிலே தங்கள்தை ந்யந்தோற்ற வந்தாஸ்ரயிக்கும் ப்ரகாரத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் ( முன்பெல்லாமித்யாதி. ) பாடிகாப்பார் - தலையாரிகள். வடிம்பிட்டு-நிர்ப்பந்தித்து. "பள்ளிகொள்வான்" என்றத்தைப்பற்ற (நீகிடக்கிறதென்றது.) துடர - துடரு கைக்காக.

சுடர்கொள்சோதியை - மிக்க வொளியையுடைத்தாய் தேஜோமயமானவடிவையுடையவனையென்று சப்தார்த்தம். "சுடர்கொள்சோதியை" என்றதுக்கு உபாயபரமாகவும் உபேயபரமாகவு மர்த்தத்வயம் ( ஆபத்காலத்திலேயித்யாதிவாக்ய த்வயம். ) "முனிவர்" என்றதுக்கு - சாபாநுக்ரஹசமர்த்தரென்று கீழே யருளிச்செய்து, இங்கே ஐஶ்வர்யபரரென்று அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் ( ஐஶ்வர்யார்த்தமாக யத்நம்பண்ணுவாருமென்று. ) திருவநந்தாழ்வான்சேர்த்தி சொன்னதுக்கு பாவம் ( அநந்யப்ரயோஜநனாயித்யாதி. )

"படர்கொள் -" படர்த்தியை - விஸ்தாரத்தை, உடைய. "படர்கொள்பாம்பு - பள்ளிகொள்வான்" என்கையாலே - அந்யோந்ய ஸ்பர்ஶத்தால்வந்த விக்ருதியைச் சொல்லுகிறது. (நின்றருளினான்) என்றது - கூட்டிக்கொள்வது.

சகலது:கங்களும் - வழித்துணையில்லையென்கிற து:கமென்றபடி. தொண்டீர் - பகவத்விஷயசபலரே.

சுடர்கொள்சோதியைத் தேவரும் முனிவரும் - இடர்கெட வெம்மைப்போந்தளியா யென்றென்றேத்தி - துடர, படர்கொள் பாம்பணைப்பள்ளிகொள்வானு னவன் திருமோகூரிலேநின்றான், அவனடியை - இடர்கெட - பரவுதும், தொண்டீர்வம்மி னித்யந்வய:..............................................................*

# ஐந்தாம்பாட்டு.

தொண்டீர்வம்மினஞ்சுடரொளியொருதனிமுதல்வ
னண்டமூவுலகளந்தவனணிதிருமோகூ
ரெண்டிசையுமீன்கரும்பொடுபெருஞ்செந்நெல்விளையக்
கொண்டகோயிலைவலஞ்செய்திங்காடுதுங்கூத்தே.

## ஆறாயிரப்படி.

(தொண்டீர்) ஜகத்துக்கு த்ரிவிதகாரணமும் தானேயாய், அப்ராக்ருதமான வழகையுடையனுமாய், மஹாபலியாலே யபஹ்ருதமான த்ரைலோக்யத்தையு மளந்துகொண்ட வெம்பெருமானெழுந்தருளியிருக்கையாலே யதிஶ்லாக்யமான திருமோகூரை யாஶ்ரயிக்க வாருங்கோளென்கிறார்..............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷஜந சம்ஶ்லேஷ ஸ்வபாவனை த்ரிவிக்ரமன் வர்த்திக்கிற திருமோகூரில் கோயிலை யநுபவித்து ப்ரீதராவோம், வாருங்கோளென்கிறார்.

நம்-நமக்கநுபாவ்யமாய். சுடர்-நிரவதிகௌஜ்ஜ்வல்யத்தை யுடைத்தான. ஒளி-தேஜோமய திவ்யவிக்ரஹத்தையுடையனாய். ஒருதனிமுதல்வன்-ஜகத்துக்கு நிமித்தோபாதாந ஸஹகாரிரூபமான த்ரிவிதகாரணமும் தானேயாய். அண்டம்-ஸ்ருஷ்டமான அண்டத்துக் ககவாயிலுண்டான. மூவுலகு-ஜகத்ரயத்தையும். அளந்தவன்-அளந்துகொண்டவன். அணி-அழகிய. திருமோகூர்-திருமோகூரிலே. எண்டிசையும்-பார்த்ததிக்குக்கள்தோறும். ஈன்-இனிய. கரும்பொடு-கரும்போடேகூட. பெருஞ்செந்நெல்-பெரியசெந்நெலானது. விளைய-விளையும்படியாக. கொண்ட-பரிக்ரஹித்த. கோயிலை - கோயிலை. இங்கு - இந்தபூமியிலே. வலஞ்செய்து - ப்ரதக்ஷிணம்பண்ணி. கூத்தாடுதும்-ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுவோம். தொண்டீர்-ஆசையுடையநீங்கள். வம்மின்-வாருங்கோள் ...............................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவனெழுந்தருளிநின்ற திருமோகூரை யாச்ரயித்தநுபவிக்கவாருங்கோளென்கிறார்.

(தொண்டீர்வம்மின்) பகவத்விஷயத்தில் சபலராயிருப்பார் வாருங்கோள். (நஞ்சுடரொளியொருதனிமுதல்வன்) நிரவதிகதேஜோரூபியாய் த்ரிவிதகாரணமும் தானேயானவன். (நம்) என்று-ப்ரமாண ப்ரசித்தியைச்சொல்லுதல், தன்வடிவழகையும் ஜநகனான தன்னோட்டை ப்ராப்தியையும் நமக்கறிவித்தவனென்னுதல். (அண்டமூவுலகளந்தவன்) அண்டத்துக்குப் புறம்பேயிருக்கிறவன். மஹாபலியாலே யபஹ்ருதமான அண்டோதரத்தில் மூன்றுவகைப்பட்ட லோகங்களையுமளந்துகொண்டவன். ஸ்ருஷ்டித்துவிடுகையன்றிக்கே, ஸ்ருஷ்டமானஜகத்தை ப்ரபல ரபஹரித்தால் எல்லைநடந்துகொண்டு ரக்ஷிக்குமவனென்கை. (அணிதிருமோகூர்) அவன்றனக்காபரணமான தேசமென்னுதல், சம்சாரத்துக்காபரணமான தேசமென்னுதல். (எண்டிசையுமித்யாதி) எட்டுத்திக்கிலுமீன்ற கரும்போடே பெருஞ்செந்நெல் விளையும்படி. (கொண்டகோயில்) திருவுள்ளத்தாலே பரிக்ரஹித்தகோயில். கரும்புக்கு நிழல்செய்தாப்போலே யிருக்கும்செந்நெல். அவன் ஸந்நிதியாலே ஊரும் "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்கிறபடியேயாய்த்து. (வலஞ்செய்து) ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணி. (இங்காடுதும்கூத்தே) அங்குப்போனால் "அஹமந்நமஹமந்நம்" (அஹமந்நமஹமந்நம்) என்று களிக்குமத்தை யிங்கேகளிப்போம்...............................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (தொண்டீரித்யாதி) "கொண்டகோயிலைவலஞ்செய்திங்காடுதும்கூத்து" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அவனித்யாதி.)

சுந்தரனென்றும் காரணபூதனென்றும் ப்ரமாணப்ரஸித்தனென்கை; "நீலதோயதமத்யஸ்த்தா" (நீலதோயதமத்யஸ்த்தா) "ஸதேவஸோம்யேதமக்ர

வீசு" (ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்) இத்யாதி. அண்டத்தில் மூவுலகு என்று விசேஷித்ததுக்குபாவம் (அண்டத்துக்கித்யாதி) "அளந்த" என்றதால்பலிதம் (ஸ்ருஷ்டித்தித்யாதி) சாமாந்யேந "அணி" என்றதுக் கர்த்தத்வயம் (அவன்றனக்கித்யாதிவாக்யத்வயம்) * பெருமைக்குபாவம் (கரும்புக்கித்யாதி) இத்தால்பாவம் (அவன் சந்நிதியாலேயித்யாதி) "अकालफलिनो वृक्षास्सर्वे चापि मधुस्रवाः। भवन्तु मार्गे भगवन्नयोध्यां प्रतिगच्छतः" (அகாலபலிநோவ்ருக்ஷாஸ்ஸர்வே சாபிமதுஸ்ரவாஃ। பவந்துமார்க்கேபக்வந்நயோத்யாம் ப்ரதிகச்சதஃ) இதி ப்ரதிப்ரயாணே பரத்வாஜம்ப்ரதிராமஃ. "இங்கு" என்றதுக்குபாவம் (அங்குப்போனலித்யாதி) கூத்து - களிப்பின்கார்யமாகையாலே, காரணேகார்யோபசாரம்.

நம்சுடரொளி யென்றுதொடங்கி, "மூவுலகளந்தவன் - எண்டிசையுமென்று தொடங்கி, வினையும்படிகொண்ட கோயிலான - அணிதிருமோகூரை - வலஞ்செய்து, இங்கு - கூத்து - ஆடுதும், தொண்டர்வம்மினித்யந்வயஃ ........................*

## ஆறும்பாட்டு.

கூத்தன்கோவலன்குதற்றுவல்லசுரர்கள்கூற்ற
மேத்துநங்கட்குமமரர்க்குமுனிவர்க்குமின்பன்
வாய்த்ததண்பணைவளவயல்சூழ்திருமோகூ
ராத்தன்றாமரையடியன்றிமற்றிலமரணே.

### ஆறாயிரப்படி.

(கூத்தன்) கோபாலனாய், மநோஹாரி சேஷ்டிதங்களையுடையனாய், மிறுக்குச்செய்யும் வலியரான வஸுரர்க்கு ம்ருத்யுவாய், நித்யஸித்தர்க்கும் இன்றாஸ்ரயிக்கிற நமக்கு மொக்கவினியனாய், மிகவுமழகிதான நீர்நிலங்களையுடைய வளவிதான வயல்சூழ்ந்த திருமோகூரிலே பரமாப்தனாயெழுந்தருளியிருக்கிற வெம்பெருமானுடைய திருவடிகளல்லது வேறுநமக்கரணில்லையென்கிறார் ..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்தாக்களுக் கநுபவப்ரீதிகரனாய் ஆப்தனான வவன்திருவடிகளொழிய வேறொன்றை ரக்ஷகமாகவுடையோமல்லோமென்கிறார்.

கூத்தன்-வல்லாராடினாப்போலே தர்ஸநீயகதியாய். கோவலன்-ரக்ஷ்யவர்க்கத்தைப் பின்சென்று ரக்ஷிக்குமவனாய். குதற்று-பீடகரான குதற்றுதலையுடையராய். வல்-ப்ரபலரான. அசுரர்கள் - கேஸிதேநுகப்ரப்ருதிகளாயுள்ள வாசுர ப்ரக்ருதிகளுக்கு. கூற்றம்-ம்ருத்யுவாய். ஏத்தும் - அநந்யப்ரயோஜநராயேத்துகிற. நங்கட்கும்-அநபிமாநரானநமக்கும். அமரர்க்கும்-நித்யாநுபவம்பண்ணுகிற வமரர்க்கும். முனிவர்க்கும்-முனிவர்க்கும். இன்பன்-ஆநந்தகனாய். வாய்த்த - ஸம்ருத்தமாய். தண்-குளிர்ந்த. பணை-நீர்நிலங்களாலும். வளவயல்-தர்ஸநீயமானவயலாலும். சூழ்-சூழப்

பட்ட. திருமோகூர்-திருமோகூரிலே. ஆத்தன்-ஆஶ்ரிதர்க்கு விஸ்வஸித்துப்பற்றலாம்படி நிற்கிற ஆப்தனுடைய. தாமரையடியன்றி - நிரதிசயபோக்யமான தாமரை போன்றதிருவடிகளையொழிய. மற்றரணிலம்-வேறொருரக்ஷகமுடையோமல்லோம்.

## ஈடு - ஆறும்பாட்டு.

திருமோகூரிலே நின்றருளின பரமாப்ததமன் திருவடிகளல்லது வேறுநமக்கு ரக்ஷையில்லையென்கிறார்.

(கூத்தன்)நடக்கப்புக்கால் வல்லாராடினுப்போலேயிருக்கை. "அக்ரதஃப்ரயயௌராமஃ" (அக்ரதஃப்ரயயௌராமஃ) என்கிறபடியே நடைச்சக்ரவத்துப்பிடிக்கலாயிருக்குமாய்த்து. அவன்முன்னேபோகப் பின்னே போகையாவது - கூத்துக்கண்டுபோகையாய்த்து. [ஆட்டல்பாட்டவைமறினர்தாமே] என்னக்கடவதிறே - அவன்திருக்குழலை வாய்வைத்தபோது அப்ஸரஸ்ஸுக்கள் குழலோசையைக்கேட்டுப் பாட்டத்தவிர்ந்தார்கள், அவன் நடையழகைக்கண்டு ஆடத்தவிர்ந்தார்கள். (கோவலன்) தன்னைத் தாழவிட்டு ஆஶ்ரிதரைரக்ஷிக்குமவன். பிசாசத்துக்கு மோக்ஷப்ரதனாய் வழிநடத்தினவனிறே. (குதற்றுவல்லசுரர்கள் கூற்றம்) மிறுக்குக்களைப்பண்ணுநிற்பாராய், பெருமிடுக்கரான வசுரர்களுக்கு ம்ருத்யுவாயுள்ளவன். (ஏத்துமித்யாதி) இன்றாஶ்ரயிக்கிற நமக்கும், "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்கிற நித்யாஶ்ரிதர்க்குமொக்க வினியனானவன். (வாய்த்தவித்யாதி) அழகிதான நீர்நிலங்களையும் வளவிதான வயலையுமுடைய திருமோகூரிலே நின்றருளின பரமபந்து. தான் தனக்கில்லாத மரணசமயத்தில் "அஹம்ஸ்மராமி மத்பக்தம் நயாமி" (அஹம்ஸ்மராமிமத்பக்தம்நயாமி) என்னும் பரமாப்ததமன். தன்னை யஞ்சினபோது அவன்பக்கலிலே ந்யஸ்தபரனாய் நிர்ப்பரனும்படியான ஆப்ததமன். (தாமரையடியன்றி) அநாப்தனாகிலும் விடவொண்ணாதாய்த்துத் திருவடிகளில்போக்யதை. (மற்றிலமரணே) வேறுசிலரை ரக்ஷகராகவுடையோமல்லோம். போக்யதையில்லையாகிலும் விடவொண்ணாதபடி புறம்புபுகலில்லையென்கை............*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (கூத்தனித்யாதி) "திருமோகூராத்தன் றாமரையடியன்றி மற்றிலமரண்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திருமோகூரிலேயித்யாதி.)

கூத்தாடுகிறவனையன்றோ கூத்தனென்பது, இவனப்படி கூத்தாடுகிறானோவென்ன (நடக்கவித்யாதி) அப்படியிருக்குமோவென்ன (அக்ரதஇத்யாதி) "ப்ரகர்ஷேணயயௌ" (ப்ரகர்ஷேணயயௌ) என்றபதத்திலேநோக்கு. "அக்ரதஃப்ரயயௌராமஸ்ஸீதாமத்யேஸுமத்யமா। ப்ருஷ்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ" (அக்ரதஃப்ரயயௌராமஸ்ஸீதாமத்யேஸுமத்யமா। ப்ருஷ்ட்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ) இத்யாரண்யகாண்டே. நடைச்சக்ரவத்துப்பிடிக்கலாம்படி - நடையழகுக்கு சக்ரவர்த்திவந்தானென்று விருதுபிடிக்கலாம்

படியென்றபடி. இத்தால்பலிதம் (அவன்முன்னேயித்யாதி) "வல்லாராடினாப்போலேயிருக்கும்" என்றதுக்கு ப்ரமாணாந்தரம் (ஆட்லித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. இதுக்கர்த்தம் (அவனித்யாதி.)

"கோபாலன்" என்றதுக்குபாவம் (தன்னையித்யாதி) வழித்துணையாகப்பற்றுகிறவிடத்திலே க்ருஷ்ணப்ரசங்கமேதுக்கென்ன (பிசாசத்துக்கித்யாதி) பிசாசத்துக்கு - கண்டாகர்ணனுக்கு.

குதற்று - குதறுதலையுடையராய். குதற்றல் - குதறுதலாய், நெறிதவிர்தல். அதாவது - உன்மார்க்கவர்த்தித்வம்.

தண் - குளிர்ந்த. வளவயல் - தர்ஶநீயமானவயல். இத்தால்பாவம் (தான் தனக்கித்யாதி) விவரணம் (தன்னையஞ்சினவித்யாதி.)

"தாமரையடி" என்றதுக்குபாவம் (அநாப்தனித்யாதி) இத்தால்பலிதம் (போக்யதையித்யாதி.)

க்ரமேணார்வயஃ ...................................................................*

# ஏழாம்பாட்டு.

மற்றிலமரண்வான்பெரும்பாழ்தனிமுதலாச்
சுற்றுநீர்படைத்ததன்வழித்தொன்முனிமுதலா
முற்றுந்தேவரோடுலகுசெய்வான்றிருமோகூர்
சுற்றிநாம்வலஞ்செய்யநந்துயர்கெடுங்கடிதே.

## ஆறாயிரப்படி.

(மற்றிலமரண்) பெரியதாயொப்பின்றிக்கேயிருக்கிற ப்ரக்ருதியைக்காரணமாகக்கொண்டு ஆவரணஜலத்தைப்படைத்து, அவ்வழியாலே ப்ரஹ்மாமுதலானதேவர்களோடுகூடின வெல்லாலோகங்களையு முண்டாக்குகையாலே, நம்முடைய ரக்ஷணம் தனக்கவர்ஜநீயமாம்படியான வெம்பெருமானெழுந்தருளியிருக்கிற திருமோகூரைச்சுற்றி நாம் வலஞ்செய்ய, அப்போதே நம்முடைய ஸமஸ்தது:கங்களும் கெடுமென்கிறார் ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகிலஜகத்ஸ்ரஷ்டாவான சர்வேஶ்வரன்வர்த்திக்கிற திருமோகூரைப்பற்றி அநுகூலவ்ருத்திகளைப்பண்ண, நம்முடையது:கம் சடக்கெனப்போமென்கிறார்.

தனி - "ஏகமேவாத்விதீயம்" (அஜாமேகாம்) என்கிறபடியே உத்பத்யாதிகளில்லாத வைலக்ஷண்யத்தையுடைத்தாய், நாநாவித கைங்கர்யங்களுக்குத்தானேககாரணமாய், வான் - சமஸ்தகார்யங்களும் ஸ்வைகதேசத்திலேயாம்படி நிரதிசயமஹத்தையையுடைத்தாய். பெரு - சேஷகார்யத்தையு முண்டாக்குகைக்கு யோக்யபூதையான, பாழ்முதலா-ப்ரக்ருதிமுதலாகக்கொண்டு, சுற்றும்-எங்குமொக்க வ்யாப்

தமான. நீர்-காரணஜலத்தை. படைத்து-ஸ்ருஷ்டித்து. அதன்வழி-அந்தவழியாலே. தொல்-அண்டத்துள் வாயிலே ஸ்ருஜ்யஜகத்துக்கு முற்பாடனைகையாலே பழையனை ய். முனிமுதலா - ஸ்ருஷ்டிப்ரகார மநநசீலனை ப்ரஹ்மாமுதலாக. முற்றும்தேவ ரோடு-சமஸ்ததேவர்களோடுகூடின. முற்றுமுலகு - சகலலோகங்களையும். செய்வா ன்-பண்ணுமவனுடைய. திருமோகூர்-திருமோகூரை. சுற்றிவலம் நாம்செய்ய-ப்ரத க்ஷிணம்முதலான அநுகூலவ்ருத்திகளை போகரூபேண நாம்பண்ண. நம் - நம்முடை ய. துயர் - தனிமையால்வந்ததுஃகம். கடிது - சடக்கென. கெடும்-போம். ஆதலால், மற்றாணிலம் — மற்றுரக்ஷகமுடையோமல்லோம் ......................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

நம்முடையரக்ஷணம் தனக்கவர்ஜநீயமான உத்பாதகன்வர்த்திக்கி ற திருமோகூரை யாஶ்ரயிக்கவே, நம்முடையதுஃகங்க ளெப்போதேபோ மென்கிறார்.

(மற்றிலமரண்) வேறோரரணையுடையோமல்லோம். அவன்றான் ரக்ஷகனாகவல்லனோவென்னில்; இதுவன்றோ வவன்படியென்கிறதுமேல் (வானித்யாதி) இவ்வருகுண்டான கார்யவர்க்க மடங்கலுமழிந்தவன்றும் தானழியாமையாலே வலிதாய், அபரிச்சிந்நமாய், போகமோக்ஷங்களைவி ளைப்பதான அத்விதீயமான மூலப்ரக்ருதிதொடக்கமாக. (சுற்றுநீர்படை த்து) "அபஏவஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே ஆவரணஜலத்தை ஸ்ருஷ்டித்து. (அதன்வழித்தொன்முனிமுதலா) அவ் வழியாலே, தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநநசீலனான சதுர்முகன் தொடக்கமாக. (முற்றுந்தேவரோடுலகுசெய்வான்திருமோகூர்) எல்லா தேவஜாதியோடுங்கூட எல்லாலோகங்களையு முண்டாக்கு மவன்வர்த்திக் கிறதிருமோகூர். (சுற்றிநாம்வலம்செய்ய) நாம்சென்றுவிடாதே ப்ரதக்ஷி ணாதிகளைப்பண்ண. (நந்துயர்கெடும்கடிதே) "வழித்துணையில்லை" என் று நாம் படுகிறதுஃகம் சடக்கெனப்போம். "அதஸோபயம்கதோபவதி" (அதஸோபயம்கதோபவதி) என்னக்கடவதிறே; ஆனபின்பு, மற்றி லமரண் ......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (மற்றிலமித்யாதி) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நம்முடையவித்யாதி.)

"வான்" என்று - வலிதாய், நித்யமாயென்றபடி. அப்ரிச்சிந்நமாயென்றது- "அநந்தஸ்யநதஸ்யாந்தஃ" (அநந்தஸ்யநதஸ்யாந்தஃ) என்றத்தைப்பற்ற. நித்ய மான மூலப்ரக்ருதியை ஸ்ருஷ்டிக்கையாவது - தமோக்ஷராவ்யக்தரூபேண பரிண மிப்பிக்கை. சுற்றுநீர்-ஆவரணஜலம். "அபஏவஸஸர்ஜாதௌ தாஸுவீர்யமவாஸ்ருஜத் । ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஸுஸமப்ரபம்" (அபஏவ ஸஸர்ஜாதௌதாஸுவீர்யமபாஸ்ருஜத் । ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஸுஸம ப்ரபம்) இதி மநுஸ்ம்ருதௌ.

அதன்வழி - அவ்வழியாலே. "அதன்வழி" என்று - பூதஸ்ருஷ்டி, பஞ்சீகரணம், அண்டஸ்ருஷ்டி முதலானவற்றைச்சொல்லுகிறது. தொன்மை-பழைமை. "மூற்றும்" என்றது - * தேவர்க்கும் * உலகுக்கும் விசேஷணம்.

சுற்றி - (விடாதே) அவனையாஸ்ரயித்தால் து:கம் போமோவென்ன (அதஸோபயமித்யாதி) தைத்திரீயகே. யாதொருபோது ப்ரஹ்மத்யாநத்தை யடைகிறான், அநந்தரம் அபயங்கதனுவன் என்று ஸ்ருதிக்கர்த்தம். ப்ரதிஷ்ட்டா - த்யாநம்.

வான்பெரும் பாழென்றுதொடங்கி, உலகுசெய்வானுடைய திருமோகூரை-நாம்-சுற்றி-வலஞ்செய்ய-கடிது-நந்துயர்கெடும்; ஆகையாலே, அரண்-மற்றிலம் இத்யந்வய: ..................................................*



# எட்டாம்பாட்டு.

துயர்கெடுங்கடிதடைந்துவந்தடியவர்தொழுமி
னுயர்கொள்சோலையொண்டட்டமணியொளிதிருமோகூர்ப்
பெயர்களாயிரமுடையவல்லரக்கர்புக்கழுந்தத்
தயரதன்பெற்றமரதகமணித்தடத்தினையே.

## ஆறாயிரப்படி.

( துயர்கெடும் ) பரமப்ராப்ய பூதனான வவனுக்குங்கூட போக்யமான திருமோகூரே நமக்கு ப்ராப்யம்; ஆதலால், ப்ரதிகூலரெல்லாரும் து:கசாகரநிமக்நராம்படி தயரதன்பெற்ற சமஸ்தகல்யாணகுண விசிஷ்டமான மரதகமணித்தடத்தினைத் திருமோகூரிலே யீண்டச்சென்று புஜியுங்கோளென்கிறார். ..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உங்களுடைய சகல க்லேஶமும் தீரும்படி சீல சீதளமான தசரதாத்மஜதடாகத்தைக் கிட்டி யநுபவியுங்கோ ளென்கிறார்.

உயர்கொள் - உயர்த்தியையுடைய. சோலை - சோலைகளையும். ஒண் - விலக்ஷணமான. தடம் - தடாகங்களையும். அணி - அலங்காரமாக வுடைத்தாய். ஒளி-அத்யுஜ்ஜ்வலமான. திருமோகூர் - திருமோகூரிலே. ஜகத் பாதகத்வத்தால்வந்த, ஆயிரம் - அஸங்க்யாதமான. பெயர்களுடைய - விருதுபேரையுடையராய். வல் - ப்ரபலரான. அரக்கர் - ராக்ஷஸர். விபீஷணப்ரப்ருதிகளைப்போலே அறையறிந் திழியாமையாலே, புக்கழுந்த - புக்கழுந்தும்படியாக. தயரதன்பெற்ற - தசரதன்பெற்ற. விஷஹரமுமா யாபரணமுமான, மரதகமணி - மரதகமணிபோலே ஶ்யாமளமான நிறத்தையுடைய. தடத்தினை - தடாகத்தை. அடியவர் - * குணைர்த்தாஸ்யமுபாகதரான நீங்கள். வந்து - வந்து. அடைந்து - கிட்டி. தொழுமின் - தொழுங்கோள். துயர் - உங்களஸஹாயத்தாலே க்லேஶமானது. கடிது - சடக்கென. கெடும் - நசிக்கும்.

*விஷஹரமுமாய் ஆபரணமுமான மரதகத்ருஷ்டாந்தத்தாலே - ப்ரதிகூலநிரஸநமும் அநுகூலர்க் காஸ்ரயமுமாமென்று கருத்து. ........................ .........*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருமோகூரிலே நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை யாஸ்ரயிக்க நம்முடைய துஃகமெல்லாம் போமென்கிறார்.

(துயர்கெடும்கடிது) காமபேக்ஷியாதிருக்கத் தன்னடையே சட்க்கெனப்போம் நம்முடைய துஃகங்கள். (அடைந்துவந்து) வந்தடைந்து - வந்துகிட்டி. (அடியவர்தொழுமின்) "வழித்துணையில்லை" என்று க்லேஸப்படுகிற நீங்களாஸ்ரயியுங்கோள். (உயரித்யாதி) உயர்ந்தசோலைகளாலும் அழகிய தடாகங்களாலு மலங்க்ருதமான வொளியையுடைய திருமோகூர். (ஒளி - சமுதாயசோபை.) சோலையைக்கண்டா லவன் வடிவுக்கு ஸ்மாரகமாயிருக்கும், தடாகங்களைக்கண்டால் அவன்வடிவில் ஸ்ரமஹரதைக்கு ஸ்மாரகமாயிருக்கும். * வாசத்தடம்போல் வருவானிறேயவன்றான். (பெயர்களாயிரமுடைய) ஈஸ்வரன் ரக்ஷித்துப் படைத்த பெயர்களோபாதி போருமாய்த்து இவர்கள் பரஹிம்ஸைபண்ணிப்படைத்தபெயர். "யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு" (யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு) என்றுப்போலேயிறே யிவர்கள்பெயர். (வல்லரக்கர்புக்கழுந்த) பெருமிடுக்கரான வசுரர்கள் புக்கழுந்தும்படி. (தயரதனித்யாதி) சக்ரவர்த்திபெற்ற நீலமணிபோலே யிருக்கிற தடத்தை - அடைந்துவந்தடியவர் தொழுமின். "பதிதரமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்" (பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்) என்கிறபடியே அநுகூலர்க்கு ரக்ஷகமாய், "காகுத்ஸ்தபாதாளமுகே பதங்ஸ:" (காகுத்ஸ்தபாதாளமுகேபதங்ஸ:) என்கிறபடியே உகவாதார்க்கு நாசகமாயிறேயிருப்பது. "மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்" (மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்) என்று பக்ஷியையும் வழிநடத்துமவனிறே.................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (துயரித்யாதி.) "திருமோகூர் - தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தை - வந்தடியவர்தொழுமின் - துயர்கெடும் கடிது" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (திருமோகூரிலேயித்யாதி.)

"கடிது - துயர்கெடும்" என்றதுக்கர்த்தம் (காமித்யாதி.)

உயர்த்தியையுடைய சோலைகளாலும் அழகிய தடாகங்களாலு மலங்க்ருதமாய் ஒளியையுடைத்தான திருமோகூரென்று சப்தார்த்தம். ஒளி - சமுதாயசோபை. "மரத்கமணித்தடம்" என்றத்தைக் கடாக்ஷித்து, இது சொன்னதுக்கு பாவம் (சோலையையித்யாதிவாக்யத்வயம்.) அப்படியிருக்குமோவென்ன (வாசத்தடமித்யாதி.)

"தெவொநாமஸஹஸ்ரவாந்" ( தேவோநாமஸஹஸ்ரவாந் ) என்று- ஆயிரம்பேருள்ள தவனுக்கன்றோவென்ன ( ஈஸ்வரனித்யாதி. ) அந்தப்பேர்களே தென்ன ( யஜ்ஞசத்ருவித்யாதி. )

இவனை தடாகமாக ரூபித்ததுக்கு பாவம் த்வேதா வருளிச்செய்கிறார் ( பதி தருவித்யாதி. ) "ஸம்ஹாரிணாராகவஸாகரேண ப்ரச்சாத்யமாநஸ்தரஸா பவத்பிஃ। யுக்தஸ்த்வயம்தாரயிதும்ஸமேத்ய காகுத்ஸ்த்தபாதாளமுகேபதந்ஸஃ" ( ஸம்ஹாரிணாராகவஸாகரேண ப்ரச்சாத்யமாநஸ்தரஸாபவத்பிஃ। யுக்தஸ்த்வயம்தாரயிதும்ஸமேத்ய காகுத்ஸ்த்தபாதாளமுகேபதந்ஸஃ ) இதி ப்ரஹஸ்தாதீந் ப்ரதி விபீஷணஃ. வழித்துணையாகப் பற்றுகிறவிடத்திலே சக்ரவர்த்தி திருமகனைச் சொல்லுவானென்னென்ன (மயாத்வமித்யாதி) "யாகதிர்யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்சயாகதிஃ। அபராவர்த்திநாம்யாச யாசபூமிப்ரதாயிநாம்। மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்" ( யாகதிர்யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்சயாகதிஃ। அபராவர்த்திநாம்யாச யாசபூமிப்ரதாயிநாம்। மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந் ) இத்யாரண்யகாண்டே ராமஃ.

உயர்கொள்சோலையென்று தொடங்கி, மணித்தடத்தினை - அடியவர் - வந்து - அடைந்து - தொழுமின், கடிது - துயர்கெடு மித்யந்வயஃ. .....................*

---

# ஒன்பதாம்பாட்டு.

மணித்தடத்தடிமலர்க்கண்கள்பவளச்செவ்வா
யணிக்கொணாற்றடந்தோட்டெய்வமசுரரையென்றுந்
துணிக்கும்வல்லரட்டனுறைபொழிற்றிருமோகூர்
நணித்துநம்முடைநல்லரணமடைந்தனமே.

## ஆறாயிரப்படி.

( மணித்தடத்தடி ) நிரவதிக சௌந்தர்யத்தையும் ப்ரதிகூலநிரஸந சாமர்த்யத்தையு முடையனாயிருந்த வெம்பெருமா னெழுந்தருளியிருந்த, சர்வசுலபமாய் பரமப்ராப்யமான திருமோகூரை நாமும் புஜிக்கப் பெற்றோமேயென்று, தம்முடைய லாபத்தைப் பேசுகிறார்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணவயவ விசிஷ்டன் வர்த்திக்கிற திருமோகூரை நமக்கு ரக்ஷகமாகக் கிட்டப்பெற்றோமென்று ப்ரீதராகிறார்.

மணித்தடத்து - தெளிந்த தடாகம்போலே குளிர்ந்த. அடி - திருவடிகளையும். மலர் - விகசிதமான தாமரைபோலே யிருக்கிற. கண்கள் - திருக்கண்களையும். பவளச்செவ்வாய் - பவளம்போலே சிவந்த திருவதரத்தையுமுடையனாய். அணிக்கொள் - * சர்வபூஷணபூஷார்ஹமாய். நால் - நாலுவகைப்பட்ட. தடம் - பெரிய.

தோள் - திருத்தோள்களையுடைய. தெய்வம் - திவ்யவிக்ரஹத்தையுடையனாய். இவ்வழகுக்குப் புறம்பு ரக்ஷை தேடவேண்டாதபடி, அசுரரை - ஆசுரப்ரக்ருதிகளை. என்றும் - சர்வகாலமும். துணிக்கும் - சேதிக்கும். வல்லரட்டன் - பெருமிடுக்கனானவன். ஆஸ்ரிதர்க்கு அச்சமறும்படி அநுபாவ்யமாகைக்காக, உறை - நித்யவாசம்பண்ணுமிடமாய். பொழில் - போக்யமான பொழிலையுடைய. திருமோகூர்-திருமோகூராகிற. நம்முடை - நம்முடைய. நல்லரண்-விலக்ஷணரக்ஷகமான தேசமானது. நணித்து - அத்யாஸந்நமாய்த்து. நாம்- துணைதேடித் தனிமைப்படுகிறநாம். அடைந்தனம் - அணுகப்பெற்றோம்.

அரட்டன் - மிடுக்கன்.......................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நமக்கரணான திருமோகூரை நாம் ப்ராபிக்கப் பெற்றோமென்று, ஸ்வலாபத்தைப் பேசுகிறார்.

(மணித்தடத்தடி) தெளிந்த தடாகம்போலேயாய்த்துத் திருவடிகளிருப்பது. ஸ்ரமஹரமான திருவடிகளென்கை. ( மலர்க்கண்கள் ) அத்தடாகம் பூத்தாப்போலேயாய்த்துத் திருக்கண்க ளிருப்பது. ( பவளச்செவ்வாய் ) ப்ரவாளம்போலே சிவந்த திருவதரத்தையுடையனாய், தனக்குத் தானே யாபரணமா யிருக்கும் பெரிய நாலுதிருத்தோள்களையுமுடைய தெய்வம். அவன் வழித்துணையாகப் போம்போது, ஸ்ரமஹரமான வடிவும் தன்னுகப்புத்தோற்றின ஸ்மிதவீக்ஷணாதிகளையுமுடையனாய், ஒருகல்மதிளுக்குள்ளே போமாபோலே அச்சங்கெட்டுப் போம்படியாய்த்துத் தோள்நிழலிலே யொதுங்கினவிருக்கும்படி. விஜிகீஷையோடேயாய்த்துப் போவது – "வழியிலே யெங்கே யென்ன ப்ரதிபந்தகம்வருகிறதோ" என்று ஆசிலேவைத்த கையுந்தானுமாயாய்த்துப்போவது. (அசுரரையென்றும்துணிக்கும் வல்லரட்டன்) அசுரவர்க்கத்தை யென்றும் துணிக்கும் பெருமிடுக்கன். ( உறைபொழில்திருமோகூர் ) நித்யவாஸம் பண்ணுகிற பொழிலையுடையதிருமோகூர். "சிம்ஹம்வர்த்திக்கும் முழைஞ்சு" என்னுமாபோலே. ( நணித்து ) கிட்டிற்று - ப்ரத்யாஸந்நம். (நம்முடைநல்லரண்) நமக்கு ரக்ஷகமான தேசத்தை. (நாமடைந்தனமே) ரக்ஷாபேக்ஷையுடைய நாம் கிட்டப் பெற்றோம்........................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( மணித்தடத்தித்யாதி. ) "நம்முடை நல்லரண் நாமடைந்தனமே" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை ( நமக்கித்யாதி. )

"மணி" என்கையாலே-நைர்மல்யம் சொல்லுகிறது. இத்தால்பாவம் (ஸ்ரமஹரமானவித்யாதி.) * தடத்துக்கநந்தரம் "மலர்" என்றதுக்குபாவம் ( அத்தடாகமித்யாதி. ) "அணிக்கொள் - தடம் - நால் - தோள்தெய்வம்" என்றந்வயிப்பது. வழித்துணைசொல்லுகிறவிடத்திலே த்வ்யாவயவங்களைச் சொல்லுகிறதுக்குபாவம் ( அவன்வழித்துணையாகவித்யாதி. ) "அடி" என்று - திருமேனிக்குமுபலக்ஷ

ணம். "தெய்வம்" என்றது - "திவு-க்ரீடாவிஜிகீஷா" (திவுக்ரீடாவிஜிகீஷா) இத்யாதி தாதுசித்தமான விஜிகீஷையைச் சொல்லுகிற தென்கிறார் (விஜிகீஷை யோடேயித்யாதி.) விவரணம் (வழியிலேயித்யாதி.) ஆசிலே - ஆயுதப்பிடியிலே.

"வல்" என்று - பெருமையாய், "அரட்டு" என்று - மிடுக்காய், பெருமிடுக்கனென்றபடி. "வல்லரட்டன்" இத்யாதிக்குபாவம் (சிம்ஹமித்யாதி.) ... *

## பத்தாம்பாட்டு.

காமடைந்தநல்லரணமக்கென்றுநல்லமரர்
தீமைசெய்யும்வல்லசுரரையஞ்சிச்சென்றடைந்தாற்
காமரூபங்கொண்டெழுந்தளிப்பான்திருமோகூர்
நாமமேநவின்றெண்ணுமினேத்துமினமர்காள்.

### ஆறுயிரப்படி.

(நாமடைந்த) திருமோகூரே நமக்கெற்றைக்கும் ப்ராப்யமாக நாமடையப்பெறுவதே! என்று, பின்னையும் ஸ்வலாபத்தைச் சொல்லி யநுபவித்து, ஆஶ்ரிதருடைய விச்சாநுகுணமான வடிவைக்கொண்டு அவர்களுடைய விரோதிகளை நிரஸித்து ரக்ஷித்தருளுமவ னெழுந்தருளியிருந்த திருமோகூரினுடைய திருநாமத்தையே சொல்லி அவ்வூரை யேத்துங்கோளென்கிறார். ......................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதவிஷயத்தில் அபீஷ்டவிக்ரஹ பரிக்ரஹம்பண்ணி ரக்ஷிக்குமவனுடைய திருமோகூரினுடைய திருநாமத்தை, நம்மோடந்வயமுடையார், அநுசந்தித்து ஏத்துங்கோ ளென்கிறார்.

நமக்கு - நமக்கசாதாரணமாக. நாமடைந்த - நாம்பற்றின. நல்லரண் - விலக்ஷணமானவரண். என்று - என்றுகொண்டு. நல்லமரர் - நல்லதறியும் தேவர்களானவர்கள். தீமைசெய்யும் - பொல்லாங்கை ப்ரவர்த்திக்கக்கடவ. வல் - ப்ரபலரான. அசுரரை - அசுரர்களைக்குறித்து. அஞ்சிச்சென்றடைந்தால் - அஞ்சிச்சென் றாஶ்ரயித்தால். காமரூபங்கொண்டு - அநுரூபமாய் அபீஷ்டமான வடிவைக்கொண்டு. எழுந்து - கிளர்ந்து. அளிப்பான் - ரக்ஷிக்குமவன். திருமோகூர் - திருமோகூரினுடைய. நாமமே - பேர்பட்டபுகழையே. நமர்காள் - நம்மோடநுபந்தமுடைய நீங்கள். நவின்று - பயின்று. எண்ணுமின் - நினையுங்கோள். அவ்வளவில் பர்யவஸியாதே, ஏத்துமின் - ப்ரீதிப்ரேரிதரா யேத்துங்கோள்.

காமரூபமென்று - அம்ருதப்ரதாநதசையில் * பெண்ணாகி யமுதூட்டினபடியைச் சொல்லிற்றாகவுமாம். ......................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சர்வரக்ஷகன் வர்த்திக்கிற திருமோகூரை, நமக்கு பந்துக்களானுர், ஆதரித்து நினைத்தேத்துங்கோ ளென்கிருர்.

( நாமடைந்தவித்யாதி ) நமக்கு ரக்ஷையாக நாம்கிட்டின நல்லரணென்று. அவர்கள் பாசுரமிருக்கும்படி. ( நல்லமரர் ) தங்களாபத்துக்கிவனே யுபாயமென்றறிகையாலே - நல்லமரரென்கிருர். அசுரர்களிற் காட்டில் வ்யாவ்ருத்தியித்தனையுமிறே. ( தீமைசெய்யுமித்யாதி ) பரஹிம்ஸையே யாத்ரையாயிருக்கிற வசுரர்களுக்கஞ்சி வந்து சரணம் புக்கால். ( காமமித்யாதி ) ரக்ஷணுநுரூபமான வடிவைக்கொண்டு புறப்பட்டு ரக்ஷிக்கிறவன் வர்த்திக்கிற திருமோகூர். ( நாமமேநவின்று ) ஊரின்பேரை வாயாலேசொல்லி யநுசந்தித்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யேத்துங்கோள் நம்முடையவர்கள்........................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( நாமடைந்தவித்யாதி. ) "எழுந்தளிப்பான் திருமோகூர் நாமமேநவின்றெண்ணுமின் ஏத்துமினெமர்காள்" என்றவற்றைக் கடாக்ஷித் தவதாரிகை ( சர்வரக்ஷகனித்யாதி. )

"நமக்கு - நாமடைந்தநல்லரண்" என்றந்வயம். ரக்ஷையாகவென்றது - அத்யாஹார்யம். அவர்களென்றது - வக்ஷ்யமாணரான நல்லமரரை. ஈஶ்வராபிமானிகளை "நல்லமரர்" என்பானென்னென்ன ( தங்களாபத்தித்யாதி. ) பலிதம் (அசுரர்களிலித்யாதி.)

"தீமைசெய்யும்" என்று நிரூபகமாகச் சொல்லுகையாலே ( பரஹிம்ஸையே யாத்ரையாயென்றது. ) "அசுரரை" என்றது - அசுரர்க்கென்றபடி.

எழுந்து - ( புறப்பட்டு. ) நவின்று - ( வாயாலேசொல்லி. ) எண்ணுமின்-அநுசந்தியுங்கோள்.

நல்லமரர் - நமக்கு ரக்ஷையாக - நாமடைந்தநல்லரண் - என்று என்றுதொடங்கி, ஏத்துமினெமர்காள் இத்யந்வய:. திருமோகூரினுடைய நாமமேயென்றபடி.*

---

# பதினொன்றாம்பாட்டு.

ஏத்துமினமர்காளென்றுதான்குடமாடு
கூத்தனைக்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்
வாய்த்தவாயிரத்துள்ளிவைவண்டிருமோகூர்க்
கீத்தபத்திவையேத்தவல்லார்க்கிடர்கெடுமே.

## ஆறாயிரப்படி.

(ஏத்துமின்) என்னுடைய திவ்யமான சேஷ்டிதங்களை யுகந்திருப்பா ரெல்லாரும் வந்தேத்தி வாழுங்கோளென்று தான் குடமாடுகூத்தனைக் குருகூர்ச்சடகோபன் சொன்னவாயிரத்தில், திருமோகூரைச்சொன்ன வித்திருவாய்மொழியைக்கொண்டு அவ்வூரை யேத்துங்கோ ளென்கிறார். ...... ..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, பகவத்ப்ராப்தி விரோதிநிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

நமர்காள் - நம்முடையவர்களெல்லாரும். ஏத்துமினென்று - உங்களுகப்புத்தோற்றும்படி யேத்துங்கோளென்று. தான் - தான். குடமாடுகூத்தனை - குடங்கொண்டாடின கூத்தனானவனைப்பற்ற. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாருடைய. குற்றேவல்கள் - அந்தரங்கவ்ருத்திகளாய். இவை-ஈஸ்வரனுக்குத் தகுதியாம்படியாக. வாய்த்த - வாய்த்த. ஆயிரத்துள் - ஆயிரத்துக்குள்ளே. வண்திருமோகூர்க்கு - விலக்ஷணமான திருமோகூர்க்கு. ஈத்தபத்திவை - சமர்ப்பிக்கப்பட்ட பத்து, இவற்றை. ஏத்தவல்லார்க்கு. ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு சொல்லவல்லவர்களுக்கு. இடர்கெடும் - சரீராவஸாநத்திலே வழித்துணை யில்லாத துஃகம் தீரும்.

இது கலித்துறை.............................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், பரமோதாரமான திருமோகூர்க்குக் கொடுத்த வித்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார்க்கு துஃகநிவ்ருத்தியுண்டாமென்கிறார்.

(ஏத்துமின்) நம்சேஷ்டிதங்களை யுகப்பா ரெல்லாரும்கண்டு வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி யேத்துங்கோளென்று, தான்சொல்லி, அதுக்கு விஷயமாகத் தான் குடக்கூத்தாடினவனை. (குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்) ஆழ்வாருடைய அந்தரங்கவ்ருத்திகள். அவன் குடக்கூத்தை யநுசந்தித்து இவர் வாசிகமான வடிமையிலே யதிகரித்தார். (வாய்த்தவாயிரத்துள்ளிவை) சர்வேஶ்வரனுக்கு நேர்பட்ட வாயிரத்துக்குள்ளே வாய்த்தவையாய்த்திவை. (வண்டிருமோகூர்க் கீத்தபத்து) பரமோதாரமான திருமோகூர்க்குக் கொடுத்த பத்து. "ரத்நஹாரீ ச பார்த்திவঃ" (ரத்நஹாரீசபார்த்திவঃ) என்னுமாபோலே, இத்திருவாய்மொழியி லினிமையாலே திருமோகூர்க்காயிருந்தனவென்று கொடுத்தார். (இவையேத்தவல்லார்க்கிடர்கெடும்) இப்பத்தை யப்யஸிக்கவல்லார்க்கு, சரீராவஸாநத்தில் "வழித்துணையில்லை" என்று க்லேஶப்படவேண்டாதபடி காளமேகம் வழித்துணையாம்.............................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( ஏத்துமினித்யாதி. ) "வண்திருமோகூர்க்கீந்த பத்திவையேத்தவல்லார்க்கிடர்கெடும்" என்றத்தைக்கடாக்ஷித் தவதாரிகை ( பரமோதாரமானவித்யாதி. )

அதுக்கு - ஏத்துகைக்கு. அவன் "எமர்காள் - ஏத்துமின்" என்றதிவர்க்கு பலித்ததென்கிறார் ( அவன் குடக்கூத்தையித்யாதி. )

"வாய்த்த" என்றது - *ஆயிரத்துக்கும் *பத்துக்கும் விசேஷணம். ஈந்த- கொடுத்த. ஆயிரத்திலும் இப்பத்தைக்கொடுப்பானென்னென்ன (ரத்நஹாரீத்யாதி) " கவாம்ஶதஸஹஸ்ரேண தீயதாம்ஶபலாமம । ரத்நம்ஹி பகவந்நேதத் ரத்நஹாரீசபார்த்திவ: " ( கவாம்ஶதஸஹஸ்ரேண தீயதாம்ஶபலாமம । ரத்நம்ஹி பகவந்நேதத் ரத்நஹாரீசபார்த்திவ: ) இதி பாலகாண்டே வஸிஷ்டம் ப்ரதி விஶ்வாமித்ர:. "இடர்கெடும்" என்றத்தால் பலிதம் ( இப்பத்தையித்யாதி. )

எமர்காள் - ஏத்துமின் - என்று தான் குடமாடித்யாரப்யாந்வய:. .........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(தாளதாமரை.)

தைத்யாநாம் நாஶகத்வாத், வித்ருததுளஸிகாமௌளிபாவாத், ஜயித்வாத், ஸர்ப்பாதீஶேஶயத்வாத், நிரவதிகமஹோஜ்யோதிஷா, உல்லாஸ்யபாவாத், லோகாநாம் ஸ்ரஷ்ட்ருபாவாத், தஶரதஸுததா, ஶாந்திஹாரித்வ, முக்தே:, ஸாகம் ப்ரஹ்மாதிஸ்ருஷ்டேரஜநதஜநநீஶ்வஸ்த்ருதிதேநாஹ்யாயி. (க௦ச)

(தைத்யாநாம்நாஶகத்வாத்) நன்கமர்ந்துநின்றசுரரைத்தகர்க்கும் - விரோதிகளானவசுரரை நிரஸிக்குமவனுகையாலும்; ( வித்ருததுளஸிகாமௌலிபாவாத் ) என்றண்டுழாயினலங்கலங்கண்ணி - தர்ஶநீயமாய்க் குளிர்ந்திருக்கிற திருத்துழாய் மாலையாலே திகழாநின்ற திருவபிஷேகத்தையுடையனுகையாலும்; ( ஜயித்வாத் ) தேவர்கள் நாடவென்றிம்மூவுலகு - தேவர்களாஶ்ரயிக்க ப்ரதிபக்ஷத்தை வெல்லுமவனுகையாலும்; (ஸர்ப்பாதீஶேஶயத்வாத்) படர்கொள் பாம்பணைப்பள்ளிகொள்வான் - தன்னுடைய ஸ்பர்ஶத்தாலே வளராநின்றுள்ள திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொள்ளுமவனுகையாலும்; (நிரவதிகபரஜ்யோதி:) சுடரொளியொருதனிமுதல்வன் - நிரவதிகமாய் சர்வோத்க்ருஷ்டமான தேஜஸ்ஸையுடையனுகையாலும்; (உல்லாஸ்யபாவாத்) கூத்தன்கோவலன் - க்ருஷ்ணனுயவதரித்துக் குடக்கூத்துமுதலான மநோஹாரிசேஷ்டிதங்களைப்பண்ணுமவனுகையாலும்; (லோகாநாம்ஸ்ரஷ்ட்ருபாவாத்) வான்பெரும்பாழ்தனிமுதலாவித்யாதி - ப்ரக்ருதிமஹதஹங்காராதிக்ரமேண ப்ரஹ்மாதிதேவர்களோடேகூட வெல்லாலோகங்களையும் ஸ்ருஷ்டித்தவனுகையானும்; (தஶரதஸூததா) தயரதன்பெற்ற - ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணுர்த்தமாக சக்ரவர்த்தி திருமகனுயவதரிக்கையாலும்; (ஶாந்திஹாரித்வமுக்

யை;) மணித்தடம் - மரதகமணிநிபதடாகம்போலே ஸ்ரமஹரமான வடிவையுடைய ஞகையாலும்; முக்யசப்தத்தாலே - மேலிற்பாட்டில் "காமரூபங்கொண்டெழுந்தளிப்பான்" என்று சொல்லப்படுகிற வபிமதரூபத்வம் சங்க்ரஹிக்கப்படுகிறது. இப்படிகளாலே, திருமோகூர் காளமேகப்பெருமாளே யிச்சேதநருக்கு வழித்துணையென்று "தாளதாமரை" என்கிறதஸுகத்திலே ஆழ்வாராலே யறுதியிடப்பட்டதென்கிருர்.......................................................................... (க0ச

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

தாளடைந்தோர்தங்கட்குத்தானேவழித்துணையாம்
காளமேகத்தைக்கதியாக்கி - மீளுதலா
மேதமிலாவிண்ணுலகிலேகவெண்ணுமாறனெனக்
கேதமுளதெல்லாங்கெடும். (கூக)

(தாளடைந்தோர்தங்கட்கு) இதில், நாளிடப்பெற்று வழித்துணையோடேபோக வொருப்படுகிற வாழ்வார்பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; "சரீராவஸாநத்திலேபேறு" என்று சர்வேஸ்வரன் நாளிட்டுக்கொடுக்கையாலே போக்கிலேயொருப்பட்டு, நெடுங்காலம் முகம்பழகின சரீரத்தைவிட்டு, ஹ்ருதயகுஹையில் நின்றும் வழிகண்டு, மூர்த்தந்யநாடியாலே சிரகபாலத்தைபேதித்துக்கொண்டு, அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்தேறப்போமிடத்தில, கேட்டபோதே துளங்கவேண்டும்படியான யாம்யமார்க்கத்தில் பட்டவிளைப்பெல்லா மாறும்படி தன்கடாக்ஷாம்ருத வ்ருஷ்டிகளாலே குளிரவழியவார்த்து, யமபடருடைய ஸ்ரவணகடினமான கடுஞ்சொற்களைக்கேட்டவுள்வெதுப்பாறும்படி * செவிக்கினியசெஞ்சொற்களாலே செந்தலிப்பித்தும், உக்ரமான யமதர்ஸநத்தால்வந்த வெக்காயமாறும்படி தன்னுடைய சௌந்தர்யாம்ருதத்தை நிரந்தரம் வர்ஷித்துக்கொண்டு, வழியிலுண்டான விடையூறுகளையும் திவ்யாயுதங்களாலேயிருதுண்டமாகவிட்டு, "நயாமி பரமாங்கதிம்" (நயாமிபரமாங்கதிம்) என்கிறபடியே பெரியதிருவடி திருத்தோளிலேவைத்துக்கொண்டு, ஆதிவாஹிகரைக்காட்டாமல் தானேகொண்டுபோய், திருநாட்டிலேவிடுகைக்கு, வேடன், வேடுவிச்சி, பக்ஷி, குரங்கு, பிசாசம், சராசரம், முதலானுரை வருத்தமறக்கொண்டுபோய் வைகுந்தத்தேற்றியருளின காளமேகமான * அரங்கத்துறையு மின்துணைவனையொழிய வேருெருவரு மில்லையென்று காளமேகத்தைவழித்துணையாகப்பற்றுகிற * தாளதாமரையிலர்த்தத்தை "தாளடைந்தோர் தங்கட்கு" என்றுதொடங்கி யருளிச்செய்கிருரென்கை.

(தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம் காளமேகத்தைக்கதியாக்கி) "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் மரணமானல் வைகுந்தங்கொடுக்கும்பிரான்" என்று - தன்திருவடிகளை யுபாயமாக வடைந்தவர்களுக்குத் தானே மார்க்கபந்துவாம்; ஆதிவாஹிகர்கையிலும் காட்டிக்கொடாதே, "தன்னுகுழல்கருநிறத்தென்துணையே" என்கிறபடியே "சுரிகுழற்கமலக்கட்கனிவாய்க்காளமேகத்தையன்றி மற்றொன்றிலம் கதியே" என்ற காளமேகமானதானே * நயாமியிற்படியேநடத்தும். (தாளடைந்தோர்) என்கிறவிதில் தாமுமந்தர்ப்பூதரிறே. ( கா

ளமேகத்தைக்கதியாக்கி ) சாம்சாரிகதாபமெல்லாமாறும்படி சௌந்தர்யாம்ருதவர்ஷியான காளமேகத்தைவழிக்கு ரக்ஷகமானகதியாக்கி. அதாவது - "அவனடிநிழற்றடமன்றியாமே" என்றும், "அண்டமூவுலகளந்தவன்" என்றும், "கூத்தன் கோவலன் - திருமோகூராத்தன் தாமரையடியன்றிமற்றிலமரணே" என்றும், "தயரதன்பெற்றமரதகமணித்தடம்" என்றும், "மணித்தடத்தடிமலர்க்கண்கள் பவளச்செவ்வாயணிக்கொள் நாற்றடந்தோட்டெய்வமசுரரையென்றும் துணிக்கும்வல்லரட்டன்" என்றும், "காமரூபங்கொண்டெழுந்தளிப்பான்" என்றும், இப்படி வழிக்குவேண்டும் நிழற்றடங்கள் முதலானவையெல்லாம் தானேயானவனென்கை. "𑌅𑌗𑍍𑌰𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑌯𑍌 𑌰𑌾𑌮𑌃" (அக்ரதஃப்ரயயௌராமஃ) என்று, அவர்முன்னேபோக * மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கு மன்னநடையவணங்கு அவர் தோள்நிழலையண்டைகொண்டு நடந்தாப்போலே நடக்கப்பாரிக்கிறாரிறே. (மீளுதலாமேதமிலாவிண்ணுலகிலேகவெண்ணும்மாறன்) "குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும்மீள்வர்கள்" என்னும்படி மீளுதலாகிறதோஷமின்றிக்கே, "𑌨 𑌚 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇" (நசபுநராவர்த்ததே) என்றும் "புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரோ" என்றும் "மீளாப்பொருவரியவிண்ணுடு" என்றும் "மீட்சியில்லாநாடு" என்றும் சொல்லப்படுகிற பரமவ்யோம சப்தவாச்யமான பரமபதத்திலே, "மாகவைகுந்தம்காண்பதற்கென் மனமேகமெண்ணும்" என்று எழுந்தருள மநநம்பண்ணுகிற மோக்ஷலக்ஷ்மியையுடைய, மாறனென - ஆழ்வாரென்றநுசந்திக்க. (கேதமுளதெல்லாம்கெடும்) "மனக்கேதஞ்சாரா" என்கிறபடியே துஃகமென்று பேர்பெற்றவையெல்லாம் நசிக்கும். ப்ராப்யாலாப துஃகமெல்லாம் நிவ்ருத்தமாம்.,........(௯௧)

பத்தாம்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.



ஆக, திருவாய்மொழி - ௯௧.—பாட்டு - ௧00௩.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### கெடுமிடர் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கெடுமிடர்) இப்படி ஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடத் திருமோகூரி லெம்பெருமானையநுபவித்து, திருவனந்தபுரத்திலேயும் அவனையிவர்களோடேகூட வநுபவிக்கைக்காக; ......................................*

### பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், மேலவழித்துணையாகக் காளமேகத்தை யாஶ்ரயித்த விவ்வாழ்வாரை ப்ராப்யதேசத்தேறக் கொண்டுபோக வுத்யோகித்த சர்வேஶ்வரன், "தேசத்தினுடைய ப்ராப்யத்வத்தையும் தன்னுடைய கைங்கர்ய ப்ரதிசம்பந்திதையையு மிந்தவிபூதியிலே ப்ரகாசிப்பித்து இவருகப்பை விளைப்பித்துக் கொண்டுபோவோம்" என்று திருவுள்ளம்பற்றி, நிரதிசயபோக்யமான திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிறபடியைக்காட்டக்கண்டு சந்துஷ்டராய்; அவனுடைய வாஶ்ரித சம்ஶ்லேஷஸ்வபாவத்தையும், ஆஶ்சர்யாவஹமான அந்வயத்தையும், அசேஷஜகத்ரக்ஷகத்வத்தையும், அநவதிகவாத்ஸல்யத்தையும், அநுபஹிதசேஷித்வத்தையும், சர்வதேவநிர்வாஹகத்வத்தையும், சகலஜகத்ஸ்ருஷ்ட்யாதியோகத்தையும், பரமப்ராப்யத்வத்தையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும், ஆராதநவைலக்ஷண்யா பாதகத்வத்தையுமநுசந்தித்து, ஏவம்பூதனை சர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருவனந்தபுரந்தன்னையே ப்ராப்யமாகவறுதியிட்டு, இக்கே தம்முடைய சகலக்லேஶமும் தீரும்படி யவனுடைய போக்யமான திருநாமங்களைக்கீர்த்தித்தும், பஹுமுகமான கைங்கர்யங்களைப்பண்ணியும், அநுகூலஜநங்களோடே யநுபவிக்கப்பார்க்கிறார் ..................................................................*

### ஈடு.

" 'ஒருநற்சுற்றம்' என்கிறதிருமொழியிலே பலதிருப்பதிகளையுமருளிச்செய்தவிதுக்குக் கருத்தென்" என்று ஜீயர் பட்டரைக்கேட்க, "பிறந்தகத்தில்நின்றும் புக்ககத்துக்குப்போம் பெண்பிள்ளைகள் பந்துக்களிருந்தவிடமெங்கும்கண்டு வினவப்போமாபோலே, ப்ராப்யபூமியணித்

தானவாறே திருப்பதிகள்தோறும் புகுகிறார்'' என்றருளிச்செய்தார். இவருமப்படியே திருப்புளிங்குடியிலேபுகுவது, திருக்காட்கரையிலே புகுவது, திருமூழிக்களத்திலேபுகுவது, திருநாவாயிலேபுகுவது, திருக்கண்ணபுரத்திலேபுகுவது, திருமோகூரிலேபுகுவது, திருவனந்தபுரத்திலே புகுவதாகிறார். ப்ராப்யபூமியேறப்போவதாக வொருப்பட்டு, நடுவுண்டான ப்ரதிபந்தகங்களைப்போக்கி வழிகொடுபோய்விடுகைக்குக் காளமேகத்தைத் துணையாகப்பற்றினாராய் நின்றதுகிழ்; "அவ்வளவுதான் நமக்குப்போகவேணுமோ இங்கே (நமக்கு) திருவனந்தபுரம் ப்ராப்யமாகவுண்டாயிருக்க'' என்று திருவனந்தபுரத்தை ப்ராப்யமாக வத்யவஸித்து; அத்தேசமாகிற விதுதான், * வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுரமாகையாலே, அவன்றனக்கு விரும்பிவர்த்திக்கவேண்டும்படி நிரதிசயபோக்யமுமாய், அவன்வந்து வர்த்திக்கையாலே சம்சாரதுரிதமும் தட்டாதவிடமுமாய், இஶ்ஶரீரசம்பந்தமற் றவ்வருகுபோனால் செய்யுமடிமையை ருசிபிறந்தபோதே யிங்கேசெய்யலாம்படியுமாய், இனித்தான் "அமரர்கோனர்ச்சிக்கின்றங் ககப்பணிசெய்வர்விண்ணோர்'' என்கிறபடியே நித்யஸூரிகளும் வந்தடிமைசெய்கிற தேசமாகையாலே, "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ'' என்று ஆசைப்பட்டபடியே அவர்களோடேகூடவுமாய், அவ்வருகுபோக வேண்டிற்றாகிலும் "பெரியோனை யொருகாலும்பிரிகிலேன்'' என்கிறபடியே அவர்களோடேபோகவுமாயிருக்குமிறே. உகந்தருளின நிலங்களில் நிலைதான்; முதலிலே பகவத்விஷயத்தில் ருசியைப்பிறப்பிக்கைக்குடலுமாய், ருசிபிறந்தால் "யெயயாஸாஂவ்ரு வடீ)ஜெ'' (யேயதாமாம்ப்ரபத்யந்தே) என்கிறபடியே சௌலப்யத்துக்கெல்லைநிலமுமாகையாலே உபாய பாவமும் பூர்ணமாய், ப்ராப்யபூமியில் கொடுபோமிடத்தில், ஆதிவாஹிககணத்தில் ப்ரதானனானதானே "ஹாஷீா நூஹுஷ் தஃ'' (ஹார்த்தாநுக்ருஹீதஃ) என்கிறபடியே வழியில் ப்ரதிபந்தகங்களைப்போக்கிக்கொடுபோகைக்கும் முற்பாடனாகைக்கு முடலாய், சம்சாரபந்தமற்று அவ்வருகேபோனால் செய்யுமடிமையை விரோதிகிடக்கச்செய்தே காதாசித்கமாகச்செய்கைக்கு முடலாயிருக்குமிறே. ஆக, "ருசியைப்பிறப்பிக்கைக்கு முடலாய், ருசிபிறந்தபோதே யுபாயமாகைக்கு முடலாய், ஜ்ஞாநபக்திவர்த்தகங்களுமாய், விரோதியும் கிடக்கச்செய்தே யடிமைசெய்கைக்கு முடலாயிருக்கையாலே, திருவனந்தபுரமே பரமப்ராப்யம்'' என்றறுதியிட்டு, நம்மோடு சம்பந்தமுடைய அநுகூலஜநங்களடங்க அங்கேபோய்த் திரளுங்கோளென்கிறார். இதுதான் அல்லாததிருப்பதிகளுக்கு மொவ்வாதோ, "யாவரும் வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னு மென்சிந்தனையே'' என்றித்யாதிகளுமுண்டேயென்னில்; எல்லாவற்றுக்கு மெல்லாமுண்டாயிருந்தாலும்

ஓரோவிடங்களிலே யோரநுசந்தாநவிசேஷங்களோடின்று லதுக்குச்சேர வார்த்தைசொல்லு மித்தனையிறே ....................................*

## ஜீயர் அரும்பதம்.

கெடுமிடர் ப்ரவேஶே, * பண்டைநாள்தொடங்கிப் பலகாலும் திருப்பதிகளை யருளிச்செய்வானென்னென்ன (ஒருநற்சுற்றமித்யாதி.)

கீழோடித்திருவாய்மொழிக்கு சங்கதி (ப்ராப்யபூமியித்யாதி) “சுரும்பலற்றும்” இத்யாதியைப்பற்ற (ப்ராப்யமாகவுண்டாயிருக்கவென்றது) ப்ராப்யமாகவத்யவஸிக்கைக்கடியேதென்ன; பலஹேதுக்களாலே அது ப்ராப்யமாம் ப்ரகாரத்தை தர்ஶிப்பிக்கிறார் (அத்தேசமாகிறவித்யாதி) “நேசஞ்செய்து” என்றத்தைப்பற்ற (அவன்றனக்குவிரும்பியித்யாதி) “திருநோய்வினைகளெல்லாம்” என்றத்தைப்பற்ற (சம்சாரதுரிதமித்யாதி) “கடைத்தலைசீய்க்கப்பெற்றால்” இத்யாதியைப்பற்ற (இஶ்ஶரீரசம்பந்தமித்யாதி.)

உகந்தாகாரங்களெல்லா மிங்குக்கூடுமோவென்ன (உகந்தருளின வித்யாதி) (உட்லாயிருக்குமிறே) ஆகையாலே கூடுமென்றபடி. உக்தத்தைச்சேர்த்துக்கொண்டு பரமப்ராக்ருதத்தை நிகமிக்கிறார் (ஆகவித்யாதி) (ஜ்ஞாநபக்திவர்த்தகங்களுமாய்) என்றவிடத்திலே- “[Grantha text] | [Grantha text] | [Grantha text]” (ஸம்தர்ஶநாதகஸ்மாச்சித்பும்ஸாம்ஸம்மூடசேதஸாம் | குவாஸஶ்சகுபுத்திஶ்சகுதர்க்கநிசயஶ்சய: | குஹேதுஶ்சகுபாவஶ்ச நாஸ்திகத்வம்லயம்வ்ரஜேத்) என்றதநுஸந்தேயம். “நடமினோநமர்களுள்ளீர்” என்றத்தைப்பற்ற (நம்மோடு ஸம்பந்தமித்யாதி.)

அதுக்குச்சேர வார்த்தைசொல்லு மித்தனையென்றது - இருந்தபடிக்கீடாக வ்யாக்யாநம் பண்ணவேணுமேயென்றபடி.

பெரியோரையொருகாலும் பரிகிலேனென்றது - திருமொழி * கண்சோர வெங்குருதியிலே, “தேராளும்” இத்யாதி. “[Grantha text] | [Grantha text]” (யேயதாமாம்ப்ரபத்யந்தேதாம்ஸ்ததைவபஜாம்யஹம் | மமவர்த்மாநுவர்த்தந்தேமநுஷ்யா:பார்த்தஸர்வஶ:) இதி ஸ்ரீகீதாயாம். (ஹார்த்தாநுக்ருஹீதஇதி) “[Grantha text]” (ததோகோக்ரஜ்வலநம்தத்ப்ரகாஶிதத்வாரோவித்யாஸாமர்த்யாத்தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச ஹார்த்தாநு க்ருஹீதஶ்ஶதாதிகயா) இதி உத்தரமீமாம்ஸாயாம் சதுர்த்தாத்யாயஸ்ய த்விதீயபாதே ....................................*

# இரண்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

கெடுமிடராயவெல்லாங்கேசவாவென்னநாளுங்
கொடுவினைசெய்யுங்கூற்றின்றமர்களுங்குறுகில்லார்
விடமுடையரவிற்பள்ளிவிரும்பினான்சுரும்பலற்றுந்
தடமுடைவயலனந்தபுரநகர்ப்புகுதுமின்றே.

### ஆறாயிரப்படி.

திருவனந்தபுரத்திலேபோய்ப் புகுகைக்கு ப்ரதிபந்தகம் போகைக்கு கேசவாவென்று திருநாமத்தைச் சொல்லிக்கொண்டுபோய்ப் புகுவோம், வாருங்கோளென்கிறார். ..............................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அத்வக்லேஶம் தீரும்படி பாதேயமான வவனுடைய போக்யநாமங்களைக் கீர்த்தித்துக்கொண்டு ஆஶ்ரிதசம்ஶ்லேஷ ஸ்வபாவனானவனுடைய திருவனந்தபுரத்தைக் கிட்டுங்கோளென்று, ஸ்வஜநமான பாகவதர்களைக்குறித் தருளிச்செய்கிறார்.

“ வைகுண்டநாமஶ்ரவணமஶேஷாகவிநாஶநம் ” (வைகுண்டநாமஶ்ரவணமஶேஷாகவிநாஶநம்) என்கிறபடியே, ப்ரஶஸ்தகேசனான க்ருஷ்ணனுடைய, கேசவாவென்ன - கேசவநாமத்தைச் சொல்லவே. போக்யமான பாலைக்குடிக்கவே பித்தம் தன்னடையே நசிக்குமோபாதி, இடராயவெல்லாம் - சகலதுக்கங்களும். கெடும் - புக்கவிடம் தெரியாதபடி கெட்டுப்போம். நாளும் - நிரந்தரமாக. பாபாநுரூபமாக, கொடுவினை - க்ரூரயாதனைகளை. செய்யும் - செய்யாநிற்கிற. கூற்றின்தமர்களும் - யமபடரானவர்கள். “ இதீரயந்தி ” என்று * கமலநயநநாமோச்சாரணத்தாலே “ த்யஜபடதூரதரேண ” (த்யஜபடதூரதரேண) என்கிறபடியே * கோலாடுகுறுகப்பெறுதே, “ கள்ளர்போல் ” என்னும்படியே, குறுகில்லார் - ஓடிப்போவர்கள். ஆனபின்பு, விரோதிவர்க்கமணுகாதபடி, விடமுடை - விஷாத்பண்யத்தையுடைய. அரவில் - திருவரவணையிலே. பள்ளிவிரும்பினான் - ஆஶ்ரிதசம்ஶ்லேஷ ப்ரீதிதோன்றும்படி விரும்பிக் கண்வளர்ந்தருளுகிறவனுடையதாய். குணாநுபவப்ரீதரான முக்தர் சாமகாநம்பண்ணுமாபோலே, சுரும்பு - மதுபாநமத்தமான வண்டுகள். அலற்றும் - அக்ரமமாக வலற்றும்படியான. தடம் - பூந்தடங்களை. உடை - உடைத்தான. வயல் - வயல்களையுடைய. அனந்தபுரநகர் - திருவனந்தபுரத்தை. இன்றே - காலவிளம்பம்பிறவாதபடி இன்றே. புகுதும் - கிட்டுங்கோள். ..............................................*

### ஈடு - முதற்பாட்டு.

ப்ரீதியாலே திருநாமத்தைச்சொல்ல, திருவனந்தபுரத்துக்குப் போகைக்கு விரோதியானவையெல்லாம்போம், அங்கேபுகவாருங்கோளென்று அநுகூலரையழைக்கிறார்.

(கெடுமிடராயவெல்லாம்) இடரென்று பேர்பெற்றவையெல்லாம்கெடும். ப்ரஹ்மஹத்யைக்கு ப்ராயஸ்சித்தமாக த்வாதஶவார்ஷிகம் சரித்தால் மற்றொருபாபத்துக்கு மற்றொருப்ராயஸ்சித்தம் பண்ணவேண்டியிருக்குமிறே; இங்கதுவேண்டா; "பாபேந்தநாக்நி:" (பாபேந்தநாக்நி:) என்கிறபடியே. ப்ராயஸ்சித்தமும் பலவாயிருக்குமோவென்னில் (கேசவாவென்ன) அவனொருவிரோதியைப்போக்கினபடிசொல்ல, விரோதியென்று பேர்பெற்றவையெல்லாம் நசிக்கும்; ராவணனொருவனும் ப்ராதிகூல்யம்பண்ண ராக்ஷஸஜாதியாக நசித்தாப்போலே. (எல்லாம்) அநுபவிக்கக்கடவவையும் முன்பேதொடங்கி அநுபவிக்கிறவையும், நசிக்கும்; "போயபிழையும் புகுதருவானின்றனவும்." (என்ன) உக்திமாத்ரமே யிதுக்குவேண்டுவது, கார்யத்தில்வந்தால் அர்த்தக்ரியாகாரியாயே தலைக்கட்டும்; அன்றிக்கே, ப்ரஶஸ்தகேஶனாயிருக்கு மிருப்பைச்சொல்ல சம்சாரதுரிதங்க ளடங்கலும்போமென்னுதல், "கேஶவ: க்லேஶநாஶந:" (கேஶவ:க்லேஶநாஶந:) என்கிறபடியே; அன்றியே, ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனென்னுதல்; ஆனாலும் சொல்லிப்போருமது முதற்பொருளே.

(நாளுமித்யாதி) நாள்தோறும் கொடியசெயலைச் செய்யக்கடவம்ருத்யுவுக்கந்தரங்கராயிருப்பாரும் வந்துகிட்டப்பெறார்கள். யமனுக்கந்தரங்கனென்ன சர்வேஸ்வரனுடையார்பக்கலிலே வந்துகிட்டவோ. "ஸ்வபுருஷம்" (ஸ்வபுருஷம்) இத்யாதி, "தஸ்யயஜ்ஞவராஹஸ்ய" (தஸ்யயஜ்ஞவராஹஸ்ய) இத்யாதி, "ப்ரணாமம்யேபிகுர்வந்தி" (ப்ரணாமம்யேபிகுர்வந்தி) என்றிறே யவன்வார்த்தையும். [இறைஞ்சியும்சாதுவராய்ப்போதுமின்களென்றான்] அவர்களைக்கண்டால் "நாம் கடவோமல்லோம்" என்றுபோராதே, கிட்டியநுவர்த்தித்துப் போரும்கிடிகோள்; [ஸ்வபுருஷம்] [ஸ்வபுருஷம்] யமன், தன்பரிகரம்கையும் பாசமும் சூலமும் நாயுமாய்ப்போருகிறபடியைப்பார்த்து, பாகவதர்களுமல்லாதாரும் கலந்திருப்பார்கள், பாகவதர்கள்முன்னே யிவன்கிட்டில்செய்வதென்" என்று துணுக்கென்று சொல்லுகிறான் [ஸ்வபுருஷம்] [ஸ்வபுருஷம்] தனக்கந்தரங்கனாயிருக்கையாலே, தன்மேன்மை சொல்லவேண்டுமிடத்திலே தாழ்வுசொல்லுகிறானைத்துத் தவிரவொண்ணாமையாலே. [அபிவீக்ஷ்ய] [அபிவீக்ஷ்ய] இவன்றான் நாலிரண்டோலமறுக்கத் தரமுடையனாயிருக்குமாய்த்து; சொற்செல்லுகைக்காக விப்படியிருக்கிறவனைப் பார்க்கிறபார்வையிலே கார்யகௌரவமெல்லாம் தோற்றும்படி பார்த்தானாய்த்து. [மதுஸூதநப்ரபந்நாந்] [மதுஸூதநப்ரபந்நாந்] "இவர்களை நலிந்தாலவனுக்கென்" என்ன; இவர்களவன்பக்கலிலே ந்யஸ்தபரராயிருப்பார்கள்; இவர்களுக்குவந்ததொன்றுக் கவன்மார்வுதட்டிக்கொண்டுவரும். உன்னுடையோமாய்ப்போகிற வெங்களுக்கு வேறுசிலர்க்கஞ்சவேண்டும்படி யிருந்ததாகில் நீ பின்னையாராயிவ்விருப்பிருந்தேவுகிறதெ

ன்ன [ ப்ரபுரஹமங்யந்ருணாம் ] [ ப்ரபுரஹமங்யந்ருணும் ] எனக்கடைத்த விஷயத்தில் சொற்செல்லாதாகிலன்றே வெனக்குக் குறையாவது; நாம் கடவோமல்லாதவிஷயத்திலே நாமாராயாநிற்கவோ. இதுதன்னைத் திருமழிசைப்பிரானு மருளிச்செய்தாரிறே - "திறம்பேன்மின்" இத்யாதி. [ அவன்றமரெவ்வினையரித்யாதி ] அவர்கள் தங்களிலேசொல்லியிருக்கும் வார்த்தையிறே யிது. [ மாறுசெய்தவித்யாதி ] சக்ரவர்த்தித்திருமகனர் பேரை யிவனாராயவோ. ஒருதிருவேட்டையிலே, பட்டர் திருவூற்றங் கரையிலே பேரோலக்கமாகவிருக்க, "சந்த்யையானது" என்று சிலர் விண்ணப்பஞ் செய்ய; "நாம் பெருமாளழகிலே துவக்குண்டு இன்றொருநாளும் கர்த்தவ்யத்திலே அல்பம் தாழநின்றோமென்றால் இது குற்றமாக யமன்கேட்கவோ, ராஜாவிருந்து நாட்டுக்கணக்குக் கேட்டுக் கொடுவாரா நின்றால் ராஜாவுக் கந்தரங்கனாயிருப்பா னொருவன்பேரை வாசித்தால் 'ஓங்காண், அதுகிடக்கமேற்சொல்' என்றால் பின்னை யொருகாலமும் அப்பேரொடுத்து வாசிக்கப்பெறுதுகாண்" என்றாராம். இந்தப்ரஸங்கத்திலே, "உனக்காகித்தொண்டுபட்டநல்லேனை வினைகணலியாமைநம்புநம்பீ" என்றருளிச்செய்தார். [ வள்ளலேயுன்தமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல் ] இருவரொருவழிபோகப்பெறார்கள். [ கொடுமைசெய்யுமித்யாதி ] விழுக்காடறியாதே வந்துகிட்டில் செய்வதென்னென்னில் [ தடவரையித்யாதி ] திருவாழியையிட்டுத் தோளைக்கழித்தல், ஓரம்பாலே தலையை யுருட்டுதல் செய்யுமத்தனை. வாணன்பட்டது படுதல், ராவணன்பட்டது படுதல் செய்யுமத்தனை. [ வேண்டாமை நமன்றமரென்தமரை வினவப்பெறுவா ரலரென்றுலகேழாண்டான் ] யமபடர் நம்முடையாரை வினவப்பெறார்கள். அதுக்கடியென் [ வேண்டாமை ] ஊர்க்கணக்கனே கோயிற்கட்டணத்திலேபுக்குப் படுக்கைப்பற்றாராய்வான்; "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்கிறவன் இவர்கள்கையில் காட்டிக்கொடானே. "நின்னுமம்கற்றவாவலிப்புடைமை - நமன்றமர்தலைகள்மீதே - நாவலிட்டுழிதருகின்றோம்." [ ப்ரபவதிஸம்யமநே ] [ ப்ரபவதிஸம்யமநே ] உங்களை நியமிக்கப்போந்த வென்னைப்போலல்லகாண் என்னை நியமிக்குமவன். இவ்வோலக்கத்திலே வந்தாலிறே யிவனாராய்வது, அவன் * எங்குமுளனிறே. (நாளும் கொடுவினைசெய்யுங்கூற்றின் தமர்களுங்குறுககில்லார் ) பழையதாகநவிந்துபோந்த வாஸனைகொண்டு பகவத் விஷயத்திலே முதலடியிட்டவின்றும்கிட்டவோ. (குறுககில்லார்) [ நிர்த்தோஷம்வித் ] [ நிர்த்தோஷம்வித்தி ] சாவதுபிறப்பதாய்ப் போந்தவனுவது, பரிஹாரமில்லாத தோஷங்களையுடையனுவது, ஆனாலும் அவனை நிர்த்தோஷனாகவே புத்திபண்ணுவது. தோஷங்களுண்டாயிருக்க விப்படி நினைக்கவேண்டுவானென்னென்ன [ ப்ரபாவாத் ] [ ப்ரபாவாத் ] இவனையோ பார்ப்பது, இவன்பற்றி

னவனைப் பார்க்கவேண்டாவோ. இவனை யாராய்கையாவது - பகவத் ப்ர பாவத்தைப் பரிச்சேதிக்கையாமிறே. ( கில்லார் ) எரிகிறநெருப்பிலே கிட்டுவாருண்டோ. நியாமகனுடைய நியமநவாக்யங்கொண்டு கிட்டாமை யல்லவிறே; தந்தாமை வேண்டாதாருண்டோ.

( விடமுடையித்யாதி ) இனிமேல் ப்ராப்யத்தைச் சொல்லுகிறது. ( விடமுடை ) செந்தெங்குக்கு முட்கட்டினப்போலே யொருவர்க்கும் முகங்கொள்ளவொண்ணுதிருக்கை; "வாய்ந்தமதுகைடபரும்வயிறுருகிமாண்டார்." விரோதிகளாய்க்கிட்டினர் முடிந்துபோம்படியா யிருக்கும். ( அரவு ) ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்திநாற்றங்களையுடைத்தாயிருக்குமிறே. ( பள்ளிவிரும்பினன் ) பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியேயாய்த் தங்குக் கண்வளர்ந்தருளுகிறது. "வாதேநாய்யாரோஹதி" ( பாதேநாத்யாரோஹதி ) என்று துகைத்தேறலாயாய்த் திருப்பது. ( சுரும்பலற்றும் ) "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" ( ஏதத்ஸாமகாயந்நாஸ்தே ) என்று முக்தர்செய்பவற்றை வண்டுகள்செய்யாநிற்கும். ( தடமுடைவயல் ) விரஜை, மற்றையவற்றுக்குப் போலியா யிருக்குமாய்த்துத் தடாகங்கள். ( அனந்தபுரநகர் ) * கலங்காப்பெருநகரத்துக்குப் போலியாயிருக்கும். ( புகுதுமின்றே ) "க்ரமத்திலேபுகுகிறேம்" என்றுறி யிருக்குமதன்று, இச்சைபிறந்தவின்றே போய்ப்புகுவோம். ...........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (கெடுமிடரித்யாதி) "கேசவாவென்ன - இடராயவெல்லாம்- கெடும், தடமுடைவய லனந்தபுரநகர் புகுதும்" என்றவற்றைக்கடாக்ஷித் தவதாரிகை (ப்ரீதியாலேயித்யாதி)

இத்தால்பலிதம் (ப்ரஹ்மஹத்யைக்கித்யாதி) "திருநாமம்பாபநிவர்த்தகம்" என்னுமதுக்கு ப்ரமாணம் காட்டுகிறுர் ( பாபேந்தநேத்யாதி ) "யந்நாமஸங்கீர்த்தநதோவிமுச்யதேத்வநேகஜந்மார்ஜிதபாபஸஞ்சயைः। பாபேந்தநாக்நிஸ்ஸஸதைவநிர்மலோமமாஸ்துமாங்கல்யவிவ்ருத்தயேஹரிः" ( யந்நாமஸங்கீர்த்தநதோவிமுச்யதேத்வநேகஜந்மார்ஜிதபாபஸஞ்சயைঃ। பாபேந்தநாக்நிஸ்ஸஸதைவநிர்மலோமமாஸ்துமாங்கல்யவிவ்ருத்தயேஹரிঃ ) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. "கேஸவா" என்கிறவிடத்தில் - "யஸ்மாத்த்வயைவதுஷ்டாத்மாஹதஃகேஸீஜநார்த்தந। தஸ்மாத்கேஸவநாமாத்வம்லோகேக்யாதோபவிஷ்யஸி" ( யஸ்மாத்த்வயைவதுஷ்டாத்மாஹதஃகேஸிஜநார்த்தந । தஸ்மாத்கேஸவநாமாத்வம்லோகேக்யாதோபவிஷ்யஸி ) என்றதநுஸந்தேயம். ஒருவிரோதிநிரஸநவாசகமான திருநாமம்சொன்னுல் சகலவிரோதிகளும் போகக்கூடுமோவென்ன; வ்யதிரேகத்ருஷ்டாந்தம் (ராவணனித்யாதி) "எல்லாம்" என்றதுக்கர்த்தம் (அநுபவிக்கவித்யாதி) அநுபவிக்கக்கடவவையென்றது - உத்தராகம். அநுபவிக்கிறவை - பூர்வாகம். அப்படி நசிக்குமோவென்ன; ப்ரமாணம் (போயவித்யாதி) போயபிழை - பூர்வாகம். புகுதருவாநின்றன - உத்தராகங்கள். "என்ன - கெடும்" என்றதுக்குபாவம் (உக்திமாத்

ரமேயித்யாதி) "𑌨𑌰𑌕𑍇𑌪𑌚𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁𑌯𑌮𑍇𑌨𑌪𑌰𑌿𑌭𑌾𑌷𑌿𑌤𑌃 । 𑌕𑌿𑌂𑌤𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑍋𑌦𑍇𑌵𑌃𑌕𑍇𑌶𑌵𑌃𑌕𑍍𑌲𑍇𑌶𑌨𑌾𑌶𑌨𑌃" (நரகேபச்யமாநஸ்துயமேநபரிபாஷிதஃ। கிந்த்வயாநார்ச்சிதோதேவஃகேஶவஃக்லேஶநாஶநஃ) இதிமஹாபாரதே. மூன்றுமர்த்தத்துக்கு "𑌕𑌇𑌤𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌨𑌾𑌮𑌈𑌶𑍋𑌽𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍। 𑌆𑌵𑌾𑌂𑌤𑌵𑌾𑌙𑍍𑌗𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑍌𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑍇𑌶𑌵𑌨𑌾𑌮𑌵𑌾𑌨𑍍" (கஇதிப்ரஹ்மணோநாம ஈஶோஹம்ஸர்வதேஹிநாம் । ஆவாம்தவாங்கேஸம்பூதௌ தஸ்மாத்கேஶவநாமவாந்) என்கிற ஶ்லோகமநுசந்தேயம். "கெடுமிடராயவெல்லாம்" என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டாகையைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஆனுமித்யாதி.)

"தமர்களும்" என்றசஶப்தத்துக்கர்த்தம் (யமனுக்கித்யாதி.) கிட்டமாட்டாமைக்குப் பலப்ரமாணங்கள் (ஸ்வபுருஷமித்யாதி) * தாளதாமரையிலெழுதப்பட்டது. "𑌤𑌸𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌵𑌰𑌾𑌹𑌸𑍍𑌯𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑌮𑌿𑌤𑌤𑍇𑌜𑌸𑌃। 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌂𑌯𑍇𑌽𑌪𑌿𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿𑌤𑍇𑌷𑌾𑌮𑌪𑌿𑌨𑌮𑍋𑌨𑌮𑌃" (தஸ்யயஜ்ஞவராஹஸ்யவிஷ்ணோரமிததேஜஸஃ। ப்ரணாமம்யேபிகுர்வந்திதேஷாமபிநமோநமஃ) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. அவன் வார்த்தையும் - யமன்வார்த்தையும்.

"இறைஞ்சியும்" இத்யாதிபாசுரத்துக்கர்த்தம் (அவர்களையித்யாதி) "𑌸𑍍𑌵𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍍" (ஸ்வபுருஷம்) என்றெடுத்ததுக்கர்த்தம் சொல்லுவதாக பதோபாதாநம் (ஸ்வபுருஷமென்று) "𑌪𑌾𑌶𑌹𑌸𑍍𑌤𑌮𑍍" (பாஶஹஸ்தம்) என்றத்தைக்கடாக்ஷித்து ஶ்லோகாவதாரிகை (யமனித்யாதி) "அபி, வி" என்ற உபஸர்க்கார்த்தம் (இவன்றனித்யாதி வாக்யத்வயம்) அவனுக்கு - ஈஶ்வரனுக்கு. அவன்மார்வு தட்டிக்கொண்டென்றது - "𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿" (மோக்ஷயிஷ்யாமி) என்றத்தைப்பற்ற. "𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑌹𑌮𑌨𑍍𑌯𑌨𑍃𑌣𑌾𑌮𑍍" (ப்ரபுரஹமந்யந்ருணாம்) இத்யாதிக்கவதாரிகை (உன்னுடையோமாயித்யாதி)

திறம்பேல்மின்கண்டீர் - தப்பாதேகிடிகோள். செவிக்கு - செவியிலே. "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றவிடத்திலே - "பெருமாளொருநாள் கிழக்கேபுறப்பட்டருளின வளவிலேமழைவர, கீழையூரிலாலயத்திலே யெழுந்தருள, எம்பெருமானாரும் முதலிகளும் புறம்பேமழையிலே நனைந்துகொண்டுநிற்கிறவளவிலே, ஒருவன்வந்து 'பெருமாளுள்ளேயெழுந்தருளினரே, தேவரீருமுள்ளேயெழுந்தருளவொண்ணாதோ' என்ன, 'கெடுவாய், மஹாராஜா வேஶ்யாகமநம்பண்ணினால் தத சாதாரணமஹிஷியும் பரபுருஷகாமிநியாகலாமோ' என்று எம்பெருமானாரருளிச் செய்தார்" என்கிற ஐதிஹ்யமருளிச்செய்வர்.

"யமபடர்கிட்டமாட்டார்" என்னுமதுக்கு ப்ரமாணாந்தரமும் அதுக்கர்த்தமுமருளிச்செய்கிறார் (அவன்றமரித்யாதிநாலுவாக்யத்தாலே) முதற்றிருவந்தாதி ஐம்பத்தஞ்சாம்பாட்டு. அவர்கள் தங்களிலே-யமபடர் தங்களிலேயென்னுதல், ஆழ்வார்கள் தங்களிலேயென்னுதல். இவ்வாக்யத்துக்கர்த்தம் சந்திக்தம். "ஆட்பட்டார் பேர்" என்றது-ஆட்பட்டபேரென்னுதல், ஆட்பட்டவர்களுடைய பரிகரபூதரென்னுதல், ஆட்பட்டவர்களுடையபேரை தரித்தவர்களென்னுதலென்றுமூன்றர்த்தம். அவன்றமர்-அவனடியார், எவ்வினையராகிலும்-எப்படிப்பட்டபாபத்தையுடையரேயாகிலும், எங்கோனவன்றமரேயென்றொழிவதல்லால் - நம்முடைய ஸ்வாமியானவனுடைய வடியாரென்றொழியுமதல்லால், நமன்றமராலாராயப்பட்டறியார்கண்டீர்-யமபடராலாராயப்பட்டறியார்கிடிகோள், அரவணைமேல்பேராயற்காட்பட்டார்பேர்.

ஆட்பட்டார்பேர்-ஆராயப்பட்டறியார்கண்டீரித்யந்வய:. ப்ரமாணாந்தரம் (மாறுசெய்தவித்யாதி) திருச்சந்தவிருத்தம். இதுக்குபாவம் (சக்ரவர்த்தியித்யாதி.) மாறுசெய்த-எதிரிட்டுக்கொண்ட, வாளரக்கன் - ருத்ரன்பக்கல் பெற்ற வாளையுடைய ராவணனுடைய, நாளுலப்ப - ஆயுஸ்ஸை முடிக்கைக்காக, அன்று - பிராட்டியைப்பிரித்து ப்ராதிகூல்யத்திலே கைவளர்ந்தவன்று, இலங்கைநீறுசெய்து-திருவடியைக்கொண்டு லங்கையை பஸ்மமாக்கி, சென்று கொன்று - லங்கையளவும் சென்று அவனைக்கொன்று, வென்றிகொண்டவீரனார் - அவனை ஜயித்த வீரஸ்ரீயையுடைய சக்ரவர்த்தித்திருமகனார்; வேறுசெய்து தம்முளென்னைவைத்திடாமையால் - "இவன் நம் திருவடிகளுக்குப் புறம்பாயிருப்பானொருவன்" என்று தம்முடைய திருவுள்ளத்திலென்னைநினையாமையால், நமன்கூறுசெய்துகொண்டு - செய்தார் செய்தகுற்ற மாராயக்கடவ யமன், சக்ரவர்த்திதிருமகனார் அந்தரங்கனுக்கிவைத்த வென்னைப்பிரித்துக்கொண்டு, இறந்தகுற்ற மெண்ணவல்லனே - செய்துகழிந்த பாபத்தை நினைக்க சக்தனோவென்று பாட்டுக்கு சப்தார்த்தம். "யமவஸ்யதைக்கஞ்சவேண்டா" என்னுமதுக்கைதிஹ்யம் (ஒரு திருவேட்டையிலேயித்யாதி.) கேட்கவோ - கேளானேயென்றபடி. "ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" (ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா) என்ற ஈஶ்வராஜ்ஞையை மறுத்தால் தண்டியாதிருக்கலாமோவென்ன (ஒருராஜாவித்யாதி.) ஆகில், ஆஜ்ஞாதிலங்கநம் பிறந்தாலு மஞ்சவேண்டாவேயென்ன (இந்தவித்யாதி.) இந்தப்ரசங்கத்திலேயென்றது - அந்தரங்கனாயிருப்பா னொருவனென்ற விந்தப்ரசங்கத்திலேயென்றபடி. திருமொழி ஆறும்பத்து மூன்றாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. சொல்லாய்திருமார்பா - பிராட்டியைத் திருமார்விலேயுடையவனே, இதுக்கொரு போக்கடி சொல்லவேணும்; உனக்காகித் தொண்டுபட்ட நல்லேனை - உன்திருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே யந்வயிக்கும்படியான வைலக்ஷண்யத்தையுடைய வென்னை, வினைகணலியாமைநம்புநம்பீ - கர்மங்க ளென்னைநெருக்காதபடி நீ யங்கீகரித்தருளவேணும் பூர்ணஜ்ஞனவனேயென்று சப்தார்த்தம். "யமவஸ்யதைக்கஞ்சவேண்டா" என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் (வள்ளலேயித்யாதி.) "கள்ளர்" என்றதுக்கு பாவம் (இருவரித்யாதி.) ப்ரமாணாந்தரமும் அதுக்குபாவமு மருளிச்செய்கிறார் (கொடுமைசெய்யு மித்யாதிவாக்யத்ரயத்தாலே) உக்ரக்ருத்யங்களைச் செய்யும் யமனும், என்கோலாடுகுறுகப்பெறா - என்னுடைய வாஜ்ஞை நடக்குமிடமெல்லாம் புகுரப்பெறானித்யர்த்த:. விவரணம் (வாணனித்யாதி.) ப்ரமாணாந்தரம் (வேண்டாமையித்யாதி) திருமொழி பத்தாம்பத்து ஆறாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "நீண்டான்" இத்யாதி. இதுக்குபாவம் (யமபடரித்யாதி.) வேண்டாமை - ப்ராப்தியில்லாமையாலென்று சப்தார்த்தம். இதுக்கு லௌகிகத்ருஷ்டாந்தம். (ஊரித்யாதி.) கோயிற்கட்டணம் - அந்த:புரம். படுக்கைப்பற்று - ஸ்த்ரீகளிருக்கிறவிடம். அவன்றான் காட்டிக்கொடுத்தாலோவென்ன (செய்தாரோவித்யாதி.) ப்ரமாணாந்தரம் (நின்னுமங்கற்றவித்யாதி) திருமாலை முதற்பாட்டு. ஆவலிப்பு - அவலேபதை. கர்வமென்றபடி.

யமனுக்கெல்லாரு மஞ்சவேண்டியிருக்க, யமன்றா னீஶ்வரனுக் கஞ்சுகைக்கடி யருளிச்செய்கிறார் (ப்ரபவதீத்யாதி) "அஹமமரவராா்ச்சிதேந தாத்ரா யம இதி லோகஹிதாஹிதே நியுக்த:। ஹரிகுருவஶகோஸ்மி ந ஸ்வதந்த்ர: ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:" (அஹமமரவரார்ச்சிதேந தாத்ராஸமஇதி லோகஹிதாஹிதேநியுக்த:। ஹரிகுருவஶகோஸ்மிநஸ்வதந்த்ர: ப்ரபவதிஸம்யமநே

மாபிவிஷ்ணுঃ.) "விஷ்ணுঃ" என்றத்தைக் கடாக்ஷித்தர்த்தம் (உங்களையித்யாதி.) இவனுக்குக் குறையேது, அவனுக்கேற்ற மேதென்ன (இவ்வோலக்கத்திலே யித்யாதி.)

என்றும் பாதித்துப் போந்தவனுக்கு இன்று கிட்டவொண்ணுதோ வென்ன (பழையதாகவித்யாதி;) இதுக்கு "நாளும்" என்றதிலே நோக்கு. "கேஶவா" என்றது - உக்திமாத்ரமாகையாலே, (முதலடியிட்ட) என்கிறார். கிட்டாமைக்கடியேதென்ன (நிர்த்தோஷமித்யாதி) "ஊ–ஶாவாஶாவிஸவ–ூாஶீகூுதவெூா நாஹூிகஃவ–ஶா । ஸஊாஶ்ரூயெஊாதிெஉவம் ஶ்ரூஜயாஶஶணஂயதி । நிஶெூாஷஂவிஜீதஂஜஞு–ஂவூஜாவாதூஶஊாதூநஃ" (துராசாரோபிஸர்வாஶீ க்ருதக்நோநாஸ்திகঃபுரா । ஸமாஶ்ரயேதாதிதேவம் ஶ்ரத்தயாஶரணம்யதி । நிர்த்தோஷம் வித்திதம்ஜந்தும் ப்ரபாவாத்பரமாத்மநঃ) இதி பாரதே ஸாத்வதேச. "ஜஞு–ூ" (ஜந்தும்) என்றத்தையும் "ஊ–ஶாவாஶாவி" (துராசாரோபி) இத்யாதிகளையும் கடாக்ஷித்து, "நிஶெூாஷஂவிஜீ" (நிர்த்தோஷம்வித்தி) என்றதுக்கர்த்தமருளிச்செய்கிறார் (சாவதித்யாதி வாக்யத்ரயத்தாலே.) குறுகாவொன்னுதே, "கில்லார்" என்றதுக்கு பாவம் (எரிகிறவித்யாதி.) இவ்விடத்திலே, "ஹஶிஊஶவஶாஶிதாஜீவஜூஂவூணஊதியஃவஶஊாூதொஊநூஷூஃ । தஊவமதஸஊஹூவாவஶஂவூஜவஶிஹூதூயஶாஜீஊாஜூவிதூூ" (ஹரிமமரவரார்ச்சிதாங்க்ரிபத்மம் ப்ரணமதியঃபரமார்த்ததோமநுஷ்யঃ । தமபகதஸமஸ்தபாபபந்தம் வ்ரஜபரிஹ்ருத்யயதாக்நிமாஜ்யஸிக்தம்) என்றதநுசந்தேயம். விவரணம் (நியாமகனுடையவித்யாதி.)

செந்தெங்கு - செவ்விளநீர். ஒருவர்க்கும் முகங்கொள்ள வொண்ணுதிருக்கைக்கு ப்ரமாணம் (வாய்ந்தவித்யாதி) மூன்றுந்திருவந்தாதி அறுபத்தாறும்பாட்டு, "காய்ந்து" இத்யாதி. இதுக்கு பாவம் (விரோதியித்யாதி.) பர்யங்கவித்யை- *தேவிமாரிலே கண்டுகொள்வது. கண்வளர்ந்தருளுகைக்கு ப்ரயோஜநம் (பாதேநேத்யாதி.)

சுரும்பு - வண்டு. இதுக்கு பாவம் (ஏததித்யாதி.) மற்றவையென்றது-ஆரம், ஐரம்மதியம் என்கிற தடாகங்களை. "நகர்" என்றதுக்கு பாவம் (கலங்காவித்யாதி.) "இன்றே" என்கிற வவதாரணார்த்தம் (க்ரமத்திலேயித்யாதி.)

விடமுடையென்றுதொடங்கி, நகர் - இன்றே - புகுதும், கேசவாவென்ன- இடாராயவெல்லாம் - கெடும், நாளும்கொடுவினைசெய்யும் கூற்றின்தமர்களும் குறுககில்லாரித்யந்வயঃ. ........................................................................*

——❀——

# இரண்டாம்பாட்டு.

இன்றுபோய்ப்புகுதிராகிலெழுமையுமேதஞ்சாரா
குன்றுநேர்மாடமாடேகுருந்துசேர்செருந்திபுன்னை
மன்றலர்பொழிலனந்தபுரநகர்மாயனும
மொன்றுமோராயிரமாமுள்ளுவார்க்கும்பரூரே.

## ஆறாயிரப்படி.

( இன்றுபோய் ) ப்ரதிபந்தகம் போகைக்குக் கேசவாவென்னும் திருநாமம் சொல்லவேணுமென்று நியமமுண்டோவென்னில், அதில்லை;

அவனுடைய வாயிரம் திருநாமத்திலே வேண்டிற் றொருதிருநாமத்தைநினைக்கவமையும்; நினைக்கவே, நிரஸ்த சமஸ்த ப்ரதிபந்தகரா யின்றேபோய்த் திருவனந்தபுரத்திலே புகலாம், போய்ப்புகுதிராகில் ஒருநாளு மொருதுஃகமில்லை யென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்சர்யபூதனானவனுடைய திருநாமங்கள் ஸஹஸ்ர முகமாக போக்யமாமென்கிறார்.

இன்று - காலவிளம்பம் பிறவாதபடி ருசிபிறந்தவின்றே. போய் - சென்று. புகுதிராகில் - ப்ராபிப்புதிகோளாகில். "கொவஜநஂஸ்ம" (கோபஜநம்ஸ்மரந்) என்கிறபடியே, எழுமையும் - யாவதாத்மபாவி. ஏதம்-சம்சாரதோஷம். சாரா - தட்டாது. ப்ராபிக்கிற ப்ராப்யதேசந்தான், குன்றுநேர்-மலைபோலேயிருக்கிற. மாடம் - மாடங்களினுடைய. மாடே - பரிசரத்திலே. குருந்துசேர் - குருந்தோடு சேர்ந்த. செருந்தி - செருந்தியும். புன்னை - புன்னையும். மன்று - மன்றிலே. அலர் - அலரும்படியான. பொழில் - பொழிலையுடைத் தாகையாலே நிரதிசய போக்யமான. அனந்தபுரநகர் - திருவனந்தபுரமாகிற நகரத்திலே. மாயன் - ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமான சௌந்தர்ய சௌசீல்ய சௌலப்யாதி குணவிசிஷ்டனான வாஶ்சர்யபூதனுடைய. நாமம் - தத்குணவாசகநாமம். ஒன்றும் - ஏதேனுமொன்றாகிலும். ஓர் - அத்விதீயமாய்க்கொண்டு. ஆயிரமா - ஸஹஸ்ரமுகமாக. உள்ளுவார்க்கு-நிரூபிப்பார்க்கு. அத்தேசத்தில் குணாநுபவமே, உம்பரூர் - பரமபதம்.

பரமபதம் வர்ஜநீய மென்றுமாம். மன்றென்று - மன்றலாய், பரிமளத்தை விகஸிக்கிற பொழிலென்றுமாம்.................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

ப்ரதிபந்தகங்கள் போகைக்குச் சொன்ன திருநாமந்தானே ஆயிரம்ப்ரகாரத்தாலே ரக்ஷகமாமென்கிறார்.

( இன்றுபோய்ப்புகுதிராகில் ) போவோமென்றிச்சைபிறந்தவின்றேபோய்ப் புகுவுதிகோளாகில். இதரவிஷய விரக்திதொடக்கமான அ

திகாரிசம்பத்திவேண்டாவோ, இச்சாமாத்ரமே யமையுமோவென்னில்; "யதஹரேவவிரஜெத் ததஹரேவப்ரவ்ரஜெத்" (யதஹரேவவிரஜேத் ததஹரோவப்ரவ்ரஜேத்) என்கிறபடியே அவைவேண்டுவது அதிக்ருதாதிகாரமான விஷயங்களுக்கு, சர்வாதிகாரமுமாய் ப்ராப்தமுமாய் முன்பே யிவனை யிச்சித்து இச்சைபார்த்திருக்கும் விஷயத்துக்கு இச்சாமாத்ரமே வேண்டுவது; விஷயாநுரூபமாக வதிகாரி சம்பத்தி இவனால் சம்பாதிக்க முடியாமையாலும் * ஆட்பார்த்துழிதருமவனாகையாலும் வேண்டா. [யதிவாராவணஸ்ஸ்வயம்] [யதிவாராவணஸ்ஸ்வயம்] என்னுமவனிறே – விபீஷணனென்று பேராய்; ராவணனாயிருந்தானென்று மீளாதேயிடீர். அதுவென், அங்கு நின்றும் வந்தா னொருவனைக் கைக்கொண்டதாகவமையாதோ வென்னவேண்டா, குறைவாளர்க்கிறே நம்மா லபேக்ஷையுள்ளது, அதுள்ளது ராவணனுக்கிறே. "விபீஷணஸ்துதர்மாத்மா" (விபீஷணஸ்துதர்மாத்மா) என்று தனக்கென்ன வொரு கைம்முதலுமுண்டாகையாலே நாளைவரவுமாம், அரைக்ஷணம் கிட்டாவிடில் நாசமாயிருக்கிற தவனுக்கேயன்றோ; ஆனபின்பு, அவனையன்றோ முற்படக் கைக்கொள்ளவேண்டுவது. இனித்தா னிவனைக் கைக்கொண்டால், இவனுமிவன்றன்னோடே நால்வருமாய்ப்போம்; ராவணனைக் கைக்கொண்டால், துறுப்புக்கூடாகக் கைக்கொண்டதாகலாம்; மஹாராஜரொருவரையுமங்கீகரிக்க வாநரஜாதியாக வாழ்ந்துபோனப்பேரலே. (எழுமையுமேதஞ் சாரா) ஒருகாலமும் பொல்லாங்குவந்து கிட்டாது. (சாரா) அதுக்கவன்றான் நினைப்பிடவும்வேண்டா. "சும்மெனாதே கைவிட்டோடித்தூறுகள்பாய்ந்தன" என்கிறபடியே - "நமக்கிவ்விடமாப்ரயமல்ல" என்று தன்னடையேவந்து கிட்டாது. ராஜகுலசம்பந்தத்தாலே விட்டோடிப்போம்; "வானேமறிகடலோ" இத்யாதி. (குன்றித்யாதி) ஏதம்சார்ந்தாலும் சென்று புகவேண்டும்படிகாணும் ஊரினைப்வர்யமும் போக்யதையும். மலைகளைப் புடைபடத் துளைத்து நெருங்கவைத்தாப்போலே யிருக்கிற மாடங்களும், அதினருகே அம்மாடங்களுக்கு நிழல்செய்தாப்போலே யிருக்கிற குருந்து, அத்தோடே சேர்ந்த செருந்தி, புன்னையென்னுதல்; அந்யோந்யம் சேர்ந்தவையென்னுதல். (மன்றலர்பொழில்) ஊர்ச்சுற்றிலே யலர்ந்துகிடக்குமாய்த்துப் பொழில்கள், அன்றியே, மன்றென்று - மன்றலாய், மன்றலென்று - பரிமளமாய், அலருகையாவது-பரம்புகையாய், பரிமளம் பரம்பாநின்றுள்ள பொழிலென்றுமாம். மன்றலைமன்று என்று குறைத்துக் கிடக்கிறது. (குன்றுநேர்மாடம்) "பிள்ளை திருநறையூரரையரும் பட்டரும் உள்ளேபுக்கு ப்ரதக்ஷிணம்பண்ணுநிற்க நான் சேவித்துப் போனேன், அல்லாதாரெல்லாம் விரைந்து சடக்கென வாராநிற்க, இவர்கள் திருமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக்கொண்டுவருகிறபடியைக்கண்டு, 'அல்லாதார்க்குமிவர்களுக்கும் செயலொத்திருக்கச்செய்தே இவர்களா

ன் வாசியிருந்தபடியென்!" என்றிருந்தேன்" என்றருளிச்செய்வர். (சேர்செருந்தி) * ராகவோர்ஹதிவைதேஹீம் போலேயாய்த்து. மேல் நித்யசூரிகளைச் சொல்லக்கடவதாயிருக்க, இங்கே ஸ்தாவரங்களைச் சொல்லுகிறது - உகந்தருளின நிலங்களில் விலக்ஷணரோடு ஸ்தாவரங்களோடு வாசியில்லையென்றிருக்கு முத்தேஸ்ய புத்தியாலே. நித்யசூரிகளுக்கானல் அவ்வருகேபோக நினைவுண்டாகைக்கு யோக்யதையுண்டு, நினையார்களித்தனை சைதந்யத்தி லுறைப்பாலே; நினைக்கைக்கும் யோக்யதையுண்டிறே, வேறோரிடத்தில் போக நினைக்கைக்கு ப்ராப்தியில்லையிறே யிவற்றுக்கு. பிள்ளை ஜநநாதப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே மரம்வெட்டுவியாநிற்க எம்பாரருளிச்செய்த வார்த்தையை நினைப்பது. ஆச்சான் திருவாலிநாடு தாசர் நல்லன சில சுரவன்பாக்குக்களை பட்டருக்குக் கொடுவந்துகொடுத்தாராய், அவற்றைக்கண்டு "இவையிருந்தபடியென், * திருவருள்கமுகி னின்றும்வந்தவையோ" என்றருளிச்செய்தாராம். நீராலே வளர்ந்தவையன்றே, அவனுடைய கடாக்ஷத்தாலே வளர்ந்தவையிறே. (அனந்தபுரநகர்மாயன்) ஸ்ரீவைகுண்டத்தைவிட்டு "தாழ்ந்தார்க்குமுகங்கொடுக்கலாம்" என்னுமத்தாலே திருவனந்தபுரத்தை விடமாட்டாதே நிற்கிற சீலகுணாதிக்யத்தைச் சொல்லுகிறது. ( நாமமொன்றுமோராயிரமாம் ) ஒருதிருநாமந்தானே விரோதிகளைப்போக்கி ரக்ஷிக்குமென்னுமிடஞ்சொல்லிற்றிறே; அப்படியே ஆயிரம்படி ரக்ஷகமான ஆயிரந்திருநாமத்தையுடையவன். ( உள்ளுவார்க்கு ) உத்தேஸ்யதை குறைவற்றிருந்தது, இனி அநுசந்திப்பாரேயிறே தேட்டம் ( உள்ளுவார்க்கு ) ஸ்ரீவைகுண்டத்திலே நித்யசூரிகளோலக்கங்கொடுக்க அவர்கள் நடுவே யிருக்கக்கடவ சர்வேஶ்வரன், "தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கலாம்" என்று இத்தேசத்தை விரும்பிவர்த்திக்கிற நீர்மையி லேற்றத்தை யநுசந்திக்கவல்லார்க்கு. (உம்பரூரே) திருநாமங்களை யநுசந்திப்பார்க்கு, அவ்விடந்தானே யும்பரூரொன்றுமாம்; அன்றியே, உள்ளுவார்பெறுமிட மும்பரூரொன்னவுமாம். அவ்விடந்தானுமுத்தேஶ்யமாகிறதும் அவன்விடாதே வர்த்திக்கையிறே. இனி தர்மைக்யமுடையவன் தான் இவ்விடத்தே வர்த்தியாநின்றால் பின்னையிவ்விடமே யுத்தேஸ்யமாகத் தட்டில்லையிறே..........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( இன்றுபோயித்யாதி. ) "நாமமொன்றுமோராயிரமாம்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( ப்ரதிபந்தகங்களித்யாதி. ) சொன்னதிருநாமந்தானேயென்றது - "கேசவா" என்றத்தைப்பற்ற.

( இதரவிஷய ) இத்யாதிவாக்யம் - சங்காநுவாதம். பரிஹாரம் (யதஹ்ரித்யாதி) "ஸ்வஹ்ருதயம் ஸம்ஸாரவிஷயே ஹ்ருதிஸ்வேஸ । ஹ்ருதாநீஸம்பக்வாஸ்ய ஸ்யஜேஸ । யதிவேதாஸ்யாஸ்வஹ்ருதயாமேவஸ்யஸ்யஜேஸ । ஹ்ருதாநாவ நாநாயத ஸ்யேவவிரஜேத்ருதஸ்யேவஸ்யஸ்யஜேஸ" ( ப்ரஹ்மசர்யம்ஸமா

ப்யக்ருஹீபவேத் । க்ருஹாத்வநீபூத்வாப்ரவ்ரஜேத் । யதிவேதரதாப்ரஹ்மசர்யாதே வப்ரவ்ரஜேத் । க்ருஹாத்வாவநாத்வா யதஹரேவவிரஜேத் ததஹரேவப்ரவ்ரஜேத் ) இதி ஜாபாலி:. யதஹரேவ - யஸ்மிந்நஹந்யேவேத்யர்த்த:. விரஜேத் - விரக்தோப வேத். ததஹரேவ - தஸ்மிந்நஹந்யேவ. ப்ரவ்ரஜேத் - ஸந்யஸ்தோபவேதித்யர்த்த:. அவை - அதிகாரிசம்பத்யாதிகள். அதிக்ருதாதிகாரமான விஷயங்களுக்கு - ப்ரவ்ர ஜ்யாதிகர்மங்களுக்கு. (சர்வாதிகாரமுமாய்) என்றவிடத்திலே - "ஸ்ரஹ்மக்ஷத்ர விஸஶூத்ராஸ்த்ரியஶ்சாந்தரஜாதய: । ஸவ்வஏவப்ரபத்யேரந் ஸவ்வ யாதாரமச்யுதம்" (ப்ரஹ்மக்ஷத்ரவிஶஶ்ஶூத்ரா ஸ்த்ரியஶ்சாந்தரஜாதய:। ஸர்வஏவப்ரபத்யேரந்ஸர்வதாதாரமச்யுதம்) என்றதநுசந்தேயம். இச்சாமாத்ர மேயமையும் என்னுமதுக்கு ஹேத்வந்தர கதநபூர்வகமாக, இச்சைபார்த்திருக்கும் என்னுமதுக்கு ப்ரமாணங் காட்டுகிறார் (விஷயாநுரூபமாகவித்யாதி.) ஆட்பார்த்து ழிதருமவனென்றது - "நமக்கடிமையாவாருண்டோ" என்றுதுவே யாத்ராயாய்த் திரியுமவனென்றபடி. நாலாந்திருவந்தாதி அறுபதாம்பாட்டு, "ஆட்பார்த்துழிதரு வாய்" இத்யாதி. அப்படி யிவனுபிமுக்யம் பார்த்திருக்குமோவென்ன (யதிவேத் யாதி) "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம்மயா । விபீஷணோவாஸுக்ரீவ யதிவாராவணஸ்ஸ்வயம்" (ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யா பயம்மயா । விபீஷணோவாஸுக்ரீவ யதிவாராவணஸ்ஸ்வயம்) இதி யுத்தகாண்டே ராம:. "யதிவா" என்றதுக்கர்த்தம் (விபீஷணனென்றித்யாதி.) பேராயென்றது - பேரிட்டுக்கொண்டுவந்தானுயென்றபடி. "ஸ்வயம்" என்றதுக்குபாவம் (அதுவென்னித்யாதி.) அதாவது - "ஸ்வயம்" என்று இவனுக் கதிசயஞ்சொல்லுகிற தென், அங்குநின்றும் வந்தவ னானேனுமாகிலு மவனைக் கைக்கொண்டாரொன்னும தன்மையாதோ என்னவேண்டாவென்றபடி. அது - குறை. விபீஷணன் குறைவாளனல்லவோவென்ன (விபீஷணஸ்த்வித்யாதி) "விபீஷணஸ்துதர்மாத்மா நதுராக்ஷஸசேஷ்டித: । ப்ரக்யாதவீர்யௌஶூரௌ ப்ராதரௌகரதூஷணௌ" (விபீஷணஸ்துதர்மாத்மா நதுராக்ஷஸசேஷ்டித: । ப்ரக்யாதவீர்யௌசரணே ப்ராதரௌகரதூஷணௌ) இத்யாரண்யகாண்டே சூர்ப்பணகா. ராவணனையே கைக்கொள்ளவேணு மென்றதுக்கு ஹேத்வந்தரம் (இனித்தானித்யாதி.) துறுப்புக்கூடு - தூற்றுப்பொலி. இதுக்கு த்ருஷ்டாந்தம் (மஹாராஜரித்யாதி.) ஏதத்தைப் போக்குமென்னுதே, "ஏதம்சாரா" என்றதுக்குபாவம் (அதுக்கவனித்யாதி.) விவரணம் (சும்மெனாதேயித்யாதி.) சும்மெனாதே - மூச்சுவிடாதே. போர்கைக்கு ஹேது (ராஜகுலேத்யாதி.) அப்படி போமோவென்ன, ப்ரமாணம் (வானேவித்யாதி) பெரியதிருவந்தாதி ஐம்பத்துநாலாம்பாட்டு. ஆகாசம் கடல் காற்றுத் தீ காடுகளிலே யெங்கேயொருங்கிற்றே, வன்துயரைமருங்குகண்டிலம் என்று பாட்டுக்கர்த்தம்.

"ஏதஞ்சாரா" என்றவநந்தரம் "குன்றுநேர்" இத்யாதிகளைச்சொன்னதுக்கு பாவம் (ஏதமித்யாதி.) "குன்றுநேர்மாடம்" என்றத்தைப்பற்ற (ஐஸ்வர்யமுமென்றது.) "குருந்துசேர்" இத்யாதியைப்பற்ற (போக்யதையுமென்றது.) சப்தார்த்தம் (மலைகளையித்யாதி.) நேர் - ஒப்பு. மாடு - சமீபம். வுடைபட் - இட்டுண்டாம்படி. "மாடேகுருந்து" என்றதுக்கு பாவம் (அம்மாடங்களுக்கித்யாதி.) "சேர்" என்றதுக்கு - மாடங்களினருகேசேர்ந்த குருந்துசேர்புன்னை என்று முந்தினவர்த்தம். அத்தோடே - அந்தமாடங்களோடேயென்றபடி. "மன்று" என்று

நாற்சந்தியாய், சுற்றுமென்றபடி. புன்னைகளையுடைத்தாய் க்ரமபர்யந்தங்களிலே விகஸியாநின்றுள்ள பொழிலென்னுதல், குருந்து முதலான வ்ருக்ஷங்களை யுடைத்தாய் பரிமளம் ப்ரவஹியாநின்றுள்ள பொழிலென்னுதல். "மன்று" என்று - பரிமளத்தைச் சொல்லும்படி யென்னென்ன (மன்றலையித்யாதி.) "குன்றுநேர்" இத்யாதியாலே வர்ணிக்கைக்கு இவை போக்யமாயிருக்குமோவென்ன, ஐதிஹ்யம் (பிள்ளையித்யாதி.) விரைந்து - த்வரித்து. (அருளிச்செய்வர்) நஞ்சீயரென்றபடி. "சேர்" என்றதுக்கு - வ்ருக்ஷங்கள் அந்யோந்யம் (சத்ருஶமாயிருக்குமென்று மூன்றுமர்த்தமாதல், த்விதீயார்த்தவிவரணமாதல் (ராகவோர்ஹதீத்யாதி) கீழ்பொழிலை வர்ணித்த வபிப்ரேதத்தை யநுவதித்து பரிஹரிக்கிறார் (மேல்நித்யசூரிகளையித்யாதி) "விண்ணோர்" என்றத்தைப்பற்ற (நித்யசூரிகளென்றது) ஆனாலும் விலக்ஷணரானசூரிகளோபாதி யிவையு முத்தேஶ்யமாமோவென்ன (நித்யசூரிகளுக் கித்யாதிநானுவாக்யம்) சைதந்யத்திலுறைப்பு-ஜ்ஞாநகார்யமான ப்ரேமாதிசயம். திவ்யதேசங்களிலுள்ளவை பகவத்கடாக்ஷவிஷயமாகையாலே யுத்தேஶ்யமென்னுமதுக்கு ஐதிஹ்யம் (பிள்ளைஜநநாதேத்யாதி) எம்பாரருளிச்செய்தவார்த்தை * மானேய்நோக்கிலேகண்டுகொள்வது. இவை அவன்கடாக்ஷவிஷயமென்றதுக்கைதிஹ்யம் (ஆச்சாணித்யாதி) சுரவன்பாக்கு - ஶ்லாக்யமானபாக்கு. "திருவருட்கமுகு" என்றதுக்கர்த்தம் (நீராலேயித்யாதி) அனந்தபுரநகரி லாஶ்சர்யமேதென்ன (ஸ்ரீவைகுண்டத்தையித்யாதி) (சொல்லிற்றிறே) முதற்பாட்டிலேயென்றபடி. திருநாமங்களாயிரத்தையுமுடையவனென்றது - ப்ராசங்கிகம். "உள்ளுவார்க்கு" என்றதுக்கவதாரிகை (உத்தேஶ்யதையித்யாதி) "ஒன்றுமோராயிரமாம்" என்றது - ஒருநாமமே ஆயிரம்ப்ரகாரம் ரக்ஷகமாமென்னுதல், குணசேஷ்டிதாதிகளையொழிய நாமமொன்றுமே ஆயிரமுண்டாயிருக்குமென்னுதல்; என்னுதல் என்கையாலே - இவ்வர்த்தத்வயமும் தோற்றுகிறது. "ஓராயிரமாம்" என்றத்தோடே "உள்ளுவார்க்கு" என்றத்தைச்சேர்த்துபாவம் (திருநாமங்களையித்யாதி) கீழே நாமத்தை உள்ளுவார்க்கு என்றருளிச்செய்து, "மாயன்" என்றதிற்சொன்ன சிலகுணத்தையுள்ளுவார்க்கு என்றர்த்தாந்தரம் (ஸ்ரீவைகுண்டத்திலேயித்யாதி) இது சதுர்விம்ஶத்ஸஹஸ்ரத்திலேஸ்புடம். அவ்விடந்தானே - திருவனந்தபுரந்தானே. நித்யவிபூதியன்றோ வுத்தேஶ்யமென்ன (அவ்விடந்தானுமித்யாதி) அவ்விடந்தானும் - பரமபதந்தானும். இவ்விடமே-திருவனந்தபுரமே. உம்பரூர் - * தேவாநாம்பூரித்யர்த்தஃ. பரமபதம். "உம்பரூர்" என்றதுக்கு - திருவனந்தபுரமே யும்பரூரென்னுதல், திருநாமங்களை யநுசந்திப்பாரிருந்தவிடமே யும்பரூரென்னுதல், உள்ளுவார் பெறுமிட மும்பரூரென்னுதலென் றர்த்தத்ரயமாதல்; அர்த்தத்வயமாதல் ......................................................*

---

## மூன்றாம்பாட்டு.

ஊரும்புட்கொடியுமஃதேயுலகெல்லாமுண்டுமிழ்ந்தான்
சேருந்தண்ணனந்தபுரஞ்சிக்கெனப்புகுதிராகிற்
றீருநோய்வினைகளெல்லாந்திண்ணநாமறியச்சொன்னோம்
பேருமோராயிரத்துளொன்றுநீர்பேசுமினே.

## ஆறாயிரப்படி.

(ஊரும்புள்) போகோபகரணங்களினாலும் லீலோபகரணங்களி னாலும் பரிபூர்ணனாயிருந்த வெம்பெருமானுக்கும் ப்ராப்யமான திருவனந்தபுரத்திலே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு புகுதிராகில் உங்களுடைய ஸமஸ்த துःகங்களும்போம், இது நிஶ்சிதம், இப்ப்ராப்யத்தைப்பெறுகைக்கும் ப்ரதிபந்தகம்போகைக்கும் ஆயிரந்திருநாமத்திலே யொரு திருநாமத்தைச் சொல்லவேணுமென்னும் நியமமில்லை, அவனுடைய வஸங்க்யேயமான திருநாமத்திலே வேண்டிற்றொரு திருநாமத்தைச்சொல்லுங்கோளென்கிறார் .........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அத்தேசத்தை ப்ராபித்தவளவிலே சமஸ்தவிரோதிகளும் சழலும், சர்வரக்ஷகனான வத்தேசிகனுடைய திருநாமங்களாயிரத்திலு மேதேனுமொன்றையும்சொல்லி அநுபவியுங்கோளென்கிறார்.

ரக்ஷணார்த்தமாக, புள்-பெரியதிருவடியை. ஊரும்-நடத்தாநிற்கும். கொடியும்-ரக்ஷணத்துக்குக்கட்டினகொடியும். அஃதே-அதுவே. சென்று ரக்ஷிக்கவொண்ணாத ப்ரளயத்தளவில், உலகெல்லாம்-லோகத்தையெல்லாம். உண்டு-அமுதுசெய்துவயிற்றிலேவைத்துநோக்கி. உமிழ்ந்தான் - ப்ரளயாநந்தரமுமிழ்ந்தவன். சேரும்-பிற்பாடர்க்கு முகங்கொடுக்கைக்காகக் கண்வளர்ந்தருளுகிற. தண் - ஶ்ரமஹரமான. அனந்தபுரம்-திருவனந்தபுரத்தை. சிக்கென-அநந்யப்ரயோஜநத்வ வ்யவஸாயத்தையுடையீர்களாய்க்கொண்டு. புகுதிராகில்-ப்ராபிப்புகுதிகோளாகில். நோய்-ப்ரயோஜநாந்தரருசியானநோயும். வினைகளெல்லாந்தீரும்-அதுக்கடியான கர்மங்களும் நிரவசேஷமாக நஶிக்கும். நாம்-இவ்வர்த்தத்தில் நிலவரானநாங்கள். உங்களுக்கு, அறிய-அறியும்படி. திண்ணம்-த்ருடமாக. சொன்னோம்-சொன்னோம். அங்குச்சென்றால், பேருமோராயிரத்துள் - அவனுடைய வநுபாவ்யமான நாமமாயிரத்திலும் வைத்துக்கொண்டு. ஒன்று-ஏதேனுமொன்றை. நீர், பேசுமின்-சொல்லுங்கோள்.

போக்யமாமிடத்தில் ப்ரதாநாப்ரதாந விபாகமில்லையென்று கருத்து... ...*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ப்ரதிபந்தகங்கள்போகைக்கு தேசப்ராப்தியேயமையும், ஆயிரந் திருநாமத்திலு மேதேனுமொன்றைச்சொல்லி யநுபவியுங்கோ ளென்கிறார்.

(ஊரும்புள்) பெரியதிருவடியை வாஹநமாகக்கொண்டு நடத்தும். (கொடியுமஃதே) இது நித்யசூரிகளுக்கு முபலக்ஷணம். அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தர்க்கு "சென்றாற்குடையாம்" என்கிறபடியே உண்டாகச் சொல்லுகிற நாநாபாவம், இன்றுபோய்க்கிட்டினவனுக்கும் வாசியறக் கொடுக்கு மென்கைக்காகச்சொல்லுகிறது. இவன் "ஸஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்றிருந்தாலும் பலமில்லையிறே "குருஷ்வ" என்று அவனப்படிகொள்ளாதவன்று. இவனுக்கு கிஞ்சித்கரியாதவன்று ஸ்வரூபலாபமில்லை. நிரபேக்ஷனானதான் குறையநின்று இவனுடைய குறையைத்தீர்க்குமாய்த்து. தான் சாபேக்ஷனாய் நின்று இவனை நி

ரபேக்ஷனுக்கும். இவனுக்கு ஸ்வரூபஸித்தியுண்டாம்படி பண்ணிக்கொண்டு நிரபேக்ஷனுகவேணுமிறே யவனுக்கு. இவனுடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாக அவன்தன்னைத் தாழவிட்டானென்றுல் அதுதானே நைரபேக்ஷயத்துக் குடலாயிருக்குமிறே யவனுக்கு. "இன்னார்தூதனெனநின்றுன்" என்றபின்பிறே அவனுக்கு ஸ்வரூபசித்தியுண்டாய்த்து. (உலகித்யாதி) சம்சாரஸ்பர்ஶமில்லாதாரை யெல்லாவடிமைகளும் கொள்ளுகையன்றிக்கே, ப்ரளயாபத்தில் லோகத்தையெடுத்து வயிற்றிலேவைத்துநோக்கி, பின்னை புள்ளேகிடந்து தளரவொண்ணுதென்று வெளிநாடுகாணவுமிழ்ந்தவன். (சேரும்தண்ணனந்தபுரம்) ப்ரளயாபத்தில் ஜகத்துக்கு அவன்வயிற்றில் புகாதபோதுண்டான செல்லாமையோபாதியும் போருமாய்த்து, அவனுக்கித்தேசத்தில் புகுராதபோதுண்டான தரிப்பறுதி; ப்ரளயாபத்தினின்றும் ஜகத்தையடையரக்ஷித்தவன். (ஸ்ருஷ்டமான ஜகத்தினுடையரக்ஷணார்த்தமாக) வந்துசேருகிற விடமென்னுதல், அவன் நிர்ப்பரனுய்க்கொண்டு சாய்ந்தருளுகிற விடமென்னுதல். (தண்ணனந்தபுரம்) ப்ராந்தியாலே அவனிப்படி விரும்புகிறுனல்லன், போக்யதையாலே விடமாட்டாமையாய்த்து. உகந்தருளினநிலமாகி லிப்படியிருக்கவேண்டாவோ; [தானுகந்தவூர்] என்னக்கடவதிறே-தானுமுகந்து நித்யசூரிகளுமுகக்குமிடமிறே பரமபதம்; இங்குதன்னுகப்பேயிறே - இவர்கள் வைமுக்யம்பண்ணுநிற்கச்செய்தேயும் தான்விடமாட்டாதே அவசரப்ரதீக்ஷனுய் நிற்கிறவிடமிறே. (சிக்கென) "ந ச புநராவர்த்ததே" (நசபுநராவர்த்ததே) என்கிறபடியே மீளாத ருசியையுடையீர்களாய்க்கொண்டு கிட்டுவுதிகோளாகில். (தீருமித்யாதி) துஃகங்களும் துஃகஹேதுக்களு மெல்லாம் நசிக்கும். (திண்ணம்) "ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம்" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யம்) என்னுமாபோலே. (நாமமியச்சொன்னேம்) சரதமாக அநுபவத்தாலே கைகண்டநாம், இதில் வாசியறியாத நீங்களு மிழக்கவொண்ணுதென்று உங்கள் நெஞ்சிலே படும்படிசொன்னேம். (நாம்) நெடுநாள் க்லேஶப்பட்டுக் கரைகண்டவரிறே. (சொன்னேம்) இனிகர்மவஶ்யராய்ப்படுமவர்கள், சொன்னவார்த்தைப்ரதிபத்திபண்ணுமையாலே படுகிறுர்களத்தனை; நம்மேல் குறையற நாம் சொன்னேம். செயலுக்கு தேசப்ராப்தியமையுமென்றீர், இனிச்சொல்லியிருக்க வடுப்பதென்னென்ன (பேருமோரித்யாதி) ஒருதிருநாமந்தானே ஆயிரம்படி ரக்ஷகமான வாயிரந்திருநாமத்தையுடையவனென்று சொன்னேமிறே முன்பே; அதில் வாய்க்குத்தோற்றிற்ரெரு திருநாமத்தைச் சொல்லுங்கோள். (பேசுமினே) மநஸ்ஸஹகாரமும் வேண்டா .........*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (ஊருமித்யாதி) "அனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில் தீருநோய்வினைகளெல்லாம், பேருமோராயிரத்துளொன்று 'நீர்பேசுமின்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (ப்ரதிபந்தகங்களித்யாதி.)

"புள்ளை-ஊரும்" என்றந்வயிப்பது. இது உபலக்ஷணமென்கிறார் (நித்யேத்யாதி) நித்யசூரிகளுக்கு முபலக்ஷணமென்றது - பெரியதிருவடி யொருவனையும் வாஹநமாகவும் கொடியாகவும் கொள்ளுமென்றவிது, நித்யசூரியளெல்லாரையும் ஒவ்வொருத்தரையே அநேகசேஷவ்ருத்திகள் கொள்ளுமென்னுமதுக்கு முபலக்ஷணமென்றபடி. இப்பதப்ரயோகத்துக்குபாவம் (அஸ்ப்ருஷ்டேத்யாதி) அவன் கொடுக்கிறதென், தானேசெய்யவொண்ணாதோவென்ன (இவனித்யாதி) "[illegible]" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ஜாக்ரதஸ்வபதஸ்சதே । பவாம்ஸ்து இத்யாதி, "[illegible]" (குருஷ்வமாமநுசரம்வைதர்ம்யம்நேஹவித்யதே । க்ருதார்த்தோஹம்பவிஷ்யாமி தவசார்த்தப்ரகல்பதே) இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணஃ. பூர்ணனானவனிவனைக் கொண்டு கைங்கர்யம்கொள்ளுகிறதென்னென்ன (இவனுக்கித்யாதி) ஆகையாலே (நிரபேக்ஷனான) என்று கூட்டுவது. விவரணம் (தான் சாபேக்ஷனித்யாதி) ஆனாலும் நைரபேக்ஷ்யஹானி வாராதோவென்ன (இவனுக்கித்யாதி) என்னுதல்; கீழே-பரார்த்தமாக சாபேக்ஷனகையாலே நைரபேக்ஷ்யஹாநியில்லை யென்றருளிச்செய்து, இங்கே-ஸ்வநைரபேக்ஷ்யசித்தியு மிவனையும் நிரபேக்ஷனாக்கினலென்கிறார் (இவனுக்கித்யாதி) என்னுதல். விவரணம் (இவனுடையவித்யாதி.) தாழவிட்டது நைரபேக்ஷ்யத்துக்குடலாகக்கண்ட விடமுண்டோவென்ன (இன்னார்தூதனித்யாதி) திருமொழி இரண்டாம்பத்து, "முன்னோர்தூது" இத்யாதி. நின்றான் - சத்தைபெற்றான்.

"உலகெல்லாமுண்டுமிழ்ந்தான் சேரும்" என்றபதச்சேர்த்திக்குபாவம் (ப்ரளயாபத்தில் ஜகத்துக்கித்யாதி) உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, பதச்சேர்த்திக்குபாவாந்தரம் (ப்ரளயாபத்தில் நின்று மித்யாதிவாக்யத்வயம்) "சேரும்" என்றது-ரக்ஷ்யாபேக்ஷையோடேவந்து நிற்கிறவென்னுதல், சாய்ந்தருளுகிறவென்னுதலென் றர்த்தத்வயம். "தண்" என்றதுக்குபாவம் (ப்ராந்தியாலேயித்யாதி) ஈடுபாடு (உகந்தருளினவித்யாதி) இப்படியிருக்கவேண்டாவோவென்றது - ஈஸ்வரன்விரும்பும்படி போக்யமாயிருக்க வேண்டாவோவென்றபடி. "அவன்விரும்பினதே யுகந்தருளினநிலம்" என்றதுக்கு ப்ரமாணம் (தானுகந்தவித்யாதி) "அலம்புரிந்த" இத்யாதி, திருநெடுந்தாண்டகம். இதுக்கர்த்தம் (தானுமித்யாதி) "தன்னுகப்பேயிறே" என்றத்தை விவரிக்கிறார் (இவர்களித்யாதி.)

சரதம் - நிஸ்சிதம். "[illegible]" (நசபுநராவர்த்ததே நசபுநராவர்த்ததே) இதிசாந்தோக்யே. "[illegible]" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே। வேதஶாஸ்த்ராத்பரம்நாஸ்திநதைவம்கேஶவாத்பரம்) இதிமஹாபாரதே "அறிய" என்றதுக்குபாவம் (இதில் வாசியித்யாதி) அப்படி கைகண்டாரோவென்ன (நெடுநாளித்யாதி) "சொன்னோம்" என்ற பூதநிர்த்தேசத்தால்பலிதம் (இனிகர்மவஶ்யராயித்யாதி.)

செயலுக்கு - காயிகவ்யாபாரத்துக்கு. சொன்னோமிறே முன்பேயென்றது- "ஓராயிரமாய்" என்கிறபாட்டிலேயென்றபடி. "பேசுமின்" என்றதுக்குபாவம் (மநஸ்ஸஹகாரமுமித்யாதி) அத்விதீயமான வாயிரந்திருநாமத்திலும் வைத்துக்கொண்டேதேனுமொன்றைச் சொல்லுங்கோளென்று சப்தார்த்தம் ......................*

# நான்காம்பாட்டு.

பேசுமின்கூசமின்றிப்பெரியநீர்வேலைசூழ்ந்து
வாசமேகமழுஞ்சோலைவயலணியனந்தபுர
நேசஞ்செய்துறைகின்றானை நெறிமையான்மலர்கடூவிப்
பூசனைசெய்கின்றார்கள்புண்ணியஞ்செய்தவாறே.

## ஆறாயிரப்படி.

(பேசுமின்) நாமநர்ஹறொன்று கூசாதே அவன்றிருநாமத்தைச் சொல்லுங்கோளென்றுசொல்லி, அடிமைசெய்கையிலே அவர்களுக்கு ஸ்ப்ருஹைபெறுகைக்காகத் திருவனந்தபுரத்திலெம்பெருமானுக்கு அநந்ய ப்ரயோஜநராய்க்கொண் டடிமைசெய்கிறவர்க ளென்னபுண்யஞ்செய்தாரோவென்று, அவர்களுடைய ப்ரஶம்ஸாமுகத்தாலே ப்ராப்யமான வடிமையினுடைய வுத்கர்ஷத்தைச் சொல்லுகிறார் ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரித ரக்ஷணார்த்தமான நிரவதிக வாத்ஸல்யத்தையுடையனாய்க்கொண்டு திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிறவனை ஆராதிக்கிறவர்களுடைய பாக்யாதிசயத்தை ஶ்லாகிக்கப்பாருங்கோளென்கிறார்.

பெரிய-சம்ருத்தமான. நீர்-ஜலத்தையுடைத்தான. வேலை-கடலாலே. சூழ்ந்து-சூழப்பட்டு. வாசமேகமழும்-பரிமளத்தைப்பரப்பாநிற்கிற. சோலை-சோலைகளையும். வயல்-வயல்களையும். அணி-அலங்காரமாகவுடைய. அனந்தபுரம்-திருவனந்தபுரத்திலே. நேசம்செய்து-ஆஶ்ரிதமுக ப்ரதாநார்த்தமாக நிரதிசய வாத்ஸல்யத்தைப்பண்ணி. உறைகின்றானை-நித்யவாசம்பண்ணுகிறவனை. நெறிமையால்-அவன் சேஷித்வாநுரூபமான மார்க்கத்தாலே. மலர்கள்-புஷ்பாத்யுபகரணங்களை. தூவி-ப்ரேமபரவசராய்க்கொண்டு விநியோகித்து. பூசனைசெய்கின்றார்கள் - ஆராதிக்கிறவர்கள். புண்ணியம்-பாக்யத்தை. செய்தவாறு-பண்ணினப்ரகாரத்தை. கூசமின்றி - உங்களுடைய அயோக்யதையைப்பாராதே வத்ஸலனானவனை ஆராதிக்கிறவர்களுடைய வாத்ஸல்யாதிசயத்தைப்பார்த்துக்கூசாதே. பேசுமின்-ஶ்லாகிக்கப்பாருங்கோள்......*

## ஈடு - நான்காம்பாட்டு.

ஆஶ்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காகத் திருவனந்தபுரத்திலே புக்கடிமை செய்கிறவர்கள் என்னபாக்யவான்களென்கிறார்; அவர்கள் பாக்யம்பண்ணினபடியைப் பேசுங்கோளென்றுமாம்.

(பேசுமின்கூசமின்றி) உங்களயோக்யதையைப்பார்த்துக் கூசாதேபேசுங்கோள். தாம் *மயர்வறமதிநலமருளப்பெறச்செய்தேயும், அநாதிகாலம் சம்சரித்துப்போந்த வாஸநையாலே "அருவினையேன்" என்று பேசுகைக்குக் கூசினவிது, இவர்களுக்கு முண்டென்றிருக்கிறார். பகவத்விஷயத்தைப்பேசும்போது கூசத்தான்வேண்டாவிறே; அப்ரதிபத்தியாலேயிறே பேசாதிருந்தது; ப்ராப்தவிஷயமென்றறியவே கூசாதேயே

சலாமிறே. (பெரியநீரித்யாதி) மிக்கஜலத்தையுடைத்தான கட்லாலேசூழப்பட்டு, வாசமேகமழாநிற்குமாய்த்துச்சோலே. சூழப்போந்தசோலேயில் பரிமளம் புறம்புபோகாதபடி மதிளிட்டாப்போலேயாய்த் திருப்பது கட்ல். (வாசமேகமழும்) கடலில் நாற்றம் மேலிடாதபடி சோலேயில் பரிமளமே விஞ்சியிருக்குமாய்த்து; இப்படிப்பட்ட சோலேயையுடைத்தான வயலாலே யலங்க்ருதமான திருவனந்தபுரத்தை. நேசஞ்செய்துறைகின்றுனே-பேசுமின் கூசமின்றி என்று கீழோடேகூட்டவுமாம்; அப்போது, "நேசஞ்செய்துறைகின்றுனே-பூசனைசெய்கின்றுர்கள் புண்ணியம்செய்தவாறே?" என்றது-ஆஶ்சர்யத்திலே யாகிறது. அன்றிக்கே, (பெரியநீர் தொடங்கி) பூசனைசெய்கின்றுர்கள் புண்ணியஞ்செய்தவாற்றை-பேசுமின் கூசமின்றி என்னவுமாம்; அப்போது, கூசமின்றிப் பேசுகையாவதென்னென்னில்; பகவத்விஷயம்போலே வாய்வந்தபடி சொல்லவொண்ணுதிறே பாகவதவிஷயம். (நேசஞ்செய்துறைகின்றுனே) பரமபதத்தில் தவிரவொண்ணுமையாலே யிருக்குமத்தனே. அவ்விடத்தை வசைசொல்லியாய்த்திங்குவர்த்திப்பது; " ஆர்த்தரக்ஷணத்துக் குடலல்லாதவிடமுமொரு வாஸஸ்த்தாநமாயற்றதோ! " என்று. ஆர்த்தரக்ஷணத்துக்குப்பாங்கானதேசமென்று விரும்பிவர்த்திப்பதிங்கேயாய்த்து; " ஃயிகூவ-ஈ வாஸாஷு " (அதிகம்புரவாஸாச்ச) (நெறிமையால் மலர்கள்தூவி) "சர்வேஶ்வரன்சேஷி, இவ்வாத்மவஸ்து அவனுக்குசேஷம்" என்கிற முறைமையாலே, புஷ்பாத்யுபகரணங்களை யவன்றிருவடிகளிலேபணிமாறி; அன்றிக்கே, அவன்றுன் இத்தேசத்தை ஸ்நேஹித்து வர்த்திக்கிறுப்போலே தாங்களும் ஸ்நேஹத்தையுடையராய் மலர்கள் தூவியென்னுதல்; இவர்கள் வர்த்திக்கிறவிட்மென்று அவன் விரும்பிவந்தவோபாதி தாங்களு மொருப்ரயோஜநத்தைக் கணிசியாதே யாஶ்ரயித்தென்னவுமாம். (புண்ணியஞ்செய்தவாறே!) * சூட்டுநன்மாலேகள் தூயனவேந்தி யடிமைசெய்கிறவர்களது மோரடிமையாயற்றதோ!. ஸ்ரீபரதாழ்வானைப்போலேயாய்த்தவர்கள், இளையபெருமாளைப்போலே யாய்த்திவர்கள். அவன்விட்டுப்போரச்செய்தேயும், பாரதந்த்ர்யத்தாலே விட்மாட்டாதே கிட்க்கிறுர்களித்தனையிறே .......................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (பேசுமினித்யாதி) "பூசனைசெய்கின்றுர்கள் புண்ணியம்செய்தவாறே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகாத்வயமருளிச்செய்கிறுர் (ஆஶ்ரயிப்பார்க்கித்யாதிவாக்யத்வயத்தாலே.)

இவர்களுக்குக்கூச ப்ரசக்தியேதென்ன (தாமித்யாதி) அவனைப்பேசும்போது கூசவேண்டாவென்னுமத்தையும், இப்படியிருக்கச்செய்தேயும் தாம் கூசியகன்றதுக்கு ஹேதுவையும், அவனைக்கூசாதே பேசுகைக்கு ஹேதுவையு மடைவேயருளிச்செய்கிறுர் (பகவத்விஷயத்தை யித்யாதிவாக்யத்ரயத்தாலே.)

"வேலைசூழ்ந்து வாசமேகமழும்" என்றபதச்சேர்த்திக்குபாவம் (சூழப்போந்தவித்யாதி.) "வாசமே" என்ற வவதாரணார்த்தம் (கடலிலித்யாதி) "கடலில்நாற்றம் மேலிடாதபடி" என்றதுக்கு ஸ்வாபதேஶம்-சம்சாரகந்தம் தட்டாதபடியென்று. சோலையையுடைத்தானவென்றது - சோலையையு முடைத்தாயென்றபடி. பாட்டின் முந்தினவவதாரிகைக்குச்சேர வந்வயம் (நேசஞ்செய்தித்யாதி வாக்யத்வயம்) த்விதீயாவதாரிகைக்குச்சேரவந்வயம் (அன்றிக்கேயித்யாதி) பாகவதர்களைப்பேசும்போது கூச்சத்துக்கு ப்ரசக்தியேதென்கிற சங்கையையநுவதித்து பரிஹரிக்கிறார் (அப்போது கூசமின்றி யித்யாதிவாக்யத்வயத்தாலே) (அப்போது) என்றவநந்தரம், "பாகவதவிஷயத்தை" என்றுகூட்டுவது. வாய்வந்தபடி சொல்லவொண்ணாதிறே பாகவதவிஷயமென்றது - அவர்களவனிலும் பூஜ்யராகையாலே பேசப்போகாதென்றபடி. ஆனால் பேசும்படியென்னென்ன; பூஜ்யரேயாகிலும் சுலபராகையாலே பேசத்தட்டில்லையென்றுகருத்து. "அனந்தபுரம்நேசஞ்செய்து" என்றத்தால் பாவம் (பரமபதத்திலித்யாதி) மேல்வாக்யவிவரணம் (அவ்விடத்தையித்யாதி)வசைதோஷம். இங்கே யவனுக்கு ஸ்நேகமுண்டாகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (ஆர்த்தரக்ஷணத்துக்கித்யாதி) இவ்வாக்யாநந்தரம் (அவ்விடத்தைவசை) இத்யாதிவாக்யமநுசந்தேயம். இதுக்கு சம்வாதம் (அதிகமித்யாதி) "[Grantha text] ।[Grantha text]" (தர்ஶநம்சித்ரகூடஸ்யமந்தாகிந்யாஶ்சஶோபநே । அதிகம்புரவாஸாச்சமந்யேதவசதர்ஶநாத்) இதி சித்ரகூடே ஸீதாம்ப்ரதிராமஃ. சித்ரகூடஸ்ய-தர்ஶநம்-புரவாஸாத்-அதிகம்ச, மந்தாகிந்யாஃ - தர்ஶநம் - தவ - தர்ஶநாத் - அதிகம்ச - மந்யே இத்யந்வயஃ.

நெறிமையால் - சேஷசேஷிபாவமுறையாலேயென்னுதல், ஸ்நேஹமார்க்கத்தாலேயென்னுதல். த்விதீயார்த்தத்துக்கு, நெறிமையாலென்று-அவன் ஸ்நேஹித்தமார்க்கத்தாலேயென்றபடி. த்விதீயார்த்தவிவரணமாதல், த்ருதீயார்த்தமாதல் (இவர்கள் வர்த்திக்கிறவித்யாதி) த்ருதீயார்த்தமானபோது, "நெறிமையால்" என்றது-அநந்யப்ரயோஜநதையாலே யென்றபடி. "செய்தவாறே!" என்ற ஸ்வரத்துக்கு பாவம் (சூட்டுநன்மாலைகளித்யாதி) திருவிருத்தம். இருவருடையவு மாதிக்யஞ்சநைகளுக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்ரீபரதாழ்வானையித்யாதிவாக்யத்வயம்.) அவர்கள்-நித்யசூரிகள். இவர்கள் - திருவனந்தபுரத்திலடிமைசெய்கிறவர்கள். நித்யசூரிகள் ஸ்ரீபரதாழ்வானைப்போலே யானபடியை யிசைவிக்கிறார் (அவன்விட்டுப்போரவித்யாதி.)

பெரியநீரொன்று தொடங்கி, நேசம்செய்துறைகின்றானை - கூசமின்றி-பேசுமின்; நேசம்செய்துறைகின்றானை நெறிமையாலென்று தொடங்கி, புண்ணியம்செய்தவாறே! என்று விஸ்மிதராகிறாரென்னுதல்; பெரியநீரொன்று தொடங்கி, புண்ணியம்செய்தவாற்றை - கூசமின்றி - பேசுமின் என்றந்வயமாதல். ...............*

# ஐந்தாம்பாட்டு.

புண்ணியஞ்செய்துநல்லபுனலொடுமலர்கடூவி
யெண்ணுமினெந்தைநாமமிப்பிறப்பறுக்குமப்பாற்
றிண்ணநாமறியச்சொன்னேஞ்செறிபொழிலனந்தபுரத்
தண்ணலார்கமலபாதமணுகுவாரமரராவார்.

## ஆறாயிரப்படி.

(புண்ணியஞ்செய்து) நீங்களு மங்ஙனே புண்யரூபமான திருநாமத்தைச்சொல்லி நிரஸ்த சமஸ்த ப்ரதிபந்தகராய்த்திருவனந்தபுரத்திலேபோய்ப்புக்கு பாஹ்யாந்தஸ் ஸர்வகரணங்களாலு மெம்பெருமானுக்கடிமைசெய்யுங்கோள், அவனுங்களுடைய விந்த சம்சாரத்தைப் போக்கும், இப்போது தன்றிருவடிகளை யாஶ்ரயிக்கிற வுங்களைப் பின்னை யமரராக்கும், இது நிஶ்சிதம், உமக்குத் தெரியச்சொன்னே மென்கிறார்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம்,திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற நிருபாதிகசேஷியானவன்திருவடியைக் கிட்டினவர்கள் சூரிகளாகையறுதி, ஆதலால், ப்ரேமயுக்தராய்க்கொண்டு ஆராதித்து அவன்திருநாமங்களை யநுசந்தியுங்கோளென்கிறார்.

புண்ணியம்செய்து - போக்யரூபையான பக்தியைப்பண்ணி. நல்ல - பக்த்யுபஹ்ருதமாகையாலே அவனுக்காதரணீயமான. புனலொடுமலர்கள் - ஜலபுஷ்பாதிகளை. தூவி - ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு ப்ரயோகித்து. எந்தை - உத்பாதகனானவனுடைய. நாமம் - திருநாமங்களை. எண்ணுமின் - நிரந்தராநுசந்தாநம்பண்ணி யநுபவியுங்கோள். இவ்வநுபவந்தானே, இப்பிறப்பு - த்ருஷ்டதோஷமான விஜ்ஜந்மத்தை. அறுக்கும் - அறும்படிபண்ணும். அப்பால் - மேலும். செறிபொழில்-செறிந்த பொழிலையுடைத்தான. அனந்தபுரத்து-திருவனந்தபுரத்திலே. அண்ணலார்கமலபாதம் - நிருபாதிகஸ்வாமியானவன் திருவடிகளை. அணுகுவார் - உக்தப்ரகாரத்திலே ஸ்நேஹமாகக்கிட்டுமவர்கள். அமரராவார் - * அயர்வறுமமரர்களிலே அந்யதமராவர்கள். இவ்வர்த்தத்தை, நாம் - அபிஜ்ஞரான நாங்கள். திண்ணம் - த்ருடமாக. அறியச்சொன்னோம் - சொன்னோம். ......................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திருவனந்தபுரத்தி லாஶ்ரயிக்குமவர்கள் நித்யசூரிகளாவர்கள்,ஆகையாலே, அங்கே நீங்களு மாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(புண்ணியஞ்செய்து) ஸ்நேஹத்தைப்பண்ணி. த்யாகம் வர்ணாஶ்ரமதர்மங்களை இதிகர்த்தவ்யதையாக வுடைத்தா யிருக்குமிறே; ஆக, சத்கர்மபலமான பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை நினைக்கிறது. "[Grantha]" (மத்பக்தோ – மந்மநாபவ) என்னக்கடவதிறே. (நல்ல புனலொடுமலர்கள்தூவி) நல்ல புனலோடேகூடின மலர்களை, ப்ரேமபரவசராய்க்கொண்டு பணிமாறி. இத்தால் – அர்ச்சநாதிகளைச்சொல்லுகிறது. "[Grantha]" (மத்யாஜீமாம்நமஸ்குரு) என்னக்கடவதிறே. (எண்ணுமின்) "[Grantha]" (ஸததம்கீர்த்தயந்தঃ) என்னுநின்றதிறே. (எந்தைநாமம்) இடறினவன் "அம்மே" என்னுமாபோலே, திருநாமம்சொல்லும்போது ஒரு அதிகாரிசம்பத்திதேட்டவேண்டா. ஜீயர் பட்டரை "திருநாமம் சொல்லும்போது ப்ரயதனாய்க்கொண்டு சொல்லவேணுமோ" என்றுகேட்க, "கங்கையிலேமுழுகப்போமவனுக்கு வேறொரு உவட்குழியிலே முழுகிப்போகவேணுமோ,

மேலுண்டான நன்மையைத் தருகிற. விது அதிகாரி சம்பத்தியையும் தர மாட்டாதோ" என்றருளிச்செய்தாராம். திருநாமம் சொல்லுகைக்கு ருசியேயாய்த்து வேண்டுவது; அவர்களே அதிகாரிகள். (இப்பிறப்பறுக்கும்) கண்டதிறே யிதினுடைய விழைவீடு. கவிழ்ந்துபார்க்கவமையுமே யிதினுடைய வகவாயை; தன்னடையே விரக்திபிறக்குமே. இப்படி ப்ரத்யக்ஷிக்கச்செய்தேயும் கார்யகரமாகாதிருக்கிறதிறே வாஸநையின்கனம். ஒருசெட்டியை "இவன்தமிழுக்குதேசிகனுயிருக்கும்" என்று பட்டருக்குக் காட்டினார்களாய்; "உனக்கேதேனு மபேக்ஷயுண்டாகில் கேட்கலாகாதோ" என்ன; "சிலர் 'காண்கிறதேஹத்துக் கவ்வருகு ஆத்மாவுமில்லே, தர்மாதர்மங்களுமில்லே, ஈஶ்வரனுமில்லே' என்றிராநின்றார்கள், சிலர் 'இத்தேஹந்தானஸ்த்திரம்' என்று இதின்தோஷத்தை தர்ஶித்து 'அவ்வருகே ஸ்த்திரமாயிருப்பதொன்றைப் பற்றவேணும்' என்றிராநின்றார்கள், விஷயமொன்றுயிருக்க இவ்விரண்டு பரிமாற்றமும் நடக்கிறபடியெங்ஙனே?" என்ன; "'𑌮𑌮𑌮𑌾𑌯𑌾𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾' (மமமாயா துரத்யயா) என்றும் '𑌮𑌾𑌮𑍇𑌤𑌾𑌂𑌤𑌰𑌨𑍍𑌤𑌿𑌤𑍇' (மாயாமேதாந்தரந்திதே) என்றும் சொல்லுகிறபடியே, பாக்யவான்களுக் கிதினுடைய தோஷதர்ஶநத்தைப் பண்ணிக் கழித்துக்கொள்ளுகைக்கும், பாக்யஹீநர்க்கு இதிலே போக்யதாபுத்திபண்ணி அநர்த்தப்படுகைக்கு முடலாம்படி கர்மாநுகுணமாக இத்தை இடையெடுத்துக்காணு மீஶ்வரன்பண்ணிற்று" என்றருளிச்செய்தார். [இதுகண்டாய்] என்னும்படியா யிருக்குமிறே - நாம் நன்றாக நினைத்திருக்குமதல்ல விதுக்காகாரம், ஈஶ்வரன், வெளிச்சிறப்பைப் பிறப்பிக்க "இது அல்பம், அஸ்த்திரம்" என்றறிந்தவிதுவே கிடா யிதுக்கு நிலைநின்ற ஸ்வபாவம். (இப்பிறப்பறுக்கும்) இப்படி ஹேயதயா ஜ்ஞாதவ்யமான வித்தேஹ சம்பந்தத்தை யறுக்கும். (செறிபொழிலித்யாதி) செறிந்த சோலையையுடைத்தான திருவனந்தபுரத்திலேவந்து கண்வளர்ந்தருளுகிற சர்வஸ்வாமியுடைய நிரதிசயபோக்யமான திருவடிகளைக் கிட்டுமவர்கள். (அப்பால் - அமரராவார்) "இப்பிறப்பறுக்கும்" என்ன வேண்டாத தேஹத்தைப் பரிக்ரஹித் தடிமைசெய்கிறவர்களும், திருவனந்தபுரத்துக் கண்வளர்ந்தருளுகிறவன் திருவடிகளை யாஶ்ரயித்தவர்கள். ஆக, இத்தால்-விரோதியைப்போக்குமளவே யன்றியே உத்தேஶ்யத்தைப் பெறுகைக்கும் திருவனந்தபுரமே ஆஶ்ரயணீயஸ்த்தலமென்கிறது. (திண்ணம்) நிஶ்சிதம். (நாமறியச்சொன்னோம்) அவனாலே * மயர்வறமதிநலமருளப்பெற்ற நாம், தேஹாத்மாபிமாநிகளான நீங்களுமறியும்படி உங்களநர்த்தத்தைப் பார்த்துச் சொன்னோம்.............................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (புண்ணியமித்யாதி.) "அனந்தபுரத்தண்ணலார் கமலபாதமணுகுவார் - அப்பால் - அமரராவார், எண்ணுமினெந்தைநாமம்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (திருவனந்தபுரத்திலித்யாதி.)

புண்யசப்தம் - கர்மவாசக மொழிய, பக்திவாசகமாம்படி யென்னென்ன (த்யாநமித்யாதி;) வர்ணாஶ்ரமதர்மங்களை யென்றபடி. இதி கர்த்தவ்யதையாக-அங்கமாக. ஸ்நேஹமும் பக்தியும் பர்யாயம். இத்தால் - காரணமான கர்மத்தையிட்டு கார்யமான பக்தியை லக்ஷிக்கிற தென்கிறார் (ஆக சத்கர்மேத்யாதி.) காரணமான கர்மத்தையிட்டு கார்யமான பக்தியைலக்ஷிக்கிறதென், கர்மந்தன்னையேசொன்னாலோவென்ன (மத்பக்த இத்யாதி.) அதாவது - "𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵, 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌭𑌵, 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁" (மத்பக்தோமந்மநாபவ, மத்பக்தோமத்யாஜீபவ, மத்பக்தோமாம்நமஸ்குரு) என்று எல்லாம் பக்திபுரஸ்ஸரமாகச் செய்யச்சொல்லுகையாலே, இங்கும் "நல்லபுனலொடு" இத்யாத்யுக்தார்ச்சநாத்யங்கத்வேந பக்தியைச் சொல்லுகிறதென்று கொள்ளவேணுமென்றபடி. "அர்ச்சநாதிகளைப்பண்ணி" என்றதுக்கு ப்ரமாணம் (மத்யாஜீத்யாதி.)

பகவந்நாமோச்சாரணமும் பக்திக்குபயுக்தமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் (சததமித்யாதி.) "𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁। 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ 𑌸𑌤𑌤𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑌤𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃। 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇" (மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு। மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம்மத்பராயணঃ॥ஸததம்கீர்த்தயந்தோமாம் யதந்தஶ்சத்ருடவ்ரதாঃநமஸ்யம்தஶ்சமாம்பக்த்யா நித்யயுக்தாஉபாஸதே) இதிபகவத்கீதாஸநவமே. "எந்தைநாமம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (இடறினவனித்யாதி.) இதுக்கு சம்வாதம் (ஜீயரித்யாதி.) இத்தால்பலிதம் (திருநாமமித்யாதி.)

"இ" என்றதுக்குபாவம் (கண்டதிறேயித்யாதி.) இதினுடைய-தேஹத்தினுடைய. இழையீடு - நூலாலே தைக்கை. அதாவது - இழையிட்டாப்போலே யிருக்கிற வவயவங்களுடைய சேர்த்தி. விவரணம் (கவிழ்ந்தித்யாதி.) அகவாயை-அந்தஸ்த்தங்களான மூத்ரபுரீஷாதிதோஷங்களை. அகவாயில் தோஷத்தை தர்ஶிக்கவும் நமக்கு விரக்தி பிறவாமைக் கடியேதென்ன (இப்படியித்யாதி.) "வாஸனையின்கனம்" என்றதுக்கு சம்வாதம் (ஒருசெட்டியையித்யாதி.) காட்டினவிடத்து, பட்டர் "நாமறியாததொன்றிவனைக் கேட்கவேண்டியிருந்ததோ" என்று, அவன்றன்னையே "நம்பக்கலிலே வேண்டுவது கேட்கலாகாதோ" என்றுசொன்னபடி. இடையெடுத்து - நிறுத்து; நிஶ்சயித்தென்றபடி. இது ஹேயம் என்னுமதுக்குப்ரமாணம் (இதுகண்டாயித்யாதி) இரண்டாந்திருவந்தாதி அறுபத்தாறும்பாட்டு. இதுக்கர்த்தம் (நாமித்யாதி.) உக்தத்தை யநுவதித்துக்கொண்டு, சப்தார்த்தம் (இப்படியித்யாதி.)

"அப்பால் - அமரரானவர்களும்- அனந்தபுரத்தண்ணலார்கமலபாதமணுகுவார்" என்று தாத்பர்யாந்தரம் (இப்பிறப்பறுக்குமித்யாதி.) முந்தினயோஜனையில் "இப்பிறப்பறுக்கும், அப்பால் - அமரராவார்" என்கிற பதத்வயத்தாலும் பலிதம் (ஆகவித்யாதி.)

புண்ணியம்செய்தென்றுதொடங்கி, எந்தைநாமம்-எண்ணுமின், இப்பிறப்பறுக்கும்; செறிபொழிலென்றுதொடங்கி, அணுகுவார்-அப்பால்-அமரராவார்; திண்ணநாமறியச்சொன்னோ மித்யந்வயঃ.

(இதுகண்டாய் நன்னெஞ்சேயித்யாதி) (நன்னெஞ்சே) சம்சாரம் பொல்லா தென்று லதுக்கிசைந்து என்னோடொருமிடரானநல்லநெஞ்சே. (இப்பிறவியாவது) த்ருஷ்டதோஷதுஷ்டமான இந்த சம்சாரமாகிறது. (இதுகண்டாய்) "இது நிலைநிற்கும், போக்யமாயிருக்கும்" என்று நாட்டார் ப்ரமிக்கிறவாகாரமின்றிக்கே, அல்பாஸ்த்திரத்வாதி தோஷதூஷிதமான விவ்வாகாரத்தோடேகூடின விதுவேகிடாய். (எல்லாநாமுற்றது-இதுகண்டாய்) முன்பநாதிகாலமெல்லாம் நன்றாய்த்தோற்றுகிற வாகாரத்தாலே நாம் மறுபாடுருவ துஃகாநுபவம்பண்ணிப்போந்ததிதுகிடாய். (நாரணன்பேரோதி) வகுத்தசேஷியான நாராயணனுடைய திருநாமங்களை நிரந்தரமாகச்சொல்லி. (நரகத்தருகணையாக்காரணமும்-இதுகண்டாய்) சம்சாரமாகிற நரகத்தினுடைய பர்யந்தத்திலும் ப்ரவேசியாமைக்குக்காரணமும், அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்களாலே த்யாஜ்யமென்னுமாகாரம் ப்ரத்யக்ஷிக்கலாம்படியிருக்கிற விஜ்ஜந்மசம்பந்தங்கிடாய். (வல்லையேல்காண்) மேலெழத்தோற்றுகிற நன்மையில் பசையில்லை, தோஷமேயிதுக்கு வேஷமென்னுமத்தைத் தப்பாதபடி காணவல்லையாகில், நான்சொன்னதொக்குமென்னு மிடத்தைக்கண்டுகொள் என்றபாட்டுக்கர்த்தம் ...*

---

# ஆறாம்பாட்டு.

அமரராய்த்திரிகின்றார்கட்காதிசேரனந்தபுரத்
தமரர்கோனர்ச்சிக்கின்றங்ககப்பணிசெய்வர்விண்ணோர்
நமர்களோசொல்லக்கேண்மினாமும்போய்நணுகவேண்டுங்
குமரனார்தாதைதுன்பந்துடைத்தகோவிந்தனாரே.

## ஆறாயிரப்படி.

(அமரராய்) திருநாட்டிலேபோய் எம்பெருமானுக் கடிமைசெய்கையன்றோ ப்ராப்யமென்னில்; அங்குள்ளாரும் திருவனந்தபுரத்திலேவந்தன்றோ வடிமைசெய்கிறது, ஆதலால், இங்கே யடிமைசெய்யுமிதுவே ப்ராப்யம், ஆனபின்பு, நாமிங்கேபோ யடிமைசெய்யவேணுமென்கிறார்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வதேவநிர்வாஹகன் வர்த்திக்கிற திருவனந்தபுரத்திலே சூரிகளாராதியாநிற்பர்கள், நாமும்போய்க் கிட்டவேணுமென்கிறார்.

குமரனார்தாதை-சுப்ரஹ்மண்யனுக்குத்பாதகனான ருத்ரனுடைய. துன்பந்துடைத்த - பாதகதுஃகத்தைப்போக்கின. கோவிந்தனார்-க்ருஷ்ணனாய். அமரராய்-மற்றும் தேவர்களாய். திரிகின்றார்கட்கு-திரிகிறவர்களுக்கும். ஆதி-உத்பாதகனானவன். சேர்-கண்வளர்ந்தருளுகிற. அனந்தபுரத்து - திருவனந்தபுரத்திலே. அமரர்கோன்-சேனைமுதலியார். அர்ச்சிக்கின்று-ஆராதிக்கிறவிதுக்கு. அங்கு-அத்தேசத்திலேவந்து. அகப்பணிசெய்வர்-அந்தரங்கவ்ருத்திபண்ணி எடுத்துக்கைநீட்டுவார். விண்ணோர்-பரமபதவாசிகளாயிருக்கும். நமர்களோ-நம்முடையவர்களானவர்களே. சொல்லக்கேண்மின்-சொல்லக்கேளுங்கோள். நாமும்-நாமும். போய்-அவர்களோடேபோய். நணுகவேண்டும்-கிட்டவேணும்.......................................*

## ஈடு - ஆரும்பாட்டு.

நித்யஸூரிகளும் வந்தடிமைசெய்கிற திங்கே யாகையாலே திருவனந்தபுரமே பரமப்ராப்யம், அங்கே நாமடிமைசெய்யவேணுமென்கிறார்.

( அமரராய்த்திரிகின்றார்கட்கு ) மாம்பழத்தோ டொருசம்பந்தமில்லாத தொன்றுக்கு மாம்பழவுண்ணியென்று பேராயிருக்குமாபோலே; இக்கரையராய், இவ்வருகுள்ளாரிற்காட்டில் நாலுநாளேழ ஜீவித்திருந்து சாகிற விவ்வளவையேகொண்டு, தங்களுடையவாயுஸ்ஸுக்கோரவசாந முண்டாயிருக்கச்செய்தே அதில்லாதாரைப்போலே துர்மாநம் பண்ணிக்கொண்டு திரிவர்களாய்த்து. ( திரிகின்றார் ) பந்தகம் கனத்திருக்கச்செய்தேயும், நிர்ப்பயராய்த் திரிவர்களாய்த்து. இவனளவல்லவிறேயவர்களுக்கு. விடும்போ தொருதேஹமாத்ரமாதல், ஒருஸ்த்ரீயாதலாயிருக்கு மிவனுக்கு; ப்ரஹ்மாவுக் கண்டமித்தனையும் விடவேண்டி வருமிறே. ( ஆதிசேரனந்தபுரத்து ) இவர்களுக்கு மவர்களுக்கு மவன்பக்கல் சாம்யம் காரணத்வத்திலேயாய்த்து. அவர்களுக்கு, சத்தையை நிர்வஹித்துக்கொடுக்கும்; இவர்களுக்கு, தேஹத்தையு மாத்மாவையும்சேர்த்து இத்தேஹம் க்ஷணந்தோறும் நசிக்க உண்டாக்கி நடத்திக்கொடுக்கும். ஜகத்காரணபூதனானவன் வந்து நித்யவாஸம்பண்ணுகிற திருவனந்தபுரத்து. ( அமரர்கோனித்யாதி ) ஸ்ரீசேநாபதி யாழ்வான் நித்யகைங்கர்யம் பண்ணுகிறான், நித்யஸூரிக ளெடுத்துக் கைநீட்டுவார். ( நமர்களோ சொல்லக் கேண்மின் ) “ வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம் ” என்றுசொன்னதுக்குள்ளே யடங்கும்படி யென்னோடே நிருபாதிக சம்பந்தமுடையா ரடங்க நான் சொல்லுகிற வார்த்தையைக் கேளுங்கோள். பந்துக்களாயிருப்பார்க்கு நல்வார்த்தைசொல்லவேணுமிறே. (நாமும்) அடிமையிலே ருசியுடையநாமும், நித்யஸூரிகளோ டொருகோவையாய்ச்சென்றுகிட்டி யடிமைசெய்யவேணும். (போய்நணுகவேண்டும்) இங்கேயிருந்துமநோரதிக்கு மளவுபோராது, போய்ப்புகவேணும். அவர்கள் நடுவே சம்சாரிகளானநமக்குக் கிட்டவொண்ணுமோவென்னில் (குமரனாரித்யாதி) (தேவசேநாபதியாய் ப்ரபலனான சுப்ரஹ்மண்யனுக்குங்கூட ஜநகனானவனுக்கு பாதகத்தால்வந்த துஃகத்தைப்போக்கின க்ருஷ்ணனை) தேவர்களு மசுரர்களும் கூட்டுப்படையா யெதிரிட்டுவருமன்றும், அவர்களாபந்நரானால் அவர்களாபத்தைப்போக்கி ரக்ஷிக்குமவனாய்த்தவன்; ஆனபின்பு, நமக்கத்தேசத்தை ப்ராபிக்கைக்கோ ரருமைப்படவேணுமோ. துர்மாநிகளுக்கும் துஃகநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்குமவன், அபிமாநசூந்யரான நமக்குத் தன்னைக் கிட்டுகையி லருமைப்படுத்துமோ. ருத்ராதிகளுக்கு துஃகநிவர்த்தகனாயிருக்கும்; பசுக்களுக்கு மிடையர்க்கும் கையாளாயிருக்கும். கோவிந்தனை - நாமும்போய்நணுகவேண்டும்..................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (அமரராயித்யாதி) "அமரர்கோனர்ச்சிக்கின்றங் ககப்பணிசெய்வர்விண்ணோர், நாமும்போய் நணுகவேண்டும்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (நித்யசூரிகளுமித்யாதி.)

"ஆய்" என்றதுக்குபாவம் (மாம்பழத்தோடித்யாதி.) அதாவது-நித்தியசூரிகளுடைய வமரத்வம் தங்களுக்கின்றிக்கேயிருக்க, அதுண்டானதாக வபிமாநித்துக் கொண்டு திரிவர்களென்றபடி. எழ-விளம்பித்து. "திரிகிறார்கள்" என்றதுக்குபாவம் (பந்தகமித்யாதி) அப்படி பந்தகமதிகமோவென்ன (இவனளவல்லவித்யாதி) இவன்-மநுஷ்யன். அதெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (விடும்போதித்யாதிவாக்யத்வயத்தாலே) ப்ரஹ்மாதிகளுக்கமரத்வமில்லையாகிலும், நித்யசூரிகளுக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரநுத்பாதகனுமாகாரம் சமாநமென்கிறார் (இவர்களுக்குமித்யாதி) சாம்யம் காரணத்வத்திலேயென்கையாலே - ப்ரஹ்மாதிகளுக்கு நித்யசூரிகளோடு அமரத்வசாம்யமில்லையென்றுகருத்து. இருவர்க்குமாதியாம் ப்ரகாரமேதென்ன (அவர்களுக்கித்யாதி) அநுபவாபாவத்தில் ஸத்தாஹாநி பிறக்கையாலே அநுபவிப்பித்து சத்தையைநோக்குமென்றபடி. "அமரராய்த்திரிகின்றார்கட்காதி" என்றத்தால்பலிதம் (ஜகத்காரணேத்யாதி)

"அர்ச்சிக்கின்று" என்றது - மலையாளபாஷை; அர்ச்சிக்கிறவிடத்திலென்னுதல், அர்ச்சிக்கிறானென்னுதல். அங்கு-அத்தசையிலே. அகப்பணிசெய்வர்-அந்தரங்கவ்ருத்திபண்ணுவார்; எடுத்துக்கைநீட்டுவாரென்றபடி.

நமர்களானல் சொல்லவேணுமோவென்ன (பந்துக்களாயித்யாதி.)

"நணுகவேண்டும்" என்றதுக்கர்த்தம் (நித்யசூரிகளோடித்யாதி) "போய்" என்றதுக்கு வ்யாவர்த்யம் (இங்கேயிருந்தித்யாதி) குமரனார்தாதை துன்பந்துடைத்தது - வாணனைத்தலையறுதே ரக்ஷிக்கையென்கிறார் (தேவர்களுமித்யாதி) அதாவது - "கோவிந்தனார்" என்று - க்ருஷ்ணனைச்சொல்லுகையாலே, பாணயுத்தத்தில் துன்பம் துடைத்தானென்றபடி. ஆனபின்பென்றது - தூர்மாநிகளுக்கும் ரக்ஷகனானபின்பென்றபடி. (அருமைப்படவேணுமோ" என்றத்தையுபபாதிக்கிறார் (துர்மாநிகளுக்குமித்யாதி) கீழ்ப்பதத்தோடே "கோவிந்தனார்" என்றத்தைக்கூட்டிபாவம் (ருத்ராதிகளுக்கித்யாதி) க்ரியையேதென்ன (கோவிந்தனாரையித்யாதி)

அமரராயென்றுதொடங்கி, விண்ணோர்; ஆகையாலே, நமர்களோசொல்லக்கேண்மின்; குமரனாரென்றுதொடங்கி, கோவிந்தனாரை - நாமும்போய் நணுகவேண்டுமித்யந்வய: ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஏழாம்பாட்டு.

---

துடைத்தகோவிந்தனாரேயுலகுயிர்தேவுமற்றும்
படைத்தவெம்பரமமூர்த்திபாம்பணைப்பள்ளிகொண்டான்
மடைத்தலைவாளைபாயும்வயலணியனந்தபுரங்
கடைத்தலைசீய்க்கப்பெற்றாற்கடுவினைகளையலாமே.

## ஆருயிரப்படி.

( துடைத்த ) ஆஶ்ரிதது:காபநோதந ஸ்வபாவனும், சர்வகாரண மாகையாலே சர்வேஶ்வரனான வெம்பெருமான் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலேசென் றடிமைசெய்யப்பெறில், நம்முடைய து:க மெல்லாம்போம், அடிமைசெய்யப்போருங்கோளென்கிறார்...... ......*

## பன்னீராயிரப்படி.

அநந்த்ரம், சகலஜகத்ஸ்ருஷ்ட்யாதி யுக்தனானசர்வேஶ்வரன் வர்த்திக்கிறதிருவனந்தபுரத்திலே யடிமைசெய்யப்பெற்றால், ப்ராப்யாலாப நிபந்தநமான க்லேஶத்தைப்போக்கலாமென்கிறார்.

உலகு - லோகங்களையும். உயிர் - மநுஷ்யாதிகளான ப்ராணிகளையும். தேவும் - தேவதைகளையும். மற்றும் - மற்றும் மஹதாதிபதார்த்தங்களையும். துடைத்த- ஒன்றொழியாமல் படைத்துஸம்ஹரித்தவனாய். கோவிந்தனோ - "தமஃபரோதேவ ஏகோ வணகீஹவதி" ( தம:பரோதேவஏகோபவதி ) என்கிறபடியே அவ்வவஸ்தையில் த்யோதமான விக்ரஹயுக்தனாகையாலே கோவிந்தசப்த வாச்யனானவன்தானே. ஸம்ஹ்ருதமான வந்த ஸகலபதார்த்தங்களையும், படைத்த - உத்பாதித்தவனாய். எம்- இக்காரணத்வத்தை நமக்குப்ரகாசிப்பித்த. பரமமூர்த்தி - சர்வாதிகசேஷியாய். ஸ்ருஷ்ட ஜகத்ரக்ஷணார்த்தமாக, பாம்பணை-திருவரவணையிலே. பள்ளிகொண்டான்- கண்வளர்ந்தருளுகிறவனுடையதாய். ஜலஸம்ருத்தியாலே, மடைத்தலை-மடைத்தலைகளிலே. வாளை-வாளை. பாயும்-களித்துப்பாயும். வயல்-வயலை. அணி-அலங்காரமாகவுடைய. அனந்தபுரம்-திருவனந்தபுரத்திலே. கடைத்தலை-திருவாசலிலே. சீய்க்கப் பெற்றால்-சம்மார்ஜநப்ரமுகசேஷவ்ருத்திகளைப் பண்ணப்பெற்றால். கடுவினை-கைங்கர்யாலாபநிபந்தநமான வதிசயிதது:கத்தை. களையலாம்-போக்கலாம்.

கோவிந்தனென்றது - "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபிசாப்யய:" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:) என்று க்ருஷ்ணனைச்சொல் லிற்றாகவுமாம்..........................................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

சர்வேஶ்வரன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலேசென் றடிமைசெய்யப்பெறில், ஒருதேசவிசேஷத்தேசென் றடிமைசெய்யப்பெற்றிலோமென்னும் து:கம்போமென்கிறார்.

( துடைத்தகோவிந்தனாரோயித்யாதி ) துடைக்கை-சம்ஹரிக்கை. அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டி யிருப்பது. "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம்," ( க்ருஷ்ணஏவஹிலோகாநாம், ) "வையமேழும்கண்டாள் பிள்ளைவாயுளே." ( உலகுயிரித்யாதி ) லோகத்தையும் தேவஜாதியையும் மற்றுமுண்டான வாத்மாக்களையு முண்டாக்கின. இவை யதிப்ரவ்ருத்தமான வன்று சம்ஹரித்து, பின்னை புருஷார்த்தோப யோகியான கரணங்களைக் கொடுத்து ரக்ஷித்த. ( எம் பரம மூர்த்தி ) ஆஶ்ரிதபவ்யனான சர்வேஶ்வரன். ( பாம்பணைப் பள்ளிகொண்டான் ) ஸ்ருஷ்டமான

ஜகத்திலே ரக்ஷணார்த்தமாகத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவனுடைய. (மடைத்தலையித்யாதி) ஜலஸம்ருத்தியாலே மடைத்தலைகளிலேகளித்து வாளைகள்பாயாநின்றுள்ள வயலாலே யலங்க்ருதமானதேசத்திலே. முக்தர் சாமகாநம்பண்ணிக் களித்து வர்த்திக்குமாபோலே யாய்த்து அத்தேசத்தில் திர்யக்குக்களும் களித்து வர்த்திப்பது. (கடைத்தலைசீய்க்கப்பெற்றால்) திருவாசலிலே திருவலகு திருப்பணிசெய்யப்பெற்றால். (கடுவினைகளையலாமே) அடிமைசெய்யப்பெறுமையாலுண்டான க்லேசமெல்லாம்போம். சேஷத்வ ஜ்ஞாநம்பிறந்தால், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திபெறுமையால் வரும்க்லேசம் ப்ராயஶ்சித்தத்தால் போக்குமதன்றே .................... .....................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (அடைத்தகோவிந்தனுரித்யாதி) "அனந்தபுரம் கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஶ்வரனித்யாதி.)

ஸ்ருஷ்டிக்குமுன்னே சம்ஹாரத்தைச்சொல்லுவானென்னென்ன (அப்யயேத்யாதி) க்ருஷ்ணனே ஜகத்ஸம்ஹாரம் பண்ணினனென்ன (க்ருஷ்ணஏவஹீத்யாதி) "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:) இத்யாதி மஹாபாரதே ராஜஸூயே. இதுக்கு ப்ரமாணாந்தரமாதல், அன்றிக்கே, துடைக்கை-நிஶ்ஶேஷமாக விழுங்குகையென்று அவாந்தரப்ரளயமாக வர்த்தாந்தரம் விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணமாதல் (வையமேழுமித்யாதி.)

படைத்ததொழியத் துடைத்தது முபகாரமோவென்ன (இவை யதிப்ரவ்ருத்தமித்யாதி.)

மடைத்தலை - மடைகளிலேயென்றபடி. இதுக்குபாவம் (முக்தரித்யாதி) கடைத்தலை - தலைக்கடை; வாசலென்றபடி. சீய்க்கை - திருவலகிடுகை.

கைங்கர்யம் பண்ணப்பெறுமையாலுள்ள க்லேசத்தை "கடுவினை" என்னலாமோவென்ன (சேஷத்வஜ்ஞாநமித்யாதி) அதாவது - சேஷத்வஜ்ஞாநாநந்தரம் கடைத்தலைசீய்க்கப்பெற்றால் களையலானகடுவினை, அதுபெறுமையால் வந்தக்லேஶமேயாகவேணும். துஷ்கர்மமாகில் ப்ராயஶ்சித்தவிநாஶ்யமென்கை.

உலகுயிர்தேவும்மற்றும் - துடைத்தகோவிந்தனாரே, உலகுயிர்தேவும்மற்றும் படைத்தவெம் பரமமூர்த்தி யென்றுதொடங்கி, களையலாமே இத்யன்வய:... ...*

---

# எட்டாம்பாட்டு.

கடுவினைகளையலாகுங்காமனைப்பயந்தகாளை
யிடவகைகொண்டதென்பொழிலணியனந்தபுரம்
படமுடையரவிற்பள்ளிபயின்றவன்பாதங்காண
நடமினோநமர்களுள்ளீர்நாமுமக்கறியச்சொன்னோம்.

## ஆருயிரப்படி.

(கடுவினை) சௌந்தர்ய லாவண்ய யௌவநாதி கல்யாணகுணநிதியான வெம்பெருமான் எல்லார்க்கு மாத்மதாநம்பண்ணிக்கொண்டிருக்கிறதிருநகரி - திருவனந்தபுரம் என்றுசொல்லாநின்றார்கள், நாமும் அங்கே கண்வளர்ந்தருளுகிற வவன்றிருவடிகளைக் காணப்போரீகோள், இஸ்ஸம்ருத்தியை நீங்களறியாமையாலே யிழக்கலாகாதென்று உங்களுக்கறிவித்தோமென்கிறார் ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யமான திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற பரமப்ராப்யபூதன் திருவடிகளை யநுபவிக்கைக்கு நம்முடையாராயுள்ளாரெல்லாரும் நடக்கும்படி பாருங்கோளென்கிறார்.

கடுவினை-ப்ராப்திவிளம்ப ஹேதுக்களாயுள்ள க்ரூரமான பாபங்களை. களையலாகும்-போக்கலாம். காமனை-அழகுக்கு ப்ரஸித்தனானகாமனை. பயந்த - உத்பாதித்தவனாய். காளை-அவ்வளவிலும் யௌவநம்குலையாத க்ருஷ்ணனானவன். இடவகை-இடமாக. கொண்டது-கொண்டது. எழில்-அழகை. அணி-அணிந்த. அனந்தபுரம்-திருவனந்தபுரம். என்பர்-என்றுசொல்லாநிற்பர். அங்கே, படமுடை-ஸ்வஸ்பர்ஶத்தாலே விரிகிறபணங்களையுடைய. அரவில்-திருவரவணையிலே. பள்ளி - கண்வளர்ந்தருளுகையிலே. பயின்றவன்-மிகவும்செறிந்தவனுடைய. பாதம்-திருவடிகளை. காண-கண்டநுபவிக்கைக்கு. நமர்களுள்ளீர்-நம்முடையராயுள்ளார். நடமினோ-நடவுங்கோள். அறிவிப்பார்குறையாயிராதே, நாம்-விஷயவைலக்ஷண்யமறிந்தநாங்கள். உமக்கு-உங்களுக்கு. அறிய-அறியும்படி. சொன்னோம் - சொன்னோம்..........*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற சர்வேஶ்வரனுடைய திருவடிகளைக்காணப்போருங்கோளென்று, அநுகூலரை யழைக்கிறார்.

(கடுவினைகளையலாகும்) நம்மால்போக்கவரிதான பாபங்களையும் போக்கலாம். (காமனைப்பயந்தகாளை) உங்களுக்கு நானுபதேசிக்கவேண்டுவது அவ்வஸ்துவை சாக்ஷாத்கரிக்குமளவுமே!. நாட்டைத் தன்னழகாலேவெருட்டித் திரிகிற காமனுக்கு முத்பாதகனாயிருக்கும். இருவரையும் கூட்டக்கண்டால் "முறைகெடச்சொன்னார்களே" என்றிருக்கும். "ப்ரஸவாந்தஞ்சயௌவநம்" (ப்ரஸவாந்தஞ்சயௌவநம்) என்கிறதும், இவ்விஷயத்திலே மற்றைப்படியாயிருக்கிறதுகாணும். (இடவகைகொண்டதென்பர்) இவ்விடத்தை வாஸஸ்த்தாநமாகக்கொண்டதென்று, அறிவுடையாரடங்கச் செவிசீப்பாய்ந்து கிடப்பர்கள்; "பத்மநாபம்விதுர்ப்புதா:" (பத்மநாபம்விதுர்ப்புதா:) (எழிலணியனந்தபுரம்) பரமபதத்திலொருபுதுமைசெய்யவொண்ணாதிறே!. அங்குத்தையிற்காட்டி லிங்குத்தைக்குத் தன்னேற்றமிருக்கிறபடி. (படமுடையரவில்) சர்வேஶ்வரன்சாய்ந்தருளி

னுல் அவனுக்குப்பிறக்கும் விகாஸம்சொல்லுகிறது - படமுடையரவென்று. (பள்ளிபயின்றவன்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞமானவஸ்துவும் உணர்த்தியறும்படியாய்த்துப்படுக்கைவாய்ப்பு. (பாதமித்யாதி) (திருவடிகளைக்காணும்படியாக) "வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற கரியான்கழல்காணக்கருதும்கருத்து" என்றிருக்குமென்னேடொரு குடற்றுடக்குடையாரடங்கலும் போகப்பாருங்கோள். திருவத்யயநம் பாடாநிற்க, இத்தைக் கேட்டருளி, ஆளவந்தார் " நமக்காழ்வாரோடே யொருசம்பந்தமுண்டாகவேணும் " என்று, அப்போதே ஸ்ரீபாதத்தையுடையாரைக் கூட்டிக்கொண்டெழுந்தருளினர். (நாம்) கண்வளர்ந்தருளுகிறவழகில் சுவடறிந்து, "யவரேலுமவர் - எம்மையாளும்பரமர்" என்னக்கடவநாம். (உமக்கு) அவ்வடிவைக்காணவேணுமென்கிற வபேக்ஷையுடைய வுங்களுக்கறியும்படிசொன்னேம் ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கடுவினையித்யாதி) "பள்ளிபயின்றவன்" என்றுதொடங்கி, " நமர்களுள்ளீர் " என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை ( திருவனந்தபுரத்திலேயித்யாதி.)

"கடுவினை" என்றதுக்குபாவம் (நம்மாலித்யாதி)

இப்போதவனழகைச்சொல்லுகிறதுக்குபாவம் (உங்களுக்கித்யாதி) சப்தார்த்தம் (நாட்டையித்யாதி) வெருட்டி-மிரட்டி. " காமனைப்பயந்த " என்றவநந்தரம் "காளை" என்றதுக்குபாவம் (இருவரையுமித்யாதி) "காளை" என்றதுக்குபாவம் (ப்ரஸவாந்தஞ்சேத்யாதி) " 𑌮𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌵𑍈𑌰𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌸𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 𑌚 𑌯𑍌𑌵𑌨𑌮𑍍 । 𑌕𑌪𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌨𑍍𑌤𑌂 𑌚 𑌯𑌾𑌚𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌂 𑌚 𑌗𑍌𑌰𑌵𑌮𑍍 " ( மரணாந்தாநிவைராணி ப்ரஸவாந்தஞ்சயௌவநம் । குபிதம்ப்ரணதாந்தஞ்சயாசிதாந்தஞ்சகௌரவம். ) காளை-யுவா. " என்பர் " என்றதுக்குபாவம் (அறிவுடையாரித்யாதி) செவிசேர்ந்துகிடப்பர்கள் - வித்தராயிருப்பர்கள். வித்தராயிருக்கிறதுக்கு ப்ரமாணம் (பத்மநாபமித்யாதி) இது ப்ரமாணத்திரட்டில் காணவில்லை. "எழில்" என்று - உபவநாதிகாந்தியாய், அத்தாலே-அலங்க்ருதமான வனந்தபுரமென்றபடி. இத்தால் வ்யாவ்ருத்தி (பரமபதத்திலித்யாதி) அவனுக்கு -திருவனந்தாழ்வானுக்கு. "நமர்கள்-நடமின்" என்றதுக்குபாவம் (வரிவாளித்யாதி) போருங்கோள்-வாருங்கோள். ப்ராசங்கிகம் (திருவத்யயநமித்யாதி.)

"நாம்" என்றதுக்குபாவம் (கண்வளர்ந்தித்யாதி) "பாற்கடற்சேர்ந்த" என்றத்தைப்பற்ற (கண்வளர்ந்தருளுகிறவென்றது.)

காமனைப்பயந்தகாளை- எழிலணியனந்தபுரம் - இடவகைகொண்டதென்பர், கடுவினைகளையலாகும், பட்முடையரவில் பள்ளியென்றுதொடங்கி, பாதம்காண-நமர்களுள்ளீர்-நடமினே, நாமுமக்கறியச்சொன்னே மித்யன்வயঃ ..................*



# ஒன்பதாம்பாட்டு.

நாமுமக்கறியச்சொன்னநாள்களுநணியவான
சேமநன்குடைத்துக்கண்டீர்செறிபொழிலனந்தபுரந்
தூமநல்விரைமலர்களுகளறவாய்ந்துகொண்டு
வாமனனடிக்கென்றேத்தமாய்ந்தறும்வினைகடாமே.

## ஆறாயிரப்படி.

( நாமுமக்கு ) சேமநன்குடைத்தான திருவனந்தபுரத்திலேசென் றெம்பெருமானுக் கடிமைசெய்ய உங்களுடைய துஃகங்களெல்லாம் தாமேபோம்; ஆனபின்பு, அடிமைசெய்கைக் குபகரணமான விப்ரக்ருதிமுடிவதற்குமுன்னே யிப்போதேசென் றடிமைசெய்யுங்கோள்,நாமுமக்கறியச்சொன்னோ மென்கிறார். ...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ராப்தனானவன்திருவடிகளிலே கைங்கர்யத்தைப் பண்ண, கைங்கர்ய ப்ரதிபந்தகங்கள் தாமே போமென்கிறார்.

"வைத்தநாள்வரை" என்று, நாம் - நாம். முன்பு, உமக்கு - உங்களுக்கு. அறிய, சொன்ன - சொன்ன. நாள்களும் - சரீராவசாந திவசங்களும். நணியவான - நண்ணிய வாய்த்தின. செறிபொழில் - செறிந்தபொழிலையுடைத்தான. அனந்தபுரம் - திருவனந்தபுரமானது. நன்கு - நன்றான. சேமம் - ரக்ஷையை. உடைத்துக்கண்டீர் - உடைத்துக்கிடிகோள். ஆனபின்பு, அங்கே, தூமம் - ஆராதநோபகரணமான தூபத்தையும். நல் - நன்றான. விரை - பரிமளத்தையுடைத்தான. மலர்கள் - புஷ்பங்களையும். துகளற - குற்றமற. ஆய்ந்துகொண்டு - ஆய்ந்துகொண்டு. வாமனனடிக்கென்று - ஆஸ்ரிதசம்ஸ்லேஷஸ்வபாவனான ஸ்ரீவாமநன்திருவடிகளுக்கென்று சங்கல்பித்து. ஏத்த - ததங்கீகாரார்த்தமாக, அவனுடைய சீலாதிகுணங்களை ஸ்துதிக்க. வினைகள் - கைங்கர்யப்ரதிபந்திகர்மங்கள். தாமே-ஸ்வயமேவ. மாய்ந்தறும் - நசித்துப்போம்.

தூபமென்றும் பாடம் சொல்லுவர்கள்.........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

சரீராவஸாநமணித்தாய்த்து, ஈண்டெனத் திருவனந்தபுரத்திலே புக் கடிமைசெய்ய தாஸ்யவிரோதிகர்மங்கள் தாமே நசிக்குமென்கிறார்.

( நாமுமக்கித்யாதி ) "நாளேலறியேன்" என்றும் "மரணமானால்" என்றும் சொல்லிப்போந்த நாள்களும் கிட்டியவாய்த்தின. பிறர்க்கப்படி தாம் சொன்னாரோவென்னில்; * மாலைநண்ணியிலே "மரணமானால்" என்று ஈஸ்வராபிப்ராயத்தைத்தாமறிந்து, அத்தைப்பிறர்க்குபதேசித்தாரிறே. இதிலும் பரோபதேசமிறே. [ தஹிஜூஹூர்தி ] [தஸ்மிந்நஸ்

ஷமித] இத்யாதி பீஷ்மன் முடியாநின்றான், பின்னை இவ்வர்த்தம் கேட்க லாவாரில்லை என்று அவனருளிச்செய்த வார்த்தையை, இப்போதிவர்தா மருளிச்செய்கிறார். [ க்ஷூ3மிதே ] [ அஸ்தமிதே ] கண்ணுக்கு வெளிச்சி றப்பைப் பண்ணுவாரும், நெஞ்சுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணுவாருமா க, ஆதித்யர்களிருவராய்த்து; "ஞானமாகிநாயிறுகி." [ஜ்ஞாநாந்யல்பீ ஹ விஷ்யந்தி] [ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி] ஸ்வரூபத்தோபாதி நித்யமாயிரு க்குமிறே தர்மபூதஜ்ஞாநமும்; இனி இதுக்கு உதயாஸ்தமய வ்யவஹா ரம் ஜ்ஞாநப்ரஸரத்வாரத்தை யபேக்ஷித்ததாயிருக்குமிறே. அவன்போனா ல் பின்னைக் கொள்வாரும் கொடுப்பாருமின்றிக்கே பரிமாற்றமறும். இது க்கு பட்டரருளிச்செய்ததாக, பரிஞையப்பர்-"ஒருமதிப்பன்தலையில்கிட் டாதவன்று கொள்வார் கொடுப்பாரின்றியே யெளிவிலையனுய்ப்போம்." [தஸ்மாத்த்வாம்சோதயாம்யஹம்] [தஸ்மாத்த்வாம்சோதயாம்யஹம்] ஆகை யாலேகா ணுன்னை த்வரிப்பித்து "அவன்பக்கலிலேபோய்க்கேள்" என் று சொல்லுகிறது. (சேமநன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபு ரம்) நிரதிசயபோக்யமான தேசந்தானே மரணதசைக்கு ரக்ஷகமாம். (தூமநல்விரைமலர்கள்) நன்றான தூபம், பரிமளத்தையுடைத்தானநல்ல புஷ்பங்கள். இவற்றை. (துகளறவித்யாதி) தனக்கு மவனுக்கும் சத்ரு ஶமாம்படி விலக்ஷணமாக்கிக்கொண்டு. (வாமனனித்யாதி) தன்னுடை மைபெறுகைக்குத் தானிரப்பாளனுயிருக்குமவன் றிருவடிகளுக்கென்றே த்த, (மாய்ந்தறும்வினைகள்தாமே) இவன் தன் ஸ்வரூபத்துக் கநுரூப மான பரிமாற்றத்திலே யந்வயிக்க விரோதிகளடையநசித்துப்போம்....*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (நாமுமக்கித்யாதி.) பாட்டையெல்லாம் கடாக்ஷித்தவ தாரிகை (சரீராவஸாநமித்யாதி.) தமக்கு சரீராவஸாநமணித்தாய்த்தென்றபடி.

"நாளேலறியேன்" என்று ப்ரார்த்தித்த தமக்கு "மரணமானல்" என்று ஈஶ்வரனவதியாகச் சொல்லிப் போந்த நாள்களும் கிட்டினவாய்த்தின வென்றப டி. ஆனல் அவன் தமக் கவதியாக விட்டுக்கொடுத்த நாளன்றோ, அது பிறர்க்குத் தாம் சொல்லவில்லையே, ஆனபின்பு, "உமக்கறியச்சொன்ன" என்னும்படி யெங் ஙனே யென்கிற சங்கையையநுவதித்து பரிஹரிக்கிறார் (பிறர்க்கப்படியித்யாதி.) பரோபதேசமிறே - பரோபதேசமாகையாலே பிறர்க்குபதேசித்தாரென்றபடி. "ம ரணமானல்" என்று முன்பு நாமுங்களுக்குச் சொன்ன சரீராவஸாநதினங்களும் கி ட்டின வாய்த்தினவென்று சப்தார்த்தம். "தமக்கு சரீராவஸாநமணித்தாய்த்து" என்கிறவித்தை யிப்போதருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநத்தை ஸநிதர்ஶநமாக வரு ளிச்செல்கிறார் (தஸ்மிந்நித்யாதி) "தஸ்மிந்நஸ்தமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே। ஜ்ஞாநாந்யல்பீ ஹவிஷ்யந்தி தஸ்மாத்த்வாம்சோதயாம்யஹம்" (தஸ்மிந் நஸ்தமிதேபீஷ்மே கௌரவாணும்துரந்தரே। ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி தஸ்மாத்த் வாம்சோதயாம்யஹம்) இதி மஹாபாரதே தர்மஸூநும் ப்ரதிக்ருஷ்ணஃ. இதுக்கர்

த்தம் ( பீஷ்மனித்யாதி. ) ம்ருதே என்னாதே "𑌅𑌸𑍍𑌤𑌮𑌿𑌤𑍇" (அஸ்தமிதே) என்றதுக்கு பாவம் (கண்ணுக்கித்யாதி.) ஜ்ஞாநியை ஆதித்யனாகச் சொல்லலாமோவென்ன ( ஞானமாகியித்யாதி ) திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினாலாம்பாட்டு, "ஈனமாய" இத்யாதி. "ஞாயிறுகி" என்று - ஆதித்யஸஹபாடத்தாலே ஜ்ஞாநமுமாதித்யனென்றபடியாய், அதுதான் ஜ்ஞாதாவுக்கு முபலக்ஷணம். "𑌤𑌮𑍋 𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌤𑍁𑌪𑌾𑌵𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 । 𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌂 𑌚𑍈𑌵 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌭𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌕𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌" (தமோபாஹ்யம்விநஶ்யேத்துபாவகாதித்யஸந்நிதௌ। ஸபாஹ்யாப்யந்தரஞ்சைவவிஷ்ணுபக்தார்க்கஸந்நிதௌ) என்னக்கடவதிறே. நித்யமாய் விபுவான ஜ்ஞாநமல்பமாவானென்னென்ன ( ஸ்வரூபேத்யாதி. ) (தர்மபூதஜ்ஞாநமும் ) என்றவநந்தரம், "இப்படியிருக்க ஜ்ஞாநாங்யல்பீபவிஷ்யந்தி என்பானென்னென்னில்" என்று கூட்டுவது. பரிஹாரஃ (இனியிதுக்கித்யாதி;) அதாவது - கர்மஸம்ஸ்ருஷ்டசேதநனுடைய மநஸ்ஸை யபேக்ஷித்திருக்கையாலே அல்பமாயிருக்குமென்றபடி. இவனே வேணுமென்கிற நிர்ப்பந்தமேதென்ன ( அவன்போனாலித்யாதி. ) அதாவது - மதிப்பன் தலையில்கிடவாமையாலே பரிமாற்றமறுமென்றபடி. இதுக்காப்தசம்வாதம் ( இதுக்கு பட்டரித்யாதி. ) இதுக்கு - இஶ்ஶ்லோகத்துக்குத் தாத்பர்யமாகவென்றபடி. பரிஞை என்று - ஊர்.

செறிந்தபொழிலையுடைய திருவனந்தபுரமானது நன்றான ரக்ஷையையுடைத்துக்கிடிகோளென்று சப்தார்த்தம்.

நல்லதூமம், நல்லமலர்கள் என்று கூட்டுவது. துவளற - குற்றமற. "ஏத்தமாய்ந்தறும்வினைகள்" என்று சாதநமாகவோ வேத்துகிறதென்ன ( இவன்தனித்யாதி. ) அடிக்கென்று - திருவடிகளுக்கென்று சங்கல்பித்து. "தூபநல்விரை" என்றும் "தூமநல்விரைமலர்" என்றும் பாடத்வயமுண்டு.........................*



# பத்தாம்பாட்டு.

மாய்ந்தறும்வினைகடாமேமாதவாவென்னநாளு
மேய்ந்தபொன்மதிளனந்தபுரநகரெந்தைக்கென்று
சாந்தொடுவிளக்கந்தூபந்தாமநாமலர்கணல்ல
வாய்ந்துகொண்டேத்தவல்லாரந்தமில்புகழினாரே.

## ஆறாயிரப்படி.

( மாய்ந்தறும் ) அவன்திருநாமங்களிலே யேதேனுமொரு திருநாமத்தைச்சொல்ல, அடிமைசெய்கைக்கு ப்ரதிபந்தகங்களெல்லாம் தாமே போமென்று சொல்லி முடித்து, திருவனந்தபுரத்திலேபோயெம்பெருமானுக் கடிமைசெய்யும் மஹாத்மாக்களாரோதாம்; என்றுகொண்டு, அவர்களைக் கொண்டாடுகிறார்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற ஸ்வாமிதிருவடிகளிலே ஆராதநரூப கைங்கர்யம்பண்ணுமவர்கள், அநவதிகமாஹாத்ம்ய யுக்தராவாரென்கிறார்.

மாதவாவென்ன - ஸ்ரியஃபதியென்று சொன்னபோதே. வினைகள் - விரோதிகள். தாமே - ஸ்வயமேவ. மாய்ந்தறும் - நசிக்கும். நாளும் - நிரந்தரமாக. எய்ந்த - செறிந்த. பொன்மதிள் - பொன்மதிளையுடைத்தாயிருக்கிற. அனந்தபுரநகர்-திருவனந்தபுரமாகிற நகரத்தில். எந்தைக்கு - ஸ்வாமியானவனுக்கு. என்று - என்று சங்கல்பித்து. நல்ல - நன்மையன. சாந்தொடு - அங்கராகத்தோடே. விளக்கம் - தீபத்தையும். தூபம் - தூபத்தையும். தாமரைமலர்கள் - தாமரைப்பூக்களையும். ஆய்ந்துகொண்டு - பலஸங்கர்த்ருத்வங்களாகிற தூராலும் மயிரும் புழுவும்பட்டாதபடி ஆராய்ந்துகொண்டு. ஏத்தவல்லார் - அங்கீகாரசந்துஷ்ட்ரா யேத்தவல்லவர்கள். அந்தமில் - நிரவதிகமான. புகழினர் - சேஷத்வப்ரதையை யுடையராவர்............*

## ஈடு - பத்தாம்பாட்டு.

திருவனந்தபுரத்திலேபுக் கடிமைசெய்கிறவர்கள் பெருமை பேசநிலமன்றென்கிறார்.

( மாய்ந்தறும்வினைகள்தாமேமாதவாவென்ன ) மாதாபிதாக்கள் பேரைச்சொல்ல அநாதிகாலார்ஜிதமான துஃகங்கள் தாமேபோம். (மாதவாவென்ன - மாய்ந்தறும்வினைகள்) அப்பாவென்ன உச்சிகுளிருங்காணும். (எய்ந்தவித்யாதி) அங்குத்தைக் கீடான பொன்மதிளையுடைய திருவனந்தபுரத்திலே வர்த்திக்கிற வென் ஸ்வாமிக்கென்று புஷ்பாத்யுபகரணங்களைக்கொண் டாஸ்ரயிக்கவல்லார். ( அந்தமில்புகழினரே ) "அமரராவார்" என்கிறவளவன்றிக்கே * விண்ணுளாரிலும் சீரியராவர்.......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( மாய்ந்தறுமித்யாதி. ) " அனந்தபுரநகரெந்தைக்கென்று-ஏத்தவல்லார் அந்தமில்புகழினர் " என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை ( திருவனந்தபுரத்திலேயித்யாதி. )

" மாதவாவென்னநாளும் - வினைகள் - மாய்ந்தறும் " என்றந்வயித்தர்த்தம் ( மாதாபிதாக்களித்யாதி. ) " மாதவாவென்ன - வினைகள் - மாய்ந்தறும் " என்றதிலே ரஸோக்தி ( அப்பாவித்யாதி. ) அப்பாவென்ன உச்சிகுளிருமோ வென்ன; லோகத்தில் வ்யங்க்ய வ்யவஹாரமிங்கே மெய்யாய்த்தென்றபடி.

எய்ந்த - தகுதியான. ஆய்ந்துகொண்டு - ஆராய்ந்துகொண்டு.

மாதவாவென்னநாளும் - வினைகள் - மாய்ந்தறும், எய்ந்தவென்றுதொடங்கி அந்வயம்.........................................................................*

# பதினொன்றாம்பாட்டு.

அந்தமில்புகழனந்தபுரநகராதிதன்னைக்
கொந்தலர்பொழிற்குருகூர்மாறன்சொல்லாயிரத்து
ளைந்திநோடைந்தும்வல்லாரணைவர்போயமருலகிற்
பைந்தொடிமடந்தையர்தம்வேய்மருதோளிணையே.

## ஆறாயிரப்படி.

(அந்தமில்) ப்ரியதமர்களுக்கு ப்ரியதமைகள் போக்யமாமாபோலே, திருநாட்டிலுள்ளார்க்கும் இத்திருவாய்மொழி வல்லார் போக்யமாவரொன்கிறார். ............................................................ *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, பரமபதத்தில் * மதிமுகமடந்தையராலுண்டான ப்ரஹ்மாலங்கார ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

அந்தமில்புகழ் - நிரவதிக குணனைக்கொண்டு. அனந்தபுரநகர் - திருவனந்தபுரத்திலேவர்த்திக்கிற. ஆதிதன்னை - சர்வகாரணபூதனை. கொந்து - பூங்கொத்துக்கள். அலர் - அலருகிற. பொழில் - பொழில்சூழ்ந்த. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. மாறன் - ஆழ்வார். சொல் - அருளிச்செய்த. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும். ஐந்திநோடு – கேவலம் பரோபதேசமான ஐந்திநோடேகூட. ஐந்தும் - தம்மையும் கூட்டிக்கொண் டுபதேசித்த ஐந்தையும். வல்லார்-அப்யஸிக்கவல்லவர்கள். போய் - அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய். அமருலகில் - *அயர்வறுமமரர்களினுடைய லோகமான பரமபதத்திலே. பைந்தொடி - அழகியஹஸ்தாபரணங்களையுடையரான. மடந்தையர்தம்-திவ்யாப்ஸரஸ்ஸுக்களினுடைய. வேய்மரு - வேய்போலே விலக்ஷணமான. தோளிணை - தோள்களாலே செய்யப்படுமதான ப்ரஹ்மாலங்காரத்தை. அணைவர் - அணையப்பெறுவர்.

தொடி - வளை.

இது கலிவிருத்தம்......................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் திருநாட்டிலுள்ளார்க்கு போக்யராவரொன்கிறார்.

( அந்தமிலித்யாதி ) திருவனந்தபுரத்திலே நிரவதிக குணனாய், ஜகத்காரணபூதனானவனை. ஆஸ்ரயிக்கிறவர்களும் அந்தமில்புகழினர்; ஆஸ்ரயணீயனும் அந்தமில்புகழினன்காணும். பரமபதத்தை விட்டுத் திருவனந்தபுரத்திலேவந்து ஆஸ்ரிதர்க்காகக் கண்வளர்ந்தருளுகையாலே புகழுக் கொருமுடிவில்லையாய்த் தவனுக்கு; சம்சாரத்தைவிட்டு உகந்தருளினநிலத்திலே அடிமைசெய்கையாலே புகழுக்கந்தமில்லையாய்த்திவர்களு

க்கு. இவனை யடிமைகொள்ளுகையாலே புகழுக்கெல்லையில்லையாய்த்தவனுக்கு ; அவனுக்கடிமைசெய்கையாலே புகழுக் கந்தமில்லையாய்த்திவர்களுக்கு. சம்சாரத்திலேயிருந்தா லிவனுக்குப் புகழுண்டாகிலாய்த்துப் பரமபதத்திலிருந்தா லவனுக்குப் புகழுண்டாவது - இந்நிலத்தை விட் விட் இவனுக்குப் புகழுண்டாமாபோலே அந்நிலத்தை விட் விட் அவனுக்குப்புகழுண்டாம். இருவர்க்கு மிரண்டுமேலப்யலாபமிறே. (கொந்தலர்பொழில்குருகூரித்யாதி) நித்யவசந்தமான திருநகரியையுடைய வாழ்வாரருளிச்செய்த. ( ஐந்தினோடைந்தும்வல்லார் ) ரத்நங்களை முகமறிந்துகோத்துச் சேர்த்திகளைக் கொண்டாடுமாபோலே, ஐயைந்தாகவாய்த் தருபவிக்கிறது. ( அணைவரித்யாதி ) ஸ்ரீவைகுண்டத்தேறப்போய், "ஶதம் மாலாஹஸ்தா꞉" (ஶதம்மாலாஹஸ்தா꞉) இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே, அங்குத்தை யப்ஸரஸ்ஸுக்களுடைய வாதரத்துக்கு விஷயபூதராவரென்றபடி. ("முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்றத்தோடு "வேய்மருதோளிணை - அணைவர்" என்கிறவித்தோடு வாசியில்லை. " மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே" என்னக்கடவதிறே.) ... ..*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( அந்தமிலித்யாதி. ) "ஐந்தினோடைந்தும்வல்லார்" என்றுதொடங்கி, "தோளிணையே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி. )

" அனந்தபுரநகர் - அந்தமில்புகழ் - ஆதிதன்னை" என்றந்வயித்தர்த்தம் (திருவனந்தபுரத்திலே யித்யாதி.) கீழே ஆஶ்ரயிக்குமவர்களை "அந்தமில்புகழினர்" என்று, இங்கே ஆஶ்ரயணீயனை "அந்தமில்புகழாதி" என்றதுக்கு பாவம் ( ஆஶ்ரயிக்கிறவர்களுமித்யாதி. ) அதெப்படியென்ன ( பரமபதத்தையித்யாதி வாக்யத்வயம். ) கீழ்வாக்யத்வயவிவரணம் ( இவனையடிமையித்யாதி. ) அனந்தபுரநகரிலே வந்தபின்பு "அந்தமில்புகழ்" என்கிறதென், பரமபதத்திலேயிருந்தால் புகழில்லையோவென்ன ( இஸ்ஸம்ஸாரத்திலேயித்யாதி. ) விவரணம் (இந்நிலத்தையித்யாதி.) இத்தால் பலிதம் ( இருவர்க்குமித்யாதி. )

கொந்தலர் - கொத்துக்கொத்தாக வலருகிற. பத்தென்னுதே, "ஐந்திேனாடைந்தும்" என்றதுக்குபாவம் ( ரத்நங்களையித்யாதி. )

"அவர்கள்தோளோடேயணைவர்" என்கிறதுக்கு பாவமேதென்ன ( ஶதம் மாலேத்யாதி ) "தம்வஞ்சஶதாந்யப்ஸரஸாம்ப்ரதிதாவந்தி। ஶதம்மாலா ஹஸ்தா꞉, ஶதமஞ்ஜநஹஸ்தா꞉, ஶதம்சூர்ணஹஸ்தா꞉, ஶதம்வாஸோஹஸ்தா꞉, ஶதம்பர்ணஹஸ்தா꞉" ( தம்பஞ்சஶதாந்யப்ஸரஸாம்ப்ரதிதாவந்தி। ஶதம் மாலாஹஸ்தா꞉, ஶதமஞ்ஜநஹஸ்தா꞉, ஶதம்சூர்ணஹஸ்தா꞉, ஶதம்வாஸோஹஸ்தா꞉, ஶதம்பர்ணஹஸ்தா꞉ ) இத்யாதி, கௌஷீதக்யுபநிஷதி. (என்றபடி.) என்கையாலே - இதுவே தாத்பர்யமென்றுகருத்து. பைந்தொடி - அழகிய ஹஸ்தாபரணங்களையுடைய. தொடி - முன்கை வளை. வேய்மருதோளிணை - மூங்கிலோடொத்த தோளிணையோடே, அணைவர் - ஸம்ஶ்லேஷிக்கப் பெறுவரென்று சப்தார்த்தம்.

அந்தமில்புகழென்றுதொடங்கி, ஐந்தினோடைந்தும்வல்லார் - அமருலகில் - போய் - பைந்தொடிமடந்தையர்தம்வேய்மருதோளிணை - அணைவர் இத்யந்வய:....*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(கெடுமிடராயவெல்லாம்.)

உக்த்வா ஸ்ரீகேஶவத்வாத் அத்புதசரித ககாதீஶகேதுத்வயோகாத், ஆஸந்நத்வாத், பதித்வாத், அமரபரிஷதாமாதிபூதத்வபூம்நா, வ்யாபாரைஸ் ஸ்ருஷ்டிமுக்யைரபி ச புஜகஶாயித்வமுக்யைஶ்சரித்ரை:, ஸ்வக்லேஶாபஹர்த்தா பவதி ஸுமநஸாமித்யவாதீந்முநீந்த்ர:॥ (௧௦௫)

(ஸ்ரீகேஶவத்வ) கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன - விரோதிநிரஸநசீலனாகையாலும்; (அத்புதசரித) அனந்தபுரநகர்மாயன்நாமம் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை யுடையனாகையாலும்; (ககாதீஶகேதுத்வயோகாத்) ஊரும்புட்கொடியுமஃதே - பெரியதிருவடியை த்வஜமாகவுடையனாகையாலும்; (ஆஸந்நத்வாத்) வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுர மித்யாதி - அணித்தான திருவனந்தபுரத்திலே வர்த்திக்கையாலும்; (பதித்வாத்) அண்ணலார்கமலபாதம் - எல்லார்க்கும் ஸ்வாமியாகையாலும்; (அமரபரிஷதாமாதிபூதத்வபூம்நா) அமரராய்த்திரிகின்றார்கட் காதிசேரனந்தபுரத்து - ப்ரஹ்மாதிகளான தேவர்களுக்கும் நிர்வாஹகனாகையாலும்; (வ்யாபாரைஸ்ஸ்ருஷ்டிமுக்யை:) கிடைத்தகோவிந்தனோ யுலகுயிர்தேவுமற்றும்படைத்த - சதுர்வித ஜந்துஜாதத்தோடேகூட விந்தலோகங்களையெல்லாமுண்டாக்கி ரக்ஷிக்குமவனாகையாலும்; (அபிசபுஜகஶாயித்வமுக்யைஶ்சரித்ரை:), படமுடையரவில் பள்ளிபயின்றவன் - தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகஸித பணங்களையுடையனான திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலும்; முக்யசப்தத்தாலே - வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தாமே, மாதவா வென்ன என்று மேலிரண்டுபாட்டில் சொல்லப்படுகிற வாமநத்வ மாதவத்வங்கள் சங்க்ருஹீதங்கள்; இப்படிகளாலே, திருவனந்தபுரத் தெம்பெருமான் தன்னையாஶ்ரயித்த விச்சேதநருக்குப் போம்வழியில்வரும் க்லேஶங்களைப் போக்காநிற்கிறானென்று "கெடுமிடராய" என்கிற தஶகத்திலே காரிஸூநு அருளிச்செய்தாரென்கிறார்....()

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கெடுமிடர்வைகுந்தத்தைக்கிட்டினப்போல்
தட்முடையனந்தபுரந்தன்னில் - படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக்காதலித்தான்மாறனுயர்
விண்டனிலுள்ளோர்வியப்பவே. (௯௨)

(கெடுமிடர்வைகுந்தத்தை) இதில், பரமபதத்தில்செய்யுமடிமையைத் திருவனந்தபுரத்திலே செய்யப் பாரிக்கிற வாழ்வார் ஸ்ரீஸூக்தியை யநுவதித் தருளிச்செ

ய்கிறார். எங்ஙனேயென்னில்; குறைவறப் பரமபதத்திலே போனால் * வானிளவரசானவைகுந்தக்குட்டனுக்குச் செய்யக்கடவ * வழுவிலாவடிமைகளை, நித்யசூரிகளில் தலைவரான ஸ்ரீசேநாபதியாழ்வா னெடுத்துக் கைநீட்டும்படி நிரதிசயபோக்யமான திருவனந்தபுரத்திலே திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளுகிற பரமப்ராப்யபூதரான ஸ்ரீபத்மநாபப்பெருமாள் திருவடிகளிலே அநுகூலஜநங்களும் தாமுமாய்ப் போய்ச் செய்யவேணுமென்று மநோரதிக்கிற *கெடுமிடரிலர்த்தத்தை "கெடுமிடர்வைகுந்தத்தை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

( கெடுமிடர்வைகுந்தத்தை ) கைங்கர்யசித்தியாலே நிவ்ருத்த து:காம்படி பண்ணவற்றான ஸ்ரீவைகுண்டத்தை. அன்றிக்கே, து:கரஹிதமான ஸ்ரீவைகுண்டத்தையென்னுதல். ( கிட்டினாப்போல் ) அத்தை ப்ராபித் தடிமைசெய்யப் பெற்றாப் போலே. ( தடமுடையனந்தபுரந்தன்னில் படவரவிற்கண்டுயில்மாற் காட்செய்யக் காதலித்தான் ) "ஹாவிஹாவுவிஹவுஹ" ( ஏபிஸ்சஸஹிவை: ) இத்யாதியால் பரதாழ்வான் பாரித்தாப்போலே, * தடமுடையனந்தபுரநகர்தன்னில் * படமுடையரவில்பள்ளிபயின்ற சர்வேஸ்வரனுக் கடிமைசெய்யவபேக்ஷித்தார். அதாவது - "பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம்செய்தவாறே" என்றும், "சாந்தொடு விளக்கம் தூபம்தாமரைமலர்கணல்ல ஆய்ந்துகொண்டேத்தவல்லாரந்தமில்புகழினாரே" என்றும், "அமரராய்த்திரிகின்றார்கட்கு" என்றுதொடங்கி "நாமும்போய்நணுகவேண்டும்" என்றும், "படமுடையரவில் பள்ளிபயின்றவன்பாதம்காண நடமினோநமர்களுள்ளீர்" என்றும், தாமும் தம் திருவுள்ளத்தோடொத்த ஸ்ரீவைஷ்ணவர்களுங் கூட அடிமைசெய்ய மநோரதித்தபடி யென்கை. ( படவரவிற்கண்டுயில்மாற் காட்செய்யக்காதலித்தான் மாறனுயர்விண்டனிலுள்ளோர்வியப்பவே ) சர்வோத்தரமான பரமாகாசத்திலுள்ளாராய் * கோயில்கொள்தெய்வங்களான திருவடி திருவனந்தாழ்வான் ஸ்ரீசேநாபதியாழ்வான் தொடக்கமானவர்கள், "நாம்தெளிவிசும்புதிருநாட்டிலே யிருந்துசெய்யுமடிமையை இவர் * இருள்தருமாஞாலத்திலே யிருந்து பாரிப்பதே!" என்று விஸ்மயப்படும்படி, சேஷசாயியாய் ஸ்ரிய:பதியான சர்வேஸ்வரனுக்கு சர்வவிதகைங்கர்யங்களையும் செய்ய வாதரித்தாராழ்வார். "இவருமொருவரோ!" என்று இவர்க் கீடுபாடாயிருக்கிறது.................................(சுஉ)

பத்தாம்பத்தில் - இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.



ஆக, திருவாய்மொழி - சுஉ.—பாட்டு - க0கச.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### வேய்மருதோள் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(வேய்மருதோள்) இப்படியெம்பெருமானோடேகலந்து பரிமாறிச் செல்லாநிற்கச்செய்தே, இப்ப்ரக்ருதியிலே தாமிருந்தவிருப்பைக்கண்டு, "இப்ப்ரக்ருதிஸம்பந்தம் காரணமாக வெம்பெருமான்விடிலோ" என்றுள்ளவதிசங்கையாலே வ்யஸநராகிறார். வண்டுவரைப்பெருமாளோடே கலந்து பரிமாறச்செய்தே பசுமேய்க்கப்போங்காலம் ப்ராப்தமானவாறே "இவனினிப்பசுமேய்க்கப்போகிலோ" என்றுள்ள வதிசங்கையினாலே அக்கோபிமார் வ்யஸநிகளானப்போலே வ்யஸநராய், அவர்களுடைய பாசுரத்தாலே யலற்றுகிறார். திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகள், வண்டுவரைப்பெருமாளோடேகூட வெழுந்தருளியிருக்கச்செய்தே அவன்பசுமேய்க்கப்போங்காலம் வருமளவில் அவன்போனானாகக்கொண்டு, பிரிந்தார்படும் வ்யஸநமெல்லாம்பட்டு, வ்யஸநத்தையும் பிரிந்தவவன் கொடுமையையும் தோழிமாருக்குச் சொல்லுமாபோலே அவன்றன்னைக்குறித்துச் சொல்லுகிறார்கள் ..................*

### பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், கீழே திருவனந்தபுரத்திலே யடிமைசெய்யப்பாரித்தவர், அவிளம்பேந கிட்டப்பெறாமையாலே, அவனுடைய போக்யதையும் ப்ராப்யபாவமும் அடிமைகொள்ளப்பாரித்திருக்கிறபடியும் புத்திஸ்த்தமாம்படி ஹ்ருதய ஸந்நிஹிதனா யிருக்கச்செய்தேயும், சீக்ரப்ராப்தியி லிச்சையாலே த்வரிக்கும்படியான சௌபாக்யாதிசயத்தை யுடையனாகையாலே, அவனுடைய புண்டரீகாக்ஷத்வத்தையும், ஆஶ்ரிதபவ்யத்வத்தையும், அபிரூபத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும், அர்த்தநீய ஸம்ஶ்லேஷத்வத்தையும், அகாதஸ்வபாவத்தையும், ரமணீய சௌலப்யத்வத்தையும், ஆகர்ஷகாவயவத்வத்தையும், அஸாதாரணநாயகத்வத்தையும், ஆஶ்ரிதஜநபோக்யத்வத்தையு மநுபவித்து, விளம்பம் பொறாமையாலே விஶ்லேஷத்தை அதிசங்கித்து, ஏவம்பூதனான நீயென்னை யகலாதொழியவேணுமென்று அபேக்ஷித்து, தமக்குப்பிறந்தவார்த்தியை யவன் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்த

ப்ரகாரத்தை; க்ருஷ்ணனோடே சம்ஸ்லேஷித்து ப்ரபாதசமயத்திலே யவனுடைய பிரிவை சங்கித்து அஞ்சினளொருகோபிகை; "ஸந்நிதியில் பாதகங்கள் நலிவுசெய்யாநிற்கும், என்னை நீ ஆஸ்வஸிப்பித்துக்கொண்டிருக்கவும்வேணும், போனவிடத்திலே ஆசுரப்ரக்ருதிகள்வரில் என்னுமோ என்றஞ்சாநின்றேன்" என்று, திருவாய்ப்பாடியில் பெண்களெல்லார்க்குமாகச் சமைந்தவனுடைய போக்கைவிலக்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்... ................... ..........................................*

ஈ டு.

திருவனந்தபுரத்திலேபுக்குப் பாரித்தபடியே அடிமைசெய்யப் பெறாமையாலே, அதிசங்கைபண்ணவேண்டும்படியாய்வந்து விழுந்தது.

ஸ்ரீவைஷ்ணவர்களும் தாமுமா யடிமைசெய்யவேணுமென்று பாரித்தார்; பாரித்தபடியே அத்தேசத்திலேபோய்ப் புக்கடிமைசெய்யப்பெற்றிலர். அத்தேசத்திலே அப்போதேபோய்ப் புகப்பெறாமையாலும், பாரித்தபடி யடிமைசெய்யப் பெறாமையாலும், நெடுநாள் பிரிந்துபோந்த வாசனையாலும் – அநாதியாய்வருகிற அசித்ஸம்சர்க்கத்தை யநுசந்தித்து அஞ்சினவச்சத்தாலும், ஈஸ்வர ஸ்வாதந்த்ர்யத்தை யநுசந்தித் தஞ்சினபடியாலும், அதாவது-சிசுபாலனுக்குத் தன்னைக்கொடுத்து ஸ்ரீபாதாழ்வானுக்கு மறுத்துப்போன ஸ்வாதந்த்ர்யமிறே, இனி சர்வேஸ்வரன்தானேவந்து விஷயீகரிக்கைக்கிடான பக்தி தமக்கில்லையென்றிருக்கையாலும், ("இன்னமும் ப்ரக்ருதியிலேவைக்கில் செய்வதென்" என்னும்பயத்தாலே அவஸந்நராய்) தமக்குப்பிறந்த தசாவிசேஷத்தை யொருபிராட்டிபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

பயவ்ருத்திக்குடலான விதுதானேயிறே யிப்போதிவர்க்கு பயஹேதுவாகிறது-இப்போதே அத்தேசத்திலேபோய்ப் புகப்பெற்றிலோமென்றிருக்கவேண்டா, அவனையநுசந்தித்தால் " காலாழும் நெஞ்சழியும்" என்று பக்திபாரவஸ்யத்தாலே இப்போதடியிடமாட்டா தொழிகிறாகையாலே; அடிமைசெய்யப்பெற்றிலோமென் றஞ்சவேண்டா, * புகழுநல்லொருவனிற்படியே இருந்தவிடத்தேயிருந்து ஏதேனுமாகச்சொன்னவற்றையே தனக்கடிமையாகக்கொள்ளும் ஸ்வபாவத்தாலே, இன்று நினைத்தவற்றையும் செய்தவற்றையுமெல்லாம் தனக்கடிமையாக நினைத்திருக்குமவனிறேயவன்; (இனி) தமப்பன்பகையாக அவனிலு மிவனண்ணியனென்று வரநின்ற ப்ரஹ்லாதனிறே முடிவிலேவந் தெதிரிட்டான் ஆக ப்ராந்தனுக்குப்பிறந்த தெளிவுபோலே அசித்ஸம்ஸ்ருஷ்டனுக்குப் பிறக்கும் ஜ்ஞானத்தை விஸ்வஸிக்கவொண்ணாதென்றிறே இவர்தாம் ப்ரக்ருதி சம்பந்தத்தைநினைத்து "தேறேலென்னை" என்றஞ்சிற்றும், அங்ஙனஞ்சவேண்டா, * முடியானேயிற் கரணங்களையுடையவராகையாலே; அவன் ஸ்வாதந்த்ர்யத்தைநினைத்தஞ்சவேண்டா, "ஸவ௱வாவெ஭்யொ௱ மொக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்று விரோதி

யைத்துண்டித்துக்கொண்டுபோகைக்கு முடலாயிருக்கையாலே; பக்தித மக்கில்லையென்றிருக்கவேண்டா, ப்ரபத்தியை யுபாயமாகப்பற்றினவராகையாலே. இனி "கொவஜநஸ்மரந" (கோபஜநம்ஸ்மரந்) என்கிறபடியே இத்தை ஸ்மரியாதபடியான சாக்ஷாத்காரமில்லாமல் படுத்துகிறபடியிறேயிது.

ப்ரத்யக்ஷமும் அகிஞ்சித்கரமாய், கூடவிருக்கச்செய்தே " பிரிந்தான் " என்று ப்ரமிக்கும்படி பிரிவால்வந்த வாஸனை மேற்கொள்ளுகிறதிறே - யோக்யதைகிடந்து, படுத்துகிறபாடிறே. " மயர்வறமதிநலமருளினன் " என்று - பகவத்ப்ரஸாதலப்தமாய், பரபக்திரூபமாய், ருசிகார்யமாயிருக்கிற விருட்சியிருக்கிறபடியிறேயிது. இனி, ஈஸ்வரனுக்குக்கால் நடையாடாததொரு தேசத்திலே யிவளைவைத்து பரிஹரிக்கலாமத்தனை. கலந்து நெடுநாள்பிரிந்துபோந்தா ளொருபிராட்டியாய், அவ்வாஸனையாலே, க்ருஷ்ணன்கூடவிருக்கச்செய்தேயும், " இவன்பண்டுபிரிந்துபோந்த ப்ரபாதகாலமும்வந்து அக்காலத்துக்கடைத்தகாற்றுக்களடிக்கையாலும், குயில்கள்கூவுகையாலும், மயில்களாலிக்கையாலும், காடெங்குமொக்கக் கன்றுகளும் பசுக்களும் பரக்கையாலும், இக்காலத்திலவன் போகைதவிரான்; பசுக்களினுடைய ரக்ஷணமொருதலையானல் அவற்றைவிட்டு நம்மோடிருப்பானொருவனல்லன்; ஆன்பின்பு, அவன்போகுன்" என்று, கூடவிருக்கச்செய்தேயும் அவன்பிரிவைநிஶ்சயித்து, ஒரு * இன்னுயிர்ச்சேவல் * மல்லிகைகமழ்தென்றல் தொடக்கமானவற்றில் அவன ஸந்நிதியில் பட்டக்லேசத்தையடைய அவன்கண்முகப்பேபட்டு, சர்வசக்தியான வவன்றனக்கும் பரிஹரிக்கவொண்ணாதபடியாய்த்து இவ்வாபத்து. அதாவது-போனாய் வருகிறானல்லன், போரநினைத்தானாய்த் தவிருகிறானல்லனே. இப்படிநோவுபட்டு, " நீசர்வதாபசுமேய்க்கப்போகைதவிராய், உன்போக்கெனக்கநபிமதம், ஆகையாலே உன்னுடையபோக்கை விலக்கவேணுமென்று நினையாநின்றேன், இதுக்கு நாநீர் வருகிறதில்லை, அதுக்குப்பரிஹாரமாக உன்கையை யென்தலையிலேவைக்கவேணும், நீபசுமேய்க்கப்போகாதொழியவேணும், ' சப்ரமாதமானகாட்டில் நீபசுமேய்க்கப்போனால் அங்குள்ள அசுரராக்ஷஸாதிகளாலே யென்புகுருகிறதோ ' என்றஞ்சாநின்றேன். " இனி " மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயணஃ " ( மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயணஃ ) என்று அவன் சர்வவிதபந்துவுமா யிருக்குமாபோலே, இத்தலைக்கும் சம்பந்தஜ்ஞாநம்பிறந்தால் எல்லாப்பரிவுகளுமுண்டாயிருக்குமிறே; " யதாயதாஹி " (யதாயதாஹி) என்கிறபடியே. ஆனபின்பு நீபோகில் நானுளனாகமாட்டேனென்று இப்படி நோவுபட, அவனு மித்தையடைய வநுசந்தித்து, " நான்போகிறேனல்லேன் " என்று, தான் போகாமையை யிவள்நெஞ்சிலேபடுத்தி தரிப்பிக்க தரித்ததா

ய்த் தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழியில். இத்தால் - தாதர்த்யத்தி லுடைய வெல்லையிருக்கிறபடியிறே. * எம்மாவீட்டிலே " தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே " என்று கிஷ்கர்ஷித்ததொன்றுண்டிறே; அத்தை யழிக்கிறதாய்த்திங்கு. என்னைக்கொள்ளவேணுமென்றிறே அங்குச்சொ ல்லிற்று; என்னோடு கலக்கவுமாம், வேறே சிலரோடே கலக்கவுமாம், அ ங்குத்தைக்குறைதீருமத்தனை வேண்டுவதென்கிறதிங்கு. அதுதன்னில் எ னக்கு என்றவிடம், புருஷார்த்தமாகைக்காகச்சொன்ன வித்தனையிறே. அது அசித்வ்யாவ்ருத்திக்குடலாமித்தனை. இவன்று னெனக்கென்னுதவ ன்று புருஷார்த்தமாகாது, அவன்றான் விரும்பி ப்ரவர்த்திப்பதும் செய் யான் .........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

வேய்மருதோளிணை ப்ரவேசே, கீழே திருவனந்தபுரத்தை ப்ராப்யமாக்வத் யவஸித்து ஸ்ரீவைஷ்ணவர்களும் தாமுமா யடிமைசெய்யப்பாரித்தவர், இதிலே நோகப்படுவானென்னென்கிற சங்கையிலே ஸங்க்ரஹேணஸங்கதி (திருவனந்தபுரத் திலேயித்யாதி.)

விஸ்தரஸங்கதி (ஸ்ரீவைஷ்ணவர்களுமித்யாதி) " காலாழும்நெஞ்சழியும் " என்னுமவராகையாலே (அடிமைசெய்யப்பெற்றிலர்) என்றபடி. நெடுநாள் பிரிந் துபோந்த வாஸநையாவது - * யாதானும்பற்றி நீங்கித்திரிந்தவாஸநை. ஏதத்விவர ணம் ( அநாதியாயித்யாதி ) " ஸ்வாதந்த்ர்யத்தை யநுசந்தித் தஞ்சினபடியாலும் " என்று ஸ்வாதந்த்ர்யத்துக்கஞ்ச ப்ரஸக்தியேதென்ன (அதாவதித்யாதி.)

கீழ்ச்சொன்னவையெல்லாம் பயநிவ்ருத்திக்கு ஹேதுவன்றோவென்ன (பய நிவ்ருத்திக்கித்யாதி) கீழ்ச்சொன்ன வஞ்சும் பயநிவ்ருத்தி ஹேதுவானமையைக்கா ட்டுகிறார் (இப்போதேயித்யாதி) அவனப்படிகொள்ளும் ஸ்வபாவனோவென்ன (இ ன்று நினைத்தவற்றையுமித்யாதி) இவ்விடத்திலே, " நாராயணே கநிஷ்டஸ்ய யாயா வேஷா ததநுபுரும் । யோயோஜல்ப ஸஜபஸ்தத்ய நிரீக்ஷணம் " ( நாராயணைகநிஷ்டஸ்யயாயாசேஷ்டாததர்சநம் । யோயோஜல்பஸ்ஸஜபஸ்தத்த்யாநம்யந்நிரீக்ஷணம் ) என்றதநுசந்தேயம். அசித்ஸம்ஸர்க்கத்தை நினைத் தால் பயப்ரஸக்தியேதென்ன (இனித்தமப்பனித்யாதி) ஆனால் ஜ்ஞாநம்பிறந்ததே தாய்த்தென்ன (ஆக ப்ராந்தனுக்கித்யாதி) இந்தவசித்ஸம்ஸர்க்கம் பயநிவ்ருத்திக்கு டலானபடியென்னென்ன (அங்ஙனஞ்சவேண்டாவித்யாதி) இத்தால்-ப்ரஹ்லாதாழ் வானைப்போலே கரணங்கள் ப்ராக்ருதபோகங்களிலே மண்டியிருக்கையன்றிக்கே, தமக்கு பகவத்விஷயத்தில் மண்டினகரணங்களாகையாலே யஞ்சவேண்டாவென் றபடி. " நெடுநாள்பிரிந்துபோந்த வாசனையாலும் " என்றது - ப்ரத்யேகஹேதுவா ய், பயஹேதுவாகிற தென்னவுமாம்; அப்போது இந்தத்ருதீயஹேதுவுக்கு பயநிவ் ருத்திஹேதுத்வம் சொல்லாவிட்டாலும், * முடியானேயிற்கரணங்களை யுடையவ ராகையாலே ப்ரக்ருதிசம்பந்தத்தைநினைத் தஞ்சவேண்டாவென்றுசொன்ன ப்ரக்ரு திசம்பந்தத்தால்வந்தபிரிவையும் நினைத்தஞ்சவேண்டாவென்னுமதுக்கு முபலக்ஷ ணமென்று கண்டுகொள்வது. ஸ்வாதந்த்ர்யம் பயநிவ்ருத்திஹேதுவாம்படியை யரு ளிச்செய்கிறார் (அவன் ஸ்வாதந்த்ர்யத்தையித்யாதி) பக்தியில்லையென்னுமது பய

ஹேதுவன்றோவென்ன (பக்திதமக்கித்யாதி) ஆறு லெத்தாலே யதிசங்கைபண்ணு கிறரென்ன (இனிநோபஜநமித்யாதி) பயஹேதுக்களானபக்ஷத்திலே பரிஹாரமஞ் சுக்குச்சொல்லி, "நெடுநாள் பிரிந்துபோந்த வாசனையாலும்" என்றதுக்கு பரிஹார ம் சொல்லாமையாலே, (சாக்ஷாத்காரமில்லாமல் படுத்துகிறபாடிறேயிது) என்றது- (சாக்ஷாத்காரமில்லாமல் - நெடுநாள் பிரிந்துபோந்தவாஸநை - படுத்துகிறபாடிறே யிது) என்று கூட்டிக்கொள்வது என்றும் சொல்லுவர்கள். அதாவது - இப்போது * மூடியானேயிற் கரணங்களையுடையராய் சாக்ஷாத்காரமுண்டாயிருக்கையாலே ய ஞ்சவேண்டாவென்று கருத்து.

சாக்ஷாத்காரமில்லையென்கிறதென், * கெடுமிடரிலே ப்ரத்யக்ஷ சமாநாகார மான மாநசாநுசந்தாநத்தைப் பண்ணிக்கொடுக்கவில்லையோவென்ன (ப்ரத்யக்ஷமு மித்யாதி) என்னுதல்; அன்றிக்கே, இவ்வாக்யமந்யாபதேசத்திலேயாய், ஒருகோபி கை, க்ருஷ்ணன் ப்ராதஃகாலத்திலே கூடவிருக்கச்செய்தே பசுமேய்க்கப்போனுனாக வதிசங்கைபண்ணுகிறளென்று விவக்ஷித்து, கூடவிருக்கச்செய்தே போனுனாக வதி சங்கைபண்ணக்கூடுமோமென்ன (ப்ரத்யக்ஷமுமித்யாதி) என்னவுமாம். "மேற்கொ ள்ளுகிறதிறே" என்றத்தை விவரிக்கிறர் (யோக்யதையித்யாதி) யோக்யதையாவ து - விஸ்லேஷஹேதுவான சரீரபரிக்ரஹம். அதிசங்கைபண்ணுகிறது ப்ராந்திகார் யமன்றோ, அது த்யாஜ்யமன்றோவென்ன (மயர்வறவித்யாதி) இவ்வதிசங்கை யிவ ர்க்கு நிவ்ருத்தமாவதெப்போதென்ன (இனி ஈஸ்வரனித்யாதி.)

"ஒருபிராட்டிபாசுரத்தாலே பேசுகிறர்" என்றத்தை விஸ்தரேண வருளிச் செய்கிறர் (கலந்தித்யாதி) "நீகண்ணு" என்றத்தைப்பற்ற (கூடவிருக்கச்செய்தேயு மென்றது) "அவைமேய்க்கப்போதி" "பசுநிரைமேய்ப்பொழிப்பான்" இத்யாதியா லே (ப்ரபாதகாலம்) என்றது ஸ்புடம். "வாடைதூவ" என்றத்தைப்பற்ற (அக்கால த்துக்கித்யாதி) "இனநிரைமேய்க்க" என்றத்தைப்பற்ற (காடெங்குமொக்கவித்யா தி) " அவைமேய்க்கப்போதி " என்றத்தைப்பற்ற (அவன்போகைதவிரானென்றது) தவிரானென்று நிஸ்சயிக்கைக்கு நியாமகமேதென்ன (பசுக்களினுடைய வித்யாதி) ஒருதலையானல்-தனக்கே பரமானுலென்றபடி. அதெப்படியென்ன (அதாவது போ னுனுயித்யாதி) "வெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேம்" என்றத்தைப்பற்ற (எனக்கந பிமதமென்றது) " அணிமிகுதாமரைக்கையை " இத்யாதியையும், " வீவின்பசுநி ரைமேய்க்கப்போக்கு " என்றத்தையும், " அசுரர்கள் தலைப்பெய்யில்யவங்கொல் " என்றத்தையும்பற்ற (உன்கையையென்றுதொடங்கி, அஞ்சாநின்றேனென்னுமளவு ம்.) "அஞ்சனவண்ணனே" என்கிறதிருமொழிப்படியே " என்செயப்பிள்ளையைப் போக்கினேனெல்லேபாவம் " என்று தாயரன்றோ பரியக்கடவள், தாய்க்குண்டா னபரிவு இவர்க்குண்டாகக்கூடுமோவென்று ஸ்வாபதேசத்திலும், மஹிஷியானவ ளுக்கு மாதாவுக்குள்ள பரிவுண்டாகக்கூடுமோவென்று அந்யாபதேசத்திலும் வருகி ற விரண்டுசங்கைக்கும் பரிஹாரமருளிச்செய்கிறர் (இனிமாதாபிதேத்யாதி வாக்ய த்வயத்தாலே) அதாவது-அவனுடைய சர்வவித பாந்தவத்துக்குள்ளே புத்ரத்வமு மொருபாந்தவமாகையாலே புத்ரனிடத்தில் தாய்க்குள்ள பரிவீஸ்வரனிடத்திலே யிவர்க்கு நடக்குமென்று - (மாதாபிதா) இத்யாதி வாக்யத்வயத்துக்குபாவம். மஹி ஷியான ஸ்ரீகௌசலையார்க்கு சக்ரவர்த்தியிடத்திலே மாத்ருத்வப்ரயுக்தமான பரிவு நடந்தாப்போலே, இவளுக்கும் க்ருஷ்ணனிடத்திலே மாத்ருத்வப்ரயுக்தமான பரிவு நடக்குமென்று-(யதாயதாஹி) இத்யாதிவாக்யத்துக்குபாவம். (மாதாபிதேத்யாதி) சுபாலோபநிஷதி. " யதாயதாஹிகௌஸல்ய்ரா ஒாஸீவ்வு ஷவீவவ । ஸாரு்ரா

𑌭𑌗𑌿𑌨𑍀𑌵𑌚𑍍𑌚 𑌮𑌾𑌤𑍃𑌵𑌚𑍍𑌚𑍋𑌪𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇" (யதாயதாஹிகௌஸல்யாதாஸீவச்சஸகீவச । பார்யாவத்பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்ட்டதே) இத்யயோத்யாகாண்டே கைகேயீம் ப்ரதிதஶரத2. "செங்கனிவாய்" என்றத்தைப்பற்ற (தரிப்பிக்கதரித்ததாயித்யாதி.)

இத்திருவாய்மொழியால் ஆழ்வாருடைய வத்யந்த பாரதந்த்ர்யம் ப்ரகாசிக்கிறதென்கிறார் (இத்தாலித்யாதி) இத்தாலென்றது - இத்திருவாய்மொழியாலென்றபடி. தாதர்த்யத்தினுடைய வெல்லையாவது - அத்தலைக்கேயுறுப்பாக விநியோகப்படுகை. "உன்றன்திருவுள்ள மிடர்கெடுந்தோறும்" இத்யாதியைப்பற்ற (தாதர்த்யத்தினுடைய வெல்லையிருக்கிறபடியென்றது) இதுதான் * எம்மாவீட்டிலும் சொல்லிற்றில்லையோ, அதிலிதுக்கு வாசியேதென்ன (எம்மாவீட்டிலே யித்யாதிவாக்யத்வயம்) அதாவது - அங்குவிநியோகப்பட்டது தமக்குறுப்பாக விநியோகப்பட்டாரென்னும்படி, அதிலுமிது சாராம்ஶமாயிருக்கு மென்றபடி. அதெப்படியென்ன (என்னைக் கொள்ளவேணுமித்யாதி) கீழே * எம்மாவீட்டிலு மிதுக்காதிக்யமுண்டென் றருளிச்செய்து, இரண்டுக்கும் சாம்யம் விவக்ஷித்து, ஆனாலங்கே எனக்கு என்று சொல்லுவானேனென்ன (அதுதன்னிலித்யாதி) புருஷார்த்தமாகைக்காகவென்றது - ஸ்வபோக்த்ருத்வ கந்தரஹிதமாக வவன்கொடுக்கிறபேறு ரஸமாகைக்காகவென்றபடி. அவ்வளவுமன்றிக்கே, சேதநனுடையவாசியைப்பற்ற எனக்கு என்கிறதென்று ஹேத்வந்தரம் (அது அசித்வ்யாவ்ருத்திக்கித்யாதி) இவ்விரண்டர்த்தத்தையும் முகபேதேந விவரிக்கிறார் (இவன்று னித்யாதிவாக்யத்வயத்தாலே.)....................*

---

## மூன்றாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

வேய்மருதோளிணைமெலியுமாலோ மெலிவுமென்றனிமையும்யாதுநோக்
காமருகுயில்களுங்கூவுமாலோகணமயிலவைகலந்தாலுமாலோ [காக்
வாமருவினநிரைமேய்க்கநீபோக்கொருபகலாயிரமூழியாலோ
தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோதகவிலைதகவிலையேநீகண்ணா.

### ஆறாயிரப்படி.

உன்னைப் பிரிகையாலே யென்னுடைய தோள்கள் மெலியா நின்றன, இவற்றின்மெலிவு மென்தனிமையு மொன்றும் பாராதே இக்குயில்களானவை உன்றிருநாமங்களைக் கூவாநின்றன, அதின்மேலே மயில்களும் கலந்தாலாநின்றன, ஒருபகல் பிரியுமளவில் இங்ஙனே படவேண்டுமோவென்னில்; நீ பசுமேய்க்கப் போனவாறே அவ்வொருபகற்று ணாயிரமூழியாகாநிற்கும், அதின்மேலே நீயுமுன்னுடைய கண்களாலே யென்னை யீராநின்றாய், உன்னைப் பிரிந்து நானிங்ஙனே படாநிற்கச்செய்தே எங்களைப்பிரிந்து நீயிருக்கவல்லையாவதே!, நீ யிருந்த லோகத்திலு மில்லையாகாதே க்ருபை!, லோகத்திலே சிறிது க்ருபையுண்டாகிலு முன்பக்கலொரு க்ருபையில்லையென்கிறாள். ...................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நீ பிரியப்புகுகிருயென்கிற நினைவாலே குயில்தொடக்கமானவற்ருலே யிடுபெடுகிற வென்னை, உன் கண்ணழகைக்கொண்டு நலியாநின்ருயென்கிருள்.

விரஹம் பொருமையாலே, வேய்மரு - வேய்போலேகுழலோடின. தோள்-தோள்கள். இணை - இரண்டும். மெலியும் - புறவாயும் காணலாம்படி மெலியாநின்றன. அவ்வளவன்றியே, என்மெலிவும் - ஆஶ்ரயமான வென்சரீரத்தின் மெலிவும். என்தனிமையும் - பிரிவாற்ருத வென்தனிமையும். யாதும் - ஒன்றையும். நோக்கா-பாராதே. காமரு - தர்ஶநீயமான. குயில்களும் - குயில்களானவை. "தனிமைபட்டாரை நலியக்கடவோமல்லோம்" என்றிராதே, கூவும் - தம்மில் தாம் சேர்த்திக்காகக் கூவாநின்றன. கணமயிலவை - திரளானமயில்களானவை. கலந்து - தம்மில்தாம்கலந்து. ஆலும் - நடியாநின்றன. ஆ - பசுக்களானவை. மருவு - செறிந்து. இனம் - இனமொத்திருக்கிற. நிரை - திரள்களை. மேய்க்க - மேய்க்கைக்காக. நீ - நீ. போக்கு - லீலாபரனுய்க்கொண்டு போகிற. ஒருபகல் - ஒருபகல். ஆயிரமூழி - "த்ருடியுகாயதே" (த்ருடியுகாயதே) என்கிறபடியே ஸஹஸ்ரயுகமாகாநின்றது. அதுக்குமேலே குயில்கள் மயில்கள் உன்போக்குத்தான் நன்ரும்படி, தாமரை - தாமரைபோலே தர்ஶநீயமான. கண்கள்கொண்டு - கண்களைக்கொண்டு. ஈர்தி - ஈராநின்ருய். கண்ணு - பெண்பிறந்தாரை * நெஞ்சு துக்கஞ்செய்யப்போந்த க்ருஷ்ணனே. நீ தகவிலை - நீ ஸ்த்ரீகளை நலியத்தகாதென்கிற சாமாந்யக்ருபையுமுடையையல்லை. தகவிலை - நோவுபட்டாரை நலியலாகாதென்கிற விசேஷக்ருபையுமுடையையல்லை.

இந்த நைர்க்ருண்யம் ஸ்வபாவமாயே விட்டதிறே யென்றுகருத்து. வேய்மருதோளிணை என்று - அவன்கொண்டாடும்படி அழகைச்சொல்லவுமாம். காமருகுயிலென்று - அழகியகுயில்; காவிலேமருவினவென்னவுமாம். "ஆலோ!" என்னுமசைகள் - விஷாதசூசகங்கள்..........................................................*

## ஈடு - முதற்பாட்டு.

அவன்பிரிகிருனென்கிற வ்யஸநம் செல்லாநிற்க, அதுக்குமேலே, குயில்தொடக்கமான பாதகபதார்த்தங்களின் த்வநியாலும் அவன் நோக்காலும் தனக்குப் பிறந்த வவசாதத்தை, தோழிமார்க்குச் சொல்லுமாபோலே அவன்றனக்குச் சொல்லுகிருள்.

(வேயித்யாதி) சுற்றுடைமையாலும் பசுமையாலும் வேயையொருவகைக்குப் போலியாகச் சொல்லலாயிருக்கிற தோள்களிரண்டும் மெலியாநின்றனவென்கிருள்; செருக்கனுயிருக்கும் ராஜபுத்ரனுக்கு "உன்பூந்தோட்டமழிகிறது" என்பாரைப்போலே. தன்பிரிவி லிவளாற்ருமைகேட்டார் வாய்க்கேட்கையன்றிக்கே கைமேலேகாணலா யிருக்கிறது காணு மிவள்மெலிவு. இவளுடைய ப்ராந்தியை யநுவர்த்தித்து, கிண்ணகத்திலே யடிச்சுடுவாரைப்போலே அவன் கூடவிருக்கச்செய்தேயும் மெலியாநின்றனவாய்த்துத் தோள்கள். கூடவிருந்தாலும் ப்ரயோஜநமில்லையிறே அகவாயிலே பிரிவுண்டானுல்; அதின் கார்யமான மெலிவுபிறந்த

ன்றி நில்லாதிறே. தன்தோள்கள் மெலிகிறவித்தை "உன்னுடையதோள்கள்மெலியாநின்றன" என்பாரைப்போலே சொல்லுகிறாள் காணும்!. தேவதத்தனென்றத்தோடு வாசுதேவசப்தத்தோடு வாசியறும்படி அவனுக்கு ப்ரகாரமாயிறே யிவ்வாத்மவஸ்து விருப்பது. நீ கலக்கப் புக்கால் விடாயாறுவதெங்கே. * மெல்லியல்தோள்தோய்ந்திறே விடாயாறுவது. (இணை) நீ சேர்த்தியழகுசொல்லி வாய்வெருவும்தோள்கள் படுகிறபாடு பாராய்!. தன்னழகைத் தான் கொண்டாடுமவளல்லவே, அவன்சொல்லக்கேட்ட செவியேற்றாலே சொல்லுகிறாளிறே. இனி நீவந்தாலு மசத்ஸமங்கிடாய். (ஆலோ!) விஷாதாதிசய சூசகமிருக்கிறபடி.

(மெலிவுமென்தனிமையும்) நாட்டார் மெலிவும் தனிமையும்போலல்லவிறே என்மெலிவும் என்தனிமையும். உன்மெலிவும் உன்தனிமையும்போலல்ல. கூடவிருக்கச்செய்தே வருகிறதனிமையும், பிரியாதிருக்கச்செய்தே வருகிறமெலிவுமிறேயிது. "பொன்செய்பூண்மென்முலைக்கென்றுமெலியுமே" என்றும், "மிகமேனிமெலிவெய்தி" என்றும், "தமியமாலோ" என்றும் சொன்னவற்றி னளவல்லவிறே. அவனசந்நிதியில் பட்டவையிறேயவை; கூடவிருக்கச்செய்தே வருகிறதிறேயிது. "தாந்தம்மைக்கொண்டகல்தல்தகவன்று" என்று தாம்போவார் தம்மைவைத்தன்றே போகக்கடவது என்னக்கடவ வவளுக்கு, கூடவிருக்கச்செய்தே போனானென்று நினைக்கவுமாமிறே ப்ரேமஸ்வபாவத்தாலே. அவன்றான் போனாய் வருகிறானல்லன், போகநினைத்தானாய்த் தவிருகிறானல்லன்; அவனாலும் அப்ரதிக்ரியமிறேயிது. அவன்றானும், இவள் மெலிவில் மெய்ப்பாட்டைக்கண்டு "நாம்பிரிந்தோமோ" என்று ப்ரமிக்கும்படியிறே யிருக்கிறது. இருவரு மிருவர்க்கு மூமத்தங்காயானால் தெளியவிரகில்லை. இதுதானவனுடைய சௌபாக்யபல மிருந்தபடியிறே. முன்பு இவள்பிரிவாற்றாமையால் பட்டவையெல்லாம் தான் கண்டறியானே; தோழிமார் மற்றையார்சொல்லக்கேட்டார்வாய்க்கேட்கு மித்தனையிறே; "வாஹிவாத" (வாஹிவாத) இத்யாதிவத்; இப்போது, தன் கண்ணாலே காணப்பெற்றானே. இவள்தான், தோழிமாரோடு சொல்லுமத்தை இப்போதவன்றன்னோடே சொல்லுகிறாளிறே. (யாதும்நோக்கா) ஒன்றையும் பார்க்கிறதில்லை. தோளின்மெலிவும் தனிமையும் இவையொன்றும் பார்க்கிறனவில்லை.

(காமருகுயில்களும்) காமருதலாவது விருப்பம். இவற்றினுடையகலவி பிரிவுக்குடலா யிராமையாலே மேன்மேலென விருப்பத்தை யுடைத்தாயிருக்குமிறே. கலவி பிரிவோடே வ்யாப்தமென்னும் பயமில்லை இவற்றுக்கு. (குயில்களும்) நீயேயன்றிக்கே, இவையும் பாதகமாகாநின்றன. நீ பாதிக்க வரவிட்ட பரிகரத்திற்காட்டில் இன்னமும் நீதானே நல்லை. (கூவுமாலோ) என்தசையைக்கண்டால் இவற்றுக்கு வாயைப் புதைக்கவேண்டாவோ!, பிரிந்து நோவுபடுகிற வென்படியைக் கண்டால்

"நஞ்சுபோலே நம்முடைய த்வநி யிவளுக்கு பாதகமாம்" என்று தவிர வேண்டாவோ!. [ 𑌕𑌸𑍍𑌯𑌨𑌾𑌰𑌾𑌤𑍍𑌯𑌦𑍇𑌶𑌿𑌤𑌂 " [ கஸ்யநாராத்யதேசித்தம் ] உருவினவா ளுறையிலே யிடவேண்டும்படிகாணு மிவளுடைய தசை.

(கணமயில்) எதிர்த்தலையையும் தனியேவைத்து நோவுபடுத்தித் தானும் தனியேயிருந்து நோவுபடுவாரைப்போலே யன்றிக்கே, சேர்த்தியையுடையவா யிராநின்றதாய்த்திவை. (அவை) த்ருஷ்டி விஷம்போலேயிருக்கையாலே முகத்தை மாறவைத்து ( அவை ) என்கிறுள், கண்கொண்டு காணப்போகாமையாலே. ஒருதிரளாக பாதகமாகாநின்ற தாய்த்து. ( கலந்து ) "இவ்வளவில் நாம் கலக்கை ஸ்த்ரீவதம்" என்றறிந்துமீளுகிறதில்லை. (ஆலுமாலோ) கலந்த கலவியால் வந்த ஹர்ஷத்துக்குப்போக்குவிட்டு ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுநின்றனவென்று ப்ரத்யக்ஷித்துவைத்து. ( அவை ) என்னும்போது முகத்தைமாறிச் சொல்லுகிறுளா யிருந்ததிறே. [ 𑌮𑌯𑍂𑌰𑌸𑍍𑌯 ] [ மயூரஸ்ய ] இருவராயிருப்பா ரெல்லாரையும் பிரித்தானென்றேயிருக்கிறுர். மயிலினுடைய பெண்டாட்டியை ராவணன்கொண்டுபோய்த்திலனே!. [ வநே ] திருவயோத்யையிலேவந்து பிரித்தானல்லனே!; போகத்துக்கேகாந்தமான காட்டிலேயிறே. [𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑌹𑍃𑌤𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌾 ] [ ரக்ஷஸாநஹ்ருதாப்ரியா ] நீர்மைகேடனுன வப்படிகுலைக்காரனுல் பிரிக்கப்படாத திதொன்றுமேயாகாதே.

( ஆமருவித்யாதி ) இவ்வளவில் "𑌕𑌥𑌮𑍇𑌷𑌾𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿" (கதமேஷாபவிஷ்யதி) என்னவேண்டியிருக்க, அதுசெய்யாதே, அவன் தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே யொருப்படாநின்றுன். உன்னேடே மருவித் திரளாயிருக்கிற ஆநிரையுண்டு - பசுநிரை, அத்தை மேய்க்க. * மேய்ந்தபுல்லும் கடைவாய்வழி சோரவிறே நிற்பது - வேறென்றின்றிக்கே இவனேட்டைச் சேர்த்தியேயிறே இவற்றுக்கு தாரகம். (இனம்) அவனுடைய ரக்ஷ்யகோடியிலே யந்வயித்தாலும் தனியராயிருப்பாரை ரக்ஷிக்கநினையான்; திரளாயிருப்பாரையாய்த் தவன் ரக்ஷிக்க நினைப்பது. ( நீபோக்கொருபகல் ) நீபோகிறவொருபகலென்னுதல்,உன்னுடையபோக்கான வொருபகலென்னுதல்; அன்றிக்கே, பசுக்களை மேய்க்கைக்காக நீபோகவிடுகிற பகலென்னவுமாம். "இதெல்லாமொருபகலளவேயன்றே" என்றுன் ( ஆயிரமித்யாதி ) உன்னைப்போலேயென்றிராதேகொள்ளா யெங்களையும். இரவொன்றும் பகலொன்றும் உத்தேச்யமாயிருப்பார் படியாயிராதுகாண் எல்லாக்காலத்திலுமொன்றே போதுபோக்காக விருப்பார்க்கு. "𑌯𑌥𑌾𑌬𑍍𑌦𑌕𑍋𑌟𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌃 𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌤𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾𑌭𑌵𑌤𑍍." ( யதாப்தகோடிப்ரதிம: க்ஷணஸ்தேநவிநாபவத். )

"போனேமல்லோம், போகநினைத்தோமல்லோம், நாம்கூடவிருக்கச்செய்தே பிரிந்தோமாகக்கொண்டு நோவுபட்டுப் பதார்த்தங்களுமடை

ய பாதகமாயிருப்பதே, இதொரு ப்ரேமஸ்வபாவ மிருக்கும்படியென்?'' என்று கண்ணாலே குளிரநோக்கினான் (தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ) நீ நோக்காலே நலிவதில் இன்னம் பசுமேய்க்கப்போகையே நன்று. "முன்புத்தைநோக்கு ஸ்ம்ருதிவிஷயமாய்ச் சொல்லுகிறாள்" என்பாருமுண்டு; (ஈர்தி) என்கையாலே - இப்போது நலியாநின்றாயென்றே சொல்ல வமையுமிறே.

இப்படி சொல்லச்செய்தேயும் நோக்கை மாறவைத்திலன் (தகவிலை) ஜகத்தில் க்ருபையில்லைகிடீர் என்கிறாள்; அவனை விலக்குகிறாரில்லையாகாதே. நம்மோடு விரோதித்தாரை யின்னாதாகிறதென் இவன் நம்மை நலியாநிற்க. ஒன்றுக்கு அங்கதோஷமுண்டு, ஒன்றுக்கு சம்சர்க்க தோஷமுண்டு, ஆனபின்பு, இவை நம்மோடே விரோதிக்கை ப்ராப்தமன்றோ. மயில், சுப்ரஹ்மண்யனுடைய வாஹநமாகையாலே சம்சர்க்க தோஷமுண்டு; குயில், பலிபுக்கினுடைய அங்கத்தை புஜிக்கையாலே அங்கதோஷமுண்டு. (நீ - தகவிலை) உனக்குத்தகவில்லை. "தகவுடையவனே" என்று கூப்பிடுமவள்கிடீர், அவன் சந்நிதியிலே இப்போது (தகவிலை) என்கிறாள். நீ தகவுடையையல்லை. மேலில் "தகவிலை" என்கிறதுபோலன்றிக்கே, முற்பட்டதுக்குத் தகவிலையென்று பொருளாய், நாட்டில் க்ருபையில்லையென்னவுமாம்; அன்றியே, இரண்டும் தகவிலை என்றேயாய், அப்போது இரட்டிப்புக்குக்கருத்து—நீதகவுடையை யல்லையென்னுமிடத்துக்குக் கொடி யெடுக்கிறேனென்கிறாள். "ஏவமார்த்தா-யோஷித்-க்ருபாகஸ்யநஜாயதே" (ஏவமார்த்தாஸயோஷித்ஸக்ருபாகஸ்யநஜாயதே) என்கிறபடியே. ....................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (வேய்மருவித்யாதி) "ஆமருவினநிரைமேய்க்கநீ போக்கொரு பகலாயிர மூழியாலோ, காமருகுயில்களும் கூவுமாலோ, கணமயிலவைகலந்தாலுமாலோ, தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ" என்றவற்றைக் கடாக்ஷித்த வதாரிகை (அவன்பிரிகிறானித்யாதி) வ்யஸநம் செல்லாநிற்கவென்றது - "மெலிவு மென்தனிமையும்" என்றத்தைப்பற்ற.

வேயோடே பொருந்தியிருக்கிற தெவ்வாகாரத்தாலேயென்ன (சுற்றுடைமையாலுமித்யாதி.) மருவுகை - ஸாத்ருஶ்யாகாரோணபொருந்துகை. தோள்களை வர்ணித்து, இது மெலியாநின்றது என்று அவனுக்குச்சொல்லுகிறதுக்குபாவம் (செருக்கனுமித்யாதி) சாடு (தன்பிரிவிலித்யாதி) கைமேலே-ப்ரத்யக்ஷமாகவென்று சாடுவுக்கர்த்தம். விஶ்லேஷத்திலொழிய கூடவிருக்கச்செய்தே மெலியக்கூடுமோவென்ன (இவளுடையவித்யாதி) விவரணமாதல், ப்ராந்தியாலன்றிக்கே அகவாயில் விஶ்லேஷாநுசந்தாநத்தாலும் மெலிவுண்டாகிறதென்று பரிஹாராந்தரமாதல் (கூடவிருந்தாலுமித்யாதி) வ்யாக்யாதாவினிடுபாடு (தன்தோள்களித்யாதி) ஆற்றாமையிருந்தபடி யென்னென்றபடி. இத்தால் - இவள்தோள் மெலிந்தால் தன்னுடைய வபிமதம் போகிறதென்று வ்யஸநப்படுகை யன்றிக்கே, இவளுக்குவந்தமெலிவு தனக்குவந்த

தாயிருக்கையாலும், அவனுச்கு வ்யஸநமிரட்டித்திருக்குமென்றுகருத்து. இவள்தோள்மெலிந்தால் வ்யஸநமவனதாயிருக்குமென்கிற விதுக்கு ஸ்வாபதேஸம் (தேவதத்தனித்யாதி) "வேய்மருதோளிணைமெலியும்" என்றதால்பலிதமாதல், "மெலியும்" என்றதுக்கு ஹார்த்தபாவமாதல் (நீகலக்கவித்யாதி) அப்படி இவள்தோள் விடாயாறு மிடமோவென்ன (மெல்லியலித்யாதி) ம்ருதுஸ்வபாவமான தோளோடேயணைந்தென்றபடி. திருநெடுந்தாண்டகம், "கல்லெடுத்து" இத்யாதி. "இணை" என்றதுக்கு ஹார்த்தபாவம் (நீசேர்த்தியழகித்யாதி) அவன்வாய்வெருவும் தோளென்பானென், தன்தோளழகைத்தானே சொல்லுகிறுளானுலோவென்ன (தன்னழகைத்யாதி) செவியேற்ருலே - செவியாலே கேட்கையாலே. மெலியும்-சிதிலமாகாநின்றன. "மெலியும்" என்றபூதார்த்தத்துக்குபாவம் (இனிநீவந்தாலுமித்யாதி.)

மெலிவும் தனிமையும் தன்னதாயிருக்க, "என்மெலிவும், என்தனிமையும்" என்று விசேஷித்ததுக்குபாவம் (நாட்டாரித்யாதி) அதாவது - லோகத்தில் விரஹிணிகளுடைய மெலிவையும் அஸஹாயதையையும் வ்யாவர்த்திக்கிறது. அவ்வளவன்றிக்கே, ஈஸ்வரனில் வ்யாவ்ருத்தி (உன்மெலிவுமித்யாதி) நாட்டாருடையவு மீஸ்வரனுடையவும் மெலிவும் தனிமையும் பொல்லாதபடியெப்படியென்ன (கூடவிருக்கவித்யாதி) "என்மெலிவுமென்தனிமையும்" என்றதுக்கு-நாட்டாரிலு மீஸ்வரனிலும் வ்யாவ்ருத்தியாகவருளிச்செய்து, தான் கீழ்பட்டமெலிவு தனிமைகளளவல்லவென்று மூன்றும் வ்யாவ்ருத்தி ( பொன்செய்பூணித்யாதி. ) அதெப்படியென்ன (அவனஸந்நிதியிலித்யாதி) கூடவிருக்கச்செய்தே போனுனென்று நினைக்கலாமோவென்ன (தாந்தம்மையித்யாதி) அதாவது - அங்கு அஸம்பாவிதத்தைச்சொன்னுப்போலே இங்கு இதுவும் கூடுமென்றபடி. இப்படி நினைக்கிறவளுக்கொரு பரிஹாரம்பண்ணவொண்ணுதோவென்ன (அவன்ருனித்யாதி) " அப்ரதிக்ரியம் " என்றதின் சரமாவதி (அவன்ருனுமித்யாதி) இத்தால்பலிதம் (இருவருமித்யாதி) இவ்வாற்ருமைதானவனுக்குப் பெருப்பேருயிருக்குமென்கிருராதல், மேலுக்கு உபோத்காதமாதல் (இதுதானித்யாதி) இதுதானென்றது-இந்த வ்யஸநஹேதுவான ப்ராவண்யந்தானென்றபடி. அதெப்படியென்ன (முன்பிவளித்யாதிவாக்ய சதுஷ்டயம்.) அவ்வளவன்றிக்கே, இவனுக்கின்னமுமொரு அலப்யலாபமென்கிருர் (இவள்தானித்யாதி) அதாவது-காணப்பெற்றமாத்ரமன்றிக்கே வாயாலேசொல்லக்கேட்கவும்பெற்ருனென்று இதுவுமொருசௌபாக்யமென்றபடி. விவரணம் (தோளின்மெலிவுமித்யாதி.)

"காமரு" என்றவர்த்தமாந நிர்த்தேசத்துக்கர்த்தம் (இவற்றினுடையவித்யாதி) விவரணம் (கலவியித்யாதி) அநுக்தசமுச்சயமாக சசப்தார்த்தம் (நீயேயன்றிக்கேயித்யாதி) ப்ராதாந்யே சமுச்சயமாக வர்த்தாந்தரம் (நீபாதிக்கவித்யாதி) " கூவும் " என்றதுக்குஹார்த்தபாவம் ( என்தசையையித்யாதி ) உன்தசையைக்கண்டால் வாயைப்புதைக்கவேணுமோவென்ன (பிரிந்தித்யாதி) விவரணமாதல். இவளுக்கு பாதகமானுல் தவிரவேணும் என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (கஸ்யேத்யாதி) " கூந யாவி ... " ( அயாசித்ரயாவாசாத்ரிஸ்த்தாநவ்யஞ்ஜநஸ்த்தயா। கஸ்ய நாராத்யதே சித்தமுத்யதாஸேரரோபி ) இதி கிஷ்கிந்தாகாண்டே ஹநூமத்வசநமாதுரீம்ஸ்லாகதோ ராமஸ்யவசநம். " உ... " (உத்யதாஸேஃ) என்றதுக்கு பாவம் (உருவினவித்யாதி) இத்தால்-திருவடிவார்த்தை மாதுர்யத்தாலே சத்ருவையுமீடுபடுத்துமாபோலே, இவளுடையதசையைக்கண்டால் சத்ருக்களு மிரங்கவேண்டும்படி யிருக்குமென்றபடி.

"கணமயில்" என்றதுக்கு - மிதுநமான மயிலென்று விவக்ஷித்து, இதுக்கு வ்யாவர்த்யம் (எதிர்த்தலையையுமித்யாதி) ப்ரத்யக்ஷத்திலே ஆலுகிறமயலே "அவை" என்கிறதென்னென்ன (த்ருஷ்டிவிஷமித்யாதி) "த்ருஷ்டிவிஷம்போலே" என்றதின்விவரணம் (கண்கொண்டித்யாதி) "கணமயில்" என்றதுக்கர்த்தாந்தரம் (ஒருதிரளாகவித்யாதி) அதுக்குத்தன் ஸ்த்ரீயோடே கலக்கவேண்டாவோ, நீ துஃகப்படுவானென்னென்ன (இவ்வளவிலித்யாதி) முகத்தை மாறவைத்துச்சொல்லுகிருளென்கிறதென்கொண்டென்ன (கலந்தகலவியாலித்யாதி.)

விஶ்லேஷத்தில் மயூரதர்ஶநம் பாதகமானவிடமுண்டோவென்ன (மயூரஸ்யேத்யாதி) "ஃய-ஷாஸ்ஸுவெநஸஷஂநஂஷஸாநஹ்ஸதாவ்ரியா । தஹூாஷ்ஸதஸ்திரொஷ்ஸஷஷவெநஷஷஸஹகாஷயா" (மயூரஸ்யவநேஸஷநம் ரக்ஷஸாநஹ்ருதாப்ரியா । தஸ்மாந்ந்ருத்யதிரம்யேஷுவநேஷுஸஹகாந்தயா) இதி கிஷ்கிந்தாகாண்டே. இதுக்குபாவம் (இருவராயித்யாதி) சப்தார்த்தம் (மயிலித்யாதி) "வநே" என்கிறதுக்குபாவம் (திருவயோத்யையிலேயித்யாதி) "ரக்ஷஸா" என்றதுக்குவாஸனை (நீர்மையித்யாதி) படுகுலைக்காரன்-காதகன்.

"ஆமருவினம்" இத்யாதிக்கவதாரிகை (இவ்வளவிலித்யாதி) "மருவு இனம்-ஆ-நிரை" என்றந்வயித்தர்த்தம் (உன்னோடேயித்யாதி) மருவு-மருவியென்றபடி. மருவுகை-பொருந்துகை. இவனோடே மருவியிருக்குமோவென்ன (மேய்ந்தவித்யாதி) கடைவாய்வழியே நழுவவென்றபடி. பெரியாழ்வார்திருமொழி மூன்றும்பத்து ஆருந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "திரண்டெழுதழை" இத்யாதி. புல்லு கடைவாயிலேவழிந்தா லவற்றுக்கு தாரகமேதென்ன (வேறொன்றின்றிக்கேயித்யாதி) "இனம்" என்றதுக்குபாவம் (அவனுடையவித்யாதி) (மேய்க்கைக்காக-பசுக்களை-நீபோகவிடுகிறபகல்) என்றந்வயிப்பது. "போக்கொருபகல்"என்றதுக்கு-போகிறவொருபகலென்னுதல்; போக்குகிற - கழிக்கிற, ஒருபகலென்னுதல்; பசுக்களைப்போகவிடுகிறவொருபகலென்னுதல் என்றர்த்தத்ரயம். விவரணம் (இரவொன்றுமித்யாதி) பாவாந்தரமாதல். ஒருபகலாயிரமூழியாமோவென்ன (யதாப்தேத்யாதி) "ஸதயாஸஹமொஹஃஷீரரராஸஉய-ஷஸஷஜநஃ। யயாஸ்ஸகொடிஃஸதிஜஃஷணஷெநவிநாஹவஃ" (ஸததாஸஹகோபீபீரராஸமதஸஞ்தநஃ। யதாப்தகோடிப்ரதிமஃக்ஷணஸ்தேநவிநாபவத்) இதிபஞ்சமேம்ஶேத்ருதீயே.

மேலுக்கவதாரிகை (போனேமல்லோமித்யாதி.)

"தகவிலை" என்றதுக்கவதாரிகை (இப்படியித்யாதி.) க்ருபையில்லாமைக்கு நியாமகமேதென்ன (அவனையித்யாதி) கண்கள்கொண்டீராதபடி விலக்குகிறுரில்லை, க்ருபையுண்டானலாரோனும் விலக்குவர்களிறே, ஆகையாலே தகவில்லையென்றபடி. முந்தின "தகவிலை" என்றதுக்கு - லோகத்தில் தகவில்லையென்ற வர்த்தமொழிய, குயில்மயில் தொடக்கமானவற்றுக்குத் தகவில்லையென்றர்த்தாந்தரம் விவக்ஷித்து, "நீகண்டா-தகவில்லை" என்றதுக்கவதாரிகை (நம்மோடித்யாதி) அவற்றுக்குத் தன்னோடுவிரோதிக்க ப்ராப்தியேதென்ன (ஒன்றுக்கித்யாதிவாக்யத்ரயம்) தோஷத்வயத்தையு முபபாதிக்கிருர் (மயிலித்யாதி) வ்யாக்யாதாவினீடுபாடு (தகவுடையவனேயித்யாதி) சப்தார்த்தம் (நீதகவுடையையல்லையென்று) சப்தநிர்வாஹம் காட்டுகிருர் (மேலிலித்யாதி) மேலில் தகவிலையென்கிறதுபோலன்றிக்கேயென்ற - "நீகண்ணு-தகவிலை" என்றதுபோலே அவனை சம்போதித்து மத்யமபுருஷனாகச்சொல்லுகையன்றிக்கேயென்றபடி. கோடியெடுக்கிறேன் - அநேகம்சொல்லுகிறே

னென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, இரண்டும் மத்யமபுருஷன்; முந்தினவர்த்தத்து க்கு, முந்தின * தகவிலை - ப்ரதமபுருஷனாய், தகவில்லையென்றபடி, இரண்டாம் * தகவிலை - மத்யமபுருஷன். "நாட்டில் க்ருபையில்லை" என்றதுக்கு சம்வாதம் (ஏவமித்யாதி) "ஏவமாரூ ஹாஸு யோஷித்ஸு க்ருபாகஸ்ய ந ஜாயதே" (அக்ரூரக்ரூரஹ்ருதய ஶ்ஶீக்ரம்ப்ரேரயதேஹயாந் । ஏவமார்த்தாஸு யோஷித்ஸு க்ருபாகஸ்யநஜாயதே) இதிபஞ்சமேம்ஸே ஏகோநவிம்ஸே ........................................*

# இ ர ண் டா ம் பா ட் டு.

தகவிலைதகவிலையேநீகண்ணாதடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காராச்
சுகவெள்ளம்விசும்பிறந்தறிவைமூழ்க்கச்சூழ்ந்ததுகனவெனநீங்கியாங்கே
யகவுயிரகமகந்தோறுமுள்புக்காவியின்பரமல்லவேட்கையந்தோ
மிகமிகவினியுன்னைப்பிரிவையாமால்வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கே.

## ஆறாயிரப்படி.

(தகவிலை) சம்ஶ்லேஷஜநிதமான நிரவதிக நிர்வ்ருதி செல்லாநி ற்கச்செய்தே யிப்படிபடுகிறதென்னென்ன;

அந்த நிரதிசய சம்ஶ்லேஷமெல்லாம் ஸ்வப்நகல்பமாய், உன்ப க்கலுள்ள நிரதிசயஸ்நேஹத்தினாலே பசுமேய்க்கப்போக்குக் காரணமாக நீபிரிகிறாயென்று நான்முடியக்கிடாய் புகுகிறதென்கிறாள்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதபவ்யனான நீ யொரு க்ருபையின்றி யிராநின்றாய், உன்னு டைய சம்ஶ்லேஷரஸந்தானே பரிதாபஹேதுவாகாநின்றது, விஶ்லேஷஹேதுவான பசுமேய்க்கப்போக்குத் தவிரவேணுமென்கிறாள்.

கண்ணா - பெண்பிறந்தார்க்கு பவ்யனென்று ப்ரஸித்தனான கண்ணா. நீ - நீ. தகவிலைதகவிலையே - அந்தபவ்யதைக்கீடான க்ருபையை யொருபடியாலுமுடையை யல்லையாயிராநின்றாய். நீ சந்நிஹிதனாயிருந்து சம்ஶ்லேஷிக்கிறவளவிலும், தடம்- நீ ஶ்லாகிக்கும்படி பெரிதான. முலை - முலைகளை. புணர்தொறும் - பரிஷ்வங்கம்ப ண்ணும் க்ஷணந்தோறும். புணர்ச்சிக்கு - அந்தசம்ஶ்லேஷத்துக்கு. ஆரா - உள்ள டங்காதே அதிசயிதமான. சுகவெள்ளம் - சுகசாகரமானது. விசும்பிறந்து - அபர் யந்தமான வாகாசத்துக்கு மவ்வருகேபோய். அறிவை - அறிவும். மூழ்க்க - அழுந் தும்படியாக. சூழ்ந்து - சூழ்ந்து. அப்போதே, அது - அது. கனவென - ஸ்வப்நக ல்பமாக. நீங்கி - கழிந்து. ஆங்கே - அவ்வவஸ்த்தையிலே. அகவுயிர் - அந்தர்க்கத மான ப்ராணன். அகமகந்தோறும் - நின்றபுடைகள்தோறும். உள்புக்கு - உள்ளே ப்ரவேசித்து. ஆவியின் - ஆஶ்ரயமான ஆத்மாவுக்கு. பரமல்ல - பொறுக்கவொண் ணாதபடி. வேட்கை - அபிநிவேசம்போந்து வாராநின்றது. அந்தோ! - ஐயோ!, கூ டவிருக்கிற வுனக்கு இத்தனைசொல்லிக் காட்டவேண்டுவதே!, இனி - இனி, இவ்

வளவில் நீ செய்யவேண்டுவது, மிகமிக - மேன்மேலும். உன்னை - உன்னை. பிரிவையாமல் - பிரிவானத்தை நாங்களுடையோமாம்படியாக. நின்-உன்னுடைய. பசுநிரைமேய்க்கப்போக்கு-பசுநிரைமேய்க்கப் போக்குக்களானவை. வீவ - தவிர்வனவாகவேணும்.

வீதல் - ஒழிதல். .......................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இவள்தரிக்கைக்காகப் பலகாலணைத்தருள, இஸ்ஸம்ஶ்லேஷசுகமெல்லாம் நீ போகக்கடவையென்னு மிதினாலே ஸ்வப்நம்கண்டுவிழித்தாப்போலேயாய் நோவுபடாநின்றேனென்கிறாள். பூர்வவ்ருத்தமான சம்ஶ்லேஷத்தையே சொல்லிற்றாகவுமாம்.

(தகவிலையித்யாதி) (நீகண்ணா - தகவிலையே) க்ருஷ்ணனென்றால் பெண்களுக்கு ஸ்வம்மாயிருக்குமென்று ப்ரசித்தமிறே. பெண்களுக்கு ஸ்வம்மான நீ நிர்த்தயனேயாகாநின்றாய். "நம்மை நிர்த்தயனென்பதே!, பிரியநினைத்தோமல்லோம், பிரிந்தோமல்லோம்" என்று இவள் தரிக்கைக்காக நெருக்கி யணைத்தான் (தடமுலையித்யாதி) நூறாயிரந்தரம் அணையாநிற்கச்செய்தேயும் "அணைக்கிறதுபிரிகைக்கிறே" என்று அணைத்த கை நெகிழ்த்தவிடமெங்கும் இவளுடம்பு வெளுக்கப்புக்கவாறே, அத்தைக்கண்டு இதினுடைய சமாதாநார்த்தமாக அணைக்க, இங்ஙனே அதிசங்கையும் சமாதாநமுமாய்ச் செல்லுமத்தனை. இதுதான் பூர்வசம்ஶ்லேஷத்தைச் சொல்லிற்றாகவுமாம். இப்போதை சம்ஶ்லேஷந்தன்னையே சொல்லுகிறது. (தடமுலை) தன்னையறியப்புக்கார் படுவத்தையாய்த்து இவற்றை யநுபவிக்கப்புக்க தானும்படுவது - முலைய வநுபவித்து முடிக்கப்போகாதாய்த்து. போக்தாவாலுமுண் டறுக்கவொண்ணாத போக்யதாதிசயத்தைச் சொன்னபடி. (புணர்ச்சிக்காராச்சுகவெள்ளம்) சம்ஶ்லேஷத்துக் கடங்காத சுகசாகரம். கலக்கிற விருவர்க்கு மீடாயிறேசுகமிருப்பது. அவன் ஸ்வரூபம் இயத்தாரஹிதமா யிருக்குமாபோலேயாய்த்து போக்யதாப்ரகர்ஷமும். * அதனிற்பெரியவென்னவாவிறேயிவளது. அன்றியே, (புணர்தொறும்புணர்ச்சிக்காராச்சுகவெள்ளம்) அதாவது- சம்ஶ்லேஷம் காதாசித்கமாய், சுகம் நிரதிசயமாயிருக்கை. "நிலத்தினும் பெரிதேவானிலுமுயர்ந்தன்று, நீரினுமாரளவன்றே சாரல்கருங்கோற்குறிஞ்சிப்பூக்கொண்டு பெருந்தேனிழைக்கும்நாடனொடுநட்பே" என்னக்கடவதிறே. குறிஞ்சிப்பூக்கொண்டு பெருந்தேனிழைக்கை. இஸ்ஸுகந்தா னெவ்வளவுபோருமென்னில் (விசும்பித்யாதி) சர்வபதார்த்தங்களையும் தன்னுள்ளே வைத்துக்கொண்டிருக்குமதிறே ஆகாசமாகிறது; அதுதன்னைக் குளப்படியாக்கி, * மயர்வறமதிநலமருளப்பெற்ற வறிவையும் விளாக்குலைகொள்ளாநின்றதாய்த்து. அன்றிக்கே, விசும்பென்று-பரமபதமாய், "தாமரைக்கண்ணனுலகு" என்னக்கடவதிறே சுகாதிசயத்துக்கு.

ஆக, த்ரிபாத்விபூதியையும் விஞ்சி, உபயவிபூதியையும் தன்னுள்ளேயாம்படியிருக்கிற வறிவையும் மேலிடும்படியாய்த் திருக்கிறது. (அதுகனவெனநீங்கி) அது ஸ்வப்நகல்ப மென்னலாம்படி கழிந்ததாய்த்து. அதின்பரப்பைக்கண்டவாறே அதுக்கோரவதியில்லை யென்னும்படியாய்த்திருந்தது; அதுவும் வற்றினபடியைக் கண்டவாறே, இது பெருக்காறுவற்றியடிச்சுட்டாப்போலேயாய்த்து. அப்படி கலந்தவனிறே பிரிந்தானும். கனவென்றும் இந்த்ரஜாலமென்றும் - அபர்யாப்தமான கலவியைச் சொல்லக்கடவது; இதுவும், அநந்தரம் காணவொண்ணுதபடியா யிருக்குமே. (ஆங்கே) அத்தசையிலே. (அகவுயிர்) ப்ராணஸ்த்தாநமான ஹ்ருதயம். (அகமகந்தோறும்) ஹ்ருதயத்திலுண்டான வவகாசந்தோறும். முன்புள்ள சம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே ஹ்ருதயம்புடைபட்டிறேயிருப்பது. சம்ஶ்லேஷவிஶ்லேஷ மவகாசத்தையுண்டாக்கும், அந்தவவகாசமுள்ளவிடமெங்கும் ஆற்றாமை புகுந்தது. (ஆவியின்பரமல்லவேட்கை) அணுபரிமாணமானவாத்மவஸ்துவினளவல்லவபிநிவேசம்; [என்றனளவன்றால் யானுடையவன்பு] என்றாரேயவரும் - ஆஶ்ரயத்தினளவல்லவாய்த்து அபிநிவேசம். சுகதுःகங்களும், அவையொழிந்த ஸ்வரூபேணுவஸ்த்தியும் என்றுமூன்றுண்டிறே; அதில் ஸ்வரூபேணுவஸ்த்திதியிலேதான் நிற்கப்பெற்றதோ!. (அந்தோ) இதுதனக் குபதேசங்கொண்டறியவேண்டுவதே! - கலக்கிறபோ திருவரும்வேண்டி பிரிவில்வந்த வாற்றாமைக்கு நான் சொல்லவேண்டும்படியாவதே!. கலவிக்கிருவராய் ஆற்றாமை யொருதலையிலேயாவதே!. ஆனால் செய்யவேண்டுவ தென்னென்னில் (நின்பசுநிரைமேய்க்கப்போக்கு - வீவ) அதுதான் தவிரவேண்டுகிற தென்னென்னில் (மிகமிகவினியுன்னைப் பிரிவையாமால்) மேன்மேலனுன்னைப்பிரிவாம். (பிரிவை) என்கிறவிது - செய்யுட்பாடாய், பிரிவுண்டாம்படி வருகிற பசுநிரைமேய்க்கப்போக்குவீவ. "பசுவந்தன" என்னுமாபோலே போக்குக்கள் தவிரப்படுவனவாக. (இனி - வீவ) இதுக்குமுன்புள்ளகாலமெல்லாம் பிரிந்துபோந்தாயேயாகிலும், இனிமேலுள்ளகாலமாகிலும் தவிரவேணும்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (தகவிலையித்யாதி) "தட்முலைபுணர்தொறும் புணர்ச்சிக்காரா" என்றுதொடங்கி "வேட்கை" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இவளித்யாதி.)

"நீகண்ணு-தகவிலை" என்று - அநுவாதம். (பெண்களுக்குஸ்வம்மான) இத்யாதிவாக்யாநந்தரம் (க்ருஷ்ணனென்றால்) இத்யாதிவாக்யமநுசந்தேயம்.

மேலுக்கவதாரிகை (நம்மையித்யாதி) "புணர்தொறும்" என்றதுக்குபாவம் (நூறுயிரந்தரமித்யாதி) இப்போதை சம்ஶ்லேஷந்தன்னையே சொல்லுகிறதென்றது - இப்போதையில் சம்ஶ்லேஷம் சொல்லுகிறதே முக்யமென்றபடி. "தடம்" எ

ன்றதுக்குபாவம் (தன்னையித்யாதி) ''நேதிநேதி'' என்றுபடுவத்தையென்றபடி. ஏத த்விவரணம் (தலையவித்யாதி) இத்தால்ப்லிதம் (போக்தரவாலித்யாதி) உண்டறுக்க-அநுபவித்துத்தலைக்கட்ட. புணர்தொறும்-சம்ஸ்லேஷிக்குந்தோறும். அதுக்கடியே தென்ன (கலக்கிறவித்யாதி) இருவர்படியு மெப்படியிருக்குமென்ன (அவன்ஸ்வரூப மித்யாதிவாக்யத்வயம்) அவன் போக்யதா ப்ரகர்ஷமுமென்றபடி. ''புணர்ச்சி'' எ ன்று-அல்பசம்ஸ்லேஷமாய், '' ஆராச்சுகவெள்ளம் '' அதுக்கடங்காத நிரதிசயசுக மென்றருளிச்செய்து, ''புணர்ச்சி'' என்று - காதாசித்க சம்ஸ்லேஷமாய், ''ஆராச்சு கவெள்ளம்'' என்று - அதுக்கடங்காத நிரவதிகசுகமென்று யோஜநாந்தரம் (அன்றி யே புணர்தொறுமித்யாதி) அல்பசம்ஸ்லேஷத்தாலுண்டான வநவதிகசுகமென்னுத ல், காதாசித்க சம்ஸ்லேஷத்தாலுண்டான வநவதிகசுகமென்னுதலென் றர்த்தத்வய ம். சம்ஸ்லேஷமல்பமாய் சுக மநவதிகமாயிருக்குமென்றும், சம்ஸ்லேஷம் அல்பகா லமாய் அத்தாலே சுக மநவதிகமாயிருக்குமென்று மிரண்டுக்கும்பேதம். ''அல்பச ம்ஸ்லேஷத்தாலே அநவதிகசுகமுண்டு'' என்கைக்கு சம்வாதம் (நிலத்தினுமித்யாதி) இக்குறளிலே அல்பசம்ஸ்லேஷத்தாலே யதிகசுகமுண்டாமென்று எங்கேசொல்லிற் றென்ன (குறிஞ்சிப்பூவித்யாதி) தாழ்வரையில் கறுத்தகோலையுடைய குறிஞ்சிப்பூவி ன் ரசத்தைக்கொண்டு மிக்கதேனை சம்பாதிக்கிற நாட்டையுடையவனோட்டை ஸ் நேஹம், பூமியைப்பற்றவும் பெரிதாய் ஆகாசத்தைப்பற்றவுமுயர்ந்து நீரைப்பற்றவும் நிறைந்திருக்குமன்றோவென்றபடி. உயர்ந்தன்று என்றது - உயர்ந்ததென்றபடி. இ ம்மூன்றும் மற்றையிரண்டு பூதங்களுக்கு முபலக்ஷணமாய், பஞ்சபூதங்களைப்பற்றவு ம் பெரியதென்றபடி. இத்தால்-அல்பரஸத்தைக்கொண்டதிகமானதேனை சம்பாதிக் கிறதேசமாகையாலே அத்தேசத்தையுடையவனுடைய வல்பசம்ஸ்லேஷமதிகசுகா வஹமென்றுகருத்து. '' விசும்பிறந்து '' என்றதுக்கர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யா தி) மோக்ஷசுகத்தைப்பற்றவும் சம்ஸ்லேஷசுகம் விஞ்சியிருக்குமோவென்ன (தாம ரையித்யாதி) அதாவது-அத்யந்த விஷயாசக்தனாயிருப்பானொருவனை மீட்கைக்காக ''காமபுருஷார்த்த மல்பாஸ்த்திரத்வாதிதோஷதுஷ்டம், மோக்ஷசுகமேகாண் அநந் தஸ்த்திரபலம்'' என்ன, விஷயாசக்தன் சொல்லுகிறான்- '' தாம்வீழ்வார்மென்றோட் டுயிலினினிதுகொல்|தாமரைக்கண்ணானுலகு'' என்று. தாமரைக்கண்ணானுலகுண்டு-மோக்ஷசுகம், அது, தாங்களே மேல்விழுந்தாசைப்படும் ஸ்த்ரீகளுடைய ம்ருதுவா னதோளிலே யுறங்குகிறதிற்காட்டி லினிதுகொல் - அன்றேயென்றபடி. ''தாமரைக் கண்ணானுலகு - இனிதுகொல்'' என்றந்வயம். த்விதீயார்த்தத்தைவிவக்ஷித்து, ''விசு ம்பிறந்தறிவைமூழ்க்க'' என்றதினர்த்தத்தை நிகமிக்கிறார் (ஆகவித்யாதி) மூழ்க்கச்சூ ழ்ந்தது - மூடும்படி விஞ்சியிருக்கிற வந்தச்சுகவெள்ளமென்றபடி. ''அதனிற்பெரிய வென்னவா'' என்னக்கடவதிறே.

ஆராச்சுகவெள்ளமானது கனவெனநீங்கினபடியென்னென்ன (அதின்பரப் பையித்யாதிவாக்யத்வயம்) அதின்பரப்பை - சுகத்தின்வைபுல்யத்தை. அதுக்குஹே துவேதென்ன (அப்படிகலந்தவனித்யாதி) அதாவது-அவ்வஸ்துவின் வைலக்ஷண்ய ம் பிரிவிலு மப்படிபண்ணவற்றென்றபடி. அப்படியென்றது - ஆராச்சுகவெள்ளமு ண்டாம்படியென்றபடி. ''கனவு'' என்று - ஸ்வப்நம்; அன்றிக்கே, அபர்யாப்தமான கலவியாகவுமாமென்கிறார் (கனவென்றுமித்யாதி) ''கனவு'' என்று - அபர்யாப்தமா ன கலவியைச்சொல்லுமோவென்ன (இதுவுமித்யாதி) இதுவும் – கலவியுமென்றப டி. உயிரினுடையவகம் - ப்ராணஸ்த்தாநமானமநஸ்ஸு. அகமகந்தோறும்-மநஸ்ஸி னுடைய வவகாசந்தோறுமென்றபடி. அணுவானமநஸ்ஸுக் கவகாசமுண்டோவெ ன்ன (முன்புள்ளவித்யாதி)

உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, "உள்புக்காவியின் பரமல்லவேட்கை" என்றதுக்கர்த்தமருளிச்செய்கிறார் (ஸம்ஸ்லேஷமித்யாதி வாக்யத்வயத்தாலே) "ஆத்மவஸ்துவினளவல்ல வபிநிவேசம்) என்றதுக்கு ப்ரமாணம் (என்றனளவன்றாலித்யாதி) இரண்டாந்திருவந்தாதி, "மாலேநெடியானே" இத்யாதி. இதுக்கர்த்தம் (ஆஸ்ரயத்தினித்யாதி.) (அந்தோ) என்ற பதோபாதாநாநந்தரம், (சுகதுஃகங்களும்) இத்யாதிவாக்ய மநுசந்திப்பது. "அந்தோ!" என்றதுக்குபாவம் (சுகதுஃகங்களுமித்யாதி) ஸ்வரூபேணவஸ்த்திதியாவது - சுகதுஃகங்களிரண்டுமின்றிக்கேயிருக்கிறவவஸ்த்தை. "அந்தோ!" என்றதுக்குபாவாந்தரம் (இதுதனக்கித்யாதி) விவரணம் (கலக்கிறபோதித்யாதி) ஏதத்விவரணம் (கலவிக்கித்யாதி) மிகமிக - மேன்மேல். "உன்னைப்பிரிவையாம்-" உன்னுடையவிஸ்லேஷமுண்டாம். உத்தரோத்தரமுன்னுடைய விஸ்லேஷவ்யஸநம்வருமென்றபடி. "பிரிவையாம்" என்றிருக்க, பிரிவாம் என்பானென்னென்ன (பிரிவையென்கிறவித்யாதி) செய்யுட்பாடு-அவ்யயம். "பாட்டென்னவும் செய்யுளெனப்படும்" என்றிருக்கையாலே, செய்யுளென்று - பாட்டாய், பாடென்று - சேருகையாய், சந்தஸ்ஸுசேரும்படி யென்றபடி. ஆக, செய்யுட்பாடாயென்றது - சந்தஃபூரணார்த்தமாயென்றபடி. ஆல்-அசை. "போக்கு" என்று ஏகவசநமாய், "வீவ" என்று பஹுவசநமாவானென்னென்ன (பசுவந்தனவித்யாதி) அதாவது-பசுக்களென்று அர்த்தாத்ஸித்திக்குமாபோலே, போக்குக்களென்றும் ஸித்திக்குமென்றபடி. "இனி" என்றதுக்கர்த்தம் (இதுக்குமுன்பித்யாதி) ...*

---

## மூன்றாம்பாட்டு.

வீவனின்பசுநிரைமேய்க்கப்போக்குவெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேமால், யாவருந்துணையில்லையானிருந்துன்னஞ்சனமேனியையாட்டங்காணேன், போவதன்றொருபகலீயகன்றாற்பொருகயற்கண்ணிணைநீருநில்லாச், சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப் பிறந்தவித்தொழுத்தையோர்தனிமைதானே.

### ஆறாயிரப்படி.

( வீவனின் ) உன் பசுமேய்க்கப் போக்குக் காரணமாக நான் முடிவன், விரஹாக்நியாலே யென்னாத்மா தஹ்யமாநமாகாநின்றது, பின்னையொருதுணையுமில்லை, உன்வரவு பார்த்துக்கொண்டு நான் தனியேயிருப்பன், என்துணையான வுன்னை வரவுங்காணேன், நீயகன்றால் இப்பகலெங்கும் போவதுஞ்செய்யாது, இக்கண்ணநீரும்நில்லாது, இந்த வொருதலைமாத்திரமான ஸ்நேஹமானது சாலப்பொல்லாதாகாதேயென்கிறாள். ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஸநீயமான வடிவழகையுடைய வுன்னைக்காணாதே க்லேஸிக்கிற வெங்களுடைய தனிமையானது முடிவாகவேணுமென்கிறாள்.

நின்பசுநிரைமேய்க்கப்போக்கு-நீஸ்வதர்மாநுஷ்டாநமாக நினைத்துப்போகிற வுன்பசுநிரைமேய்க்கப்போக்கிலே, வீவன் - நான்முடிந்துவிடுவன்; வெவ்வுயிர்க்

கொண்டு-விரஹவ்யதையாலே வெவ்விதாகமூச்சுவிட்டு. எனதாவி-என்னுடைய ஆத்மாவானது. வேம்-அத்தாலேபரிதபியாநின்றது. அவ்வவஸ்த்தையில், துணை - துணையாவார். யாவருமில்லை - ஒருவருமில்லை. அவ்வளவிலும், ஆசாபந்தத்தாலே, யான்-நான். இருந்து-முடியாதிருந்து. உன் அஞ்சனமேனியை - அஞ்சநம்போலே தர்ஸநீயமானவுன்வடிவை. ஆட்டம்-நடையாட்டம். காணேன்-காணேன். நீ அகன்றால்-நீபோனால். ஒருபகல்-அந்தவொருபகல்தான். போவதன்று-போகாதேநில்லாநிற்கும். ஆற்றாமையாலே அலமந்து, பொரு - தன்னில்தான்பொருகிற. கயல் - கயல்போன்ற. கண்ணிணை-நீகொண்டாடும்கண்ணிரண்டும். நீரும்நில்லா-நீர்தணித்தாலும் நிற்கிறனவில்லை. இவ்வாய்க்குலத்து-நீபிறந்தவிடைக்குலத்திலே. ஆய்ச்சியோமாய்ப்பிறந்த - இடையராய்ப்பிறவாதே இடைச்சிகளாய்ப்பிறந்த. தொழுத்தையோம்-தண்ணியோமானவெங்களுடைய. இத்தனிமைதானே-இத்தனியிருப்புச்செய்தது. சாவது-போவதாகவேணும்.

தனிமை-ஸ்வபாவமாகையாலே, அதன்முடிவு தங்கள் முடிவென்று கருத்து. தனிமைதானே யெங்களுக்குச் சாவாவதென்றுமாம் ..............................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

நீ யுபேக்ஷித்திருக்க நாங்கள் ஸ்நேஹித்திருக்கிற வொருதலைக்காமம் நசிக்கவேணுமென்கிறாள்.

( வீவனித்யாதி ) உன் பசுநிரைமேய்க்கப்போக்கு நிமித்தமாக, நான்வீவன் - நான்முடிவன். "அதெனக்கு தர்மமன்றோ" என்றிராதே, உனக்கு ஸ்த்ரீவதமாய்ப்பலிக்கக்கிடாய் புகுகிறது. இப்போது முடியும்படிவந்ததென்னென்னில் ( வெவ்வுயிரித்யாதி ) என்னைப்பார்க்கமாட்டாயோ; உன்னுடைய போக்குநிமித்தமாக நெடுமூச்செறிந்து அதுவே ஹேதுவாக வுலர்ந்த வென்னுடைய ஹ்ருதயமானது, விரஹாக்நிகொளுந்தி யெரியாநின்றது; இதிலே நீரைச்சொரியவல்லையே யென்கிறாள் (எனதாவி) உன்னைப்போலேயென்றிராதே கொள்ளாய் அல்லாதாரையும். ( யாவரும்துணையில்லை ) துணையான நீதானேபோனாய், நீபோனால் துணையான தோழிமார்தானேயில்லை, குயில் மயில் தொடக்கமானவை தானே ஊர்ப்பகையாய்த்து. ( யானிருந்து ) நீபோனால் படுவுற்றைத்தான் படப்பெற்றேனோ, எல்லாம் பட்டும் நூறேபிராயமாயிருந்தது; இன்னமொருக்கால் காணலாமென்னும் நசைமுடியவொட்டாதிறே. பிரிந்த விஷயந்தான் முடியவுமொட்டாது, தரித்திருக்கவுமொட்டாது; அர்ஜுநன் பின்பிறந் தெளிவரவுபட்டாப்போலே. (உன்னஞ்சனமேனியை யாட்டங்காணேன்) இருந்தார்ஜீவிக்கும் ஜீவநத்தைத் தான் ஜீவிக்கப்பெற்றேனோ. * ஏழையராவி தேட்டமாயிருக்கிறதுகாணு மிவளுக் கிப்போது. ( உன் ) உன்னை நீதான் கண்ணாடிப்புறத்திலே கண்டறிதியே. கண்டாயாகில் "நம்மைப்பிரிந்தவர்கள்பிழையார்கள்" என்றிருக்கவேண்டாவோ. (மேனியை) ஸ்வரூபத்திலாதல் குணத்திலாதல் இழியுமவளன்றே, காமிநி உடம்பை யாசைப்படுமவளிறே!. (ஆட்டங்காணேன்) அவ்வடிவோ

டே யென்றுனனே சஞ்சரிக்கக் காணப் பெறுகிறிலேன். “இதெல்லா மொருபகலைக்கே” என்றுன் (போவதன்றித்யாதி) உனக்குப்போலேயெ ன்றிராதேகொள்ளா யெங்களுக்கும். நீபோரநின்றுல், நாழிகைமுப்பது சென்றுலும் மலையாளர் வளைப்புப்போலே யோரடிபோராதாய்த்து. அது பகலின் ஸ்வபாவமல்ல (நீயகன்றுல்) உன் ஸ்வபாவத்தாலே. பகலின் ஸ்வபாவமாகில் கூடவிருந்தபோதும் போகாதொழியவேணுமிறே. கூட் விருந்தா லிரவுகாணவொண்ணுதாப்போலே யாய்த்து, நீயகன்றுல் பகல் போகாதபடி. அவன்கூடவிருந்தால் இரவுகாணவொண்ணுதே; *நாரண னைக்கண்டேன் - பகற்கண்டேனிறே. “போவதன்றொருபகல்” என்று இதுதானும் சொல்லமாட்டார்தேகாணு மவனிருக்கிறது; “கலவி செல் லாநிற்கச்செய்தே பிரிவைநினைக்கையாவதென்” என்றிறே யவனிருப்ப து; “பிரியேன்” என்னவல்லன் என்றுளே பண்டே. (பொருகயலித் யாதி) உன்போக்கை நினைத்துப் பாய்கிற கண்ணீர் என்னுல் தகையப் போகிறதில்லை. (நீரும்நில்லா) உன்னைத் தகையிலும் நீரைத் தகையப் போகிறதில்லை. பொருகிற கயல்போலேயாய்த்துப் பிரிவைநினைத்துத்தடு மாறுகிறபடி. அதுக்குச் செய்யவேண்டுவ தென்னென்ன (சாவதித்யா தி) இவ்விடைக்குலத்தி லிடைச்சிகளாய்ப் பிறந்த தண்ணியோமான வெங்களுடைய தனிமைசாவது. நீபோகிலும் போகிருய், இருக்கிலுமி ருக்கிருய், இத்தனிமைநசிப்பது. “இவனுக்கு நான் நூறுபிள்ளை பெற வேணும்” என்ற சாவித்ரியைப்போலே சொல்லுகிருள். அன்றிக்கே, (தனிமைதானே - சாவது) எங்களுக்குத் தனிமையென்றும் விநாச மென்று மிரண்டில்லைகாண். தனிமைதானே விநாசமென்னவுமாம். “நி ன்னலாவிலேன்” என்னுமவரிறே; “இறப்பதற்கேயெண்ணுது” என் றுரேயவரும். அன்றிக்கே, (தனிமை - சாவது) இத்தனிமை சாலப்பொ ல்லாதென்னவுமாம். இவ்வொருதலைக்காமம்போவது. கைக்கிளைத்தலைவி பொறையழிந்தாலெல்லாம் சொல்லப்பெறுமிறே. ........................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (வீவனித்யாதி) “இவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந் த வித்தொழுத்தையோம் தனிமைதானே - சாவது” என்றவற்றைக் கடாக்ஷித்தவ தாரிகை (நீயுபேக்ஷித்திருக்கவித்யாதி.)

“முடிவன்” என்றுல் ஜாத்யுசிததர்மத்தை விடப்போமோவென்ன (அதென க்கித்யாதி.)

வெவ்வுயிர்க்கொண்டு-நெடுமூச்செறிந்துகொண்டு. [வெவ்வுயிர் - பெருமூச்சு. தாத்பர்யம் (என்னைப்பார்க்கவித்யாதி) “ஆவிவேம்” என்றதுக்கு ஹார்த்தபாவமாத ல், “ஆல்” என்றதுக்குபாவமாதல் (இதிலேயித்யாதி) “எனது” என்றதுக்குபாவம், (உன்னைப்போலேயித்யாதி.)

நான்போனுல் வ்ருத்தசிர்த்தநத்தாலே தரித்தாலோவென்ன (யாவரும்து ணையில்லை) இதுக்கர்த்தம் (துணையானவித்யாதி) ஊர்ப்பகை - ஊரிலுள்ளபேரெல் லாம்பகை.

"யானிருந்து" என்றதுக்குபாவம் (நீபோனுலித்யாதிவாக்யத்வயம்) படுவு ற்றைத்தான் படுகையாவது-உத்தரக்ஷணத்திலேமுடிகை. ஆனல் முடியவொண்ணு தோவென்ன (இன்னமொருக்காலித்யாதி) ஆனுல் தரித்திருக்கிறதுக்கென்னென்ன (பிரிந்தவித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (அர்ஜுநனித்யாதி) அவன்போனுனுக நிஸ் சயித்துச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே, "அஞ்சனமேனியை யாட்டங்கா ணேன்" என்றதுக்கு-உருவுவெளிப்பாடாக்கி, அந்தவுருவுவெளிப்பாடுதான் தேட் டமாயிருக்கிறதென்கிருர் (இருந்தாரித்யாதி) விஸ்லேஷத்தி அருவுவெளிப்பாடு கா மிநிகளுக் குஜ்ஜீவநமாயன்றே யிருப்பது, அதுவுமில்லையென்றபடி. ஆனல் * ஏழை யராவியிலே உருவுவெளிப்பாடும் தாரகமாய்த்தில்லையே? யென்ன (ஏழையராவியி த்யாதி) அதவா, "அஞ்சனமேனி" என்றதுக்குபாவம் (இருந்தாரித்யாதி) இருந் தார்-நூறேபிராயமாக விருந்தார். ஜீவிக்கும்ஜீவநம் - அநுபவிக்குமநுபவம். "ஆட் டம்காணேன்" என்றதுக்குபாவம் (ஏழையராவியித்யாதி) என்றிங்ஙனேயோஜிக்க வுமாம். நம் வடிவுனக் கநுபவிக்கவேணுமாகில், மெள்ளச்செய்கிருனென்ருறியிருக் கவொண்ணுதோவென்ன (உன்னையித்யாதி) கண்டால் நாம்செய்யுமதேதென்ன (க ண்டாயாகிலித்யாதி.) ஸ்வரூபாதிகள்கிடக்க திருமேனியைச்சொல்லுவானென்னெ ன்ன ஸ்வரூபத்திலாதலித்யாதி) உக்தார்த்தத்துக்குபபத்தி (காமிநியித்யாதி) "இருந் தார்ஜீவிக்கும்" இத்யாதிவாக்யத்தி னர்த்தாநுகுணமாக "ஆட்டம்காணேன்" என் றதுக்கர்த்தம் (அவ்வடிவோடேயித்யாதி) ஆட்டம்-நடையாட்டம். சஞ்சாரம்.

"நீயகன்றல்-ஒருபகல்-போவதன்று" என்றதுக்குபாவம் (உனக்குப்போ லேயித்யாதி) விவரணம் (நீபேரவித்யாதி) மலையாளர்வளைப்பாவது - மலையாளிகள் ஒருவன்கையிலே யொன்றைவாங்கநினைத்தால் வாங்கியல்லது போகார்கள், வளை ப்புக்கிடப்பர்கள்; அதுபோலேயென்றபடி. "நீயகன்றல்" என்றதுக்கவதாரிகை (அதித்யாதி) பகலின் ஸ்வபாவந்தானுனுலோவென்ன (பகலினித்யாதி) அதாவது- பகலின ஸ்வபாவமேயானுல்,அவனேடே கூடியிருந்தபோது ஒருக்ஷணமாய்ப்போகி றதிறே, அப்போதும் போகாதொழிய வேணுமென்றபடி. அவன் ஸ்வபாவத்தாலே போமோவென்ன; வ்யதிரேக த்ருஷ்டாந்தமுகேநோபபாதநம் (கூடவிருந்தாலித்யா தி) இதுக்கு ப்ரமாணம் (பகற்கண்டேனித்யாதி) இவளைப்போலே அவனும் "நீயக ன்றல்-போவதன்றொருபகல்" என்னவேண்டாவோவென்ன (போவதன்றித்யாதி) மாட்டாமைக்குஹேதுவேதென்ன (கலவியித்யாதி) ஹேத்வந்தரம் (பிரியேனித்யா தி) அதாவது-சொன்னுலும் விஸ்வஸியானென்றபடி. "பேதைநின்னைப்பிரியேனி னியென்றகன்றுன்" என்று திருமொழி,

"நீரும்" என்றசம்பந்தார்த்தம் (உன்னையித்யாதி) "பொரு" என்றதுக்குபா வம் (பொருகிறவித்யாதி) பொருகிற-யுத்தம்பண்ணுகிற.

விவரணம் (நீபோகிலுமித்யாதி) தொழுத்தையோம்-இத்தனிமை, என்றந்வ யிப்பது. இதுக்கு த்ருஷ்டாந்தம் (இவனுக்கித்யாதி) அதாவது-நீபோகாதே கூடவிரு க்கவேணுமென்று மறைத்துச்சொல்லுகிருளென்றபடி. "சாவது" என்கிறவிது-ம ரணவாசியாகவர்த்தாந்தரம் (எங்களுக்கித்யாதி) "தனிமை-விநாசம்" என்னுமதுக் கு ப்ரமாணத்வயம் (கின்னலாலித்யாதிவாக்யத்வயம்) இறப்பதற்கேயெண்ணுது- கைவல்யத்தில் மநஸ்ஸைவையாதேயென்று சப்தார்த்தம். கைவல்யத்தையென்னு

தே, "இறப்பதற்கே" என்கையாலே-பகவத்விஸ்லேஷம் மரணமென்றபடி. இத்தா ல்-கேவலனுக்கு பகவத்ப்ராப்தி யில்லையென்றுகருத்து. திருநெடுந்தாண்டகம், "மி ன்னுருவாய்" இத்யாதி. தொழுத்தையோம்-தண்ணியோம். மூன்றாமர்த்தத்துக்கு, "தனிமை-சாவது" என்றது-தனிமை மரணசமமென்றுசப்தார்த்தம். அதாவது- "𑌮𑍃𑌤𑍋𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑌃𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌮𑍃𑌤𑌂𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌮𑌰𑌾𑌜𑌕𑌮𑍍। 𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌂𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑌂𑌮𑍃𑌤𑍋𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍍𑌵𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌃" (ம்ருதோதரித்ரஃபுருஷோம்ருதம்ராஷ்ட்ரமரா ஜகம் । ம்ருதமஶ்ரோத்ரியம்ஶ்ராத்தம்ம்ருதோயஜ்ஞஸ்த்வதக்ஷிணஃ) என்றாப்போ லே சாவதுக்கொக்குமென்றாய், பொல்லாதென்றபடி. "தனிமை-சாவது" என்றந் வயம். அவன்செய்தபடி கண்டிருக்குமதொழிய, கற்புடையதலைவி "நீபோகல்முடி வன்" என்னலாமோவென்ன (கைக்கிளையித்யாதி) கைக்கிளையென்று-ஒருதலைக்கா மமாய், தலைவியென்று-நாயகியாய், ஒருதலைக்காமமுடையநாயகி யென்றபடி. பொ றை-க்ஷமை ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

# நான்காம்பாட்டு.

தொழுத்தையோந்தனிமையுந்துணைபிரிந்தார்துயரமுநினைகிலைகோ விந்தாநின், றொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித் துறந்தெம்மையிட்ட வைமேய்க்கப்போதி, பழுத்தநல்லமுதினின்சாற்றுவெள்ளம்பாவியேன் மனமகந்தோறுமுள்புக், கழுத்தநின்செங்கனிவாயின்கள்வப்பணிமொழி நினைதொறுமாவிவேமால்.

## ஆறாயிரப்படி.

(தொழுத்தையோம்) அடியோங்கள் தனிமையையும் உன்னைப் பிரிந்து நாங்கள்படுகிற வ்யஸநத்தையு மொன்றும்பாராதே, உன்னுடை ய பசுக்களையேயுகந்து எங்களைத்துறந்து பொகட்டு அவை மேய்க்கப் போதி என்ன; "உன்னுடையகடாக்ஷமே தாரகமாயிருக்கிற நான் உன் னைப்பிரிந்துபோகையாவதென்" என்றாப்போலே சாந்த்வரூபமாய் ப்ரே மகர்ப்பமாய் அதிமதுரமாயிருப்பன சிலபணிமொழிகளை யருளிச்செய்த ருள; இவையிறே நினைக்கநினைக்க வென்னைமாய்க்கிறன வென்கிறாள் ..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணஸ்வபாவனுனநீ ரக்ஷ்யைகதேசமான வெங்களைப் பொகட்டுப்போகாநின்றாய், நாங்களுன்னுடைய க்ருத்ரிமோக்திகளை நினைத்து க்லே ஶியாநின்றோமென்கிறாள்.

கோவிந்தா-கோபீஜநரக்ஷணத்தாலே கோவிந்தாபிஷேகம்பண்ணினவனே. தொழுத்தையோம் - உனக்கு ரக்ஷ்யவர்க்கமாயடிமைப்பட்டவெங்களுடைய. தனி மையும்-தனிமையையும். துணை-துணையானவுன்னை. பிரிந்தார்-பிரிந்தவர்கள். துயர மும்-ஆற்றாமையையும். நினைகிலை-நினைக்கிறிலை. பிரிந்து தனிமைக்காற்றாமைப்பட்ட வார்த்திபாராதே, உன்-உன்னபிமாநமான, தொழுத்தனில் - தொழுவில், பசுக்களை

யே-பசுக்களையே. விரும்பி-ஆதரித்து. எம்மை-ரக்ஷயைகதேசமானவெங்களை. துறந்து-அநாதரித்து. இட்டு-போகட்டு. அவை-அவற்றை. மேய்க்க-ரக்ஷிக்கைக்காகவே. போதி-போகாநிற்புதி. அதுக்குமேலே, பழுத்த-பரிபக்வமாய். நல்லமுதின்-தெளிந்த அம்ருதத்தினுடைய. இன்-இனிய. சாற்றுவெள்ளம் - ரசத்தினுடையவெள்ளமானது. பாவியேன்-பிரிவுக்கடியான பாபத்தையுடையவென். மனமகந்தோறும்-நெஞ்சுபுடைதோறும். உள்புக்கு-புக்கு. அழுத்த-அழுத்தும்படியாக. நின்-உன்னுடைய. செ-சிவந்த. கனிவாயின்-கனிபோலே போக்யமாயிருக்கிற திருப்பவளத்தில். கள்வம்-க்ருத்ரிமமான. பணி-தாழ்ந்த. மொழி-மொழிகளானவற்றை. நினைதொறும்-நினைக்குந்தோறும். ஆவி-என்ப்ராணன். வேம்-பரிதபியாநின்றது.

பணிமொழி-தாழ்வையுடைத்தானமொழி; சொன்னமொழியென்னவுமாம்.

## ஈடு - நான்காம்பாட்டு.

இவன்போக்கை நினைத்து நோவுபடப்புக்கவாறே, "உன்னைப்பிரிகைக்கு சம்பாவனையுண்டோ" என்று இப்புடையிலே சவிநயமாகச்சில வார்த்தைசொல்ல, இவையிறே யென்னை யழிக்கிறதென்கிறாள்.

(தொழுத்தையோம்தனிமையும்) பஞ்சலக்ஷம்குடியிற் பெண்களும் கூடிப்படுகிற தனிமையிறே. தொழுத்தையோமென்றும் அடிச்சியோமென்றும் - தாங்கள்தோற்றதோல்வி தோற்றச்சொல்லுகிறார்கள். (துணைபிரிந்தார்துயரமும்) துணைபிரிந்தாரென்று - உன்னைப்பிரிந்தாரென்றபடி. "துணையென்றால் த்விஷ்டடமாயன்றுகாணிருப்பது" என்னுமாச்சான் - இவர்களு மவனுக்குத்துணையாய், அவனு மிவர்களுக்குத்துணையாயன்றிருப்பது; துணையாகை ஒருதலையிலே வ்யவஸ்த்திதமாய்த்து. துணையாவானவனொருவனுமேயாய்த்து, அல்லாதாரடங்கலும் கழுத்துக்கட்டியாயாய்த்திருப்பது; * வன்துணையிறே. தொழுத்தையோம் தனிமையும் நினைகிறிலை, துணைபிரிந்தார் துயரமும் நினைகிறிலை. பிரிகிறோம் நாங்களென்றும் பிரிகிறதுன்னையென்றும் பார்க்கிறிலை.

(கோவிந்தா) பசுக்களையு மிடையரையும் ரக்ஷிக்கைக்கன்றோகோவிந்தாபிஷேகம் பண்ணிற்று. பிறவிப்பாடும் பின்துடருமிறே. அதாவது - தன்ஸ்த்ரீ ஆர்த்தையாயிருந்தாலும், பசுக்களைவிரும்பி அவற்றுக்குப்புல்லும் நீருமுள்ள விடந்தேடுமித்தனையிறே. (நின்னித்யாதி) உனக்கு ரக்ஷ்யகோடி யிரண்டானால் ஒருதலையே விரும்பவேண்டுகிறதென், இரண்டுதலையையு மொக்கவிரும்பினாலாகாதோ!. (நின்தொழுத்தனில்) ஓரிடத்தே வளைத்துவைத்த பசுக்களையேயோ ரக்ஷிக்கலாவது, உன்கைக்குள்ளகப்பட்டானா ரக்ஷிக்கலாகாதோ!. இவர்களையணைத்துவிட்டுப் பின்னையிறே பசுமேய்க்கப்போவது. (பசுக்களையே) நீபோனால் பிரிவுக்காற்றாமைப்பட வறியாதாரையேயோ நீயாதரிப்பது. (விரும்பி) இவர்களையணைத்துக் கட்டிக்கொடுகிடந்தாலும், கண்ணியென்பது, கன்றுகள் விட்டுக்கொடுபோகாநின்றதென்பதாய் வாய்வெருவுவது அவற்றையேயாய்த்து. இங்கிருக்கும்போதும் நெஞ்சங்கேயாய்த்து. இங்குள்ளது மித்யாப

ரிரம்பணமே. பிள்ளையமுதனார், "ஒருபசுவின்காலிலே முள்பாய்ந்தால் இடையன் தலைகாண்சிக்கொள்ளுவது" என்பராம். சரீரத்திலேயொன்று வந்தால் சுகதுஃகங்களநுபவிப்பானாத்மாவிறே. (துறந்தெம்மை) அவற்றைவிரும்பவிரும்பத் தங்களை சங்க்யஸித்ததென்றிருக்கிறார்கள். (எம்மையிட்டு) அசேதநபதார்த்தங்களைப் பொகடுமாபோலே யெங்களைப் பொகட்டு. இவர்களுடனிருக்கும்போது மவற்றைஸ்மரிக்கும், அவற்றின்பின்னேபோனால் இவர்களைநினையான். (அவைமேய்க்கப்போதி) அவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகப் போகக்கடவை. அவற்றினுடைய ரக்ஷணத்தில் ஆயாசமுண்டு; எங்களுடைய ரக்ஷணத்துக்கு சந்நிதியேயமையும்; "இட்டறவென்பிள்ளையைப்போக்கினேன்" "எற்றுக்கென்பிள்ளையைப்போக்கினேன்" என்று வயிறுபிடிக்கவேண்டும்படியாயிருக்குமது; எங்களுடையரக்ஷணத்தி லாயாசம்வேண்டா, கூடவிருக்கவமையும்.

(பழுத்தவித்யாதி) "நான்போகையாவதென், போனாற்றானுங்களைமறப்பதுண்டோ, என்னாற்றாமை யுங்களுக்குண்டோ, மாதாபிதாக்களுக்குப் பரதந்த்ரனானால் அவர்கள் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே போகிறே னித்தனையன்றோ, போனாலும் நெஞ்சிங்கேயன்றோ" என்றாப்போலே சிலநீசபாஷணங்களைப்பண்ணினான்; இவைகிடா யெங்களைமறக்கவொண்ணாதபடி பண்ணுகிறது. பக்வமாய் அதிவிலக்ஷணமான வமுர்தத்தினுடைய வினிய சாற்று வெள்ளம்போலே போக்யமாம்படி சொல்லுகிற வார்த்தையென்னுதல்; அன்றிக்கே, கலவியிலே யொருவகையைச் சொல்லிற்றாகவுமாம். அதாவது - வாகமுர்த மென்றபடி. "வாயமுதம் தந்தென்னைத் தளிர்ப்பிக்கின்றான்" என்னக்கடவதிறே. (பாவியேன்) அமுர்தமே நஞ்சாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பிரிவை நினைத்து "பிரியேன்" என்னுமிது விஷசமமிறே. (மனமகந்தோறும்) ஹ்ருதயாவகாசந்தோறும் மறக்கவொண்ணாதபடி யழுத்த, உன்னுடைய சிவந்தகனிபோலேயிருக்கிற வாயினுடைய. (கள்வப்பணிமொழி) இச்சாற்றுவெள்ளத்துக் கூற்றுவாய்காணும். எழுதிக்கொள்ளுகிற தாழ்ந்த பேச்சுக்கள். பிரிவைநினைத்துச்சொல்லுகிற வார்த்தையாகையாலே, நெஞ்சையழிக்கக்கடவதாயிறே யிருப்பது. நினைவொன்றும் சொலவொன்றுமாயிருக்கை. (நினைதொறும்) "இவைதாரகமாமோ" என்னும் நினைவாலே நினைக்கப்புகுமே, அதுபாதகமாமே, பின்னையும் விடமாட்டாளே, இங்ஙனே யுருவச்செல்லுமித்தனை. (ஆவிவேமால்) தனக்காஸ்ரயமான ப்ராணனானது வேவாநின்றது. அக்நி ஆஸ்ரயாசியாயிறே யிருப்பது.

பழுத்தநல்லமுதினின் சாற்றுவெள்ளமான – நின்செங்கனிவாயின் கள்வப்பணிமொழி-பாவியேன் மனமகந்தோறும், உள்புக்கழுத்த-நீ மறக்கவொண்ணாதபடி யழுந்தப்பண்ண, அவற்றை நினைக்கநினைக்க ஆவி வேவாநின்றது ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (தொழுத்தையோமித்யாதி.) "நின்செங்கனிவாயின் கள்வப்பணிமொழிநினை தொறுமாவிவேமால்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை யருளிச்செய்கிறார், இதுக்குக் கீழோடே சங்கதி (இவன்போக்கையித்யாதி.)

"தொழுத்தையோம்" என்ற பஹுவசநார்த்தம் (பஞ்சலக்ஷமித்யாதி.) பதப்ரயோகத்துக்கு பாவம் (தொழுத்தையோமென்றுமித்யாதி.) "துணை" என்றால் - உன்னையென்று காட்டுமோவென்ன (துணையென்றாலித்யாதி.) விவரணம் (இவர்களுமித்யாதிவாக்யத்வயம்.) அவனையொழிந்தார் துணையாகவொண்ணாதோ, அவனே துணையாகவேணுமோவென்ன; "அவனொருவனுமேதுணை, அல்லாதாரெல்லாம்பாதகர்" என்று தர்ஸிப்பியாநின்றுகொண்டு, அதுக்கு ப்ரமாணமும்காட்டுகிறார் (துணையாவானித்யாதிவாக்யத்ரயத்தாலே.) கழுத்துக்கட்டி - கழுத்தில்கட்டி போலே பாதகமென்று ஸ்வபாவார்த்தம்; கழுத்திலேகட்டப்பட்ட லிங்கமென்று த்வநி. வன்துணை - வலியதுணை. திருமொழி மூன்றாம்பத்து ஏழாந்திருமொழி ஆறும்பாட்டு, "என்துணையென்று" இத்யாதி. தாத்பர்யார்த்தமாதல், "தொழுத்தையோம்தனிமையும்துணைபிரிந்தார்" என்கிற புநருக்திக்கு பரிஹாரமாதல் (பிரிகிறோமித்யாதி.) அதாவது - எங்கள் மார்த்தவமு முன் வைலக்ஷண்யமும் நினைக்கிறிலையென்றபடி.

"கோவிந்தா" என்றத்தை "தொழுத்தையோம்" இத்யாதியோடே கூட்டிபாவம் (பசுக்களையுமித்யாதி.) அதாவது - எங்களையும் ரக்ஷியாதேவிடலாமோவென்றபடி. "கோவிந்தா - பசுக்களையேவிரும்பி" என்று மேலேகூட்டிபாவம் (பிறவிப்பாடித்யாதிவாக்யத்வயம்.) "பசுக்களையே" என்றவவதாரணார்த்தம் (உனக்கு ரக்ஷயேத்யாதி.) "தொழுத்தனில்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஓரிடத்தே யித்யாதிவாக்யத்வயம்.) தொழுத்தனில் - தொழுத்தில். இவர்கள்கைக்குள்ளே யகப்பட்டார்களோவென்ன (இவர்களையித்யாதி.) "பசுக்கள்" என்ற வல்பசைதங்யவத்தைக்கு பாவம் (நீபோனாலித்யாதி.) விருப்பத்தின் சரமாவதி (இவர்களையணைத்தித்யாதி.) பலிதம் (இங்கிருக்கும்போதுமித்யாதி.) பசுக்களிடத்தில் விருப்பத்தின் சரமாவதிக்கு சம்வாதம் (பிள்ளையமுதினாரித்யாதி.) பசுக்களின் நோவிவனதானதுக்கு த்ருஷ்டாந்தம் (சரீரத்திலேயித்யாதி.) "விரும்பி-எம்மை-துறந்து" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (அவற்றையித்யாதி.) "இட்டு" என்றதுக்குபாவம் (அசேதநேத்யாதி.) "விரும்பி - இட்டு" என்றபதத்வயபலிதம் (இவர்களுடனித்யாதிவாக்யத்வயமும்.) "போதி" என்றதுக்கு ஹார்த்தபாவம் (அவற்றினுடையரக்ஷணத்திலென்றுதொடங்கி நாலுவாக்யம்.) பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து இரண்டாந்திருமொழி, "மிடறு" இத்யாதி, "பற்றுமஞ்சள்" இத்யாதி. எற்றுக்கு - என்ன ப்ரயோஜநத்துக்கு.

அவர்கள்சொன்னதுக்கு சமாதானம் பண்ணிக்கொள்ளுகிறான் (நானித்யாதி) "போதி" என்றதுக்குத்தரம் (நான்போகையாவதென்னென்று) "நினைகிலை" என்றதுக்குத்தரம் (போனாற்றானித்யாதி) "தனிமையும் துயரமும்" என்றதுக்குத்தரம் (என்னாற்றாமையித்யாதி) "பசுக்களையே" என்றதுக்குத்தரம் (நான் மாதாவித்யாதி) "விரும்பி" என்றதுக்குத்தரம் (போனாலுமித்யாதி.)

"பழுத்தநல்லமுதினின்சாற்றுவெள்ளமான - நின்செங்கனிவாயின் கள்வப்பணிமொழி" என்று "சாற்றுவெள்ளம்" என்றத்தை * கள்வப்பணிமொழியோடே யந்வயித்தல்; அன்றிக்கே, "நின்செங்கனிவாயின்-பழுத்தநல்லமுதினின் சாற்

றுவெள்ளம்” என்றுவாகம்ருதமாதல். அதாரஸத்தை “அமுதம்” என்றதுக்குப்ரமாணம் (வாயமுத மித்யாதி) பெரியாழ்வார்திருமொழி, “ கன்னற்குடம் ” இத்யாதி. தளிர்ப்பிக்கை-தரிப்பிக்கையென்றபடி. “கதா நு சாருபிம்போஷ்டம் தஸ்யா: பத்மமிவாநநம் । ஈஷதுந்நம்ய பாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம் ”(கதாநுசாருபிம்போஷ்டம்தஸ்யா:பத்மமிவாநநம் । ஈஷதுந்நம்யபாஸ்யாமிரஸாயநமிவோத்தமம்) என்ருரிறே பெருமாள்.

“பாவியேன்” என்றதுக்கர்த்தம் (அம்ருதமேயித்யாதி) இது கீழ்ச்சொன்ன முந்தினவர்த்தத்துக்கநுகுணம். அம்ருதம்போன்றமொழி நஞ்சாவானென்னென்ன (பிரிவையித்யாதி) அங்ஙனன்றிக்கே, (அம்ருதமே) இத்யாதிவாக்யம் த்விதீயார்த்தாநுகுணம், (பிரிவைநினைத்து) இத்யாதிவாக்யம் ப்ரதமார்த்தாநுகுணமெனனவுமாம். அழுத்த-நீயழுந்தப்பண்ணவென்றபடி. முந்தினவர்த்தத்திலே ரஸோக்தி (இச்சாற்றுவெள்ளத்துக்கித்யாதி) “கள்வம்” என்று - களவாய், அத்தால்-ஆகர்ஷகத்வமாகவர்த்தம் (எழுதிக்கொள்ளுகிறவித்யாதி) தாழ்ந்தபேச்சாலுல் ஆவிவேகவேணுமோவென்ன (பிரிவைநினைத்தித்யாதி) “கள்வம்” என்றதுக்கு-கபடமாகவர்த்தாந்தரம் (நினைவொன்று மித்யாதி) பணிமொழி-நீசபாஷணம். ஆக, “கள்வம்” என்று-ஆகர்ஷகமென்னுதல், கபடமென்னுதல் என்றர்த்தத்வயம். “நினைதொறும்” என்கிற ப்ரகாரபாஹுள்யத்துக்குபாவம் (இவைதாரகமாமோவித்யாதி) தனக்கென்றது-நினைவுக்கென்றபடி. ப்ராணனென்று - ஆத்மாவைச்சொல்லுகிறது. ஆஶ்ரயம் வேவானென்னென்ன (அக்நியித்யாதி) அதாவது-அக்நிதனக்காஶ்ரயமான காஷ்ட்டத்தை தஹிக்குமாபோலே, நினைவும் தனக்காஶ்ரயமான வாத்மாவை தஹிக்கிறதென்றபடி. அதவா, நினைவுக்காஶ்ரயம் மநஸ்ஸாகையாலே, ப்ராணனென்று - மநஸ்ஸைச்சொல்லுகிற தென்னவுமாம்,

முந்தினவர்த்தத்திலே, அந்வயம் (பழுத்தவித்யாதி) (நீமறக்கவொண்ணுதபடி) என்றதுக்குச்சேர, “பணிமொழியைக்கொண்டு” என்று கூட்டிக்கொள்வது. “வாகம்ருதம்” என்றபக்ஷத்தில், நின்செங்கனிவாயின் - பழுத்தநல்லமுதினின் சாற்றுவெள்ளமென்றுதொடங்கி, அழுத்த-அழுந்தப்பண்ண, அதுக்குமேலே, கள்வப்பணிமொழிநினைதொறு மாவிவேமால் என்றந்வயம். பணி-தாழ்ச்சி, மொழி- உக்தி; நீசபாஷணமென்றபடி ..........................................................*

---

# ஐந்தாம்பாட்டு.

பணிமொழிநினைதொறுமாவிவேமாற்பகனிரைமேய்க்கியபோயகண்ணு
பிணியவிழ்மல்லிகைவாடைதூவப்பெருமதமாலையும்வந்தின்றுலோ [தந்
மணிமிகுமார்பினின் முல்லைப்போதென் வனமுலைகமழ் வித்துன்வாயமுதந்
தணிமிகுதாமரைக்கையையந்தோவடிச்சியோந்தலைமிசைநீயணியாய்.

## ஆறுயிரப்படி.

( பணிமொழி ) “ பசுமேய்க்கப்போகாதிருக்கச்செய்தே இப்படி படுகிறதென்” என்ன;

பசுமேய்க்கப்போருயேயல்லையோ, பசுமேய்க்கப்போய் பகலுமெல்லாம் முடிந்து பிணியவிழ்மல்லிகைவாடைதூவப் பெருமதமாலையும்வ

ந்ததுகிடாய், ஈண்டப்பகலெல்லா முன்னைப்பிரிந்தாலுள்ள வ்யஸநமெல்லாம் தீரும்படி யென்னை யொருக்கால் புல்கி, ம்ருதசஞ்சீவநமாய் அம்ருதகல்பமான திருவார்த்தைகளாலே யென்னை யுஜ்ஜீவிப்பித்து, என்னுடையவார்த்தியெல்லாம் போம்படி யுன்னுடைய வழகிய திருக்கைகளை யென்றலையிலே யொருக்கால் வைத்தருளாயென்கிறாள். .................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய விஸ்லேஷத்தாலே யென்னை வாடைதொடக்கமானவை நலியாநின்றன, என்னார்த்தி தீரும்படி சம்ஸ்லேஷித்து ஆஸ்வசிப்பிக்கவேணுமென்கிறாள்.

பணிமொழி - நீ ஆஸ்வாஸகரமாகச் சொல்லுகிற வார்த்தைகள்தானே. பிரிவுக்குறுப்பாகையாலே, நினைதொறும் - நினைக்குந்தோறெல்லாம். ஆவி - நெஞ்சு. வேம் - வேவாநின்றது. பகல் - பகலெல்லாம். நிரைமேய்க்கிய - நிரைமேய்க்கைக்காக. போய - போய்விட்ட. கண்ணா - க்ருஷ்ணனே. பிணி - கட்டிலேயகப்பட்டு. அவிழ் - விகஸிதமான. மல்லிகை - மதுவையுடைத்தான மல்லிகையை. வாடை - வாடையானது. தூவ - தூவாநிற்க. பெரும் - பெரிய. மதம் - செருக்கோடே. மத்தகஜம்போலே, மாலையும் - மாலை. வந்தின்று - வந்ததித்தனை. இதின்கையிலே யகப்படாதபடி, மணி - கௌஸ்துபரத்நமானது. மிகும் - பேரொளிவிஞ்சிவருகிற. மார்பினில் - திருமார்பில். முல்லைப்போது - முல்லைப்பூவானது. என் - என். வனமுலை - அழகியமுலையிலே. கமழ்வித்து - கமழும்படியாகப் பரிஷ்வங்கித்து. உன்வாயமுதம் - நிரதிசயரஸமான வுன்னுடையவாகம்ருதத்தை. தந்து - தந்து. அணிமிகு - அலங்காரோத்தரமாய் தர்ஸநீயமான. தாமரை - தாமரைபோன்ற. கையை - கையை. அடிச்சியோந்தலைமிசை - அடிச்சியோமான வெங்கள்தலையிலே. நீயணியாய் - அலங்காரரூபமாக வைக்கவேணுமென்று அக்ராம்யமாக சம்ஸ்லேஷப்ரகார சூசகமாயிருக்கிறது. அந்தோ! - அந்தோ!, என்னாற்றாமையை யுனக்கறிவிக்கவேண்டுவதே! என்றுகருத்து..................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

"நான் சந்நிஹிதனாயிருக்க நீ யிப்படி படுகிறதென்" என்ன; நீ பசுமேய்க்கக்கடவையான பின்பு நீயும்போனாய், நீபோனால் நலியக்கடவ சந்த்யாதிபதார்த்தங்களால் நலிவுபடுகிற வென்னை யாஸ்வசிப்பித்தருளவேணுமென்கிறாள்.

(பணிமொழிநினைதொறுமாவிவேமால்) பிரிவைநினைத்து "பிரியேன்" என்றுசொல்லுகிற வுன்வார்த்தைபோலே உன்னைப்பிரியாமைக்காகச் சொல்லுகிற வார்த்தையல்ல; உன்னது * கள்வப்பணிமொழி யாகையாலே பொய், இது அநுபவத்துக்குப் பாசுரமிட்டுச் சொல்லுகிறதாகையாலேமெய்.

நான்போனேனோவென்ன (பகலித்யாதி) பகலெல்லாம் பசுமேய்க்கப்போனாய். (கண்ணா) என்று சம்போதித்து, அவன்றனக்கே "நீ போனாய்" என்கிறாளிறே!. (மேய்க்கிய) மேய்க்க. (பிணியித்யாதி)

நீபோனால் பாதகமாகக்கடவ * மல்லிகைகமழ்தென்றல் தொடக்கமானவை மறுவலிடுகையாலே, நீபோனமை நிஸ்சித மென்கிறாள். கட்டவிழுகிற மல்லிகையினுடைய மணத்தை வாடையானது தூவாநின்றது. ராவணன் சந்ந்யாசி வேஷத்தைக்கொண்டு வந்துதோற்றினாப்போலே, வாடையானது குளிர்காற்றாய்வந்து நலியாநின்றது. (தூவ) வெக்காயம் தட்டாமே கடக்கநின்று வீசாநின்றது; "பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:" (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:.) மத்தகஜமானது முன்னே தலைப்பறை கொட்ட வருமாபோலே, வாடையை முன்னடக்கவிட்டுக்கொண்டாய்த்து மாலைவருகிறது. இவளை மதித்தபடியாலே கூட்டுப்படையாய் வாராநின்றதாய்த்து. (வந்தின்றாலோ) வந்ததுகிடாய் - உடம்பிலே பட்டொழிந்ததுகிடாய். பகதத்தன் விட்ட அஸ்த்ரத்துக்கு அர்ஜுநனைப் பின்னையிட்டு உன் மார்வையேற்றாப்போலே, நடுவேபுகுந்து கட்டிக்கொள்கிடாய். பெரிய கீர்த்தியையுடைய மாலையானதுவரும் என்றஞ்சுகிறதல்ல, வந்தது. ஆனால் செய்யவடுப்பதென்னென்ன (மணிமிகுமார்வினில்) ஸ்ரீகௌஸ்துபம் நிறம்பெறும்படியான மார்வென்னுதல்; திருமார்வடங்க ஸ்ரீகௌஸ்துபத்தில் புகரோயாம்படி யிருக்குமென்னுதல். கலவியிலும் கழற்றவேண்டாதபடியிறே ஸ்ரீகௌஸ்துபமிருப்பது; "நிரதிஶயஸுகஸ்பர்ஶ" என்னக்கடவதிறே. இவளுடைய ஸ்த்ரீத்வத்துக்கு ஸ்தநம்போலே யாய்த்து அவனுடைய பும்ஸ்த்வத்துக்கு ஸ்ரீகௌஸ்துபம். புருஷோத்தமத்வ லக்ஷணமிறே. அம்மார்வில் முல்லைமாலையாலே யென்னுடையவழகியமுலையைப் பரிமளிதமாக்கி. ஸ்ரீகௌஸ்துபத்தோடு தோளில்மாலையோடுவாசியின்றிக்கே போகோபகரணமாயிருக்கிற தாய்த்து. தோளில்முல்லைமாலையின் பரிமளத்தை யென்முலைக் காக்கவேணு மென்கையாலே, அக்ராம்யமாகக் கலவியைச் சொன்னபடி. குளித்துப் பூச்சூட விருப்பாளைப்போலேயாய்த்து இம்முலைகள். இவை ப்ரஹ்மசாரிமுலையாகாமே, இம்மாலையில் பரிமளத்தாலே இவற்றை வாஸிதமாக்காய் – அம்மாலையில் பரிமளமிக்கும் கோதங்குமாகப் பண்ணவேணும். அம்மாலையில் பரிமளம் முலையிலேயாம்போது கலவியையொழியக்கூடாதிறே; "கிம்ஶுகம்வநமாலாஸங்க்ரமஸ்ய" (கிம்முகம்வநமாலாஸங்க்ரமஸ்ய) என்றாப்போலே. (வாயமுதம்தந்து) சம்ஶ்லேஷரஸ முன்மஸ்தகமாக மிக்கவாறே தாரணார்த்தமாகச் சிலபேச்சுண்டிறே பேசுவது, அப்பேச்சாதல்; அன்றிக்கே, வாகம்ருதத்தைச் சொல்லவுமாம். பேச்சு என்று நிர்வஹித்துப்போருவது. (அணியித்யாதி) உன்போக்கை நினைத்து நாநீர்வருகிறதில்லை, அதுக்குப் பரிஹாரமாக உன்கையை யென்தலைமேலே வைக்கவல்லையே. நாநீர் வருகைக்கு இவர்களுடைய முந்திரிகைப்பழ மிருக்கிறபடி. (அணிமிகுதாமரைக்கை) ஆபரணப்ரசுரமாய்; அதுதான் மிகையாம்படி "ஸர்வபூஷணபூஷார்ஹா:" (ஸர்வபூஷணபூஷார்ஹா:) என்கிறபடியே

தனக்குத்தானே ஆபரணமென்கிற கையை. "பசுமேய்க்கப்போனால்வரு மளவுமெனக்கு தாரகமாக வுன்கையிலாபரணத்தைத்தா, உன்கையி லாபரணத்தைத்தா" என்று அவர்களுக்கற்றுக்காட்டி வாங்கியிட்டுவைக் குமே; பசுமேய்க்கப்போகைக்குத் தானுப்பித்தபடியைச் சொன்னாளா கவுமாம். அத்தைச்செய்து அவன் போகப் புக்கவாறே சிதிலையாகிறாளி றே. (தாமரைக்கையை) ஆபரணங்கள் மிகையாம்படியான கையை. (அந்தோ!) சேர்ந்து குளிர்ந்த தண்ணீரை விடாயர்க்கு வாராயென்று சொல்லவேண்டுவதே யுனக்கு. (அடிச்சியோம்) அழகுக்குத் தோற்ற தோல்வி சொல்லுகிறாள். (தலைமிசைநீயணியாய்) ஆபரணத்துக் கக் கைபோலேயாய்த்து அக்கைக்கிவள்தலை. "பாதபங்கயமேதலைக்கணியாய்". என்பது, "அடிச்சியோம்தலைமிசைநீயணியாய்" என்பதாய், காலைக் கை யைப்பிடித்துக் காரியம் முற்றுவிகக்ப் பார்க்கிறார்கள். "ஃீயஃ-ஹூா-நஃஷு ஜுஸிஷ்ழ-தி" (மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி) என்றிறே இவர்களிருப்பது. "இங்கிரப்பந்தங்களெல்லா மறிவாரார், வேணுமாகில் எடுத்துவைத்துக் கொள்ளாய்" என்றான்; காலன்கொண்டு மோதிரமிடுவாரைப்போலே என்பேற்றுக்கு நான் யத்நம்பண்ணுமவளோ, நீயே மேல்விழுந்து தரக் கொள்ளுமவளன்றோ நான். என்று மத்தலையாலே பெறவிருக்குமவர்களி றே யிவர்கள்தாம். (அணியாய்) ஆற்றாமைமிக்கதென்று அவ்வழக்கு ச்செய்யோங்காண், நீ செய்வுற்றை நாங்கள் செய்யவோ. ..............*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (பணிமொழியித்யாதி) "பகல்நிரைமேய்க்கியபோயக ண்ணா" என்றதுக்கு ப்ரசங்கமருளிச்செய்யா நின்றுகொண்டு, "பிணியவிழ்மல்லி கை" இத்யாதியைக் கடாக்ஷித்து பாட்டுக்கவதாரிகை (நாணித்யாதி.) சந்த்யாதி சாயம்சந்த்யாதி.

மீளவும் "பணிமொழிநினைதொறுமாவிவேமால்) என்றதுக்கு பாவம் (பி ரிவைநினைத்தித்யாதிவாக்யத்ரயம்.) அதாவது - நான் போகாமைக்காக வொன்றை ச்சொன்ன யத்தனைபோக்கி இது சத்யமன்றென்று அவன் சொன்ன வார்த்தையை ஹ்ருதிகரித்துக்கொண்டு, தான்சொன்னவார்த்தை சத்யமென்று அவன்னெஞ்சிலே படுத்துகைக்காக மீளவும் சொல்லுகிறாளென்றபடி.

ஈடுபாடு (கண்ணுவென்றித்யாதி;) இதொரு ப்ராந்தி யிருந்தபடியென் எ ன்றபடி. (என்கிறாளிறே) என்றவநந்தரம், "கூடவிருக்கச்செய்தே பிரிவை யதி சங்கைபண்ணுகிறதினூற்றம்" என்கிற வ்வளவு மத்யாஹரித்துக்கொள்வது.

சந்நிஹிதனை "போனாய்" என்கிறதென்கொண்டென்ன (நீபோனாலித்யா தி) இது மேலுக்கவதாரிகை. கட்டவிழுகிற - விகசிதமாகிற. பிணி - கட்டு, முகு ளம். மல்லிகைமணத்தை தென்றலொழிய ப்ராதஃகாலவாயுவான வாடைவீசக் கூ டுமோவென்ன (ராவணனித்யாதி.) குளிர்காற்றாய் - தென்றலாய். வாடைதென் றலி ஞ்காரத்தை யேறிட்டுக்கொண்டு வந்ததென்றபடி. வெக்காயம் - ஔஷ்ண்ய ம். கடக்கநின்று வீசுகிறதுக்கு ப்ரமாணம் (பத்மகேஸரோத்யாதி) "வஜூகெஸர

𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑍋 𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌰𑌵𑌿𑌨𑌿𑌸𑍍𑌸𑍃𑌤𑌃 । 𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌾𑌸 𑌇𑌵 𑌸𑍀𑌤𑌾𑌯𑌾 𑌵𑌾𑌤𑌿 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌮𑌨𑍋𑌹𑌰𑌃 " (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத꞉ । நிஸ்வாஸ இவஸீயாவாதிவாயுர்மநோஹர꞉). இதி கிஷ்கிந்தாகாண்டே.

வாடைதூவமாலைவருகிறதுக்கு த்ருஷ்டாந்தம் (மத்தகஜமித்யாதி.) இது "பெருமதம்" என்றத்தைப்பற்ற. தலைப்பறை - முன்னே கொட்டுகிறவாத்யம். மாலை-சந்த்யை. மாலை வாடையைக் கூட்டிக்கொண்டு வருவானென்னென்ன (இவளை யித்யாதி.) வந்தின்று - வந்தது. விவரணம் (உடம்பிலேயித்யாதி.)

ஆனால் செய்யவடுப்பதென்னென்ன (பகதத்தனித்யாதி.)

"பெருமதமாலை" என்றதுக்கு சப்தார்த்தம் (பெரியகிளர்த்தியையித்யாதி.)

(ஆனால்செய்யவடுப்பதென்னென்ன) என்றவநந்தரம், (பகதத்தன்) இத்யாதிவாக்யமநுசந்தேயம்; இது "மணிமிகுமார்வு" இத்யாதிக் கவதாரிகையென்றுகொள்ளவுமாம். மணிதான் மிகும்படியான மார்வென்று அர்த்தம் விவக்ஷித்து, இத்தால் பலிதம் (ஸ்ரீகௌஸ்துபமித்யாதி.) மணியே மிகும்படியான மார்வென்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, அத்தால்பலிதம் (திருமார்வடங்கவித்யாதி.) "வனமுலைகமழ்வித்து" என்று சம்ஸ்லேஷம் சொல்லாநிற்க, தத்விருத்தமன்றோ கௌஸ்துபமென்ன (கலவியிலுமித்யாதி.) அதுக்கடியேதென்ன (நிரதிசயேத்யாதி.) நிரூபகமாகையாலும் கழற்றவொண்ணாதென்று பரிஹாராந்தரம் (இவளுடையவித்யாதி) என்னுதல், "மணிமிகுமார்வு, வனமுலை" என்ற பதத்வயத்துக்கும் பாவமாதல். சப்தார்த்தம் (அம்மார்விலித்யாதி.) முல்லைப்போது - முல்லைப்போதாலே யென்றபடி. போதென்று - புஷ்பமாய், முல்லைப்பூமாலையைச் சொல்லுகிறது. "மணிமிகுமார்வு - முல்லைப்போது" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (ஸ்ரீகௌஸ்துபத்தோடித்யாதி.) முலையை பரிமளிதமாக்கினலமையுமோவென்ன (தோளிலித்யாதி.) அக்ராம்யமாக - கோப்யமாகவென்றபடி. முலை என்னாதே "வனம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (குளித்தித்யாதி;) "என்" என்றதுக்கு பாவமாதல். "வனம்" என்று - அழகு. "கமழ்வித்து" என்றதுக்குபாவம் (இவையித்யாதி.) விவரணம் (அம்மாலையித்யாதி.) "வனமுலைகமழ்வித்து" என்று அக்ராம்யமாகக் கலவியைச் சொல்லும்படியென்னென்ன (அம்மாலையிலித்யாதி.) இதுக்குதாஹரணம் (கிம்முகமித்யாதி.) வநமாலாஸங்க்ரமஸ்ய, - கிம்முகம்-கிம்த்வாரம். வழியே தென்றபடி. இந்த ப்ரமாணம் வந்தவிடத்தே கண்டுகொள்வது.

வாயமுதம் - அம்ருதம்போன்ற வார்த்தையென்று முந்தினவர்த்தம்.

"அணி" இத்யாதிக்கவதாரிகையாதல், தாத்பர்யமாதல் (உன்போக்கையித்யாதி.) ரஸோக்தி (நாநீரித்யாதி.) முந்திரிகைப்பழம் - த்ராக்ஷைப்பழம். "தாமணைக்கை" என்றதுக்குபாவம் (அதுதானும் மிகையித்யாதி.) ஸர்வபூஷணபூஷயிதுமர்ஹா꞉ என்று விவக்ஷிதம். ஆபரணப்ராசுர்யத்துக் கடியேதென்ன; த்விவிதமாகக் காட்டுகிறார் (பசுமேய்க்கவித்யாதிவாக்யத்வயத்தாலே.) அற்றுக்காட்டி-அத்யந்தபரதந்த்ரனென்றபடி. தானே அலங்கரித்தால் து꞉கிப்பானென்னென்ன (அத்தைச்செய்தித்யாதி.) (அதுதான் மிகையாம்படி) என்று கீழ்ச்சொன்னத்தை பதோபாதாந பூர்வகமாக சப்தத்திலேறிட் டருளிச்செய்கிறார் (தாமணைக்கையையித்யாதி.) "𑌆𑌯𑌤𑌾𑌶𑍍𑌚 𑌸𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌬𑌾𑌹𑌵𑌃 𑌪𑌰𑌿𑌘𑍋𑌪𑌮𑌾𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌷𑌣𑌭𑍂𑌷𑌾𑌰𑍍𑌹𑌾𑌃 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌨 𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌾𑌃" (ஆயதாஸ்சஸுவ்ருத்தாஸ்ச பாஹவ꞉பரிகோபமா꞉ । ஸர்வபூஷணபூஷார்ஹா꞉ கிமர்த்தம்நவிபூஷிதா꞉" ரா

மலக்ஷ்மணௌ த்ருஷ்ட்வா ஹநுமாந். "தாமரைக்கையை - நீ அணியாய்" என்ற த்தைக் கடாக்ஷித்து, "அந்தோ!" என்றதுக்கு ஹார்த்தபாவம் (சேர்ந்தித்யாதி.) "தாமரைக்கை" என்று - கையில் குளிர்த்தியைச் சொல்லிற்றிறே. "அணிமிகுதாமரைக்கையை" என்றவநந்தரம் "அடிச்சியோம்" என்றதுக்குபாவம் (அழகுக்கித்யாதி.) அடிச்சியோம் - சேஷபூதைகளோம். "அணிமிகுதாமரைக்கை" என்ற வழகுக்குத்தோற்றவென்றபடி. வையாயென்னாதே "அணியாய்" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஆபரணத்துக்கித்யாதி.) அதாவது - அக்கை ஆபரணத்துக்கு அலங்காரமானுப்போலே இவள்தலைக்கு மக்கையாபரணமானபடி யென்றபடி. "(அக்கைக்கிவள்தலை) என்றது - பாடஸ்கலநத்தாலே வந்ததத்தனை; (இவள்தலைக்கக்கை) என்றே பாடம்" என்றருளிச்செய்வர். "நீயணியாய்" என்று நிர்ப்பந்திப்பானென்னென்ன; ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் (பாதபங்கயமேயித்யாதி.) "அணியாய்" என்கைக்கு, இவர்களாபரணமென்று நினைத்திருப்பார்களோ வென்ன (மதியேத்யாதி) ஸ்தோத்ரே, "கதாபுந:" (கதாபுந:) இத்யாதி. (இவர்களிருப்பது) என்று பஹுவசநமாகச் சொன்னது, இவர் ப்ரார்த்தித்தது எல்லார்க்குமொக்குமென்று தோற்றுகைக்காக. "நீயணியாய்" என்றதுக் கவதாரிகை (இந்நிர்ப்பந்தங்களித்யாதி.) "நீயணியாய்" என்றதுக்குபாவம் (காலனித்யாதிவாக்யத்வயம்.) ஸ்வாபதேசம (என்றுமித்யாதி.) காலன்கொண்டு - காலபுருஷதாநம்வாங்கி. "காலன்கொண்டு" இத்யாதி வாக்யவிவரணம் (ஆற்றாமையித்யாதி.) அல்வழக்கு - அப்ராப்தம்..........................................................*

# ஆறாம்பாட்டு.

அடிச்சியோந்தலைமிசைநீயணியாயாழியங்கண்ணாவுன்கோலப்பாதம்
பிடித்ததுநடுவுனக்கரிவையரும்பலரதுநிற்கவெம்பெண்மையாற்றோம்
வடித்தடங்கண்ணிணைநீருநில்லாமனமுநில்லாவெமக்கதுதன்னாலே
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்குவேமெமதுயிரழன்மெழுகிலுக்கே

## ஆறாயிரப்படி.

(அடிச்சியோம்) உன்னுடைய அழகியதிருக்கைகளை அடியோங்களுடைய தலையிலேவைத்தருளித் திருக்கண்களாலே குளிரப் பார்த்தருளாயென்று பின்னையு மிங்ஙனே சொல்லுமளவில்;

"ஒருபகல்மாத்திரமேயன்றோ பசுமேய்க்கப்போய் நான் பிரிந்திருப்பது, இதுக்கிங்ஙனே படவேணுமோ" என்று அவன்சொல்ல;

பசுமேய்க்கப் போகையாவது உனக்கபிமதைகளா யிருப்பாரோடே நீ கலந்து பரிமாறுகையிறே, ஆனபின்பு, இங்ஙனேபட்வேணுமோ என்றுசொல்லலாமிறே யுனக்கு, அதுநிற்க, நாங்களுன்னைப்பற்றியல்லது தரிக்கமாட்டாத பிறவிபிறக்கையாலே உன்னைப்பிரியில் நாங்கள்தரிக்கமாட்டோம், இக்கண்ணநீரும் நில்லாது, நெஞ்சுதளராநின்றது, ஆதலால், நீ பசுநிரைமேய்க்கப் போகிற தெங்களுக்கொன்றும் பொறுக்கவொ

ண்ணாது, எங்களுயிரானது விரஹாக்நியாலே வேவக்கிடாய்ப் புகுகிற தென்கிறுள். ............................... ..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய விஶ்லேஷ மெங்களுக்கு க்லேஶமாயிருக்கும், எங்களார்த்தி தீரும்படி அகாதஸ்வபாவனான வுன்னுடைய திருவடிகளைத் தலையிலேவைத்தருளவேணுமென்கிறுள்.

ஆழி-கடல்போலே அளவிடவொண்ணாதஸ்வபாவத்தையுடையையாய். அம்-தர்ஶநீயனான. கண்ணா - க்ருஷ்ணனே. உன் - உன்னுடைய. கோலப்பாதம்-அலங்காரோத்தரமான திருவடிகளை. அடிச்சியோந் தலைமிசை - ஆநந்யார்ஹைகளான வெந்தலைமேலே. நீயணியாய் - வைத்தருளவேணும். வந்தால் செய்கிறேமென்னவொண்ணாது, நடுவு - நீ போகிறகாரியத்துக்கு நடுவே. காற்கட்டாம்படி, அதுபிடித்து - அத்திருவடிகளைப் பிடித்து. அரிவையரும் - தங்கள் மேன்மை தலைபெற்றிருப்பாரும். உனக்கு - உனக்கு பஞ்சலக்ஷம்குடியும் சேஷமாகையாலே. பலர்-பலருமுண்டாயிருக்கும். உன்பரப்பைச் சுருக்கப்புகுகிறேமோ, அது நிற்க - அது நிற்க. எம்பெண்மை - எங்கள் ஸ்த்ரீத்வத்தை. ஆற்றேம் - ஆற்றி அடக்கமாட்டுகிறிலோம். உன்னைப்போலே வன்மையின்றியே அபலைகளான வெங்களுக்கு ஆற்றுமையாலே, வடி - மாவடுவிற்பிளவுபோலே தர்ஶநீயமாய். தடம் - பெருத்து. கண்ணிணை-நீ ஶ்லாகிக்கும் கண்களிரண்டில். நீரும்நில்லா - நீரும் தகைவுபட்டு நிற்கிறதில்லை. மனமும் - நெஞ்சும். நில்லா - ஒருநிலையில் நிற்கிறதில்லை. அதுதன்னாலே - ஆகையாலே. எமக்கு, நின் - உன்னுடைய. பசுநிரை மேய்க்கப்போக்கு - பசுமேய்க்கப் போக்கு. வெடிப்பு - உத்வேககரமாயிராநின்றது. எமதுயிர்-எங்களாத்மாவானது. அழல் - நெருப்பில். மெழுகில் - மெழுகுபோலே. உக்கு - உருகி. வேம் - வேவாநின்றது.

அபரிச்சேத்யமான கடல்போன்ற கண்ணையுடையவனென்றுமாம். .........*

## ஈடு - ஆறும்பாட்டு.

உனக்குப்போனவிடமெங்கு மபிமதைகள் பலருளர், உனக்கொருகுறையில்லை, நாங்களுன்னைப்பிரிந்து தரிக்கமாட்டுகிறிலோம், உன்போக்கான தெங்களுக்கு அஸஹ்யமென்கிறுள்.

( அடிச்சியோந்தலைமிசை நீயணியா யாழியங்கண்ணா ) தோற்றுணா யிரக்கையாலே தடவவேண்டாவோ!. (ஆழியங்கண்ணா) கடல்போலே ப்ரமஹரமாய் தர்ஶநீயமான கண். ( நீயணியாய் ) என்கிறவதினருகே, ( ஆழியங்கண்ணா ) என்கையாலே - திருக்கண்களாலே குளிரநோக்கவேணும்.

உங்கள்கையாலே ஸ்பர்ஶிக்கவேணுமென்றன்றே நானிருப்பது, எனக்குப் போக்குண்டோ, போனாலுங்களை யொழியப் புறம்புவிஷயந்தானெனக்குண்டோ வென்ன; ஓங்காண் அதுகிடக்கிடாய், ( உன்கோலமித்யாதி ) உன்திருவடிகளைப் பற்றியிருப்பாரநேகர், உனக்குப்போனபோன விடமெங்கும் பெரியதிருநாளன்றே. ( நடுவு ) போகிறகார்யமொழி

ய நடுவே. ( அரிவையர் ) தங்கள் பருவத்தாலே துவக்கவல்லவர். (பலர்) ஒருவரிருவரோ. "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி," ( ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி, ) "பதினாறுயிரவர்தேவிமார்."

( அதுநிற்க ) அதுகிடக்க. ஆனைக்கூட்டத்துக்குக் கதவிடப்புகுகிறோமோ. ( எம் பெண்மையாற்றோம் ) எங்கள் ஸ்த்ரீத்வங்கொண்டாற்றமாட்டுகிறிலோம். நீ போனால் நாங்கள் ஜீவிக்கமாட்டோம்.

ஸ்த்ரீத்வம் ஸ்வரூபமானால் வருமளவும் வருந்தி தரிக்கவேண்டாவோவென்ன ( வடித்தடங்கண்ணிணை நீரும்நில்லா ) எங்களைப்பார்க்கமாட்டாயோ. ஜீவிப்பாருடைய லக்ஷணமுண்டோ எங்களுடம்பில். கூர்த்துப் பெருத்திருந்துள்ள கண்கள்நீர் மாறுகிறதில்லை. ஓராளுமொரு நோக்கும் நேராம்படி யிதொருகூர்மையே!, போக்யதையில் பரப்பு போக்தாக்க ளளவன்றியே யிருக்கும்படியே! என்று நீ வாய்வெருவும் கண்கள்படுகிறபாடுபாராய். ( நீரும்நில்லா ) நீநிற்கிலும் நீர்நிற்கிறதில்லை. உன்னைத் தகையிலும் நீரைத் தகையப்போகிறதில்லை.

நில்லாவாவதென், வருந்தித் தகையவேண்டாவோ வென்ன; ஊற்றைத் தகையவேணுமே இது நிற்கும்போதென்கிறாள். ஆனால் ஊற்றானநெஞ்சைத் தகையுமித்தனையன்றோ வென்ன ( மனமும்நில்லா ) தைர்யபங்கம் பிறந்து நாங்கள் படுகிறபாடு பாராயோ. வருந்தி நெஞ்சைப் பிடித்து தரிக்கவேண்டாவோவென்ன (எமக்கு) நீயாகவேணுமே யதுக்கு - பிரிகைக்கும் பிரிவில் நெஞ்சிளையாமைக்கும். * யாமுடையாயன்றன்மனம்கல்லிறே.

( அதுதன்னாலே ) இப்படி மநஸ்ஸு சிதிலமாகையாலே. ( வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு ) நீ பசுமேய்க்கப்போகிறவிது வெடிப்பு. வெடிப்பாவதென்னென்ன ( வேமித்யாதி ) எங்களுடைய ப்ராணனானது அக்நிஸகாசத்தில் மெழுகிலுங்காட்டி லுருகிவெந்துபோகாநின்றது. உன் பசுநிரைமேய்க்கப் போக்கானது, வெடிப்பு - விநாசம்.........*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( அடிச்சியோமித்யாதி. ) "உன்கோலப்பாதம்பிடித்தது" என்றுதொடங்கி "வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( உனக்கித்யாதி. )

அடிச்சியோந் தலைமிசை நீயணியாய் என்றது - அநுவாதம். தாத்பர்யம் ( தோற்றாயித்யாதி. ) தோற்றாரையென்றது - "அடிச்சியோம்" என்றத்தைப் பற்ற. இங்கே கண்ணழகைச் சொன்னதுக்கு பாவம் ( நீயணியாயித்யாதி. ) திருக்கைகளாலே ஸ்பர்ஶித்தமாத்ரமன்றிக்கே திருக்கண்களாலே நோக்கவும்வேணுமென்றபடி.

மேலுக்கவதாரிகை (உங்களித்யாதி.) தாத்பர்யம் (உன்திருவடிகளையித்யாதி.) விவரணம் (உனக்கித்யாதி.) போகிறகார்யமொழிய - பசுமேய்க்கப் போகிற

கார்யமொழிய. "உனக்கு-நடுவே - உன்கோலப்பாதம்பிடித்தது - அரிவையரும்பலர்" என்றந்வயிப்பது. "பிடித்தது" என்றது - பிடிக்கிறதுக்கென்றபடி. அரிவையர்-யுவதிகள். "பலர்" என்றதுக்கு ப்ரமாணங்கள் (ஷோடஸேத்யாதி) "ஷோ஡ஸஸ்த்ரீஸஹஸ்ராணி ஶதமேகம் ததோதிகம் । தாவந்தி சக்ரரூபாணி பகவாந்தேவகீஸுத:" (ஷோடஸஸ்த்ரீஸஹஸ்ராணி ஶதமேகம்ததோதிகம் | தாவந்திசக்ரரூபாணி பகவாந்தேவகீஸுத:) இதி பஞ்சமேம்ஶே ஏகத்ரிம்ஶே. பெரியாழ்வார்திருமொழி.

"அதுநிற்க" என்றதுக்கு ஹார்த்தபாவம் (ஆனைக்கூட்டத்துக்கித்யாதி.) ஆனைக்கூட்டத்துக்குக் கதவிட - போகப்ரதிபந்தகம்பண்ண. விவரணம் (நீபோனவித்யாதி.) "பெண்மையாற்றோம்" என்றவநந்தரம் "கண்ணிணைநீரும்" இத்யாதிமேலுக்கெல்லாம் ப்ரஶ்நோத்தரரூபேண பாவம் (ஸ்த்ரீத்வமித்யாதி, எங்களையித்யாதி வாக்யத்வயம்.) சப்தார்த்தம் (கூர்த்தித்யாதி.) கூர்த்து - கூர்மைபட்டு. வடி - கூர்மை.

"வடித்தடங்கண்ணிணை" என்று கண்ணழகை வர்ணிக்கிறதுக்கு பாவம் (ஒராளுமித்யாதி) ஒருநோக்குக்கு ஓராள் தப்பாதபடி யகப்படுகை. "நீரும்" என்ற சப்தார்த்தம் (நீநிற்கிலுமித்யாதி) விவரணம் (உன்னையித்யாதி.)

"மனமும்நில்லா" என்றதுக்குபாவம் (ஊற்றையித்யாதி) "மனமும்" என்ற சப்தார்த்தம் (தைர்யபங்கமித்யாதி) "எமக்கு" என்றதுக்கு வ்யாவர்த்யகதநபூர்வகமாகபாவம் (நீயாகவேணுமேயதுக்கென்று) "அதுக்கு" என்றத்தைக்காட்டுகிறார் (பிரிகைக்குமித்யாதி) இளையாமைக்கும் - கடினமாகைக்கும். அப்படி கடினமோவென்ன (யாமுடையித்யாதி.)

வெடிப்பாவதென்னென்னவென்றது – விநாசமான ப்ரகாரமேதென்னவென்றபடி. "வெடிப்பு" என்றதின்விவரணம் - "எமதுயிரழல்மெழுகிலுக்கு - வேம்" என்றது. அழல்-அக்நி, மெழுகில்-மெழுகிலுங்காட்டில், உக்கு-உருகிப்போய்.

ஆழியங்கண்ணா - அடிச்சியோந்தலைமிசை நீயணியாய், நடுவு-உன்கோலம்-பிடித்தது - அரிவையரும் - உனக்கு - பலர், அதுநிற்கவென்றுதொடங்கி, அதுதன்னாலே-நின்பசுநிரைமேய்க்கப்போக்கு-வெடிப்பு, எமதுயிரழல்மெழுகிலுக்கு-வேம் இத்யந்வய:. "வெடிப்பு" என்று - அஸஹ்யமாய், விநாசமென்றபடி.................*

---

## ஏழாம்பாட்டு.

வேமெமதுயிரழன்மெழுகிலுக்குவெள்வளைமேகலைகழன்றுவிழத்
தூமலர்க்கண்ணிணைமுத்தஞ்சோரத்துணைமுலைபயந்தெனதோள்கள்வாட
மாமணிவண்ணாவுன்செங்கமலவண்ணமென்மலரடிநோவநீபோ[லாங்கே
யாமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்றுன்னோடசுரர்கடலைப்பெய்யில்யவன்கொ

### ஆறாயிரப்படி.

(வேமெமதுயிர்) விரஹாக்நியாலே எங்களுயிர்வேவ, ஆஶ்ரயம் முடிகையாலே வளைகளும் மேகலையும் கழன்றுவிழ, உன்னைக்காண்கை

யாலே புதுக்கணித்த வென்கண்கள் அருவிசோர்ந்து துணைமுலைபயந்து என் தோள்கள்வாட, அதின்மேலே, உன்திருமேனியும் அதிகோமளமான வுன் திருவடிகளும்நோவ, நீபோய், ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்று உன்னோடசுரர்கள் தலைப்பெய்யி லென்னாய்விளையக்கடவதென்கிறாள் ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஸநீயமான நீலரத்நம்போலே முடிந்தாளலாம்படி சுலபனான நீ பசுமேய்க்கப்போனா லங்கே அசுரர்கள் வரிலென்னாமென்று எங்களாத்மா பரிதபியாநின்றதென்கிறாள்.

வெள்வளை - வெளுத்தசங்குவளையும். மேகலை - அரையின்மேகலையும். கழன்றுவீழ-பொருந்தாமல் கழன்றுவிழும்படியாகவும். தூ-அழுக்கற்ற. மலர் - செவ்வித்தாமரைப்பூப்போலே. கண்ணிணை-நீவிரும்பினகண்களிரண்டும். முத்தம்-சோகாஸ்ருபிந்துக்களானவை. சோர-அவசமாக ப்ரவஹிக்கவும். துணைமுலை-நீசேர்த்தியழகு கொண்டாடும் முலைகளிரண்டும். பயந்து-விவர்ணமாய். எனதோள்கள் - என்தோள்கள். வாட-உபக்நமொழிந்தகொடிபோலேவாடும்படியாகவும். மாமணி - ஸ்லாக்யமான நீலரத்நம்போலே முடிந்தாளலாம்படிபவ்யமான. வண்ணா-வடிவையுடையவனே. செங்கமலம்-சிவந்தகமலம்போலே. வண்ணம்-தர்ஸநீயமாய். மென்மலர்-புஷ்பஹாஸசுகுமாரமான. உன்-உன். அடிநோவ - திருவடிகள் நோவும்படி. நீபோய்-பிரியில்தரிப்பதானநீபோய். எங்களைப்போலன்றியிலே, ஆ-பசுக்களளவிலே. மகிழ்ந்துகந்து-அத்யந்தம்ஹ்ருஷ்டனாயாதரித்து. அவைமேய்க்கின்று-அவற்றைமேயாநிற்கிறவிடத்திலே. உன்னோடு-கலஹமிடுமுன்னோடே. அசுரர்கள்-அரிஷ்டதேநுகாதிகளாகிற அசுரர்கள். தலைப்பெய்யில்-தலைப்படில். யவன்கொல்-என்வருகிறதோ. என்று, எமதுயிர்-எங்களாத்மாவானது. அழல்-நெருப்பில். மெழுகில்-மெழுகுபோலே. உக்கு-உருகி. வேம்-வேவாநின்றது..............................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

நாங்கள்நோவுபட, உன்சுகுமாரமான திருவடிகள் நோவப்பசுமேய்க்கப்போனால், அங்கே அசுரர்கள் கிட்டினாலென்னாய் விளையுமென்கிறாள்.

(வேமித்யாதி) உனக்கு பாவபந்தமில்லாமையாலே தெரியாவிட்டா லெங்களுபதேசங்கொண்டறிந்தாலாகாதோ. (எமதுயிர்-வேம்) என்கையாலே—உனக்கு அதில்லை என்றதாமிறே.

(வெள்வளை) சங்குவளை. விரஹகார்ஸ்யத்தாலே வெள்வளைகளும் மேகலைகளும் கழன்றுவிழும்படியாகவும். பிறரறியாதபடி பலகாலும் எடுத்திடுவது, பேணுவதானாலும், அவை நிராஸ்ரயமாக நில்லாதிறே-ஆகாசத்தில் தொங்காதே. அப்படிகாணு முடம்புக்ருஸமானபடி.

(தூமலரித்யாதி) நாயகசமாதியாலேசொன்னபடி. என், தன்கண்ணைத்தானே! நாயகனிப்படி சொன்னானேவென்னில்; * கண்களாயதுணைமலர்-காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்றிருக்கும் என்றானிறே. (தூமலர்க்கண்ணிணைமுத்தஞ்சோர) உனக்கோ ரபூர்வங்காண

லாம், போகாதேகிடாயென்கிருள். தாமரைப்பூவிலே முத்துப்பட்டது. நேத்ரபூதமான முத்திறே. அவனுக்குத்தோழிசொல்லச் செவியேறுகேட்டுச் சொல்லுகிருள். * ஞாலமெய்தற்குரியன வொண்முத்தும் பைம்பொன்னுமேந்திற்றின என்று(கருத்தறிந்தபடியைத்தான்) சொன்னுனே.

(துணைமுலைபயந்து) நீசேர்த்தியழகு சொல்லிக்கொண்டாடும் முலைகளானவை வைவர்ண்யத்தை பஜியாநின்றன. அவனுடைய கோயிற்கட்டணமழிகிற தென்கிருள். ( எனதோள்கள்வாட ) அவயவிபோனுல் தோளிணை பின்னைவாடுமித்தனையிறே.

அப்ரயோஜநத்திலேநின்று பரக்கிறதென், இதுக்குமுன்பவனிழவுசொன்னுள், மேல் தன்னிழவுசொல்லுகிருள் (மாமணிவண்ணு) நீலரத்நம்போன்ற வடிவையுடையவனே. மா என்று - கறுப்பு. இவ்வடிவைக் கொண்டே நீபோகிறது?. வெய்யில் கானல்பொறுக்குமோ இவ்வடிவு. உன்னைநீபிரிந்தறியாயே. (உன்னித்யாதி) விகாசாதிகளால் தாமரையையொருபோலியாகச் சொல்லலாயிருக்கும், மார்த்தவத்துக்கொப்பில்லை.

(நீபோய்) தன்காலாலே போகவேணு மவனென்றிருக்கிருள்காணும். “ ஸ்ரீ ... ” (அக்ரதஸ்தேகமிஷ்யாமிம்ருத்நந்திகுஶகண்டகாந்) என்னுமவளிறே. போக்குத்தவிராவிட்டால் பின்னைவழிக்குக்கடவார் வழிதிருத்தினுல் போகவேண்டாவோ. (நீபோய்) குணுதிகனுன சக்ரவர்த்தித்திருமகனே வழிபோய்வழிவருகைக்கு; போனபோனவிடமெங்கும் பூசல்விளைக்குமவனிறே. (ஆமகிழ்ந்து) எங்களைப்போலே யுபேக்ஷித்திருக்கிறுயல்லையே பசுக்களை. (உகந்தவை மேய்க்கின்று) அவற்றின்பக்கலுண்டான விருப்பத்தாலே அவற்றையுகந்து மேயாநிற்புதி. (மேய்க்கின்று) மேயாநின்றவிடத்தில். அந்யபரனுன அந்த சித்ரத்திலே.

(உன்னோடசுரர்கள்தலைப்பெய்யில்) கருமுகைமாலையும் காலாக்நியும்கூடினுப்போலேயிறே. (யவன்கொலாங்கே) ஆங்கு-யவன்கொல். எவன்கொலென்றபடி. அங்கென்னுய்விளையுமோ. நாமெங்கேனும்போகிலும் ஆரோனும்கிட்டிலும் வெற்றிநம்மதன்றோவென்னுமேயவன். “ ஸ்ரீ ... ”(அவ்யவஸ்தெளஹித்ருஶ்யேதேயுத்தேஜயபராஜயெள) என்கிறபடியே- யுத்தத்திலே ஜயாபஜயங்கள் அவ்யஸ்த்திதமன்றோ; அதுமற்றைப்படியாகில் செய்வதென்னென்றஞ்சாநின்றேன். அவர்கள்கிட்டி லங்கென்னுய்விளையுமோ. அதுதன்வாயால் சொல்லமாட்டாமையாலே, என்னுய் விளையுமென்கிருள்.........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (வேமெமதித்யாதி) பாட்டையெல்லாம்கடாக்ஷித் தவதாரிகை (நாங்களித்யாதி.)

"வேமெமதுயிரழல் மெழுகிலுக்கு" என்றவநுவாதத்துக்குபாவம் (உனக்கி த்யாதி) பாவபந்தமில்லாமைக்கு ஸூசகமேதென்ன (எமதுயிரித்யாதி.)

புத்திபூர்வகமாகதரித்தவளையும் மேகலையும் கழன்றுவிழுவானென்னென்ன (பிறரறியாதபடியித்யாதி) இது "வீழ" என்றவர்த்தமானார்த்தம். சரீரமிருக்க ஆகாசமென்பானென்னென்ன (அப்படிகாணுமித்யாதி.)

தன்கண்ணைத்தானே வர்ணிக்கலாமோவென்ன (நாயகேத்யாதி) நாயகசமாதியாலே-நாயகன்சொல்லுகிறவாகாரத்தாலே. (என்தன்கண்ணைத்தானே!) என்று-வ்யாக்யாதாவினீடுபாடு. திருவிருத்தம் அறுபத்தேழாம்பாட்டு, "காவியும் நீலமும்" இத்யாதி. கண்களாகிற பரஸ்பரஸத்ருமான விரண்டுபூக்கள், சிவப்பாலே செங்கழுநீரையும், கருமையாலே நெய்தலையும், ஓராளுமொருநோக்கும் நேராயிருக்கும்படியாலே வேலையும், மௌக்த்யத்தாலேகயலையும், மற்றுமொப்பாகச்சொல்லும் பலவற்றையும் ஜயித்திருக்குமென்று சப்தார்த்தம். கண்களாயதுணைமலரொன்று-அந்வயித்துச்சொன்னபடி. "தூமலர்க்கண்ணிணைமுத்தம் சோர" என்றதுக்கு ஹார்த்தபாவம் (உனக்கித்யாதி) அந்தவபூர்வமேதென்ன (தாமரைப்பூவிலேயித்யாதி.) ஈஸோக்தி (நேத்ரபூதேத்யாதி) நேத்ரத்திலேயுண்டானவென்றும், ஸ்ரேஷ்ட்டமானவென்றும் அர்த்தத்வயம். "முத்தம்சோர" என்கைக்கு தன்கண்ணழகு தனக்குத்தெரியுமோவென்ன (அவனுக்கித்யாதி) செவியேறுகேட்டு-செவியேற்றலேகேட்டு, காதாலேகேட்டென்றபடி. அம்மாத்ரமன்றிக்கே அவன்சொல்லவும் கேட்டிருக்குமென்கிறார் (ஞாலமெய்தற்கித்யாதி) பூமியை ப்ராபிக்கைக்குத்தக்கவையாய் வெளுத்தமுத்தையும் பசும்பொன்னையு மேந்திற்றினவென்றபடி. திருவிருத்தம், "அரியனயாமின்று" இத்யாதி.

"துணைமுலை" என்றதுக்கும் கீழ்ச்சொன்னப்ரகாரமே யென்கிறார் (நீசேர்த்தியழகித்யாதி) தூமலர்க்கண்ணிணைமுத்தம்சோர - அழுக்கற்ற செவ்விமலர்போன்றகண்களிரண்டும் சோகாஸ்ருபிந்துக்கள் ப்ரவஹிக்கவென்று சப்தார்த்தம். துணைமுலைபயந்து - சேர்த்தியழகையுடைய முலைவைவர்ண்யத்தையடைந்து இதிசப்தார்த்தம். இத்தால்பாவம் (அவனுடையவித்யாதி) "மலராள்தனத்துள்ளான்" என்கையாலே (கோயிற்கட்டணம்) என்கிறார். கோயிற்கட்டணம்-அந்தஃபுரம். வாடுகைக்கடியேதென்ன (அவயவியித்யாதி) அவயவிபோனாலென்றது - "மேகலைகழன்றுவீழ" என்றத்தைப்பற்றவாதல், "முலைபயந்து" என்றது சரீரத்துக்கு முபலக்ஷணமென்று நினைத்தாதல்.

"மாமணிவண்ணா" என்றதுக்கவதாரிகை (அப்ரயோஜநத்திலே யித்யாதிவாக்யத்ரயமும்) விவரணம் (இதுக்குமுன்பித்யாதி) இத்தால்பலிதம் (இவ்வடிவையித்யாதி) விவரணம் (வெய்யிலித்யாதி) அவதாரிகையாதல், "உன்" என்றதுக்குபாவமாதல் (உன்னைநீயித்யாதி) "செங்கமலமலர்-வண்ணம்" என்றதுக்குபாவம் (விகாஸாதீத்யாதி) மென்மைக்குபாவம் (மார்த்தவத்துக்கித்யாதி) சிவந்த கமலமலர்போலேயிருப்பதாய் ம்ருதுவானவடிநோவவென்று சப்தார்த்தம். வண்ணம்-ஒப்பு.

"நீபோய்" என்றதுக்குபாவம் (தன்காலாலேயித்யாதி) அப்படி பரிவுடையளோவென்ன (அக்ரதஸ்தேயித்யாதி) அயோத்யாகாண்டேஸீதா, "யதித்வம்ப்ரஸ்த்திதோதுர்க்கம் வநமத்யைவராகவ" (யதித்வம்ப்ரஸ்த்திதோதுர்க்கம் வநமத்யைவராகவ) இதிபூர்வார்த்தம். இதுக்குபாவம் (போகித்யாதி) (பின்னை - போகவேண்டா) என்றந்வயிப்பது. "நீபோய்" என்றதுக்கு - என்காலாலே போகவேணு

மென்றருளிச்செய்து, தீம்பனை நீபோய் என்றர்த்தாந்தரம் (குணதிகனை வித்யாதி) "மகிழ்ந்து" என்றதுக்குபாவம் (எங்களைப்போலேயித்யாதி) "மகிழ்ந்துகந்து" என்கிற புநருக்திக்குபேத மருளிச்செய்கிறார் (அவற்றின்பக்கலித்யாதி.)

பதச்சேர்த்திக்குபாவம் (கருமுகையித்யாதி) சுகுமாரனை வுன்னோடேயென்றபடி. விவரணம் (அங்கென்னுயித்யாதி) "யவங்கொல்" என்றதுக்கு ஹார்த்த ப்ாவத்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (நாமெங்கேனுமென்று தொடங்கி மேலஞ்சுவாக்யத்தாலே) "யவங்கொல்" என்கிறதென், இன்னதீங்கென்னவொண்ணுதோவென்ன (அது தன்வாயாலித்யாதி) இது "யவங்கொல்" என்றதுக்கிரண்டாம்பாவம்.

வெள்வளைமேகலைகழன்றுவிழும்படியும், முத்தம்சோரும்படியும், தோள்கள்வாடும்படியும், மென்மலரடிநோவவும்-நீபோய் என்றுதொடங்கி, ஆங்கு - யவங்கொல் இத்யந்வயஃ.

(அவ்யவஸ்த்தாவிதி) "மாம்வாஹரேயுஸ்த்வத்தஸ்தாத்விஸேயுரதாபிவா। அவ்யவஸ்தௌஹித்ருஸ்யேதேயுத்தேஜயபராஜயௌ" (மாம்வாஹரேயுஸ்த்வத்தஸ்தாத்விஸேயுரதாபிவா। அவ்யவஸ்தௌஹித்ருஸ்யேதேயுத்தேஜயபராஜயௌ) இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதிஸீதா................................*

## எட்டாம்பாட்டு.

அசுரர்கட்லைப்பெய்யில்யவன்கொலாங்கென்றுழுமென்னுருயிரான்பின்போகேல், கசிகையும்வேட்கையுமுள்கலந்துகலவியுநலியுமென்கைகழியேல், வசிசெயுன்றாமரைக்கண்ணும்வாயுங்கைகளும்பீதகவுடையுங்காட்டி, யொசிசெய்நுண்ணிடையிளவாய்ச்சியர்நீயுகக்குநல்லவரொடுமுழிதராயே.

### ஆறாயிரப்படி.

(அசுரர்கள்) அங்கேயசுரர்கள் தலைப்பெய்யிலென் விளைகிறதென்று நடுங்காநின்றேன், பிரானே, ஆன்பின்போகேல், நீபோனால், உன்பக்கலுள்ள ஸ்நேஹமும், அந்தஸ்நேஹவிபாகரூபமா யுன்னைக்கண்டல்லது தரிக்கவொண்ணுத வபிநிவேஸமும், இப்போதுகலக்கிறகலவியும் நலியும், என்கைகழியேலென்ன, பேசாதிருந்தவாறே பின்னையும், உன்னுடைய ஸௌந்தர்யாதிகளிலே யீடுபட்டு உனக்கபிமதைகளாயிருப்பார் யாவர்சிலர் அவர்களும் நீயும்கூட என்கண்வட்டத்திலே சஞ்சரிக்கவமையுமென்கிறாள் ......................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆகர்ஷகமான வுன்னுடைய அவயவங்களைக்காட்டி நீயுமுன்னபிமதைகளுமாக வென் சந்நிதியிலே சஞ்சரிக்கவமையும், ப்ரமாதஸ்த்தலத்தில் போகாதேகொள்ளென்கிறாள்.

அசுரர்கள் - ஆசுரப்ரக்ருதிகள். தலைப்பெய்யில் - தலைப்பெய்வர்களாகில். யவன்கொலாங்கு - என்னப்ரமாதங்களுண்டாகிறனவோ. என்று - என்று. என்னுருயிர் - என்னுத்மாவானது. ஆழும் - கடலிலேபுக்காப்போலே ஆழங்காற்பட்டு க்லேசியாநிற்கும். ஆகையாலே, ஆன்பின்போகேல் - பசுக்களின்பின்பு போகாதேகொள். அதுக்குமேலே, கசிகையும் - ப்ராவண்யத்தால்வந்த வீடுபாடும். வேட்கையும்- அதுக்குமேலான வபிநிவேஶமும். கலவியும் - அதுக்கநுரூபமாகக்கலந்தகலவியும். உள்கலந்து - என்னெஞ்சுக்குள்ளேகலந்து. நலியும் - நலியாநிற்கும். என் - என்னுடைய. கைகழியேல் - கைகழியாதேகொள். நானுன்னை வளைத்துவைக்கிறேனல்லேன், வசிசெய் - வசீகரங்களாயிருக்கிற. உன் - உன்னுடைய. தாமரை - தாமரைபோலேயிருக்கிற. கண்ணும் - திருக்கண்களையும். வாயும் - திருப்பவளத்தையும். கைகளும் - திருக்கையையும். பீதகவுடையும் - திருப்பீதாம்பரத்தினுடையவழகையும். காட்டி - காட்டி. ஒசிசெய் - ஸ்வபாவத்தாலும் சம்ஶ்லேஷத்தாலும் தளர்த்தியைவிளைவிப்பதாய். நுண்ணிடை - நுண்ணிதானவிடையையுடையராய். இளம்-முக்தமான பருவத்தையுடையராய். ஆய்ச்சியர்-சத்ருஶமான குலத்திலேபிறந்த இடைச்சியராய். இதெல்லாமுண்டானுலு மெங்களைப்போலன்றியே. நீயுகக்கும் - நீயுகக்கும்படி. நல்லவரொடும் - விலக்ஷணர்களானவர்களோடுங்கூட. உழிதராய்-சஞ்சரிக்கவமையும்.......................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

நீபோனுல் சப்ரமாதமென்றஞ்சாநின்றேன், உன்னைப்பிரியவும்மாட்டேன், பசுமேய்க்கை வ்யாஜமாக அபிமதவிஷயங்களை நினைத்துப்போகிருயாகில் என்கண்வட்டத்திலே உனக்கபிமதைகளோடே சஞ்சரிக்கவேணுமென்கிருள்.

(அசுரரித்யாதி) வெற்றியோடே மீண்டாலும் அதுக்குமுன்னே நான் தறைப்படுவென், நானுனக்குவேண்டாவோ வென்கிருள். (ஆழும்) அழுந்தும்.

அதுக்கு நம்மால் செய்யலாவதென்னென்ன (ஆன்பின்போகேல்) பசுக்களின்பின்பு போகாதேகொள். என்வழியேபோகப்பார்ப்பது. காமிநியருகேயிருந்து சந்த்யாவந்தநம்பண்ணப்போக என்னக்கடவதோ. ஸ்வதர்மாநுஷ்டாநம் பண்ணுவது ஸ்வஜநத்தைவிட்டோ.

ஜாத்யுசிததர்மத்தைத் தவிரப்போமோ, வருந்தி தரிக்கவேண்டாவோவென்ன; பிரியில் தரிக்கலாம்படியோ நீகலவியில் பரிமாறிற்றென்கிருள் (கசிகையும்) ஸ்நேஹமும். (வேட்கையும்) மேன்மேலுன்னேட்டைக் கலவியிலுண்டான வபிநிவேஶமும். (கலவியும்) சம்ஶ்லேஷமும். (கசிகையித்யாதி) நீபண்ணும் ஸ்நேஹம், அருகேயிருக்கச்செய்தே யகலவிருந்தாரைப்போலே மேன்மேலனபண்ணுமபிநிவேஶமும், தலைதடுமாருகக்கலப்பதான விவையும், நீபோநின்றவாறே ஹ்ருதயத்திலே புகுந்துநலியும்.

ஆனல் செய்யவேண்டுவதென்னென்ன (என்கைகழியேல்) நானனைத்தகைக்குள்ளில் நின்றகலாதொழியவேணும். ஜாத்யுசிததர்மமநுஷ்டிப்பதென்னைமுடித்தோ. "போகாதொழியப்போமோ, புறம்பேயும் நமக்கபிமத விஷயங்களுண்டாயிராதோ, அவர்களுடனும் பரிமாறவேண்டியிராதோ" என்றுன்மேலிவள் சொல்லுகிறது கேட்கைக்காக; எங்களுக்கு நிர்ப்பந்தமுண்டோ, நீகைகழியப்போகாதொழியு மத்தனையன்றோவேண்டுவது, நீ விரும்பியிருக்குமவர்களோடே யென்கண்வட்டத்தே பரிமாறப்பாரென்ன.

ஆனலவர்களை யழைத்துத்தருவாரார் என்ன (வசிசெயுன்றாமரைக்கண்ணும்) உனக்கு * தூதுசெய்கண்களுண்டாயிருக்க புறம்பேபரிகரம்தேடி அழைக்கவேண்டியிருந்ததோ. இனிப்பொருந்தோமென்றிருப்பார் நெஞ்சுகளில் மறத்தைமாற்றி அவர்களை வசீகரித்துத்தரும் கண்களும், அந்நோக்கில் கருத்தை யாவிஷ்கரிக்கும்வாயும், அந்நோக்கிலும் முறுவலிலும் நேர்விழிக்கமாட்டாதே வ்ரீளையாலே கவிழ்ந்தவர்களையெடுத்துக்கொள்ளும்கைகளும், ஸ்பர்ஶத்துக்குத் தோற்றவர்களைக் கீழ்போகாதபடியாகத் தன்செல்லாமையாலே மேலே யெறட்டுக்கொள்ளுகிற திருப்பீதாம்பரமும். "பீதாம்பரதரஸ்ரக்வீ" (பீதாம்பரதரஸ்ரக்வீ) என்னக்கடவதிறே. (காட்டி) உனக்குப்புறம்பே யழைத்துத்தருவார் வேண்டியிருந்ததோ, பிடாத்தைவிழவிட்டு வடிவைக்காட்டவமையாதோ.

(ஒசிசெயித்யாதி) பண்டேதொட்டாரோடே தோஷமானவிடை. அதுக்குமேலே கலவியாலே துவண்டவிடையையுடையவர்கள். (இளவாய்ச்சியர்) உன்னேடொத்தபருவத்தையுடையவர்கள். வடிவழகாலும் பருவத்தாலு முன்னைத்துவக்கவல்லா ரெத்தனைவர்கிடக்கிறது. நீ போகாநிற்க, இடையிலே தங்கள் பருவத்தாலே துவக்கவல்லாரநேகர். (நீயுகக்கும் நல்லவர்) வடிவழகுண்டானலும் ப்ரயோஜநமில்லையே, எங்களைப்போலேயிருக்கவொண்ணுதே, நீயுகக்குமவர்களாகவும் வேணுமே. நீயுகக்கும்படி விலக்ஷணைகளான வவர்களோடே யென்கண்வட்டத்திலே சஞ்சரிக்கவமையும் .........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (அசுரர்களித்யாதி) பாட்டையெல்லாம்கடாக்ஷித் தவதாரிகை (நீபோனலித்யாதி.)

"ஆழும்" என்றதுக்குபாவம் (நீவெற்றியோடேயித்யாதி) இத்தால்பலிதம் (நானுனக்கித்யாதி) ஆழும்-அழுந்தும். தறைப்படுமென்றபடி.

"ஆன்பின்போகேல்" என்றதுக்கு வ்யதிரேகத்தாலே பாவம் (என்வழியேயித்யாதி) ஸ்வதர்மத்தைவிட்டு உன்வழியேபோகப்போமோவென்ன (காமிகியித்யாதி) அதாவது-ஸ்வதர்மத்தை யநுஷ்ட்டிக்கை ப்ரணயித்வத்துக்குக் கொத்தையென்றபடி. "ஸ்வஜநஸ்யசரக்ஷிதா" (ஸ்வஜநஸ்யசரக்ஷிதா) என்கிறபடியே இதுவு

ம் தர்மமன்றேவென்கிறுள் (ஸ்வதர்மாநுஷ்டாநமித்யாதி) இத்தால் - ப்ரணயித்வஹாநிமாத்ரமன்றிக்கே ஸ்வஜநவதமாகிற தர்மஹாநியும் சித்திக்குமென்றுகருத்து.

"கசிகையும்" இத்யாதிக்கவதாரிகை (ஜாத்யுசிதேத்யாதி) "கசிகையும்" இத்யாதிக்கு - தனக்கவனிடத்தில் ஸ்நேஹாதிகளாகக் கீழேயருளிச்செய்து, அவனுக்குத் தன்னிடத்தில் ஸ்நேஹாதிகளாக வர்த்தாந்தரம் (நீபண்ணுமித்யாதி) ஹ்ருதயத்திலே புகுந்தென்றது - ஸ்ம்ருதிவிஷயமாயென்றபடி.

ஸ்வஜாதிதர்மத்தைவிடலாமோவென்ன (ஜாத்யுசிதேத்யாதி.)

மேலுக்கெல்லாமவதாரிகை (போகாதொழியவித்யாதி) உங்களையொழிய வேறபிமதைகளுண்டோவென்ன வேண்டியிருக்க இப்படிசொல்லுவானென்னென்ன (மேலிவள்சொல்லுமதித்யாதி.) "உகக்குநல்லவரொடுமுழிதராய்" என்றத்தைக்கடாக்ஷித்து அவன்சொன்ன ப்ரஸ்நத்துக்குத்தரம் (எங்களுக்கித்யாதி வாக்யத்ரயம்.)

"வசிசெய்" இத்யாதிக்கவதாரிகை (ஆனுலித்யாதி) வசிசெய் - வசீகரணம். (பீதாம்பரதரஸ்ரக்வீ இத்யாதி) ஸ்ரீபாகவதே, " 𑌤𑌾𑌸𑌾𑌮𑌾𑌵𑌿𑌰𑌭𑍂𑌚𑍍𑌛𑍌𑌰𑌿𑌃 𑌸𑍍𑌮𑌯𑌮𑌾𑌨𑌮𑍁𑌖𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌃। 𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌃 𑌸𑍍𑌰𑌗𑍍𑌵𑍀 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌮𑌨𑍍𑌮𑌥𑌮𑌨𑍍𑌮𑌥𑌃 " (தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதரஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத: ) இதுக்கு, " 𑌮𑌨𑍍𑌮𑌥𑌮𑌨𑍍𑌮𑌥𑌃 " ( மந்மதமந்மத: ) என்றதிலேநோக்கு. உடை-புடவை பிடாத்தை-பச்சைவடத்தை.

"நுண்ணிடை" என்றதுக்கர்த்தம் (பண்டேயித்யாதி) "ஒசிசெய்" என்றதுக்கர்த்தம் (அதுக்குமேலேயித்யாதி) ஒசிசெய்நுண்ணிடை - தளர்த்தியைவிளைக்கிற நுண்ணியவிடை. ஒசிவு - துவட்சி. தளர்த்தியென்றபடி. "ஒசிசெய்நுண்ணிடை, இளம்" என்கிறவற்றையும் கூட்டிக்கொண்டு " ஆய்ச்சியர் " என்கிறபஹுவசநத்துக்கர்த்தம் (வடிவழகாலுமித்யாதி) ரஸோக்தியாகவிவரணம் ( நீபோகாநிற்கவித்யாதி ) "நீயுகக்கும்" என்றதுக்குபாவம் (வடிவழகுண்டானாலு மித்யாதிவாக்யத்ரயம்) சப்தார்த்தம் (நீயுகக்கும்படியித்யாதி) என்கண்வட்டத்திலேயென்றது - " என்கைகழியேல் " என்றத்தைப்பற்ற. உழிதருகை - சஞ்சரிக்கை.

அசுரர்கள் தலைப்பெய்யில் - ஆங்கு - யவக்கொல்-என்று-என்னுயிர்-ஆழும், ஆன்பின்போகேல், கசிகையும் வேட்கையும் - கலவியும் - உள்கலந்து - நலியும், என்கைகழியேல், வசிசெயென்றுதொடங்கி யந்வயம் .................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

உகக்குநல்லவரொடுமுழிதந்துன்றன்றிருவுள்ளமிடர்கெடுந்தோறு நாங்கள், வியக்கவின்புறுதுமெம்பெண்மையாற்றே மெம்பெருமான்பசுமேய்க்கப்போகேன், மிகப்பலவசுரர்கள்வேண்டுருவங்கொண்டுநின்றுழிதருவர்கஞ்சனேவ, வகைப்படிலவரொடுநின்னெட்டாங்கேயவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ.

## ஆறாயிரப்படி.

(உகக்கும்) உனக்கபிமதைகளாய் விலக்ஷணைகளாயுள்ளவர்களோடுதிரிந்து உன்னுடையதிருவுள்ளத்தி லிடர்கெடுமளவில், நாங்கள் எங்களோடு ஸம்ஶ்லேஷித்ததிற்காட்டிலும் மிகவு மினியராவுதோம், வேறு சிலரோடே ஸம்ஶ்லேஷிக்கப் பொறுக்கமாட்டாத பெண்மைவேண்டோம், பலவசுரர் கம்ஸப்ரேரிதராய் வேண்டினவடிவுகளைக்கொண்டு சஞ்சரியாநிற்பார், அவர்கள்கையிலே யகப்படில் அவர்களோடுன்னோடவ்விடத்தில் பொல்லாங்குகள் விளையும், ஐயோ!, என்சொல்கொள்ளா யென்கிறாள் ...........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், எங்களுக்குநாதனான நீ உன்னபிமதைகளோடே யெங்கள் சந்நிதிகளிலே வர்த்திக்கிற தெங்களுக்கு மிகவுமுகப்பு, போவதியாகில் கம்ஸப்ரேரிதரான வசுரர்களுக்கு முனக்கும் பொல்லாங்கு விளையுமென்கிறாள்.

உகக்கும்-நீயுகக்கும்படியான. நல்லவரொடும் - நன்மையுடையவர்களோடேகூட. உழிதந்து-எங்கள் சந்நிதியிலே ஸ்வைரவிஹாரம்பண்ணி. அவர்களைப்பெறுமல், உன்றன்திருவுள்ளம்-உன் திருவுள்ளத்திற்பட்ட. இடர் - துக்கங்கள். கெடுந்தோறும்-தீர்ந்து நீ ப்ரீதனும்போதெல்லாம். உன்னிலும் அவர்களிலும், நாங்கள் - நாங்களும். வியக்க-மிகவும். இன்புறுதும் - உகப்புடையோமாவோம். அதுக்கடி - நீபிரிந்தால், எம்பெண்மை-எங்கள்பெண்மையை. ஆற்றேம்-ஆற்றமாட்டோம். அதுக்காக, எம்பெருமான்-எங்கள் ஸ்வாமியானவனே. பசுமேய்க்க-பசுமேய்க்க. போகேல்-போகாதேகொள். அதுக்குமேலே, கஞ்சனேவ-கம்ஸன் ஏவுவிப்ப. பலவசுரர்கள்-பலவசுரர்களும். காமரூபிகளாகையாலே, வேண்டு-நீவிரும்பும். உருவம்-ரூபங்களை. கொண்டு-கொண்டு. மிக-மிகவும். நின்றுழிதருவர்-சஞ்சரியாநிற்பர்கள். அகப்படில்-கையிலேயகப்படில். அவரொடு-அவர்களோடும். நின்னொடு - உன்னோடும். ஆங்கே-அவ்விடத்திலே. அவத்தங்கள்-பொல்லாங்குகளானயுத்தங்கள். விளையும்-விளையாநிற்கும். உன்செருக்காலே அநாதரியாதே, என்சொல் - என்வார்த்தையை. கொள்-கைக்கொள்ளவேணும். அந்தோ! - ஐயோ!, பிரிவார்வார்த்தையும் கைக்கொள்ளவொண்ணாத பராக்கிருந்தபடியென்றான்!.

வியத்தல் - ஆஶ்சர்யப்படுதல். உழிதருகை - சஞ்சரிக்கை. அவத்தம்-அநர்த்தம்-யுத்தமென்றுமாம்.............................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"உகக்குநல்லவரொடுமுழிதராய்" என்று நான்போகாமைக்காகச்சொன்னவார்த்தை யித்தனையொழிய, உங்கள் சந்நிதியிலே நான் சிலரோடே பரிமாறுகை யுங்களுக் கநிஷ்டமன்றோவென்ன; எங்களோட்டைக் கலவியிற்காட்டில் திருவுள்ளத்தில் ப்ரியமே யெங்களுக்கு மிகவும் சுகம், ஆனபின்பு, சப்ரமாதமானதேசத்தில் போகாதொழியவேணு மென்கிறாள்.

(உகக்குமித்யாதி) எங்களைப்போலன்றிக்கே நீயுகக்கும் வைலக்ஷ ண்யத்தை யுடையவர்களோடே யெங்கள் கண்வட்டத்திலேசஞ்சரித்து. (உன்றனித்யாதி) நாமின்னாளோடு கலக்கப்பெற்றிலோமென்று உன்திரு வுள்ளத்தில் வருமிடர்கெடுந்தோறும். (நாங்களித்யாதி) விஸ்மயத்திலே யாதல், மிகுதியிலேயாதல் கிடக்கிறதுவியப்பு. புறம்புள்ளாரைப்போல ன்றியே உன்னுகப்பே ப்ரயோஜநமானநாங்கள் மிகவுமுகப்புதோம். எதி ற்காட்டிலென்னில்; எங்களுடன்கலக்கு மதிற்காட்டிலென்னுதல்; அன் றிக்கே, நீயவர்களோடேகலந்தால் உனக்குப்பிறக்கும் ஆநந்தத்திற்காட் டிலென்னுதல். நானிப்படிசெய்தால் நீங்கள் மிகவு மின்புறுவதாகச்சொ ன்ன விதுகூடுமோவென்ன (எம்பெண்மையாற்றோம்) உன்னுகப்புக்குப் புறம்பாய்வரும் ஸ்த்ரீத்வம் நாங்கள்வேண்டோம். நீயுகந்தாரையொழிய உன்னை யுகக்குமவர்களல்லோங்காண் நாங்கள்; உன்னைத் தனித்துகப்பா ள் மூக்கறைச்சியன்றோ. (எம்பெருமானித்யாதி) உனக்கெழுத்துவாங்கு கிறோம், நீபசுமேய்க்கப்போகாதொழியவல்லையே. நான்றான் போகாநின் றேனோ, ஸ்வதர்மாநுஷ்ட்டாநத்துக்காகப்போனாற்றான் வருவதென்னெ ன்ன; வருவதுசொல்லுகிறாள் (மிகவித்யாதி) (பலவசுரர்கள் வேண்டின வடிவுகொண்டுமிகவும் சஞ்சரியாநிற்பர்கள்) ஸ்ரீப்ருந்தாவநத்திலெழும் பூண்டுகளடங்க அசுரமயமாயன்றோவிருப்பது. (வேண்டுருவங்கொண் டு) நீயுகக்கும்வடிவைக்கொண்டென்னுதல், ( காமரூபிகளாகையாலே ) உன்னை நலிகைக்கீடான வடிவைக்கொண்டென்னுதல். (கஞ்சனேவ) கம் ஸப்ரேரிதராய் வருகையாலே "தோற்றுப்போகிலும் அங்குக்கொலைதப் பாது" என்று மேல்விழுவர்கள். ஆரேவிலென், ஆர்மேல்விழிலென், நா ம் புக்கபோரிலே வெற்றிகொண்டன்றோ மீளுவதென்ன (அகப்படில்) அதுமற்றைப்படி யாகிற்செய்வதென். யுத்தத்தில் ஜயாபஜயங்க ளவ்யவ ஸ்த்திதமன்றோ. ஆனாற்றான் வருவதென்னென்ன (அவரித்யாதி) அவர் களும் நீயுமானவிடத்திலே பொல்லாங்குகள்விளையும். இப்படிசொன்ன விடத்திலும் ஆனைக்குப்பாடுவாரைப்போலே அநாதரித்திருந்தான் (என் சொற்கொள்) அநாதரியாதே, நான்சொல்லுகிறவார்த்தையை புத்திப ண்ணாய். (அந்தோ) எங்களையறியாவிட்டால் உன்னையு மறியாதொழிய வேணுமோ ...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (உகக்குமித்யாதி) "உன்றன்திருவுள்ள மிடர்கெடுந்தோ றும் நாங்கள்வியக்க வின்புறுதும் - என்சொற்கொள்" என்றவற்றைக்கடாக்ஷித்த வதாரிகை (உகக்குமித்யாதி.)

திருவுள்ளத்துக்கிடரேதென்ன (நாமின்னாளோடித்யாதி) "மிகவும்" என்ற த்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (எதிற்காட்டிலித்யாதி வாக்யத்ரயத் தாலே) ஆக, மிகுதியானபக்ஷத்தில், எங்களுடன்கலக்கு மதிற்காட்டிலென்னுதல்,

அவர்களுடன் நீகலக்குமதிற்காட்டிலென்னுதல் என்றர்த்தத்வயம்; விஸ்மயமென்றபக்ஷத்திலே, "சாபத்ர்யமில்லாதே இவர்களுகப்பதே!" என்று எல்லாரும் விஸ்மிதராம்படியென்றபடி.

கீழே - அவனுகப்பே புருஷார்த்தமென்றருளிச்செய்து, இங்கே - அவனும் ததீயருமானசேர்த்தியே தனக்குபுருஷார்த்தமென்கிருளென்றர்த்தாந்தரம் (நீயுகந்தாளையித்யாதி.) உகந்தாரும் நாமுமானசேர்த்தியைவிட்டு நம்மையே யுகந்தாலோவென்ன (உன்னையித்யாதி) மூச்கறைச்சி-சூர்ப்பநகி.

எழுத்துவாங்குகிறோம் - அடிமைப்படுகிறோம்.

மேலுக்கவதாரிகை (நான்முனித்யாதி) "மிகவும்பல" என்கைக்கு இங்கே அநேகமசுரர்களுண்டோவென்ன (ஸ்ரீப்ருந்தாவநத்திலித்யாதி) கன்று, விளா, குருந்து முதலானநீயுகக்கும் வடிவைக்கொண்டென்றபடி; மருது, பகம், மலைப்பாம்பு முதலான உன்னை நலிகைக்கிடான வடிவைக்கொண்டென்றபடி. "கஞ்சனேவ" என்றதுக்குபாவம் (கம்ஸப்ரேரிதராயித்யாதி.)

விவரணம் (யுத்தத்திலித்யாதி) ஆனாற்றுனென்றது - மற்றைப்படியானாற்றுனென்றபடி.

ஆனைக்குப்பு - சதுரங்கம். "அந்தோ!" என்றதுக்குபாவம் (எங்களையித்யாதி) உன்னைப்பிரிகையாலே ஆர்த்தைகளானவெங்களையென்றபடி. உன்னையும் - சுகுமாரனுனவுன்னையுமென்றபடி. எங்களார்த்தியறியாவிட்டால் உன்சௌகுமார்யமுமறியாதொழியவேணுமோவென்றபடி............................................*

## பத்தாம்பாட்டு.

அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ வசுரர்கள்வன்கையர்கஞ்சனேவ, தவத்தவர்மறுகநின்றுழிதருவர்தனிமையும்பெரிதுனக்கிராமனையு, முவர்த்தலையுடன்றிரிகிலையுமென்றென்றாடுறவென்னுடையாவிவேமாற்,றிவத்திலும்பசுநிரைமேய்ப்புகத்திசெங்கனிவாயெங்களாயர்தேவே.

### ஆறுயிரப்படி.

(அவத்தங்கள்) பலவான்களான வசுரரைக் கம்ஸனேவ "உனக்கென்வருகிறதோ!" என்று ருஷிகளும்கூடக் கலங்குவர்கள், அவன்ஸந்நிதியிலே தீமைசெய்யவொண்ணுதென்று இராமனேடுகூடத்திரிகிறதும்செய்கிறிலையென்று மிகவும் என்னுத்மா வேவாநின்றது.

"நாம் போகிலன்றே பயப்படவேண்டுவது, இதென்னஸ்நேஹந்தான்" என்று முறுவல்செய்ய; திருநாட்டிலும் பசுநிரைமேய்ப்புகத்தி ஆயர்தேவே, ஆனபின்பு, போனுயேயல்லையோவென்கிருள் ............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதரானகோபர்க்கு நிரதிசயபோக்யனுன நீதனியே அசுரர்கள் வர்த்திக்கிறகாட்டிலே வர்த்தியாநின்றாய், என்னெஞ்சு வேவாநின்றதென்கிருள்.

செ - சிவந்த. கனி - கனிபோலேயிருக்கிற. வாய் - அதரசோபையையுடையையாய். எங்கள் - எங்கள்குலத்திலுள்ள. ஆயர் - இடையர்க்கெல்லாம். தேவே- போக்யமான ஸ்வாமியானவனே. வன்கையர் - ப்ரபலரான. அசுரர்கள் - அசுரர்களானவர்கள். கஞ்சனேவ-கம்ஸனேவ. தவத்தவர் - தபஃபரரானருஷிகள். மறுக- "உனக்கென்வருகிறதோ!" என்று நெஞ்சுகலங்கும்படி. நின்றுழிதருவர்-சஞ்சரியாநிற்பர்கள். உனக்கு - உனக்கு. தனிமையும்-அஸஹாயதையும். பெரிது-குவாலாயிருக்கும். இராமனையும் - ப்ரபலரானநம்பிமூத்தபிரானையும். உவர்த்தலை-உன் ஸ்வைரவிஹாரார்த்தமாக இனிமையற்று அவனோடுடன்பாடனல்லையாய். உடன்திரிகிலையும் - கூடத்திரிவதும் செய்கிறிலை. இவ்வளவில், அவத்தங்கள்-பொல்லாங்கு. விளையும் - விளையும். என்றென்று-என்றுபலகாலும்நினைத்து. என்னுடையாவி - என்நெஞ்சு. ஊடுற - உள்ளுற. வேம்-வேவாநின்றது. அந்தோ! - ஐயோ!. என்சொல் - என் வார்த்தையை. கொள் - கேட்கவேணுங்காண். திவத்திலும் - பரமபதத்திலிருப்பிலுங்காட்டில். பசுநிரைமேய்ப்பு - பசுமேய்ப்பை. உகத்தி-உகப்புதியாகாதே.

"மாயையினால்" என்கிறகணக்கிலே அங்கிருக்கும்போதும் இங்கே யுகப்புதியென்றுமாம் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - பத்தாம்பாட்டு.

முன்கைமிடுக்கரான வசுரர்கள் கம்சப்ரேரிதராய் சஞ்சரிக்கிறகாட்டிலே, நம்பிமூத்தபிரானையு மொழியத் தனியே திரியாநிற்றியென்று மிகவும் நோவுபடாநின்றேனென்கிறாள்.

(அவத்தங்களித்யாதி) அநுஷ்டாநபர்யந்தமாக வேணுமென்றிருக்கவேண்டா, சொன்னவார்த்தையை ப்ரதிபத்திபண்ணவமையும். (அந்தோ) அநுஷ்டாநகௌரவத்தா லிழியாதொழிகையன்றிக்கே என்வார்த்தையாக வமைவதேகொள்ளாமைக்கு!.

(அசுரரித்யாதி) ஜந்மத்தால் தண்ணியருமாய், தாங்கள் பலருமாய், முன்கை மிடுக்கருமா யிருப்பர்கள்; அதுக்குமேலே, துஷ்ப்ரக்ருதியான கம்சனேவவாய்த்துவருவது. (தவத்தவர் மறுகநின்றுழிதருவர்) என்னையிறே யுனக்குவிடலாவது; நீ நல்லவர்கள்குடல் மறுகும்படி சஞ்சரியாநிற்பர்கள்; தபோநிஷ்டரான ருஷிகள்; ஸ்வரக்ஷணத்துக்கு உன் கைபார்த்திருக்குமவர்கள்; தபோவிக்நத்தாலே கலங்கும்படி சஞ்சரியாநிற்பர்கள்; "ഗര്ഭഭൂതാസ്തപോധനാഃ" (கர்ப்பபூதாஸ்தபோதநா:) என்றும் "ഏഹി പശ്യ ശരീരാണി" (ஏஹிபஶ்யஶரீராணி) என்று மிருக்குமவர்கள்; "அவர்களாலுனக்கென்வருகிறதோ" என்று கலங்கவென்றுமாம். அன்றிக்கே, ஸ்ரீநாரதபகவான், ஸ்ரீசுக்ரீவமஹாராஜர், பெரியாழ்வார், பிள்ளையுறங்காவில்லிதாசர் தொடக்கமானாரைச் சொல்லிற்றுதல்.

ஆனல் ஸ்நேஹிகளானவர்களுடையவிரோதியைப் பின்னைப்போக்கவேண்டாவோவென்ன (தனிமையும்பெரிதுனக்கு) உன்கால் நெடுக நெடுகத் தனிமையே மிக்குவிட்டதேயுனக்கு. "ഏകദാ തു വിനാ രാമം കൃഷ്ണോ വൃന്ദാവനം യയൗ" (ஏகதாதுவிநாராமம் க்ருஷ்ணேப்ருந்தாவ

நம்யயெள) என்று - நம்பிமூத்தபிரானையொழியவே சஞ்சரிக்கும் காலம்பெரிதுனக்கு. (இராமனையுமுவர்த்தலை) "நம்பிமூத்தபிரான் சந்நிதியில் தீம்புசெய்யவொண்ணாது" என்று அவனுடனும் நெஞ்சுபொருந்தி வர்த்திக்கிறிலை. (உவர்த்தலை) உவர்த்தலையுடையை. (உடன்திரிகிலையும்) நெஞ்சில் பொருத்தமில்லாவிட்டால், தூரத்திலேகண்ட வெதிரிகளுக்கு "இவர்களிருவரும் கூடித்திரியாநின்றார்கள்" என்று அஞ்சும்படி ஒக்கத் திரிவதும் செய்கிறிலை. (என்றித்யாதி) நீபோகிறாயென்றல்ல, நம்பிமூத்தபிரானுடன் கூடத்திரிகிறிலையென்றாய்த் தென்னுடையஹ்ருதயம் மறுபாடுருவவேகிறது. (ஊடுற) உள்ளுறவென்றபடி. என்னுடைய ஹ்ருதயமானது வேவாநின்றது.

இப்படி நிர்ப்பந்திக்கைக்கு நானிவ்விருப்பைக்குலைந்து போகாநின்றேனோவென்ன (திவத்திலும் பசுநிரைமேய்ப்புகத்தி) ஆமாம், நீ ஓரோ விருப்புக்கள் குலைத்துக்கொண்டு போந்தறியாயிறே. பரமபதத்தி லிருப்பைக்குலைத்தன்றோ பசுநிரைமேய்க்கப்போந்தது. அங்கேயிருக்கவும் பெற்றதில்லை. அங்குநின்றும்போந்தது பொல்லாதாகச்செய்ததென்றிருக்கிறாள். அங்கேயிருந்தானாகில் இங்கென்வயிறெரியவேண்டாவே. நாம் பெறுவோம் இழப்போம் இவ்வஸ்துதானழியாதொழியலாய்த்தே. அவர்களைவிட்டும் பசுக்களை விரும்பக்கடவநீ எங்களை யுபேக்ஷிக்கச்சொல்லவேணுமோ. அங்குநின்றும்போந்திலோம் என்னவொண்ணாதே அவனால். "இதொருப்ரேம ஸ்வபாவமிருந்தபடியென்!" என்று ஸ்மிதம்பண்ணினான் (செங்கனிவா யெங்களாயர்தேவே) அதிலே யீடுபடுகிறார்கள். "அவ்விருப்புக்குலைந்து போந்தமையுண்டு, உங்களைவிட்டுப்போவேனோ" என்று ஸ்மிதம்பண்ண; இவர்களும் வாய்கரையிலே யழுந்துகிறார்கள்....*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (அவத்தங்களித்யாதி) "அசுரர்கள்வன்கையர்கஞ்சனேவ" என்றுதொடங்கி "ஆவிவேமால்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (முன்கையித்யாதி) "ஊடுற" என்றத்தைப்பற்ற (மிகவுமென்றது.)

புரஸ்ச "அவத்தங்கள்" இத்யாத்யநுவாதத்துக்குபாவம் (அநுஷ்ட்டாநபர்யந்த மித்யாதி) அதாவது - இவள்வார்த்தையைக்கேட்டால் 'சொன்னபடி செய்யவேணுமென்று நீ அநாதரிக்கவேண்டா, கடலோசைக்குச் செவிபுதைத்துக்கேட்கிறவோபாதி கேட்கவமையுமென்றபடி. இத்தால் - "கேட்கவே, சேதநனுகையாலே தன்னேவை நினைத்துத்திரும்பும்" என்றிவளுக்குக் கருத்தென்றபடி.

"அந்தோ" என்றதுக்குபாவம் ( அநுஷ்ட்டாநகௌரவத்தாலித்யாதி ) அநுஷ்ட்டாநகௌரவத்தா லிழியாதொழிகை யன்றிக்கேயென்றது - நாம் காட்டிலே போனால் அசுரர்களாலே பாதைவருகையாலே கோபாலாத்யநுஷ்ட்டாநத்தி லாயாசமுண்டென்னுமத்தாலே போகாதொழிகையன்றிக்கே யென்றபடி. என்வார்த்தையாகவமைவதே கொள்ளாமைக்கென்றது - "ஒருஸ்த்ரீயினுடைய வார்த்தையன்

ரோ" என்று என்வார்த்தை யுனக்கங்கீகரியாமைக்கு பர்யாப்தமாய் விட்டதேயெ
ன்றபடி.

* அசுரசப்தத்துக்கும், பஹுவசநத்துக்கும், "வன்கையர்" என்றதுக்கும் க்ரமேணார்த்தம் (ஜந்மத்தாலித்யாதி) "கஞ்சனேவ" என்றதுக்கர்த்தம் (அதுக்குமே லேயித்யாதி) தவத்தவர்-தபஸ்ஸையுடையவர்களென்று சப்தார்த்தம். "தவத்தவர்" என்றதுக்கு - "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" (யஸ்யஜ்ஞாநமயம்தப:) என்றும், "தப ஆலோசநே" என்றும், தபஸ்ஸப்தம் - ஜ்ஞாநவாசியாய், * பக்திஸ்ச ஜ்ஞாநவிசேஷ: ஆகையாலே, ஜ்ஞாநவிசேஷமானபக்திமான்களென்று விவக்ஷித்தர்த்த மருளிச்செய்கிறார் (என்னையிறேயித்யாதி) நீநல்லவர்களென்றது - உனக்கு நல்லவர்களென்றபடி. இப்பக்ஷத்தில், மறுத்தலாவது-மங்களாஸாஸநபரதையாலே "அற்றைக்கென் வருகிறதோ" என்றுகலங்குகை. அர்த்தாந்தரம் (தபோநிஷ்டரானவித்யாதி) "தபஸா மதிரிக்தமாஹு:" (தபஸாமதிரிக்தமாஹு:) என்கையாலே, தவமென்று-ப்ரபத்தியாய், ப்ரபந்நரென்று மூன்றுமர்த்தம் (ஸ்வரக்ஷணத்துக்கித்யாதி) த்விதீயார்த்தத்தில் "மறுக" என்றதுக்கர்த்தம் (தபோவிக்நத்தாலேயித்யாதி) த்விதீயத்ருதியார்த்தங்களுக்காதல் மூன்றுமர்த்தத்துக்காதல் ப்ரமாணத்வயம் (கர்ப்பபூதா இத்யாதி) "ந்யஸ்ததண்டா வயம் ராஜந் ஜிதக்ரோதா ஜிதேந்த்ரியா: । ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஸஸ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா: ॥ ஏஹி பஸ்ய ஸரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் । ஹதாநாம் ராக்ஷஸைர் கோரைர் பஹூநாம் பஹுதா வநே" (ந்யஸ்ததண்டாவயம்ராஜந் ஜிதக்ரோதாஜிதேந்த்ரியா: । ரக்ஷிதவ்யாஸ்த்வயாஸஸ்வத்கர்ப்பபூதாஸ்தபோதநா: ॥ ஏஹிபஸ்யஸரீராணி முநீநாம்பாவிதாத்மநாம் । ஹதாநாம்ராக்ஷஸைர்கோரைர்பஹூநாம்பஹுதாவநே ) இத்யாரண்யகாண்டே தண்டகாரண்யவாஸிநோ மஹர்ஷய:. மூன்றுமர்த்தத்தில், "மறுக" என்றதுக்கர்த்தம் (அவர்களாலித்யாதி) அவர்களால் - அசுரர்களால். உனக்கு - ரக்ஷகனானவுனக்கு. முந்தினவர்த்தவிவரணம் (அன்றிக்கே ஸ்ரீநாரதேத்யாதி.)

"பெரிது" என்றதுக்குபாவம் (உன்காலித்யாதி) அப்படி தனிமையுண்டோவென்ன (ஏகதேத்யாதி) பஞ்சமேம்ஸே ஸப்தமே, "விசசார வ்ருதோ கோபை: வந்யபுஷ்பஸ்ரகுஜ்ஜ்வல:" (விசசாரவ்ருதோகோபைர்வந்யபுஷ்பஸ்ரகுஜ்ஜ்வல: ) இத்யுத்தரார்த்தம்.

உவத்தலை - உகக்கிறாயில்லையென்னுதல். இராமனையும் - இராமனுடனும், உவர்த்தலை - உவர்த்தலையுடையை - வெறுப்பையுடையையென்னுதல்; உவர்த்தல்-வெறுப்பு. நெஞ்சில் பொருத்தமில்லாதாருடன் கூடத்திரிந்தால் ப்ரயோஜநமேதென்ன (ஆரத்திலேயித்யாதி.)

"என்றென்று" என்கிறவீப்ஸைக்கும் "ஊடிற" என்றவிதுக்கும் பாவம் (நீ போகிறாயித்யாதி) என்றென்று - என்றுபலகாலும் நினைத்து.

இதுக்குபாவம் (ஆமாமித்யாதி) விவரணம் (பரமபதத்திலித்யாதி) ஹார்த்தபாவம் (அங்கேயிருக்கவுமித்யாதி) அங்குநின்றும் போந்தது நல்லதன்றோவென்ன (அங்கேயிருந்தானாகிலித்யாதி) அங்கேயிருந்தா லுந்நபிமதம் சித்தியாதேயென்ன (நாம்பெறுவோமித்யாதி.)

"ஆமாம்நீ" இத்யாதி வாக்யவிவரணம் (அவ்விருப்புக்குலைந்தித்யாதி) திவ த்திலும் - திவத்திற்காட்டிலும். உவத்தி-உகப்புதி. வாய்களை-அதரம்..............*

# பதிற்றுன்றம்பாட்டு.

செங்கனிவாயெங்களாயர்தேவத்திருவடி திருவடிமேற்பொருனற்
சங்கணிதுறைவன்வண்டென்குருகூர்வண்சடகோபன்சொல்லாயிரத்துண்
மங்கையராய்ச்சியராய்ந்தமாலையவனொடும்பிரிவதற்கிரங்கித்தைய [ர்வே.
லங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தனவிவையும்பத்தவற்றின்சா

## ஆருயிரப்படி.

(செங்கனிவாய்) செங்கனிவாயெங்களாயர் தேவத்திருவடி திருவடிமேல் பொருனல் சங்கணிதுறைவனுயிருந்த வண்டென்குருகூர் வண்சடகோபன்சொன்ன வாயிரத்துள், மங்கையராய்ச்சியராய்ந்த மாலையவனொடும் பிரிவாற்றுமையாலே தையல் பசுநிரைமேய்ப்பொழிப்பான் சொன்ன விப்பத்து, அவன்திருவடிகளைச் சேர்விக்குமென்கிறுர் ... ....... ..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவல்லாபத்தை யருளிச்செய்கிறுர்.

செ-சிவந்த. கனி-கனிபோலேயிருக்கிற. வாய் - திருவதரத்தையுடையனுய். எங்கள்-எங்களுக்கு போக்யபூதனுய். ஆயர்தேவு - அப்படியே ஆயர்க்குபோக்யபூதனுய். அத்திருவடி திருவடிமேல் - அவர்களுக்கு ஸ்வாமியுமான வவன்திருவடிகளின்மேலே. பொருனல்-திருப்பொருனலில். சங்கணி - சங்குகள்சேரும். துறைவன்-துறையையுடையராய். வண்-சம்பத்தையும். தென்குருகூர் - அழகையுமுடைத்தான திருநகரிக்குநிர்வாஹகராய். வண்சடகோபன்சொல்-உதாரரான ஆழ்வாருளிச செய்த. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே. மங்கையர் - யௌவநஸ்வபாவைகளான. ஆய்ச்சியர்-இடைச்சிகள். ஆய்ந்தமாலை - அநுசந்தித்ததொடையாய். அவனொடும் - அவனேடு. பிரிவதற்கு-பிரிகிறதுக்கு. இரங்கி-க்லேசித்து. அங்கு-அத்திரளிலே. தையல்-ப்ரபலையாயிருப்பாளொரு இடைப்பெண்பிள்ளை. அவன்-அவன். பசுநிரைமேய்ப்பு-பசுநிரைமேய்க்கையை. ஒழிப்பான்-ஒழிக்கைக்காக. உரைத்தன-உரைக்கப்பட்டனவாயிருக்கிற. இவையும்பத்து-இவைபத்தும். அவற்றின் - அவர்களாய்ந்த மாலைகளின் பலமான வவனுடைய சம்ஶ்லேஷமேபலமாம்படி. சார்வு-சேறிந்தன.

அல்லாத திருவாய்மொழிகளின் பலமே யிவற்றுக்கும் பலமாய்த்தினவென்றுமாம். இவையும் அல்லாததிருவாய்மொழிகளில் சார்வதே! என்று இதினுடைய வைலக்ஷண்யஜ்ஞாநமே பலமாச்சுதாகவுமாம்.

இது - எண்சீராசிரியவிருத்தம்...................................*

ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், அவனை "பசுநிரைமேய்க்கப்போகவேண்டா" என்று நிஷேதித்த பாசுரமான வித்திருவாய்மொழியும் அல்லாதவற்றோடொக்க ஒருதிருவாய்மொழியே! என்று விஸ்மிதராகிறார்.

(செங்கனிவாயித்யாதி) அவ்வயிரவுருக்கான மூறுவலாலே யெங்களைத் தோற்பித்தாப்போலே, தன்பருவத்திற் பிள்ளைகளையும் தோற்பித்த சர்வஸ்வாமி திருவடிகளிலேசொல்லிற்று. செங்கனிவாயென்கையாலே-தங்களைத்தோற்பித்தபடி சொல்லிற்று; ஆயர்தேவென்கையாலே-தன்பருவத்திலுள்ளாரைத் தோற்பித்தபடி சொல்லிற்று; "புஂஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) (அத்திருவடி திருவடிமேல்) அந்த சர்வஸ்வாமியானவன் திருவடிகளிலே. அவன் சேஷித்வத்தைக்காட்டிக்கொடுத்தான்; திருவடிமேலென்கையாலே-இவரும் சேஷத்வத்திலேநின்றார். (பொருனற்சங்கணிதுறைவன்) தாமிருந்தவிடத்திலே சத்துக்களடங்கலும் வந்துசேருமாபோலே யாய்த்து, திருப்பொருனலில் சங்குகள்வந்துசேரும்படி. (மங்கையரித்யாதி) அவனோட்டைப்பிரிவுபொறுக்கமாட்டாமையாலே ஒருபருவத்தி லிடைப்பெண்களநுசந்தித்ததொடையாய். (தையலித்யாதி) "சபைபோலேயெல்லாரும் திரண்டுவார்த்தைசொன்னால்செவிப்படாது" என்றுபார்த்து, அவனுக்கு மறுக்கவொண்ணாதபடி நப்பின்னைப்பிராட்டியுடைய தரமுடையாளொருத்தி பசுமேய்க்கப்போகாமே மீட்கைக்காகச்சொன்னவை யாய்த்து. "அடிச்சியோம்" என்றும் "தொழுத்தையோம்" என்றும் "ஆழுமென்னாருயிர்" என்றும் "என்சொற்கொள்" என்றும் சொன்ன பன்மைக்கும் ஒருமைக்கு மெல்லாம் சேருமிறே. (இவையும்பத்தவற்றின் சார்வே) அவையென்கிறது - கீழ்த்திருவாய்மொழிகளையாய், "அவற்றினருகே இதுவுமொரு திருவாய்மொழியே!" என்று ஆஶ்சர்யத்திலேயாக்கியாய்த்து ஜீயரருளிச்செய்ததும் வ்யாக்யாநம் பண்ணிற்றும். அன்றிக்கே, (இவையும்பத்தவற்றின்சார்வே) கீழ்த்திருவாய்மொழிகளுக்குச் சொன்னபலம் இதுக்கும் பலமென்றதாகவுமாம். அன்றிக்கே, அவையென்கிறது - "மங்கையராய்ச்சிய ராய்ந்தமாலை" என்கிறவற்றையாய், இவையுமவற்றோடொக்கும். அதினுடைய பலமே யிதுக்கும் பலம். அது நிவர்த்தகமாகி லிதுக்கும் பேறுண்டாம். அவர்கள் "நீபோகாதேகொள்" என்ன அவன் தவிர்ந்து அவர்களுடனே கலந்தாப்போலே, இதுகற்றாரும் அவனோடே நித்யசம்ஶ்லேஷம் பண்ணப்பெறுவர்.

செங்கனிவாயெங்களாயர்தேவு - அவனொடும் பிரிவதற்கிரங்கி - மங்கையராய்ச்சிய ராய்ந்தமாலை - தையல் அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன - அத்திருவடிதிருவடிமேல்பொருனல் சங்கணிதுறை

வன்வண்டென்குருகூர் வண்சடகோபன்சொல்லாயிரத்துள் - இவையும் பத்தவற்றின்சார்வே என்றந்வயம்.......................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (செங்கனிவாயித்யாதி.) "அவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன விவையும்பத்தவற்றின்சார்வே!" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனையித்யாதி.) ஒரு திருவாய்மொழியேயென்று விஸ்மிதராகிறுரென்றது - "சார்வே!" என்கிற ஸ்வரத்தைப்பற்ற.

செங்கனிவாயாலே ஆயர்களையும் தோற்பித்தானென்றபடி. இருவரையும் தோற்பித்தபடியைக் காட்டுகிறுர் (செங்கனிவாயித்யாதி.) (செங்கனிவாய்) எங்கள் (என்கையாலே) என்றுகூட்டுவது; செங்கனிவாய் (ஆயர்தேவுஎன்கையாலே) என்றுகூட்டுவது. தோற்பித்தபடியென்றதுக்கு - "திவுக்ரீடாவிஜிகீஷா" (திவுக்ரீடாவிஜிகீஷா) என்றதிலே நோக்கு. தன்பருவத்திலுள்ளாரைத் தோற்பிக்குமோவென்ன (பும்ஸாமித்யாதி) "சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைःபும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (சந்த்ரகாந்தாநநம்ராம மதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைःபும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) இத்யயோத்யாகாண்டே. இத்தால்பலிதம் (அவன் சேஷித்வத்தை யித்யாதிவாக்யத்வயம்.)

"அவனொடும்பிரிவதற்கிரங்கி - மங்கையராய்ச்சியராய்ந்தமாலை" என்றந்வயிப்பது. ஆய்ந்தமாலை - நெஞ்சிலே யாராய்ந்தமாலை.

"ஆய்ச்சியராய்ந்தமாலை - தையல் - உரைத்தன" என்ற பன்மையு மொருமையும் சேரும்படி யென்னென்ன (சபைபோலே யித்யாதிவாக்யத்ரயம்.) (அடிச்சியோமென்றும்) இத்யாதி வாக்யாதியிலே, "இப்படியாகில்" என்று அத்யாஹார்யம்.

வ்யாக்யாநம்பண்ணிற்றுமென்றது - ஒன்பதினுயிரம் வ்யாக்யாநம் பண்ணிற்றுமென்றபடி. முந்தினவர்த்தத்தில், "சார்வே!" என்றது - ஸ்வரத்திலே; த்விதீயார்த்தத்துக்கு, சார்வு - ஒப்பு. அவற்றோடொத்தது - அவற்றோடொத்த பலத்தையுடையதென்றபடி; "சார்வே" என்கிற ஏகாரம் இப்போது அவ்யயம். விவரணம் (அதினுடையவித்யாதி.) அதினுடைய - ஆய்ந்தமாலையினுடைய வென்றபடி. கீழ் வாக்யவிவரணம் (அதுநிவர்த்தகமித்யாதி.) "நிவர்த்தகமாகில்" என்றவாக்யவிவரணம் (அவர்களித்யாதி.)

இப்பாட்டுக் கந்வயங்காட்டுகிறுர் (செங்கனிவாயித்யாதி.) உரைத்தன - உரைத்தவார்த்தைகளை. "சடகோபன்சொன்ன" என்றந்வயிப்பது. "சொல்" என்றது - சொன்னவென்றபடி. "ஆய்ந்த" என்றது - நெஞ்சாலே யாராய்ந்தவென்றுய், அநுசந்தித்த மாலையென்றபடி. பொருநல் - திருத்தாம்ரபர்ணி. திருப்பொருநலில் சங்குகள்சேரும் துறையையுடையராய் சம்பத்தையுடைய வழகிய திருநகரிக்கு நிர்வாஹகராய் உதாரரான வாழ்வாரருளிச்செய்தவென்று சப்தார்த்தம். மங்கையராய்ச்சியர் - யௌவநஸ்வபாவைகளான விடைப்பெண்களென்றபடி. "ஆய்ந்தமாலை" என்றது - "உரைத்தன" என்றதுக்கு விசேஷணம். "அநுசந்தித்தமாலையான - உரைத்தவார்த்தைகளை - சடகோபன்சொல்" என்றுயோஜிப்பது. மேய்

ப்பொழிப்பான் - மேய்க்கையை யொழிக்கைக்காக. அவனோடும் பிரிவதற்கிரங்கி - அவனோட்டைப்பிரிவுக்கு க்லேசித்து. அங்கு - அத்திரளிலே. இவையும்பத்து - இவைபத்தும் என்றந்வயிப்பது. ..........................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( வேய்மருதோளிணை. )

அம்போஜாக்ஷத்வகீர்த்யா, யதுகுலஜதயா, ஆத்மநஶ்ஶ்யாமலத்வாத்,
கோவிந்தத்வாத், ப்ரியோக்த்யுத்வசநபரதயா, சக்ரராஜாயுதத்வாத், ஶ்ரீ
நீலாஶ்மப்ரபத்வாத், அதிஸுபகதயா, கோபநிர்வாஹகத்வாத், ப்ரேமா
திஶங்க்யோஸ்தாநே உதித இஹ ஶௌரிஶ் ஶடகோபேந॥ (கOசு)

( அம்போஜாக்ஷத்வகீர்த்யா ) தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ - ஸரஸிஜஸத்ருஶநயநனாகையாலும்; ( யதுகுலஜதயா ) தகவிலைதகவிலையே நீகண்ணா - யதுவம்சத்திலே க்ருஷ்ணனாய்வந் தவதரிக்கையாலும்; (ஆத்மநஶ்ஶ்யாமளத்வாத்) அஞ்சனமேனியையாட்டங்காணேன் - மைபோலே கறுத்து ஸ்நிக்தமாயிருக்கிற திருமேனியையுடையனாகையாலும்; ( கோவிந்தத்வாத் ) நினைகிலேகோவிந்தா - ஆஶ்ரிதவத்ஸலனாகையாலும்; ( ப்ரியோத்யத்வசநபரதயா ) பணிமொழிநினைதொறும் - "பூர்வபாஷீப்ரியம்வத:" ( பூர்வபாஷீப்ரியம்வத: ) என்கிறபடியே ப்ரியங்களான வசநங்களைச் சொல்லுமவனாகையாலும்; ( சக்ரராஜாயுதத்வாத் ) ஆழியங்கண்ணா - திருவாழியை திவ்யாயுதமாக வுடையனாகையாலும்; ( ஶ்ரீநீலாஶ்மப்ரபத்வாத் ) மாமணிவண்ணா - நிகரில்லாத நீலரத்நம்போலே யுஜ்ஜ்வலமான நிறத்தையுடையனாகையாலும்; ( அதிஸுபகதயா ) வசிசெயுன்தாமரைக்கண்ணும் வாயுமித்யாதி - அபிமதவிஷயத்தை வசீகரியாநிற்கிற திருக்கண்மலர் மந்தஸ்மித ப்ரப்ருதிகளாலே மநோஹரனாயிருக்கையாலும்; ( கோபநிர்வாஹகத்வாத் ) எம்பெருமான் பசுமேய்க்கப்போகேல், இவத்திலும் பசுநிரைமேய்ப்புகத்திச் செங்கனிவாயெங்களாயர்தேவே - கோகுலத்திலே கோபாலர்களுக் கெல்லாம் ப்ரோஷ்யனாயிருந்து அவர்கள் கார்யமெல்லாம் செய்து நிர்வஹிக்குமவனாகையாலும்; வண்டுவரைப்பெருமாள் ப்ரேமாதிசயத்தாலே ஆஶ்ரிதராலே அஸ்த்தாநே சங்கிக்கப்படுமவராக, "வேய்மருதோளிணை" என்கிற தசகத்திலே ஆழ்வாராலே வெளியிடப்பட்ட தென்கிறார். ()

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

வேய்மருதோளிந்திரைகோன்மேவுகின்றதேசத்தைத்
தான்மருவாத்தன்மையினுற்றன்னைபின்னம் - பூமியிலே
வைக்குமெனச்சங்கித்துமால்தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு. (கூ௬)

(வேய்மருதோளிந்திரைகோன்) இதில், யதாமநோரதம் பெருமல் சம்சாரத்திலே சர்வேஸ்வரன் வைக்க வெண்ணிறுைக சங்கிக்க, அவன் தெளிவித்தபடியை யருளிச்செய்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனே யென்னில்; தம் மநோரதாநுகுணமாக அப்போதே அத்தேசத்திலேபோ யடிமைசெய்யப் பெருமையாலே கலங்கி, "பழையபடியே நமக்கு சம்சாரத்திலிருப்பே சேஷித்துவிடுகிறதோ" என்று, ப்ரக்ருதிசம்பந்தத்தின் கொடுமை, ஈஸ்வர ஸ்வாதந்த்ர்யம், முதலான ஹேதுக்களாலே தமக்குப் பிறந்த வதிசங்கையை; ஒருபடுக்கையிலே கூடவிருக்கச்செய்தே, பண்டு பசுமேய்க்கப்போகிற ப்ரபாதகாலம்வந்து அக்காலத்துக்கடைத்த குயில் மயில் முதலானவற்றினுடைய பாடலாடல் முதலான வடையாளங்களையும் காண்கையாலே, அவற்றையேகொண்டு "க்ருஷ்ணன் பசுமேய்க்கப்போனுன்" என்றதிசங்கைபண்ணி நோவுபடுகிற விடைப்பெண்கள் பேச்சாலே யருளிச்செய்கிற * வேய்மருதோளிணையிலர்த்தத்தை "வேய்மருதோளிந்திரைகோன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை) "வேய்போலுமெழில்தோளி" என்னும்படி அணைக்கைக்குப் பணைபோலேயிருக்கிற தோளையுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனுனவன், "படமுடையரவிற் பள்ளிபயின்றவன்" என்று அநந்தசாயியாய் "திருமாற்கரவு" என்று இருவருமாய்ச் சேர்த்தியாயிருக்கிற தேசத்தை; "மாதவாவென்ன" என்ருரே. (தான்மருவாத்தன்மையினுல்) "நாமும்போய்நணுகவேண்டும்" என்னு மபிநிவேசத்தையுடைய தாம்போய்ப் புகப்பெருதபடியாலே. (தன்னை யின்னம் பூமியிலே வைக்குமெனச்சங்கித்து) "நன்றுமஞ்சுவன்நரகம்நானடைதல்" என்ற தம்மை இன்னம் ஸ்வாதந்த்ர்யாதிகளாலே சம்சாரத்திலே யிட்டுவைக்குமோ என்று சங்கித்துப்போர. அதாவது - இவர் ரக்ஷணசிந்தைபண்ணிக்கொண்டு சௌஹார்த்தயுக்தனுன வவனும் "என்கைகழியேல்" என்னும்படி பொருந்தி ப்ரத்யக்ஷ சமாநாகாரம்போலே யிவர்கையிலேயிருக்க, அத்தசையிலே ஸ்வரக்ஷணத்தில் கைவாங்கியிருக்கு மவர்கள்விஷயத்தில் ரக்ஷணத்திலே அவன்மண்டி யங்கே விஸ்லேஷிக்கும் காலத்தையும், அவன் கைகழிந்தால் சப்தாதிகள் பாதகமாகிறபடியையும், காலதைர்க்யா ஸஹதையையும், ஆஸ்ரிதரக்ஷணத்தில் அந்யபரதையாலே அந்தராயங்கள் புகும்படியையும் அவனுக்கறிவிக்கிறப்ரகாரத்தை; "வேய்மருதோளிணை" என்றுதொடங்கி "ஆமருவினநிரைமேய்க்கநீபோக்கொருபகலாயிரமூழியாலோ" என்றும், "தகவிலைதகவிலை - இனியுன்னைப்பிரிவையாமால்வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கு" என்றும் "வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கு - சாவதிவ்வாய்க்குலத் தாய்ச்சியோமாய்ப் பிறந்தவித்தொழுத்தையோந்தனிமைதானே" என்றும், "நின்தொழுத்தனில்பசுக்களையேவிரும்பித்துறந்தெம்மையிட்டவைமேய்க்கப்போதி" என்றும், "பிணியவிழ்மல்லிகைவாடைதூவப் பெருமதமாலையும்வந்தின்ருலோ" என்றும், "வெடிப்புநின்பசுநிரை மேய்க்கப்போக்கு" என்றும், "ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்றுன்னோ டசுரர்கள்தலைப்பெய்யில் யவன்கொலாங்கே" என்றும், "அசுரர்கள்தலைப்பெய்யில் யவன்கொலாங்கென் றுழுமெ

ன்னுருயிரான்பின்போகேல் - நீயுகக்குநல்லவரொடு முழிதராயே" என்றும், "உகக்குநல்லவரொடும்" என்று தொடங்கி "அவத்தங்கள்விளையுமென் சொற்கொள்" என்றும், "அவத்தங்கள்விளையுமென்சொற்கொள் - திவத்திலும்பசுநிரைமேய்ப்புவத்தி" என்றும், இப்படி பஹுமுகமாக சங்கிக்க. (மால்தெளிவிக்கத்தெளிந்த) அதாவது - * அணியாய்ச்சியர்சிந்தையுட்குழகனானவனும், "[illegible]" (த்வயாஹீநா - முஹூர்த்தமபிஜீவாவ꞉) என்னும்படி * அவனைவிட்டகன்றுயிராற்றகில்லாதே * அவனொடும்பிரிவதற்கிரங்கும்படியானவிவர்கள் ப்ரேமஸ்வபாவத்தைக்கண்டு, "செங்கனிவாயெங்களாயர்தேவு" என்னும்படி * ஸவிலாஸஸ்மிதம்பண்ணி, * அணிமிகுதாமரைக்கையாலே "அஞ்சேல்" என்றுஸ்வஸிப்பித்து, "உம்முடையவபேக்ஷிதத்தின்படியேசெய்கிறோம்" என்றதிசங்கையைத் தீர்த்தானுய்த்து. அதாவது - பசுநிரைமேய்ப்பொழிகை; அத்தைப்பற்ற "தாமோதரன்" என்றார். (மால்தெளிவிக்கத்தெளிந்த) க்ருஷ்ணன்தெளிவிக்கத்தெளிந்த. கலங்கினவனைத் தேற்றுமவனிறே. (தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு) சங்காஹேதுவன்றிக்கே, கூடவிருக்கச்செய்தே சங்கிக்க, சர்வாதிகனான சர்வேஸ்வரன் சமாதானம்பண்ண சமாஹிதராய், அத்தாலே தமக்கு ஸத்ருஸமான யஸஸ்ஸையுடைய வாழ்வார், அநந்யகதிகளான வெங்களுக் கபாஸ்ரயம்............(கூரு)

பத்தாம்பத்தில் - மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.



ஆக, திருவாய்மொழி - கூரு.—பாட்டு - கoஉரு.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### சார்வே - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( சார்வே ) இப்படி ப்ராஸங்கிகத்தை முடித்து, * பத்துடைய டியவரிலே ப்ராரப்தமான பக்தியோக சுலபத்வத்தை நிகமிக்கிறார்......*

### பன்னீராயிரப்படி.

*நாலாந்திருவாய்மொழியில், கூடவிருக்கச்செய்தே ஈஶ்வரனுடைய பிரிவை யதிசங்கைபண்ணும் தமக்குப்பிறந்த ப்ரேமாதிசயத்தாலே யவனும் விஶ்லேஷப்ரஸங்கமில்லாதபடி சம்ஶ்லேஷப்ரகாரத்தைத் தெளிவிக்க அத்தாலே சந்துஷ்டராய், " தன்பக்கல் பக்தியுக்தராயிருப்பார்க்கு சுலபனாயிருக்கும் " என்றறுதியிட்டு, அந்த பக்திலப்யத்வோபபாதகமாக; அவனுடைய பரத்வபோக்யத்வ விசிஷ்ட பவ்யத்வத்தையும், அதுக்கடியான ஶ்ரிய:பதித்வத்தையும், அநுபாவகத்வபூர்த்தியையும், ஆஶ்ரிதரக்ஷணஸ்த்தைர்யத்தையும், அநந்யகதி சுலபத்வத்தையும், அதிசயிதசௌசீல்யத்வத்தையும், போக்யவிக்ரஹத்வத்தையும், நித்யாநுபாவ்யமான ரக்ஷகத்வத்தையும், தத்த்வயாதாத்ம்ய ப்ரகாசகத்வத்தையும், அஸாதாரண ஜந ப்ராப்யத்வத்தையு மநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஶ்வரன் விஷயத்தில் தமக்குப்பிறந்த பக்தியானது போகோபகரணமாய்க்கொண்டு ப்ராப்யாந்தர்க்கதமான ப்ரகாரத்தையநுசந்தித்து ப்ரீதராகிறார். ..........................................................................*

### ஈடு.

*தம்மைப்பிரிய நினைவின்றிக்கேயிருக்க அதிசங்கையாலே பிரிந்தார்படும் வ்யஸநத்தைப்பட்டு, அத்தாலே யவஸந்நரானவரை, " உம்மையொருநாளும் பிரியேன் " என்று அவனுஶ்வசிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும் ப்ரீதரானார் கீழ். முதற்றிருவாய்மொழியிலே, தத்த்வவிஷயமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லியற்றது; இனி அந்த தத்வந்தானே ப்ராப்யமாயிருக்குமிறே. அந்த ப்ராப்யவேஷத்தையும், ப்ராப்திபலமான கைங்கர்யத்தையும், "பட்டுடையாவிற் பள்ளிபயின்றவன்" என்றும் " கடைத்தலைசீய்க்கப்பெற்றால் " என்றும் அநுசந்தித்தார் *கெடுமிடரிலே; அந்தப்ராப்யம் அப்போதே கைபுகுரப்பெறாமையாலும் நெடுநாள்பட்டப் பிரிந்துபோந்த வாஸனையாலும் வெருவி யிவராவசந்நராக,*

இவர்க்கு ப்ராசங்கிகமாகப் பிறந்த வவசாதத்தை யநுசந்தித்து அவனும் ஆஶ்வசிப்பிக்க, ஆஶ்வஸ்தராய் நின்றார் *வேய்மருதோளிணையிலே. ஆக, முதல்திருவாய்மொழியிலே - தத்வவிஷயமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லி, அவ்வஸ்துதானே ப்ராப்யமாயிருக்கையாலே அந்தப்ராப்யத்தைப் பெறுகைக் குபாயமான பக்தியோகத்தை * வீடுமின்முற்றத்தாலே சொல்லி, அந்த பக்திமான்களுக்கு அவன் சுலபனுயிருக்கும் என்று அவன் சௌலப்யத்தை * பத்துடையடியவராலேசொல்லி, ஆக *வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்ன பக்தியானது ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லி, அத்திருவாய்மொழிகளில் பக்திவர்த்தகமாகச் சொன்ன குணங்களை பராமர்ஶியா நின்றுகொண்டு, தாம் தம்முடைய பேற்றுக் குபாயமாக முதற்றிருவாய்மொழியிற் சொன்ன ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறாரிதில்.

இவ்விரண்டுகோடியும் இவர்க்குண்டாயிருக்கச்செய்தேயும், தம்முடையபேற்றுக் குடலாக விவர்நினைத்திருப்பது ப்ரபத்தியையிறே. முதல்திருவாய்மொழியிலே ப்ரபத்திக்கு சூசகமான சப்தமுண்டோ வென்னில்; “அருளினன்” என்றாரிறே. இனித்தான் இவருடைய பக்தி வேதாந்தவிஹிதையான பக்தியல்ல, அதுதன்னையே பார்க்குமன்று அபசூத்ராதிகரணந்யாயம் ப்ரசங்கிக்கும். அதுதா னிவ்வாழ்வாருடைய ப்ரபாவத்தாலே கூடாதோவென்னில்; அது இவருடைய உக்திகளோடு விரோதிக்கும். “அருளினன்” என்கிற விப்புடைகளிலேயிறே யிவருடையவுக்திகள். “உஹயவரிகஸ்ரீதஸ்வாநஜஸெ்யெகாஷிகாத்ஷிகஹக்தியொஜெகலஹஃ” ( உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகைகலப்யஃ ) என்று ஜ்ஞாநகர்மங்களாலே சம்ஸ்க்ருதாந்தஃகரணனுக்குப் பிறக்குமதிறே பக்தியாகிறது; அந்த ஜ்ஞாநகர்மங்களினுடைய ஸ்த்தாநே பகவத்ப்ரஸாதமாய், அதுக்கநந்தரமான பரபக்தி தொடங்கிப் பிறந்ததாயிருக்கு மிவர்க்கு.

இனித்தான், இவர்வழியேபோய் இவருடையபேறே பேறுகநினைத்திருந்த பாஷ்யகாரரும், ப்ரபத்தியைப்பண்ணி, பின்னை பக்திதொடங்கி ப்ரார்த்தித்தாரிறே. அவனுபாயமானாலும் இவனுக்கு ருசியுண்டாய் ப்ராப்யசித்தியுண்டாகவேணுமே, இல்லையாகில் புருஷார்த்தமாகாதே, ப்ராப்யமின்னதென்று நிஷ்கர்ஷித்து அந்த ப்ராப்யருசி கண்ணழிவற வுடையவனுக்கிறே யவன் ப்ராபகனுவது ; ஆகையாலே, இவருடைய பக்திப்ரபத்திகள் விகல்பிக்கலாம்படியிறே யிருப்பது.

ஆக, * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் பிறர்க்குபதேசித்த பக்தி தம்முடையபேற்றுக் குடலாயிருந்தபடியைச் சொல்லி, இதுதான் ஸ்வஸாத்யத்தோடே சேர்ந்தபடியைச் சொல்லி நிகமிக்கிறாரிதில்.

இது சாத்யத்தோடேசேர்ந்திருப்பது ப்ராப்தியுண்டானாலன்றோ வென்னில்; சாக்ஷாத்காரரூபமான வநுசந்தாந முண்டாக வமையுமிறே இப்போது, குணமநுபாவ்யமானால் அந்தகுணவிசிஷ்டமாக விங்கேயிருந் துபாஸியாநின்றானிறே. ஆக, உபாசந வேளையிலும் அதிருக்கும்படியை யநுசந்திக்கத் தட்டில்லையிறே.

ஆனால் பின்னைக் கிழுமெல்லா மிந்த ப்ராப்யாநுசந்தாநமே யன்றோ பண்ணிப் போந்ததென்னில்; அவற்றைப் பற்றிப் பிறந்தன சிலரஸ விசேஷங்களைச் சொன்ன வித்தனையிறே அவ்விடங்களில்; உபக்ரமித்த வர்த்தத்தை யுபசம்ஹரிக்கையென்னு மொன்றுண்டே, அத்தைச்சொல்லுகிறதிங்கு.

இங்ஙனன்றிக்கே, பிள்ளான் ஒருருவிலே "'நீபசுமேய்க்கப்போகவேண்டா' என்றாள், 'ஆகில் தவிர்ந்தேன்' என்றான், இவன்றனை சுலபனில்லைகிடீர், இவன் பக்திலப்யனென்னுமிடம் நிஸ்சித மென்கிறார்" என்று பணித்தான்.

இன்னமும் முதற்றிருவாய்மொழியில் ப்ராப்யத்தை யருளிச்செய்தார்; அந்த ப்ராப்யத்துக்கு ப்ராபகமாக, வேதாந்தங்களில் பக்தியென்றும் ப்ரபத்தியென்று மிரண்டுபாயங்களை விதித்தது; அவை யிரண்டிலும், பக்தி, த்ரைவர்ணிகாதிகாரம்; ப்ரபத்தி, சர்வாதிகாரம். அதில் சர்வாதிகாரமுமாய் தாம் திருவுள்ளத்தாலே தமக்குபாயமாக வங்கீகரித்த ப்ரபத்தியை, * வீடுமின்முற்றத்திலே யருளிச்செய்தார்; த்ரைவர்ணிகாதிகாரமான பக்தியை, * பத்துடையடியவரிலே யருளிச்செய்தார். ஆக, இரண்டுதிருவாய்மொழியிலு மருளிச்செய்த பக்திப்ரபத்திகள் ஸ்வஸாத்யத்தோடே பொருந்ினபடியை யருளிச்செய்கிறார் * சார்வேதவநெறி, * கண்ணன்கழலிணை, இரண்டாலும். அதில், * சார்வேதவநெறியாலே-ப்ரபத்தி ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை யருளிச்செய்கிறார். "சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றாள்கள்" என்று - தபஶ்ஶப்தத்தாலே ப்ரபத்தியைச் சொல்லுகிறது. "தஸ்மாந்ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமாஹுః" (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹுః) என்று தபஸ்ஸுக்களில் மிக்க தபஸ்ஸாகச் சொல்லிற்றிறே ப்ரபத்தியை. "பண்டேபரமன்பணித்தபணிவகையே - கண்டேன்கமலமலர்ப்பாதம், காண்டலுமேவிண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்" என்றும் "இருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றான்" என்றும், "மாமேகம்ஶரணம்வ்ரஜ அஹம்த்வாஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (மாமேகம் ஶரணம் வ்ரஜ அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்ற வர்த்தத்தை யருளிச்செய்தார்.

ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான்பணிப்பது- "ப்ரபத்திவிஷயமாகவாய்த்து * வீடுமின்முற்றம்," உடையவருமப்படி

யே ப்ரபத்திவிஷயமாக வருளிச்செய்து கொடுபோந்து, பாஷ்யமருளிச் செய்தபின்பு, " ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணாது " என்று * வீடுமின்முற்றத்தையும் பக்திவிஷயமாக்கி யருளிச்செய்தார்.

" ஆக, முதற்றிருவாய்மொழியிற் சொன்ன ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராப்திபலமான கைங்கர்யத்தையும், * கெடுமிடரிலே 'படமுடையரவிற்பள்ளிபயின்றவன்' என்றும் 'கடைத்தலைசீய்க்கப்பெற்றால்' என்றுமருளிச்செய்து, அக்கைங்கர்யத்தில் களைபறித்து, 'உன்றன்றிருவுள்ள மிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும்' என்று உத்தர கண்டத்தில் * நமஃஸப்தார்த்தத்தை யருளிச்செய்து, * கெடுமிடராலும் * வேய்மருதோளிணையாலும் - முதற்றிருவாய்மொழியை நிகமித்து, * சார்வேதவநெறியாலும் * கண்ணன்கழலிணையாலும் - * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்னபக்தி ப்ரபத்திகள் ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை யருளிச்செய்தார் " என்று ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது ........................*

## ஜீயர் அரும்பதம்.

சார்வேதவநெறிப்ரவேஸே, இத்திருவாய்மொழிக்கு * வீடுமின்முற்றம் * பத்துடையடியவரோடே சங்கதியாதல்; * வேய்மருதோளிணையோடே சங்கதியாதல், இது பிள்ளான் நிர்வாஹம். வ்ருத்தாநுவாதம் (தம்மையித்யாதி.) ஆஶ்வஸிப்பிக்க வென்றது - " செங்கனிவாய் " என்றத்தைப்பற்ற.

* வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்ன பக்தியையும், முதற்றிருவாய்மொழியிலே சூசிதமான ப்ரபத்தியையும்,' * சார்வேதவநெறியிலே நிகமிக்கிறாராகையாலே, தத்த்வபரமான முதற்றிருவாய்மொழியிலர்த்தத்தை * கெடுமிடரிலே நிகமிக்கிறானென்கிறார் (முதற்றிருவாய்மொழியிலேயித்யாதி.) " தத்த்வ பரமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லி " என்றது - "அருளினன்" என்று ப்ரபத்தியைச் சொல்லுகையாலே உபாயமுமுத்தமேயாகிலும், தத்த்வ பரத்வ ப்ராதாந்யத்தைப்பற்ற. * கெடுமிடரிலே ப்ரதிபாதிக்கிறது கைங்கர்ய ப்ரதிசம்பந்தியையன்றோ, இது பரத்வ ப்ரதிபாதகமான முதற்றிருவாய்மொழியின் நிகமநமாகிறபடி யெங்ஙனேயென்ன (இனி அந்த தத்த்வந்தானேயித்யாதி;) அந்த பரவஸ்துவே கைங்கர்ய ப்ரதிசம்பந்தியாகையாலே நிகமநமாகலாமென்றபடி.

அந்த ப்ராப்யவேஷத்தையும் ப்ராப்திபலமான கைங்கர்யத்தையுமென்றது- " அமரர்களதிபதி, தொழுதெழு " என்ற பதங்களைக் கடாக்ஷித்து. * வேய்மருதோளிணை யெதினுடைய நிகமநமென்ன (அந்த ப்ராப்ய மப்போதேயித்யாதி.) * வேய்மருதோளிணை ப்ராசங்கிகமென்றபடி.

இனிமேல், முதற்றிருவாய்மொழியோடே * வீடுமின்முற்றத்துக்கு சங்கதி கதநபூர்வகமாக, * வீடுமின்முற்றத்தினுடையவும் * பத்துடையடியவருடையவும் ப்ரமேயத்தை யருளிச்செய்துகொண்டு, அவற்றிற்சொன்ன பக்தியையும் முதற்றிருவாய்மொழியில் சூசிதமான ப்ரபத்தியையும் இதிலே நிகமிக்கிறானென்கிறார் (ஆக முதற்றிருவாய்மொழியிலே யென்றுதொடங்கி, தலைக்கட்டுகிறானென்னுமளவாலே.) * வீடுமின்முற்றத்திற்சொன்ன பக்திசாத்ய பக்தியாயிருக்க, (ப்ராப்யத்தைப் பெறு

கைக்குபாயமான பத்தியோகத்தை) என்றதுக்குக்கருத்து - தாமுபதேசித்த விந்த சாத்யபக்தி ப்ரபத்தியிலே மூட்ட ப்ரபத்தியுபாயமாய்த் தலைக்கட்டுமென்று. இங்ஙனன்றிக்கே, இந்த சாத்யபக்தி தன்னையே ப்ரபத்தியென்றால், (தம்முடைய பேற்றுக்குபாயமாக முதற்றிருவாய்மொழியிற் சொன்ன ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறரிதில்) என்றத்தோடே சேராது. " * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்ன பக்தி சாத்யபக்தி" என்றே யருளிச்செய்வர். ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லியென்றது - "தவநெறிக்கு - சார்வே" என்றத்தைப் பற்ற. ஸ்வஸாத்யத்தோடே பொருந்துகையாவது - பக்த்யுபாயம் பல வ்யாப்தமாகை. குணங்களை பராமர்ஸியா நின்றுகொண்டென்றது - "உரலினோடிணைந்திருந்து" என்றத்தை " தாமோதரன் " என்றும், " புயற்கருநிறத்தனன் " என்றத்தை "கார் மேகவண்ணன்" என்றும், "அடியவர்க்கெளியவன்" " எளிவருமியல்வினன்" என்றத்தை "சார்வே" என்றும், " அமைவுடை முதல்கெடல்" இத்யாதியை " பெருமையனே வானத்திமையோர்க்கும்" என்றும், " பிறர்களுக்கரியவித்தகன் " என்றத்தை " காண்டற்கருமையனே" என்றும், " மலர்மகள்விரும்பும் " என்றத்தை "திருமெய்யுறைகின்ற" என்றும், இப்புடைகளிலே பராமர்ஸித்துக்கொண்டென்றபடி. முதற்றிருவாய்மொழியிற் சொன்னவென்றது - "அருளினன்" என்றத்தைப்பற்ற. ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிறதென்றது - "பண்டேபரமன்பணித்தபணிவகையே-கண்டேன்கமலமலர்ப்பாதம்" என்றத்தைப்பற்ற.

இவர்க்கு பக்தியுண்டாயிருக்க ப்ரபத்தியே பேற்றுக்குடலாவானென்னென்ன (இவ்விரண்டித்யாதி.) "அருளினன்" என்றால் ப்ரபத்தியைச் சொல்லுமோவென்னில்; "அதுவு மவனதின்னருளே" என்று ப்ரபத்திக்குமடி க்ருபையாகையாலே ப்ரபத்தியென்று சித்தம். இவர்க்கு ப்ரபத்தியே பேற்றுக்குபாயமென்பானென், பக்தி தானாகுலோவென்னில், அப்படியாமன்று அபசூத்ராதிகரணத்தோடும் இவருடைய வுக்திகளோடும் விரோதிக்குமென்கிறார் (இனித்தானென்றுதொடங்கி நாலு வாக்யத்தாலே.) வேதாந்த விஹிதபக்தியானாலோவென்ன (அதுதானித்யாதி.) ந்யாயம் ப்ரசங்கிக்கும் - ந்யாயவிரோதம் ப்ரசங்கிக்குமென்றபடி. அதுதான் - வேதாந்த விஹிதபக்திதானென்றபடி. விவரணம் (அருளினனென்கிறவித்யாதி.)

ஆனாலிவர்க்கு பக்திதான் வந்தவழியேதென்ன (உபயேத்யாதி) யாமுநாசார்ய வசநம். உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய - கர்மஜ்ஞாநசம்ஸ்க்ருதாந்த: கரணஸ்ய. ஐகாந்திகமாகையாவது-பலதலைத்திருக்கையன்றிக்கே பகவானாகிற வொருதலையே பற்றியிருக்கை. ஆத்யந்திகமாகையாவது - அந்தமதீத்ய வர்த்தமாநமென்றாய், யாவதாத்மபாவியாயிருக்கை.

ப்ரபந்நனுக்கும் பக்திவேணுமென்கைக்கு சம்வாதமாதல், பகவத்ப்ரஸாதம் பக்திஹேதுவென்னு மதுக்கு சம்வாதமாதல் (இனித்தானிவர்வழியே யித்யாதி.) ப்ரபந்நனுக்கு மநுபவ கைங்கர்யங்க ளபுருஷார்த்தமாகாமைக்காக பக்திவேணுமென்கிறார் (அவனுபாயமித்யாதி.) ப்ரபத்தே: பூர்வபாவித்வேநவும் பக்திவேணுமென்று உபபத்திமுகேந தர்ஸிப்பிக்கிறார் (ப்ராப்யமின்னதென்றித்யாதி.) ஆகையாலே யென்றது - ப்ரபத்தியேயன்றிக்கே சாத்யபக்தியுமுண்டாகையாலே யென்றபடி. பக்தி ப்ரபத்திகள் விகல்பிக்கலாம்படியிறே யிருப்பதென்றது - " அவனுடைய க்ருபையே யுபாயம் " என்றறுதியிட்டிருக்கிற விவருடைய சித்தாந்தத்தைப்பார்த்தால் " ப்ரபத்தியே யிவர்க்குள்ளது, பக்தியில்லை " என்றும், ஆர்த்தியின் மிகுதியாலே ப்ரபத்தியைப் பண்ணுமிவருடைய வநுஷ்ட்டாநத்தைப்பார்த்தால் " பக்தியேயிவர்க்குள்ள

து, வேறொன்றுமில்லை" என்றும் விபஜித்துச் சொல்லலாம்படியா யிருக்குமிறே யென்றபடி. இத்தால் - "பக்தியாதல் ப்ரபத்தியாதலொழிய விரண்டுமுண்டாகக் கூடுமோ" என்கிற சங்கையும் பரிஹ்ருதம்.

கீழே "ஆகவீடுமின்முற்றத்திலும்" இத்யாத்யுக்தத்தை நிகமிக்கிறார் (ஆக வீடுமின் முற்றத்திலுமித்யாதி.) பிறர்க்குபதேசித்த பக்தி தம்முடைய பேற்றுக்குடலாகக்கூடுமோவென்னில்; விபீஷணாதிகள் ராவணாதிகளுக்குபதேசிக்க தத்த்வாராதங்களுக்கு பகவத்ப்ராவண்யாதிசய ஹேதுவானாப்போலே, இவர்க்கும் பிறனைக்குறித்துபதேசித்த பக்தி பகவத் ப்ராவண்யத்தைப் பிறப்பிக்க அத்தாலே ப்ரபத்தியைப்பண்ண, அது தம்முடைய பேற்றுக்குடலாய் ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியைச்சொல்லி நிகமிக்கிறார்; ஆகையாலே, இவர்க்குக் கூடுமென்றபடி. "தம்முடைய பேற்றுக்குடலாய்" இத்யாதியின் விவரணம் (இதுதான் ஸ்வசாத்யத்தோடே யித்யாதி.) சாத்யத்தோடே சேருகையாவது - சாத்யவ்யாப்தமாகையாய், சாக்ஷாத்காரமாகையென்றபடி. இதுவென்றது - பிறர்க்குபதேசித்த பக்தியென்றபடி.

தமக்கின்னம் பகவத்ப்ராப்தி சித்தியாதிருக்க, தத்பலம்பெற்றேனென்னும்படி யெங்ஙனேயென்கிற சங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் (இதுசாத்யத்தோடேயித்யாதி) ப்ராப்தியாவது - ப்ரத்யக்ஷாநுபவமென்றபடி. சாக்ஷாத்காரரூபமான வநுசந்தாநமாவது - ப்ரத்யக்ஷசமாநாகாரமென்று தோற்றுதே ப்ரத்யக்ஷமென்றே தோற்றுகிற மாநசாநுபவவிசேஷம். இப்போதென்றது - இங்கேயிருக்கச்செய்தே யென்றபடி. ஆனால், ப்ராப்திதசையி லநுபவம்போலே அப்ராப்திதசையிலு மநுபவம் போகரூபமாயிருக்குமோவென்ன (குணமநுபாவ்யமித்யாதி) அதாவது - "ஸோ ஶ்நுதே ஸர்வாந்காமாந்" (ஸோஸ்நுதே ஸர்வாங்காமாங்) என்கிறபடியே ப்ராப்திதசையிலே குணமநுபாவ்யமாயிருக்கச்செய்தேயும், இங்கேயு மக்குணவிசிஷ்டமாக வுபாஸிக்கிறானிறே குணாநுபவத்தின் போகரூபதையைப் பற்றவென்றபடி. அதிருக்கும்படியை - குணாநுபவத்தின் போகரூபதை யிருக்கும்படியையென்றபடி.

கீழுமெல்லாமென்றது - "கண்ணனை நான்கண்டேனே," "கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்," "கண்டசதிர்கண்டொழிந்தேன்," "கண்டுகொண்டென் கண்ணிணையாரக்களித்து" இத்யாதியைக்கடாக்ஷித்து. ப்ராப்யாநுசந்தாநமென்றது - ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநசாநுசந்தாநமென்றபடி. அவற்றைப்பற்றியென்றது - ஓரோகுணங்களைப் பற்றியென்றபடி. அவ்விடங்களில் - அந்தத்திருவாய்மொழிகளில். இத்தால் - அவ்விடங்களைப்பற்ற வித்திருவாய்மொழிக்கு * முனியே நான்முகனணித்தாகையாலே மாநசாநுபவத்துக்கொரு வைசத்யவிசேஷமுண்டென்றபடி. கீழெக்கும் ப்ராப்யாநுசந்தாநமுண்டானாலும் விஶ்லேஷவ்யஸந மதிசயித்திருக்கையாலே ப்ராப்யாநுபவம் மட்டமாயிருக்கும், இங்குபலவேளையாகையாலே ப்ராப்யாநுபவம் பூர்ணமாயிருக்குமென்றுகருத்து. * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் சொன்னவர்த்தத்தை நிகமிக்கைக்கடியேதென்ன (உபக்ரமித்தவித்யாதி.)

சங்கத்யந்தரம் (இங்ஙனன்றிக்கேயித்யாதி) கீழ் எம்பெருமானார் நிர்வாஹத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்து, மேல் ஆளவந்தார் நிர்வாஹத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இன்னமுமித்யாதி.)

தபஶ்ஶப்தம் ப்ரபத்தியைச்சொல்லுமோவென்ன (தஸ்மாந்ந்யாஸமித்யாதி) தைத்திரீயகே. பின்னையும் ப்ரபத்திக்கு சூசகசப்தமுண்டென்கிறார் (பண்டேபரமனித்யாதி) "சாதநபக்தி ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடி" என்றதுக்கு சப்தம் - "பாடிரவன்னுமம் வீடேபெறலாமே" என்றது.

* வீடுமின்முற்றம் பக்திபரமென்று முன்புசொன்னதுக்கும், ப்ரபத்திபரமென் றிப்போதுசொன்னதுக்கு மாப்தசம்வாதம் (ஆளவந்தாரித்யாதி) பக்திவிஷயமாக்கியென்றது - சாத்யபக்திவிஷயமாக்கியென்றபடி.

* வேய்மருதோளிணை முதற்றிருவாய்மொழியின் நிகமநமென்கைக்காக மீளவு மாளவந்தார் நிர்வாஹத்தை யநுவதிக்கிறுர் (ஆகமுதற்றிருவாய்மொழியிலித்யாதி) இத்தால் - * வேய்மருதோளிணைக்கிரண்டுபாவம் - ப்ராசங்கிகமாகப் பிறந்த வவசாதத்தை யநுசந்தித்து அவனுமாஸ்வஸிப்பிக்க வாஸ்வஸ்தராய் நின்றுரென்றும், கைங்கர்யத்தில் களையறுக்கிறதென்றும்.

ஆக, "முதற்றிருவாய்மொழியின் நிகமநம் - * கெடுமிடர், * வீடுமின்முற்றம் * பத்துடையடியவர் இரண்டும் சாத்யபக்திபரம், ஏதந்நிகமநம் - * சார்வேதவநெறி, * வேய்மருதோளிணை ப்ராசங்கிகம்" என்றெம்பெருமானுர் நிர்வாஹம்; "முதற்றிருவாய்மொழியின் நிகமநம் - * கெடுமிடர் * வேய்மருதோளிணை இரண்டும், * வீடுமின்முற்றம் ப்ரபத்திபரம், * பத்துடையடியவர் சாதநபக்திபரம், ஏதந்நிகமநம் - * சார்வேதவநெறி * கண்ணன்கழலிணை" என்றுளவந்தார் நிர்வாஹமென்று கண்டுகொள்வது. * வேய்மருதோளிணையோடே நேரேசங்கதி" என்று பிள்ளான் நிர்வாஹம் ......................................................................*

---

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றுள்கள்
கார்மேகவண்ணன்கமலநயனத்த
னீர்வானமண்ணெரிகாலாய்நின்றநேமியான்
பேர்வானவர்கள்பிதற்றும்பெருமையனே.

### ஆறுயிரப்படி.

ஸௌந்தர்யத்தினுலும் ஐஸ்வர்யத்தினுலும் திவ்யவிபூதியாலும் பரிபூர்ணனுயிருந்துவைத்து ஆஸ்ரிதஸுலபத்வார்த்தமாக தத்ஸஜாதீயதயாவதீர்ணனுன வெம்பெருமானுடைய திருவடிகள் பக்தியோகத்தினுலே ப்ராபிக்கலாம், இதிலொரு ஸம்ஶயமில்லையென்கிறுர் ......................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சர்வஸ்மாத்பரனுய் போக்யபூதனுனவன் பக்திலப்யனென்கிறுர்.

கார்மேகம் - காளமேகம்போலே ஶ்யாமளமான. வண்ணன் - வடிவையுடையனுய். அதுக்குபரபாகமாம்படி, கமலம் - கமலம்போலேயிருக்கிற. நயனத்தன்-திருக்கண்களையுடையனுய். அவ்வடிவழகேயன்றியே, நீர்வானம் மண்ணெரிகாலாய் நின்ற - பஞ்சபூதப்ரமுகமான சமஸ்தஜகத்தும் ப்ரகாரமாம்படி அந்தராத்மாவாய். நேமியான் - ரக்ஷணபரிகாரமான திருவாழியையுடையனுய், பேர் - இவ்வழகுக்கும்

ப்ராப்திக்கும் ரக்ஷகத்வத்துக்குமான திருநாமங்களை. வானவர்கள் - பரமபதவாசிகளானவர்கள். பிதற்றும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அக்ரமமாகச்சொல்லும்படியான. பெருமையன் - பெருமையையுடையனாய். இப்படி உபயவிபூதிநாதனாய்வைத்து, தாமோதரன் - "மத்துறுகடைவெண்ணெய் களவினிலுரவிடை யாப்புண்டெத்திறம்" என்கிறபடியே வெண்ணெய்க்களவிலே தாம்பாலேகட்டுண்டு அத்தாலே தாமோதரனென்று பேராம்படி ஆஸ்ரிதபவ்யனானவனுடைய. தாள்கள் - திருவடிகளானவை. தவநெறிக்கு - "வணக்குடைத்தவநெறி" என்று ப்ரசித்தமான பக்திமார்க்கத்துக்கு. சார்வே-ப்ராப்யமாயேயிருக்கும் .................................*

## ஈடு - முதற்பாட்டு.

உபயவிபூதியுக்தனாயிருந்துவைத்து ஆஸ்ரிதசுலபனானவனுடைய திருவடிகள் பக்தியோகலப்யமென்கிறார்.

(சார்வேதவநெறிக்குத் தாமோதரன்றாள்கள்) (தவநெறிக்கு-சார்வே) "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றும் "எளிவருமியல்வினன்" என்றும் சொன்ன அவன்திருவடிகள் சார்வென்கிறார். சார்வு-ப்ராப்யம். (தவநெறிக்கு) பக்திமார்க்கத்துக்கு. (தபோமார்க்கமென்றபடி) "வணக்குடைத்தவநெறி" என்றாரே அங்கே; அத்தைச்சொல்லுகிறார். "தவநெறி" என்னுங்காட்டில் பக்தியைச்சொல்லிற்றாமோவென்னில்; "நமஸ்யந்தஸ்ச மாம்" (நமஸ்யந்தப்ஸமாம்) என்று நமஸ்ஸை காரணசரீரமாக வுடைத்தாயிருக்குமிறே பக்தி, இவனொரு ப்ரணாமத்தைப் பண்ணினால் "இவன் நம்மைநோக்கிக்குவாலாக வருந்தினான்" என்று இதுதன்னைப் பெரியகாய க்லேசமாக நினைத்திருக்கு மவன்கருத்தால் சொல்லுகிறது. அன்றிக்கே, "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" (யஸ்யஜ்ஞாநமயம்தப:) என்று ஜ்ஞாநவிசேஷமான பக்தியைத் தபஸ்ஸென்று சொல்லிற்றாகவுமாம். (தாமோதரன்றாள்கள்) "உரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவு" என்றத்தைச்சொல்லுகிறாரிங்கு. யசோதாதிகள்கையிலே கட்டுண்டு தழும்பு சுமந்ததுவே திருநாமமாயிருக்குமவனிறே; யசோதாதிகள்கையிலே கட்டுண்பானொருவனானபின்பு, அவனையுகப்பார் அவன்காலைக்கட்டிக்கொள்ளுமித்தனையிறே.

எப்படிப்பட்டவன் சுலபனாகிறானென்னில்; விலக்ஷணவிக்ரஹயுக்தனாய் உபயவிபூதியுக்தனானவன்கிடீர்! என்கிறார் (கார்மேகவண்ணன்) நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே ப்ரமஹரமான வடிவையுடையவன். பக்திதனக் கிவன்றான் க்ருஷிபண்ணவேண்டா, ருசிக்குத்பாதகமுமாய் பின்பத்தைவளர்த்து அதுபக்வமானால் தானேப்ராப்யமாம் வடிவையுடையவன். * காதல் கடல்புரைய விளைவித்தகாரமர் மேனியிறே. கார்காலத்தில் மேகம்போலேயென்னுதல், கறுத்தமேகமென்னுதல். "புயற்கருநிறத்தனன்" என்றத்தைச்சொல்லுகிறார். (கமலநயனத்தன்) அகவாயில் குணங்களுக்கு ப்ரகாசகமாயிருக்குமிறே திருக்கண்கள். அநுக்ரஹம

கள

டையத்தோற்றுவது கண்வழியேயிறே. வாத்ஸல்யப்ரகாசகமான திருக்க ண்களையுடையவன். வடிவழகுகண்டு மேல்விழுகையன்றிக்கே, மேன்மை யாலும் மேலேவிழவேண்டுமவனுய்த்து. (நீர்வானமித்யாதி) விக்ரஹவை லக்ஷண்யமேயன்றிக்கே ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச்சொல்லுகிறது."யா வையும் யாவரும்தானுமமைவுடைநாரணன்" என்றத்தை நிகமிக்கிறுர். ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும் சொன்னவித்தால் - அவற்றின் கார்ய மான தேவாதிவிசேஷங்களையும் நினைக்கிறது. இத்தால் - லீலாவிபூதியை ச்சொல்லுகிறது. (நேமியான்) கையுந்திருவாழியுமாய் நித்யவிபூதியிலே யிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. (பேர்வானவர்கள்) இவ்வருகிலாக்க ளுன தேவர்களன்றிக்கே அவ்வருகில் பெருமக்களேத்தும்படியான பெ ருமையையுடையவன். அன்றிக்கே, "வானவர்கள் - பேர் - பிதற்றும் பெ ருமையன்" என்றுமாம். இங்கு ருசியுடையாரும் பிதற்றுமித்தனை, ப்ரா ப்யம் கைபுகுந்தவ்வருகுபட்டார்ாயிருக்கிறவர்களும் பிதற்றுமத்தனை.

கார்மேகவண்ணனுய், கமலநயனத்தனுய், நீர்வானம் மண்ணெரி காலாய்நின்ற நேமியானுய், பேர்வானவர்கள் பிதற்றும் பெருமையனுயி ருந்துவைத்து - தாமோதரனுனவன் றிருவடிகள் - தவநெறிக்கு - சார் வே - இது நிஶ்சிதம் .......................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (சார்வேயித்யாதி) "நீர்வானம்" என்றுதொடங்கி, "பெருமை யன் - தாமோதரன்றாள்கள் - தவநெறிக்கு - சார்வு" என்றந்வயமுகேனாவதாரி கை (உபயவிபூதீத்யாதி) இந்தவவதாரிகை, ப்ரவேசத்தி லருளிச்செய்த முந்தின யோஜனாநுகுணம்.

ப்ரவேஶத்திலே, தபஶ்ஶப்தத்தாலே - ப்ரபத்தியைச்சொல்லுகையாலும், இ ங்கே பக்தியோகலப்யமென்கையாலும், இப்பாட்டு ப்ரபத்திபரமாயும் பக்திபரமாயு மிருக்கிறது. நிகமிக்கிறப்ரகாரத்தைக்காட்டுகிறுர் (பத்துடையித்யாதி) "தவநெறி" என்று * பத்துடையடியவரிலே யிருக்கிறதோவென்ன (வணக்குடையித்யாதி) அங் குத்தானிது சொல்லும்படி யெப்படியென்றுசங்கித்து, த்வேதாபரிஹாரம் (தவநெ றியென்னுங்காட்டிலித்யாதி) தவநெறியென்னுங்காட்டில் தபஸ்ஸைச்சொல்லும தொழிய பக்தியைச்சொல்லிற்ருமோவென்னிலென்றபடி. கரணசரீரமாக - அங்க மாகவென்றபடி. (இருக்குமிறேபக்தி) என்றவநந்தரம், "ஆகையாலே" என்றுகூட் டிக்கொள்வது. கரணசரீரமான நமஸ்காரத்தை தபஸ்ஸென்பானென்னென்ன (இவ னொருவித்யாதி) அதாவது - அங்கமானநமஸ்ஸை ஈஶ்வராபிப்ராயத்தாலே தபஸ் ஸென்னலாமாகையாலே, அங்கமானநமஸ்ஸையிட்டு அங்கியானபக்தியை தபஶ்ஶப் தத்தாலே உபசரிக்கிறதென்றபடி. ப்ரபத்திபரமானபோது, "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்னக்கடவதிறே. "தவநெறி" என்றத்தை சாத்யபக்தியாக சாதிக்கப்புக் கு, "நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா" (நமஸ்யந்தஶ்சமாம்பக்த்யா) என்றத்தையெடுத் தது - சாத்யபக்திமானுக்கும் சம்பாவிதமான ப்ரணுமாதிகளுண்டாகையாலே. குவா ல்-அதிகம், வருந்தினான் - ப்ரயாசப்பட்டான். "தபஸ்ஸென்று - ஜ்ஞானத்தைச்சொ

ல்லும்" என்னுமதுக்கு ப்ரமாணம் (யஸ்யஜ்ஞாநமயமித்யாதி) "[illegible] தே" (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்யஸ்யஜ்ஞாநமயம்தப: । தஸ்மாதேதத்ப்ரஹ்மநாமரூபமந்நஞ்சஜாயதே) இதிமுண்டோபநிஷதி. "[illegible]" (ஸததம்கீர்த்தயந்தோமாம்யதந்தஶ்சத்ருடவ்ரதா: । நமஸ்யம்தஶ்சமாம்பக்த்யா நித்யயுக்தாஉபாஸதே) இதிகீதாஸூநவமே. * பத்துடையடியவரின் நிகமநமென்கைக்கு ஸூசகசப்தம் (உரலிநோடித்யாதி) சப்தார்த்தம் (யசோதாதிகளித்யாதி) "தாள்கள்" என்றதுக்கு கீழையுங்கூட்டிபாவம் (யசோதாதிகளித்யாதி.)

மேலுக்கெல்லாமவதாரிகை (எப்படிப்பட்டவனித்யாதி) இவ்வடிவழகைச் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநவிசேஷங்க ளருளிச்செய்கிறார் (பக்திதனக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) விக்ரஹம் பக்திவர்த்தகமோவென்ன (காதலித்யாதி) காரென்று - கறுப்பாதல், கார்காலமாதல். "கார்மேகவண்ணன்" என்றது * பத்துடையடியவரிலேயுண்டோவென்ன (புயற்கருவித்யாதி.)

அப்படி ப்ரகாசகமோவென்ன (அநுக்ரஹமித்யாதி) சப்தார்த்தம் (வாத்ஸல்யேத்யாதி) கமலநயநத்வம் பரத்வஹேதுவென்று பாவாந்தரமாதல், "நீர்வானம்" இத்யாதிக்கவதாரிகையாதல் (வடிவழகித்யாதி.)

அவதாரிகாபக்ஷத்திலே, "வடிவழகு" இத்யாதிவாக்யவிவரணம் (விக்ரஹவைலக்ஷண்யமேயித்யாதி) "வடிவழகு" இத்யாதிவாக்யம் பாவாந்தரமானபோது, "நீர்வானம்" இத்யாதிக்குபாவம் (விக்ரஹவைலக்ஷண்யமேயித்யாதி) என்றுகண்டுகொள்வது. "நீர்வானம்" இத்யாதி * பத்துடையடியவரிலேயுண்டோவென்ன (யாவையுமித்யாதி.) பஞ்சபூதங்களையும்சொன்னால் எல்லாம் சொன்னதாமோவென்ன (ப்ருதிவ்யாதித்யாதி) "[illegible]" (தமஸ:பரமோதாதா) இத்யாதியைப்பற்ற (கையுந்திருவாழியுமாயித்யாதி.)

பேர்வானவர்கள் - பெரியவானவர்கள். "பேர்வானவர்கள்" என்றதுக்குபாவம் (இவ்வருகிலித்யாதி) பேர் - பெருமை. இரண்டாமர்த்தத்துக்கு, "பேர்" என்று - திருநாமம். அஜ்ஞான விவ்வருகுள்ளவர்களன்றோ பிதற்றுமவர்களென்ன (இக்குருசியித்யாதிவாக்யத்வயம்.)

அந்வயித்துக்காட்டுகிறார் (கார்மேகமித்யாதி) "சார்வே" என்றவவதாரணார்த்தம் (நிஶ்சிதமென்றது)..........................................................*

---

## இரண்டாம்பாட்டு.

பெருமையனேவானத்திமையோர்க்குங்காண்டற்
கருமையனேயாகத்தணையாதார்க்கென்றுந்
திருமெய்யுறைகின்றசெங்கண்மாலநா
மிருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றானே.

## ஆறாயிரப்படி.

( பெருமையனே ) ப்ரஹ்மாதிகளுக்கு மீஶ்வரனாய், அநாஶ்ரிதர்க்கு துர்த்தர்ஶனாய்,பெரியபிராட்டியாரோடு நித்யஸம்ஶ்லிஷ்டனாயிருந்த எம்பெருமான், நாளுமிருமைவினைகடிந்திங் கென்னையாள்கின்றானென்று கொண்டு, தம்முடையலாபத்தைப்பேசுகிறார்.........,....................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரத்வாதிஹேதுவான ஶ்ரியஃபதித்வத்தை யுடையவன், தன்சீலாதிசயத்தாலே யென்னை யடிமைகொள்ளாநின்றானென்கிறார்.

வானத்து - ஊர்த்வலோகவாஸிகளான. இமையோர்க்கும் - ப்ரஹ்மாதிகளுக்கும். பெருமையன் - அவ்வருகான பெருமையையுடையனாய். ஆகத்து - நெஞ்சிலே. அணையாதார்க்கு - அநுசந்தியாதார்க்கு. காண்டற்கு - காண்கைக்கு. அருமையன் - அரியனாயிருக்குமவனாய். என்றும் - சர்வகாலமும். திரு - லக்ஷ்மியானவள். "அகலகில்லேனிறையும்" என்று, மெய் - திருமேனியிலே. உறைகின்ற - நிரந்தரவாஸம்பண்ணுகையாலே. செங்கண் - நிரதிசயைஶ்வர்ய சூசகமான சிவந்த திருக்கண்களையுடைய. மால் - பெரியவன். இருமைவினைகடிந்து - புண்யபாபரூபகர்மங்களைப்போக்கி. இங்கு - இந்தவிபூதிதன்னிலே. நாளும் - நாள்தோறும். என்னை-என்னை. ஆள்கின்றான் - அடிமைகொள்ளுகிறான். .......................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சர்வேஶ்வரனாய் ஶ்ரியஃபதியாயிருந்துவைத்து என்விரோதியைப் போக்கி யென்னை யிங்கே யடிமைகொள்ளாநின்றானென்று, கீழ்ச்சொன்ன சௌலப்யம் தமக்குப் பலித்தபடியை யருளிச்செய்கிறார்.

( பெருமையனே வானத்திமையோர்க்கும் ) "அமைவுடை முதல்கெடலொடிவிடை யறநிலமதுவா - மமைவுடையமரர்" என்றத்தைச் சொல்லுகிறது. அல்லாதார் கீழேயிருக்க தாங்கள் விலக்ஷணமான தேசங்களிலே யிருக்கிறார்களாய், ஸ்ருஷ்ட்யாதிகளுக்கும் தாங்களே கடவர்களாக நினைத்துத் தங்களைக் குவாலாக நினைத்திருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் தன்னையாஶ்ரயித்து ஸ்வரூபம் பெறவேண்டும்படியான பெருமையையுடையவன். ( வானத்து ) அவ்வாசியே யவர்களுக்குள்ளது; அவனைப்பார்த்தால் நம்மோடவர்களோடு வாசியில்லை. சம்சாரத்தில் நம்மிலும் கனவியராயிருப்பர்கள். நமக்குப் பற்றினவளவேயிறே விடவேண்டுவது, அவர்களுக்கு த்ரைலோக்யமும் விடவேணுமே.

( காண்டற்கித்யாதி ) தானேவந்து மேல்விழாநின்றால் விலக்காமையின்றிக்கே யிருப்பார்க்குக் காண வரியனாயிருக்கும். சம்பந்தமின்று தேடவேண்டா, பெறவேணுமென்கையும் வேண்டாவென்கையுமிறே யுள்ளது. "பிறர்களுக்கரியவித்தகன்" என்றத்தைச் சொல்லுகிறது.

(என்றும்திருமெய்புறைகின்ற) ரஹஸ்யத்தில் நித்யயோகத்தை ச்சொல்லுகிறதிறே. * அகலகில்லேனிறே. "மலர்மகள்விரும்புநமரும் பெறலடிகள்" என்றத்தைச் சொல்லுகிறது. என்றுமொக்கப் பெரியபிராட்டியார் வர்த்திக்கிற திருமேனியையுடையவன். (செங்கண்) அவளோட்டை நித்யசம்ஶ்லேஷத்தாலே, நீர்பாய்ந்த பயிர்போலே செவ்வி பெற்ற திருக்கண்களையுடையவன். (மால்) "யஸ்யஸாஜநகாத்மஜா" (யஸ்யஸாஜநகாத்மஜா) என்றவளையுடையனாகையால் வந்த பெருமையைச் சொல்லுகிறது. "அரும்பெறலடிகள்" என்றத்தைச் சொல்லுகிறது.

(நாளுமித்யாதி) (இருமைவினைகடிந்து - நாளும் - இங்கென்னையாள்கின்றானே) புண்யபாபரூப கர்மங்களைப் போக்கி, இத்தைவிட்டொருதேசவிசேஷத்திலே போனால் கொள்ளக்கடவ வடிமையை இஹலோகத்திலே நாள்தோறும் கொள்ளாநின்றான். அங்குப்போனால் குணாநுபவத்தாலே சத்தையை நிர்வஹிக்கும்; இங்கு குணஜ்ஞாநத்தாலே தரிப்பியாநிற்கும்............................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (பெருமையனேயித்யாதி.) "வானத்திமையோர்க்கும்- பெருமையனே" என்றுதொடங்கி, "என்னையாள்கின்றான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஶ்வரனுயித்யாதி.)

"பெருமையனே" இத்யாதி * பத்துடையடியவரிலே யெங்கே சொல்லிற்றென்ன (அமைவுடையித்யாதி.) "வானத்திமையோர்க்கும் - பெருமையனே" என்றந்வயித்தர்த்தம் (அல்லாதாரித்யாதி.) "இமையோர்க்கும்" என்ற சமுப்தார்த்தம் (தங்களைக்குவாலாகவித்யாதி.) "வானத்து" என்று விசேஷித்ததுக்கு பாவம் (அவ்வாசியே யித்யாதிவாக்யத்வயம்.) நம்மைப்பற்ற வாசியில்லையோவென்ன (சம்சாரத்திலித்யாதி) சம்சாரத்திலாதிக்யமுண்டென்றபடி. கனவியர் - கனத்தவர். அதிகரென்றபடி. அதெப்படியென்ன (நமக்கித்யாதி.)

"ஆகத்தணையாதார்க்கு - காண்டற்கருமையனே" என்றதுக் கர்த்தம் (தானேவர்தித்யாதி.) ஆகத்தணையாமை - மநஸ்ஸில் வையாமையாய், விலக்காமையில்லாதார்க்கென்றபடி. விலக்காமை யின்றிக்கே யிருப்பார்க்கு - விலக்குகிற வுங்களுக்கென்றபடி. காண்கைக்கு விலக்காமைமாத்ரம் போருமோ வென்ன (சம்பந்தமித்யாதி.) (வேண்டாவென்கையுமிறே யுள்ளது) என்றவநந்தரம், "பெறுகைக்குமிழக்கைக்கும்" என்றத்யாஹார்யம். இது * பத்துடையடியவரிலே யெங்கேசொல்லிற்றென்ன (பிறர்களுக்கித்யாதி.)

மெய் - விக்ரஹம். ரஹஸ்யத்தில் நித்யயோகமாவது - த்வயத்தில் மதுப்பைச்சொல்லுகிறது. "உறைகின்ற" என்கிற வர்த்தமாநத்தாலே - பிரியாதே வர்த்திக்கிறாளென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் (அகலகில்லேனிறே யென்று;) "உறைமார்பா" என்னுமளவும் விவக்ஷிதம். இது * பத்துடையடியவரிலே சொல்லிற்றேவென்ன (மலர்மகளித்யாதி.) "என்றும்திரு - உறைகின்ற - மெய்" என்

றதுக்கு சப்தார்த்தம் (என்றுமொக்கவித்யாதி.) "திரு - உறைகின்ற செங்கண் மால்" என்றபதச்சேர்த்திக்கு பாவம் (அவளோட்டையித்யாதி.) "திரு - உறைகின்ற - மால்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (யஸ்யஸேத்யாதி) "அப்ரமேயம் ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா। நத்வம் ஸமர்த்தஸ்தாம்ஹர்த்தும் ராமசாபாஸ்ரயாம்வநே" (அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா । நத்வம் ஸமர்த்தஸ்தாம்ஹர்த்தும் ராமசாபாஸ்ரயாம்வநே) இதி மாரீசஃ. மால்-பெரியவன். ஸ்வாமியென்றபடி. இது * பத்துடையடியவரிலே சொல்லிற்றேவென்ன (அரும் பெறலித்யாதி.)

தேசவிசேஷத்தில் கொள்ளு மடிமையை யிங்கே கொள்ளும்படி யென்னென்ன (அங்குப்போனலித்யாதி.)

வானத்திமையோர்க்கும் - பெருமையனே, ஆகத்தணையாதார்க்கு - காண்டற்கருமையனே, என்றும் திரு - உறைகின்ற - மெய் - செங்கண்மால், இங்கு - இருமைவினைகடிந்து - நாளும் - என்னையாள்கின்றானே இத்யந்வயஃ.....................*



## மூன்றாம்பாட்டு.

ஆள்கின்றானாழியானாராற்குறைவுடையம்
மீள்கின்றதில்லைப்பிறவித்துயர்கடிந்தோம்
வாள்கெண்டையொண்கண்மடப்பின்னைதன்கேள்வன்
றாள்கண்டுகொண்டென்றலைமேற்புனைந்தேனே.

### ஆறாயிரப்படி.

(ஆள்கின்றானாழியான்) ஆள்கின்றானாழியான் ஆராற்குறையுடையம், இனி இஸ்ஸம்ஸாரத்தில் மீளக்கடவதன்று; எங்ஙனே யென்னில்; இந்த சம்சாரதுஃகத்தைக் கடிந்தோம், வாள்கெண்டை யொண்கண்மடப் பின்னைதன்கேள்வனுடைய திருவடிகளைக் கண்டுகொண்டு என்தலைமேல் புனைந்தே னென்கிறார். .............................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நப்பின்னைப்பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே நிரதிசயாநுபாவ்யனான க்ருஷ்ணன்றிருவடிகளை யநுபவிக்கப்பெற்றேன், அவன் ரக்ஷகனாக விரோதிமறுவலிடாது, என்னகுறையுண்டென்கிறார்.

"கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான்" என்கிறபடியே, ஆழியான் - கையுந்திருவாழியுமாய்க்கொண்டு. ஆள்கின்றான் - விரோதியைப்போக்கிரக்ஷித்தருளாநின்றான். அத்தாலே, பிறவித்துயர் - ஜந்மப்ரயுக்த சகலதுஃகங்களையும். கடிந்தோம் - போக்கினோம். மீள்கின்றதில்லை - இனி அதுமீளுகிறதில்லை. ஆனபின்பு, ஆரால்குறைவுடையம் - நம்மோடு பிறரோடு வாசியற ஒருவராலும் ஒருகுறையையுடையோமல்லோம். வாள் - கூர்மைநெடுமையாலே வாளும். கெண்டை - குளிர்த்திமிளிர்த்தியாலேகெண்டையும். ஒண்-போலியாம்படி விலக்ஷணமான. கண்-

கண்ணையுடையளாய், மடம் - மடப்பம் முதலான ஆத்மகுணங்களாலே பூர்ணையான. பின்னைதன் - நப்பின்னைப்பிராட்டிக்கு. கேள்வன் - அபிமதநாயகனானவனுடைய. தாள் - திருவடிகளை. கண்டுகொண்டு - அபரோக்ஷித்து. என்தலைமேல் - என்தலைமேலே. புனைந்தேன் - தரிக்கப்பெற்றேன். ......................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

மறுவலிடாதபடி சம்ஸாரத்தைப் போக்கி நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனுடைய திருவடிகள் சிரோபூஷணமாகப் பெற்றேனென்கிறார்.

(ஆள்கின்றானாழியான்) ஆசிலேவைத்த கையும் தானுமாய் விரோதியைப்போக்கி யடிமைகொள்ளாநின்றான்; வகுத்த சர்வேஶ்வரனடிமைகொள்ளாநின்றானென்னுதல். பின்னையு மவன்கைபார்த்திருக்கவேண்டு மசேதந க்ரியாகலாபங்களைப் பூண்கட்டாநிற்பர்கள் சிலர், "கூரம்பனல்லால்" என்று அம்பின் கூர்மையையும் "சுடர்வட்டவாய்நுதிநேமியீர்" என்று திருவாழியில் கூர்மையையுங் கொண்டு பெறவிருப்பர்கள் சிலர். அசக்தனான தன்னாலே சாத்யமான க்ரியாஜாதத்தைப்பற்றிப் பெறவிருப்பர்கள் சிலர், சித்தஸ்வரூபனான சர்வசக்தியைப்பற்றிப் பெறவிருப்பர்கள்சிலர். க்ரியாஜாதத்தை நெகிழச்சொல்லி, "கெடுவாய், என்னையன்றோ பற்றுகிறது" என்றானிறே. (ஆரால்குறைவுடையம்) என்னாலே யிழக்கவேண்டுதல், ஆராயக்கடவ யமாதிகளுக்கும் வந்துகிட்டலாதல், அவன்றன்னளவும் சென்றால் பின்னையு மொன்றைப் பார்த்திருத்தல் செய்யவேண்டும்படியா யிருப்பதொன்றையோ நான்பற்றிற்று. (ஆரால்) என்கிறார்காணும், என்று மொருசேதநனாலே பேறென்றிருக்கு மவராகையாலே. (மீள்கின்றதில்லை) இனி மறுவலிடுகிறதில்லை. (பிறவித்துயர்கடிந்தோம்) சம்ஸாரதுரிதத்தை யோட்டினோம். பரமபதத்தே புகச்செய்தேயும் ருசிமுன்னாகப் பேறல்லாமையாலே கடலில்புக்க துரும்புபோலே மீளப்போந்தார்களிறே வைதிகபுத்ரர்கள். "மயர்வறமதிநலமருளினன்" என்று ருசிமுன்னாக அவன் தரப்பெறவிருக்கிற நமக்குப்புநராவ்ருத்திப்ரசங்கமுண்டோ. (கடிந்தோம்) என்கிறாரிறே, அவன் செய்வானாக வெறட்டுக்கொண்ட கார்யத்துக்கு "ஸ்த்திதோஸ்மி" என்னலாம்படி யிருக்குமிறே.

(வாளித்யாதி) அவன் ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்ததாகில் அடைகுவளம் தடைப்படும்போலேகாணும். இனியென்னாலேதான் விடப்போமோ, அவனாலேதான்விடப்போமோ. என்னுடைய பாரதந்த்ர்யம்போலே அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கு மேதேனும் கண்ணழிவுண்டோ. அவன் ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்ததோ தன்னாணை யிழக்கின்றான். * மணநோக்கமுண்டானிறே. ஒளியை யுடைத்தான கெண்டைபோலே முக்தமாய் வைத்தகண் வாங்காதே கண்டுகொண் டிருக்கவேண்

டும்படியான அழகிய கண்களை யுடையளாய் ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபன். (தாள்கண்டுகொண்டு) காட்சிக்கு ஹேதுசொல்லிற்றிறே. (என்தலைமேல்புனைந்தேனே) "துயராறுசுடரடிதொழுதெழு" என்றும் "பாதபங்கயமேதலைக்கணியாய்" என்றும் "கோலமாமென்சென்னிக்கு" என்றும் சொல்லுகிறபடியே, மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப்போலே யிருக்கிற போக்யதைசொல்லுகிறது. "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்று ப்ரார்த்தித்தவத்தைத் தலையாகப்பெற்று க்ருதக்ருத்யனானேன். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (ஆள்கின்றானித்யாதி.) "மீள்கின்றதில்லை" என்றுதொடங்கி "தலைமேல்புனைந்தேனே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (மறுவலிடாதபடியித்யாதி.)

"ஆழியான் - ஆள்கின்றான்" என்றதுக்கு த்வேதா பாவம் (ஆசிலேயித்யாதிவாக்யத்வயம்.) ஆசு - ஆயுதப்பிடி. ஆழியைக்கொண்டாள்கின்றானென்று முந்தினவர்த்தம். திருவாழிபரத்வஸூசகமாகையாலே (வகுத்த சர்வேஶ்வரன்) என்கிறது. தம்மை "ஆழியான் - ஆள்கின்றான்" என்கையாலே ப்ரதிகோடியையும் கூட்டி பாவம் (பின்னையு மவன்கைபார்த் தித்யாதிவாக்யத்வயம்.) பின்னையுமென்றது - சாதநாந்தரங்களை யநுஷ்டித்தபின்பு மென்றபடி. (கூரம்பனல்லால்) நாலாந்திருவந்தாதி எட்டாம்பாட்டு, "இலைதுணை" இத்யாதி. கீழ்வாக்யத்வயவிவரணம் (அசக்தனானவித்யாதிவாக்யத்வயம்.) (பின்னையுமவன்கைபார்த்து) இத்யாதிவாக்யத்தாலே - கார்யசித்தியி லீஶ்வராபேக்ஷையும், (அசக்தனான) இத்யாதிவாக்யத்தாலே - ஸ்வரூபசித்தியில் சேதநாபேக்ஷையும் சொல்லப்படுகிறது. சாஸ்த்ரவிஹிதமான வுபாயாந்தரங்களைவிட்டு அவனைப்பற்றக் கூடுமோவென்ன (க்ரியாஜாதத்தையித்யாதி.) (என்றானிறே) சரமஶ்லோகத்தாலே யென்றபடி.

ஆரால் குறைவுடையம் - ஒன்றாலும் குறைவுடையோமல்லோ மென்றபடி. இதுக்குபாவம் (என்னாலேயித்யாதி) * யாதானும்பற்றிநீங்கும்விரதத்தை நல்வீடு செய்கையாலே யென்னு மிழக்கவேண்டுத லென்றபடி. ஆராயக்கடவ யமாதிகளுக்கும் வந்து கிட்டலாதலென்றது - சம்சாரியான நிலையில் நில்லாமையைப் பற்ற. பின்னையுமொன்றைப் பார்த்திருத்தலென்றது - அவன் விஷயமான பக்த்யாதிகளைப்பற்றியும் அவன் க்ருபையைப்பார்த்திருத்தலென்றபடி. ஆனால், எத்தால் என்னுமல், "ஆரால்" என்கிறதென்னென்ன (ஆராலென்கிறார்காணுமித்யாதி.)

மறுவலிடுகிற தில்லையென்றது - சம்சாரம் மறுவலிடுகிறதில்லை யென்றபடி. பிறவித்துயர்கடிந்தால் மீளாமை சித்தமாயிருக்க, "மீள்கின்றதில்லை" என்கைக்கு ப்ரசக்தியேதென்ன (பரமபதத்திலேயித்யாதி.) திருமேனியோடேயிருக்க "கடிந்தோம்" என்று பூதமாகச் சொல்லுவா னென்னென்ன (கடிந்தோமென்கிறாரித்யாதி.) "நஷ்டோ மோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத । ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ꞉ கரிஷ்யே வசநம் தவ" (நஷ்டோமோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத ! ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹஃ கரிஷ்யேவசநம்தவ) இதிகீதாஸு.

"மீள்கின்றதில்லை" என்பானென், ஸ்வதந்த்ரனான நான் தள்ளினாலோவென்ன; "வாள்" இத்யாதிவிசேஷணங்களுக்கு பாவம் (அவன் ஸ்வாதந்த்ர்யமித்யாதி.) அடுகுவளம் - அடுகென்று - பெட்டிமேல் பெட்டியாய், வளமென்று-போக்யவஸ்துவாய், பெட்டிமேல் பெட்டியாக வைத்திருக்கிற போக்யவஸ்து; போனகப்பெட்டியென்றபடி. அடுகுவளம் - போஜநமும். அடுகுவளம் தடைப்படுகையாவது - நப்பின்னைப்பிராட்டி கடாக்ஷம் பெருமை. நப்பின்னைப்பிராட்டி புருஷகாரம் சொன்னதுக்கு பாவம் (இனியென்னாலேயித்யாதி.) இனியென்றது - என்னுடையவங்கீகாரம் நப்பின்னைப்பிராட்டி யடியாகவந்தபின் பென்றபடி. அவனாலே விடப்போகாமைக் கடியேதென்ன (என்னுடையவித்யாதி.) "அவன்ஸ்வாதந்த்ர்யம்" இத்யாதிவாக்யவிவரணம் (ஸ்வாதந்த்ர்யமித்யாதி.) கடாக்ஷம் போஜநமென்னுமதுக்கு ப்ரமாணம் (மணநோக்கமித்யாதி) திருமொழி. சப்தார்த்தம் (ஒளியையித்யாதி.) வாள் - ஒளி. காட்சிக்கு ஹேதுவென்றது - நப்பின்னைப்பிராட்டி புருஷகாரத்தை.

"என்" என்றதுக்கு பாவம் (துயரறுவித்யாதி.) "புனைந்தேன்" என்கிற பதசக்தியாலே (மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப்போலே யென்றது.) "தலைமேல்புனைந்தேன்" என்றதுக்கு பாவம் (நின்செம்மாவித்யாதி.) தலையாக வென்றது - சாடு. தலையிலேயாகவென்றும், ஸ்ரேஷ்ட்டமாகவென்றும்.

வாள் கெண்டை யென்றுதொடங்கி, புனைந்தேன், பிறவித் துயர்கடிந்தோம்-மீள்கின்றதில்லை, ஆழியான் - ஆள்கின்றான், ஆரால் குறைவுடைய மித்யந்வய:....*



## நான்காம்பாட்டு.

தலைமேற்புனைந்தேன்சரணங்களாலி
னிலைமேற்றுயின்றானிமையோர்வணங்க
மலைமேற்றானின்றென்மனத்துளிருந்தானை
நிலைபேர்க்கலாகாமைநிச்சித்திருந்தேனே.

### ஆறாயிரப்படி.

(தலைமேல்) இனியிவனை யென்தலையில் நின்றும் ஒருவராலும் பேர்க்கவொண்ணாதென்கிறார்.... ...........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணத்தில் ஸ்த்திரஸ்வபாவனானவனை நெஞ்சிலிருந்த விருப்புக் கொலைக்கவொண்ணாதென்று அறுதியிட்டிருந்தே னென்கிறார்.

சரணங்கள் - அவன்றிருவடிகளை. தலைமேல் - என்தலைமேலே. புனைந்தேன் - வைத்துக்கொண்டிருந்தேன். அகடிதகடனா சமர்த்தனாய்க்கொண்டு, ஆலினிலைமேல்-ஆலிலையில். துயின்றான்-கண்வளர்ந்தருளும் சர்வரக்ஷகனாய். இமையோர் - நித்யசூரிகள். வணங்க - தொடர்ந்தவந்துவணங்கும்படி. மலைமேல் - திருமலையிலே. தான்-ஸ்வயம்ப்ரயோஜநமாம்படியாக. நின்று-எழுந்தருளிநின்று. என்மனத்துள்-என்னெ

ஞ்சுக்குள்ளேபுகுந்து. இருந்தானை-ப்ரதிஷ்ட்டிதனுயிருந்தவனை. நிலை - இவ்விருப்பில் ஸ்த்தைர்யம். பேர்க்கலாகாமை-கொலைக்கவொண்ணுமையை. நிச்சித்து-நிஸ்சயித்து. இருந்தேன்-அத்தாலே க்ருதக்ருத்யனுயிருந்தேன் ...............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

என்மநஸ்ஸிலேயிருக்கிற சர்வேஸ்வரனை யொருவராலும் விஸ்லேஷிப்பிக்கவொண்ணுதென்று நிஸ்சயித்து, அத்தாலே க்ருதக்ருத்யனுயிருந்தேனென்கிறுர்.

(தலைமேல்புனைந்தேன்சரணங்கள்) * அமரர்சென்னிப் பூச்சூட்டப்பெற்றேன். ப்ரார்த்தித்துப்போகையன்றிககே அத்திருவடிகளை யென்தலைமேலேவைத்துக்கொள்ளப்பெற்றேன். இப்பேறிவர்பெறுகைக் கவன்க்ருஷிபண்ணினபடி சொல்லுகிறதுமேல். அவன் * வண்டடத்தினுட்கிடந்து தபஸ்ஸுபண்ணிற்று இவரிப்பேறுபெறுகைக்கு. (ஆலினிலைமேல்துயின்றுன்) தன்னைக்கொண்டு கார்யமுடையார் சிலரைக்கண்டிலன், எல்லார்க்குமாராட்சிப்படும்படியான செயலைச்செய்வோமென்றுபார்த்தான், வேண்டாவென்பாரைக்கண்டதில்லை. அதுசாத்மித்தவாறே நித்யசூரிகளும் தானுமாகவந்து திருமலையிலேநின்றுன், அதுவும் சாத்மித்தவாறே இவருடைய ஹ்ருதயத்திலேவந்துபுகுந்தான்; இங்கு விலக்குவாரில்லாமையாலே ஸ்த்தாவர ப்ரதிஷ்ட்டையாக விருந்தான். * பொருப்பிடையேநின்றும் புனல்குளித்துங்காணுமிவர் நெஞ்சிலேபுகுந்திருந்தது. * பனிக்கடலில்பள்ளிகோளைப்பழகவிட்டோடிவந்து இவருடைய * மனக்கடலிலே வாழப்புக்கான்; இப்படியிருந்தவனை. (நிலைபேர்க்கலாகாமை) இவன்போகைக்குறுப்பாக என்னுலாவதெல்லாம் செய்தேன், அதுக்கும் கேட்பானுயிருந்திலன். (நிச்சித்திருந்தேன்) "நபிபேதி" (நபிபேதி) என்றிருந்தேன். அவன்படியையறிந்தா லிவனுக்கு நிர்ப்பயனுயிருக்கத் தட்டில்லையிறே. [ஆநந்தம்ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதிகுதஸ்சந] [ஆநந்தம்ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதிகுதஸ்சந] தன்சோகம் மறுகனையும்படியான வாநந்தமிவன்பக்கலிலே யுண்டென்றறிந்தால், பின்னையிவன்சோகம் போகைக்குக் குறையில்லையிறே. [குதஸ்சந] [குதஸ்சந] பின்னை புத்திபூர்வகமாகப்பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு மஞ்சவேண்டா ..... .....................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (தலைமேலித்யாதி) "என்மனத்துளிருந்தானை நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (என்மநஸ்ஸிலேயித்யாதி.)

"தலைமேல்புனைந்தேன்சரணங்கள்" என்றது - அநுவாதம். "புனைந்தேன்" என்றதுக்குபாவம் (அமரர்சென்னியித்யாதி) "புனைந்தேன்" என்றதுக்கு - சூடினேனென்றர்த்தம்விவக்ஷித்து, சூடுவது புஷ்பமாகையாலே, திருவடிகளை (அமரர்சென்

ணிப்பூ) என்கிறார். "புன்னைந்தேன்" என்றதூதார்த்தத்துக்குபாவம் (ப்ரார்த்திந்தித்யாதி.)

மேலுக்கெல்லாமவதாரிகை (இப்பேறிவரித்யாதி.) "ஆலினிலைமேல்துயின்றான்" என்றமாத்ரத்துக்கவதாரிகை (அவன்வண்டடத்தினித்யாதி) வண்டடம்-அழகியதடாகம். ஏகார்ணவமென்றபடி. பெரியதிருமடல். இதெல்லாம் செய்யவேணுமோ விவரை விஷயீகரிக்கைக்கு என்கிறசங்கையிலே, "ஆலினிலைமேல் துயின்றான்" என்றதுக்குபாவம் (தன்னைக்கொண்டித்யாதி வாக்யத்ரயம்) ஆராட்சிப்படும்படியான - ப்ரசித்தமாம்படியான. அதாவது - "ஆபத்பந்துவு மகடிதகடநாசமர்த்தனுமிவனே" என்று ப்ரஸித்தமாம்படியான செயலென்றபடி.

"இமையோர்" என்றுதொடங்கி "மனத்துளிருந்தானை" என்னுமளவுக்கும் பாவம் (அதுசாத்மித்தவாறே யித்யாதி) "இருந்தான்" என்றதுக்குபாவம் (இங்குவிலக்குவாரித்யாதி) கீழெல்லாவற்றுக்கும் ரசோக்தி (பொருப்பிடையேயித்யாதி) பனிகாலத்திலே மலைகளின்நடுவே நின்றும், குளிர்காலத்திலே பொய்கைகளிலேபுக்கு முழுகிக்கிடந்துமென்றபடி. மூன்றாந்திருவந்தாதி எழுபத்தாறும்பாட்டு. அப்படிகடலில்நின்று மிவர்நெஞ்சிலே புகுந்தானோவென்ன (பனிக்கடலிலித்யாதி) சீதளஸ்வபாவமானகடலில் கண்வளர்ந்தருளினபடியை நேராக மறந்துவிட்டோடிவந்து என்னுடைய மனக்கடலிலே வாழவல்லனென்றபடி.

"பேர்க்கலாகாமை" என்றதுக்குபாவம் (இவன்போகைக்கித்யாதி) "நபிஹேதி" (நபிபேதி) என்றதுக்குபாவம் (அவன்படியையித்யாதி) "அவன்படியை" என்றதுக்கு சப்தமேதென்ன (ஆநந்தமித்யாதி) எடுத்தவாக்யத்துக்கர்த்தம் (தன்சோகமித்யாதி) (புத்திபூர்வகமாக) என்கிறவிடத்திலே, ஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே "ப்ராஜிஷ்ணுர்போஜநம்போக்தாஸஹிஷ்ணுர்ஜகதாதிஜ:" (ப்ராஜிஷ்ணுர்போஜநம்போக்தாஸஹிஷ்ணுர்ஜகதாதிஜ:) என்கிறவிடத்திலே, "ஸஹிஷ்ணு:" என்றதுக்கு - "தேஷாமபிமுக்யாத்ப்ராகூர்த்வஞ்சஸஞ்சிதாநாம் புத்த்யாபுத்த்யாச ஸகலகரணைஸ் ஸர்வதாசப்ரசியமாநாநாம் விதிநிஷேதஸ்யாஸநாதிலங்கநாத்மநாம் ஸாதாரணாநாமஸாதாரணாநாஞ்ச ஸ்வாவஜ்ஞாநிந்தாதீநாம் ஸர்வம்ஸஹேநஸ்வேநாபி துஸ்ஸஹாநாம் ஸ்வபக்தவிஷயாணாம் சாநவதிகாநாமபராதாநாம்ஸஹிஷ்ணு:" (தேஷாமபிமுக்யாத்ப்ராகூர்த்வஞ்சஸஞ்சிதாநாம் புத்த்யாபுத்த்யாச ஸகலகரணைஸ் ஸர்வதாசப்ரசியமாநாநாம் விதிநிஷேதஸ்யாஸநாதிலங்கநாத்மநாம் ஸாதாரணாநாமஸாதாரணாநாஞ்ச ஸ்வாவஜ்ஞாநிந்தாதீநாம் ஸர்வம்ஸஹேநஸ்வேநாபி துஸ்ஸஹாநாம் ஸ்வபக்தவிஷயாணாம் சாநவதிகாநாமபராதாநாம்ஸஹிஷ்ணு:) என்றத்தை நினைப்பது......................*

# ஐந்தாம்பாட்டு.

நிச்சித்திருந்தேனென்னெஞ்சங்கழியாமை
கைச்சக்கரத்தண்ணல்கள்வம்பெரிதுடையன்
மெய்ச்சப்படான்பிறர்க்குமெய்போலும்பொய்வல்ல
னச்சப்படுமெக்குநாகத்தணையானே.

## ஆறுயிரப்படி.

( நிச்சித்திருந்தேன் ) இவ்வளவோவென்கிறத்தி லவன்செய்யநி னைத்திருக்கிறுன், இப்படி யெளியனே வவனென்னில்; ப்ரதிகூலருக்குக் காணவரியன், நமக்கெளியன்காணென்கிருர்.............................*

## ப்ன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதஸுலபனுய் அநாஶ்ரிததுர்லபனுனவன், அநந்யகதிகளான நமக்கு ப்ராப்யனுக வாசைப்பட்ப் படுமென்கிருர்.

என் நெஞ்சம் - என் நெஞ்சை. கழியாமை - விட்டகலாதபடியான ஸ்வபா வத்தை. நிச்சித்திருந்தேன் - அறுதியிட்டிருந்தேன். சக்கரம் - ரக்ஷகமாய் போக்ய மான திருவாழியை. கை - கையிலேயுடையனுய். அண்ணல் - அசாதாரணஸ்வாமி யாய். கள்வம்பெரிதுடையன் - நெஞ்சிலேயிருக்கச்செய்தே நானறியாதபடி தான நிந்ததாகப்பேசி அவ்வுபகாரங்களிலே பாரிப்பையுடையனுய். தன் ஸ்வபாவம் நாம நிந்து கொண்டாடுகிறுப்போலே, பிறர்க்கு மெய்ச்சப்படான் - பிறர் கொண்டாடா தவனுய். மெய்போலும் - ஆஶ்ரிதர்க்கு மெய்யேசெய்யுமாபோலே. பொய்வல்லன்- அநாஶ்ரிதர்க்குப் பொய்யே செய்யவல்லனுய். நாகத்தணையான் - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவனுன அநந்தசாயியானவன். நமக்கு - நமக்கு. நச்சப்படும் - பரமப்ராப்ய பூதனுக ஆசைப்படும். .................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவனென்கிறத்தில் செய்யநினைக்கிறவை யொருவர்க்கறிய நிலம ன்றென்கிருர்.

( நிச்சித்தித்யாதி ) நீரிலே கிடந்தும் பர்வதாக்ரத்திலேநின்றும் தன்பேறுக தபஸ்ஸுபண்ணி வந்து என்னெஞ்சிலே யிருக்கையாலே, இ னியொருகாலமும் விட்டுப் போகானென்று நிஶ்சயித்திருந்தேன். (கைச் சக்கரத்தண்ணல்) கையிலே திருவாழியையுடைய சர்வேஶ்வரன். ஆஶ்ரி தரை யொருக்காலும் கைவிடாதவன்; “ எப்போதும் கைகழலாநேமியா ன் ” என்னக்கடவதிறே. ( கள்வம்பெரிதுடையன் ) நெஞ்சைக் கைவி டாமையேயன்றிக்கே, இங்கேயிருந்து நாமறியாதிருக்கத் தானறிந்ததாக க்கொண்டு அவ்வருகே குவாலைப் பாரியாநின்றுன். பரமபதத்தேறக்கொ டுபோக வொருப்படுவது, அமாநவனை யிடுவித்து ஸ்பர்ஶிக்க நினைப்பது, * மதிமுகமடந்தையரைவரக்காட்டி யெதிர்கொள்ளப்பார்ப்பதாய்க் குவா லைப்பாரியாநின்றுன். “ இதுதான் சர்வசாதாரணமாகிற் செய்வதென் ” என்றஞ்சவேண்டா ( மெய்ச்சப்படான்பிறர்க்கு ) நான் தன்குணங்களை ச்சொல்லிப் புகழுகிறுப்போலே, பிறர் தன் குணங்களைச் சொல்லிப் புக ழலாம்படியிரான்; அவர்களுக்கு துஷ்ப்ராபனு யிருக்கும். ( மெய்போ லும் பொய்வல்லன் ) அர்ஜுநாதிகள்பக்க லிருக்குமாபோலேயிறே துர்

யோதநாதிகள்பக்கலிலு மிருப்பது; கார்யத்தில்வந்தால் மெய்செய்வாரைப்போலே பொய்செய்து தலைக்கட்டும். "இதுதான் நம்மளவிலு மேறிற்செய்வதென்" என்றஞ்சவேண்டா (நச்சப்படும்நமக்கு) உகவாதார்பக்கலில் செய்பவற்றை நம்பக்கல் செய்யான். அதுக்கு விஶ்வாசமென்னென்னில் (நாகத்தணையானே) நம்மோடு விஸஜாதீயர் பக்கல் செய்வது கொண்டு கார்யமென், நம்மோடு ஸஜாதீயர்பக்கல் பரிமாறினதன்றோ நமக்குப்படிமா. நம்முடையபேற்றுக் கடியுமாய் நமக்கு ஸஜாதீயருமானாரோடு பரிமாறும்படி யிதுவன்றோ.................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (நிச்சித்தித்யாதி) "கள்வம் பெரிதுடையன்" என்றத்தைப்பற்ற வவதாரிகை (அவனித்யாதி.)

அநுவாதத்துக்குபாவம் (நீரிலேயித்யாதி) கழியாமை - விட்டுப்போகாமை.

இத்தால்பலிதம் (ஆஶ்ரிதரையித்யாதி) இதுக்கு ப்ரமாணம் (எப்போதுமித்யாதி) பெரியதிருவந்தாதி, "இப்போதுமின்னம்" இத்யாதி. குவாலே - அதிகத்தை. குவாலேதென்ன (பரமபதத்தேறவித்யாதி.)

"மெய்ச்சப்படான்" என்றதுக்கவதாரிகை (இதுதானித்யாதி) மெய்ச்சப்படான் - கொண்டாடப்படான்.

நச்சப்படும் - ஆசைப்படுமவன். நம்மோடு ஸஜாதீயர் - அநந்யப்ரயோஜநத்வேந ஸஜாதீயர். படிமா - த்ருஷ்டாந்தம். "நம்மோடு ஸஜாதீயர்" இத்யாதிவாக்ய விவரணம் (நம்முடையபேற்றுக்கித்யாதி.).................................*

---

# ஆறும்பாட்டு.

நாகத்தணையானைநாடோறுஞானத்தா
லாகத்தணைப்பார்க்கருள்செய்யுமம்மானை
மாகத்திளமதியஞ்சேருஞ்சடையானைப்
பாகத்துவைத்தான்றன்பாதம்பணிந்தேனே.

## ஆறாயிரப்படி.

(நாகத்தணையானை) ஆஶ்ரிதருடைய நிகர்ஷம்பாராதே, திருவந்தாழ்வானுக் கருள்செய்யுமாபோலே அவர்களுக்கு நாடோறு மருள்செய்யுமம்மான்றன் பாதம்பணியப்பெற்றேனென்கிறார். ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யாஶ்ரிதரோடு முமுக்ஷுக்களோடு ப்ரயோஜநாந்தரபரரோடு வாசியற உபகரிக்கும் சௌசீல்யாதிசயத்தை யுடையவன் திருவடிகளிலே வணங்கப்பெற்றேனென்கிறார்.

நாகம் - நித்யகைங்கர்யநிரதரான திருவநந்தாழ்வானை. அணையானை - படுக்கையாகவுடையனாய். நாடோறும் - சர்வகாலமும். ஞானத்தால் - பக்திரூபஜ்ஞானத்தாலே. ஆகத்து - நெஞ்சிலே. அணைப்பார்க்கு - வைத்தநுபவிக்கும் முமுக்ஷுக்களுக்கு. அருள்செய்யும் - நிரதிசயபோக்யனாய்க்கொண் டுபகரிக்கும். அம்மானை-ஸ்வாமியானவனாய். மாகத்த - ஆகாசவர்த்தியான. இளமதியம்-இளம்பிறையானது. சேரும் - சேரும்படியான. சடையானை - ஜடையையுடையனானவனையாலே. போக்த்ருத்வோபாஸகத்வங்க ளிரண்டையுமுடையருத்ரனை, பாகத்து - தன்திருமேனியிலொருபக்கத்திலே. வைத்தான்றன் - வைத்த நிரதிசய சௌசீல்யவானுடைய. பாதம்பணிந்தேன் - திருவடிகளை வணங்கப்பெற்றேன்.

“அணையானை, அம்மானை” என்கிற வேற்றுமைப்போலி இரண்டு ஐகாரம் அசையாய்க்கிடக்கிறது. அன்றியே, ( பாகத்துவைத்தானைப் பாதம்பணிந்தேனே ) என்று பாடம்சொல்லுவாருமுளர். ......................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

இன்றுஶ்ரயிப்பாரையும் நித்யாஶ்ரிதரைப்போலே விஷயீகரிக்குமவன்திருவடிகளிலே நிர்மமனாய் விழப்பெற்றே னென்கிறார். ( திருவநந்தாழ்வானுக்கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கும் வாசிவையாதே யுடம்புகொடுக்குமவனை வணங்கப்பெற்றே னென்கிறுஒன்றுமாம். )

( நாகத்தணையானை ) உகந்தாரைப் படுக்கையாகக் கொள்ளுமவனாய்த்து. ( நாடோறுமித்யாதி ) ஞானத்தாலாகத் தணைப்பார்க்கு நாள்தோறு மருள்செய்யுமவனாய்த்து. ( இப்போது, ஞானமென்று-ஜ்ஞானவிசேஷமான பக்தியைச் சொல்லுகிறது. பக்தியாலே ஹ்ருதயத்திலே கொடுபுகுந்து சேர்ப்பார்க்கு நாள்தோறு மருள்செய்யுமவனாய்த்து. ) இவனை லெப்போதும் நினைக்கப்போகாதே!; அக்குறைதீர ஏகரூபனான தான் நாள்தோறு மருள்செய்யுமாய்த்து. ( மாகமித்யாதி ) சுகப்ரதானனென்றுதோற்றும்படி சந்த்ரனைச்சூடி சாதகத்வசூசகமான ஜடையையுமுடையனான ருத்ரனுக்குத் திருமேனியிலே யொருபார்ஶ்வத்திலே யிடங்கொடுத்தவனுடைய திருவடிகளை யாஶ்ரயிக்கப்பெற்றேன், இனி எனக்கொருகுறையுண்டோ. ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (நாகத்தணையானையித்யாதி) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இன்றித்யாதி) இன்றுஶ்ரயிப்பாரையுமென்றது - “ஞானத்தாலாகத்தணைப்பார்” என்றத்தைப்பற்ற.

“நாகத்தணையானை” என்றத்தால் பலிதம் (உகந்தாரையித்யாதி.)

“நாடோறும்” என்றத்தை “அருள்செய்யும்” என்றத்தோடே கூட்டுகிறதென், அடைவே நிர்வஹித்தாலோவென்ன (இவனுலித்யாதி) அக்குறைதீர - அவன்நினைக்கமாட்டாத குறைதீரவென்றபடி.

மதியையும் ஜடையையும் சொல்லுகிறதுக்குபாவம் (சுகப்ரதாகனித்யாதி.)

"நாகத்தணையானை, அம்மானை" என்கிறவிடத்தில், ஐகாரம் அவ்யயமாய், நாகத்தணையானாய் அம்மானாய் பாகத்திலே வைத்தானாயிருக்கிறவனுடைய திருவடிகளை யென்றபடி.

மாகத்திளமதியம் - மஹத்தாயிருக்கிற வாகாசத்திலே வர்த்திக்கிற பாலசந்த்ரன் ..........................................................................................*



# ஏழாம்பாட்டு.

பணிநெஞ்சேநாளும்பரமபரம்பரனைப்
பிணியொன்றுஞ்சாராப்பிறவிகெடுத்தாளு
மணிநின்றசோதிமதுசூதனென்னம்மா
னணிநின்றசெம்பொனடலாழியானே.

## ஆறாயிரப்படி.

(பணி) ஆஶ்ரிதஸுலபனாய், தத்விரோதி நிரஸநஸ்வபாவனாய், ததநுகுண திவ்யாயுதோபேதனாய், சர்வேஸ்வரனாயிருந்த வெம்பெருமானை, நெஞ்சே, வணங்கு, வணங்கில் பின்னையொருநாளு மொருதுஃகம் வாராது, துஃகஹேதுவான ஸம்ஸாரத்தைப்போக்கி நம்மையடிமைகொண்டருளுமென்கிறார் ..............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யமான விக்ரஹத்தையுடையவன் நம்மை விரோதியைப்போக்கி யடிமைகொள்ளுமவனாகையாலே சர்வாதிகனானவனை யநுபவியென்று, நெஞ்சைக்குறித்தருளிச்செய்கிறார்.

மணிநின்றசோதி - நீலரத்நத்தின் நிறத்தில் தேஜஸ்ஸுபோலேயிருக்கிற நிறத்தையுடையவனாய். மதுசூதன்-மதுவைநிரசித்தாப்போலே அநுபவவிரோதியைப்போக்கி. என்னம்மான் - அவ்வழகையநுபவிப்பித்த வென்ஸ்வாமியாய். அணிநின்ற-தனக்குத்தாபரணமாய்நிற்பதாய். செம்பொன் - சிவந்தபொன்போலே ஸ்ப்ருஹணீயமான வடிவையுடைத்தாய். அடல் - ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமான யுத்தோத்யோகத்தையுடைய. ஆழியான்-திருவாழியையுடையவன். பிறவி - நம்ஜந்மத்தை. கெடுத்து - போக்கி. ஆளும்-அடிமைகொண்டருளும். பிணி-சம்சாரக்லேஶங்கள். ஒன்றும்-ஒன்றும். சாரா-தட்டாது. ஆதலால், பரமபரம்பரனை-தனக்கு மேலில்லாதவனாய்க்கொண்டு ப்ரஹ்மாதிகளுக்கும் பரனானவனை. நெஞ்சே-நெஞ்சே. நாளும்-நித்யமாக. பணி-வணங்கியநுபவிக்கப்பார். .........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

நம் ப்ரதிபந்தகங்களையெல்லாம் தானேபோக்கி யடிமைகொள்ளுமவனை நாள்தோறு மநுபவியென்று, திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

(பணியித்யாதி) நெஞ்சே, நாள்தோறு மநுபவிக்கப்பார். நல்ல வாய்ப்பாயிருந்தது. (பரமபரம்பரனை) இந்த்ராதிகளுக்குப்பரரான ப்ர

ஹ்மாதிகளுக்கும் பரரான நித்யசூரிகளுக்கும் நிர்வாஹகனானவனே. (பி ணியொன்றும்சாரா) துஃகங்களொன்றும் நம்மை ஸ்பர்ஶியாது. அந்த துஃகங்களுக்கடியான ஜந்மத்தை அடிவேரோடேபோக்கி நம்மை நித்ய கைங்கர்யம் கொள்ளுமவன். (மணிநின்றசோதி) ஜந்மத்தையுண்டாக்கி னாலும் விடலாயோவடிவழகிருக்கிறபடி. நீலமணியினொளியை வடிவாக வகுத்தாப்போலேயிருக்கிற வடிவையுடையவன். (மதுசூதன்) அவ்வடி வழகை யநுபவிப்பார்க்குவரும் விரோதிகளை, மதுவைப்போக்கினாப்போ லே தள்ளிக்கொடுக்குமவன். (என்னம்மான்) இப்படி யென்விரோதியைப் போக்கி முகந்தந்தவன். (அணியித்யாதி) அநுபவிப்பார்க்கு விரோதிக ளையும்போக்கி, திருக்கைக்குத்தானே யாபரணமாய் அநுபவிப்பார்க்கு ஸ்ப்ருஹணீயமான வடிவையுடைய யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலேயுடையவன். அநுபவத்துக்கும் தானேயாய் விரோதிநிரசநத்து க்கும் தானேயான பரிகரத்தையுடையவன்..............................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (பணிநெஞ்சேயித்யாதி) "பிணியொன்றும் சாராப்பிறவிகெடு த்தாளும் - அடலாழியானே - பணிநெஞ்சேநாளும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதா ரிகை (நம்ப்ரதிபந்தகங்களையித்யாதி.)

அந்வயமுகேந பாவம் (நெஞ்சேநாள்தோறுமித்யாதி) "பரமபரம்பரனே" என்று அவன்பெருமைசொன்னதுக்குபாவம் (நல்லவாய்ப்பாயிருந்ததென்று) அதா வது - பரமபரம்பரனுகையாலே எல்லாராலும் மேல்விழும்படி யுத்க்ருஷ்டனாயிருக் கிறவன் தானேவந்து மேல்விழுகையாலே நல்லவாய்ப்பாயிருந்ததென்றபடி.

"பிறவி" இத்யாதிக்கர்த்தம் (அந்ததுஃகங்களுக்கித்யாதி) "கெடுத்து" என் றத்தைப்பற்ற (அடிவேரோடேயென்றது.)

கீழில் பதத்தோடேகூட்டிபாவம் (ஜந்மத்தையித்யாதி) மணிதான் தேஜோ ரூபமாய்நிற்கிறாப்போலே யிருக்கிறவடிவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நீலம ணியித்யாதி.)

அணிநின்ற - ஆபரணமாய் நின்றவென்றபடி. "அணிநின்ற, செம்பொன், அடல்" என்றவிசேஷணத்ரயத்தால் பலித்தபாவம் (அநுபவத்துக்குமித்யாதி.)

பிணியொன்றும்சாரா இத்யாரப்ய, ஆழியானை, பரமபரம்பரனே-நெஞ்சே- நாளும் - பணி இத்யந்வயஃ ..........................................................*

---

## எட்டாம்பாட்டு.

---

ஆழியானாழியமரர்க்குமப்பாலா
னூழியானூழிபடைத்தானிரைமேய்த்தான்
பாழியந்தோளால்வரையெடுத்தான்பாதங்கள்
வாழியென்னெஞ்சேமறவாதுவாழ்கண்டாய்,

## ஆறாயிரப்படி.

(ஆழியான்) * அயர்வறுமமரர்களதிபதியாய், அவர்களிற்காட்டிலும் விஸஜாதீயமான ஸ்வரூபகுணவிபூதிகளையுடையனாய், நித்யஸித்தனாய், காலதத்த்வ ப்ரக்ருதி ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் ஸ்ரஷ்டாவாயிருந்துவைத்து, ஆஸ்ரிதஸுலபார்த்தமாக தத்ஸஜாதீயதயாவதீர்ணனாய், தத்ஸமாநசேஷ்டிதனாய், எல்லாருக்கும் புகலிடமாயிருந்த திருத்தோளாலே வரையையெடுத்து ஆஸ்ரிதரக்ஷணம்பண்ணியருளினவன்திருவடிகளை, என் நெஞ்சே, மறவாது வாழ்கிடாயென்கிறார் ........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாதிகனாய் சர்வப்ரகார ரக்ஷகனானவன் திருவடிகளை, நெஞ்சே, விஸ்மரியாமலநுபவித்து வாழும்படி பாரென்கிறார்.

ஆழியான் - ரக்ஷகமான திருவாழியை யுடையனாய். ஆழி - கம்பீரஸ்வபாவரான. அமரர்க்கும் - நித்யஸூரிகளுக்கும். அப்பாலான் - அவ்வருகான மேன்மையை யுடையனாய். ஊழியான் - ஸம்ஹ்ருதிசமயத்தில் தானொருவனுமேயாய். ஊழிபடைத்தான் - காலோபலக்ஷித ஸமஸ்தவஸ்துக்களுக்கும் ஸ்ரஷ்டாவாய். நிரைமேய்த்தான் - ஸ்ருஷ்டமான வஸ்துக்களைப் பின்சென்று ரக்ஷிப்பானாய் வைத்து. அவற்றுக்காபத்துவந்தால், பாழி - மிடுக்கையுடைத்தாய். அம் - போக்யமான. தோளால் - திருத்தோளாலே. வரை - மலையை. எடுத்தான் - எடுத்து நோக்குமவனுடைய. பாதங்கள் - திருவடிகளை. என், நெஞ்சே - நெஞ்சே. மறவாது - மறவாதே. வாழ்கண்டாய் - நித்யாநுபவம்பண்ணி வாழப்பார். வாழி - இவ்வாழ்வுநித்யமாகச் செல்லுக.

ஆழியான் - அபரிச்சிந்ந ஸ்வபாவனென்றுமாம். வாழியென்று - வாழ்த்துதலாகவுமாம்......................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

“அவனையநுபவி” என்றவாறே யுகந்தநெஞ்சைக்கொண்டாடி, அவனை யிடைவிடாதே யநுபவியென்கிறார்.

(ஆழியான்) சர்வேஸ்வர ஸூசகமான திருவாழியைக்கையிலேயுடையவன். (ஆழியித்யாதி) அத்திருவாழி யாழ்வானோபாதி, கம்பீரஸ்வபாவரான நித்யஸூரிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாம்படியிருக்குமவன். (ஊழியான்) நித்யஸூரிகளும் தானுமாய் பரமபதத்திலே பேரோலக்கமாக விருக்குமவன். இங்குண்டான கார்யவர்க்கமடங்கலுமழிந்து காலசேஷமான காலத்திலே தான்வந்து தோற்றுமவன். (ஊழிபடைத்தான்) காலோபலக்ஷிதமான சகலபதார்த்தங்களையும் “஬ஹு ஸ்யாம்” (பஹுஸ்யாம்) என்கிற சங்கல்பத்தாலே யுண்டாக்கினவன். (நிரைமேய்த்தான்) இப்படி சகல பதார்த்தங்களையும் தான்படைத்து, “தன்னை வேறே சிலர்படைத்தார்கள்” என்னலாம்படி வந்தவதரித்து,

பசுக்களை ரக்ஷிக்குமவன். ஸ்வரக்ஷணத்தி லந்வயமின்றிக்கே பண்ணும் ரக்ஷணத்தை விலக்காத பசுக்களை ரக்ஷித்தவன். (பாழியந்தோளால்) இவனிப்படி யிவற்றை நோக்காநிற்க, இந்த்ரன் பசிக்ராஹத்தாலே யிவை நோவுபடும்படியாகக் கல்வர்ஷத்தை வர்ஷிக்க, அத்தை மலையையெடுத்து நோக்குமவன். பாழியென்று - வலியாதல், இடமுடைமையாதல். புறம்பெங்கும் வர்ஷத்திலே நோவுபடாநிற்க, இவன் தோள்நிழலிலே யொதுங்கினவர்களுக்கு மதிளுக்குள்ளே யிருப்பாரைப்போலே பயங்கெட்டிருக்கலாம்படியான வலியைச் சொல்லுதல்; அன்றிக்கே, பஞ்சலக்ஷம் குடியிலுள்ளாரு மித்தோள்நிழலிலே யொதுங்கினாலும் திருவாய்ப்பாடியளவன்றிக்கே யின்னமும் பத்துத் திருவாய்ப்பாடிக் கிடம் போருமென்னும்படியான ரக்ஷகத்வத் துடிப்பிருக்கும்படியைச் சொல்லிற்றுதல்; "ஸாஹுச்சாயாமவஷ்டபூோ யஸ்யலோகோமஹாத்மநஃ" (பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோமஹாத்மநః) என்கிறபடியே - ஒதுங்கினவர்கள் சுருங்கி நிழலேவிஞ்சியிருக்குமாய்த்து. (அந்தோள்) அழகியதோள். "திண்டோள்மணிவண்ணா உன்சேவடிசெவ்விதிருக்காப்பு" என்று மங்களாசாஸநம் பண்ணும்படியாய்த்துத் தோளழகிருப்பது. * சுந்தரத்தோளிறே. (பாதங்கள்) கோவர்த்தநகிரியை யெடுத்துப் பரிஹரித்தவனுடைய திருவடிகளை. (வாழி) நடுவே மங்களாசாஸநம் பண்ணுகிறார் நெஞ்சை, மேல் சொல்லப் புகுகிற வர்த்தத்தை புத்திபண்ணுகைக்காக. "யாமோஷயி ஶிவாயுஷூ" (யாமோஷதிமிவாயுஷ்மந்) என்னுமாபோலே, உனக்கு இஸ்ஸம்ருத்திமாறுதே சென்றிடுகவென்கிறார். (என்னெஞ்சே) புறம்பெங்கு மாத்மாவுக்கு சேஷமான மநஸ்ஸுத்தான்சுமையெடுத்தாநிற்க, என்வழியிலே போந்து முறையிலே நிற்கிற நெஞ்சே. ஆத்மாவுக்கு கரணகோடியிலே யந்வயித்த நெஞ்சுதானே பந்தஹேதுவாகாநின்றதிறே புறம்புள்ளார்க்கு. இங்ஙனன்றிக்கே, என்வழியேபோந்து எனக்கு மோக்ஷஹேதுவான நெஞ்சே. (மறவாது) கைபுகுந்ததென்று இதரவிஷயங்களிலே செய்வுற்றைச் செய்யாதேகிடாய். (வாழ்கண்டாய்) உன்னுடைய வாழ்ச்சிக்கு நான் கால்பிடிக்க வேண்டுகிறதென், பால்குடிக்கக் கால்பிடிக்கிறேனிறே.

மறவாது வாழ்கண்டா யென்கையாகிலுள்ளது, கீழ்ச்சொன்னவிசேஷணங்களுக்கு ப்ரயோஜநமென்னென்னில்; புறம்புபோய் மணலைமுக்கவொண்ணாதே!, ரக்ஷகனாகவல்லவனைப் பற்றவேணுமே. ரக்ஷணத்துக்குப் பரிகரமுடையவன் ரக்ஷகனாகவேணும்; நிரபேக்ஷருடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகளுக்கும் நிர்வாஹகனானவன் ரக்ஷகனாகவேணும்; ஒருக்காலுளனாவது இலனாவதாகாநிற்கிறவனுக்கு என்றுமுளனானவன் ரக்ஷகனாகவேணும்; இவையில்லாதவன்று உண்டாக்கினவன் ரக்ஷகனாகவேணும்; உண்டானவன்று ரக்ஷகனாகைக்கு ஸ்வரக்ஷணத்தில் குறையநின்றவற்றை

யும் நோக்குமவன் ரக்ஷகனுகவேணும்; இதிருந்தபடியாமாகில் மறந்து காண்.......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( ஆழியானித்யாதி. ) "வாழியென்னெஞ்சேமறவாதுவாழ்கண்டாய்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவனேயித்யாதி. )

"ஆழி" என்று - சமுத்ரமாய், அத்தாலே - காம்பீர்யத்தைலக்ஷித்து, கம்பீரஸ்வபாவரானவென்றபடி. அப்பாலான் - அவ்வருகானவன்.

"அமரர்க்குமப்பாலான்" என்றவநந்தரம், "ஊழியான்" என்றதுக்கு பாவம் ( நித்யசூரிகளுமித்யாதி. ) மேலே "படைத்தான்" என்றிருக்கையாலே, அதுக்குச்சேர ( காலசேஷமானகாலத்திலே ) என்கிருர். காலமே சேஷித்தசமயத்திலேயென்றபடி. ஊழியான் - சம்ஹ்ருதிசமயத்தி லுளனுயிருக்குமவனென்றுசப்தார்த்தம்.

ஊழிபடைத்தான் - காலவர்த்தி பதார்த்தங்களைப் படைத்தானென்றபடி.

"ஊழிபடைத்தான்" என்றத்தோடே கூட்டி, "நிரைமேய்த்தான்" என்றதுக்குபாவம் ( இப்படியித்யாதி. ) இத்தால் பாவம் ( ஸ்வரக்ஷணத்திலித்யாதி. )

மேலுக்கவதாரிகை ( இவனிப்படியித்யாதி. ) அர்த்தத்வயத்தையுமடைவே விவரிக்கிருர் ( புறம்பெங்கு மித்யாதி வாக்யத்வயத்தாலே. ) த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம் ( பாஹுச்சாயாமித்யாதி ) "஬ாஹுഛாயாஂவஷ்ஷ்஬்ாயஸ்ய லொகொ மஹாத்மநஃ। அவக்ருஷ்யாஶ்ரமபதாந் ம்ருகரூபேண ராகவம்" ( பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோமஹாத்மநஃ । அபக்ருஷ்யாஶ்ரமபதாந் ம்ருகரூபேண ராகவம் ) இதி சுந்தரகாண்டே சதுஸ்த்ரிம்ஶே ஸீதாம்ப்ரதிஹநூமாந். "அவஷ்டப்தஃ" ( அவஷ்டப்தஃ ) என்கையாலே - (ஒதுங்கினவர்கள்சுருங்கி) என்றது. அவஷ்டம்பம் - ஏகதேசத்திலே பிடிக்கையென்று கருத்து. அப்படியழகியதோவென்ன ( திண்டோளித்யாதி. ) "அழகியதோள்" என்னுமதுக்கு ப்ரமாணம் ( சுந்தரத்தோளிறேயென்று ) நாய்ச்சியார்திருமொழி, "சிந்துரச்செம்பொடி" இத்யாதி.

"பாதங்கள் - மறவாது" என்னவமைந்திருக்க, நடுவே "வாழி" என்கிறதென்னென்ன ( நடுவேயித்யாதி. ) இப்படி மங்களாசாஸநம்பண்ணின பேருண்டோவென்ன ( யாமோஷதிமித்யாதி ) அரண்யகாண்டே ராமம் ப்ரதிஜடாயுஃ. "ஸாஸீதாமமசப்ராணா ராவணேநோபயம்ஹ்ருதம்" ( ஸாஸீதாமமசப்ராணு ராவணேநோபயம்ஹ்ருதம் ) இத்யுத்தரார்த்தம். அதாவது - "ஸாஸீதாமமசப்ராணா ராவணேநோபயம்ஹ்ருதம்" (ஸாஸீதாமமசப்ராணுராவணேநோபயம்ஹ்ருதம்) என்று - மேலே சொல்லுகிறது தரித்துக் கேட்கைக்காக, முதலிலே "யாமோஷதிமிவாயுஷ்மந்" ( யாமோஷதிமிவாயுஷ்மந் ) என்று பெரியவுடையார் மங்களாசாஸநம் பண்ணினுப்போலே, மேலே "மறவாது" என்றத்தைக் கேட்கைக்காக வாழியென்கிருனென்றபடி. "வாழி" என்றதுக்கர்த்தம் (உணக்கித்யாதி.)

"என்" என்ற விசேஷணத்துக்கு பாவம் (புறம்பெங்குமித்யாதி.) விவரணம் (ஆத்மாவுக்கித்யாதிவாக்யத்வயம்.)

மறக்க ப்ரஸக்தியேதென்ன (ஊைபுகுந்ததித்யாதி.) "வாழ்" என்னாதே, "வாழ்கண்டாய்" என்றதுக்கு பாவம் (உன்னுடையவித்யாதி.)

மறவாதுவாழ்கண்டா யென்கையாகி லுள்ளதென்றது - "மறவாது வாழ்கண்டாய்" என்கையே விதேயமாயுள்ளதாகி லென்றபடி. விசேஷணங்களாவன- "ஆழியான்" இத்யாதிகள். (பற்றவேணுமே) அதுக்காகச் சொல்லுகிறதென்றபடி. "ரக்ஷகனுகவல்லவனைப்பற்றவேணுமே" என்றத்தைக் காட்டுகிருர் (ரக்ஷணத்துக்கித்யாதி.) இவ்வாக்யந்தொடங்கி மேலடைய, * ஆழியான்தொடங்கி "நிமைமேய்த்தான்" என்னுமளவும் பதங்களைக் கடாக்ஷித்து பாவமாகக் கண்டுகொள்வது. இது - ரக்ஷணேபயோகி குணஜாதமென்றபடி. இருந்தபடியாமாகில் - இருந்தபடியாலே. மறந்துகாண் - மறந்துபார். உன்னாலே மறக்கப்போகாதென்று கருத்து.

ஆழியானென்றுதொடங்கி, பாதங்கள் - மறவாதுவாழ்கண்டாய் - என்னெஞ்சே - வாழியித்யந்வயஃ..........................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

கண்டேன்கமலமலர்ப்பாதங்காண்டலுமே
விண்டேயொழிந்தவினையாயினவெல்லாந்
தொண்டேசெய்தென்றுந்தொழுதுவழியொழுகப்
பண்டேபரமன்பணித்தபணிவகையே.

## ஆறாயிரப்படி.

(கண்டேன்) "என்னை சரணுகதராணுருடைய வபேக்ஷிதமெல்லாம் நானேசெய்வேன்" என்று எம்பெருமான் பண்டே யருளிச்செய்தருளினபடியே, அவனுடைய ப்ரசாதத்தாலே, நிரவதிகபக்திகாரிதமான சர்வசேஷவ்ருத்தியையும் சர்வகாலமும் பண்ணலாம்படி அவன்றிருவடிமலர்களைக்கண்டேன், கண்டவாறே என்னுடைய சமஸ்த துஃகங்களும் போயினவென்கிருர். ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தத்த்வயாதாத்ம்யத்தை யவன் ப்ரகாசிப்பிக்கக் கண்டு அநுபவிக்கப் பெற்றேனென்கிருர்.

தொண்டேசெய்து - தன்பக்கலிலே நிரதிசயபக்தியைப் பண்ணி. என்றும்-சர்வகாலத்திலும். தொழுது - சேஷவ்ருத்தியை யுடையேனுய்க்கொண்டு. வழியொழுக - அந்தவழியாலே சந்தாநவ்ருத்தியாய் நடக்கைக்காக. பண்டே - பூர்வகாலத்திலே. பரமன் - சர்வாதிகனுன சர்வேஸ்வரன். பணித்த பணிவகையே - அருளிச்செய்த மந்த்ரரஹஸ்யப்ரகாரத்திலே. கமலமலர்-தாமரைப்பூப்போலே நிரதிசயபோ

க்யமான. பாதம் - திருவடிகளை. கண்டேன் - சேஷத்வாநுரூபமாக அபரோக்ஷித்தேன். காண்டலுமே - இந்த ஜ்ஞாநம் பிறந்தவளவில். வினையாயினவெல்லாம் - அநுபவவிரோதியான அஹங்காரமமகாராதி சமஸ்த துரிதங்களும். விண்டேயொழிந்த - சவாஸநமாகவிட்டுப்போய்த்தின..........................................*

## சுடு - ஒன்பதாம்பாட்டு.

"ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) என்கிறபடியே அநேககால சாத்யமான பக்தியாலே லபிக்கப்படுமவனை கேவல மவன்ப்ரஸாதத்தாலே காணப்பெற்றேனென்கிறார். இப்பாட்டிற் சொல்லுகிற ப்ரபத்தியோடு விகல்பிக்கலாம்படி யிருக்கிற பக்தியைச் சொல்லிக்கொண்டு போந்தார் கீழ்; அதுக்குமடி யவனுகையாலே சொல்லுகிறாராதல். ஸ்வயம் நிரபேக்ஷமானது தன்னையே சொல்லுகிறாராதல், தாம்பெற்றவழியே சொல்லுகிறாராதல்.

(கண்டேன்) என்றும் கேட்டேபோகக்கடவவிஷயத்தைக் கண்ணாலே காணப்பெற்றேன். தம்முடைய ப்ரபத்தி ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியை - சாக்ஷாத்கரிக்கப் பெற்றபடியைச் சொல்லுகிறார். இத்தால் - ப்ரத்யக்ஷசமாநாகாரமான ஜ்ஞாநசாக்ஷாத்காரத்தைச் சொன்னபடியிறே. (கமலமலர்ப்பாதம்) ப்ராப்தியை யொழியவே ஜ்ஞாநலாபமே யமையும்படியாய்த்து போக்யதையிருக்கும்படி. (காண்டலுமே) கண்டவளவிலே. (விண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்) "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்று அவனடியாகவருகிறதிறே. வினையாயினவடங்கலும், "இவர்கேவலரல்லர், அடியுடையராயிருந்தார்" என்றுவிட்டுப்போய்த்தின. (தொண்டேயித்யாதி) அவ்ஶ்லோகத்துக்கிதுவும் கருத்தென்கிறாரிவர். ஔபாதிகமானது போகக்கடவதே; உபாயத்துக்கு பலப்ரதத்வமுண்டே. "இனிஸ்வரூபம் நிலைநின்றதாயிருக்குமிறே, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியும் நித்யமாயிருக்குமிறே" என்று அங்கு அர்த்தப்ராப்தமானது தன்னையே யிங்கே வாய்விடுகிறார். (தொண்டேசெய்தென்றும் தொழுதுவழியொழுக) ஸ்வரூபம் நித்யமானபின்பு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியும் நித்யமாய்ச் செல்லும்படியாக. (பண்டேபரமன்பணித்தபணிவகையே - கண்டேன்கமலமலர்ப்பாதம்) அவன் "மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்றபடியாலே நானவன்றிருவடிகளைக் காணப்பெற்றேன்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (கண்டேனித்யாதி.) "பண்டேபரமன்பணித்த பணிவகையே - கண்டேன்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார் (ஜந்மாந்தரேத்யாதி) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷுதபோஜ்ஞாநஸமாதிபி: । நராணாம்

க்ஷீணவாவா நாம்க்ரு ஷ்ணே ஹக்திஃப்ர ஜாயதே." (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷுதபோஜ்ஞாநஸமாதிபி: । நராணாம்க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணேபக்தி:ப்ரஜாயதே.) அதுக்குமடியவனுகையாலே யென்றது – "மயர்வறமதிநலமருளினன்" என்று அந்தசாத்யபக்திக்கு மடியவனுகையாலே யென்றபடி. சொல்லுகிருராதலென்றது–அந்த சாத்யபக்திஹேதுவான ப்ரசாதத்தைச் சொல்லுகிருராதலென்றபடி. முந்தினவவதாரிகை - மோக்ஷஹேதுவான தத்ப்ரசாதத்தாலே காணப்பெற்றேனென்று; த்விதீயாவதாரிகை - "மதிநலமருளினன்" என்று சாத்யபக்திஹேதுவான தத்ப்ரசாதத்தாலே காணப்பெற்றேனென்று; இவ்வுபயத்தையு மடைவே விவரிக்கிருர் (ஸ்வம்நிரபேக்ஷமித்யாதிவாக்யத்வயத்தாலே.)

"கண்டேன்" என்றதுக்கு பாவம் (என்றுமித்யாதி.) ப்ரவேசத்திலே "ப்ரபத்தியோடே தலைக்கட்டுகிருர்" என்றத்தை நிகமிக்கிருர் (தம்முடையவித்யாதி.) கீழுக்கு விவரணம் (சாக்ஷாத்கரிக்கப்பெற்றபடியையென்றது.) ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியை யென்றது - பலவ்யாப்தமானபடியை. அதாவது–சாக்ஷாத்கரிக்கை. ஆனல் கண்டாரோவென்ன (இத்தாலித்யாதி.) "கமலமலர்ப்பாதம்" என்றதுக்கு பாவம் (ப்ராப்தியையித்யாதி.) அதாவது - பரமபதத்திலே போய்க்கண்டால் ரஸிக்கையன்றிக்கே மாநஸசாக்ஷாத்காரமே பிடித்து ரஸிக்கும்படியாய்த்துத் திருவடிகளில் போக்யதையென்றபடி.

"கண்டேன்" என்றதினநுவாதம் - "காண்டலுமே" என்றது.

வினையெல்லாம் போகக்கூடுமோவென்ன (ஸர்வபாபேப்ய இத்யாதி.) சப்தார்த்தம் (வினையாயினவித்யாதி.) அடியென்று - சாடு. பாதமும், மூலமும்.

"கண்டேன்கமலமலர்ப்பாதம், காண்டலுமேவிண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்" என்றவிடத்திலே - "ஹிந்யதே ஹ்ருதயக்ரந்திஸ்சிந்யந்தே ஸர்வஸம்ஶயாஃ । க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" (பித்யதேஹ்ருதயக்ரந்திஶ் சித்யந்தேஸர்வஸம்ஶயா: । க்ஷீயந்தேசாஸ்யகர்மாணி தஸ்மிந் த்ருஷ்டேபராவரே) என்ற முண்டோபநிஷத்வாக்ய மநுசந்தேயம். ஹ்ருதயக்ரந்தி: - ப்ரக்ருதிசம்பந்தம். சம்ஶயா: - அவித்யாதிகள்.

"பண்டேபரமன்பணித்தபணிவகையே" என்று - அவனருளிச்செய்த ஶ்லோகத்தின்படியேயானுல், "தொண்டேசெய்து" என்ற இஷ்டப்ராப்தி அதிலே சொல்லிற்றேவென்ன (அஶ்ஶ்லோகத்துக்கித்யாதி.) அதில் இஷ்டப்ராப்தி சொல்லாமைக்கடியேதென்ன (ஔபாதிகமித்யாதி.) ஔபாதிகமானது - விரோதியானதென்றபடி. ஹேத்வந்தரம் (உபாயத்துக்கித்யாதி.) ஔபாதிகமானதுபோனுல் சித்திப்பதென்னென்ன (இனி ஸ்வரூபமித்யாதி.) அதாவது - "யதோதபாநகரணாத்" (யதோதபாநகரணாத்) இத்யாதிப்படியே-ப்ரதிபந்தகம்போனுல், "மமஸஹஜகைங்கர்யவிதயஃ" (மமஸஹஜகைங்கர்யவிதய:) என்று கைங்கர்யம் சஹஜமாயிருக்கு மென்றபடி. தொண்டேசெய்து - பரபக்த்யாதிகளையுடையராய். என்றும் தொழுது - நித்யமாக வஞ்சலியைப் பண்ணி; வழியொழுக– கைங்கர்யமே யாத்ராயாக. என்றும் தொழுது - நித்யமாக கைங்கர்யத்தைப் பண்ணிக்கொண்டு; வழியொழுக - அதுவே யாத்ராயாக வென்றுமாம்.

"ஸ்வயம் நிரபேக்ஷமானது தன்னையே சொல்லுகிறுர்" என்றத்தை யிங்கே விசதீகரிக்கிறுர் ( அவனித்யாதி. ) பணிவகையே - ரஹஸ்ய ப்ரகாரத்தாலே., சரமஶ்லோகத்தின்படியே யென்றபடி.

தொண்டேசெய்தென்று மென்றுதொடங்கி, கமலமலர்ப்பாதம்-கண்டேன், காண்டலுமே - வினையாயினவெல்லாம் - விண்டேயொழிந்தவித்யர்வயஃ............*

---

# பத்தாம்பாட்டு.

வகையான்மனமொன்றிமாதவனைநாளும்
புகையால்விளக்காற்புதுமலரானீராற்
றிசைதோறமரர்கள்சென்றிறைஞ்சநின்ற
தகையான்சரணந்தமர்கட்கோர்பற்றே.

## ஆறுயிரப்படி.

( வகையால் ) பக்தியோகத்தைச் சொல்ல வுபக்ரமித்து நிர்ஹேதுகமாக நானெம்பெருமானுக் கடிமைசெய்யப் பெற்றேனென்றுகொண்டு நடுவே தம்முடைய சம்ருத்தியைப்பேசி;

பின்னையும் அந்தஃகரணத்தை நியமித்து, பகவதேக விஷயமாக்கி, தத்ஸமாராதநோசிதமான த்ரவ்யவிசேஷங்களைக்கொண்டு அந்யார்த்தமாக இந்த்ராதிக ளவனை யாஶ்ரயிக்க, அவர்களுடைய வபேக்ஷிதத்தைச்செய்தருளுகிற வவன்றிருவடிகளே ப்ராப்யமென்றிருப்பாருடைய வபேக்ஷிதஞ்செய்தருளுமே, அதிலொரு சம்சயமில்லையென்றுகொண்டு, அந்தபக்தியோகத்தினுலே சுப்ராபனு மென்னுமிடத்தையே சொல்லி முடிக்கிறுர். ..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரர்க் காஶ்ரயணீயனுனவன் அநந்யப்ரயோஜநர்க்கு ப்ராப்யபூதனுமென்கிறுர்.

வகையால் - சாஸ்த்ரோக்த ப்ரகாரங்களாலே. மனம் - நெஞ்சை. ஒன்றி- ஒருங்கப்பிடித்து. மாதவனை - தங்களபிமதசித்திக் குறுப்பாம்படி ஶ்ரியஃபதியான தன்னை. நாளும் - காலந்தோறும். புது - விலக்ஷணமான. புகையால் விளக்கால் மலரால் நீரால் - தூபதீபபுஷ்பஜலங்களாலே. திசைதோறு - நின்றநின்றதிக்குக்கள் தோறும். அமரர்கள் - ப்ரஹ்மாதி தேவர்கள். சென்றிறைஞ்ச - ஆஶ்ரயிக்கும்படி. நின்ற - நின்ற. தகையான் - ஸ்வபாவத்தை யுடையவன். சரணம் - திருவடிகள். தமர்கட்கு - அநந்யப்ரயோஜநரான அஸாதாரணஜநங்களுக்கு. ஓர் - அத்விதீயப்ராப்யமாய்க்கொண்டு, பற்று - அபாஶ்ரயமாம்..........................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

ப்ரயோஜநாந்தரபரரோடு சாதநாந்தரபரரோடு ப்ரபந்நரோடு வாசியற அவனே உபாயமென்று உக்தத்தை நிகமிக்கிறுர்.

(வகையால் மனமொன்றி) சாஸ்த்ரங்களிற் சொல்லுகிற வழியே நெஞ்சொருமைப்பட்டு. (மாதவனை) வித்யதிக்ரமத்துக்கும் அநவதாநத்துக்கும் அஞ்சவேண்டா, லோகாபவாத பரிஹாரார்த்தமாக இவன் செய்தவை யென்னுவது, அதுக்கும் பல மிவனை வந்து கிட்டாது, "இவன்வழிபோராமையும் நெஞ்சொருமைப்படாமையும் இவன்றலையிலே யேறட்டுக் கைவிடக்கடவதோ" என்பாருமருகேயுண்டு. இத்தால் - அந்தப்ரலோகத்திலே லக்ஷ்மீசம்பந்தமும் சொல்லிற்றாய்த்து. ஸ்வரூபாநுபந்தி தர்மங்கள் சொல்லவுமாம், சொல்லாதொழியவுமாமிறே; ஆகையிறே, த்வயத்திலே பிரிய வநுசந்திக்கவுமாய் திருமந்த்ரத்தி லொன்றாகவநுசந்திக்கவுமாயிருக்கிறது. "அந்தர்க்கதகுணாமேவதேவதாம்பஜதே" (அந்தர்க்கதகுணாமேவதேவதாம்பஜதே) என்று சொல்லாநின்றதிறே; அந்த தேவதாஸ்வரூபந்தன்னிலே அபஹதபாப்மத்வாதி குணங்களையும் சொல்லுகையாலே. (நாளுமித்யாதி) காலநியதியின்றிக்கே, ஆராதநோபகரணங்களுக்கும் நியதியின்றிக்கே, தங்களுக்குக் கைவந்த உபகரணங்களைக்கொண்டு, பெரியதிருநாளைக்கு சர்வதோதிக்கமாக வந்தேறுமாபோலே, ப்ரஹ்மாதிகள் வந்தாஶ்ரயிக்கும்படியான ஸ்வபாவத்தை யுடையவனுடைய திருவடிகள்; தன்றிருவடிகளைப் பற்றினார்க்கு, பின்னையும் புறம்புபோ யொருபற்றுத் தேடவேண்டாதபடியான பற்று. அநந்யப்ரயோஜநரான பக்திமான்களுக்கும், பலப்ரதனாய் உபாயமாயிருக்கும்; தன்னையே பற்றினார்க்கு அவ்யவஹிதோபாயமாம். ......................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (வகையாலித்யாதி.) "புகையால் விளக்கால்" என்றுதொடங்கி "தமர்கட்கோர்பற்று" என்னுமளவும் கடாக்ஷித் தவதாரிகை (ப்ரயோஜநாந்தரேத்யாதி.) "அமரர்கள்" என்று - ப்ரயோஜநாந்தரபரரும், "தமர்கள்" என்று - சாதநாந்தரநிஷ்ட்டரும், ப்ரபந்நரும் சொல்லுகிறது. "நாளும்புகையால்" என்றுதொடங்கி, "தகையானை - மாதவன் - சரணம் - வகையால் மனமொன்றியிருக்கிற - தமர்கட்கோர்பற்று" என்றந்வயம்.

"வகையால்மனமொன்றி" என்றதுக் கர்த்தம் (சாஸ்த்ரங்களிலித்யாதி.) சாஸ்த்ரங்களென்கிறது - உபாஸநசாஸ்த்ரங்களும், ப்ரபத்தி சாஸ்த்ரங்களும். ஒருமைப்படுகையாவது - ஐகாக்ர்யம். உபாஸகனைச் சான்னபோது, வகையால் - சாஸ்த்ரமார்க்கத்திலே வந்து, மநஸ்ஸை, வேறொரு பாபப்ரவ்ருத்தியிலேபோகாதபடி சர்வேஶ்வரனிடத்திலே யொருமைப்படுத்திக்கொண் டிருக்கிற - உபாஸித்துக்கொண்டிருக்கிற, தமர்கட்கென்றபடி. ப்ரபந்நரானபோது, வகையால் - சரமஶ்லோகோக்தப்ரகாரத்திலே வந்து, மநஸ்ஸை சாதநாந்தர விஷயாந்தரங்களில் போகாதே யொருமைப்படுத்திக்கொண்டிருக்கிற தமர்கட்கென்றபடி.

ப்ரபந்நன் உபாயாந்தரங்களையும் விஷயாந்தரங்களையும் விட்டிருந்தானேயாகிலும், லோகோபவாத பரிஹாரார்த்தமாகப்பண்ணும் கர்மாநுஷ்ட்டாநமும் ப்ராமாதிகமாகவரும் விஷயப்ராவண்யாதிகளு முண்டாயிருக்குமேயென்ன; "மாத

வன்" என்று பிராட்டி புருஷகாரம் சொல்லுகையாலே அவற்றுக்கஞ்சவேண்டா வென்கிறார் (வித்யதிக்ரமத்துக்குமித்யாதி) இவரஞ்சாதபடி புருஷகரிக்கும்படியை க்காட்டுகிறார் (லோகாபவர்தேத்யாதி) கீழில் பதத்வயத்தையும் கடாக்ஷித்து, உபாஸகவிஷயத்தில் புருஷகரிக்கும்படியைக்காட்டுகிறார் (இவன்வழியித்யாதி) இவன்-உபாஸகன். வழிபோராமை - சாஸ்த்ரமார்க்கத்தில் நடவாமை. சரமஸ்லோகார்த்தம் சொல்லுகிறவிடத்திலே "மாதவன்" என்று விசேஷிக்கையாலே - ஶ்ரிய:பதித்வமும் அந்தஸ்லோகத்திலே சொல்லப்படுகிற தென்கிறார் (இத்தாலித்யாதி) அங்கே "மாம்" என்று - ஸ்வரூபம் மாத்ரமன்றோ சொல்லிற்று, லக்ஷ்மீசம்பந்தமும் சொல்லிற்றோவென்ன (ஸ்வரூபாநுபந்தீத்யாதி) அதாவது-ஸ்வரூபத்துக் கவிநாபூததர்மங்கள், பிரித்துச்சொன்னாலும் சொல்லாவிட்டாலும் ஸ்வரூபத்தைச்சொன்னபோதே தன்னடையே வருமென்றபடி. இதுக்கு நியாமகம் (ஆகையிறேயித்யாதி) அப்படி ஸ்வரூபத்தைச்சொன்னால் ததநுபந்திதர்மங்கள் சொல்லாவிட்டாலும் தன்னடையேவருமோவென்ன (அந்தர்க்கதேத்யாதி) "ஙஜ்ஜூதமூணாழ-ஸுாஜவொ ஜஹூஜதமூணாழ, ஜெவதாஜெவ, ஹஜஜெத-யாயதி" (அந்தர்க்கதகுணம்-ஸ்வரூபாந்தர்ப்பூதகுணம், தேவதாமேவ, பஜதே-த்யாயதி) என்றுசொல்லாநின்றதிறே த்ரமிடபாஷ்யத்தி லென்றபடி. குணவைசிஷ்ட்யம் சத்வித்யையிலே சொல்லாதிருக்க, குணவிசிஷ்டஸ்வரூபமுபாஸ்யமென்கைக் கடியேதென்ன (அந்ததேவதாஸ்வரூபமித்யாதி) அந்ததேவதாஸ்வரூபந் தன்னிலேயென்றது-ஸத்வித்யாநிஷ்டனுக்குபாஸ்யமான தேவதாஸ்வரூபந்தன்னிலேயென்றபடி. சொல்லுகையாலேயென்றது - தஹரவித்யையிலே சொல்லுகையாலேயென்றபடி.

"ஓர்பற்று" என்றதுக்குபாவம் (தன்திருவடிகளையித்யாதி) "தமர்கள்" என்கிறசப்தம் சாமாந்யமாகையாலே, உபாஸகரையும் ப்ரபந்நரையும் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, இருவர்க்கும் பற்றும்படியென்னென்ன (அநந்யப்ரயோஜநரானவித்யாதிவாக்யத்வயம்) அவ்யவஹிதோபாயம் - சாக்ஷாதுபாயம்.

"யத்யபிஸஜ்ஜித்தோநநிஜ்ஜுதெவதம்மூணமணம்ஜநஸாநயாவெசு, தயாவந்ஜ்ஜூணாஜெவதொம்ஹஜதெ, தத்ராவிஸமூணெவஜெவதாஜ்ராவ்யதெ" (யத்யபிஸச்சித்தோநிர்ப்புக்நதைவதம்குணகணம் மநஸாநுதாவேத், ததாப்யந்தர்க்குணமேவதேவதாம்பஜதே, தத்ராபிஸகுணைவதேவதாப்ராப்யதே) இதி த்ரமிடபாஷ்யே. "ஸஜிஷ்யாயாம்மூணாநிஹாய கெவஸ்வரூவஜாதஸெயாவாஸ்யெவநாஹியாநாசு, உஹரவிஷ்யாயாஜிமூணாநாஜவாஸ்யக்சுநம்வஜ்யாரொஹணாழ, நதஸமூணஜ்ரஹ்மண உவாஸ்யவழ" (ஸத்வித்யாயாம்குணாந்விஹாயகேவலஸ்வரூபமாத்ரஸ்யோபாஸ்யத்வேநாபிதாநாத், தஹரவித்யாயாமபிகுணாநாமுபாஸ்யத்வகதநம் புத்த்யாரோஹணார்த்தம், நதுஸகுணப்ரஹ்மண உபாஸ்யத்வம்) இதி வததோமாயிநோமதந்நிராகரோதி த்ரமிடபாஷ்யகார: (யத்யபிஸச்சித்த) இத்யாதிநா-ஸச்சித்த: - ஸத்வித்யாநிஷ்ட:, நிர்ப்புக்நதைவதம் - தேவதாஸ்வரூபாபேக்ஷயா நிதராம்பிந்நம் யதா்பவதி ததா குணகணம்மநஸா, யத்யபிநாநுதாவேத் - யத்யபிந த்யாயதி; ததாபிகேவலஸ்வரூபோபாஸிநோபி, அந்தர்க்குணம் - ஸ்வரூபாந்தர்ப்பூதகுணம், தேவதாமேவ, பஜதே - த்யாயதி. ஸ்வரூபமாத்ரோபாஸநே குணாநாமுபாஸ்யத்வே நாந்தர்ப்பாவ:கதமித்யத்ராஹ (தத்ராபீதி) தத்ராபி - பலதஸாயாமபி,

" ஸோஸ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ " ( ஸோஸ்நுதேஸர்வாந்காமாந்ஸஹ ) இத்யுக்தப்ரகாரேண ஸகுணதேவதைவப்ராப்யதே. அதஃ, தத்க்ரதுந்யாயேந உபாஸநதஸாயாமபி ஸகுணஸ்யைவோபாஸ்யத்வம் ஸித்த்யதீத்யர்த்தஃ. ஆகவித்தால்சொல்லிற்றாய்த்து - ஸத்வித்யையிலே ஸ்வரூபமாத்ரத்தையே உபாஸ்யமாகச்சொல்லி குணங்களைச்சொல்லாவிட்டாலும் குணங்கள் ஸ்வரூபத்தைவிட்டிராமையாலே ஸ்வரூபத்தைச்சொன்னபோதே ஸ்வரூபாநுபந்திகுணங்கள் தன்னடையே வருமாபோலே, சரமஶ்லோகத்திலும் லக்ஷ்மீசம்பந்தம் தன்னடையேவருமென்றபடி ...*

# பதிநொன்றாம்பாட்டு.

பற்றென்றுபற்றிப்பரமபரம்பரனை
மற்றிண்டோண்மாலைவழுதிவளநாடன்
சொற்றொடையந்தாதியோராயிரத்துளிப்பத்துங்
கற்றார்க்கோர்பற்றாகுங்கண்ணன்கழலிணையே.

## ஆறாயிரப்படி.

(பற்றென்று) இத்திருவாய்மொழிகற்றார்க்கு எம்பெருமான்திருவடிகள் ஸுலபமாமென்கிறார்.................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, பகவச்சரணாரவிந்தம் ப்ராப்யமென்றருளிச்செய்கிறார்.

பரமபரம்பரனை - தனக்குமேலில்லாதபடி ஸர்வஸ்மாத்பரனாய். மல் - மல்லயுத்தத்தில். திண் - திண்ணிதான. தோள் - தோளையுடையனாய். மாலை - ஆஶ்ரிதவ்யாமோகத்தாலே ப்ராப்யப்ராபகபூதனான சர்வேஶ்வரனை. பற்றென்று-தமக்கபாஶ்ரயமாக வறுதியிட்டு. பற்றி-பற்றின. வழுதிவளநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகரான ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. தொடை - சப்தசந்தர்ப்பரூபமான. அந்தாதி - அந்தாதி. ஓராயிரத்துள் - ஓராயிரத்துள். இப்பத்தும் - இப்பத்தையும். கற்றார்க்கு - அப்யஸித்தவர்களுக்கு. கண்ணன் - தாமோதரனான க்ருஷ்ணன். கழல்-திருவடிகள். இணை-இரண்டும். ஓர்-அத்விதீயமான. பற்றாகும் - ப்ராப்யமாம்.

இது கலிவிருத்தம் .......................................................................*

## ஈடு - பதிநொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார்க்கு க்ருஷ்ணனுடைய திருவடிகள் சுலபமாமென்கிறார்.

(பற்றென்றுபற்றிப்பரமபரம்பரனை) சர்வேஶ்வரனை ப்ராப்யப்ராபகமென்றுபற்றி. (மற்றிண்டோள்மாலை) இவன் ப்ரபத்திபண்ணி அத்ய

வலிக்கு மத்தனையேவேண்டுவது, ரக்ஷணத்தி லவன்பக்கலொரு குறையுமில்லை. இவர்கள் விரோதிகளைப்போக்குகைக்கீடான மிடுக்கையும் வ்யாமோஹத்தையு முடையவனென்கிறது. (வழுதியித்யாதி) " வாமெ௵மெயெவ௳ய-௱ஂவ௺௵மெணஹ்௺ ஹிரநி௵தழ " (பாட்யேகேயேசமதுரம் ப்ரமாணைஸ்த்ரிபிரந்விதம்) என்கிறபடியே, அழகியசொற்களாலே தொடுக்கப்பட்ட வந்தாதியான வாயிரத்திலும்வைத்துக்கொண்டு இந்தப்பத்தும் கற்றார்க்கு. (கண்ணன்கழலிணை - ஓர்பற்றாகும்) "தாமோதரன்றாள்கள் - தவநெறிக்கு - சார்வே" என்றபடியே - க்ருஷ்ணன்றிருவடிகளே, இனி அவ்வருகுபோய் ஒன்றுதேடிப்பற்றவேண்டாதபடியானபற்றாகும்.

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (பற்றென்றித்யாதி) " கற்றார்க்கோர்பற்றாகும் கண்ணன்கழலிணை " என்றபதத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

" பரமபரம்பரனை மற்றிண்டோள்மாலை - பற்றென்றுபற்றி " என்றந்வயம். "பரமபரம்பரனை" என்று - ப்ராப்யத்வம், "மற்றிண்டோள்மாலை" என்று-ப்ராபகத்வம்; இரண்டுமாகப்பற்றியென்றபடி. இதுக்குபாவம் (இவன்ப்ரபத்தியித்யாதி வாக்யத்வயம்) குறையில்லாமை யெப்படியென்ன (இவர்கள்விரோதிகளையித்யாதி) மல்லயுத்தத்தில் திண்ணிதான தோளையுடைய வ்யாமுக்தனையென்று சப்தார்த்தம். வழுதிவளநாடன் - திருவழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகரான வாழ்வார். பாலகாண்டே சதுர்த்தே. " வாமெ௵மெயெவ௳ய-௱ஂவ௺௵மெணஹ்௺ ஹிரநி௵தழ। ஜாதிஹிஃஷ௵ஹிர௵-கூஂதநீ௵ யஸஹ௵நி௵தழ " (பாட்யேகேயேசமதுரம் ப்ரமாணைஸ்த்ரிபிரந்விதம் । ஜாதிபிஸ்ஸப்தபிர்யுக்தம்தந்த்ரீலயஸமந்விதம்) ப்ரமாணை:-த்ருதமத்யவிளம்பிதை:.

உபக்ரமித்தத்தை நிகமிக்கிறாரென்கிறார் (தாமோதரனித்யாதி) "ஓர்பற்று" என்றதுக்குபாவம் (இனியவ்வருகித்யாதி) ..........................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( சார்வேதவநெறிக்கு. )

ஸ்ரீமெ௵மொஃஉர௵கூா, ஃ௵வரிஷஃ௵வெ௵மஃ௵கூவஹ-ஏ௵நா, வகூாயிஸாய-யகூா, ஆடிஃஉஸய௵நா, ஞாமஹாஜெஹயிகூாஸ, । வகூஃஹெ௵ர௵-வகூா, ௵௱வெ-௱-ஷ௵தா, ௵யவகூாஜியொமா, ஃ-ஷ௵ாவொயாஂ ஹஜ௵ஹ-மஃ ஐதிஃ௺ஸஂஃயவஂவொஹ௵யதூ॥ (கள)

(ஸ்ரீமத்தாமோதரத்வாத்) தாமோதரன்றாள்கள் - ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாயவதரித்து வாத்ஸல்யத்தாலே அவர்களாலே கட்டுண்டு அவற்றையே

நிருபகமாகவுடையனுகையாலும்; (அமரபரிஷதாமப்யகம்யத்வபூம்நா) பெருமையனேவானத்திமையோர்க்கும் - அப்படி "கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானுகிலும் எண்ணற்கரியனிமையோர்க்கும்" என்னும்படி நிற்கையாலும்; (சக்ராதீஸாயுதத்வாத்) ஆள்கின்றாழியான் - திருவாழியை திவ்யாயுதமாகவுடையனுகையாலும்; (வடதளஸயநாத்) ஆலினிலைமேல்துயின்றான் - ப்ரளயகாலத்திலே ஆலிலைமேலே கண்வளர்ந்தருளுகையாலும்; (நாகராஜேஸயித்வாத்) நாகத்தணையானே- திருவநந்தாழ்வானைத் திருப்படுக்கையாக வுடையனுகையாலும்; (வக்ஷஸ்பர்ஸோந்முகத்வாத்) நாடோறும்ஞானத்தாலாகத்தணைப்பார்க்கருள்செய்யும் - தன்னை ஹ்ருதயத்திலே த்யாநிக்குமவர்களுக்கு அபிமுகனுய் க்ருபைபண்ணுமவ னுகையாலும்; (பரமபுருஷதா) இது மூன்றுபாட்டிலர்த்தம் - பரமபரம்பரனை, அமரர்க்கருமப்பாலான், பண்டேபரமன்பணித்த - ப்ரஹ்மாதிகளிற்காட்டிலும் பரரான நித்யஸூரிகளிற்காட்டிலும் பரனுகையாலும்; (மாதவத்வாதியோகாத்) மனமொன்றிமாதவனை நாளுமித்யாதி - ஸ்ரீய:பதியாகையாலும், ப்ரஹ்மாதிகளான தேவர்கள் சர்வதோதிக்கமாகவந்து சேவிக்கும்படி நிற்கையாலும்; எம்பெருமான், எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநராலும் அஷ்ப்ராபனுயிருக்கவும் தன்னிடத்தில் பக்திபண்ணினபேர்களாலே சுப்ராபனுகிருனென்று "சார்வேதவநெறிக்கு" என்கிறதஸகத்திலே சடகோபருளிச்செய்தாரென்கிருர்................................................(கoஎ)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

சார்வாகவேயடியிற்றானுரைத்தபத்திதான்
சீரார்பலத்துடனேசேர்ந்ததனைச் - சோராமல்
கண்டுரைத்தமாறன்கழலிணையேநாடோறும்
கண்டுகக்குமென்னுடையகண். (கூசு)

(சார்வாகவேயடியில்) இதில், அடியிலுபதேசித்த பக்திஸ்வசாத்யமான பலத்தோடே தலைக்கட்டினபடியை யருளிச்செய்த திவ்யசூக்தியை யநுவதித் தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; கீழ் காளமேகத்தை வழித்துணையாக * தாளதாமரையிலே பற்றிப் போக்கிலே யொருப்பட்டவராகையாலே * உயர்வறவுயர்நலத்தில் * அயர்வறுமமரர்களதிபதியாக வறுதியிட்ட பரத்வமே பரமப்ராப்யமாகையாலே, அந்த ப்ராப்யவேஷத்தையும் ப்ராப்யபலமான கைங்கர்யத்தையும் * கெடுமிடரிலேயநுசந்தித்து, அந்த ப்ராப்யவேஷத்தைப் பெறுகைக்குபாயமாக * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் தொடங்கின பக்தியானது ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியைச்சொல்லி, தமக்குபாயமாக முதல்திருவாய்மொழியிலேசொன்ன ப்ரபத்தியையும் சொல்லித் தலைக்கட்டுகிற * சார்வேதவநெறியிலர்த்தத்தை "சார்வாகவேயடியில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறொன்கை.

(சார்வாகவேயடியில்தானுரைத்தபத்திதான்) * வீடுமின்முற்றத்திலும் * பத்துடையடியவரிலும் பரோபதேசரூபேண எல்லார்க்கு மபாஸ்ரயமாக வருளிச்செய்த ப்ரபத்தியோடு விகல்பிக்கலாம்படியான பக்தியானதுதான்; "ஶரண்ய:" (ஸரண்ய:) என்றத்தை "ஸர்வலோகஶரண்யாய" (ஸர்வலோகஸரண்யா

ய) என்றும் "வாஉயொஸ்ஸாணா நிஷீநிவவாத" (பாதயோஸ்ஸாணு ந்வேஷீநிபபாத) என்றும் சாக்ஷாத்பலத்தோடே தலைக்கட்டினாப்போலே, இவரும் "உம்முயிர்வீடுடையானிடைவீடிசைமினே" என்றும் "எல்லையிலந்நலம்புல்குபற்றற்றே" என்றும் "உள்ளமுரைசெயலுள்ளவிம்மூன்றையு மூள்ளிக்கெடுத்திறையுள்ளிலொடுங்கே" என்றும் "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றும் "அம்பகவன்வணக்குடைத்தவநெறிவழிநின்று" என்றும் "நன்றெனநலம்செய்வது" என்றும் இப்படி யருளிச்செய்த பக்திமார்க்கமானது ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியை. "சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றாள்கள்" என்றும் "அருளினன்வியரறுசுடரடிதொழுதெழு," "வண்புகழ்நாரணன்திண்கழல்சேர்" "நாளுநந்திருவுடையடிகள்தம்நலங்கழல்வணங்கி" என்று அடியேதொடங்கி யருளிச்செய்து போருகிற ப்ரபத்தி ஸ்வசாத்யத்தோடே பொருந்தினபடியை. "பண்டேபரமன்பணித்தபணிவகையே - கண்டேன்கமலமலர்ப்பாதம், காண்டலுமேவிண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்" என்றுமருளிச்செய்து, மற்றும் பக்திப்ரபத்திக்ரூபயுக்தமானவற்றையும் "கார்மேகவண்ணன்கமலநயனத்தன்" என்றும் "திருமெய்யுறைகின்றசெங்கண்மால்" என்றும் "மடப்பின்னைதன்கேள்வன் றாள்கண்டுகொண்டு" என்றும் "தலைமேல்புனைந்தேன்" என்றும் "நச்சப்பமெம்நமக்கு" என்றும் "வரையெடுத்தான்பாதங்கள் வாழியென்னெஞ்சே மறவாதுவாழ்கண்டாய்" என்று மருளிச்செய்தாரிறே; ஏவம்விதமான வர்த்தங்களை. (சோராமல்கண்டுரைத்தமாறன்) இவ்வர்த்தமானது வ்யர்த்தமே நழுவிப்போகாமே இஸ்ஸூக்ஷ்மார்த்தத்தை தர்ஸித்தருளிச்செய்த வாழ்வார். (கழலிணையேநாடோறும்கண்டுகக்குமென்னுடையகண்) இப்படி ஸூக்ஷ்மார்த்ததர்ஸியான வாழ்வார் சேர்த்தியழகையுடைய திருவடிகளையே, கண்டுகக்கும் - சேவித்து ஹ்ருஷ்டமாம், "மே - த்ருஷ்டி:" என்னும்படியான கண்கள். * தாமோதரன்றுளினுடைய ஸ்த்தாநத்திலே இவர்க்கு * மாறன்றுளாய்த்து. ................................................(கூசு)

பத்தாம்பத்தில் - நான்காந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - கூசு.—பாட்டு - சுOநகூ.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### கண்ணன்கழலிணை - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கண்ணன்கழலிணை) பக்தியோகத்தைச் சொல்லுகிறது......*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் போகோபகரணபூதையான பக்தியினுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதித்து, அதினுடைய ப்ரகார ப்ரதிபாதநார்த்தமாக, பஜநீயனான சர்வேஶ்வரனுடைய; மந்த்ரலிங்கமான அசாதாரண நாமத்வத்தையும், நாமார்த்தபூதகுணநியோகத்தையும், ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருத்வத்தையும், ஆஶ்ரயணார்த்தமான அர்ணவசாயித்வத்தையும், மோக்ஷப்ரதத்வத்தையும், ரக்ஷணார்த்தசௌலப்யத்தையும், உபாயோபேயத்வத்தையும், அதிசயித புருஷ போக்யத்வத்தையும், அநந்யப்ரயோஜந சுலபத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷணத்தி லதிசயிதமஹத்வத்தையுமநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஶ்வரனை, உக்தார்த்தப்ரதிபாதகமான மந்த்ராநுசந்தாநபூர்வகமாக புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு கரணத்ரயங்களாலு மநுபவிக்க, சமஸ்தவிரோதிகளும் தானேபோம், நிரதிசயபுருஷார்த்தமும் கைப்படும் என்று பலவ்யாப்தமான பக்தியோகப்ரகாரத்தை ஸங்க்ரஹமாம்படி சங்க்ரஹேண வுபதேசித்துத் தலைக்கட்டுகிறார்......................................*

### ஈடு.

பக்தியானது ஸ்வஸாத்யத்தோடே பொருந்ினபடியைச் சொன்னார்கீழ்; அத்தனைக்ரமம் பொறுக்கமாட்டாதே ஈஶ்வரன் தம்மைக்கொடுபோகையிலே த்வரிக்கிறபடியைக்கண்டு; அதாகிறது-"மரணமானால்" என்றது அவனுக்கு நெடுநாளாய், அவ்வளவும்பொறுக்கமாட்டாதே அவன்கொடுபோகையிலே த்வரிக்க அத்தையநுசந்தித்து; "நமக்குப்போக்குத்தவிராதபின்பு இனியிவர்கள் தங்களுக்கு பக்திமான்களுடைய பரிமாற்ற மிருக்கும்படியு மறியவேண்டுவதொன்றாகையாலே அத்தையுபதேசிப்போம்" என்றுபார்த்தார். இவர்தா மெம்பெருமானாரோபாதியும் க்ருபையுடையவர்காணும். "இதுதானென்றிவர்களுக்குக் குறைகிடந்

ததாகிறதென்" என்று அதிருக்கும்படியை யுபதேசிப்போமென்றுபார்த்து பரோபதேசத்திலே யொருப்பட்டு; அவன் தம்மைப் பரமபதத்திலே கொடுபோவதாக த்வரிக்கிறபடியாலும் "கேட்கிறவிவர்களுக்கு ப்ரதிபத்திக்கு விஷயமாகவேணும்" என்னுமத்தாலும் பாசுரப்பரப்பறும்படி சுருங்கக்கொண்டு; அந்தபக்திக்கு ஆலம்பநமான திருநாமத்தைச்சொல்லி, இதிலிழிவார்க்கு அநுசந்திக்கப்படும் மந்த்ரமின்னதென்றும், அதிலர்த்தாநுசந்தாநமே மோக்ஷசாதநமென்றும், அவ்வழியாலே பக்தியைப்பண்ணுங்கோளென்றும், கரணத்ரயத்தாலு மவனையாஸ்ரயியுங்கோளென்றும், இப்படி யாஸ்ரயிப்பார்க்கு அவன்றான் சுலபனென்றும், ஸ்ரீயஃபதியாகையாலே ஸ்வாராதனென்றும் - இவனையிடுவித் தாஸ்ரயிப்பித்து இதுதன்னையே அவன்றிருவுள்ளத்திலேபடுத்திக் குவாலாக்குவாரு மருகேயுண்டென்றும், ஆஸ்ரயிக்குமிடத்தி லதிகாரிசம்பத்திவேண்டா, ருசியுடையாரெல்லாரு மிதுக்கதிகாரிகளென்றும், புஷ்பாத்யுபகரணங்களைக்கொண் டாஸ்ரயியுங்கோளென்றும், இதிலேயிழிய விரோதிகள் தன்னடையேபோமென்றும், இப்புடைகளிலேசொல்லி, நாமின்னமும் சிலநாளிங்கேயிருக்கிறோமன்றிக்கே போக்கணித்தானபின்பு எல்லாருமித்தைக்கொள்ளுங்கோளென்றுபதேசித்து, அத்தோடேதொடங்கின பரோபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.............................................*

## ஜீயர் அரும்பதம்.

கண்ணன்கழலிணைப்ரவேஸே, எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச்சேர வித்திருவாய்மொழி பக்திமான்கள் பரிமாற்றத்தைச் சொல்லுகிறதென்கிறார் ( பக்தியித்யாதி. ) பக்தியானதென்றது - சாத்யபக்தியானதென்றபடி. அத்தனைக்ரமம்பொறுக்கமாட்டாமையாவதேதென்ன ( அதாகிறதித்யாதி. )

பக்த்யுபதேசம்மாத்ரம் போராதோ, பக்திமான்கள் பரிமாற்றமு முபதேசிக்கவேணுமோவென்ன ( இவர்தாமித்யாதி. )

"உபதேசிப்போமென்று பார்த்தார்" என்றத்தையும் கூட்டிக்கொண்டருளிச்செய்கிறார் ( இதுதானித்யாதி. ) பரோபதேசத்திலே யொருப்பட்டால் சிறுப்பாட்டாக வருளிச்செய்வானென்னென்ன ( அவன்தம்மையித்யாதி. ) "எண்ணும் திருநாமம்" என்றத்தைப்பற்ற ( அந்தபக்திக்கித்யாதி. ) "நாரணம்" என்றத்தைப்பற்ற ( மந்த்ரமென்றது. ) இரண்டாம்பாட்டையும் மூன்றாம்பாட்டையும்பற்ற (அதிலர்த்தாநுசந்தாநமித்யாதி.) அவ்வழியாலே பக்தியைப்பண்ணுங்கோளென்றது - அர்த்தாத்ஸித்தமாதல், "தாள்வாய்மலரிட்டு நாள்வாய்நாடீர்" என்றத்தைப்பற்றவாதல். "நாடீர்நாடோறும்" என்றத்தைப்பற்ற (கரணத்ரயத்தாலுமித்யாதி) "மேயான்வேங்கடம்" என்றத்தைப்பற்ற (இப்படியித்யாதி) "மாதவன்" என்றத்தைப்பற்ற (ஸ்ரீயஃபதியித்யாதி) இருக்கால்மட்டு "மாதவனென்றென்று" என்றத்தைப்பற்ற (இவனையித்யாதி) இவ்வாக்யம் - "ஸ்ரீயஃபதியாகையாலே" இத்யாதியின் விவரணம். "போரரோதுவாரார்" "மனமுடையீர்" என்றத்தைப்பற்ற (ஆஸ்ரயிக்குமிடத்திலித்யாதி) "சுனைநன்மலரிட்டு" என்றத்தைப்பற்ற (புஷ்பாத்யுபகரணங்களை

யித்யாதி) "அமராவினைகள்" "வினைவல்லிருள்" என்றத்தைப்பற்ற (இதிலேயி த்யாதி) ........................................................................*

# ஐந்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

கண்ணன்கழலிணை, நண்ணுமனமுடையீ
ரெண்ணுந்திருநாமந், திண்ணநாரணமே.

### ஆறாயிரப்படி.

எம்பெருமான்றிருவடிகளைப் பெறவேணுமென்றிருப்பார் திருமந்த்ரத்தையே சொல்லுங்கோள், அவன்றிருவடிகளைப்பெறுகை நிஶ்சிதமென்கிறார்........................................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், உபாஸநத்துக் காலம்பநமான மூலமந்த்ரப்ரதாநமான மந்த்ரத்தை யநுசந்திக்க, அவன்றிருவடிகளை ப்ராபிக்கலாமென்கிறார்.

கண்ணன்-சர்வசுலபனான க்ருஷ்ணனுடைய. கழலிணை - ஆஶ்ரிதார்த்தமான திருவடிகளை. நண்ணும்-ப்ராபிக்கைக்கீடான. மனம்-நெஞ்சை. உடையீர் - உடைய நீங்கள். எண்ணும்-அநுசந்திக்கைக்கு யோக்யமான. திருநாமம் - திருநாமம். திண்ணம்-நிஶ்சிதமாக. நாரணமே-விஷ்ணுகாயத்ரியிலுபாத்தமான மர்யாதையாலேமந்த்ர ப்ரதாநபூதமான நாராயணசப்தமே.

ப்ரணவநமஸ்ஸுக்களும் சதுர்த்தியும் அபேக்ஷிதமல்ல, திருநாமமான நாராயணசப்தத்தை யெண்ணுங்கோளென்றுமாம்........................................ ...*

### ஈடு - முதற்பாட்டு.

பக்தியுக்தராய்க்கொண்டு அவனை யநுசந்திப்பார்க்கு ஆலம்பநமான திருமந்த்ர மின்னதென்கிறார்.

(கண்ணன்கழலிணை நண்ணும்மனமுடையீர்) கீழ்ச்சொன்ன துதன்னைத்திரிய வொருக்கால் அநுபாஷிக்கிறார், இவர்களுக்குக்கேட்கவேண்டுவத்தைச் சொல்லுகைக்குறுப்பாக. "சார்வேதவநெறிக்குத் தாமோதரன்றாள்கள்" என்றாரே, அதுதன்னையிங்கே (கண்ணன்கழலிணை) என்கிறார். க்ருஷ்ணன்றிருவடிகளைக் கிட்டவேணுமென்றிருப்பீர். (கண்ணன்கழலிணை) பரமபதத்திலேசென்று காணவேண்டும்படி யிருக்கையன்றிக்கே, சர்வசுலபனானவன்றிருவடிகளை. ஆஶ்ரிதர்க்காகத்தூதுபோதல் சாரத்யம்பண்ணுதல் செய்யும்திருவடிகள். (நண்ணும்) பிரிந்துகூடினாரைப் போலேயிருக்கிறதுகாணும்; * ஆஜகாமபோலே, (மனமுடையீர்) "நிதி

யுடையீர்" என்னுமாபோலே, இதுதன்னையே குவாலாகநினைத்திருக்கிறார். இதுக்கதிகாரிசம்பத்திதேடவேண்டா, ருசியுடையாரெல்லாரு மதிகாரிகள். ஸ்வர்க்கபலமானதுக்கு அதிகாரிநியதியும் ப்ராயஸ்சித்தமும் வேண்டாநின்றது, அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷத்துக்கு அதுவேண்டாதொழிகிறது, ப்ராப்யத்துக்கநுரூபமான அதிகார மிவனால் சம்பாதிக்கமுடியாமையாலே.

(எண்ணும்திருநாமம்) அநுசந்திக்கப்படும் திருநாமமென்னுதல், பக்திமான்களைச்சொல்லுகையாலே அதுதான் "அது, அது" என்னும்படியாயிருக்கையாலே சொல்லுதல். எண்ணும்திருமந்த்ரமென்னாதே, நாமமென்கிறது - இதுக்கோரதிகாரிநியதி அங்கநியதிவேண்டா, ப்ரஜை தாய்பேரைச்சொல்லுமோபாதி யமையுமென்கைக்காக. அதுதானேதென்னில் (நாரணம்) இதுதான் ஸ்வாமிவாசகமாயிருக்கையாலே, "அம்மே!" என்பாரைப்போலே யிருக்கிறதாய்த்து. இதுவும் இன்னமெதுவும் வேணுமென்றால் (நாரணமே) இவ்வளவேயமையும். கனத்தபேற்றுக்கிவ்வளவுபோருமோவென்னில் (திண்ணம்) நிஸ்சிதம். "ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்யமுத்த்ருத்யபுஜமுச்யதே) என்னுமாபோலே, திண்ணமென்கிறது. அவதாரணத்தாலே - ப்ரணவத்தையொழியவும் நமஸ்ஸையொழியவும் சதுர்த்தியையொழியவும் இவ்வளவேபூர்ணமென்கை. நாரணமென்று - இல்லா தமகாரத்தையும்கூட்டி உள்ளவற்றைக் குறைத்துச்சொல்லுகையாலே, அளத்தில்பட்டதெல்லா முப்பாமாபோலே இத்தோடேகூடினதெல்லாம் உத்தேஸ்யமென்றும், குறைந்தாலும் " அங்கம்தப்பிற்று, ஸ்வரம்தப்பிற்று" என்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸாய்ப்போகவேண்டு மவற்றிற்காட்டில் இதுக்குண்டானவாசிசொல்லுகிறதாய்த்து.............................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (கண்ணனித்யாதி.) "எண்ணும்திருநாமம்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (பக்தியுக்தராயித்யாதி.)

"கண்ணன்கழலிணை" என்றது அநுவாதமென்கிறார் (கீழ்ச்சொன்னதித்யாதி.) எதுக்காக வநுபாஷிக்கிறதென்ன (இவர்களுக்கித்யாதி.) கீழே பக்திக்கு பலமாகச்சொன்னதுவே பரிமாற்றத்துக்கும் விஷயமென்கிறார் (சர்வேயித்யாதி) கழலிணையென்னாதே, "கண்ணன்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (பரமபதத்திலேயித்யாதி.) அதாவது - கண்ணுக்கு விஷயமானவனென் றர்த்தாந்தரமென்றபடி. "சுலபன்" என்றத்தை ஸ்த்திரீகரிக்கிறார் (ஆஸ்ரிதர்க்காகவித்யாதி.) பெறுமென்னாதே, "நண்ணும்" என்றதுக்கு பாவம் (பிரிந்தித்யாதி;) ஜகாம என்னாதே, "ஆஜகாம" (ஆஜகாம) என்றாப்போலே யென்றபடி. அதாவது - ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனைவிட்டுப் பெருமாள்பக்கலிலே போனானென்னவமைந்திருக்க, வந்தானென்கிறதிறே, பிரிந்தவன் வந்து கூடினாப்போலே யிருக்கையாலேயென்றபடி. "உடையீர்" என்கிற மதுப் பூமாவிலேயென்கிறார் (நிதியித்யாதி.) அதா

வது - ஆசாலேசமாத்ரத்தை ஆழ்வார் ஸ்வாபிப்ராயத்தாலே குவாலாக நினைக்கிறு ரென்றபடி. "மனமுடையீர்" என்றதுக்கு பாவம் (இதுக்கதிகாரியித்யாதி.) (வேண்டாதொழிகிறது) "என்" என்று கூட்டுவது. பரிஹாரம் (ப்ராப்யத்துக்கித்யாதி.)

அதிகாரிநியதியாவது - ப்ரஹ்மக்ஷத்ரியாதிகள் வேணுமென்கிற நியதி. எண்ணுகை - அநுசந்திக்கையும், மநநமும். "எண்ணும்திருநாமம்" என்றதுக்கு - முந்தினயோஜநை சௌலப்யத்திலே; இரண்டாம்யோஜநை ரஸ்யதையிலே. அதுவது வென்னும்படியென்றது - "தேனும்பாலும்" இத்யாதிப்படியே ரஸ்யதையாலே வாய்புலற்றும்படி யிருக்கையாலே யெப்போது மநுசந்திக்கப்படுமென்றபடி.

"தாய்" என்கிறதுக்கு சப்தமேதென்ன (அதுதானித்யாதி.) அவதாரணார்த்தம் (இவ்வளவேயித்யாதி) மந்த்ராந்தரங்கள் வேண்டாவென்றபடி. சம்வாதம் (ஸத்யமித்யாதி) "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍁𑌨𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌭𑍁𑌜𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑍇𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌦𑍈𑌵𑌂 𑌕𑍇𑌶𑌵𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑍍" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்ய முத்த்ருத்யபுஜமுச்யதே। வேதஶாஸ்த்ராத்பரந்நாஸ்தி நதைவம்கேஶவாத்பரம்) இதி மஹாபாரதே. அவதாரணத்துக்கு பாவாந்தரம் (அவதாரணத்தாலேயித்யாதி.)

ப்ரணவாதியைக்குறைத்து இல்லாத மகாரத்தைக் கூட்டுவானென்னென்ன (நாரணமென்றித்யாதி.) அளத்தில் - உப்பளத்தில்.

(ஆஜகாமேதி) "𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌰𑍁𑌷𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌰𑌾𑌵𑌣𑌂 𑌰𑌾𑌵𑌣𑌾𑌨𑍁𑌜𑌃 । 𑌆𑌜𑌗𑌾𑌮 𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑍇𑌨 𑌯𑌤𑍍𑌰 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌃" (இத்யுக்தஃபருஷம்வாக்யம் ராவணம்ராவணாநுஜஃ। ஆஜகாமமுஹூர்த்தேந யத்ரராமஸ் ஸலக்ஷ்மணஃ) இதி யுத்தகாண்டே.........................................................*

# இரண்டாம்பாட்டு.

நாரணனெம்மான், பாரணங்காளன்
வாரணந்தொலைத்த, காரணன்றானே.

## ஆறாயிரப்படி.

(நாரணன்) திருமந்த்ரத்தினல் ப்ரதிபாத்யனான நாராயணனாகிறானொன்னில்;

சர்வேஸ்வரனாய், சர்வலோகரக்ஷகனாய், சர்வ ஜகத்காரணனாய், வாரணம்தொலைத்தவன்றானே யென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருநாமத்துக் கர்த்தபூதமான குணவிபூதியோகத்தை யருளிச்செய்கிறார்.

நாரணன் - "𑌏𑌷 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃" (ஏஷநாராயணஃ) என்கிறபடியே நாராயணசப்தவாச்யன். எம்மான் - என்போல்வார்க்கு நாதபூதனாகையாலே லீலாவி

பூதிக்கு நிர்வாஹகனாய். பாரணங்காளன் - பூமிப்பிராட்டிக்கு வல்லபனாகையாலே நித்யவிபூத்யுபலக்ஷிதனாய். வாரணம்தொலைத்த - ப்ரதிபந்தக குவலயாபீடநிராஸக னான. காரணன்றானே - ஜகத்காரணபூதனாயுள்ள க்ருஷ்ணன்றானே...............*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இரண்டாம்பாட்டிலும் மூன்றாம்பாட்டிலும் இதினுடைய வர்த்தத்தைச் சொல்லுகிறது. ஏதேனுமாகத் திருமந்த்ரம் ப்ரஸ்துதமானவாறே, முன்னே அர்த்தத்தைச் சொல்லிப் பின்பு வாசகசப்தத்தைச் சொல்லுதல், முன்னே யிதுதன்னைச்சொல்லிப் பின்னை அர்த்தத்தைச்சொல்லுதல் செய்யக்கடவதா யிருப்பதொரு நிர்ப்பந்தமுண்டிவர்க்கு. "எண்பெருக்கந்நலத்தொண்பொருளீறில - வண்புகழ்நாரணன்" என்னுதல், "யாவையும்யாவருந்தானுமமைவுடைநாரணன்" என்னுதல்; "நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன்" என்னுதல், "நாராயணன்நங்கள்பிரானவனே" என்ன "அவனேயகல்ஞாலம் படைத்திடந்தான்" என்னுதல் செய்வர்.

(நாரணன்) மேல் அர்த்தோபந்யாஸம் பண்ண நினைத்து, சப்தோபாதாநம்பண்ணுகிறார். (எம்மான்) எனக்கு ஸ்வாமியானவன். (பாரணங்காளன்) பாரணங்குண்டு - ஸ்ரீபூமிப்பிராட்டி, அவளுக்குநிர்வாஹகன். பூமிக்கபிமாநிநியிறே. (பாரணங்காளன்) என்கையாலே - நித்யவிபூதியோகம் சொல்லுகிறது; எம்மானென்றது - லீலாவிபூதிக் குபலக்ஷணம்; ஆக, உபயவிபூதியுக்த னென்றபடி. குற்றஞ்செய்தது பொறுக்கைக்கொருவிபூதியும், பொறுப்பிக்கைக் கொருவிபூதியுமாய்த்து. "க்ருதாகஸ:" (க்ருதாகஸ:) குற்றம் தலைநிரம்பிப் புறம்பு புகலில்லாதாரை ரக்ஷிக்கு மீஸ்வரன்; குற்றம் நிரம்பி அநுதாப மில்லாதாரைப் பொறுப்பிக்கும் பிராட்டி; "தலையறுக்கச்சொல்லுகிறதென், கொடுக்கச்சொல்லுகிறதென், நம்முடைய நிக்ரஹமாகில் அதுக்குமூலம் நிக்ரஹம் பலிக்கும்படிபண்ணிப் பின்பு அநுக்ரஹத்தைப்பண்ணவேணுமோ" என்றிருக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டி. (வாரணம்தொலைத்த) தன்னைப் பெறவேணுமென்றிருப்பாருடைய ஆஶ்ரயணவிரோதிகள், குவலயாபீடம் பட்டதுபடும். விரோதிநிரஸந மிதுக்குறுப்போவென்னில்; முதலிலே தொடங்கி அதில் சொல்லிக்கொண்டு போருகிறது ரக்ஷணமிறே; அதுக்குக் களைபிடுங்கி நோக்கவேணுமே. "அவாரக்ஷணே" (அவாரக்ஷணே) என்னக்கடவதிறே. (காரணன்தானே) இவற்றினுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாக வுடையனாயிருக்கையும் அதுக்கர்த்தமிறே. ..............*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (நாரணனித்யாதி.) சப்தம்சொன்னாலமையாதோ, அர்த்தம்சொல்லுகிறதென்னென்ன (ஏதேனுமாகவித்யாதி.) அப்படி யிவரருளிச்செய்ததுண்டோ, முன்னே அர்த்தத்தைச்சொல்லி பின்னை மந்த்ரத்தைச் சொன்னதெ

ங்கேயென்ன (எண்பெருக்கித்யாதிவாக்யத்வயம்.) முன்னே மந்த்ரத்தைச் சொல்லி பின்னை யர்த்தத்தைச்சொன்ன தெங்கேயென்ன (நாரணனித்யாதிவாக்யத்வயம்.) "அந்தர்ப்பஹிஸ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்த்திதஃ," (அந்தர்ப்பஹிஸ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்த்திதஃ,) "நாராயணபரோஜ்யோதி ராத்மாநாராயணஃபரஃ" (நாராயணபரோஜ்யோதி ராத்மாநாராயணஃபரஃ) என்னக்கடவதிறே.

அநுவதிக்கிறதுக்குப்பாவம் (மேலர்த்தோபந்யாஸமித்யாதி.)

பாரணங்கு - பாரானவணங்கு. அணங்கு - தெய்வப்பெண். பார்தானேவிவளென்ன (பூமிக்கித்யாதி.) "எம்மான் பாரணங்காளன்" என்கிறவிது நாராயணசப்தத்துக் கர்த்தமானபடி யெங்ஙனேயென்ன (பாரணங்காளனித்யாதி.) ஸ்ரீபூமிப்பிராட்டியைச்சொன்னது நித்யஸூரிகளுக்கு முபலக்ஷணமாய், நித்யவிபூதியைச்சொல்லுகிறது. "எம்மான் பாரணங்காளன்" என்றபதச்சேர்த்திக்குபாவம் (குற்றம்செய்ததித்யாதி.) பொறுக்கைக் கொருவிபூதியுமென்றது - பொறுக்கைக்கு விஷய மொருவிபூதியுமென்றபடி. பொறுப்பிக்கைக்கடியான விவள்தயை ஈஸ்வரனிலும் பிராட்டியிலு மதிகமென்கிறார் (க்ருதாகஸ இத்யாதி) "'க்ஷாம்யதி' இத்யாதிப்படியே" என்றுகூட்டுவது. (தலையறுக்கச் சொல்லுகிறதென், கொடுக்கச்சொல்லுகிறதென்) என்றவிது - காகவிஷயத்தில் பிராட்டியருளிச்செய்தத்தைப்பற்ற.

"வாரணம்தொலைத்த" என்றதுக்கு பாவம் (தன்னைப் பெறவேணுமித்யாதி.) இதுக்குறுப்போவென்றது - இந்தத் திருமந்த்ரத்துக்கர்த்தமோவென்றபடி. முதலிலே - * அகாரத்திலே. அதில் - திருமந்த்ரத்தில். அதுக்கு - ரக்ஷணத்துக்கு. (நோக்கவேணுமே) ஆகையாலே யிதுவும் திருமந்த்ரார்த்த மென்றபடி. ரக்ஷணமானால் விரோதிநிரஸநம் சொல்லவேணுமோவென்ன (அதுக்கித்யாதி.) அகாரத்தால் ரக்ஷணம் சொல்லும்படியென்னென்ன (அவரக்ஷணேயித்யாதி.)

பஹுவ்ரீஹ்யர்த்தமான வந்தர்யாமிதயா ஸ்வரூபஸ்த்தித்யாதி காரணத்வத்தை "காரணன்றானே" என்று சொல்லுகிறது. அதுக்கு - அம்மந்த்ரத்துக்கு. இப்பாட்டுக்கும் மேலிற்பாட்டுக்கும், "நாள்வாய்நாடீர்" என்று க்ரியை. ............*

---

# மூன்றாம்பாட்டு.

தானேயுலகெல்லாந், தானேபடைத்திடந்து
தானேயுண்டுமிழ்ந்து, தானேயாள்வானே.

## ஆறாயிரப்படி.

(தானே) நிகிலஜகந்நியமந ஸ்ருஷ்டி ரக்ஷணாதிகளைப் பண்ணுவானும், அந்தவாரணம் தொலைத்தருளின வவன்றானேயென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருத்வரூபமான வர்த்தத்தை யருளிச்செய்கிறார்.

தானே-நாராயணசப்த வாச்யனானதானே. உலகெல்லாம் " ஸவ-ஃஂவஜ்ஜீ ஊஂஸ்ரூஹ " ( ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம ) என்கிறபடியே சமாநாதிகரிக்கலாம்படி சர்வலோகத்துக்கும் ஏகப்ரகாரியாய். சாமாநாதிகரண்ய நிபந்தநமான ஸ்ருஷ்ட்யாதிகளில்வந்தால், தானே-சஹகாரிநிரபேக்ஷமாகத்தானே. படைத்து-ஸ்ருஷ்டித்து. இடந்து-ப்ரளயத்திலேயிடந்தெடுத்து. ப்ரளயத்துக்குமுற்கோலி, தானே - அபேக்ஷாநிரபேக்ஷமாக. உண்டு-தன்வயிற்றிலேவைத்துநோக்கி. உமிழ்ந்து - அநந்தரத்திலேயுமிழ்ந்து. சேஷ்யந்தர ப்ரசங்கமில்லாதபடி, தானே - சர்வாதிகனானதானே. ஆள்வான்-நிர்வஹிக்கும்..........................................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

ஸ்வாமித்வ ப்ரயுக்தமான சர்வவிதரக்ஷணங்கள் பண்ணும்படி சொல்லுகிறது.

(தானேயுலகெல்லாம்) "ஸவ-ஃஂவஜ்ஜீஊஂஸ்ரூஹ" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம) "தத்ஜூஉஸி" (தத்த்வமஸி) என்னக்கடவதிறே. தானேபடைத்திடந்து தானேயுண்டுமிழ்ந்து தானேயாள்வானாகையாலே, தானேயுலகெல்லாமென்கிறது; * தஜ்ஜலாநிதிவத். இங்குச்சொல்லுகிற தாதாத்ம்யம் ஸ்வரூபேண வைக்யம்சொல்லுகிறதல்ல, சரீராத்மபாவத்தாலே சொல்லுகிறது. காரணத்வம்சொல்லில் விகாராஸ்பதமாமென்று சங்கித்து, சரீராத்மபாவத்தாலே சொல்லுகிறது. சரீரகதமான பால்யயௌவநாதிகள் ஆத்மாவுக்குத் தட்டாதாப்போலே, இவற்றைப்பற்றிவரும் விகாராதிகள் அவனுக்கு வாராதென்று தோஷாஸ்பர்ஶம் சொல்லுகைக்காகச் சொல்லுகிறது. (தானேபடைத்து) "தஊ-ஊகீஹவதி" (தமஃ-ஏகீபவதி) என்கிறபடியே சூக்ஷ்ம சிதசிச்சரீரியான தானே சகலலோகங்களையுமுண்டாக்கி. * அசிதவிசேஷிதமான தசையாகையாலே, அபேக்ஷிப்பாருமின்றிக்கே * தயமாநமநாவாய்த்தானேயிறே ஸ்ருஷ்டித்தான். (தானே-இடந்து) ப்ரளயங்கதையானபூமி "என்னையெடுக்கவேணும்" என்றபேக்ஷிக்கவன்றிறே நஷ்டோத்தரணம்பண்ணிற்று. (தானேயுண்டு) ப்ரளயம்வரப்புகாநின்றதென் றறிவாரில்லையே. (உமிழ்ந்து) உள்ளேகிடந்து நோவுபடுமித்தனையல்லது, "எங்களை வெளிநாடுகாணப் புறப்படவிடவேணும்" என்றறியாதிருக்க, தானேயுமிழ்ந்து. இப்படி சர்வவிதரக்ஷணங்களையும் பண்ணுகையாலே (தானேயுலகெல்லாம்) " ஸவ-ஃஂவஜ்ஜீஊஂஸ்ரூஹ " ( ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம ) ......................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (தானேயித்யாதி) "தானேபடைத்திடந்து" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (ஸ்வாமித்வேத்யாதி) ஸ்வாமித்வம்-உபயவிபூதிநாதத்வம்.

உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (சர்வம்கல்வித்யாதி) சர்வமென்று - ஜகத்துக்கு முபலக்ஷணம். "தானேயுலகெல்லாம்" என்றதுக்கு ஹேதுவைக்காட்டுகிறார் (தானேபடைத்தித்யாதி) "தானேபடைத்து" இத்யாதிக்குப்ரமாணம் (தஜ்ஜலாநிதி

வத்) என்று. "அநப்ராணநே" என்று ரக்ஷகத்வம்சொல்லுகிறது. "படைத்து" என்றால் - ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே, தல்லத்வம் ஸித்தம். தஜ்ஜத்வ தல்லத்வ ததநத்வங்களாலே "ஐஜ்ழ-ஸவ-ழ-ஷ்ரு-ஹ-வஸ" (இதம்-ஸர்வம்-ப்ரஹ்ம-கலு) என்றந்வயம். "தஜ்ஜத்வ தல்லத்வங்களில், தச்சப்தம்-ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மபரம்; ததநத்வத்தில், தச்சப்தம்-கேவல ஸ்வரூபமாத்ரபரம்; ஸ்வேநரூபேணநின்று ஸ்த்திதிப்பிக்கவேண்டுகையாலே" என்றிறே ஶ்ருதப்ரகாசிகையிலே யருளிச்செய்தது. "தஜ்ஜத்வதல்லத்வததநவைரிதம்ஸர்வம்ப்ரஹ்மகலு" (தஜ்ஜத்வதல்லத்வததநத்வைரிதம்ஸர்வம்ப்ரஹ்மகலு) என்றாப்போலேயிருக்கிறதிப்பாட்டு. "தானேயுலகெல்லாம்" என்று ஸ்வரூபைக்யம் சொல்லுகிறதோவென்ன (இங்குச்சொல்லுகிறவித்யாதி) சரீராத்மபாவத்தாலே சொல்லுகிறதென், "படைத்தான்" என்கையாலே - இஸ்ஸாமாநாதிகரண்யம் கார்யகாரண நிபந்தமானாலோவென்ன (காரணத்வமித்யாதி) அதாவது - கார்யகத விகாராதிதோஷங்கள் காரணபூதனிடத்திலும் ப்ரசங்கிக்குமென்று சங்கித்தென்றபடி. சரீராத்மபாவேனைக்யம் சொன்னால் விகாராதிதோஷங்கள் வாராதோவென்ன (சரீரகதமானவித்யாதி.) (விகாராதிகளவனுக்குவாராது) என்றவிடத்திலே, "யதோர்ணநாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச" (யதோர்ணநாபிஸ்ஸ்ருஜதேக்ருஹ்ணதேச) இத்யாதி ஶ்ருதியும், "ஊர்ணநாபிர்யதா ஸ்ருஷ்ட்வா ஸ்வயம் தத்ர ஸதே புந:। ததா ஸ்ருஷ்ட்வேதமகிலம் ஸ்வயம் தத்ர ஸதே ஹரி:" (ஊர்ணநாபிர்யதாஸ்ருஷ்ட்வாஸ்வயம் தத்க்ரஸதேபுந:। ததாஸ்ருஷ்ட்வேதமகிலம்ஸ்வயம்தத்க்ரஸதேஹரி:) என்கிற ஸ்ம்ருதியு மநுஸந்தேயம். ஶ்ருதியிலே "ஸத: புருஷாத்" (ஸத:புருஷாத்) என்றது - ஆத்மந: என்றபடி.

ஸூக்ஷ்ம சிதசிச்சரீரனாயிருந்தமைக்கு ப்ரமாணம் (தமஇத்யாதி) "தானே" என்கிறபதங்களிலவதாரணசதுஷ்டயத்துக்கு மடைவேயர்த்தம் (அசிதவிசேஷிதமான வித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே.) ................................*

## நான்காம்பாட்டு.

ஆள்வானாழிநீர்க், கோள்வாயரவணையான்
றாள்வாய்மலரிட்டு, நாள்வாய்நாடீரோ.

### ஆறாயிரப்படி.

(ஆள்வான்) ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற வெம்பெருமான்றிருவடிமலர்களிலே திருமந்த்ரத்தைக்கொண்டு நாடோறும் மலரிட்டு அவன்றிருவடிகளைப் பெறுங்கோளென்கிறார்...............................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், "ஆபோ நாரா:" (ஆபோநாரா:) என்கிற நிர்வசநமர்யாதையாலே அர்ணவசாயியான நாராயணன் திருவடிகளிலே புஷ்பாதிகளை சமர்ப்பித்து நித்யமாக வாஶ்ரயியுங்கோளென்கிறார்.

ஆழிநீர்-ஏகார்ணவமான காரணஜலத்திலே. கோள்வாய்-பெருமிடுக்கையும் ஸ்துதிமுகமான முகத்தையுமுடையனான. அரவணையான்-திருவரவணையை யுடைய னாய்க்கொண்டு. ஆள்வான்-ஜகந்நிர்வாஹகனான சேஷியினுடைய. தாள்வாய் - திருவடிகளிடத்தே. மலரிட்டு-புஷ்பங்களை சமர்ப்பித்து. நாள்வாய்நாடீர்-நாள்தோறும் சாபேக்ஷரா யாஶ்ரயியுங்கோள்.

கோள்வாயென்று - "ஃஃஃ" (பலகதாமகி) என்கிறபடியே மிடுக்குக்கிடமான வாயென்றுமாம். அன்றியே, கோளென்கிறது-ஒளியாய், * பஞ்சமணிவ்ராதமயூகத்தாலே யுஜ்ஜ்வலமுகமென்றுமாம் .............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

"ஃஃஃ" ( ஆபோநாரா இதிப்ரோக்தா: ) என்று மொரு நிர்வசநப்ரகாரமுண்டிறே யிதுக்கு, அவ்வழியாலே திருமந்த்ரத்தை நிர்வசித்து திருமந்த்ரத்தைச்சொல்லிக்கொண்டு புஷ்பாஞ்சலியைப்பண்ணி யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(ஆள்வான்) இவற்றையடைய வடிமைகொள்ளுமவன். (ஆழிநீர்-ஆள்வான்) அடிமைகொள்ளும் ப்ரகாரமிருக்கிறபடி. காரணஜலத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க்கண்வளர்ந்தருளி, அத்தசையிலே சேதநசமஷ்டியை ரக்ஷித்தவன். (கோள்வாய்) மிடுக்கையுடையவாயென்னுதல், ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவான வாயென்னுதல். (அரவணையான்றாள்வாய்மலரிட்டு) ஸ்வாராதனென்றதாய்த்து. அநந்தசாயிதிருவடிகளிலே செவ்விப்பூவைப்பணிமாறி. (நாள்வாய் நாடீரே) நாள்தோறு மாஶ்ரயியுங்கோள்; அத்திருவநந்தாழ்வானுடையபேறு உங்களுக்குப்பெறலாம் ............*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (ஆள்வானித்யாதி) இதுவும் திருமந்த்ரார்த்தமென் றருளிச்செய்யாநின்றுகொண்டு, "தாள்வாய்மலரிட்டுநாள்வாய்நாடீர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆபஇத்யாதி) ப்ரதமேம்லேசதர்த்தே, "ஃஃஃ ஃஃஃ । ஃஃஃ" (ஆபோநாரா இதிப்ரோக்தா ஆபோவைநரஸூநவ:। அயநம்தஸ்யதா:பூர்வம் தேநநாராயணஸ்ஸ்ம்ருத:) என்கிறநிர்வசநார்த்தமிப்பாட்டு.

" ஆழியநீரிலே கோள்வாயரவணையானாய்க்கொண்டு - ஆள்வான் " என்றபடி. அப்ப்ரகாரமேதென்ன ( காரணஜலத்திலேயித்யாதி ) த்விதீயார்த்தத்துக்கு, "கோள்" என்று-க்ரஸிக்கையாய், (ம்ருத்யுவான) என்றபடி. "ஃஃஃ" (ஆபோநாரா:) என்கிற ப்ரக்ரியையாலே திருமந்த்ரார்த்தம் சொல்லுகிறராகில், "ஆழிநீர்-ஆள்வான்" என்னவமைந்திருக்க " அரவணையான் " என்றதுக்குபாவமேதென்ன (ஸ்வாராதனித்யாதி.)

"அரவணையான்" என்றதுக்கு - கீழே "ஃஃஃ" (ஸ்வாராதன்) என்றருளிச்செய்து, இங்கேபாவாந்தரம் (அத்திருவநந்தாழ்வானுடைய வித்யாதி) ... *



# ஐந்தாம்பாட்டு.

நாடீர்நாடோறும், வாடாமலர்கொண்டு
பாடீரவன்னாமம், வீடேபெறலாமே.

## ஆறாயிரப்படி.

( நாடீர் ) திருமந்த்ரத்தைச்சொல்லி அவன்றிருவடிமலர்களிலே வாடாமலர்கொண்டு நாடோறும் பணிமாற, அவன்றிருவடிமலர்களைப் பெறலாம், இது நிஸ்சிதமென்கிறார்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மோக்ஷப்ரதனான நாராயணன் திருநாமங்களைப் பாடுங்கோள், பரமபுருஷார்த்தத்தைப் பெறலாமென்கிறார்.

நாடோறும் - நாள்தோறும். வாடாமலர்கொண்டு - செவ்விப்பூக்களைக்கொண்டு. நாடீர் - உங்களர்த்தித்வம் தோன்றும்படி யாஸ்ரயியுங்கோள். அவ்வளவில் பர்யவஸியாதே, ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு, அவன்னாமம் - அந்நாராயணனுடைய திருநாமத்தை. பாடீர் - பாடுங்கோள். அந்த ஆராதநமும் சாமகாநமுமே, வீடே - நிரதிசயபுருஷார்த்தலக்ஷணமோக்ஷமாக. பெறலாம் - பெறலாம். ..................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இப்படி செவ்விமாறாத புஷ்பத்தைக்கொண்டு அவன்றிருநாமத்தை ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகச் சொல்லுங்கோள், அப்படிசெய்யவே, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பெறலாமென்கிறார்.

( நாடீர்நாடோறும் ) பசித்தபோதெல்லா முண்ணுமாபோலே. ( வாடாமலர்கொண்டு ) உங்களுடைய வபிநிவேசாநுரூபமான புஷ்பங்களைக்கொண்டு. ( பாடீரவன்னாமம் ) "ஹதத்ஸாமகாயந்நாஸ்தே" ( ஏதத்ஸாமகாயந்நாஸ்தே ) என்று முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலே, அவனுடைய திருநாமங்களை ப்ரீதிபூர்வகமாகப்பாடுங்கோள். நாடீரென்கையாலே - மாநஸவ்யாபாரத்தைச் சொல்லிற்று; வாடாமலர்கொண்டென்கையாலே - காயிகத்தைச் சொல்லிற்று; பாடீரென்கையாலே - வாசிகத்தைச்சொல்லிற்று. ( வீடேபெறலாமே ) ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப்பண்ணவே, "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" ( ஸ்வேநரூபேணபிநிஷ்பத்யதே ) என்கிறத்தைப் பெறலாம். இனியத்தைச்செய்யப் பெரியத்தைப்பெறலாம்..............................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( நாடீரித்யாதி. ) * வாடாமலர்தொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை ( இப்படியித்யாதி. ) ( வ்ருத்தியைப்பெறலாம் ) என்கையாலே - "வீடு" என்றதும் "ஸ்வேநரூபேண" ( ஸ்வேநரூபேண ) என்றதும் வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதம்.

"நாடோறும்-நாடீர்" என்றது - துர்லபதையாலேயன்று, காலநை யத்ய பாவத்தாலேயென்கிறார் (பசித்தபோதெல்லாமித்யாதி) காலநியதியில்லையென்கிற வர் "வாடாமலர்" என்பானென்னென்ன (உங்களுடையவித்யாதி.)

சொல்லீரென்றதே, "பாடீர்" என்றதுக்குபாவம் (ஏதத்ஸாமகாயந்நித்யாதி)

ப்ரவேசத்திலே "கரணத்ரயத்தாலு மாஸ்ரயியுங்கோள்" என்றது இப்பாட்டைக்கடாக்ஷித்தென்னுமிடம் தோற்றவருளிச்செய்கிறார் (நாடீரென்கையாலேயித்யாதி.)

ஆனால் வீடுபெறுகைக்கு கரணத்ரயசமாஸ்ரயணம் சாதநமோவென்ன (ஸ்வரூபாநுரூபமானவித்யாதி) கரணத்ரயத்தினுடைய பகவதைகாந்த்யம் சேஷபூதனானவிவனுக்கு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிறே. கீழ்வாக்யவிவரணம் (இனியத்தையித்யாதி) பெரியத்தை - பரமபுருஷார்த்தமானவீட்டை ......... ...............*

# ஆறாம்பாட்டு.

மேயான்வேங்கடங், காயாமலர்வண்ணன்
பேயார்முலையுண்ட, வாயான்மாதவனே.

## ஆறாயிரப்படி.

(மேயான்) * அதஸீஸூநஸமாமலச்சவியாய் ஸ்ரியஃபதியாயிருந்த பேயார்முலையுண்ட வாயான். நம்முடைய சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமாயிருக்கிலிறே அவன்றிருவடிகளி லடிமைசெய்யலாவதென்னில்; அவனன்றோ சகலமநுஜ நயநவிஷயதாங்கதனாய் சர்வஸுலபனாய்க்கொண்டு திருமலையிலே புகுந்துநின்றருளுகிறா னென்கிறார் ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாகவும் அநுபவார்த்தமாகவும் திருமலையிலேவந்து பிராட்டியோடே சந்நிஹிதனானனென்கிறார்.

ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமாய், காயாமலர்-காயாம்பூப்போலே ஸ்யாமளமான. வண்ணன் - வடிவையுடையனாய். அநுபவப்ரதிபந்தகமான ப்ரக்ருதியை, பேயார்-பூதனையினுடைய. முலை-விஷபூர்ணமானமுலையை. உண்ட-பசையறச்சுவைத்தாப்போலே பசையறுக்கும். வாயான்-வாங்மாதுர்யத்தையுடையனானவன். "ஸ்வாமிபுஷ்கரிணீதீரே ரமயா ஸஹ மோததே" (ஸ்வாமிபுஷ்கரிணீதீரே ரமயாஸஹமோததே) என்கிறபடியே, மாதவன் - * அலர்மேல்மங்கையோடே. வேங்கடம்-திருமலையிலே. மேயான்-நித்யவாஸம்பண்ணாநின்றான்............................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

நீர்சொன்னபடிசெய்யலாவது ஆஸ்ரயணீயனைக்கண்டாலன்றோ, கண்டாஸ்ரயிக்கவேண்டாவோவென்ன; பிற்பாடரான நமக்காகத்திருமலையிலே நின்றருளினான், அவனையாஸ்ரயியுங்கோளென்கிறார்.

(மேயான்வேங்கடம்) (வேங்கடம்-மேயான்) உங்களை யாஶ்ரயிப்பித்துக் கொள்ளுகைக்காகத் திருமலையிலேபொருந்தி வர்த்திக்கிறவன். கண்டவாறே தான்பஜிக்கலாயிருக்குமோவென்னில் (காயாமலர்வண்ணன்) துரும்புமெழுந்தாடி அடிமையிலே மீண்டல்லது நிற்கவொண்ணாதபடியான வடிவுபடைத்தவன். விரோதிவர்க்கம் பின்னைச்செய்வதென்னென்னில் (பேயார்முலையுண்டவாயான்) பூதனைபட்டதுபடுமெத்தனை. (மாதவனே) நம்பூர்வவ்ருத்தம்பாராதே விஷயீகரிப்பிக்கைக்கு அருகேயிருப்பாருமுண்டு......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (மேயானித்யாதி) "மேயான்வேங்கடம்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நீர்சொன்னபடியித்யாதி.)

திருமலையிலேவர்த்திக்கிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (உங்களையித்யாதி.)

ஆனாலுமவன் ஸ்வதந்த்ரனன்றோ, பூர்வவ்ருத்தத்தைப்பார்த்து "க்ஷிபாமி" என்றாலோவென்ன (நம்பூர்வவ்ருத்தமித்யாதி.)

காயாமலரொன்றுதொடங்கி, வாயானனமாதவன்-வேங்கடம்-மேயான், ஆகையாலே, நாடீர் என்று கீழிற்பாட்டோடே யந்வயம்..............................*

---

# ஏழாம்பாட்டு.

---

மாதவனென்றென், றோதவல்லீரேற்
றீதொன்றுமடையா, வேதஞ்சாராவே.

## ஆறாயிரப்படி.

(மாதவன்) இந்தபக்தியோகத்தி லநதிகாரிகள் மாதவனென்னும் திருநாமத்தைச்சொல்லுங்கோள், சொல்லுமிடத்தில் பரப்போரிதராய்ச் சொல்லவமையும், சொல்ல, பகவத்கைங்கர்யவிரோதியாய் ப்ராரப்தாப்ராரப்தமான சர்வபாபங்களும் நசிக்குமென்கிறார்......... ...... ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம்; இப்படி சர்வப்ரகாரோபாஸ்திபண்ணமாட்டாதாருண்டாகில், உங்கள் சகலக்லேசமும் தீரும்படி, உபாயோபேயமான அந்தஃபுரத்தில் வார்த்தையைச் சொல்லுங்கோளென்கிறார்.

மாதவன் - புருஷகாரயோகமென்ன, கைங்கர்யவர்த்தகத்வமென்ன, இரண்டாகாரத்தையுமுடைய லக்ஷ்மீவிசிஷ்டனானவனுடைய மாதவனென்கிறதிருநாமத்தை. என்றென்று - பூர்வகண்டமர்யாதையாலே உபாயத்வேந ஆஶ்ரயணீயனென்றும், உத்தரகண்டமர்யாதையாலே உபேயத்வேந புருஷார்த்தபூதனென்று மநுசந்

நித்த. " ஶ்ராணாமதிஶப்தபாஜஃ " (ஶ்ராணமதிஶப்தபாஜஃ) என்கிறபடியே, ஓத-உச்சரிக்கைக்கு. " நலப்யதேதிகாரீவாஸ்ரோதகாமோதவாபுநஃ " (நலப்யதேதிகாரீவாஸ்ரோதகாமோதவாபுநஃ) என்கிறபடியே கிடையாதது கிடைத்தது, வல்லீரேல் - வல்லீகோளாகில். தீதொன்றும்-முன்பு ஆர்ஜித்தக்ரூரபாபங்கள். அடையா-பலப்ரதோந்முகமாகக்கொண்டுகிட்டாது. "த்வயமாவர்த்தயேந்நித்யம்" (த்வயமாவர்த்தயேந்நித்யம்) என்கிறமர்யாதையாலே, ஏதம்சாரா - மேலுண்டான பாபப்ரவ்ருத்திகள் கூடாது.

"ஸதைவம்வக்தா-ஸுகமாஸ்வ" (ஸதைவம்வக்தா - ஸுகமாஸ்வ) என்கிறபடியே அநுபவமே யாத்ரையாமென்று கருத்து...................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ப்ரீதிப்ரேரிதராய் ஆஸ்ரயிக்கவும் இனிமையோடே திருநாமம் சொல்லவும்மாட்டாதார், அந்தஃபுரபரிகரமானர் வார்த்தையைச்சொல்லவே, பூர்ணோபாசநத்தில் பலம் சித்திக்குமென்கிறார்.

(மாதவனென்றென்றோதவல்லீரேல்) நாராயணசப்தத்தோடே யித்தைச்சேர்த்துச் சொல்லப்பாருங்கோள். " நாரணமே " என்றாரே கீழே. (ஓதவல்லீரேல்) உங்களுக்கு ருசியில்லையாகிலும் பரப்ரேரிதராய்க் கொண்டு நிரந்தரமாகச் சொல்லவல்லிகோளாகில். (தீதொன்றுமடையா) பூர்வாகம்நசிக்கும். (ஏதம்சாராவே) உத்தராகத்துக்கஸ்லேஷமேயாம். பூர்வாகத்தை விஸ்மரிக்கும், உத்தராகத்தில் நெஞ்சுசெல்லாது. கீழ்ச்சொன்ன திருமந்த்ரமும் இப்பாட்டில்சொன்ன ஸ்ரீமத்பதமும் தனித்தனியே பேற்றுக்கு பர்யாப்தமானபின்பு, இரண்டையும் சேர்த்துச்சொன்னவர்களுக்குப் பேறுசொல்லவேண்டாவிறே..........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மாதவனித்யாதி) "மாதவனென்றென்றோதவல்லீரேல்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (ப்ரீதித்யாதி) "எண்ணும்திருநாமம்" என்றத்தைப்பற்ற (ப்ரீதிப்ரேரிதராயித்யாதி) "பாடீரவன்னமம்" என்றத்தைப்பற்ற (இனிமையோடேயித்யாதி) அந்தஃபுரபரிகரமானர் வார்த்தையாவது - " மாதவன் " என்று சொல்லுகை.

"நாரணமே" என்றுசொல்லிவைத்து, பின்னையுமொன்றை விதிக்கிறாரோவென்ன (நாராயணேத்யாதி) நாராயணசப்தத்தைச்சொன்னரோவென்ன (நாரணமித்யாதி) "என்றென்று" என்கிறத்விருக்தியாலே - ஸ்ரீமச்சப்தத்தை நாராயணசப்தத்தோடே த்விதாகூட்டி த்வயமாக்கி யநுசந்திக்க வல்லீகோளாகி லென்றபடி. "ஓத" என்கிறதுக்கர்த்த மருளிச்செய்யாநின்றுகொண்டு, "என்றென்று" என்கிற வீப்ஸைக்கு மர்த்தமருளிச்செய்கிறார் (உங்களுக்கித்யாதி) ஓதுகையாவது-ஒருவனுச்சரிக்க ததநூச்சாரணமாகையாலே (பரப்ரேரிதராயென்றது.)

அதுநசிக்கும்படியு மிதுசாராதபடியு மெப்படியென்ன ( பூர்வாகத்தையித்யாதி) " தோஷோயத்யபி " ( தோஷோயத்யபி ) என்று - பூர்வாகவிஸ்மரண

மும், "அவிஜ்ஞாதாஹிபக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:" (அவிஜ்ஞாதாஹிபக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:) இத்யாதியாலே - உத்தராகத்தில் நெஞ்சுசெல்லாமையு முக்தமிறே.

"மாதவன்" என்றத்தை நாராயணசப்தத்தோடேகூட்டி யநுசந்தியுங்கோள் என்றத்தால்பலிதம் (கீழ்ச்சொன்னவித்யாதி.) .............. ....................*

## எட்டாம்பாட்டு.

சாராவேதங்க, ணீரார்முகில்வண்ணன்
பேராரோதுவா, ராராரமரரோ.

### ஆறாயிரப்படி.

(சாரா) அபக்ருஷ்டரான நாங்களதிகாரிகளோவென்னில்;

யாவர் சிலர் திருநாமஞ் சொல்லவல்லார், அவர்களிறே யித்திருநாமஞ்சொல்ல வதிகாரிகளான வுத்க்ருஷ்டராகிறு ரென்கிறார். இத்திருநாமத்தைச் சொல்லுவார் யாவர் சிலர், அவர்கள் நிரஸ்த சமஸ்த ப்ரதிபந்தகராய் என்றுமவன்றிருவடிகளிலே யடிமைசெய்யப் பெறுவர்களென்றுமாம். ..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்கர்ஷாபகர்ஷ மில்லாதபடி சர்வபுருஷ போக்யபூதனானவன் திருநாமத்தைச் சொல்லுமவர்கள் சூரிசமானரென்கிறார்.

ஏதங்கள் - துःகங்கள்தாமே. சாரா - ஸ்வயமேவ கிட்டமாட்டாதுகள். ஜலஸ்த்தலவிபாகமற வுபகரிக்கையாலே சர்வஜநபோக்யமாய், நீரார் - நீர் நிறைந்த. முகில்வண்ணன் - காளமேகம்போலே யிருக்கிற நிறத்தையுடையவனுடைய. பேர் - திருநாமத்தை. ஆரார் - த்ருப்திபிறவாத வளவாய்க்கொண்டு, வர்ணாஸ்ரமநியதியின்றியிலே உக்திமாத்ராதிகாரத்தை யுடையராய்க்கொண்டு. ஆர் - யாவர்சிலர். ஓதுவார் - சொல்லுவார். அவர்கள், அமரரோ - சூரிகளிறே.

ஆரார் - த்ருப்தராகாரென்றுமாம். ..................................................*

### ஈடு - எட்டாம்பாட்டு.

அதிகாரிநியதியில்லை, ஆரேனுமாகத் திருநாமத்தை நிரந்தரமாகச் சொல்லுவார் நித்யசூரிகளோ டொப்பர்களென்கிறார்.

( சாராவேதங்கள் ) ஒரு பொல்லாங்கும் வந்து கிட்டாது. ( நீரார்முகில்வண்ணன் ) நீராலே பூர்ணமான மேகம்போலே யிருக்கிற நிறத்தையுடையவன். ( அவ்வடிவு காணுந்தனையுமிறே உபதேசிக்கவேண்டுவது. ) ( பேராரோதுவார் ) அவன் திருநாமத்தை நிரந்தரமாகச் சொல்லுவார் யாவர் சிலர். ( ஆராரமரரோ ) அவர்களேதேனும் ஜந்மவ

ருத்தங்களை யுடையரோயாகிலும், அவர்கள் இருந்தபடியே நித்யசூரிகளோடொப்பர். அவ்வோ ஜந்மஸ்த்திதிகளிலே நித்யசூரிகளோ டொப்பர்கள். ( ஆஶ்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காக அவர்களேற்ற மருளிச்செய்கிறார். ) .................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( சாராவித்யாதி. ) "பேராரோதுவாராராரமரரே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அதிகாரியித்யாதி. ) அதிகாரிநியதி யில்லையென்றது - "ஆரார்" என்றத்தைப்பற்ற.

"ஓதுவார்" என்றவர்த்தமாநார்த்தம் ( நிரந்தரமாக ) என்று. பேரை ஆரோதுவார். ஆர் - யாவரென்றபடி. ஆரார்-அவர்களாரேனுமாகிலுமென்றபடி. "இருந்தபடியே" என்றத்தை விவரிக்கிறார் ( அவ்வோவித்யாதி. )

ஏதங்கள் - சாரா, நீரார்முகில்வண்ணன்பேர் - ஓதுவார் - ஆர் - ஆராரமரரேயித்யந்வயঃ.................................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

அமரர்க்கரியானைத், தமர்கட்கெளியானை
யமரத்தொழுவார்கட், கமராவினைகளே.

## ஆறாயிரப்படி.

( அமரர்க்கு ) ஆஶ்ரிதரான தேவாதிகளுக்குங்கூட வரியனாய், ஆஶ்ரிதர்க்கெளியனா யிருந்தவனை, அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஓரஞ்சலிமாத்ரம்பண்ணவுமமையும், கைங்கர்ய விரோதிகளெல்லாம் போமென்கிறார்.................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்யப்ரயோஜந சுலபனானவனை அநந்யரா யாஶ்ரயிப்பார்க்கு ப்ரதிபந்தகங்கள் கிட்டாவென்கிறார்.

அமரர்க்கு - ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுக்கு. அரியானை - துர்லபனாய். தமர்கட்கு - சம்பந்தஜ்ஞாநமுடைய அநந்யப்ரயோஜநர்க்கு. எளியானை- சுலபனானவனை. ப்ரயோஜநங்களைக்கொண் டகலப்போகாதே அநந்யராய்க்கொண்டு, அமர - பொருந்த. தொழுவார்கட்கு - தொழுவார்க்கு. வினைகள் - ப்ராப்திப்ரதிபந்தகபாபங்கள். அமரா-ஸ்பர்ஶியாதுகள், .................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஜந்மாதிக ளப்ரயோஜகமானாலும் ப்ரயோஜநாந்தரபரதா ஹேதுவான பாபங்கள் செய்வதென்னென்னில்; ப்ரயோஜநசூந்யராய்க்கொண்டாஶ்ரயிக்கவே அவைதாமே போமென்கிறார்.

(அமரர்க்கரியானை) எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்வயத்நத்தால் ப்ராபிக்கவொண்ணாதவனை; "யஞாயஂஹ ம்வாநுஶ்ரு ஹ்மாஜா நாதி." (யந்நாயம்பகவாந்ப்ரஹ்மாஜாநாதி.) (தமர்கட்கெளியானை) அநந்ய ப்ரயோஜநர்க்கு சுலபனானவனை. ஒரு குரங்காகவுமாம், ஒரு வேடுவிச்சியாகவுமாம், ருஷிகளாகவுமாம், அவர்களுக் கெளியனாயிருக்கும்; "ஸுக்ரீவஂஶரணஂமதஃ," (ஸுக்ரீவம்ஶரணம்கதஃ,) "ஸொஹஂமஹா தேஜாஃ" (ஸோப்யகச்சந் மஹாதேஜாஃ) "ஐமௌஸ்மமுநிஶார்தூல" (இமௌஸ்மமுநிஶார்த்தூல) என்றுசொல்லுகிறபடியே. (அமரத்தொழுவார்கட்கு) ஒருப்ரயோஜநத்தைக்கணிசியாதே அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு தொழுமவர்க்கு. (அமராவினைகளே) ப்ரயோஜநாந்தரபரதைக் கடியான விரோதிகள் வந்து கிட்டா.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (அமரர்க்கித்யாதி.) "அமரத்தொழுவார்கட் கமராவினைகள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஜந்மாதிகளித்யாதி.)

ப்ரஹ்மாதிகளுக்கு மறியப்போகாதோவென்ன (யந்நாயமித்யாதி) "யஞாயஂஹமவாநுஶ்ரு ஹ்மாஜா நாதிவுருஷோத்தமஃ." (யந்நாயம்பகவாந்ப்ரஹ்மாஜாநாதிபுருஷோத்தமம்.)

அதெங்கேகண்டோமென்ன (ஒருகுரங்கித்யாதி.) உக்தத்ரயங்களுக்கு மடைவே ப்ரமாணத்ரயங்கள் (ஸுக்ரீவமித்யாதி) "பிதாயஸ்யபுராஹ்யாஸீச் சரண்யோதர்மவத்ஸலஃ । தஸ்யபுத்ரஶ்ஶரண்யஸ்ய ஸுக்ரீவஂஶரணஂமதஃ" (பிதாயஸ்யபுராஹ்யாஸீச் சரண்யோதர்மவத்ஸலஃ । தஸ்யபுத்ரஶ்ஶரண்யஸ்ய ஸுக்ரீவம்ஶரணம்கதஃ) இதிகிஷ்கிந்தாகாண்டே. "ஸொஹஂமஹா தேஜா" (ஸோப்யகச்சந் மஹாதேஜா) இத்யாதி, ஸங்க்ஷேபே. "ஐமௌஸ்மமுநிஶார்தூல கிஂகரௌஸமுபஸ்திதௌ । ஆஜ்ஞாபயயதேஷ்டஂவை ஶாஸநஂகரவாவகிஂ" (இமௌஸ்ம முநிஶார்த்தூல கிங்கரௌ ஸமுபஸ்த்திதௌ । ஆஜ்ஞாபயயதேஷ்டம்வை ஶாஸநம்கரவாவகிம்) இதி பாலகாண்டே விஶ்வாமித்ரம் ப்ரதி ராமஃ.......................................................*

---

# பத்தாம்பாட்டு.

---

வினைவல்லிருளென்னு, முனைகள்வெருவிப்போஞ்
சுனைநன்மலரிட்டு, நினைமின்னெடியானே.

## ஆறுயிரப்படி.

(வினை) திருமந்த்ரத்தைச்சொல்லி அழகிய மலர்களைக் கொண்டு அவன்றிருவடிகளிலே பரிமாறி அவனை ஸ்நேஹயுக்தமாக நினையும்

கோளென்றுகொண்டு, ப்ரஸ்துதமான பக்தியோகத்தைச் சொல்லி முடிக்கிறார். ......... ..................... ............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணத்தி லளவிறந்த பாரிப்பையுடையனானவனை யாஶ்ரயியுங்கோள், அவித்யாகர்மாதி சமஸ்ததோஷங்களும் நிவ்ருத்தமாமென்கிறார்.

வினை - பூர்வாகோத்தராகாதிரூப கர்மங்களும். அதுக்கடியான, வல்லிருள்-அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநரூபமான ப்ரபலதமோவிகாரங்களும். என்னும் - என்றென்று பரிகணிக்கப்பட்ட. முனைகள் - விரோதிவர்க்கத்தினுடைய தேஹசம்பந்தம் ருசிவாஸநைகளாகிற வுத்யோகங்கள். வெருவிப்போம் - தாமேயஞ்சி விட்டுப்போம். சுனை - தன்னிலமான சுனையிலுண்டான. நன்மலர் - செவ்விப்பூக்களை. இட்டு-சமர்ப்பித்து. நெடியான்-ஆஶ்ரிதவிஷயத்தில் அபர்யந்தோபகாரதையை யுடையவனை. நினைமின் - அநுசந்திக்கப் பாருங்கோள்........................ ..................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

அவ்வளவேயன்றிக்கே, கைங்கர்ய ப்ரதிபந்தகங்களும் போம், ஆனபின்பு, அவனை யாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

( வினையித்யாதி ) வினை - கர்மம், வல்லிருள் - ப்ரபலமான வஜ்ஞாநம், அதுக்கடியான தேஹசம்பந்தம், இவற்றைப் பற்றிவருகிற ருசிவாஸநைகளாகிற வித்திரள்கள். முனை - திரள். ( வெருவிப்போம் ) "நமக்கிதுநிலமன்று" என்று பீதமாய்ப்போம். அன்றிக்கே, முனையென்று-முகமாய், முகங்கெட்டுப்போமென்றுமாம்.

(சுனைநன்மலரிட்டு) அப்ராக்ருத த்ரவ்யம் தேடியிடவேணுமென்னவேண்டா. (நினைமின்) "சிந்திப்பேயமையும்." உங்களுக்குப் பாங்கான சமயத்திலே ஒருக்கால் நினையுங்கோள்; "ஸ்மர்த்தா" (ஸ்மர்த்தா) என்கிறபடியே. ( நெடியானே ) நீங்களொருக்கால் நினைத்துவிட்டால், பின்னை அவன்றானே "அஹம்ஸ்மராமி" (அஹம்ஸ்மராமி) என்று உங்களை நினைத்தபடியே யிருக்கும்; ஒருக்கால் நினைத்து இவனைப்போல் கலங்கவேண்டுவதில்லையிறே யவனுக்கு. சர்வகுண சம்பந்நனுமாய் அகர்மவஶ்யனுமாகையாலே உருவநினைத்தபடியே யிருக்குமிறே யவன்......................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( வினையித்யாதி. ) பாட்டையெல்லாம் கடாக்ஷித்து கீழ்ப்பாட்டிற்காட்டி லிப்பாட்டிற் சொன்ன விரோதிநிரஸநத்துக் கவாந்தரபேதமருளிச்செய்கிறார் ( அவ்வளவேயித்யாதி. ) அவ்வளவேயன்றியே யென்றது - ப்ரயோஜநாந்தரபரதா ஹேதுபாபம் போமளவேயன்றியே யென்றபடி.

அஜ்ஞாநம் - அவித்யை. "என்னும் முனைகள்" என்றதுக்கர்த்தம் (இதுக்கடியானவித்யாதி. ) என்னும் - என்றுசொல்லப்படுகிற. "என்னும் முனைகள்-என்று சொல்லப்படுகிற முனைகள்" என்கையாலே, அவித்யாகர்மங்களைச்சொன்னது வா

ஸநாருசி ப்ரக்ருதிசம்பந்தங்களுக்கு முபலக்ஷணமென்று கருத்து. "முனைகள்" என்று - முகமானபோது, வெருவிப்போகை - கெட்டுப்போகையாய், முகம்கெட்டுப் போமென்றபடி. இப்போது, வினையல்லிருளென்னும் - "வல்லிருளென்னும் - அவை" என்று கூட்டிக்கொள்வது.

"சுனை" என்றதுக்கு பாவம் ( அப்ராக்ருதேத்யாதி. )

ஆஶ்ரயணத்திலு மாயாஸமில்லை யென்கிறார் ( சிந்திப்பேயமையுமென்று. ) சிந்திக்கிறதின் சரமாவதி ( உங்களுக்கித்யாதி. ) ஒருக்கால் நினைக்கை போருமோ வென்ன ( ஸ்மர்த்தா இத்யாதி. ) "நினைமின்" என்றதுக்கநுகுணமாக "நெடியான்" என்றதுக்கர்த்தம் ( நீங்களித்யாதி. ) "ஸ்ராமி" என்ற வர்த்தமாநார்த்தம் ( நினைத்தபடியேயிருக்குமென்று. ) அதுக்கடியேதென்ன ( ஒருக்காலித்யாதி. ) கலங்கவெண்டாமைக்கடியேதென்ன (சர்வகுணேத்யாதி.) "விஶ்வரூபஞ்சமாம்" (விஶ்வரூபஞ்சமாம்) என்றத்தைப்பற்ற ( சர்வகுணசம்பந்நனென்றது. ) "அஜம்" என்றத்தைப்பற்ற ( அகர்மவஶ்யன் ) என்கிறது. வாராஹே; "ஸ்த்திதேமநஸி" இத்யாதி. "நன்மலர்" என்றது - ஆஶ்ரயிக்கிறவர்க ளாதரத்தைப்பற்ற. "நினைமின்" என்றவநந்தரம் "நெடியான்" என்கையாலே, நினைவில் நெடியவனென்று கருத்து. ..........................................................................*

# பதினொன்றாம்பாட்டு.

நெடியானருள்சூடும், படியான்சடகோப
னொடியாயிரத்திப்பத், தடியார்க்கருள்பேறே.

## ஆறாயிரப்படி.

( நெடியான் ) இத்திருவாய்மொழிவல்லார் ஆழ்வாரைப்போலே நெடியானருள் சூடும்படியாவரென்கிறார் ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவத்ப்ரசாதத்தை யருளிச்செய்கிறார்.

நெடியான்-சர்வாதிகனான சர்வேஶ்வரனுடைய. அருள்-சர்வப்ரகாரத்தாலுமுண்டான ப்ரசாதத்தை. அதிகரித்து, சூடும்-அநுபவிக்கும். படியான்-ஸ்வபாவத்தையுடையரான. சடகோபன்-ஆழ்வாருடைய. நொடி-சொல்லான. ஆயிரத்து - ஆயிரத்து. இப்பத்து-இப்பத்தானது. அடியார்க்கு-பகவச்சேஷபூதரானார்க்கு. அருள் பேறு-ப்ரஸாதலாபரூபமாயிருக்கும்.

நொடி - சொலவு. இது வஞ்சித்துறை..........................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இப்பத்தும், அப்யசித்தவர்களை ஆழ்வார் தம்மைப் போலே பகவத்விஷயீகார பாத்ரமாக்குமென்கிறார்.

(நெடியானித்யாதி) சர்வேச்வரனருளுக்குப் பாத்ரபூதராகையே ஸ்வபாவமான வாழ்வார். அதாவது – “ ஆற்றநல்லவகைகாட்டுமெம்மான்” என்று தன்குணசேஷ்டிதங்களை சாத்மிக்க சாத்மிக்க அநுபவிப்பித்துக்கொண்டு போந்தபடியை யநுசந்தித்து விஸ்மிதரானார்கீழ்; இப்போது, அவன்கொடுத்தகொடுத்த வருளெல்லா முண்டறுக்கவல்லாரானாராய்த்து. நொடிதல்-சொல்லுதல். (இப்பத்தடியார்க்கருள்பேறே) இப்பத்துத்தானே, இத்தையப்யஸித்தார்க்கு, “ நெடியானருள்சூடும்படியான் ”, என்றதுவேபேறுக்கும். (அடியார்க்கு-அப்யஸித்தார்க்கு. அருள்பேறு-ப்ரஸாதலாபம்.) ஈச்வரன்கொடுத்த ஸாதர்ம்யம் ஆழ்வார்கொடுக்கமாட்டாமையில்லையிறே ..................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நெடியானித்யாதி) “அடியார்க்கருள்பேறு” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்பத்துமித்யாதி.)

சூடுகை-தரிக்கையாய், பெறுகையென்றபடி. படி-ஸ்வபாவம். “ஆற்றநல்லவகைகாட்டும்” என்கிறவர் “அருள்சூடும்படியான்” என்கிறதென்னென்ன (அதாவதித்யாதி) (வல்லரானாராய்த்து) ஆகையாலே சொல்லுகிறானென்றபடி. உண்டறுக்கவல்லர் - புஜித்து ஜரிப்பித்துக்கொள்ளவல்லர்.

அருள்பேறே - அருளாகிறபேற்றை யுண்டாக்குமேயென்றபடி. “ பேறே ” என்ற வவதாரணார்த்தம் (ஈச்வரனித்யாதி) ........................................*

---

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( கண்ணன்கழலிணை. )

நாம்நாம் ஸங்கீர்த்தநேந, ஸ்வவஶ்யக்ருதபயஹராவநாத், நந்வேவம் ஸர்வதத்வாத், வ்ருஷ்டிதாநாத், யந்யநிவஹமிதேந, ஸ்துத்யநாதிக்ருத்யைர், யத்தோவர்ணாஸுரோத்தே, ஸ்வஹஸ்தியஹஜந ப்ரத்யோபாஸ்வ ஸாங்க ஶ்ரீஶாநாராயணோ ஹத்யாதி ப்ரத்யாதிஷ்ட ஹஹஸ்ரீ ॥ (கoஅ)

(நாம்நாம்ஸங்கீர்த்தநேநேத்யாதி) எண்ணுந்திருநாமம், நாரணனெம்மான், தானேயுலகெல்லாம், தாள்வாய்மலரிட்டு, வாடாமலர்கொண்டு பாடீரவன்னாமம், பேயார்முலையுண்ட வாயான்மாதவனே, மாதவனென்றென்றோதவல்லீரேல், பேராரோதுவார், அமரத்தொழுவார்கட்கு, சுணைநன்மலரிட்டுநினைமின் - நாராயணந்திரு

நாமஸங்கீர்த்தநத்தாலும், சர்வஸ்மாத்பரத்வேந த்யாநத்தாலும், ப்ரதிக்ஷணம் ஸ்மரணத்தாலும், புஷ்பாஞ்சலிஸமர்ப்பணத்தாலும், திருநாமங்களுடைய வத்யயநத்தாலும் ப்ரவசநத்தாலும், ஸ்தோத்ரங்ருத்த ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளாலும், மற்றும் நித்யநைமித்திகாதி வர்ணாஸ்ரம தர்மங்களாலும், பகவத்தர்மங்களிலே சிலவற்றை யருளிச்செய்தது மற்றுமுண்டான தர்மங்களுக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்; இவைகளாலே எம்பெருமான் தன்னைபஜிக்கைக்கு பஹுப்ரகாரங்களை யுடையனாயிருக்கிறானென்று, "கண்ணன்கழலிணை" என்கிறதஸகத்திலே த்ராமிடவேததர்ஸி யருளிச்செய்தாரென்கிறார் ............................................ (கoஅ)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

கண்ணனடியிணையிற்காதலுறுவார்செயலைத்
திண்ணமுறவேசுருங்கச்செப்பியே - மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கைதலைக்கட்டினான்மாறன்
ஆனபுகழ்சேர்தன்னருள். (கூ௫)

(கண்ணனடியிணையில்) இதில், பக்திமான்கள் பரிமாற்றத்தைச் சுருங்கவருளிச்செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; ஈஸ்வரன் தம்மைப் பரமபதத்திலே கொடுபோகையிலே த்வரிக்கிறபடியைக்கண்டு,"இவர்களுக்கிதொன்று குறைப்பட்டுக்கிடக்கவொண்ணாது" என்றுபார்த்து, தம்முடையபரமக்ருபையாலே, சர்வேஸ்வரனைப்பற்றுகையாலும், இவர்களுக்கு சுக்ரஹமாகவேணுமென்று பாசுரப்பரப்பறச்சுருக்கத்திலே பக்திமான்கள் பரிமாற்றமிருக்கும்படியை சம்சாரிகளுக்குபதேசித்துப் பரோபதேசத்தை நிகமிக்கிற * கண்ணன்கழலிணையிலர்த்தத்தை * கண்ணனடியிணையாலே யருளிச்செய்கிறாரென்கை.

(கண்ணனடியிணையில்) க்ருஷ்ணன்றிருவடிகளில். (காதலுறுவார்செயலை) பக்தியுக்தராயிருப்பார் க்ருத்யத்தை. (திண்ணமுறவே) த்ருடமாக வதிலேயூன்றும்படி. (சுருங்கச்செப்பியே) சங்க்ரஹமாகவருளிச்செய்து. (ஏ) ஈற்றசை. (மண்ணவர்க்கு) பூமியிலுண்டான சர்வாத்மாக்களுக்கும். (தானுபதேசிக்கை தலைக்கட்டினான்மாறன்) பிராட்டி "விதிதஃ" இத்யாதியாலே பரோபதேசத்தை முடித்தாப்போலே, கீழுபதேசித்துக் கொடுபோந்த பரோபதேசத்தை பரிஸமாப்திபண்ணியருளினார் பெருமதிப்பரானவாழ்வார். (ஆனபுகழ்சேர்தன்னருள்) ஸ்லாக்யமான யஸஸ்ஸோடேகூடின தம்முடைய க்ருபையாலே-பரோபதேசத்தைத் தலைக்கட்டியருளினார். (ஆனபுகழ்) * உலகத்தார்புகழும்புகழ். (தன்னருள்) * அருள்கொண்டாடும்படியானவருள். கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலைச் சுருங்கச்செப்புகையாவது - "கண்ணன்கழலிணை நண்ணும்மனமுடையீர் எண்ணுந்திருநாமம் திண்ண

ம்நாரணமே" என்றும் "நாரணனெம்மான்" என்றும், "கோள்வாயரவணையான் குள்வாய்மலரிட்டு நாள்வாய்நாடீரோ" என்றும், "நாடீர்நாடோறும் வாடாமலர் கொண்டு பாடீரவன்னாமம்" என்றும், "மேயான்வேங்கடம் காயாமலர்வண்ணன் பேயார்முலையுண்ட வாயான்மாதவனே" "மாதவனென்றென்றோத வல்லீரேல்" என்றும், "பேராரோதுவா ராராரமரரே" என்றும், "சுனைநன்மலரிட்டு நினைமின் நெடியானே" என்றும், இப்படி, * எண்பெருக்கில் எண்ணுந்திருநாமத்தின் சப்தார்த்தங்களைச்சுருக்கி "மாதவன்" என்று த்வயமாக்கி, கரணத்ரயப்ரயோஜந வ்ருத்தி சம்சாரிகளுக்குக் கையோலைசெய்து கொடுத்தபடியென்கை..................(கூரு)

பத்தாம்பத்தில் - ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக, திருவாய்மொழி - கூரு.—பாட்டு - ௧௦சஎ.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## ஆறுந்திருவாய்மொழி.

### அருள்பெறுவார் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(அருள்பெறுவார்) இனித் தன்பிறத்தி லெம்பெருமான் செய்தருளுகிறபடியைத் தன் திருவுள்ளத்தோடேகூட வநுபவிக்கிறார்.........*

### பன்னீராயிரப்படி.

ஆறுந்திருவாய்மொழியில், இவ்வாழ்வாருடைய பக்திவைலக்ஷண்யத்தையும் அது தம்மளவில் நில்லாமல் பிறர்க்கு முபதேசித்து ப்ரீதராம்படியையுங்கண்ட வீஶ்வரன், "இப்படி ப்ரவணரான விவரை யாவதாத்மபாவியாம்படி யமர்ந்த நிலத்திலேகொண்டுபோ யநுபவிக்கவேணும்" என்று பாரிக்கிற வவனுடைய; உபகாரோத்யோகத்தையும், அசாதாரண சம்பந்தத்தையும், பலப்ரதாநத்வரையையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும், அதிசயிதாங்கீகாரத்தையும், ஸ்த்திராஸக்தியோகத்தையும், ஆஸக்திஸூசகலக்ஷணகரத்வத்தையும், சம்ஶ்லேஷஜநிதௌஜ்ஜ்வல்யத்தையும், அத்யாதரவிசிஷ்டத்வத்தையும், அநவதிகோபகாரத்தையு மநுசந்தித்து ஏவம்பூதனான சர்வேஶ்வரன் தமக்குப் பரதந்த்ரனாய் நின்று பண்ணுகிற வாதராதிசயத்தைத் தம்முடைய திருவுள்ளத்தோடேகூட வுசாவி ஹ்ருஷ்டராகிறார்..........................*

### ஈடு.

* பொய்கின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர, ஈஶ்வரனை ஆழ்வார் பின்தொடர்ந்தபடி சொல்லிற்று; இதுதொடங்கி, ஆழ்வாரை சர்வேஶ்வரன் பின்தொடருகிறபடி சொல்லுகிறது.

இப்படி பக்தி ஸ்வரூபத்தை யுபதேசித்துக் கையொழிந்த வநந்தரம் தன்பக்கலிலே யிவர்க்கு விடாய்பெருகுகிறபடியைக்கண்டு, இவர்க்கு முன்பேவிடாய்த்துத் திருவாட்டாற்றிலே தங்குவேட்டையாகவந்து நிற்கிறவனுகையாலே இவரைக்கொண்டுபோகையிலே அவனுக்குத்வரைமிக்கது. இவரளவல்லவிறே அவனுடையவிடாய்; "ந ஜீவேயம் க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னுமேற்றமுண்டிறே. "ஆழ்வாரும் நாமுமா யநுபவிக்கவேணும்" என்றுபாரித்து, "அதுசெய்யுமிடத்தில், அவ்

வநுபவத்துக் கொருவிச்சேதம் வாராதபடி யேகாந்தமாயிருப்ப தொரு தேச விசேஷத்திலே கொடுபோய்வைத் தநுபவிக்கவேணும்" என்றுபாரித்து, "அதுசெய்யுமிடத்தில், இவர்க்குப் பரதந்த்ரனாய் இவர் நியமித்த படி செய்தோமாகவேணும்" என்று இவரநுமதியொழியச் செய்யமாட்டானாய் நின்றான்; சர்வேஸ்வரனைத் தாம்நியமிக்கமாட்டாரோ தம்முடைய பாரதந்த்ர்யத்தாலே; இப்படி தம்பக்கலிலே அபிநிவேசாதிசயத்தைப் பண்ணுகிறவனுடைய மேன்மையையும், அப்படிப்பட்ட மேன்மையையுடையவன் தம்பக்கல் பரதந்த்ரனாய்த் தாழநிற்கிறபடியையுமநுசந்தித்து, இது தனக்கு சாத்துணையாக சம்சாரிகளைப் பார்த்தவிடத்து, அவர்கள் சப்தாதிவிஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணிபோந்திருந்தார்கள், அவன் றன்னைப்பார்த்தவிடத்தில், அபிநிவேசாதிசயத்தையுடையனாய் முன்னடிதோற்றாதே யிருக்கிறவனாகையாலே அவனிதுக்காளாகமாட்டிற்றிலன், இனி இவ்விஷயீகாரத்துக் கிலக்கான தாமும் தம்மோடேன்கேடான நெஞ்சுமேயாயிருந்தது, அந்நெஞ்சைக்குறித்து, "அவனுடைய மேன்மையிருந்தபடியும், அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் தாழநின்ற நிலையும், நாம்பெற்றபேற்றின் கனமிருந்தபடியுமெல்லாம் கண்டாயே!, நம்கார்யம் விழுந்தபடிகண்டாயே!" என்று, இத்தைத் தந்திருவுள்ளத்தோடேகூட்டி யினியராகிறார். இதுக்கு முன்பெல்லாம், "சர்வேஸ்வரனாகிறான், சர்வநியந்தாவாய் ஸ்வதந்த்ரனாயிருப்பானொருவனென்றிருந்தார்; இப்போது, அங்ஙனல்ல, ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபமென்கிறார். முன்பெல்லாம், தம்மாலே பாரதந்த்ர்யத்தை யிழந்தார்; இப்போது, அவனாலே பாரதந்த்ர்யத்தை யிழக்கிறார். அதுதான் * இருத்தும் வியந்திலே சொல்லிற்றில்லையோவென்னில்; அதிலிதுக்கு வாசியுண்டு - "அடியார்தம்மடியனேன்" என்று ஹேதுவோடே அநுசந்திக்கிறார்.................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அருள்பெறுவார் ப்ரவேஶே, பேடிகாசங்கதி ( பொய்ந்நின்றவித்யாதி ) ( இது தொடங்கி ) " * முனியேநான்முகனளவும்" என்றுகூட்டுவது.

கீழ்த்திருவாய்மொழியோ டிதுக்குசங்கதி ( இப்படிபக்தீத்யாதி ) "விளாகின்றான்" என்றத்தைப்பற்ற ( த்வராமிக்கதென்றது ) தங்குவேட்டை - பரஸ்தாநம். த்வரா அதிசயிக்கைக்கு ஹேதுவேதென்ன ( இவரளவித்யாதி ) இதுக்கு ப்ரமாணம் ( நஜீவேயமித்யாதி ) "[Grantha script] [Grantha script]" ( சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸம்தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம் ) இதி சுந்தரகாண்டேராம:

" என்னில் முன்னம்பாரித்து " என்னக்கடவதிறே. த்வராமிக்கால் கொடுபோகவொண்ணாதோ, விளம்பிக்கிறதென்னென்ன ( ஆழ்வாருமித்யாதி ) " நமது

விதிவகையே " என்றத்தைப்பற்ற ( இவர்க்கு பரதந்த்ரனுயென்றது ) அவனப்படியிருந்தா லிவரநுமதிபண்ணவொண்ணுதோவென்ன ( சர்வேஶ்வரனையித்யாதி ) இப்படி அவன் பரதந்த்ரனுய்த் தாழநிற்கிறபடியைத் தாமேயநுபவியாதே நெஞ்சுக்குச்சொல்லுவரனென்னென்ன ( இப்படி தம்பக்கலிலேயித்யாதி ) அபிநிவேசாதிசயத்தைப்பண்ணுகிறவென்றது - " குடிகொண்டான் - மெய்நின்றுகமழும் " " நீலமேனியான் " பேரான் " இத்யாதியைப்பற்ற. மேன்மையையுமென்றது - " ஆழியான், " " கைநின்றசக்கரத்தன், " " புள்ளூர்தி " இத்யாதியைப்பற்ற. " அதுநமதுவிதிவகையே " என்றத்தைப்பற்ற ( பரதந்த்ரனுய்த் தாழநிற்கிறபடியையுமென்றது ) பாட்டுக்கள் தோறும் திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறதுக்கு ஹேதுவருளிச்செய்கிறுர் ( இதுதனக்கித்யாதி ) இது தனக்கு - இவ்வநுசந்தாநந் தனக்கு. " நாட்டாரோடியல்வொழிந்து " என்றத்தைப்பற்ற (சம்சாரிகளையித்யாதி) பணிபேசிநிருந்தார்கள் - அதுவே யாத்ரையாயிருந்தார்கள். உடன்கேடான - சுகதுஃகங்களுக்குடன்வந்தியான. " நாராயணனை - நண்ணிநம், " பெறுதபயன்பெறுமாறு, " காட்டித்தன்கனைகழல்கள் " இத்யாதியைப்பற்ற ( பெற்றபேற்றின்கனமிருந்தபடியுமென்றது ) மேல்வாக்யவிவரணம் ( நம்கார்யமித்யாதி ) கூட்டியென்றது - அநுசந்தித்தென்றபடி.

" பொய்ந்நின்றஞானம் " என்கிற பேடிகாசங்கதிவாக்யவிவரணம் ( இதுக்குமுன்பெல்லாமித்யாதி ) * பொய்ந்நின்றஞானந்தொடங்கி யித்திருவாய்மொழிக்கு முன்பெல்லாமென்றபடி. ப்ரசங்காத்ரசோக்தி ( முன்பெல்லாமித்யாதி ) * மயர்வறமதிநலமருளுகைக்கு முன்பெல்லாமென்றபடி. அதுதான் - அந்தப்பாரதந்த்ர்யந்தானென்றபடி. வாசியேதென்ன ( அடியாரித்யாதி ) பாகவதசேஷத்வமாகிற ஹேதுவோடே யநுசந்திக்கிறுரென்றபடி. அதாவது - தாம் ததீயபர்யந்தமான சேஷத்வத்திலே நிற்கையாலே அவன் பரதந்த்ரனுனென்று அந்தஹேதுவோடே யநுசந்திக்கிறுரென்றபடி..............................................................................*

---

## ஆறுந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்காழியா
னருட்டருவானமைகின்றுனதுநமதுவிதிவகையே
யிருட்டருமாஞாலத்துளினிப்பிறவியான்வேண்டேன்
மருளொழிநீமடநெஞ்சேவாட்டாற்றானடிவணங்கே.

### ஆறுயிரப்படி.

எம்பெருமான் றன்னருள் சூடுமடியரான வடியார்க்கடியேனு யிருக்குமிதுவே படியாயிருந்த வெனக்கு, ஆழியான் நிரவதிக சம்ருத்தியைத் தருகையிலே சமைந்திராநின்றுன்; அதுவும் நான் சொன்னபடியே செய்தருளக்கட்வனு யிராநின்றுன்; ஆனபின்பு, இனி இந்த சம்சாரத்தை நான்வேண்டேன், நீயுமிந்த சம்சாரத்தைவிட்டு அவன் நமக்குத் தந்தருளுகிற தன்றிருவடிகளாகிற சம்ருத்தியைக் கைக்கொண்டு 'அந்த

சம்ருத்தியை யநுபவியென்று, தம்முடைய நெஞ்சைக்குறித்தருளிச் செய்கிறார்........................................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், தன்விஷயத்தில் சேஷத்வகாஷ்ட்டையையுடைய நமக்கு நிரவதிகோபகாரத்தைப் பண்ணுவதாக வுத்யோகியாநின்றான், அதுதானும் நாம் நியமித்தபடியே செய்வானுமிராநின்றானென்று, நெஞ்சைக்குறித்தருளிச்செய்கிறார்.

அருள் - தன்னுடைய நிரவதிக ப்ரஸாதத்தை. பெறுவார் - பெறுகையை நிருபகமாகவுடையராய். அடியார்தம் - அதுக்கடியான சேஷத்வஜ்ஞாநத்தையுடையார்க்கு. அடியனேற்கு - அசாதாரண சேஷபூதனுமிருக்கிற வெனக்கு. ஆழியான்- திருவாழியாழ்வானைக் கைவிடாதாப்போலே. அருள் - ஸ்வவிஷயமான பூர்வாநுபவருப மஹோபகாரத்தை. தருவான் - பண்ணுவானாக. அமைகின்றான் - உத்யுக்தனுமிராநின்றான். அது-அது. ஸ்வதந்த்ரனான தான் நினைத்தபடி செய்கையன்றியே, நமது விதிவகையே - புருஷார்த்தமாகையாலே நாம் விதித்த ப்ரகாரத்திலே யாகாநின்றது. ஆனபின்பு, இருள் தரு - அஜ்ஞாநாபாதகமாயிருக்கிற. மா - பெரிய. ஞாலத்துள் - ஜகத்தில். இனி - இவனுடைய விஷயீகாரம் பெற்றபின்பு. பிறவி - "இழிபட்டோடு முடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று." என்கிறபடியே பகவத்பாகவதாநுபவ ப்ரீத்யர்த்தமாகவும் பிறக்கையை, யான் வேண்டேன் - அவனினைவறிந்த நான் இச்சிக்கிறிலேன். மடம் - பற்றிற்று விடமாட்டாத சபலமான. நெஞ்சே - நெஞ்சே. மருள் - "அவனினைவொழிய நாம் நினைத்தபடி அர்ச்சாவதாராத்யநுபவம் பண்ணவேணும்" என்கிற ஸ்வதந்த்ராபிசந்திருபமான வறிவுகேட்டை. நீ - நீ. ஒழி - தவிரப்பார். தவிர்ந்தமைதோன்ற, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே நமக்கு பலப்ரதனாய்க்கொண்டுவந்து நிற்கிறவன். அடி - திருவடிகளை. வணங்கு - உன் ஐகமத்யத்தாலே வணங்கப்பார்.......................................*

## ஈடு - முதற்பாட்டு.

ஈஶ்வரன் நம்மை விஷயீகரிக்கையிலே யொருப்படாநின்றான், அது தானும் நாம் விதித்தபடி செய்வானுமிராநின்றானென்கிறார்.

(அருள்பெறுவாரடியார்தம் மடியனேற்கு) ஹேதுத்தானிருக்கிறபடி. சர்வேஶ்வரன் பண்ணும் ப்ரசாதாதிசயத்துக்கு விஷயபூதராயிருப்பார் சிலருண்டு, அவர்கள் நமக்கு ஸ்வாமிகள். அவர்கள் பக்கலிலேயவன் பண்ணின வருள் நம்மளவும் வர வெள்ளங்கோத்ததுகாணென்கிறார். "தாநஹம்த்விஷதஃ" (தாநஹம்த்விஷதஃ) என்று ப்ரஜை தீம்பிலே கைவளர்ந்தால் மாற்றைக்கொண்டு "வாய் வாய்" என்பானைப்போலே, அவன்றான் சீறவேண்டும்படி யிருப்பார் சிலருண்டு, அவர்களைப்போலன்றியே, "ததாமி" (ததாமி) என்று அவனுடைய வருளுக்கு விஷயபூதராயிருப்பார் சிலருண்டு, அவர்கள் பக்கல் பண்ணுமருளை நம்பக்கலிலே பண்ணினான். ராஜாவுக்குப்புறம்பு ஒருமுறையிலே செல்லாநின்றாலும், தன்னைஸ்வர்யத்தையும் கொடுத்துத் தன்னுடம்பையுங் கொடுக்குமிறே மஹிஷீவிஷயத்தில்; அப்படியே அவன் தன்னை முற்றூட்டாகக்கொடுத்

தநுபவிப்பித்துத் தான் பாதந்த்ரனும்படி யிருப்பார் சிலருண்டு, அவர்கள் பக்கல் பண்ணுமருளை யென்பக்கலிலே பண்ணினான். (அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்கு) இருவர்க்கும் நிருபகமிருக்கிறபடி. இவர் அருள்பெறுவாரடியார் தம்மடியார், அவன் ஆழியான்; இருவர்க்கும் நிருபகர் ததியரோகாணும். (அடியனேற்கு) "விடுமாறென்பதென்" என்றும் "நீக்கமில்லாவடியார் தம்மடியா ரடியாரடியா ரெங்கோக்கள்" என்றும் "தமர்கள்தமர்கள் தமர்களாம் சதிரேவாய்க்க" என்றும் நான் சொன்ன அவ்வார்த்தையையே நினைத்திருந்தான்காணவன் "அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான்" என்கிறபடியே இத்தையேயாய்த் திவர் தமக்கு ஸ்வரூபமாக நினைத்திருப்பது. (ஆழியானருள்தருவா னமைகின்றான்) சர்வேஸ்வரன் நம்பக்கலில் முழுநோக்காக நோக்கி ப்ரஸாதாதிசயத்தைப் பண்ணுவானாகப் பாரியாநின்றான் திருவாழியை யொருகண்ணாலே பார்ப்பது, இவரை யொருகண்ணாலே பார்ப்பதாகாநின்றான் – "விடலில் சக்கரத் தண்ணலைமேவல்விடலில்" என்கிறபடியே கையில் திருவாழியை விடிலன்றோ உம்மைவிடுவதென்னாநின்றான். (ஆழியான்) அவர்களையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படியாய்த்திருப்பது. "ஃஸ்மாஹிஸ்துல்யோ ஹவத" (அஸ்மாபிஸ்துல்யோபவது) என்று அவர்களெல்லார்பக்கலிலும் பண்ணுமருளை யென்னொருவன் பக்கலிலும் பண்ணாநின்றான். அவர்கள் அருள்பெறுவாரடியாரான வடியாராய்த்து, இவனும் அருள்தருவானமைகின்றானாய்த்து. (அமைகின்றான்) பாதிசம்வாதம் குறையற்றது. அருளைக் குறையறத் தருவதாகப் பாரியாநின்றான்.

அவன் ப்ரசாதாதிசயத்தைப் பண்ணுவதாகப் பாரியாநின்றானாகில் அவன்றான் சர்வேஸ்வரனாகில் பின்னைக் கண்ணழிவென்னென்னில் (அது நமது விதிவகையே) அது செய்யுமிடத்தில் நான் சொன்னபடி செய்தானாகவேண்டி யிராநின்றான். (அது நமது விதிவகையே) "அது நம்முடைய பாக்யாநுகுணமாகவிறே" என்று இதுக்குப்பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி. இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது, நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தானென்கிறான்" என்றருளிச்செய்வர். "ஃஹம்ஸவ-ஹ்ஂகரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்று பாரித்துப்போந்தவர்தாமே "க்ரியதாமிதிமாம்வத" (க்ரியதாமிதிமாம்வத) என்னப் பார்த்திருந்தாப்போலே, இவர் சொன்னபடி செய்வானாயிராநின்றான் "நமது சொல்வகையே" என்னாதே, (விதிவகையே) என்பானென்னென்னில்; வித்யதிக்ரமத்தில் ப்ரத்யவாயத்துக் கஞ்சுவாரைப்போலே அஞ்சாநின்றான் தான் நினைத்தபடி செய்கைக்கு. தன்பக்கல் குறைவற்றாலும் இத்தலையிலிச்சையொழியக் கொடுபோகானே அவன்; புருஷோத்தமன் அபும்ஸ்த்வம் வரும்படி செய்யானே. (நமது விதிவகையே) [த஥ாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:] [ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:] "இது பட்டர்தாமே யருளிச்

செய்ய நான் கேட்டேன்'' என்றருளிச்செய்தார். சேனைமுதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய்வந்து புகுரப்புக்கவாறே, நாய்ச்சிமாருந்தானுமாய் ஸ்வைரமாகவிருக்கிறவதுதவிர்ந்து நாய்ச்சிமாரும் சிம்ஹாஸநத்தி லொரு மூலைகளிலே யொதுங்க தானும் சவிநயமாக விருக்குமாய்த்து, வ்ருத்தசாமந்தரைக்கண்ட ராஜாக்களைப்போலே. "இவர் தாமு மிவ்விருப்புக்குத் தண்ணீர்த்துரும்பாக வொண்ணுது" என்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டுமவற்றைப் பாசுரப்பரப்பற விண்ணப்பஞ்செய்வராய்த்து. பிராட்டிமாரோடிருக்கு மதிலு மினிதாயிருக்குமிறே அவனுக்கிவர்தம்மைக்காண; * ப்ரியேணவிறே. "இன்னானை ப்ரஹ்மாவாக்க வேணும், இன்னானை மாற்றவேணும்'' என்று வேண்டுமவற்றைச் சுருங்க விண்ணப்பஞ்செய்வர்; "ஐயர் யாதொன்று சொல்லிற்று அவையெல்லாமப்படியே'' என்று கண்களாலே மேலெழுத்திட்டுக்கொடுக்கும். இவ்வார்த்தை யருளிச்செய்தபோது, கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு வாசியறக் குமிழிநீருண்டது; ஆச்சான்முன் பட்டர்க்கு ஸ்நேஹித்திருக்கும்போர· இளையாழ்வான், ஆச்சானை "பட்டர்தம்மை யாப்ரயித்தவர்களிற்காட்டிலும் நீர்தாழ அநுவர்த்திப்பானென்'' என்று கேட்க, "நீ அன்று கண்டிலைகாண், எம்பெருமானார் பட்டர்கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே யொரு ஸ்லோகத்தை விண்ணப்பம் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக்கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி, 'நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள்' என்றருளிச்செய்தார்.''

அருளுகிறான் சர்வேச்வரனாகில் அதுதான் நாம் விதித்தபடி செய்வானாயிருந்தானாகில் இனிக் கண்ணழிவென்னென்ன (இருளிதயாதி) இனி, நீயுமிசையு மித்தனையே வேண்டுவது, இதுவே கண்ணழிவு. நானவன்வழியே போவதாகப்பார்த்தேன், நீயுமவன்வழியே போகப்பாராய்· உமக்குத்தானவன்வழி போகவேண்டுகிற தென்னென்ன; இருள்தருமாஞாலமாயிருந்ததே. சம்சாரமாகிறது இருக்கவிருக்க அஜ்ஞாநத்தைத்தருவதொன்றாய்த்து; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையுமிறே யெதிரிட்டபண்ணிற்று. (இனி) "வானுயரின்பமெய்திலென் மற்றைநரகமேயெய்திலென்'' என்று நினைத்திருந்ததொரு ப்ரமமுண்டுமுன்பு, இப்போததுதவிர்ந்தேன். அது தவிரவேண்டுவானென்னென்னில்; ஸ்ரீவைஷ்ணவ சஹவாசத்துக் குடலாயிருக்கையாலும் உகந்தருளின நிலங்களிலுண்டான வாதராதிசயத்தாலுமாக, "அங்கேயிருக்கிலென், இங்கேயிருக்கிலென்'' என்று அவனெல்லைக்குள்ளே கிடக்குமத்தனையன்றோ வேண்டுவதென்றிருந்தோம், அதுவேயாகப்பெறுதே, மற்றைப்படிக்குட்லாயிருந்தது. ப்ரக்ருதிவச்யனாக்கி சப்தாதிவிஷயங்களிலே கொடுபோய் மூட்டும் சம்சாரஸ்வபாவத்தை யநுசந்தித்தபின்பு விடுவதாகவே துணிந்தேன்.

(யான்வேண்டேன்) என்புத்தியால் விட்டேன், அவனிருத்தில் செய்யலாவதில்லை.

ஆனுல் செய்யவேண்டுவதென்னென்ன ( மருளொழிநீ ) உன்னதொருநினைவுண்டு, அத்தைத்தவிரப்பார். "தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்ருல் - திருவாறன்விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனை," என்று விரோதிகழிந்து போம்வழியெல்லாம்போய், இது பரமபதத்துக்குப் போம்வழி, இது திருவாறன்விளைக்குப்போம்வழி" என்ருல் "ப்ராப்யவஸ்துத்தானிங்கேவந்து கிட்டிற்ருகில் இனி இங்கே யடிமைசெய்ய வமையாதோ" என்று ப்ரமித்திருப்பதொன்றுண்டு, அத்தைத்தவிரப்பார். மருளென்று - அறிவின்மைக்குப்பேர். ( மடநெஞ்சே ) "உத்தேஶ்யவஸ்து சந்நிஹிதமாய்த்தது" என்று இத்தையேபார்க்கிருயித்தனைபோக்கி, நம்மையும் பார்க்கவேண்டாவோ.

( வாட்டாற்ருனடிவணங்கே ) நமக்கு ஹிதகாமனுய்வந்திருக்கிறவன்வழியேபோய் அவனை யநுபவிக்கப்பாராய். உகந்தருளினநிலங்களிலே வந்துநிற்கிறது நம்மை அவ்வருகே கொடுபோகைக்காயிருக்கும், நீயுமவனினைவிலே போகப்பாராய். ( அடிவணங்கே ) அடிவணங்குகையாவது - ஈரரசுதவிருகையிறே.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( அருள்பெறுவாரித்யாதி. ) பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( ஈஶ்வரனித்யாதி. )

ப்ரவேஶத்திலே "ஹேதுவோடே" என்றத்தைக்காட்டுகிருர் ( ஹேதுத்தானித்யாதி. ) அதாவது - அடியார்தம்மடியனுகையாலே நமதுவிதிவகையே அருள்தருவானமைகின்ருனென்றபடி. சப்தார்த்தம் ( சர்வேஶ்வரனித்யாதி. ) "ஹேதுத்தானிருக்கிறபடி" என்றத்தால் பலிதம் ( அவர்கள்பக்கலித்யாதி. ) "அடியார்தம்" என்ன "அருள்பெறுவார்" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( தாநஹமித்யாதி ) "தாநஹம்த்விஷதஃக்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ர மஶுபாநா ஸுரீஷ்வேவயோநிஷு," (தாநஹம்த்விஷதஃக்ரூராந் ஸம்ஸாரேஷுநராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ர மஶுபாநா ஸுரீஷ்வேவயோநிஷு,) "தேஷாம்ஸததயுக்தாநாம் பஜதாம்ப்ரீதிபூர்வகம் । ததாமிபுத்தியோகந்தம் யேநமாமுபயாந்திதே" (தேஷாம்ஸததயுக்தாநாம் பஜதாம்ப்ரீதிபூர்வகம் । ததாமிபுத்தியோகந்தம் யேநமாமுபயாந்திதே ) இதி கீதாசு. "அருள்பெறுவாரடியார்தம்மடியனேன்" என்றதுக்கு - அவர்கள்பக்கலநுக்ரஹம் நம்மளவும் வெள்ளமிட்டதென்னுதல், அவர்களெல்லாரிடத்திலும் பண்ணு மநுக்ரஹத்தை நம்மிடத்திலே பண்ணிஞனென்னுதலென்று பாவத்வயம். "அருள்" என்றதுக்கு - க்ருபையென்றருளிச்செய்து, கொடை என்றர்த்தாந்தரம் ( ராஜாவுக்கித்யாதி. ) "ஆழியான்" என்றத்தையும் கூட்டி பதச்சேர்த்திக்கு பாவம் ( இருவர்க்குமித்யாதி. ) இதுக்கு சப்தநிர்வாஹம் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிருர் ( இவரித்யா

திவாக்யத்ரயத்தாலே.) உம்மை அடியார்தம்மடியாராக வவனறிந்தபடி யெங்ஙனேயென்ன (விடுமொறித்யாதி.) இவர்தாம் தம்மை அடியார்தம்மடியனுக நினைத்திருப்பரோவென்ன (அடிகளடியேயித்யாதி) திருக்கட்டல்மல்லையிலே கண்வளர்ந்தருளுகிற சர்வஸ்வாமியுடைய திருவடிகளையே யநுசந்திக்கும் சேஷபூதர்க்கு சேஷபூதரானவரித்யர்த்தః. திருமொழி இரண்டாம்பத்து ஆறுந்திருமொழி பத்தாம் பாட்டு, "கடிகமழும்" இத்யாதி.

ததியனையிட்டு நிருபிக்கும்படி யிருக்கும் என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, "அருள்தருவானமைகின்றுன்" என்றதுக்கு மர்த்தமருளிச்செய்கிறுர் (சர்வேஶ்வரனித்யாதி.) "ஆழியான்" என்றதுக் கிரண்டாம்பாவம் (திருவாழியையித்யாதி.) ஏதத்விவரணம் (விடலிலித்யாதி.) இருவர்க்கும் நிருபகமென்ற முந்தினபாவவிவரணம் (அவர்களையிட்டித்யாதி.) "அடியார், அடியனேற்கு" என்ற பஹுவசநைகவசநங்களுக்கு பாவம் (அஸ்மாபிரித்யாதி.) அதாவது - எங்களெல்லாரிடத்திலு முண்டான தேவர்க்ருபைக்கு விபீஷண னொருவனுமே விஷயமாகக்கடவனென்று - "[illegible]" (அஸ்மாபிஸ்துல்யோபவது) என்றதுக்குக் கருத்து. "[illegible]" (தஸ்மாத்க்ஷிப்ரம்ஸஹாஸ்மாபிஸ் துல்யோபவதுராகவ। விபீஷணோமஹாப்ராஜ்ஞஸ் ஸகித்வம்சாப்யுபைதுநஃ) இதியுத்தகாண்டே சுக்ரீவః. அடியாருடையவு மவனுடையவும் அந்யோந்யமாநுரூப்யத்தை யருளிச்செய்கிறுர் (அவர்களித்யாதி.)

"அமைகின்றுன்" என்றவநந்தரம் "அதுநமதுவிதிவகையே" என்றத்தால்பலிதம் (பாதியித்யாதி.) பாதிசம்வாதம் குறையற்றதென்றது - அவனுடைய பாரிப்புமாத்ரமேயாய் இவருடைய வநுமதியில்லாமை யிருக்கையன்றிக்கே இவரும் சம்மதிக்கப் பெற்றதென்றபடி. சம்வாதம் - சம்மதி. "அமைகின்றுன்" என்றதுக்குவாஸநை (அருளையித்யாதி.)

கண்ணழிவென்னென்னிலென்றது - அவனுக்குக் கண்ணழி வென்னென்னிலென்றபடி. கண்ணழிவு - விளம்பமும், குறையும். "அதுநமது" இத்யாதிக் கர்த்தம் (அதுசெய்யுமிடத்திலித்யாதி.) நமது விதிவகையே - நம்முடைய நியமநப்ரகாரத்திலேயென்றபடி. முந்தினவர்த்தத்துக்கு, "விதிவகையே" என்ற ஏகாரம் தேற்றத்திலே; இரண்டாமர்த்தத்துக்கு, ஸ்வரத்திலே. ஸ்வோக்தார்த்தத்துக்கு சம்வாதம் (அதுநம்முடையவித்யாதிவாக்யத்வயம்.) கீழ்வாக்யத்தை சத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறுர் (அஹம்ஸர்வமித்யாதி.) "விதி" என்றதுக்கு பாவம் (நமது சொல்லித்யாதி.) தான் நினைத்தபடி செய்கைக்கு - தான் ஸ்வதந்த்ரனுய் நினைத்தபடி செய்கைக்கென்றபடி. கீழ் ப்ரணயித்வத்தாலே இவர் நியமித்தபடி செய்வானுயிருந்தானென்றருளிச்செய்து, தத்த்வஸ்த்திதியினு மித்தலையி லிசைவும் வேணுமென்கிறுர் (தன்பக்கலித்யாதி) புருஷார்த்தமாகைக்காக வென்றபடி. இசைந்தே கொடுபோகவேணுமென்கிற நிர்ப்பந்தமேதென்ன (புருஷோத்தமனித்யாதி;) யத்வா, இதுவுமொருஹேதுவாதல். அதாவது - அர்த்தியாதே கொடுத்தா லவன்வைலக்ஷண்யத்துக்குக் கொத்தையாமென்று கருத்து.

அப்படி யாஶ்ரிதர்க்கு பரதந்த்ரனுயிருக்குமோவென்ன (ததாநுஜாநந்தமித்யாதி) ஸ்தோத்ரே, "[illegible]

ஸ்ருஷ்டாத்மபரேண யத்யதா । ப்ரியேண ஸேநாபதிநா ந்யவேதி தத்ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:." (த்வதீயபுக்தோஜ்ஜிதஸேஷபோஜிநா த்வயாநிஸ்ருஷ்டாத்மபரேண யத்யதா । ப்ரியேண ஸேநாபதிநாந்யவேதி தத்ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:.) இஸ்ஸ்லோகார்த்தத்தை ஆப்தசம்வாதத்தாலே தர்ஸிப்பிக்கிறார் (இதுக்குபட்டர்தாமேயித்யாதி.) (அருளிச்செய்தார்) நஞ்சீயரென்றபடி. சர்வேஸ்வரன் தன்னுடைய ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையெல்லா மிவர்பக்கலிலே வைத்து, தானும் பிராட்டிமாருமாக விருக்கிறவளவிலே இவரறிவித்தத்தைத் திருக்கண்களாலே யநுமதிபண்ணுவனென்றிறே யிஸ்ஸ்லோகத்துக்குக் கருத்து. இவரங்கே போகைக்கு ஹேதுவையும், இவரங்குப்போனால் இவரைக்காண்கை யுகப்பாகையாலே போகவிக்நமாகாதென்னுமத்தையும், "யத்யதா" (யத்யதா) என்று ஏகவசநமாக வருளிச்செய்கைக்கு ஹேதுவையு மருளிச்செய்கிறார் (சேனைமுதலியாரித்யாதி.) சட்டை - சொக்காய். "வ்ருத்தசாமந்தர்" என்கிறவிது - போகைக்கு ஹேது. யாநி என்னாதே, "யத்" என்று ஏகவசநமாகையாலே (பாசுரப்பரப்பற வென்றது.) பாசுரப்பரப்பற விண்ணப்பம்செய்கைக்கு ஹேது (இவர்தாமுமித்யாதி வாக்யம்.) (வ்ருத்தசாமந்தரைக்கண்ட ராஜாக்களைப்போலே) என்கிறவிடத்திலே, "வானிளவரசு" "விண்ணாட்டவர்மூதுவர்" என்றத்தை நினைப்பது. இவர் வைச்யத்தாலே தண்ணீர்த்துரும்பாகாமல் பாசுரப்பரப்பறச் சொன்னாலு மவனிவனைக் கண்டா லிருக்கும்படி யென்னென்ன (பிராட்டிமாரோடித்யாதி.) இதுக்கு நியாமகமேதென்ன (ப்ரியேணவிறேயென்று.) "பாசுரப்பரப்பற விண்ணப்பம்செய்வர்" என்றதின் விவரணம் (இன்னானையித்யாதி.) "உதாரவீக்ஷணை:-தததாநுஜாநந்தம்" (உதாரவீக்ஷணை: - தததாநுஜாநந்தம்) என்றதுக்கு, "வ்ருத்தசாமந்தரைக்கண்ட" இத்யாதிக் கநுகுணமாக பாவம் (ஐயரித்யாதி.) கிடாம்பியாச்சானோடு - இவர்க்குத்தேஸ்யரான கிடாம்பியாச்சானோடென்றபடி. அல்லாதாரோடு- பட்டர் சிஷ்யர்களான வல்லாதாரோடென்றபடி. குமிழிநீருண்டது - ஆழங்காற்பட்டார்களென்றபடி. ப்ராசங்கிகம் (ஆச்சான்றனித்யாதி.) (போர - ஸ்நேஹித்திருக்கும்) என்றந்வயிப்பது. பட்டர்தம்மை - பட்டரை யென்றபடி. (இளையாழ்வான் - ஆச்சானைகேட்க) என்றந்வயிப்பது. இளையாழ்வானென்கிறவர் - ஆச்சானுடைய சிஷ்யர். அதுக்காச்சான்வார்த்தை (நீயன்றித்யாதி.) (அருளிச்செய்தார்- எம்பெருமானார்) என்றந்வயிப்பது. "ஆகையாலே ஸ்நேஹித்திருப்பேன்" என்று கூட்டுவது.

மேலுக்கெல்லாமவதாரிகை (அருளுகிறானித்யாதி.) இதுக்குபாவம் (இனி நீயுமித்யாதி;) இந்தபாவம் "மருளொழிநீமடநெஞ்சே" என்னுமளவும் கடாக்ஷித்து. விவரணம் (நானவனித்யாதி.) "பிறவியான்வேண்டேன்" என்னாதே "இருள்தருமாஞாலம்" என்று விசேஷிக்கிறதுக்குபாவம் (உமக்குத்தானித்யாதி.) அஜ்ஞர்க்கொழிய ஜ்ஞாநாதிகர்க்கும் இருள்தருமோவென்ன (ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையுமித்யாதி.)

"இனி" என்றதுக்கு பாவம் (வானுயரித்யாதி வாக்யத்வயம்.) அதுதவிரவேண்டுவா னென்னென்னிலென்றது - அப்போதப்படி நினைத்திருந்து இப்போதத்தைத் தவிரவேண்டுவானென்னென்னி லென்றபடி. அதுவே - வைஷ்ணவசஹவாஸாதியே. மற்றைப்படிக்கு - விஷயப்ராவண்யத்துக்கு. "மற்றைப்படிக்கு" என்றத்தை விவரிக்கிறாராதல், * இனி சப்தத்துக்கர்த்தமாதல் (ப்ரக்ருதீத்யாதி.)

"யான்" என்றதுக்கு பாவம் (என்புத்தியாலித்யாதி.)

அதேதென்ன (தீவினையித்யாதி.) மருளொழி - உகந்தருளின நிலங்களில் ப்ராவண்யத்தைவிடு.

மடப்பம் - பற்றிற்று விடாமையாக பாவம் (உத்தேஸ்யவஸ்துவித்யாதி.) நம்மையும் பார்க்கவேண்டாவோ - அஜ்ஞாநாவஹமான சம்சாரத்திலிருக்கிற நம்மையும் பார்க்கவேண்டாவோ வென்றபடி.

"மருளொழிநீ" என்றுவைத்து, "வாட்டாற்றானடிவணங்கு" என்றதுக்குக் கருத்தேதென்ன (நமக்கித்யாதி.) அதாவது - நம்மைக் கொடுபோகவந்தவனைப் பின்செல்லப் பாராயென்றபடி. ஏதத்விவரணம் (உகந்தருளினவித்யாதி.) "அடிவணங்கு" என்றால் அவன்னிலைவிலே போகையைச் சொல்லுமோவென்ன (அடிவணங்குகையித்யாதி.) ........................................................*

# இரண்டாம்பாட்டு.

வாட்டாற்றானடிவணங்கிமாஞாலப்பிறப்பறுப்பான்
கேட்டாயேமடநெஞ்சேகேசவனெம்பெருமானைப்
பாட்டாயபலபாடிப்பழவினைகள்பற்றறுத்து
நாட்டாரோடியல்வொழிந்துநாரணனைநண்ணினமே.

## ஆறாயிரப்படி.

(வாட்டாற்றான்) வாட்டாற்றானுடைய திருவடிகளை யநுபவித்துக்கொண்டு, ப்ரதிபந்தகத்தைப்போக்குகைக்காக வவனையபேக்ஷித்தும், அபேக்ஷித்தபடியே ப்ரதிபந்தகத்தைப்போக்கி, அங்கபாநாதி தாரகராயிருந்த நாட்டாருடைய ப்ரஸ்த்தாநத்தையொழிந்து, பகவதேகதாரணராய், அவனைவந்து ப்ராபிக்கப்பெற்றோமே, நெஞ்சே, நமக்குவிளைந்த சம்ருத்திகண்டாயே யென்கிறார் ....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரோபகாரகனாய் நிருபாதிகபந்துவானவனை நாம் கிட்டப்பெற்றபடிகண்டாயே! என்று பூர்வோபகார பரம்பரையை ஸ்மரிப்பிக்கிறார்.

மாஞாலம்-மஹாப்ருதிவியிலேயுண்டான. பிறப்பு - ஜந்மஸம்பந்தத்தை. அறுப்பான்-அறுக்கைக்காக. வாட்டாற்றான்-திருவாட்டாற்றிலே ஆஸ்ரிதசுலபனானவனுடைய. அடிவணங்கி-திருவடிகளை ஆஸ்ரயித்து. கேசவன் - போகப்ரதிபந்தகமான கேசியைநிரசித்தவனாய். எம்பெருமானை-அப்படி நம்முடையவிரோதியையும்போக்கி யடிமைகொண்டவனை. பலபாட்டாய - பஹுவிதமான கீதங்களானவற்றை. பாடி-பாடுகையாகிற கைங்கர்யத்தைப்பண்ணி. பழவினைகள் - அநாதியான அவித்யா கர்மாதிகளை. பற்றறுத்து-சவாஸநமாகவறுத்து. நாட்டாரோடு-அஹங்காராதிதூஷிதரான லௌகிகரோடு. இயல்வு-ஸஹவாஸத்தையும். ஒழிந்து-தவிர்ந்து. நாரணனை-நிருபாதிகபந்துவாய்க்கொண்டு இன்று பலப்ரதாநோத்யுக்தனான நாராயணனை. நண்ணினம்-கிட்டப்பெற்றோம். மடம்-என்னோடேடன்பட்டு பவ்யமான. நெஞ்சே-நெஞ்சே. கேட்டாயே-இவ்வுபகாரபரம்பரைகளிருந்தபடிகேட்டாயே .....................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

"விதிவகையே" என்று - கேவலபகவத்க்ருபையாலே வந்ததாகச்சொல்லுகிறதென், அடியிலே "இங்கின்றநீர்மையினியாமுறுமை" என்றிலோமோநாமென்ன; நாம் அபேக்ஷித்தவளவோ பெற்றதென்கிறார்.

மாஞாலப்பிறப்பறுப்பான் - வாட்டாற்றானடிவணங்கி - கேசவனெம்பெருமானைப் பாட்டாயபலபாடிப் பழவினைகள் பற்றறுத்து நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினம்- கேட்டாயேமடநெஞ்சே. இதெல்லாமவனருளாலேவந்ததாயிருந்ததோ, நாமிரந்துபெற்றதாயிருந்ததோ. விரோதிபோகவேணுமென்னு மிவ்வளவன்றே நாமபேக்ஷித்தது; கெடுவாய், நாமபேக்ஷித்தவளவறிதியே. (மாஞாலப்பிறப்பறுப்பான்-வாட்டாற்றானடிவணங்கி) "சம்சாரசம்பந்தத்தை யறுத்துத்தரவேணும்" என்றன்றே நாம் சர்வேஸ்வரன் றிருவடிகளையாஸ்ரயித்தது. அதுக்குமேலே அவன் நம்மை அடிமையுங்கொண்டான்கண்டாயே. வாசிகமானவடிமையன்றே கொண்டது. (கேசவனெம்பெருமானை) கேசிஹந்தாவான சர்வேஸ்வரனை. கேசியைப்போக்கினாப்போலே நம்விரோதியைப்போக்கி நம்முடைய சேஷத்வத்தை நிலைநிறுத்தி நமக்கு ஸ்வாமியாயுள்ளவனை; அன்றிக்கே, ப்ரஸஸ்தகேசன்; தன்னழகைக்காட்டி நம்மையடிமைகொண்டவனென்றுமாம். அவ்வளவேயோ, (பாட்டாயபலபாடி) * பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவும்படியன்றே நம்மையிடுவித்துக் கவிபாடுவித்துக்கொண்டபடி. "விரோதியைப்போக்கி யடிமைகொள்ளவேணும்" என்று நாமபேக்ஷிக்க, அதுவுங்கிடக்கச்செய்தே அடிமைகொண்டான் கண்டாயே. (பாடிப்பழவினைகள்பற்றறுத்து) நாமடிமைசெய்ய, ப்ராப்தி ப்ரதிபந்தகமாய் அநாதிகாலார்ஜிதமான அவித்யாதிகளெல்லாம் போகப்பெற்றபடிகண்டாயே. இவர்வினையறுக்கக்குடித்த வேப்பங்குடிநீரிதுகாணும். [ம்கஸவம்வெஷ]] [கேஸவம்வைத்யம்] இவன் நெடுநாள்கூட ஈட்டினவிது, சர்வசக்திபோக்கப்புக்கால் ஒருக்காலே போகலாயிருக்குமிறே. (நாட்டாரோடியல்வொழிந்து) * உண்டியேயுடையேயுகந்தோடு மிம்மண்டலத்தாரோடு தொற்றறப்பெற்றபடிகண்டாயே. "யானேயென்றனதே" என்று அஹங்காரமமகார வஸ்யராயிருக்கிறவர்களோடே சம்பந்தமறப்பெற்றோம். "ஒ ஒ வுலகினதியல்வே" "இவையென்ன வுலகியற்கை" "கொடுவுலகங்காட்டேலே" என்னப்பண்ணினபடி கண்டாயே; "உங்களோடெங்களிடையில்லை" என்றுகழிந்தவரிறே. (நாரணனைநண்ணினம்) சோபாதிகபந்துக்களைவிட்டவளவோ, நிருபாதிகபந்துவைப்பற்றவும் பெற்றோம். விட்டவர்கள்தன்னை ஆகாராந்தரத்தாலேபற்றுகிறார்காணும். முக்தனுக்கு ததியத்வாகாரத்தாலே அநுபாவ்யமாகிறதிறேயிதுதான். ஸ்வயம்பாகந்தவிர்ந்து பிதாவோடே யொன்றாகஜீவிப்பாரைப்போலேகாணும். படுக்கைக்கீழே மஹாநிதிகிடக்கப் புறங்

கால்விங்கிச் சாவாரைப்போலேயிறே, நாராயணனுயிருக்கச்செய்தேயும் நண்ணுதிருந்தபடி. (கேட்டாயேமடநெஞ்சே) பெற்றபேற்றின்கனத்தை யநுசந்தித்து, வகாததுவகுத்ததென்று திமிர்த்திருக்கிருயோ, இத்தை யநுபவியாநின்ருயோ; *சௌமித்ரோபுங்க்ஷ்வ, * வைதேஹிரமஸேகச்சி த்போலே.

மாஞாலப்பிறப்பறுப்பான் - கேசவனெம்பெருமானை – வாட்டா ற்றானடிவணங்கி - பாட்டாயபலபாடிப்பழவினைகள் பற்றறுத்து நாட்டா ரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினம் - கேட்டாயே மடநெஞ்சே என்றந்வயம் ....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (வாட்டாற்றானித்யாதி) "விதிவகை" என்றதின் பூர்வர் கள் நிர்வாஹத்திலே அவதாரிகை (விதிவகையேயென்றித்யாதி) இதி-பகவத்க்ருபை யையே சொல்லுகிறது. "அனந்தன்மேல்கிடந்தவெம்புண்ணியா" என்று இவர்க்கு பாக்யமாவது அவனுகையாலே யென்றுகருத்து.

"அபேக்ஷித்தவளவோபெற்றது" என்றதுக்கிடாக வங்வய்மருளிச்செய்கிரு ர் (மாஞாலமித்யாதி) அந்வயாநுகுணமாகபாவம் (இதெல்லாமித்யாதி.)

நாமிருந்ததுதானேதென்ன (விரோதியித்யாதி வாக்யத்வயம்) இவ்வளவே யோ நாமபேக்ஷித்ததென்ன (மாஞாலமித்யாதி) இந்தபதத்வயத்துக்குமர்த்தம் (ச ம்சாரேத்யாதி) "பாட்டாயபலபாடி" என்றதுக்கவதாரிகை (அதுக்குமேலேயித்யா தி) கொண்டவடிமைதானேதென்ன (வாசிகமானவித்யாதி.)

"மாஞாலப்பிறப்பறுப்பான்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிருர் (கேசி யையித்யாதி) நம்விரோதியை-சேஷத்வவிரோதியான ஸ்வாதந்த்ர்யத்தை. இத்தா ல்பலிதம் (தன்னழகையித்யாதி.)

அவ்வளவேயோவென்றது - சேஷத்வத்தினெல்லையிலே நிறுத்தினவளவே யோவென்றபடி. பலபாட்டானவற்றைப் பாடியென்றுசப்தார்த்தம். திருவாய்மொ ழிபாடுவித்தது அதிசயமோவென்ன (பாலேய்தமிழரித்யாதி.)

"பாட்டாயபலபாடி" என்றவநந்தரம் " பழவினைகள்பற்றறுத்து " என்றதுக் குபாவம் (விரோதியையித்யாதி) அதுவும்கிடக்கச்செய்தே-விரோதியும் கிடக்கச்செ ய்தேயென்றபடி. பாடுகைபழவினைகள் பற்றறுக்கைக்கு சாதநமோவென்ன (நாமடி மைசெய்யவித்யாதி) வ்யங்க்யோக்தி (இவர்வினையித்யாதி) வினையைப்போக்குகைக் கவன்வைத்யனோவென்ன (கேசவமித்யாதி) " [Grantha text] " (மேருமந்தரமாத்ரோபி ராஸி:பாபஸ்யகர்மண: । கேஸவம்வைத்யமாஸாத்யதுர்வ் யாதிரிவநஸ்யதி) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. " வினைகள் " என்கிறபஹுவசநத்தைக்க டாக்ஷித்து, வினைகளெல்லாம் பற்றறக்கூடுமோவென்கிற சங்கையிலே "[Grantha text]" (கேஸவம்வைத்யம்) என்கிறதுக்கர்த்தம் (இவன் நெடுநாளித்யாதி) ஈட்டின-திரட்டின.

"இயல்வு" என்றும், தொற்றென்றும்-சம்பந்தம். (உண்டியே) இத்யாதிக்கு-அசாச்சாதநங்களையே ப்ரயோஜநமாகத்திரியு மிம்மண்டலத்தாரொன்று சப்தார்த்தம். பெருமாள்திருமொழி. விவரணம் (யானேயென்றனதேயித்யாதி. ஆனால்சம்பந்தமறப்பெற்றாரோவென்ன (ஓஒஉலகினதித்யாதி) "இதொருலோகத்தினுடையஸ்வபாவமே!" என்று அவர்களிழவுபொறுக்கமாட்டாமை "ஓ!" என்று கூப்பிடுகிறாரென்றபடி. திருவாசிரியம். ப்ரமாணாந்தரம் (உங்களோடித்யாதி)

சப்தாந்தரத்தால் சொல்லாதே, "நாராயணன்" என்று விசேஷிக்கையாலே - ததீயத்வாகாரோ ணோத்தேஸ்யரென்று தோற்றுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (விட்டவர்களித்யாதி.) அதாவது - சரீரசம்பந்தித்வேந த்யஜித்தவர்களை ததீயத்வேந பற்றுகிறாரென்றபடி. அப்படி ததீயத்வாகாரோ ணோத்தேஸ்யமாமோவென்ன (முக்தனுக்கித்யாதி.) * நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்வயம்பாகமித்யாதி.) அதாவது - க்ருஹக்ஷேத்ராதிகளெல்லாம் தன்னதென்று தனியே புஜித்தவன், பிதாவுக் கநுகூலனாய் எல்லா மவனதென்றறிந்து அவனோடேகூட புஜிக்குமாபோலே, தன்னதென்றிருக்கு மது தவிர்ந்து ததீயத்வேநாநுபவிக்கையென்றபடி. நாராயணசப்தத்துக்கு - சர்வாந்தர்யாமித்வத்தை விவக்ஷித்து, இப்படி சுலபனாயிருக்கிறவனைக்கிட்டாதிருக்கிறது இவ்விஷயத்தை யறியாமையாலே யென்னுமத்தை ஸநிதர்ஶநமாக வருளிச்செய்கிறார் (படுக்கைக்கீழேயித்யாதி.)

அருகேயிருக்கிற நெஞ்சை "கேட்டாயே" என்பானென்னென்ன (பெற்றபேற்றினித்யாதி.) வகாதது வகுத்ததென்று - அப்ராப்தமானது ப்ராப்தமாய்த்ததென்று. உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் (ஸௌமித்ரேயித்யாதி) "ஸௌமித்ரே ஹுங்க்ஷ்வ ஹோகாந் ஸ்வஷ்டாநு ராஜ்யஹாநிச। ஜீவிதஞ்சஹிராஜ்யஞ்ச த்வத³ர்த²மபிகாமயே" (ஸௌமித்ரேபுங்க்ஷ்வபோகாம் ஸ்த்வமிஷ்டாந்ராஜ்யபலாநிச। ஜீவிதஞ்சஹிராஜ்யஞ்ச த்வதர்த்தமபிகாமயே) இத்யயோத்யாகாண்டே ராமஃ. தஸ்மிந்நேவ, "வைதேஹிரமஸேகச்சித் சித்ரகூடேமயாஸஹ। பஶ்யந்தீவிவிதாந்பாவாந் மநோவாக்காயஸம்யதாந்." (வைதேஹிரமஸேகச்சிச் சித்ரகூடேமயாஸஹ। பஶ்யந்தீவிவிதாந்பாவாந் மநோவாக்காயஸம்யதாந்.)

"கேசவன்" என்றதுக்கு - ப்ரஶஸ்தகேசனென்ற வர்த்தத்துக்குச்சேர வந்வயங்காட்டி, விரோதிநிரஸநசீலன் என்ற வர்த்தாநுகுணமாக வந்வயம் காட்டுகிறார் (மானாலப்பிறப்பறுப்பா னித்யாதி.) ஏகாந்வயமேயாய், "எம்பெருமானை" என்கிற ஐகாரம் அவ்யயமாக்கி அந்வயங்காட்டுகிறதே விசேஷமென்னவுமாம். பிறப்பறுப்பான் - பிறப்பறுக்கைக்காக வென்றபடி. .................................*

———

## மூன்றாம்பாட்டு.

நண்ணினநாராயணனைநாமங்கள்பலசொல்லி
மண்ணுலகில்வளமிக்கவாட்டாற்றான்வந்தின்று
விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்விதிவகையே
யெண்ணினவாறாகாவிக்கருமங்களென்னெஞ்சே.

## ஆருயிரப்படி.

( நண்ணினம் ) நாமங்கள் பலசொல்லிக்கொண் டபேக்ஷித்து நாராயணனை ப்ராபிக்கப்பெற்றோம், அதின்மேலே, அவன்தானேவந்து நிர்ஹேதுகமாக நமக்குத் திருநாட்டைத் தருகையிலே விரையாநின்றான், நாம் "இத்தைச்செய்" என்று சொல்லுமிதுவே தாழ்வாக விருக்கிறானத்தனை, ஆனபின்பு, இனி அவனை நண்ணினோமேயல்லோமோ, நெஞ்சே, இங்ஙனேயிருப்பதொரு சம்ருத்தி நமக்கு விளையக்கடவதாக ஸ்வப்நத்திலேதான் நினைவுண்டோவென்கிறார்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நாம் த்வரிக்கவேண்டும் கார்யத்திலே தான் மிகவும் த்வரியாநின்றான், இது நாம் நினைத்தவளவன்றியே யிராநின்றதீயென்று ஹ்ருஷ்டராகிறார்.

என் நெஞ்சே - எனக்கநுபவோபகரணமான நெஞ்சே. மேன்மைக்கும் நீர்மைக்கும் போக்யதைக்கும் ப்ரகாசகமான, பலநாமங்கள் - பலதிருநாமங்களையும். சொல்லி - சொல்லி. நாராயணனை - அத்திருநாமங்களுக்கெல்லாம் பிறப்பிடமான நாராயணனென்கிற நாமத்தையுடைய நிருபாதிகபந்துவை. நண்ணினம் - கிட்டப்பெற்றோம். மண்ணுலகில் - பூலோகத்திலே. வளம் - சீலசௌலப்யாதி குணசம்பத்தினுடைய. மிக்க - மிகுதியையுடையனாய்க்கொண்டு. வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே நிற்கிறவன். வந்து - நான் சொல்லவேண்டாதபடி தானே உத்யுக்தனாய்க்கொண்டு வந்து. இன்று - நம்பக்கல் முன்பொரு ஹேதுவின்றியேயிருக்க இன்று. விண்ணுலகம் - பரமபதத்தை. விதிவகையே - நம்மநுமதிகொண்டு. தருவானாய்-தருவானாக. விரைகின்றான் - விரையாநின்றான். இக்கருமங்கள் - இக்காரியங்கள். எண்ணினவாறாகா - நாமவன்பாடே செல்லவும் நாமர்த்திக்கவும் நாமதிலே த்வரிக்கவும் அவன் நினைவுபார்க்கவு மெண்ணியிருந்த ப்ரகாரமன்றியே, தான் வருகையும் அபேக்ஷிக்கையும் த்வரிக்கையும் நினைவு தான்பார்க்கையு மாய்விட்டான்.............*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

நெஞ்சே, நம்மை விஷயீகரிக்கவல்லனை என்று நாமிருக்க, அவ்வளவன்றிக்கே பலிக்கிறபடி யென்னென்கிறார்.

( நாராயணனைநாமங்கள்பலசொல்லி - நண்ணினம் ) ப்ராப்தனான ஸ்வாமியைக் கிட்டப்பெற்றோம். ( நாமங்கள்பலசொல்லி ) "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதகঃ" ( நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதகঃ ) என்றிதுவே யமையுமிறே பலாபிசந்திபண்ணில். ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு திருநாமங்கள்பலவற்றையும்சொல்லி.

( மண்ணுலகிலித்யாதி ) பரமபதத்திற்காட்டில் சம்ருத்திமிக்கிருந்துள்ள திருவாட்டாற்றைத் தனக்கு நிரூபகமாகவுடையவன். வளம்-சம்பத்து. ரக்ஷ்யவர்க்கம் குறைவற்ற தேசமாகையாலே ரக்ஷகனுக்கு சம்பத்து மிக்கிருக்கு மிங்கு; கைங்கர்யத்துக்கு விச்சேத மில்லாமையாலே சேஷபூதனுக்கு சம்பத்து மிக்கிருக்கு மங்கு. ( வந்து ) நாம்செல்லவே

ண்டும் தேசமடங்கத் தானேவந்து. (இன்று) நம்பக்க லிதுக்கடியாயிருப்பதொன்று மென்னலில்லை, இன்றிங்ஙனே விடியக்கண்டதித்தனை. (விண்ணுலகம் தருவானாய்) அங்கே ஒருகுடி யிருப்புமாத்ரமே கொடுத்துவிடுவானாயிருக்கிறிலன். "வானவர்நாடு" என்றும் "ஆண்மின்கள்வானகம்" என்கிற பொதுவையறுத்து நமக்கே தருவானாக த்வரியாநின்றான். ஆவதழிவதாகிற விபூதி யிவர்க் குத்தர மன்றென்றுகாணு மவன் நினைவு. இவர்க்கே கொடுக்கையாவது - இவர் ப்ரார்த்தித்தபடியே * வழுவிலாவடிமையைக் கொடுக்கையிறே. (விரைகின்றான்) நம்மைப்போலாறியிருக்கிறிலன். "சிறப்பில்வீடு - இறப்பிலெய்துக வெய்தற்க" என்றொரு ஆற்றலுண்டிறே நமக்கு. தான் முற்பாடனாய்ச் சரக்குக்கட்டிப் புறப்பட்டு நிற்பது, இவர் தாழ்த்தாரொன்று மீளப்போய்ப்புக்கு "ஆழ்வீர், போரீரோபோரீரோ" என்று பதறாநின்றான். ஒரு கார்யப்பாட்டாலே வைத்தானாய், அக்கார்யம் முடியுமளவானவாறே த்வரியாநின்றான். சர்வசக்தியான தனக்கும் க்ரமப்ராப்தி பற்றாதபடியாய்த்து த்வரையிருக்கிறபடி. சங்கல்பித்தகார்யம் செய்யுமளவும் பொறுக்கிறிலனாய்த்து. இப்படி செய்யநினையாநின்றானாகில் நினைக்கிறான், தான் சர்வசக்தியான சர்வேச்வரனாகில் பின்னை யங்ஙன் விரையவேண்டுகிறதென்னென்னில் (விதிவகையே) நாம்சொல்ல பரமபதம் தந்தானாகவேணுமென்றிராநின்றான். "எம்மாவீட்டுத்திறமும்செப்பம்" என்றாரோ, அதுதவிர்ந்து "உண்டிட்டாயினியுண்டொழியாய்," "திருவாணைநின்னாணை" என்று தடுத்தும் வளைத்தும் செய்தால் பின்பு கொடுப்பதாக விராநின்றான். (விதிவகையே - விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்!) இவர்க்கு ருசிபிறப்பதற்குமுன்பு தானெதிர்சூழல்புக்கு விரைந்து திரிந்தான், ருசிபிறந்தபின்பு இவர் விரையத்தொடங்கினார், அதுகண்டு அவனுக்கு இவரளவல்லாதபடி விரைதல் மிக்கது, அதுகண்டு இவர் விஸ்மயப்படுகிறார். இவனுக்கு ருசிபிறக்குமளவுமிறே அவனறியிருப்பது, இவனுக்கதுண்டானால் பின்னை பேற்றளவும் செல்ல விரைவானவனாய்த்து. உடையவனிறே உடைமைக்கு விரைவான்.

(எண்ணினவாறாகா) "இந்நின்றநீர்மை யினியாமுறாமை" என்று இவ்வளவன்றோ நாமெண்ணிற்று, அவனை "விரையவேணும்" என்றெண்ணினோமோ. (இக்கருமங்கள்) பகவத்விஷயத்தில் தாந்தாமெண்ணியிருந்தவளவல்லகாண் கார்யம் பலிக்கும்படி. லௌகிகரிலே சிலரை "என்கார்யத்துக்கு நீகடவை" என்று சொன்னாலும், பின்னையும் பேற்றளவுஞ்செல்லத் தனக்கே ப்ரவர்த்திக்கவேணுமே; அப்படியே நினைத்திராதே கொள்ளாய் இவ்விஷயத்திலும். (என்னெஞ்சே) அவன் முறையிலே விரைய நாம்பெற்றது நீ முறையிலே நிற்கையன்றோ. பந்தஹேதுவாகை தவிர்ந்து நீ மோக்ஷஹேதுவாகையன்றோ. உன்னாலேவந்த சம்ருத்தியன்றோ விதெல்லாம்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. ( நண்ணினமித்யாதி. ) "எண்ணினவாறாகா" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( நெஞ்சேயித்யாதி. )

தத்புருஷசமாஸத்தை விவக்ஷித்து, "நாராயணன்" என்றதுக்கர்த்தம் (ப்ராப்தனானவித்யாதி.) ஒன்றமையாதோ, பலவேணுமோ வென்ன ( நமோநாராயணாயேத்யாதி ) "கிம் தத்ரபஹுபிர்மந்த்ரை: கிம் தத்ரபஹுபிர்வ்ரதை:। நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:." (கிம்தத்ரபஹுபிர்மந்த்ரை: கிம்தத்ரபஹுபிர்வ்ருதை: । நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:.)

"மிக்க" என்றதுக்கர்த்தம் ( பரமபதத்திலித்யாதி. ) மண்ணுலகிலே பரமபதத்திலுங்காட்டில் சம்பத்துமிக்கிருந்துள்ள வாட்டாற்றையுடையவனென்று சப்தார்த்தம். பரமபதத்திற்காட்டில் மண்ணுலகிலே சம்பத்து மிகக்கூடுமோ வென்ன ( ரக்ஷ்யவர்க்கமித்யாதிவாக்யத்வயம். ) "வந்து" என்றதுக்குபாவம் (நாம்செல்ல.)

"இன்று" என்றதுக்கு பாவம் ( நம்பக்கலித்யாதி. ) நென்னல் - நேற்று.

"விண்ணுலகம்" என்றதுக்கு பாவம் ( அங்கேயித்யாதி. ) பலிதம் (வானவரித்யாதி.) இவ்விபூதியையும் கொடாதொழிவானென்னென்ன ( ஆவதழிவதித்யாதி. ) இவர்க்கே விண்ணுலகம் தருகையாவதேதென்ன ( இவர்க்கேயித்யாதி. ) "விரைகின்றான்" என்றதுக்கு பாவம் ( நம்மைப்போலித்யாதி. ) இவரப்படியாறியிருந்தாரோவென்ன ( சிறப்பிலித்யாதி. ) ஆற்றல் - பொறை. விரைகிறதின் சரமாவதி ( தான் முற்பாடனாயித்யாதி. ) இத்தனைநாளுமின்றிக்கே யிப்போது த்வரிப்பானென்னென்ன ( ஒருகார்யேத்யாதி. ) கார்யப்பாட்டாலே - கார்யவசாதென்றபடி. கார்யமாவது - திருவாய்மொழி தலைக்கட்டுகை. க்ரமேண வருகிறானென்றிருக்கவொண்ணாதோவென்ன ( சர்வசக்தீத்யாதி. ) "விரைகின்றான்" என்றவர்த்தமானார்த்தம் ( சங்கல்பித்தவித்யாதி ) திருவாய்மொழி பாடுவிக்கவேணுமென்று சங்கல்பித்தகார்யமென்றபடி.

விரையவேண்டுகிறதென் - செய்கிறதுக்கென்னென்னிலென்றபடி. நான் சொல்லவென்கைக்கு இவர் "வேண்டா" என்றாரோவென்ன ( எம்மாவீடித்யாதி; ) இது, வேண்டா என்றமாத்ரத்துக்கு ப்ரமாணம்.

"விரைகின்றான்" என்ற வீடுபாட்டுக்கு பாவம் ( இவர்க்குருசியித்யாதி, ) அவனறியிருக்க இவரன்றோ த்வரிக்க ப்ராப்தமென்ன ( இவனுக்கித்யாதி. ) அதுக்கடியேதென்ன ( உடையவனித்யாதி. )

எண்ணினவாறாகா - எண்ணினப்ரகார மன்றிக்கே யிருந்தன. நாமெண்ணியிருந்த வளவல்லவென்றபடி. எண்ணுக்குமேலே பலிக்குமென்றுகருத்து. "எண்ணினவாறாகா" என்றத்தால் பலிதமான ஹார்த்தபாவம் ( இன்னின்றவித்யாதி. ) "கருமங்கள்" என்ற பஹுவசநத்துக்கு பாவம் ( பகவத்விஷயத்திலித்யாதி. ) இக்கருமங்கள் - இவ்விஷயத்தில் பலிக்கும் கார்யங்களென்றபடி. "இ" என்றதுக்கு பாவம் ( லௌகிகரிலேயித்யாதி. )

நெஞ்சென்றதே "என்னெஞ்சு" என்றதுக்கு பாவம் ( அவன்முறையிலேயித்யாதி. ) உக்தார்த்த விவரணம் ( பந்தஹேதுவாகை யித்யாதி. ) இதுக்கு "மநஏவமநுஷ்யாணாம்" ( மநஏவமநுஷ்யாணும் ) என்றதிலே நோக்கு.

நாராயணனை நாமங்கள்பலசொல்லி - நண்ணினம், மண்ணுலகிலென்றுதொடங்கி, இன்று - விதிவகையே - விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான், என்னெஞ்சே, இக்கருமங்கள் - எண்ணினவாறாகா வித்யந்வய:................................*



## நான்காம்பாட்டு.

என்னெஞ்சத்துள்ளிருந்திங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து
வன்னெஞ்சத்திரணியனைமார்விடந்தவாட்டாற்றான்
மன்னஞ்சப்பாரதத்துப்பாண்டவர்க்காய்ப்படைதொட்டா
னன்னெஞ்சேநம்பெருமானமக்கருடான்செய்வானே.

### ஆறாயிரப்படி.

(என்னெஞ்சத்துள்) சநகாதி பரமயோகி வாங்மநஸா பரிச்சேத்யமான திருநாட்டை நம்முடைய சிறுமைபாராதே நமக்குத்தந்தருளுமோவென்னில்;

என்னுடைய நிகர்ஷமும் சிறுமையும்பாராதே என்னெஞ்சுள் புகுந்திருந்து என்னை யுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழியைச் சொல்லி ஆஶ்ரிதவிரோதிகளான ஹிரண்ய துர்யோதநாதி நிரஸநத்தையும் எனக்கு போக்யமாகச் செய்தருளின நிரவதிக சௌசீல்ய காருண்யௌதார்யாதி குணங்களையுடையனாயிருந்தவன், இனித் திருநாட்டை நமக்குத் தந்தருளுமென்னுமிடம் சொல்லவேண்டுமோ, என்னைக்கொண்டு திருவாய்மொழியைச் சொல்லுவிக்கையாகிற விந்த சம்ருத்தியிற்காட்டிலும் சீரியதோ திருநாடென்கிறார்...................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணத்தில் பக்ஷபாதியானவன் நமக்கு நிரவதிகோபகாரகனாயிராநின்றானென்கிறார்.

நன்னெஞ்சே - பகவத்விஷயமென்றால் ப்ரவணமானநெஞ்சே. வன்னெஞ்சத்து - ப்ராவண்யமில்லாதவளவன்றியே ப்ரத்வேஷ பூயிஷ்டமாம்படி வலியநெஞ்சையுடைய. இரணியனை - ஹிரண்யனை. நோய்நின்றவிடம் குட்டமிட்டுப் பரிஹரிப்பாரைப்போலே, மார்விடந்த - அவன் நெஞ்சிருக்கிறமார்பை இடந்து. ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே சந்நிஹிதனாய். மன் - ராஜாக்களெல்லாரும். அஞ்ச - அஞ்சும்படி. பாரதத்து - பாரதசமரத்திலே. பாண்டவர்க்காய் - பாண்டவர்களுக்காக. படைதொட்டான் - ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்த பக்ஷபாதியாய். நம்பெருமான் - இவ்வபதாநங்களாலே நமக்கு ஸ்வாமியானவன். என்னெஞ்சத்து - அந்யபரமான வென் ஹ்ருதயத்தைவசீகரித்து. உள்ளிருந்து - உள்ளே பொருந்தியிருந்து. இங்கு - இவ்விருப்பிலே. இரு - அத்யந்த விலக்ஷணமாம்படி பெரிய. தமிழ் - த்ரமிடமயமான. நூல் - சாஸ்த்ரரூபமாய். இவை - அபரோக்ஷசித்தமான போக்யதையை யுடைத்தான வித்திருவாய்மொழிதன்

ணே. மொழிந்து - தானே ப்ரவர்த்தகனு யருளிச்செய்து. அவ்வளவில்நில்லாதே, நமக்கு - நமக்கு. அருள் - அதிசயிதோபகாரங்களை. தான் செய்வானே - பண்ணுவர்னுகத் தானேபாரியாநின்ருன்..................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

சர்வேஸ்வரன் நாம் விதித்தபடியே செய்வானுகச் சொன்னவிது சம்பவிக்குமோவென்னில்; அவனுடைய வாஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுசந்தித்தால் கூடாததில்லைகாணென்கிருர்.

( என்னெஞ்சத்து ) அநாதிகாலம் சம்சாரத்திலே தன்னையொழிந்த சப்தாதிவிஷயங்களை யுகந்துபோந்ததென்ருய்த்து இவர் என்னெஞ்சு என்றிருய்க்கிறது. இதின் குணதோஷங்கள் கிடந்தபடி கிடக்க, இவர் "என்னது" என்றதுவே ஹேதுவாக அவன்மேல்விழாநின்ருன். இவர் என்னெஞ்சென்று புறம்பே கால்வாங்காநின்ருர்; அவன் அதுவே ஹேதுவாக உள்ளேபோக வடியிடாநின்ருன். (உள்) விடாயர் மேலில் நீரை நீக்கி உள்ளே ஆழமுழுகிக்கிடக்குமாபோலே, நெஞ்சினுள்ளேபுகுந்தான். ( இருந்து ) தனக்கவ்வரு கொருவிபூதியுண்டாகவும், அங்கேபோவானுகவும் நினைத்திருக்கிறிலன். ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக விருந்து. (இங்கு) அங்கில்லாத சம்பத்தையும் இங்கேயுண்டாக்கினுன். (இருந்தமிழ்) அவ்விபூதிக்கு மடங்காதபடியாய்த்து இவற்றின்நன்மை. "கேட்டாரார்" என்னக்கடவதிறே. ( நூல் ) பின்புள்ளார்க்கு மிதுகொண்டு லக்ஷணம் கட்டலாம்படியாய்த் திவையிருப்பது. இவராற்ருமையாலே சொல்லச்செய்தேயும், அது சர்வலக்ஷணோபேதமாம்படிசொல்லுவித்தானுய்த்து. ( இவை ) "இன்னதுசெய்தான்" என்னப்புக்கு நடுவே ( இவை · என்று அநுபவிக்கிருராய்த்து. ( மொழிந்து ) ஒருவன் பாடின கவியைக் கற்றுச் சொன்னவனும், தனக்கதிலே குவாலாக வங்வயமுண்டாக வபிமாநித்திருக்கும்; அதுவும் நினைத்திருக்கிறிலர்காணு மிவர். "என் முன் சொல்லும்" என்றவற்றையு மொன்ருக நினைத்திருக்கிறிலர்.

( வன்னெஞ்சத்தித்யாதி ) பகவத்விஷய மென்ருல் அதிர்ந்திருக்கும்படி திண்ணிதான நெஞ்சையுடைய ஹிரண்யனுடைய முருட்டுநெஞ்சை அநாயாஸேந இடந்த திருவாட்டாற்ருன். முன்பு தமப்பன் பகையாகச் சிறுக்கனுக் குதவினவன், நமக்குதவானோ வென்று கருத்து. துர்மாநம் கிடந்தவிடத்தைக் குட்டமிட் டிடந்தான் காணும். ( வாட்டாற்ருன் ) பிற்பாடர்க் குதவுகைக்காகத் திருவாட்டாற்றிலே வர்த்திக்கிறவன். அவன்நெஞ்சிற் குறைதீர்த்தாப்போலே நம்நெஞ்சிற் குறைதீர்க்கவந்து நிற்கிறவன்.

( மன்னஞ்ச ) அதிரதமஹாரதரென்று பேர்பெற்றவர்க ளட்ங்கலும், சிம்ஹத்தைக்கண்ட நரிபோலே குலையும்படியாக. ராஜலோகமடங்கலு மஞ்சும்படியாக. ( பாண்டவர்க்காய் ) "இன்னார்தூதன்" என்னு

ம்படி அவர்களுக்குக் கையாளாய். (படைதொட்டான்) படையெடுத்தான். படைவிட்டானென்னப் பெற்றதில்லை. சங்கல்பத்தைக் குலைத்தானித்தனையே; கார்யங்கொள்ளப் பெற்றதில்லை. சத்யசங்கல்ப னென்றது ஆஶ்ரிதரை யொழிந்தவிடத்திலிறே; விடாவிட்டது, அர்ஜுநன் "நீஆயுதம்விடுகை எனக்கவத்யம்" என்கையாலே. ஆகில் தவிரலாகாதோவென்று தவிர்ந்தான். [மன்னர்மறுகவித்யாதி] அர்ஜுநன்குதிரைகளிளைத்தவளவிலே, கடிநஸ்த்தலத்திலே நீர் நரம்பறியுமவனுகையாலே வாருணாஸ்த்ரத்தைவிட்டு அங்கே நீரையுண்டாக்கிக் குதிரைகளை விட்டு நீரூட்டிப்புரட்டி யெழுப்பிக் கொடுபோந்து பூட்டிக்கொண்டுவந்து முன்னேநிறுத்தின வித்தைக்கண்ட ராஜலோகமடைய, "இவனுடைய பக்ஷபாத மிருந்தபடியால் நாமிவனை வெல்லுகையென்றொன்றுண்டோ" என்று குடல் மறுகிற்றாய்த்து. [முன்னங்குநின்றுமோழை யெழுவித்த] எல்லாருங்காணக் குமிழிநீரொழும்படி பண்ணினான்.

அவனுடைய வாஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுசந்தித்தவாறே நெஞ்சநுகூலித்தது (நன்னெஞ்சேயித்யாதி) அல்லேனென்னுமைக்கு நீயுண்டு, ஆவோமென்கைக்கு அவனுண்டு, அவனை ப்ரேரிக்கைக்கு க்ருபையுண்டு. (நம்பெருமான்) நமக்கு ஸ்வாமியான தான், நமக்கு அருள்பண்ணியேவிடும். "விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்" என்கிறபேற்றைப் பண்ணியேவிடும்; இது நிஶ்சிதம். இசைகைக்கு நீயுண்டு, இசைவிப்பிக்கைக்கு அவனுண்டு, இசைவைக் கொண்டு கார்யம் செய்கைக்கு சம்பந்தமுண்டு, இனி நம்பேற்றுக்குக்குறையுண்டோ.....................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (என்னெஞ்சத்துளித்யாதி.) "வன்னெஞ்சத்து" என்று தொடங்கி "படைதொட்டான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஶ்வரனித்யாதி.) சர்வேஶ்வரனென்றது - நிரங்குசஸ்வதந்த்ரனென்றபடி.

"என்" என்றதுக்குபாவம் (அநாதித்யாதி.) இப்படிப்பட்ட விதிலே யவனை மேல்விழுகைக்கு ஹேதுவேதென்ன; வ்யாமோஹமென்கிறார் (இதின் குணதோஷங்களித்யாதி.) "உள்ளிருந்து" என்றத்தைப்பற்ற (மேல்விழாநின்றானென்றது.) விவரணம் (இவனென்னெஞ்சென்றித்யாதி.) நெஞ்சத்தென்னாதே, "உள்" என்றதுக்குபாவம் (விடாயரித்யாதி.) "இருந்து" என்றதுக்குபாவம் (தனக்கித்யாதி)

"இங்கு" என்று - நித்யவிபூதியை வ்யாவர்த்திக்கிறதென்கிறார் (அங்கில்லாதவித்யாதி.) சம்பத்தென்றது - * இருந்தமிழ்நூலை. "இரும்" என்றதுக்குபாவம் அவ்விபூதிக்குமித்யாதி.) இருமை-பெருமை. அதாவது - வைலக்ஷண்யாதிக்யமென்றபடி. அப்படி யிருக்குமோவென்ன (கேட்டாரரித்யாதி.) "நூல்" என்றதுக்குபாவம் (பின்புள்ளார்க்குமித்யாதி.) நூல்-சாஸ்த்ரம். ஆற்றாமைக்குப் பாசுரமிட்டுச் சொன்னவை, வைலக்ஷணவத்தாமோவென்ன (இவராற்றாமையித்யாதி.) "தமிழ்நூல்மொழிந்து" என்னாதே, நடுவே "இவை" என்றதுக்குபாவம் (இன்னதித்யாதி.) மொழிவித்தென்னாதே "மொழிந்து", என்றதுக்குபாவம் (ஒருவனித்யாதி.) குவா

லாக - அதிகமாக. கீழே “ என்முன்சொல்லும் ” என்று ப்ரயோஜநகர்த்தாவாகச் சேரவில்லையோவென்ன (என்முன்சொல்லுமித்யாதி.)

இதுக்கு ஹார்த்தபாவம் (முன்பித்யாதி.) “மார்விடந்த” என்றதுக்குபாவம் (தர்மாநமித்யாதி.) குட்டமிட்டு - பள்ளமெடுத்து. “மார்விடந்தவாட்டாற்றான்” என்று கூட்டிபாவம் (அவன்னெஞ்சிலித்யாதி.) அவன்னெஞ்சிற்குறை - ஹிரண்யன் னெஞ்சில் காலுஷ்யமென்னுதல், ப்ரஹ்லாதன்னெஞ்சில் குறையென்னுதல். நம்நெஞ்சில் குறையென்றது - பரமபதத்திலே நம்மைக் கொடுபோகாமையாலே “ ஏகமெண்ணும்” எனனும் குறையென்றபடி.

“மன்” என்று-ஜாதிவாசி. ராஜலோகமடங்கலுமென்றபடி. “ மன்னஞ்ச ” என்றதுக்குபாவம் (அதிரதேத்யாதி.)

“ஆய்” என்றதுக்குபாவம் (இன்னார்தூதனித்யாதி.) திருமொழி இரண்டாம்பத்து இரண்டாந்திருமொழி மூன்றாம்பாட்டு. “ முன்னோர்தூது” இத்யாதி. இதுக்குபாவம் (படைவிட்டானித்யாதி.)

படை-திருவாழி. விவரணம் (சங்கல்பத்தையித்யாதி) ஆனால் சத்யசங்கல்பத்வம் குலையாதோவென்ன (சத்யசங்கல்பனித்யாதி.) எடுத்தால் விடாதொழிவானென்னென்ன (விடாவிட்டதித்யாதி.)

அப்படி ஆஶ்ரித பரதந்த்ரனோவென்ன (மன்னர்மறுகவித்யாதி.) பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து இரண்டாந்திருமொழி ஏழாம்பாட்டு. இதுக்குபாவம் (அர்ஜுநனித்யாதி.)

மேலுக்கவதாரிகை (அவனுடையவித்யாதி.) “ நன்னெஞ்சே, நம்பெருமான், நமக்கருள்தரன்” என்ற பதத்ரயத்துக்குபாவம் (அல்லேனென்னுமைக்கித்யாதி வாக்யத்ரயமும்.) விவரணம் (விண்ணுலகமித்யாதி.) “ செய்வானே” என்றவதாரணார்த்தம் (இதுநிஶ்சிதமென்று.) “ அல்லேனென்னுமைக்கு” இத்யாதிவாக்யவிவரணம் (இசைகைக்கித்யாதி.) “நம்பெருமான்” என்ற வித்தைப்பற்ற (சம்பந்தமுண்டென்றது.) “ பெருமான் ” என்றத்தைப்பற்ற (இசைவிப்பிக்கைக்கவனுண்டென்றது.)..........................................................................*

---

## ஐந்தாம்பாட்டு.

வானேறவழிதந்தவாட்டாற்றான்பணிவகையே
நானேறப்பெறுகின்றேனரகத்தைநகுநெஞ்சே
தேனேறுமலர்த்துளவந்திகழ்பாதன்செழும்பறவை
தானேறித்திரிவானதாளிணையென்றலைமேலே.

### ஆறாயிரப்படி.

( வானேற ) திருநாடுபெறவேணுமென் றபேக்ஷையுடையா ரெல்லார்க்கும் வானேறுகைக்கிடான வுபாயத்தைக் கொடுத்தருளினான்; அவனுடைய ப்ரஸாதத்தாலே, தேனேறுமலர்த்துளவத்தினாலே யலங்க்ருதமாயிருந்த வவனுடைய தாளிணை பெரியதிருவடிமேலேறுமாபோலே

யென்தலைமேலே நானேறப்பெறுகின்றேன், இனி அவனைப் பிரிந்திருக்கையாகிற நரகத்தைவென்றிருப்பேனென்கிறார்.............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனருளிச்செய்த ப்ரகாரத்திலே நான் பரமபதத்தைப் பெறுகின்றேன், அதுக்கடியான விஷயீகாரத்தாலே போக்யமான திருவடிகள் என் தலையிலே யாய்த்தினவென்கிறார்.

வானேற - பரமபதத்திலே போகைக்குறுப்பாக. வழிதந்த-"போம்வழியைத்தரும்" என்கிறபடியே அர்ச்சிராதிமார்க்கத்தை யுண்டாக்கித்தந்து. அத்தாலே கொண்டு போவதாக, வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே சந்நிஹிதனானவன். பணிவகையே-"பண்டேபரமன் பணித்த பணிவகையே" என்கிறபடியே. நான்-அவன்நினைவே நினைவாம்படியான நான். ஏற-மேலேசெல்ல. பெறுகின்றேன்-பெறுகின்றேன். அதுக்கடியாக, தேன்-மதுவானது. ஏறு-மிகாநின்றுள்ள. மலர்த்துளவம்-மலரையுடைய திருத்துழாய். திகழ்பாதன் - செவ்விபெற்று விளங்கும்படியான திருவடிகளையுடையனாய். செழும்பறவை - தர்ஸநீயாகாரனான பெரிய திருவடியை. தானேறித்திரிவான்-தான் விரும்பியேறி ஆஸ்ரிதார்த்தமாக சஞ்சரிக்குமவனுடைய. அத்தாளிணை - அந்த போக்யமான திருவடிகளிரண்டும். என் தலைமேலே-என் தலைமேலாய்த்தின. நெஞ்சே-நெஞ்சே. நரகத்தை-சம்சாரத்தை. நகு - ஸாவஜ்ஞமாகச்சிரித்துப்போம்படிபார்...............................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவன் பரமபதத்துக்குப்போக வாஸ்ரிதர்க்கு வைத்த அர்ச்சிராதிகதியாலே போகப்பெறுகின்றேன், நித்யாஸ்ரிதரைப்போலே யென்னைவிஷயீகரிக்கவும் பெற்றேனென்கிறார்.

( வானேறவித்யாதி ) பரமபதத்திலேபோய்ப் புகுகைக்கு அர்ச்சிராதிமார்க்கத்தைத் தந்த. பரமபதலாபத்திலு மவ்வருகே யொருலாபமென்னும்படியிறே அர்ச்சிராதிகதி சித்தி. "போம்வழியைத்தரும்" என்றீடுபடும்படியிறே அதினுடைய வைலக்ஷண்யம். ( வாட்டாற்றான் )இப்பேற்றுக்கு க்ருஷிபண்ணினவிடம். ( பணிவகையே ) அவன் திருவுள்ளமானபடியே. அதாவது - "ꢀꢁꢂꢃꢄꢅꢆꢇꢈꢉ" ( மாமேகம்ஸரணம் வ்ரஜ ) என்றத்தைச் சொல்லுகிறார்; "பண்டேபரமன்பணித்த பணிவகையே" என்றாரிறே; "மரணமானால்" என்றத்தைச் சொல்லிற்றாகவுமாம். ( நானேறப்பெறுகின்றேன் ) "கண்ணன்வைகுந்தனோடென்னெஞ்சினாரைக்கண்டால்" என்று தூதுவிட்டுப் பார்த்திருக்கக்கடவ நானுனக்குச் சொல்லவேண்டும்படியாவதே!. ( நானித்யாதி ) நான் பரமபதத்திலே யேறப்பெறுகின்றேன்.

ஆனால் நான் செய்யவேண்டுவதென்னென்ன ( நரகத்தைநகுநெஞ்சே ) ப்ராப்யபூமி கிட்டிற்றென்று கடுகக் கால்வாங்கிப் போகப் பாராதேகிடாய். நெடுநாள் நம்மைக் குடிமக்களாக்கி யெளிவரவு படுத்தின ஸ

ம்சாரத்தைப் புரிந்து பார்த்துச் சிரித்துப்போருகிடாய். "உன்னைவென்றேமிறே" என்று புரிந்து பார்த்துச் சிரித்துப்போரு. பிள்ளையழகியமணவாளப்பெருமாளரையர் க்ரந்தியைப்பார்த்துச் சிரித்துச் சொன்னவார்த்தையை நினைப்பது. [ தெநநாஜெநஉஹ-தா நிஜ-மாஉஹரீஸ்வ: ] [ தேநநாதேநமஹறதா நிர்ஜகாமஹறீப்ʼவர: ] மஹாராஜர் வந்தறைகூவ, "பூர்வக்ஷணத்திலே பரிபவப்பட்டுப்போனவனிப்போதுவந் தறைகூவும்போது, வெறுமனல்ல, போதல்லாப்போதிலே நீ புறப்படக்கட்வையல்லை" என்று தாரை காற்கட்டச் செய்தேயும், க்ஷத்ரியனுகையாலே பரிபவம் பொறுக்கமாட்டாமை புறப்பட்டு, "மிடற்றேசை யிருந்தபடியென், பழைய கோழைத்தனமற்றுத் தெளிந்து முழங்கியிருந்தது, இதுக்கோரடியுண்டாகவேணும், உண்டாய்த்தாகில் நமக்கிளைபோருகிறது" என்றுனிறே. [ ஹ்ரீப்ʼவர: ] இதுக்குமுன்பு பிறரறைகூவ ஜீவித்தவனல்லன். அப்படியே அவனை யண்டைகொண்டபலத்தாலே, சம்சாரத்தைப் பார்த்து "உன்னைவென்றேமிறே" என்று கையைத்தட்டிச் சிரித்துக்கிடாய் போருவது. அறிவுகேடர்க்கு, நரகமென்று - யமாதிகள் குடியிருப்பைச் சொல்லிற்றுகவுமாம். "மற்றைநரகம்" என்கிற சம்சாரத்தைச் சொல்லுகிறது; * வானுயரின்பத்துக் கெதிர்த்தட்டிறே.

நாமிப்படி சம்சாரத்தைக் கைதட்டிச் சிரிக்கைக்கு நமக்குத்தேப்ʼயவஸ்துத்தான் கைபுகுந்ததோவென்ன (தேனேறித்யாதி) கிண்ணகப்பெருக்குப்போலே நாட்செல்ல நாட்செல்லத் தேனேறிவாராநிற்பதாய் மலரையுடைத்தான திருத்துழாயானது விளங்காநின்றுள்ள திருவடிகளையுடையவன். (செழும்பறவை) அவனேட்டை சம்ப்ʼலேஷத்தாலே குளிர்ந்து தர்ஶநீயமான வேஷத்தையுடைய திருவடியை. இத்தால்–சர்வேஸ்வரனேட்டை ஸ்பர்ஶ மிவனுக் கிருக்கும்படி சொல்லிற்று. (தானேறித்திரிவான்) அவனுக்காகவுமன்றிக்கே அவன்றேளி லிருப்பு சுகஸ்பர்ஶமாயிருக்கையாலே அவனை மேற்கொண்டு சஞ்சரியாநிற்குமாய்த்து. (தானேறித்திரிவானதாளிணையென்தலைமேலே) திருவடி திருத்தோளிலும் என்தலையிலுமான விது தவிர்ந்து என்தலையிலேயாய்த்து. அவனிழவுக்கு வெறுக்கவேண்டாவிறே; அவன்தானே கொடுவந்து கொடுக்கப்பெற்றவராகையாலே. ஆகையிறே ஒருபழுவேறப்பெற்றது. .........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (வானேறவித்யாதி.) "வானேற" என்று தொடங்கி "என்தலைமேலே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அவனித்யாதி.)

வானிலே யேறுகைக்கென்றபடி. வானைத்தந்தவென்னுதே, "வழியைத்தந்த" என்பானென்னென்ன (பரமபதேத்யாதி.) அப்படிவிலக்ஷணமாயிருக்குமோவென்ன (போம்வழியையித்யாதி.) சப்தார்த்தம் (அவனித்யாதி.) பணிதல் –

சொல்லுதல். "பணிவகை" என்றால் - சரமஸ்லோகத்தைச் சொல்லுமோவென்ன (பண்டேயித்யாதி.) அர்த்தாந்தரம் (மரணமானாலித்யாதி.)

"நான்" என்றதுக்கு பாவம் (கண்ணனித்யாதி) திருவிருத்தம், "அன்னம்செல்வீரும்" இத்யாதி. ஸ்பஷ்டோர்த்த:. சப்தார்த்தம் (நான்பரமபதத்திலே யித்யாதி.)

குடிமக்கள் - குடியாள்கள். எளிவரவுபடுத்தின - லகுதரமாக்கின. நகுதல்- சிரித்தல். சிரிக்கும்படியேதென்ன (உன்னையித்யாதி.) இதுக்கு சம்வாதம் (பிள்ளையித்யாதி.) அதாவது - பரமபதத்துக்குப் போகிறசமயத்திலே "உன்னைவென்றேன்" என்று க்ரந்தியைப்பார்த் தருளிச்செய்தா ரென்றபடி. சம்சாரத்தைப்பார்த்துச் சிரிக்கைக்கு ஹேது அவனை யண்டைகொண்ட பலமென்று திருவுள்ளம்பற்றி, அத்தை ஸகிதர்ஸநமாக வருளிச்செய்கிறார் (தேநநாதேநேத்யாதி) சங்க்ஷேபே, "தஜ்ஜிதாஜ்ஞாஜிவராஷ்ஸீரோஹைமவிஜைத:|தேநநாதேந" (தஜ்ஜிதாஜ்ஞாஜிவரஸ்ஸூக்ஷீரோஹேமயிங்கள:। தேநநாதேந) இத்யாதி. அறைகூவ - ஜயத்வநிபண்ண. இத்தா லிங்கே யேது சொல்லப்பட்டதென்ன (அப்படியே யித்யாதி.) "நரகம்" என்றவிது - சம்சாரத்தைச் சொல்லுமோவென்ன (அறிவுகேட்கித்யாதி.) (மற்றைநரகம்) என்கிறவாக்யத்தடியிலே, "இங்கே" என்று கூட்டிக்கொள்வது. "மற்றைநரகம்" என்றால் சம்சாரத்தைச் சொல்லுமோவென்ன (வானுயரித்யாதி.)

"ஏறு" என்ற வர்த்தமானார்த்தம் (கிண்ணகப்பெருக்கித்யாதி.) கிண்ணகப்பெருக்கு - ஆற்றுப்பெருக்கு. மலர் - பூ.

செழுமை - அழகு. ஏறி என்னாதே "தானேறி" என்றதுக்கு பாவம் (அவனுக்காகவுமித்யாதி.) "தலைமேலே" என்றவவதாரணார்த்தம் (திருவடியித்யாதி.) ஆனால் பெரியதிருவடி து:கப்படாரோ, பரசம்ருத்த்யேகப்ரதாநரான விவர் அவனிழவுக்குவெறாதே "என்தலைமேலே" என்று உகப்பானெனென்னென்ன (அவனிழவுக்கித்யாதி.) அதுக்கு நியாமகமேதென்ன (ஆகையிறேயித்யாதி.) அதாவது-அவன் புருஷகாரமாகக்கொண்டு வருகையாலேயிறே, அவனைப்போலே தோளிலன்றிக்கே தலைமேலே யாகப்பெற்றதென்றபடி. பமு - படி...............................*

---

# ஆறும்பாட்டு.

தலைமேலதாளிணைகடாமரைக்கணெனம்மா
னிலைபேரானென்னெஞ்சத்தெப்பொழுதுமெம்பெருமான்
மலைமாடத்தரவணைமேல்வாட்டாற்றான்மதமிக்க
கொலையானைமருப்பொசித்தான்குரைகழல்கள்குறுகினமே.

## ஆறாயிரப்படி.

(தலைமேல) திருவடிகளை யென் தலைமேலே வைத்தருளினான், அழகிய திருக்கண்களாலே யென்னைக் குளிரப்பார்த்தருளாநின்றான், ஒருக்காலு மென்னெஞ்சில் நின்றும் நிலைபேரான், இங்ஙனே அவன்றிருவடிகளை நாம் குறுகப்பெற்றோமென்கிறார். ...................... .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருவடிகளைத் தலையிலேவைத்தவள வன்றியே, என்னெஞ்சிலே ஸ்த்திரமாகப் புகுந்துநிற்கிறவன் திருவடிகளைக் கூடப்பெற்றேமென்கிறார்.

தாளிணைகள் - அவன்திருவடிகள். தலைமேல-என்தலைமேலே யிராநின்றன. அத்தால்வந்த வுகப்புத் தன்னதாம்படி தோன்ற, தாமரைக்கண் - தாமரைபோலே சிவந்த திருக்கண்களையுடையனாய். என்னம்மான் - என்னைப் பெறுப்பேறாகப் பெற்றாய்க்கொண்டு எனக்கு ஸ்வாமியானவனாய். அவ்வளவன்றியே, என்னெஞ்சத்து - என்னெஞ்சுக்குள். எப்பொழுதும் - எப்போதும். நிலைபேரான் - நின்றநிலைபேராதாய். எம்பெருமான் - என்பக்கலிலே நிலைபெறுகையாலே சர்வாதிகனாய். எனக்குபகரிக்கைக்காக, மலை - மலைபோலேயிருக்கிற. மாடம் - மாடங்களையுடைய. வாட்டாறு - திருவாட்டாற்றிலே. அரவணைமேலான் - திருவரவணையின்மேலே கண்வளர்ந்தருளுகிறவனாய். ப்ராப்திப்ரதிபந்தகங்களை, மதம்மிக்க - மதத்தாலேமிக்கு. கொலை - கொலையிலே உத்யுக்தமான. யானை - குவலயாபீடத்தை. மருப்பொசித்தான் - ஸ்ருங்கபங்கம்பண்ணினாப்போலே என்னநுபவவிரோதியையழித்தவனுடைய, குரை - வீரக்கழலில் த்வநியையுடைய. கழல்கள் - திருவடிகளை. குறுகினம்-கூடப்பெற்றோம். ..........................................................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

திருவாட்டாற்றிலே சந்நிதிபண்ணி யென்னை சர்வதோமுகமாக விடமாட்டாதவனுடைய திருவடிகளைக் கிட்டப்பெற்றேமென்கிறார்.

( தலைமேலதாளிணைகள் ) "நின்செம்மாபாதபற்புத் தலைசேர்த்து" என்றும் "பாதபங்கயமேதலைக்கணியாய்" என்றும் நான் ப்ரார்த்தித்தபடியே, அழகிய திருவடிகளாலே தலை அலங்காரமாகப் பண்ணினான்.

( தாமரைக்கணென்னம்மான் ) என்முன்னேநின்று குளிரநோக்கி "ஜிதம்" என்னப்பண்ணாநின்றான். ( நிலைபேரானென்னெஞ்சத்து ) நெஞ்சுவிட்டுப்பேராதே நின்றாய்த்து இதெல்லாம்செய்கிறது. சௌபரி ஐம்பதுவடிவுகொண்டாப்போலே, இவன் தன்னை யநுபவிக்க நாநாபவநம்கொள்ளுமாபோலே, அவன்றா னிவனை யநுபவிக்க அநேகவிக்ரஹம் கொள்ளாநின்றான். ( எப்பொழுதும் ) "எப்பொழுதும்நாள்திங்களாண்டூழியூழி" என்று தன்னை யநுபவிக்கைக்கு நான் பாரித்த துறைகளடையக் கைக்கொண்டான். சர்வசக்தியோகமடையக் காட்டாநின்றான். என்னெஞ்சிலேநிற்பது, அப்படியே கண்ணுக்கிலக்காம்படி முன்னேநிற்பது, திருவடிகளைத் தலைமேலே வைப்பதாகிற விதெல்லாம் ஒருக்காலே செய்யாநின்றான். ( எம்பெருமான் ) உடைமை உடையவனைப் பெற்றாலிருக்குமாபோலன்றிறே, உடையவன் உடைமையைப் பெற்றாலிருக்கும்படி. ( மலையித்யாதி ) மலைகளைப் புடைபடத் துளைத்து நெருங்கவைத்தாப்போலேயிருக்கிற மாடங்களையுடைத்தான திருவாட்டாற்றிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந் தருளினவன். இத்தால் - ப்ராப்யவஸ்து

வைச்சொல்லுகிறது, பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபடியே. (மதமித்யாதி) அநுபவவிரோதிக ளடங்கலும் குவலயாபீடம்பட்டது படுமித்தனை. அவனிவன்விரோதியைப்போக்க இவனுக்கநுபவத்திலே யந்வயம். (குழைகழல்கள்குறுகினம்) ஆபரணவொலி செவிப்படாநின்றது. "தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னம்குறுகாதோ" என்று ப்ரார்த்தித்தது பெற்றோம்..............................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (தலைமேலவித்யாதி.) "தலைமேல்தாளிணைகள்" என்று தொடங்கி "குழைகழல்கள் குறுகினம்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (திருவாட்டாற்றிலேயித்யாதி.)

"சர்வதோமுகமாக விடமாட்டாதவன்" என்கிறவிதிலே, மூந்தற "தலைமேலதாளிணைகள்" என்று விசேஷிக்கிறதுக்கு பாவம் (நின்செம்மாவித்யாதி.) திருவடிகளிரண்டு மென்தலைமேலே யிராநின்றனவென்று சப்தார்த்தம்.

"என்னெஞ்சத்து - நிலைபேரான் -" என்னெஞ்சுக்குள்ளெப்போதும் நின்றநிலை பேரானென்று சப்தார்த்தம். நெஞ்சைவிட்டுப் பேராதே யிதெல்லாம்செய்யக்கூடுமோவென்ன (ஸௌபரியித்யாதிவாக்யத்வயம்.) அவனநேகசரீர பரிக்ரஹம் பண்ணுகையாலே கூடுமென்றபடி. இரண்டாம்வாக்யம் முக்தவிஷயம்.

(எப்பொழுதும்) இத்யாதிவாக்யத்துக்கு - நான் தன்னை நித்யாபூர்வமாகப் பாரித்ததெல்லாம் தானென்னை நித்யாபூர்வமாகப் பாரியாநின்றானென்று கருத்து. "அநேகசரீரபரிக்ரஹம்பண்ணி யநுபவியாநின்றான்" என்றத்தால்பலிதம் (சர்வசக்தியோகமித்யாதி.) அவரோஹக்ரமத்தாலே அந்தசக்தியைக் காட்டுகிறார் (என்னெஞ்சிலேயித்யாதி.)

இவனவனை லபித்தால் நாநாபாவம்கொள்ள ப்ராப்தமாயிருக்க, அவன் கொள்ளுகைக்கடியேதென்ன (உடைமையித்யாதி.)

"மலைமாடம்" என்றது - * வாட்டாற்றுக்கு விசேஷணம். புடைபட-இடம்பட. அவகாசமுண்டாம்படியாக. "அரவணைமேல்" என்றதுக்குபாவம் (இத்தாலித்யாதிவாக்யத்வயம்.)

"கொலையானைமருப்பொசித்தான்" என்றதுக்கு பாவம் (அநுபவேத்யாதி.) "குழைகழல்கள்குறுகினம்" என்றத்தையும் கூட்டி பாவம் (அவனிவனித்யாதி.) குறுகினதுக்கு நியாமகமேதென்ன (ஆபரணேத்யாதி.) குழை - சப்தம். "குறுகினம்" என்றதுக்கர்த்தம் (தடந்தாமரையித்யாதி.) கொலையானை - கொலையில் உத்யுக்தமான வானை..............................*

---

## ஏழாம்பாட்டு.

குழைகழல்கள்குறுகினநங்கோவிந்தன்குடிகொண்டான்
றிழைகுழுவுகடல்புடைசூழ்தென்னாட்டுத்திலதமன
வழைகுழுவுமணிமாடவாட்டாற்றான்மலரடிமேல்
விழைகுழுவுநறுந்துளபமெய்கின்றுகமழுமே.

## ஆறாயிரப்படி.

( குழைகழல்கள் ) இப்படி நெஞ்சே நாம் குழைகழல்கள் குறுகினம், நம்கோவிந்தன் ஸபரிக்ரஹமாகவந் தென்னுள்ளே புகுந்தருளினான். இதுக்கடையாள மென்னென்னில்; வாட்டாற்றான் திருவடிகள் திருத்துழாய் என்னுடம்பெல்லாம் கமழ்கிறபடி பாராயென்கிறார்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தான் ஸம்ஶ்லேஷித்ததுக் கடையாளந்தோன்றும்படி ஆஶ்ரிதசுலபனான க்ருஷ்ணன்றா னென்னெஞ்சிலே பூர்ணமாக விருந்தானென்கிறார்.

குழை - விலக்ஷணமான. கழல்கள் - திருவடிகளை. குறுகினம் - குறுகப்பெற்றோம். "நிலைபேரான்" என்கிறபடியே, நம் - நமக்கு பவ்யனான. கோவிந்தன்-க்ருஷ்ணனானவன். பரிபூர்ணமாக, நம்நெஞ்சை, குடி - குடியிருப்பாக. கொண்டான்-ஸ்வீகரித்தான். அத்தாலே, திரை - திரைகள். குழுவு - திரளத்திரண்ட. கடல்-கடலாலே. புடை - பரிசரத்திலே. சூழ் - சூழப்பட்டு. தென்னாடு - தென்னாட்டுக்கு. திலதமன்ன - திலகம்போலே யிருப்பதாய். வரைகுழுவு - மலைகள் திரளவிருந்தாப்போலே யிருக்கிற. மணிமாடம் - மணிமயமான மாடங்களையுடைய. வாட்டாற்றான் - திருவாட்டாற்றி லெழுந்தருளியிருக்கிறவனுடைய. மலரடிமேல் - விகஸிதபத்மம்போலே நிரதிசயபோக்யமான திருவடிகளின்மேலே. விரை - பரிமளங்கள். குழுவு - திரண்டு. நறும்துளபம் - கமழுகிற திருத்துழாயானது. மெய்நின்று - என் சரீரத்திலே ஸ்த்திரமாகநின்று. கமழும் - கந்தியாநின்றது..........................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

"குறுகினம்" என்ற விதென்கொண் டறிவதென்னில்; பார்க்கலாகாதோ உடம்பு கோயிற்சாந்து நாறுகிறபடியென்கிறார்.

( குழைகழல்கள் குறுகினம் ) அணித்தென்னு மித்தைப் பற்றச் சொல்லுகிறேனல்லேன், கிட்டினோம். ( நங்கோவிந்தன் ) ஆஶ்ரிதர்க்கு ஸ்வம்மாக ப்ரஸித்தனான க்ருஷ்ணன். ( கோவிந்தன் குடிகொண்டான் ) "அரவத்தமளியினோடுமழகியபாற்கடலோடு மரவிந்தப்பாவையுந்தானுமகம்படிவந்துபுகுந்து" என்கிறபடியே - திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியோடுங்கூடக் காணு மிவர்நெஞ்சிலே புகுந்தது.

( திரையித்யாதி ) திரைமிக்கிருந்துள்ள கடலாலே சுற்றும் சூழப்பட்டிருப்பதாய், தென்னாட்டுக் கொருதிலகம்போலேயாய், மலைகளை நெருங்கவைத்தாப்போலே மணிமயமான மாடங்களையுடைத்தான திருவாட்டாற்றைக் கலவிருக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய. ( மலரடிமேல் ) செவ்வி, குளிர்த்தி, பரிமளங்களையுடைத்தான திருவடிகளின்மேலே, பரிமளம் மிக்கிருந்துள்ள திருத்துழாயானது. ( மெய்நின்றுகமழுமே ) என்னுடம்பு நிரந்தரமாகநாறாநின்றது. "அன்றிமற்றோருபாயம்" என்று தோழிசொல்லியும் "வெறிகொள்துழாய்மலர்நாறும்" என்று தாயார்சொல்லியும் போந்தவிது, தன்வாயாலே சொல்லும்படியாய்த்து.

( மெய்நின்றுகமழுமே ) என்வார்த்தை பலிப்பவேணுமாகில் என்னுடம்பை மோந்து பார்க்கமாட்டிகோளே. ..................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( துளஸீகந்தீத்யாதி. ) "விரைகுழுவுநறுந்துளபம் மெய்நின்றுகமழுமே" என்றத்தைக்காட்டுகிறதவதாரிகை ( நாநீனமித்யாதி. ) "மெய்" என்றது - சரடு. மெய்-சரீரம், சத்யமும். விவரணம் ( பார்க்கலாகாதோவித்யாதி. )

அநுவாதத்துக்கு பாவம் ( அணித்தென்னுமித்யாதி. )

"நம்" என்றதுக்கு பாவம் ( ஆஸ்ரிதர்க்கித்யாதி. ) குடிகொண்டான்-சபரிகரமாக விருப்பிடமாகக்கொண்டான். நெஞ்சிலேயென்றபடி. "கோவிந்தன் குடிகொண்டான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தபூர்வகமாக பாவம் ( அரவத்தமளியித்யாதி ) பெரியாழ்வார்திருமொழி. அமளி - படுக்கை. அகம்படி - அந்தரங்கரான வடியார். "கோவிந்தன்" என்றத்தைப்பற்ற ( திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியோடுமென்றது. )

குழுவு - கூட்டம். புடை - சுற்றும்.

நறும் - நன்றான. மெய்நின்று - மெய்யிலேநின்று. "நின்று" என்றதுக்கு பாவம் ( ஸ்திரதரமாகவென்று. ) "கமழும்" என்றவர்த்தமானார்த்தம் ( கமழுகின்றதென்று. ) இதுக்கு பலிதம் ( அன்றிமற்றொரித்யாதி. ) மெய்நின்றுகமழுமதறியும்படி யென்னென்ன ( என்வார்த்தையித்யாதி; ) இது "கமழுமே" என்கிற ஏவதாரணார்த்தம். ..................................*

---

## எட்டாம்பாட்டு.

மெய்நின்றுகமழ்துளபவிரையேறுதிருமுடியன்
கைநின்றசக்கரத்தன்கருதுமிடம்பொருதுபுனல்
மைநின்றவரைபோலுந்திருவுருவவாட்டாற்றற்
கென்னன்றிசெய்தேனோவென்னெஞ்சிற்றிகழ்வதுவே.

## ஆறாயிரப்படி.

( மெய்நின்று ) திருத்துழாய் தொடக்கமாக வபர்யந்தபோக்யங்களையுடையனாய், ஸ்வேச்சாநுவிதாயி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திக திவ்யாயுதோபேதனாய், நிரவதிக சௌந்தர்ய விசிஷ்டனாயிருந்த வாட்டாற்றற்கு நானென்ன வநுகூலவ்ருத்திபண்ணினேனாகக்கொண்டு தானென்னுள்ளேபுகுந்து திகழுகிறதென்கிறார். ..................................*

## பன்னீராயிரப்படி.

அசக்ரம், நிரதிசயபோக்யமான வடிவோடே யென்னெஞ்சிலேபுகுந் துஜ்ஜ்வலனாகைக்கு அவனுக்கென்ன நன்மைசெய்தேனென்கிறார்.

மெய்நின்று - திருமேனிமுழுக்கநின்று. கமழ்துளபம் - பரிமளத்தைப் பண்ணுகிற திருத்துழாயினுடைய. விரை - சௌரப்யம். ஏறு - அதிசயித்துவருகிற. தி

ருமுடியன் - திருமுடியையுடையனாய். கருதுமிடம் - திருவுள்ளத்தில் நினைத்தவிடத்திலேபோய். பொருது - பொருது. கைநின்ற - "ராமபார்ஶ்வம்ஜகாம" (ராமபார்ஸ்வம்ஜகாம) என்னுமாபோலே மீண்டு திருக்கையிலேநின்ற. சக்கரத்தன் - திருவாழியையுடையனாய். புனல் - சமுத்ரஜலம்போலே. நின்ற-ஸ்த்திரமான. மை-கருமையையுடைத்தான. வரைபோலும் - மலைபோலே. திருவுருவ - உருமிக்கவழகியவடிவையுடையனாய்க்கொண்டு. வாட்டாற்றுற்கு - திருவாட்டாற்றிலே சுலபனானவனுக்கு. "ராவணோநாபயம்ஹ்ருதம்" (ராவணேநோபயம்ஹ்ருதம்) என்று - ப்ராணனொருதலையாக வடிமைசெய்த பெரியவுடையாரைப்போலவும், "த்ருஷ்டாஸீதா" (த்ருஷ்டாஸீதா) என்ற திருவடியைப்போலவும், என்னன்றி - என்னநன்மை. செய்தேனா - தனக்குச் செய்தேனாக. என்னெஞ்சில்திகழ்வது - என்னெஞ்சிலே புகுந்து உஜ்ஜ்வலனாகிறது. ..........................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

அத்யந்தவிலக்ஷணனானவன் திருவாட்டாற்றிலேவந்து சுலபனாய் என் ஹ்ருதயத்திலேவந்து புகுந்து உஜ்ஜ்வலனாகைக்கு நானென்ன நன்மைசெய்தேனென்கிறார்.

(மெய்யித்யாதி) திருமேனியிலேநின்று கமழாநின்றுள்ள திருத்துழாயில் பரிமளமானது கொழித்தெறடா நின்றுள்ள திருமுடியையுடையவன். கடலில் நீர் ஸஹ்யத்திலேறக் கொழித்தாப்போலே காணும் மலரடிமேல் திருத்துழாயின் பரிமளமானது மெய்யெல்லாங்கொண்டு தலைக்குமேலே போனபடி.

(கையித்யாதி) பாவஜ்ஞனாகையாலே சர்வேஶ்வரன் திருவுள்ளத்திற்கருத்தறிந்து யுத்தத்திலேபுக் கெதிரிகளை யழியச்செய்து வெற்றிகொண்டு. "ஸ்வதூணீம்புநராவிஶத்" (ஸ்வதூணீம்புநராவிஶத்) என்கிறபடியே கையிலேவந்திருக்குமாய்த்து; * ராமபார்ஶ்வம்ஜகாமபோலே. [அதஹரிவரநாத:] [அதஹரிவரநாத:] ஒரு முத்தின் குடைநிழலிலே பையல் பெருமாளுக்கெதிராகவந்து தோன்றினவாறே பொறுக்கமாட்டாமை மேல்விழுந்து, நெடும்போது பொருது இளைப்பித்து, அவன் மாயாப்ரயோகத்திலே கைவைக்குமளவானவாறே, "இனிநமக்குமது வேண்டிவரும், அதுநமக்கிடல்ல, பெருமாள் பண்ணின ப்ரதிஜ்ஞையை நாமழிக்கவொண்ணாது" என்று மீண்டார். [ராமேணஹிப்ரதிஜ்ஞாதம்] [ராமேணஹிப்ரதிஜ்ஞாதம்] சத்யசங்கல்பரான பெருமாள் ப்ரதிஜ்ஞைபண்ணுகிறார். [ஹர்யக்ஷகணஸந்நிதௌ] [ஹர்யக்ஷகணஸந்நிதௌ] வீரர்கள் திரள்நடுவே ப்ரதிஜ்ஞைபண்ணுகிறது. ஆனபின்பு, இவர்க்கு நிர்விஷயமாக்கவொண்ணாதென்று பார்த்தார். [ஹரிவரநாத:] [ஹரிவரநாத:] தாம்செய்த விக்கார்யம் தம்பரிகரத்தில் செய்வாரில்லாமல் செய்தாரல்லர், பொறுமையாலே செய்தாரித்தனை. [ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம்] [ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம்] பூசல் பாக்யமென்று தனி

யேயொன்றுண்டிறே, அத்தால்வந்த புகழைத் தாம்படைத்தார். [ நிஶி அாவதிழ ] [ நிஶிசரபதிம் ] களவுபூசல்செய்வார்க்கொதுங்க நிழலான பையலே. ராஜபுத்ரர்களை யகற்றித் தனியிடத்திலே பிராட்டியைப் பிரித்த பையலிறே. [ ஆஜௌ ] அவர்களுக் கபூமியான செவ்வைப்பூசலிலே. [ யொஜயித்வாஶ்ரமெண ] [ யோஜயித்வாப்ரமேண ] அவனையிளைப்போடேகூட்டினார், தாம் புகழோடே கூடினார். [மம நதிவிஶாலம்லஜ்யித்வா] [ககநமதிவிஶாலம்லங்கயித்வா] நடுவிடை வெளி பெருத்திருக்கிற வாகாசத்தை வருத்தமறக்கடந்தார். [ அர்க்கஸூநுஃ ] [ அர்க்கஸூநுஃ ] அதுசெய்தபடி ஆதித்யபுத்ரனென்று, தோற்றும்படியாயிருந்தது. உதய கிரியிலே தோற்றினால் பின்பு அஸ்தமித்து நிற்கக்காணு மித்தனையிறே. [ ராமபார்ஶ்வம்ஜகாம ] [ ராமபார்ஶ்வம்ஜகாம ] பெருமாளைப்பிரிந்தபடியாலே வந்து கிட்டுவதும் செய்தோமென்று தோற்றும்படி மதிக்க வொன்றுசெய்து வாராமையாலே, நேர் கொடு நேர் முன்னிற்கமாட்டாதே பெருமாளருகே போய்நின்றார். பையல் தலையைப் பிடுங்கிக்கொடுவந்து திருவடிகளிலே யிடப்பெறாத நாமென்சொல்லி முன்னே நிற்பதென்று பெருமாளருகேவந்துநின்றார்.

( புனலித்யாதி ) புனல்போலவும் மைபோலவும் நின்றவரைபோலவு மிருக்கிறவென்னுதல், மைமாறாத வரைபோலேயென்னுதல். வாட்டாற்றாற்கென்று - பூஜாவாசியன்று, வாட்டாற்றானுக்கென்றபடி. (என்னன்றிசெய்தேனே) என்னநன்மைசெய்தேனாக. பெரியவுடையானைப்போலே தடையோடே முடிந்தேனோ, திருவடியைப்போலே "த்ருஷ்டாஸீதா" ( த்ருஷ்டாஸீதா ) என்றுவந்தேனோ, அன்றியே, தன்னுடைய ஆஜ்ஞாநுவர்த்தநம்பண்ணினேனாம்படி விஹிதகர்மங்களை யநுஷ்டித்தேனோ, என்னநன்மைசெய்தேனாக, என்னெஞ்சிலே புகுந்தபின்பு பெறாப்பேறு பெற்றாற்போலே விளங்காநின்றான். ஐஸ்வர்யஸூசகமானதாரது, நினைத்தது செய்து தலைக்கட்டவல்ல பரிகரமது, வடிவழகது, இப்படிதுறைதோறும் தலைமைபெறும்படி யிருக்கிறவன் என்னெஞ்சிலேபுகுந்து பெறாப்பேறுபெற்றானயிராநின்றான்.....................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( மெய்நின்றித்யாதி. ) "மைநின்றவரைபோலும்" என்றுதொடங்கி "என்னெஞ்சில்திகழ்வது" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அத்யந்தேத்யாதி.)

மெய்நின்று - ஈஶ்வரன் மெய்யிலே நின்றென்றபடி. துளபவிரை - துளபத்தினுடையவிரை. துளஸீபரிமளம். "மலரடிமேல்" என்றத்தையும் கூட்டிக்கொண்டு "திருமுடியன்" என்னுமளவும் கடாக்ஷித்து ரஸோக்தி (கடலில்நீரித்யாதி.)

"கருதுமிடம்பொருது - கைநின்றசக்கரத்தன்" என்றந்வயித்து, இதுக்கு பாவம் ( பாவஜ்ஞனகையாலேயித்யாதி. ) "ஸஶரோஶரவணம்ஹஸ்வாஶ்ரயி

ரா தஃக்ருதவ்ஸ்விஃக்ருதகர்மாநிஶிதவத் ஸ்வதூணீம்புநராவிஶத்" (ஸஸ ரோராவணம்ஹத்வா ருதிராக்தஃக்ருதச்சவிஃ। க்ருதகர்மாநிஶிதவத் ஸ்வதூணீம்புந ராவிஶத்) இதியுத்தகாண்டே. இதுக்கு த்ருஷ்டாந்தம் (ராமபார்ஶ்வமித்யாதி.)

ஶ்லோகார்த்த மருளிச்செய்வதாக ப்ரதீகோபாதாநம் (அதஹரீத்யாதி.) ஶ்லோகத்துக் கவதாரிகை (ஒருமுத்தினித்யாதி.) (நமக்குமதுவேண்டிவரும்) இத்யாதிக்கு - நமக்கும் மாயாப்ரயோகம் வேண்டிவரும், அப்போதவனுக்குக் கொலைதப்பாது, கொன்றால் பெருமாள் ப்ரதிஜ்ஞாபங்கம் வருமென்று மீண்டானென்றபடி.

அப்படி பெருமாள் ப்ரதிஜ்ஞைபண்ணினரோ வென்ன (ராமேணேத்யாதி) "ராமேணஹிப்ரதிஜ்ஞாதம் ஹர்யக்ஷகணஸந்நிதௌ। உத்ஸாதநமமித்ராணாம் ஸீதாயைஃபரிவஞ்சிதா" (ராமேணஹிப்ரதிஜ்ஞாதம் ஹர்யக்ஷகணஸந்நிதௌ। உத்ஸாதநமமித்ராணாம் ஸீதாயைஃபரிவஞ்சிதா) இதிராவணம் ப்ரதி மாருதிஃ. ப்ரதிஜ்ஞையை யழிக்கவொண்ணாதென்னுமத்தை ஹேதுபூர்வகமாக வருளிச்செய்கிறார் (சத்யசங்கல்பரான வித்யாதிவாக்யத்ரயத்தாலே.)

"ஹரிநாதஃ" (ஹரிநாதஃ) என்னாதே "ஹரிவரநாதஃ" (ஹரிவரநாதஃ) என்றதுக்கு பாவம் (தாம்செய்தவித்யாதி.) பூசல்பாக்யம் - வீரஸ்ரீ. ராக்ஷஸமென்னாதே "நிஶிசரபதிம்" (நிசிசரபதிம்) என்று விசேஷித்ததுக்குபாவம் (களவுபூசலித்யாதி.) அவன் களவுபூசல்செய்தானோவென்ன (ராஜபுத்ரர்களையித்யாதி.) "கீர்த்திம் - ப்ராப்ய" என்றத்தைப்பற்ற (தாம்புகழோடே கூடினாரென்றது.) ஆதித்யனப்படி வருத்தமறக் கட்டப்பனோவென்ன (உதயகிரியிலேயித்யாதி.) வந்து கிட்டுவதும் செய்தோமென்று தோற்றும்படி - வந்துகிட்டுமிடத்தி லின்னதுசெய்தோமென்று தோற்றும்படியென்று கூட்டுவது. "மதிக்கவொன்றுசெய்துவாராமையாலே" என்றத்தை விவரிக்கிறார் (பையலித்யாதி.)

புனல் - சமுத்ரம். "திருமுடியன்" இத்யாதிகளிற்சொன்ன ஏகவசநாநுகுணமாக "வாட்டாற்றுற்கு" என்றதுக்கர்த்தம் (வாட்டாற்றுற்கித்யாதி.) கீழெல்லாவற்றையும் கடாக்ஷித்து பாவம் (ஐஶ்வர்யேத்யாதி.) "தத்ரத்ருஷ்டாமயாஸீதா ராவணாந்தஃபுரேஸதீ। ஸந்யஸ்யத்வயிஜீவந்தீ ராமாராமமநோரதம்" (தத்ரத்ருஷ்டாமயாஸீதா ராவணாந்தஃபுரேஸதீ। ஸந்யஸ்யத்வயிஜீவந்தீ ராமாராமமநோரதம்) இதி சுந்தரகாண்டே ராமம்ப்ரதிமாருதிஃ. "ந்யவேதயதமேயாத்மாத்ருஷ்டாஸீதேதிதத்த்வதஃ" (ந்யவேதயதமேயாத்மாத்ருஷ்டாஸீதேதிதத்த்வதஃ) இதி ஸங்க்ஷேபே..........................................*

---

# ஒன்பதாய்பாட்டு.

---

திகழ்கின்றதிருமார்பிற்றிருமங்கைதன்னோடுந்
திகழ்கின்றதிருமாலார்சேர்விடந்தண்வாட்டாறு
புகழ்நின்றபுள்ளூர்திப்போரரக்கர்குலங்கெடுத்தா
னிகழ்வின்றியென்னெஞ்சத்தெப்பொழுதும்பிரியானே.

## ஆறுயிரப்படி.

(திகழ்கின்ற) தனக்கு திவ்யமஹிஷி, சர்வலோகேஶ்வரியான பெரியபிராட்டி, சேர்விடம் திருவாட்டாறு; தன் திருவடிகளில் கைங்கர்யைகரதித்வமே புகழாகவுடையனுயிருந்த பெரியதிருவடி, தனக்கு திவ்யவாஹநமும் ஆஶ்ரிதவிரோதி நிரஸநோபகரணமும்; இங்ஙனே யிருந்துவைத்து, என்னுடைய நிகர்ஷத்தைப்பார்த்து என்னையிகழாதே ஒருக்ஷணமென்னைப்பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவத்தை யுடையனுய்க்கொண்டு என்னெஞ்சினுள்ளே புகுந்திருந்தருளினுன்; ஒருவனுடைய குணவத்தை யிருக்கும்படியே யிதுவென்கிருர்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஶ்ரியஃபதியாய்க்கொண்டு திருவாட்டாற்றிலே நின்றவன், என்னெஞ்சை யொருக்காலும் பிரிகிறிலனென்கிருர்.

திகழ்கின்றதிருமார்பில் - ஸ்வாபாவிகமாக விளங்குகிற திருமார்பில். திருமங்கைதன்னேடும் - நித்யயௌவந ஸ்வபாவையான லக்ஷ்மியோடேகூட. திகழ்கின்றதிருமாலார் - விளங்குகிற ஶ்ரியஃபதியானவன். சேர்விடம் - தான் நித்யவாசம்பண்ணுகிறவிடம். தண் - ஶ்ரமஹரமான. வாட்டாறு - திருவாட்டாறு. "ஊாஸஹுவா" (தாஸஸ்ஸகா) என்கிறபடியே, புகழ்நின்ற - சேஷத்வகீர்த்திக்கு வாஸஸ்தாநமான. புள் - பெரியதிருவடியை. ஊர்தி - நடத்துவானுய். இவ்வாஹநபலத்தாலே, போர் - யுத்தோத்பலரான. அரக்கர் - ராக்ஷசருடைய. குலம் - திரளை. கெடுத்தான் - நசிப்பித்தவன். என்னெஞ்சத்து - ஹேயமான வென்னெஞ்சிலே. இகழ்வின்றி - ஒரு அநாதரமின்றியே. எப்பொழுதும் - சர்வகாலமும். பிரியான்-பிரிகிறிலன். .........................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அத்யந்தம் பூர்ணனுனதானிகழாதே யென் மநஸ்ஸை சர்வகாலமும் விடுகிறிலன், ஒருவனுடைய வ்யாமோஹமே! என்று ப்ரீதராகிருர்.

(திகழ்கின்றவித்யாதி வெறும்புறத்திலே விளங்காநின்றுள்ள திருமார்விலே யெழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியாரோட்டைச் சேர்த்தியழகாலும் விளங்காநின்றுள்ள ஶ்ரியஃபதியானவன். அல்லாதாரையும் ஸ்ரீமான்களென்று சொல்லுமிறே ஔபசாரிகமாக, அப்படியல்ல விங்கு; * திருமங்கை தன்னேடும் திகழ்கையாலே ஶ்ரியஃபதியென்று பேரையுடையவன். இந்த ரேபமுமொரு ப்ரயோஜநமில்லை; திருமாலானவனென்றபடி; "புள்ளூர்தி" என்றவோபாதி. (சேர்விடம் தண்வாட்டாறு) ஶ்ரியஃபதித்வத்தோபாதியும் போருமாய்த்து அவ்வூரை யிருப்பிடமாகவுடையனுயிருக்கிறவதுவும். (புகழித்யாதி) புகழெல்லாம் தன்பக்கலிலே கிடக்கும்படியிருக்கிற பெரியதிருவடி - வாஹநம். புகழட்ங்கலும் கிடப்பதவன்பக்கலிலே; அத்தையுடையனென்கிற விதுவே யிவனுக்கேற்றம்.

(போரித்யாதி) செவ்வைப்பூசலிலே ராக்ஷசஜாதியைக் குலமாகமுடித்தான். (இகழ்வித்யாதி.) "சம்சாரி" என்று பிற்காலியாதே, ஒரு கார்யப்பாட்டாலே செய்தானும், பின்பு விட்டுக் கைப்பிடிக்கையன்றிக்கே சர்வகாலமும் விடுகிறிலன். பித்தோபஹதர் சந்தநபங்கத்தினின்றும் கைவாங்கமாட்டாதாப்போலே, க்ஷணகாலமும் பிரியமாட்டுகிறிலன்... ........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (திகழ்கின்றவித்யாதி.) "திருமாலார்" என்று தொடங்கி "எப்பொழுதும் பிரியானே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அத்யந்தமித்யாதி.) "பிரியானே" என்றத்தைப்பற்ற (ப்ரீதராகிறுரென்றது.)

"திருமாலார்" என்னுநிற்க "திருமங்கை தன்னோடும்" என்றதுக்குக் கருத்தேதென்ன (அல்லாதாரையுமித்யாதி வாக்யத்ரயம்.) இந்தரேபம்-"திருமாலார்" என்றவிடத்தில் ரேபம். ஸப்தத்தாலே - "வாட்டாற்றுற்கு" என்று கீழ்ச்சொன்ன ரேபத்தை சமுச்சயிக்கிறது. புள்ளூர்தியென்றவோபாதியென்றது - "புள்ளூர்தி" என்கிற திருநாமம்போலே "திருமால்" என்கிற திருநாமமும் முக்யமென்றபடி. "திருமாலார்" என்றத்தோடே "சேர்விடம் தண்வாட்டாறு" என்றத்தையும் கூட்டிபாவம் (ஸ்ரிய꞉பதித்வத்தோபாதியுமித்யாதி.)

"புகழ்நின்றபுள்" என்றதுக்கர்த்தம் (புகழெல்லாமித்யாதி.) புகழ்நிற்பதவன்பக்கலிலேயாகில் ஈஸ்வரனுக்கு வாசியேதென்ன (புகழடங்கலுமித்யாதி.)

போர் - போரிலே. யுத்தத்திலே. "இகழ்வின்றி" என்றதுக்கும் "எப்பொழுதும்" என்றதுக்கும்பாவம் (சம்சாரியித்யாதி.) இகழ்தல் - விடுதல். ஸத்ருஷ்டாந்தமாக விவரணம் (பித்தோபஹதரித்யாதி.)

சேர்விடமான தண்வாட்டாற்றிலேயிருக்கிற - புகழ்நின்ற புள்ளூர்தி என்றந்வயிப்பது.........................................................................*



# பத்தாம்பாட்டு.

பிரியாதாட்செய்யென்றுபிறப்பறுத்தாளறக்கொண்டா
னரியாகியிரணியனையாகங்கீண்டானன்று
பெரியார்க்காட்பட்டக்காற்பெறுதபயன்பெறுமாறு
வரிவாள்வாயரவணைமேல்வாட்டாற்றான்காட்டினனே.

## ஆறுயிரப்படி.

(பிரியாது) இனியொருகாலமும் தன்னைப்பிரியாதே சர்வசேஷவ்ருத்தியையும் பண்ணென்றுகொண்டு என்னை யநந்யார்ஹசேஷமாகக் கொண்டானின்று; அரியாகி யிரணியனை யாகங்கீண்டானன்று; பெரியார், தங்களை யாஸ்ரயித்தவர்களுடைய சிறுமையும் கொடுக்கப்படுகிற பொருளின் சீர்மையும் பாராதே, அவர்களுக்கு "இனியில்லை" என்னும் சீரிய பொருளைக் கொடுப்பாரொன்னுமிடம், வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான் என்பக்கலிலே காட்டியருளினனென்கிறார்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பெரியவர்கள் எதிர்த்தலையில் சிறுமைபாராதே அநந்தரத்திலேயு பகரிப்பாரென்னு மித்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தானென்கிறார்.

பிரியாது - யாவதாத்மபாவி பிரியாதே. ஆட்செய் - அடிமைசெய். என்று - என்றுசொல்லி. பிறப்பு - அதுக்கு விரோதியான ஜந்மசம்பந்தத்தை. அறுத்து - அறுத்து. அற - மிகவும். ஆட்கொண்டான் - அடிமைகொண்டவனாய். அன்று - பெற்றதமப்பனாலே ப்ரஹ்லாத னீடுபட்டவன்று. அரியாகி - நரசிம்ஹமாய். இரணியனை - ஹிரண்யனுடைய. ஆகம் - சரீரத்தை. கீண்டான் - பிளந்தவனாய். வரி - வரியையும். வாள் - ஒளியையுமுடைத்தாய். வாய் - பஹுமுகமான. அரவணைமேல் - திருவரவணையின்மேலே. வாட்டாற்றான் - திருவாட்டாற்றிலே கண்வளர்ந்தருளுகிறவன். பெரியார்க்கு - பெரியவர்களுக்கு. ஆட்பட்டக்கால் - அடிமைப்பட்டால். பெறுத - பெறுதற்கரிதான. பயன் - ப்ரயோஜனங்களையும். பெறுமாறு - பெறும் ப்ரகாரத்தை. காட்டினன் - காட்டினான்......................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

மஹாபுருஷர்களையடைந்தால் எதிர்த்தலை பாராதே தங்கள் தரத்தைக் கொடுப்பர்களென்னு மிவ்வர்த்தத்தை, திருவாட்டாற்றில் நாயனாரென்பக்கலிலே காட்டினானென்கிறார்.

(பிரியாதித்யாதி) நமக்குப்பிரியாதே யடிமைசெய் யென்றருளிச்செய்து, விரோதியையும்போக்கி, நித்ய கைங்கர்யத்தையும் கொண்டான். "எனக்கே யாட்செய்" என்னவேணுமென்று நாம் * எம்மாவீட்டிலே ப்ரார்த்தித்தபடியே செய்தான், "இங்கின்றநீர்மை யினியாமுறாமை" என்று * பொய்நின்றஞானத்தி லபேக்ஷித்தபடியே பிறப்பறுத்தான், "தனக்கேயாக" என்று * எம்மாவீட்டிலே ப்ரார்த்தித்தபடியே ஆளறக்கொண்டான்.

(அரியாகியித்யாதி.) இதுக்கு முன்பே தமக்குப் பண்ணிற்றோருபகாரத்தைச் சொல்லுகிறார். (அரியாகி.) ஸ்ரீநரசிம்ஹமாய் ஹிரண்யனுடைய முருட்டுடலை அநாயாஸேந கிழித்தான். (அன்று) அன்றப்படி செய்தான்; இன்றிப்படி செய்தான் - "க்ரியதாமிதிமாம்வத" (க்ரியதாமிதிமாம்வத) என்கிறபடியே என்விரோதியைப்போக்கி நித்ய கைங்கர்யத்தைக்கொண்டான். "முகப்பே கூவிப்பணிகொள்ளாய்" என்றிறே யிவர் ப்ரார்த்தித்தது.

( பெரியாரித்யாதி. ) மஹாபுருஷ சமாச்ரயணத்தாலே துர்லபமான ப்ரயோஜநத்தைப் பெறுவர்களென்னு மர்த்தத்தை, வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான் என்பக்கலிலே காட்டினான். [மஹாத்மநாம் ஸம்ஶ்ரயமப்யுபேதோ நைவாவஸீதத்யதிதுர்க்கதோபி] [மஹாத்மநாம்ஸம்ஶ்ரயமப்யுபேதோ நைவாவஸீதத்யதிதுர்க்கதோபி] மஹாபுருஷசமாஶ்ரயணம்பண்ணினால், பின்னை அவர்கள், கொள்ளுகிறவன் சி

றுமைபார்த்தல் கொடுக்கிறதின் பெருமைபார்த்தல் செய்யாதே கொடுப்பர்களென்று இங்ஙனே நாட்டிலே யொன்றுண்டு; அத்தை யென்பக்கலிலே காட்டினன். ப்ரஹ்லாதாதிகளைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்டானே.......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( பிரியாதித்யாதி. ) "பெரியார்க்காட்பட்டக்கால்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை ( மஹாபுருஷர்களை யித்யாதி. ) தரத்தை - அதிசயத்தை.

கீழ்வாக்ய விவரணமாதல், இதுதான் கீழ்வரர்த்தித்தபடியே செய்தானென்கிறாராதல் ( எனக்கேயாட்செய்யித்யாதி. ) "அற" என்றது - காலாவதியறுகையாய், நித்யகைங்கர்யம் கொண்டானென்னுதல்; "அற" என்று தனக்கேயற்றுத்திரும்படி கைங்கர்யம் கொண்டானென்னுதல். இதுக்கு சூசகசப்தம் ( தனக்கேயாகவென்று எம்மாவீட்டில் ) இத்யாதிவாக்யம்.

ப்ரஹ்லாதனுக்குச்செய்தது தமக்குச்செய்ததாக நினைத்திருக்கு மிவர் திருவுள்ளத்தை யடியொத்தி யருளிச்செய்கிறார் ( இதுக்குமுன்பேயித்யாதி. ) "அன்று" என்றதுக்குபாவம் ( அன்றப்படியித்யாதி. ) இன்று செய்ததேதென்ன ( க்ரியதாமித்யாதி. ) "𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌮𑌿𑌤𑌿𑌮𑌾𑌂𑌵𑌦" (க்ரியதாமிதிமாம்வத) என்கிறவிது * எம்மாவீட்டிலில்லையேயென்ன (முகப்பேயித்யாதி.)

"மஹாபுருஷர்கள் தங்களை யாஸ்ரயித்தவர்களுக்கு துர்லபமான ப்ரயோஜநத்தைக் கொடுப்பர்கள்" என்னுமதுக்கு ப்ரமாணம் ( மஹாத்மநாமித்யாதி. ) "𑌸𑍋𑌹𑌂𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑍍𑌥𑌃𑌕𑌰𑍁𑌣𑌾𑌂𑌕𑍁𑌰𑍁𑌤𑍍𑌵𑌂𑌸𑌂𑌸𑌾𑌰𑌗𑌰𑍍𑌤𑍇𑌪𑌤𑌿𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋। 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑌭𑍍𑌯𑍁𑌪𑍇𑌤𑍋 𑌨𑍈𑌵𑌾𑌵𑌸𑍀𑌦𑌤𑍍𑌯𑌤𑌿𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑍋𑌽𑌪𑌿" (ஸோஹம்ப்ருஸார்த்தஃகருணும்குருத்வம்ஸம்ஸாரகர்த்தேபதிதஸ்ய விஷ்ணே। மஹாத்மநாமாஸ்ரயமப்யுபேதோ நைவாவஸீதத்யதிதூர்க்கதோபி) இதி விஷ்ணுதர்மே க்ஷத்ரபந்துபாக்யாநே. விவரணம் (மஹாபுருஷேத்யாதி.) பெறுத பயன் பெறுமாறு - பெறப்போகாத புருஷார்த்தத்தையும் பெறுவர்களென்னுமர்த்தத்தை யென்று சப்தார்த்தம். இது ப்ரஹ்லாதாதிகளுக்கு மில்லையோ, அவர்களைப்பற்ற விவர்பெற்ற வதிசயமேதென்ன (ப்ரஹ்லாதாதிகளையித்யாதி;) இது "ஆளுங்கொண்டான்" என்றத்தைக் கடாக்ஷித்து.

அன்று-அரியாகி யிரணியனை யாகங்கீண்டான், இன்று,பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்தாளறக்கொண்டான், பெரியார்க்காட்பட்டக்காலித்யாரப்யாந்வயஃ*

---

# பதினொன்றாம்பாட்டு.

---

காட்டித்தன்கனைகழல்கள்கடுநரகம்புகலொழித்த
வாட்டாற்றெம்பெருமானைவளங்குருகூர்ச்சடகோபன்
பாட்டாயதமிழ்மாலையாயிரத்துளிப்பத்துங்
கேட்டாரார்வானவர்கள்செவிக்கினியசெஞ்சொல்லே.

## ஆறுயிரப்படி.

( காட்டி ) * அயர்வறுமமரர்க ளித்திருவாய்மொழியைக் கேட்டா லென்படுவாரோ வென்கிறுர். ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக விதினுடைய நித்யசூரிபோக்யதையை யருளிச்செய்கிறுர்.

தன்கழேகழல்கள் - நிரதிசயபோக்யமாம்படி சப்தோத்தரமான வீரக்கழலேயுடைய தன்திருவடிகளே, காட்டி - காட்டி. கடு - துஸ்ஸஹமான. நரகம்புகல்-சம்சாரநிரயப்ரவேஶத்தை, ஒழித்த - ஒழித்த. வாட்டாறு - திருவாட்டாற்றில். எம்பெருமானை - ஸ்வாமியானவனைப்பற்றி. வளம் - அழகிய. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாருடைய. பாட்டாய - பாட்டாயிருக்கிற. தமிழ்மாலை - தமிழ்த்தொடையான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். செவிக்கினிய-செவிக்கு மதுரமாய். செஞ்சொல்-கரணத்ரயமும் ஏகரூபமாகையாலே செவ்விய சொல்லாயிருக்கிற. இப்பத்தும் - இவைபத்தையும். வானவர்கள் - நித்யசூரிகள். கேட்டாரார் - கேட்டு ஒருக்காலும் த்ருப்தராகார்.

இது கலிவிருத்தம். தாழிசையுமாம். ........................................*

## ஈடு - பதினென்ரும்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யநுபவிக்கவுரியார் நித்யசூரிகளென்கிறுர்.

( காட்டித்தன்கனேகழல்கள் ) நிர்ஹேதுகமாகத் தன் ஸ்வரூபரூபகுணவிபூதிகளே ப்ரகாசிப்பிக்கிற வடிவைக்காட்டி.. ( கடுநரகம்புகலொழித்த ) "இங்ஙின்றநீர்மையினியாமுறுமை" என்று அபேக்ஷித்தபடியே செய்தானுய்த்து. அறிவுடையார்க்குப் பொறுக்கவொண்ணுத நரகம் சம்சாரமிறே. ( வளம் ) அழகியதான திருநகரியைத் தம்மதாக வுடையரான வாழ்வார். (பாட்டாயவித்யாதி) "வாஂ௦ஂமெயெவயெ--ஂஂ" (பாட்யேகேயேசமதுரம்) என்கிறபடியே இசையிலே புணர்ப்புண்டதிருவாய்மொழி,யாயிரத்திலும் இப்பத்தையும் கேட்டு. ( ஆரார்வானவர்கள் ) இத்தைச் சொல்லக்கேளாகின்ரல் " இன்னம்சொல், இன்னம்சொல் " என்னுமித்தனைபோக்கி, கேட்ட அம்சத்தாலே த்ருப்திபிறவார்க ளாய்த்து. பகவத்குணங்களே யநுபவித்து, அதுக்குப் போக்குவிடுகைக்குப் பாசுரமின்றிக்கே விம்மல் பொருமலாய்ப் படுகிறவர்கள், இப்பாசுரம் கேட்டால் விடார்களிறே. அதுக்கு ஹேதுவென், அவனுடைய சீலகுணநுபவம்பண்ணியோவென்னில்; இப்பாசுரத்துக்குத் தோற்றென்கிறுர் (செவிக்கினிய) "ஸஂஸ்ரவெயெ--ஂஂ" ( ஸம்ப்ரவேமதுரம் ) என்கிறபடியே செவிவழியேபுக்கு நெஞ்சுக் கினிதாகை யன்றிக்கே, செவிப்பட்டபோதே பிடித்து ரஸிக்கையாலே. அதுக்கடி யென்னென்னில் ( செஞ்சொல்லே ) நினைவும் சொலவும் செயலு மொருபடிப்பட் டிருக்கையா

லே. "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே" என்று "செந்தமிழ்பத்தும்" என்றாரிறே இவர்தாமே....................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( காட்டியித்யாதி. ) "கேட்டாரார்வானவர்கள்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியையித்யாதி. )

கனை - ஆபரணத்வநி. "கழல்" என்றது - திருமேனிக்கு முபலக்ஷணம். "காட்டித்தன்கனைகழல்கள்" என்றதுக்கு பாவம் ( நிர்ஹேதுகேத்யாதி. ) * கடுமைக்குபாவம் ( அறிவுடையார்க்கித்யாதி. )

பாட்டாய - காநரூபமான. "பாட்டாய" என்றதுக்குவாஸநை (பாட்டே இத்யாதி.) புணர்ப்புண்ட - கட்டுண்ட.

"ஆரார்" என்றதுக்கு பாவம் ( இத்தைச்சொல்லவித்யாதி. ) அவர்களப்படி அத்ருப்தராயிருப்பர்களோவென்ன ( பகவத்குணங்களையித்யாதி. ) விம்மல்பொருமல் - அத்யுந்மஸ்தக ப்ரீதியால்வந்த சரீரவிகாரம்.

மேலுக்கவதாரிகை ( அதுக்கு ஹேதுவித்யாதி. ) "செஞ்சொல்" என்றால் கரணத்ரயைகரூப்ய வாசகமாமோவென்ன ( சிந்தையாலுமித்யாதி. )

காட்டித்தன் இத்யாரப்ய, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு, செவிக்கினிய செஞ்சொல்லான - இப்பத்தும் கேட்டு - வானவர்கள் - ஆராரித்யந்வய:. "ஏவம் ப³ஹுவிதா⁴ம் சிந்தாம் சிந்தயித்வா மஹாகபி:। ஸம்ஶ்ரவே மது⁴ரம் வாக்யம் வைதே³ஹ்யா வ்யாஜஹார ஹ" (ஏவம்பஹுவிதாம்சிந்தாம் சிந்தயித்வாமஹாகபி:ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம் வைதேஹ்யாவ்யாஜஹாரஹ) இதிசுந்தரகாண்டே.

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( அருள்பெறுவார் )

சக்ரித்வாத், கேஶவத்வாதி³ஹிதவிதி⁴, ததா² ஶ்ரீமந்நாராயணத்வாத், ஶ்ரோத்ரீஹித்வாத் தூ³ணவான், உசிததனுதயா, பத்மஜானீயதாஹாவாத்। ஸம்ஸ்தோஜாக்ஷத்வ, மோவிந்த³த, உதக³ஸாயத, ஶ்ரீ வதிஷ்வாதி³ஹாவெ, ஶ்ரீ தாமோதரோ ஹ்யாதி³ ஸம்ஸ்துதினிவஹததெ நாதரோதி ஸ்ம ஶௌரி:॥ (காக)

( சக்ரித்வாத் ) ஆழியானருள்தருவான் - திருவாழியைத் திருக்கையிலே யுடையனாகையாலும்; ( கேஶவத்வாதிபிரபிச ) கேசவனெம்பெருமானை - விரோதிநிரஸநசீலனாகையாலும்; ஆதிசப்தத்தாலே - ஸ்வாமித்வம் ஸங்க்ருஹீதம். ( ததாஶ்ரீமந்நாராயணத்வாத் ) நண்ணினம்நாராயணனை - கீழ்ச்சொன்ன ஸ்வாமித்வத்துக்கு

விவரணம். ஸ்ரீமானாய், சர்வாதாரனாய், சர்வநியந்தாவுமாகையாலும்; ( ஸ்நேஹித்வாத்பாண்டவாநாம் ) பாரதத்துப்பாண்டவர்க்காய்ப் படைதொட்டான் - பாரதயுத்தத்திலே "ஆயுதமெடேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணினவன், ஆஶ்ரிதரானபாண்டவர்களிடத்தில் ஸ்நேஹத்தாலே தன் ப்ரதிஜ்ஞையையழித்து ஆயுதமெடுக்கையாலும்; ( அபிமததுளஸீபூஜநீயத்வபாவாத் ) தேனேறுமலர்த்துளவம் திகழ்பாதன்- மதுஸ்யந்தியான திருத்துழாய்மலராலேவிளங்காநிற்கிற திருவடிகளையுடையனாகையாலும்; ( அம்போஜாக்ஷத்வ ) தாமரைக்க ணெனம்மான் - ஸரஸிஜஸத்ருஶங்களான திருக்கண்மலரையுடையனாகையாலும்; ( கோவிந்த: ) கோவிந்தன் குடிகொண்டான் - ஆஶ்ரிதவசம்வதனாகையாலும்; (ஸுமயஃ) துளபவிரையேறுதிருமுடியன்- பரிமளிததுளஸீமாலாலங்க்ருத திவ்யகிரீடத்தாலே ஸூசிதமான வைஶ்வர்ய ப்ரதையையுடையனாகையாலும்; ( ஸ்ரீபதித்வாதிபாவை: ) திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும் - பெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடையனாகையாலும்; ஆதிசப்தத்தாலே - "வரிவாள்வாயரவணைமேல்" என்று மேலிற்பாட்டிற்சொல்லுகிற சேஷசாயித்வம் சங்க்ரஹிக்கப்படுகிறது. இப்படிகளாலே திருவாட்டாற்றெம்பெருமான் ஆஶ்ரிதர்க்கு ஸ்வபதப்ரதாநத்திலே மிகவும் த்வரையையுடையனாயிருக்கிறானென்று "அருள்பெறுவார்" என்கிற தசகத்திலே ஆழ்வாராலே யறுதியிடப்பட்டதென்கிறார் ...........................................................................(கOக)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

அருளாலடியிலெடுத்தமாலன்பா
லிருளார்ந்ததம்முடம்பையிச்சித் - திருவிசும்பி
லித்துடன்கொண்டேகவிவரிசைவுபார்த்தேயிருந்த
சுத்திசொல்லுமாறன்செஞ்சொல். (கூசூ)

( அருளால் ) இதில், பரமபதத்தில் கொடுபோகையிலே த்வரிக்குமிடத்திலும் விதிபரதந்த்ரனாய்ச் செய்கிறபடியைப் பேசினபாசுரத்தை யறுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படி பரோபதேசம் தலைக்கட்டினபின்பு தம்மை அவன் திருநாட்டிலே கொடுபோக த்வரிக்கிறபடியையும், கொடுபோமிடத்தில் தாம் நியமித்தபடி கொடுபோகவேணுமென்று தமக்கவன் பரதந்த்ரனாய் நிற்கிறபடியையும், தாம் பெற்றபேற்றின் கனத்தையும், தம்முடைய திருவுள்ளத்துக்குச்சொல்லியினியராய்ப்பேசுகிற * அருள்பெறுவாரிலர்த்தத்தை அறுவதித் தருளிச்செய்கிறார் "அருளாலடியில்" என்றுதொடங்கியென்கை.

( அருளாலடியிலெடுத்தமால் ) "மயர்வறமதிநலமருளினன்" என்றுகேவலநிர்ஹேதுக க்ருபையாலே அஜ்ஞாநாவஹமான சம்சாரத்தில் நின்றும் அடியிலே

யெடுத்த சர்வேஸ்வரன். (அன்பாலிருளார்ந்த தம்முடம்பையிச்சித்து) * அந்தாமத்தன்பு செய்யுமன்பாலே, * இருள்தருமாஞாலத்தில் ஜந்மமாகையாலே, இருளார்ந்த தம்முடம்பை யிச்சித்து - அஜ்ஞாநப்ரசுரமான தம் தேஹத்தை வாஞ்சித்து ஜ்ஞாநபரிமளம் விஞ்சின சரமசரீரமாகையாலே அவனுதரிக்கப்புக்கான். (இருவிசும்பில்) பெரியவானிலே. (இத்துடன்கொண்டேக) இவர் "ஸஜ ாநாவஹு" (அஜ்ஞாநாவஹம்) என்றநாதரிக்கிற விஸரீரத்துடனே கொடுபோக. (இவரிசைவு பார்த்தேயிருந்த சுத்திசொல்லுமாறன் செஞ்சொல்) விதிபரதந்த்ரனுய், "ஹமெ ......" (ஸமாஸ்துஸங்குலாம்க்ருத்வா) இத்யாதிப்படியே பிராட்டி திருவுள்ளக்கருத்தைப் பின்சென்று செய்தாப்போலே, இவரநுமதிபார்த்தேயிருந்த வவனுடைய சுத்தியைச் சொல்லு மாழ்வாருடைய ஸ்ராவ்யமான சப்தங்கள் அதாவது - "என்னெஞ்சத்துள்ளிருந்து" என்றும், "நிலைபேரானென்னெஞ்சத்தெப்பொழுதும்" என்றும், "என்னன்றிசெய்தேனுவென்னெஞ்சில்திகழ்வதுவே" என்றும், "இகழ்வின்றியென்னெஞ்சத்தெப்பொழுதும்பிரியானே" என்றும், இப்படி இவர் திருவுள்ளத்தை விரும்பி, "அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்காழியானருள்தருவானமைகின்றுனது நமது விதிவகையே" என்றும், "இன்றுவிண்ணுலகம் தருவானுய் விரைகின்ருன்விதிவகையே" என்றும், இவர் தம்தேஹத்தை யொழியக் கொடுபோகவேணுமென்றபடியே பரதந்த்ரனுய் நின்ற குணசுத்தியைப் பேசினபடியென்கை. * விதிவகையே நடத்துமவனே உபதேஸஸத்பாத்ரமென்றபாத்ரசுத்தியிறே. இசைவு பார்த்தேயிருந்த சுத்தியென்று - அவ்வ்ருத்தாந்தத்தைப் பேசினபடியென்றுமாம்............................................................(கூகூ)

பத்தாம்பத்தில் - ஆருந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - கூகூ.—பாட்டு - கஶ௨அ.

---



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### செஞ்சொல் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(செஞ்சொற்கவிகாள்) தான்சொன்னபடியே செய்யக்கடவனாகச் சமைந்துகொண்டு தம்முடைய திருவுள்ளத்திலே புகுந்தருளின வெம்பெருமான் தம்மோடுகலந்த கலவியாலே தமக்குப்பிறந்த நிரவதிகப்ரீத்யதிசயத்தாலே..........................................................*

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழிவர்க்குப் பரமபதத்தைக் கொடுக்கையிலே யுத்யோகித்த சர்வேஶ்வரன் இவர் முடியிலே திருவடிகளைவைத்துத் திருவுள்ளத்திலே பூர்ணமாகப் புகுந்திருந்து, "விரைகுழுவுநறுந்துளவம் மெய்நின்றுகமழும்" என்னும்படி திருமேனி முழுக்கத் திருத்துழாய் பரிமளமாம்படியாக விவருடைய சரீரத்தோடு அந்தஃகரணத்தோடு மற்றுமுள்ளவவயவங்களோடுவாசியற அத்யபிநிவிஷ்டனா யாதரிக்கிறபடியைக்கண்டு, இவ்வாதராதிசயத்துக்கு ஹேதுவான வவனுடைய ஆஶ்ரிதவிஷயமான வபிநிவேசத்தையும், அதிசயிதபோக்யத்வத்தையும், ஆஶ்ரிததேஹத்திலாதரத்தையும், அதிலத்யந்தாபிநிவேசத்தையும், ரஸிகத்வத்தையும், சர்வாதிகத்வத்தையும், ஆஶ்ரிதார்த்த தேசவாஸத்தையும், சர்வப்ரகாரசம்ஶ்லேஷத்தையும், ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஹேதுத்வத்தையும், அபேக்ஷாபராதீநத்வத்தையு மநுசந்தித்து, ஏவம்விதனான சர்வேஸ்வரனுடைய வாதராதிசயமிருந்தபடியால், தாம் "இனியாமுறாமை" என்று நாமுபேக்ஷித்த தேஹாதிகளையும் விளம்பமறக்கொண்டு போவானைப்போலே யிராநின்றது; அஸ்த்திரமாய், தோஷபூயிஷ்டமாகையாலே அபுருஷார்த்தமாய், அநுபவவிரோதியாகையாலே அநபிமதமாயிருக்கிற வித்தை நம்பக்கலாதரத்தாலே விரும்பாநின்றான், இத்தை யறிவித்தும் நாமவனை யர்த்தித்தும் விடுவித்துக்கொள்ளுவோம் என்று தெற்கில் திருமலையிலே யவனையபேக்ஷிக்க, அதுக்காகவவன் நிவர்த்திப்பிக்கையிலே உத்யுக்தனாம்படியைக்கண்டு ஹ்ருஷ்டராகிறார்.*

### ஈடு.

"விதிவகையே" என்கிறபடியே அவன் தம்மைக்குறித்து பரதந்த்ரனாய் நிற்கிறபடியை யநுசந்தித்தார். அவ்வழியாலே "விரைகுழுவுநறுந்துளவம்மெய்நின்றுகமழுமே" என்றும் "தலைமேலதாளிணைகள்" என்றும் அவன்தன் திருமேனியோடேபுகுந்து கலந்தபடியைப்பேசினார்.

தம்மோடேவந்து கலந்து தம்மைக்குறித்து பரதந்த்ரனாய் திருமேனியைவிடமாட்டாதே அவன் பண்ணுகிற வபிநிவேசத்தைக்கண்டு ; “ இங்கின்ற நீர்மையினியாமுறாமை” என்று நாமடியிலேயர்த்திக்கச்செய்தேயும் இங்கு நம்மைவைத்து ஒருகார்யபுத்த்யாவாகாதேயென்றிருந்தோம்; அதாவது - இப்ப்ரபந்தம் தலைக்கட்டுவித்துக் கொள்ளுகையிறே; அது அவ்வளவிலன்றிக்கே நம்முடம்பு விரும்பிவிடமாட்டாமையாலேயாயிருந்தது; இவன் வெறுமுடம்பனாயிருந்தான்.

“ கவிபாடுவித்துக்கொள்ளுகையென்று வ்யாஜமாத்ரம், ஆநுஷங்கிகபலமாய்வந்ததத்தனை, இதுவேயிவனுக்குநினைவு” என்று பார்த்தார்; “ இவனிவ்வுடம்பை விரும்புகிறது நம்பக்கலாதரத்தாலேயிறே, இப்படி நம்மை விரும்பின விவ்வளவிலே நம்மபேக்ஷிதம் செய்வித்துக்கொள்ளுவோம்” என்றுபார்த்து, “ தேவர் திருவுள்ளத்திலோடுகிறதென்” என்றார்; “ நானுடம்பனாயே வேறொன்றறியாமல் படுகிறபாடன்றோ, மற்றுண்டோ” என்றான்; “ அங்ஙனெண்ணாது, தேவரிதில் பண்ணியருளுகிற விருப்பத்தைத் தவிரவேணும்” என்று விண்ணப்பம் செய்ய; இவர் விலக்கினது மிகவுமவனுக்கபிநிவேசத்துக்குடலாய்த்து; தந்தாமைக்கொண்டருமைப்படுத்துவர்களிறே மேல்விழுகைக்காக, அதுபோலேயாய்த்து.

இப்படி இவனிதிலே பண்ணுகிற ஆதரத்தைக்கண்டு, “ இவனுடைய வபிநிவேச மிருந்தபடியால் இவ்வுடம்போடே நம்மைக்கொடுபோக நினைத்திருக்கிறான்போலேயிருந்தது, அப்படிசெய்தபோது இஸ்ஸம்சாரம் நமக்கு நித்யமாய்விடும், இங்கேயிருந்து இதுக்கொருமுடிவு கண்டு தாமத்தையிழந்தோமாமித்தனை, இத்தைக் கழித்துக்கொள்ளவேணும்” என்றுபார்த்தால்; “ என் பக்கல்பண்ணின வபிநிவேஶமாகில் இத்தைவிரும்புகைக்கடி, எனக்கிது அநபிமதம், தேவருமிதில்பண்ணுகிறவிருப்பத்தைத்தவிரவேணும்” என்ன; “ நீரும்முடைய வுத்தேஶ்யத்தைவிடாதவோபாதி நாமும் நம்முத்தேஶ்யத்தை விடுவதோமோ” என்ன; “இவனிப்படி விரும்புகிறது இதினுடைய தோஷதர்ஶநம்பண்ணாமையிறே, இவனை யிதில் தோஷதர்ஶநத்தைப் பண்ணுவிப்போம்” என்று பார்த்து, “ இதாகிறது உபசயாத்மகமாய் ஹேயமாயிருப்பதொன்று, விரும்பப்படுமாத்மாவைப்போலே ஏகரூபமாய் விலக்ஷணமாயிருப்பதொன்றல்ல, இத்தையுபேக்ஷித்தருளவேணும்” என்றார்; அதுதானே யிவனுக்கு விருப்பத்துக்குடலாய்த்து ; அபிமதவிஷயத்திலழுக்குகப்பாரைப்போலே.

“ சர்வதா இவன் விடமாட்டானாயிருந்தான், இவன்றன்னைக்காற்கட்டியாகிலுமிக்காற்கட்டை யவிழ்த்துக்கொள்ளுவோம்” என்று பார்த்து, “ இதில்பண்ணுகிற விருப்பத்தை தேவர் தவிரவேணும்” என்று சரணம்புக்கார்; இவர்சொன்னபடி செய்ய விழிந்தவனாகையாலே தனக்கிதிலே மேன்மேலபேக்ஷைசெல்லச்செய்தேயும் “இவர்க்கிதிப்படியுபேக்ஷா

விஷயமான பின்பு நாமுமினியித்தை வருந்தியுபேக்ஷிப்போம்" என்று பார்த்தான். இவர் பக்கல் பாரதந்த்ர்யத்தாலே இத்தையொழிய வவன் கொடுபோவானுயிருந்தான். ஆக இப்படியாலே தொடங்கின பாரதந்த்ர்யத்தை நிகமித்து, "சர்வநியந்தாவாய் சர்வாதிகனுன சர்வேஶ்வரன், தனக்கிதிலே யபேக்ஷையும் செல்லாநிற்கச்செய்தே, நாம் 'இத்தைத்தவிரவேணும்' என்னத் தவிருவதே!, இதொரு சீலமிருக்கும்படியே!, இவ்விஷயத்தி லொருவருமிழியாதேகொள்ளுங்கோள், இழிந்து நான்பட்டதுவேயமையும்" என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பிறர்க்குச்சொல்லித் தலைக்கட்டுகிறுர்......................................................*

## ஜீயர் அரும்பதம்.

செஞ்சொல் ப்ரவேஶே, சங்கதிகதநார்த்தம் வ்ருத்தாநுவாதம் (விதிவகையித்யாதி.)

சங்கதி (தம்மோடேயித்யாதி.) * என்றைக்குமென்னையிலே - அவன் தம்மைவைத்ததுக்கு ஹேது கவிபாடுவிக்கைக்கென்றருளிச்செய்யாநிற்க, தம்முடம்பில் வ்யாமோஹத்தாலே யென்கிறதென்னென்ன வருளிச்செய்கிறுர் (இந்நின்றவித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) வெறுமுடம்பனுயிருந்தான் - கேவலம் தேஹசபலனுயிருந்தானென்றபடி.

ஆனுல் ப்ரபந்தம் பாடுவிக்கவில்லையோவென்ன (கவிபாடுவித்தித்யாதி வாக்யத்ரயம்.) ஆநுஷங்கிகபலம் - அப்ரதாநமாக வந்ததென்றபடி. இதுவே - உடம்பை விரும்பிவிடமாட்டாததுவே.

விரும்பிவிடமாட்டாமையாலேயென்றது - "மாயவாக்கை யிதனுள்புக்கு" இத்யாதியைப்பற்ற.

இப்படி விரும்புகிறவனைத்தவிர வேணுமென்ருல் கேட்குமோவென்ன வருளிச்செய்கிறுர் (இவனிவ்வுடம்பையித்யாதி.) "மங்கவொட்டு" என்றத்தைப்பற்றி (இதில் பண்ணியருளுகிற விருப்பத்தைத்தவிர வேணுமென்றது.) "நன்கென்னுடலம் கைவிடான்" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறுர் (இவர் விலக்கினதித்யாதி.) அதெப்படியென்ன (தந்தாமையித்யாதி.)

அபிநிவேஶமிருந்தபடியாலென்றது - "ஒருமாநொடியும்பிரியான்" இத்யாதியைப்பற்ற. பலபாட்டுக்களிலும் இவர் தேஹத்திலவன் வ்யாமோஹம்பண்ணும் ப்ரகாரம் சொல்லுகையைப்பற்ற பஹுமுகமான வுக்திப்ரத்யுக்திகளை யருளிச்செய்கிறுர் (என்பக்கலித்யாதி.) "திருமாலிருஞ்சோலை - கைவிடேல்" என்றத்தைப்பற்ற (நீரும்முடைய வுத்தேஶ்யத்தையித்யாதி.) இப்ப்ரவேஶத்திலே மூன்றிடத்திலே ஈஶ்வரன் விரும்புகிறதாகவும் இவர்தவிரச் சொன்னதாகவும் சொல்லுகிறது - பலபாட்டுக்களிலு மிவர் திருமேனியி லீஶ்வரனுக்குண்டான வ்யாமோஹத்தைச் சொல்லுகையாலே. அங்ஙனமன்றிக்கே, "மங்கவொட்டே" என்றும், பின்னும் "மங்கவொட்டுன்மாமாயை" என்றும் சொல்ல, பின்னுமவனிதின் தோஷமறியமாட்டாமையாலே ஆனைக்குப் பாடுவாரைப்போலே யிருக்க, "பொங்கைம்புலனும்" இத்யாதியாலே தோஷதர்ஶநம் பண்ணுவிக்கையாலே முக்காலருளிச்செய்கிறுரென்றுல்லல்லது; இது பாட்டு வ்யாக்யாநங்களிலே ஸ்புடம். (இதினுடைய தோஷதர்ஶநமெ

ன்று தொடங்கி ஹேயமாயிருப்பதொன்றென்னுமளவும்) "பொங்கைம்புலனும்" இத்யாதியைப்பற்ற. உபசயமென்றது - அபசயத்துக்கு முபலக்ஷணம். வ்ருத்திக்ஷயங்களை யுடைத்தாயென்றபடி.

காற்கட்டை - விரோதியானவுடம்பை. "மங்கவொட்டு" என்றத்தைப்பற்ற (தவிரவேணுமென்றது.) "நங்கள்கோனே" என்று சேஷத்வத்தை யநுசந்திக்கையாலும், "மங்கவொட்டு" என்று ப்ரார்த்திக்கையாலும், "ப்ரார்த்தநாமதிஃ-ஶரணாகதிர்யாச்நா-ப்ரபத்திஃ" (ப்ரார்த்தநாமதி - ஶரணாகதிர்யாச்நா - ப்ரபத்திஃ) என்றிருக்கையாலே (சரணம்புக்காரென்றது.) இவர் ப்ரார்த்தித்தால் அத்யபிநிவிஷ்டனானவன் தவிருமோவென்ன இவர் சொன்னபடியேயித்யாதி.) வருந்தியென்றது - "தானுங்காரமாய்ப்புக்கு" என்றதிலே சித்தம். "மானுங்காரமனங்கெட" இத்யாதியைப்பற்ற (இத்தையொழிய வவன் கொடுபோவாரு யிருந்தானென்றது.)

தொடங்கின பாரதந்த்ர்யத்தை நிகமித்து - * அருள்பெறுவாரில் தொடங்கின வீஶ்வரனுடைய பாரதந்த்ர்யத்தை யித்திருவாய்மொழியிலே நிகமித்தென்றபடி. "உயிர்காத்தாட்செய்மின்" என்றத்தைப்பற்ற (ஒருவருமிழியாதே கொள்ளுங்கோளென்றது.)........................................................*

---

## ஏழாந் திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின்திருமாலிருஞ்சோலை
வஞ்சக்கள்வன்மாமாயன்மாயக்கவியாய்வந்தென்
னெஞ்சுமுயிருமுள்கலந்துநின்றாரறியாவண்ணமென்
னெஞ்சுமுயிருமவையுண்டுதானேயாகிநிறைந்தானே.

## ஆறாயிரப்படி.

எம்பெருமானைக் கவிபாடுகிறவரைக் குறித்து, நீங்களவனுக் கடிமைசெய்யுமிடத்தி லுங்களுயிரைக் காத்துக்கொண்டடிமைசெய்யுங்கோள். அவன்தனக்கடிமைசெய்வாரை அஸாத்ம்யமாம்படி அதிமாத்ர ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி பாதிக்குமே, அவர்களுடைய விச்சாநுகுணமாக வடிமைசெய்வித்துக்கொள்ளும் ஸ்வபாவனல்லனே யென்னில்; அவன் பாதிக்கும் ஸ்வபாவனாயிருந்துவைத்தே பாதியாதானைப்போலே யிருக்கு மொரு மஹாவஞ்சகன்கிடிகோள். எங்ஙனே யென்னில்; என்னையுபகரணமாகக்கொண்டு கவிசொல்லுகையென்னும் வ்யாஜத்தினாலே யென்னுள்ளேவந்துபுகுந்து, கலந்து, "இன்னபடிசெய்தருளினான்" என்று * அயர்வறுமமரர்க்கு மறிய நிலமல்லாததொருபடி யென்னெஞ்சையுமுயிரையும் தன்னுள்ளேயடக்கி, தானேயாம்படி [illegible]ளபுஜித்து பரிபூர்ணனானென்கிறார். ........................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், "கவிபாடுவித்துக்கொள்ள" என்றொரு வ்யாஜத்தாலே ஈஶ்வரன் தன்பக்கல் பண்ணின வபிநிவேசத்தைக்கண்ட ஹர்ஷத்தாலே, தந்தாமை வேண்டியிருப்பா ரிவ்விஷயத்தி லகப்படாமல் ஆத்மாவை நோக்கிக்கொண்டு அடிமைசெய்யுங்கோளென்று, தாம்பட்டபடியை யருளிச்செய்கிறார்.

திருமாலிருஞ்சோலை - ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகத் திருமலையிலே சந்நிஹிதனாய். அகப்பட்டாருடைய சர்வஸ்வத்தையும் அபஹரிக்குமிடத்தில், வஞ்சக்கள்வன் - அபஹாரகனென் றறியவொண்ணாதபடி வஞ்சித்தபஹரிப்பானாய். மாமாயன்- அதுக்கடியாய் எதிர்த்தலையை மதிமயக்கும் அத்யாஶ்சர்யமான ரூபகுணாதிகளையுடையனானவன். மாயக்கவியாய் - கவிபாடுவித்துக் கொள்ளுகையாகிற க்ருத்ரிம வ்யாபாரத்தாலேயுளனாய். வந்து - நாமிருந்தவிடத்திலே தான் அபிநிவிஷ்டனாய் வந்து. உள்ளுறை காட்டுவாரைப்போலே, என்னெஞ்சுள்ளும் - என்னெஞ்சுக்குள்ளேயும், உயிருள்ளும் - ஆத்மாவுக்குள்ளேயும். கலந்து - ஒருநீராகக்கலந்து. நின்றார் - பரிஸரவர்த்திகளான லக்ஷ்மீப்ரப்ருதிகளும். அறியாவண்ணம் - அறியாதபடி. அவை - அந்த. என், நெஞ்சும் - நெஞ்சையும். உயிரும் - உயிரையும். பிரித்துக்காணவொண்ணாதபடி, உண்டு - க்ரஸித்து. அசேதநமான நெஞ்சோபாதி சேதநனுடைய போக்த்ருத்வமும் அசத்ஸமமாம்படி. தானேயாகி - தானே போக்தாவாய்ப் பெறுப்பேறு பெற்று. நிறைந்தான் - அவாப்த சமஸ்தகாமனானான். செம் - ப்ரயோஜநமில்லாத செவ்வையையுடைத்தாய் ஸ்வயம்ப்ரயோஜநரூபமான. சொல் - சொற்களாலே. கவிகாள் - கவிபாடவல்லவர்களே. உயிர்காத்து - அவன்கையில் உங்களுடைய வாத்மாத்மீயங்க ளகப்படாதபடி காத்துக்கொண்டு. ஆட்செய்மின் - வாசிகமான வடிமைசெய்யப் பாருங்கோள்.

அநந்யப்ரயோஜநரா யிழிவார்க்கு ஆத்மாத்மீயங்க ளவனாலே அபஹ்ருதமாகை அவர்ஜநீயமென்றுகருத்து...........................................................*

## ஈடு - முதற்பாட்டு.

"திருவாய்மொழிபாடுவிக்க" என்றொரு வ்யாஜத்தாலேபுகுந்து தம்பக்க லவன்பண்ணின வ்யாமோஹத்தைக்கண்டு, அவனுக்கடிமைசெய்வார் சிலாதிகளிலே யகப்படாதே கொள்ளுங்கோளென்கிறார்.

(செஞ்சொலித்யாதி) செவ்விய சொல்லையுடைய கவிகாள். கவிக்குச் செவ்வையாவது - அநந்ய ப்ரயோஜநமா யிருக்கை; ப்ரயோஜநத்தைக் கணிசிக்கை கவிக்குக் குடிலமாகையாவது. "இன்கவிபாடுபரமகவிகள்" என்றும் "செந்தமிழ்பாடுவார்" என்றும் சொல்லுகிற முதலாழ்வார்களையாய்த்து நினைக்கிறது. "பெருந்தமிழனல்லேன்" என்ன "வாயவனையல்லதுவாழ்த்தாது" என்கிறவர்களிறே அநந்யப்ரயோஜநர். (உயிர்காத்தாட்செய்மின்) உங்களை நோக்கிக்கொண்டு நின்று கவிபாடப்பாருங்கோள். நீங்களுண்டாய்க் கவிபாடவேணுமே. இத்தலையுண்டானாலிறே அத்தலைக்கு மங்களாசாஸநம்பண்ணலாவது. (ஆட்செய்மின்) என்கிறார் கவிபாடுகை வாசிகமான வடிமையாகையாலே. * ஆட்கொள்வா

னுத்தென்னு யிருண்ட மாயனிறே - அடிமைகொள்வானைப்போலே புகுந்து மற்றைப்படியேயாயிருக்கும் பலிப்பது, பரிஹரித்துக்கொள்ளுங்கோள். "ஆழங்காலிலேயிழிந்தமிழ்ந்துவார் அவ்விடத்தே கொண்டைக்கோல் நாட்டுமாபோலே, கொண்டைக்கோல் நாட்டுகிறார்" என்றுசிற்றுள்கொண்டான். உடையவர், "இன்னுருயிரொன்னுமையாலே அவனுயிரைக்காத்தாட்செய்யுங்கோள்" என்றருளிச்செய்வர். அதாவது-அவன் மேல்விழவிழத் தாங்களிருய்க்கையாவது அவனே யிழக்கையிறே; ஆனபின்பு அவனுயிரைக் காவுங்கோள். "இவ்விடம்பரப்புத்துறை, இவ்விடம்மடு" என்று நிலவரொல்லை குறிக்குமாபோலே. "வம்மின்புலவீர்" என்று முதலிலே ருசியில்லாதாரையு மிரந்தழைக்கிற விவர் சீலாதிகளிலே யிழிகிறவர்களையும் விலக்குகிறாரிறே ப்ரீதிப்ரகர்ஷத்தாலே. "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" "வல்வினையேனையீர்கின்றகுணங்களையுடையாய்" என்று சீலாதிகுணங்களிலே புண்பட்டிறே யிவரிருப்பது. உங்களை யிழக்கக் காரியம்பாராதே, அவனுடையவைஶ்வர்யத்திலே யிழிந்து கவிபாடப்பாருங்கோள். சீலகுணத்தி லிழியநினையாதே கொள்ளுங்கோள். (கவிகாளுயிர்காத்தாட்செய்மின்) "கவிகாள்" என்றால் "உயிர்காத்துக்கவிபாடுங்கோள்" என்னவிறேயடுப்பது, அங்ஙன் சொல்லாதே (ஆட்செய்மின்) என்கிறாராய்த்து; "ஆட்செய்கையாவது - கவிபாடுகை" * புகழுநல்லொருவனில் தம்வாஸனையாலே.

"இஸ்ஸீலகுணத்திலிழியாதே கொள்ளுங்கோள்" என்று நிர்ப்பந்திக்கைக்கு ஹேதுவென்னென்னில்; ஹேது சொல்லுகிறார் மேலெல்லாம். "தானேயாகிநிறைந்தானே" என்று தம்மைக்காண்கிறிலர்காணும். (திருமாலிருஞ்சோலை) திருமலையில் நிலையும் சீலத்துக்குட்லிறே. (வஞ்சக்கள்வன்) களவுதானும் மெய்யென்னக் களவுகாணுமாய்த்து. "என்கண்ணன்கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும்" என்னுமாபோலே-களவுகாணநிற்கச்செய்தே செவ்விதென்று தோற்றும்படியிருக்கும். களவுதன்னைக் களவுகாணுமாய்த்து. இத்தலையில் சேஷத்வத்தை நிலைநிறுத்துவாரைப்போலே புகுந்து, தானத்தை யெறட்டுக்கொண்டு, சேஷித்வத்தை யித்தலையிலேவைத்து சிரஸாவஹியாநிற்குமாய்த்து. இப்படி நீரவன்களவை யறிந்தீராகில் தப்பாதொழிவானென்னென்னில் (மாமாயன்) இப்படி யறியச்செய்தேயும் தப்பவொண்ணுதபடியான வாஶ்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையவன்; "மையலேற்றிமயக்க" இத்யாதி.

குணசேஷ்டிதங்களாலே யும்மை அவனகப்படுத்தின வழிதானேதென்ன (மாயக்கவியாய்) "ஆழ்வீர், உம்மைக்கொண்டு லோகத்தில் நடையாடாதன சிலகவிபாடுவித்துக்கொள்ளப் பாராநின்றோம், அப்படி செய்வோம்" என்றுய்த்துப் புகுந்தது. கவி என்றொரு வ்யபதேசத்தைவிட்டுக் கொண்டுவந்தான்; அபிமதவிஷய மிருந்தவிடத்தே தண்ணீரென்று புகுருமாபோலே. (வந்து) அபிஸரித்தானும் தானேயாய்த்து.

நான் தானிருந்தவிடத்தேசென்று "என்னையிட்டுச் சிலகவிபாடுவித்துக் கொள்ளவேணும்" என்றுசொல்ல, செய்கையன்றிக்கே, தானேவந்தான். அபிகம்யனை தானேயாய்த்து அபிஸரித்தான். இதிறே சீலமாவது. வந்தவிடத்தில் அவனுமக்கு நலிவாகச்செய்ததென்னென்னில் (என்னெஞ்சுமுயிரும்) நெஞ்சென்று - தேஹத்துக் குபலக்ஷணம். உயிரென்று-ஆத்மா. (உள்கலந்து) (ஒருநீராகக்கலந்து.) சரீரத்தோடு ஆத்மாவோடு வாசியற அவகாஹியாநின்றான். (நின்றாறியாவண்ணம்) இப்பரிமாற்றத்துக்கு தேசிகரானபிராட்டி, திருவனந்தாழ்வான், திருவடி முதலானர்க்கும் அபூமியாம்படியாய்த்து என்னோடுகலந்தது. இப்படிப்பட்ட பரிமாற்றத்தில் நிற்பாரவர்களிறே; அவர்களுக்கும் தெரியாதபடி; "ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது" என்னுமாபோலே. (என்னெஞ்சுமுயிருமவையுண்டு) தேஹாத்மவிவேகம் பண்ணமாட்டுகிறிலன்; "உருவமுமாருயிருமுடனேயுண்டான்" என்னுமாபோலே - தேஹத்தையும் ஆத்மாவையுமொக்கபுஜித்தான். (தானேயாகி) தம்மைக்காண்கிறிலர் காணும். இரண்டுதலையுமாய் புஜிப்பாரைப்போலே புகுந்து போக்தா தானேயானான். "என்னை முற்றப்பருகினான்" என்னுமாபோலே, இத்தலை போக்யமாயற்றதாய்த்து. இத்தலை யொருசேதநவஸ்துவென்றுதோற்றாதபடியாகவாய்த்துப் பரிமாறிற்று. பிறர்க்குறுப்பாயிருக்குமதொழியத் தனக்கென்ன ப்ராப்தியில்லாத வசித்வஸ்துவோபாதியாகப் பண்ணினான். "தனக்கேயாக" என்றபடியே கொண்டான். போக்யவஸ்துதன்னிலேயும் ஸ்வரூபபேதங்களுண்டாகாநின்றதிறே; அவ்வோபாதியாய்விட்டது சேதநவஸ்துவும். (தானேயாகி) ஈரரசுதவிர்த்தான். இத்தலையைப் புறக்கவ்வப்பண்ணி தானே அபிமாநியாய்நின்றான். (நிறைந்தானே) அவாப்தசமஸ்தகாமனென்கிற பேரோயாய், இவரைப்பெற்றபின்பாய்த்து பரிபூர்ணனாய்த்து. இங்ஙனேயிருக்கையிறே சீலமாவது. அதாவது - பெரியவன் சிறியவனோடேவந்து கலக்குமிடத்தில் தன்பெருமையும் இவன்சிறுமையும் தோற்றுதபடி புரையறக் கலக்கையிறே; "க்ருதக்ருத்யஸ்ததாராமஃ" (க்ருதக்ருத்யஸ்ததாராமஃ) என்னுமாபோலே. ....................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (செஞ்சொலித்யாதி.) "திருமாலிருஞ்சோலை வஞ்சக்கள்வன்" என்றுதொடங்கி "தானேயாகிநிறைந்தான் - செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின்" என்றவற்றைக் கடாக்ஷித் தவதாரிகை (திருவாய்மொழியித்யாதி.) "ஆய்" என்றத்தைப்பற்ற (ஒருவ்யாஜத்தாலேயென்றது.)

செவ்வைக்கேடேதென்ன (ப்ரயோஜநத்தையித்யாதி.) "செஞ்சொற்கவிகள்" என்கிற தானாயென்ன (இன்கவியித்யாதி.) அவர்கள் அநந்யப்ரயோஜநரோவென்ன (பெருந்தமிழனித்யாதி.) பெருந்தமிழன் - பெரியதமிழன். மஹாகவியென்றபடி. நல்லேன் பெரிது - பெரிதுநல்லேன். இங்கே யிருந்து கவிபாடுகை யாலே நித்யசூரிகளிலும் மிகவும் நல்லனாயிருப்பேனென்று சப்தார்த்தம். இரண்

டார்திருவந்தாதி எழுபத்துநாலாம்பாட்டு, "யானேதவஞ்செய்தேன்" இத்யாதி. முதற்றிருவந்தாதி பதினோராம்பாட்டு, "வாயவனை" இத்யாதி. இத்தால் - "ஜலதீத்ந" (அஸத்கீர்த்தந) இத்யாதியாலே எச்சில்வாய்சுத்திபண்ணினவர்களை வ்யாவர்த்திக்கிறது.

எங்களை நோக்குகிறதென்னென்ன (நீங்களுண்டாயித்யாதி.) எம்பெருமானார் நிர்வாஹத்திலே, காத்து - இருயாதே, ஆட்செய்மின் - மங்களாசாஸநம் பண்ணுங்கோளென்று விவக்ஷித்து; இருய்ப்பதோவென்ன (இத்தலையுண்டானலித்யாதி.) உண்டானலிறேயென்றது - அயோக்யதாநுசந்தாநத்தாலே யகன்று ஸ்வரூபம் நசியாதே யுண்டானலிறேயென்றபடி. அகலிலவனுள னுகாமையாலே தானுளனுக விரகில்லையிறே. மேலும், சீலகுணபரமன்றிக்கே ஸ்வரூபாநுகுணமாக வருளிச்செய்த வாக்யங்களெல்லாம் எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேரவென்றுகண்டுகொள்வது. பாடுமினென்னுதே, "ஆட்செய்மின்" என்கிறதென்னென்ன (ஆட்செய்மினென்கிறரித்யாதி.) உயிர்காக்கைக்கு ப்ரஸக்தியேதென்ன (ஆட்கொள்வானைத்தித்யாதி.) இதுக்கர்த்தம் (அடிமையித்யாதி.) இத்தால் - சீலகுணத்திலே யிழிந்து கவிபாடாதே கொள்ளுங்கோ ளென்றபடி. "உயிர்காத் தாட்செய்மின்" என்றீடுபட்டுச் சொன்னதுக்கு சம்வாதம் (ஆழங்காலிலேயித்யாதி.) கொண்டைக்கோலாவ்து - நிலவராயிருப்பார் ஆறுகள் மடுக்களிலே மேடுபள்ளங்களுக் கடையாளமாக நடுகிற கோல். "உயிர்காத்தாட்செய்மின்" என்றதுக்கர்த்தாந்தரம் (உடையவரித்யாதி.) அவனுயிரைக் காக்கும் ப்ரகாரத்தை உபபாதிக்கிறர் (அதாவதித்யாதி.) சிற்றுள்கொண்டான் நிர்வாஹவிவரணம் (இவ்விடமித்யாதி;) இந்தநிர்வாஹமே ப்ரகரணேசிதம்.

விமுகரையு மழைக்கிறவர் அபிமுகரை விலக்குவானென்னென்ன (வம்மினித்யாதி.) இவர்தாமப்படி சீலகுணத்திலே யீடுபட்டிருப்பரோ வென்ன (நீணைதொறுமித்யாதி.) ஆனல் செய்வதேதென்ன (உங்களையித்யாதி.) ஐச்வர்யம் - நியந்த்ருத்வம்.

ப்ரதிகோபாதாந பூர்வகமாக "ஆட்செய்மினென்கிறர்" இத்யாதி வாக்யத்வயவிவரணம் (கவிகாளென்றுலித்யாதி.)

சீலகுணத்தைச்சொல்லுகிற ப்ரகரணத்திலே "திருமாலிருஞ்சோலை" என்று திருமலையில் நிலையைச்சொல்லுவானென்னென்ன (திருமலையிலித்யாதி.) களவிலே வஞ்சமேதென்ன (களவுதானுமித்யாதி.) அப்படி அவன்களவு மெய்யாயிருக்குமோவென்ன (என்கண்ணனித்யாதி.) செம்மாய்நிற்கும் - செவ்வையாயிருக்கும். இதுக்கர்த்தம் (களவுகாணுநிற்கவித்யாதி.) இத்தால்பலிதம் (களவுதன்னையித்யாதி.) களவுதன்னைக் களவுகாணும் ப்ரகாரமேதென்ன (இத்தலையிலித்யாதி.)

தப்பவொண்ணுத வாச்சர்ய குணசேஷ்டிதங்களை யுடையனு யிருக்குமோவென்ன (மையலேற்றியித்யாதி) நாய்ச்சியார் திருமொழி, "பெய்யுமாமுகில்" இத்யாதி. மையலேற்றிமயக்க - பிச்சேற்றி ப்ராமிப்பிக்க. மாயமந்திரம் - அம்மான்பொடி. வஞ்சக்கள்வன் - வஞ்சித்தபஹரிக்கு மவனிதிசப்தார்த்தம். மாமாயன்-அத்யாச்சர்ய குணசேஷ்டிதங்களையுடையவன்.

"ஆய்" என்றதுக்குபாவம் (ஆழ்வீரித்யாதி.) விவரணம் (கவியென்றெருவித்யாதி.) (ஆழ்வீர்) இத்யாதிவாக்யம் - "மாயக்கவி" என்றதுக்கு பாவம்; "ஆய்" என்றதுக்கு பாவம் (கவியென்றெருவித்யாதி) என்னவுமாம். இதுக்கு

த்ருஷ்டாந்தம் ( அபிமதேத்யாதி. ) மாயக்கவியாய் - க்ருத்ரிமக்கவியாயிதிசப்தா ர்த்தஃ. கவிபாடுவித்துக் கொள்ளுகையாகிற க்ருத்ரிம வ்யாபாரத்தை யுடையனுயெ ன்றபடி. "வந்து" என்றதுக் கர்த்தம் ( அபிஸரித்தானு மித்யாதி. ) உபபாதநம் ( நான்தானித்யாதி. ) ஏதத்விவரணம் ( அபிகம்யனுனவித்யாதி. )

தேஹத்திக் குபலக்ஷணமென்றது - ப்ரகரணத்துக்குச்சேர. பதங்களைக்கூட் டி யர்த்தம் ( சரீரத்தோடித்யாதி.

தேசிகரான - விஷயபூதரான. "நின்ருர்" என்ருல் - பிராட்டிமுதலானு ளைக்காட்டுமோவென்ன ( இப்படிப்பட்டவித்யாதி. ) "நின்ருர்" என்றது - ஈத்ரு ஶ வ்யாமோஹவிஷயமாய் நின்றவர்களென்றபடி. "அபூமியாம்படியாய்" என்ற த்தை விவரிக்கிருர் ( அவர்களுக்குமித்யாதி. ) அப்படி அவர்களுக்கும் அபூமியோ வென்ன ( ஆருயிரித்யாதி. )

"என்னெஞ்சுமுயிருமவையுண்டு" என்றத்தால் பலிதம் (தேஹாத்மவிவே கமித்யாதி.) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (உருவமுமித்யாதி.) சப்தார்த்தம் (தே ஹத்தையுமித்யாதி.) நெஞ்சு - தேஹம்.

"தானே" என்கிற வவதாரணுர்த்தம் ( தம்மையித்யாதி. ) விவரணம் (இ ரண்டுதலையுமித்யாதி.) அவனே போக்தாவானுல் நீரோவென்ன ( என்னை முற்றவி த்யாதி. ) "தானே" என்றத்தால் பலிதம் ( இத்தலையித்யாதி. ) விவரணம் (பி றர்க்கித்யாதி.) இதுதான் ப்ரணயித்வத்தாலன்றிக்கே இவரர்த்திக்கச் செய்ததுவு மென்கிருர் ( தனக்கேயாகவித்யாதி. ) எத்தனையென்ருலும் சேதநனுக்கு வாசியி ல்லையோ, அசித்வஸ்துவோபாதி யென்னலாமோ வென்ன ( போக்யவஸ்துவித்யா தி. ) ஸ்வரூபபேதங்களென்றது - பிந்ந கந்த ரஸாதியுக்த சந்தந குசுமாதி பேதங்க ளென்றபடி. இத்தால் - சைதந்யாதிகளும், வஸ்துகதமான ரஸாதிகளோபாதியாய், போக்தாவுக்கே யுறுப்பாய்விட்ட தென்றபடி. "ஞுக்ஷமவொட்டும் நீரிலே கழுவிப் பைந்தொடிமடந்தையரைக்கொண்டு ஷட்குணரஸாந்நமாக்கி" என்ற தநுசந்தேய மிங்கு.

கீழே "தம்மைக் காண்கிறிலர்" என்றத்தை விவரிக்கிருர் (ஈரரசித்யாதி.) விவரணம் ( இத்தலையையித்யாதி. ) புறக்கவ்வப் பண்ணுகை - அபிமாநசூந்யனும்ப டி பண்ணுகை. அவாப்தசமஸ்தகாமனை இப்போது "நிறைந்தான்" என்கிறதெ ன்னென்ன ( முன்பித்யாதி. ) இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் ( க்ருதக்ருத்ய இத் யாதி ) "அபிஷிச்யசலங்காயாம் ராக்ஷஸேந்த்ரம்விபீஷணம்। க்ருதக்ருத்யஸ்ததாராமோவிஜ்வரஃப்ரமுமோதஹ" ( அபிஷிச்யசலங்காயாம் ராக்ஷஸேந்த் ரம்விபீஷணம்।க்ருதக்ருத்யஸ்ததாராமோவிஜ்வரஃப்ரமுமோதஹ) இதிஸங்க்ஷேபே.

திருமாலிருஞ்சோலை யென்றுதொடங்கி, நிறைந்தான்; ஆகையாலே, செஞ் சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மி னித்யந்வயஃ..................................*

# இரண்டாம்பாட்டு.

தானேயாகிநிறைந்தெல்லாவுலகுமுயிருந்தானேயாய்த்
தானேயானென்பானுகித்தன்னைத்தானே துதித்தெனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதேதிருமாலிருஞ்சோலைக்
கோனேயாகிநின்ருெழிந்தானென்னைமுற்றுமுயிருண்டே.

## ஆறாயிரப்படி.

(தானேயாகி) இப்படி யென்னுயிரை முற்றமுண்டு தானேயாகி பரிபூர்ணனாய், இதினாலே சர்வேஶ்வரனுமாய், என்னுயிரைமாளபுஜித்தும் த்ருப்தனாகாதே நான்சொல்லும் சொற்களைக்கொண் டநுபவிக்கைக்காக வென்னைக்கொண்டு திருவாய்மொழியைச்சொல்லுவித்து, இப்படியே என்னோடுள்ள சம்ஶ்லேஷம் தனக்கினிதாகைக்காக வெனக்குத்தன்னையே நிரவதிகபோக்யமாக்கியருளினான், திருமாலிருஞ்சோலையிலே நாயனாய்நின்றநிலை அவனுக்கு ஸபலமாய்த்தென்றுகொண்டு ததபிப்ராயத்தாலேசொல்லுகிறார் ................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னோடு சம்ஶ்லேஷித்த வதிசயத்தாலே யெனக்கு நிரதிசய போக்யபூதனாய்க்கொண்டு க்ருதக்ருத்யனாயிராநின்றானென்கிறார்.

என்னை - என்னை. முற்றும் - சர்வப்ரகாரத்தாலும். உயிருண்டு-ஆத்மபோகத்தைப்பண்ணி. அத்தாலே, தானேயாகி - ப்ரதானனாய்க்கொண்டு. நிறைந்து-பரிபூர்ணனாய். எல்லாவுலகும் - சமஸ்தலோகங்களும். உயிரும் - தத்கதமானப்ராணிஜாதங்களும். தானேயாய் - தானேயாம்படி அந்தராத்மதயாநிர்வாஹகனாய். அப்படி பொதுவன்றியே, யானென்பான் - அஹம்புத்தி வ்யவஹாரவிஷயமான நானென்கிறவஸ்துவும். தானேயாகி - தானேயாம்படியாய். அந்த அப்ருதக்பாவத்தாலே, தன்னை-ஸ்துத்யனானதன்னைப்பற்ற. தானேதுதித்து - ஸ்தோதாவும் தானேயாய்க்கொண்டுஸ்துதித்து. அத்தால் தனக்குப்பிறந்தவுகப்பை, எனக்கு - எனக்குப்ரகாசிப்பிக்கையாலே. தேனேபாலேகன்னலேயமுதே - தேனும்பாலும்கன்னலும் அமுதுமாய் அதில் சர்வவிதபோக்யமும். திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையிலே யெழுந்தருளியிருக்கிற. கோனேயாகி - ஸ்வாமியானதானேயாய். நின்றொழிந்தான்-நின்றுவிட்டான்.

போக்தாவும் தானேயாய் போக்யமும் தானேயாயென்று கருத்து .........*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தம்மோடுகலந்தபின்பு அவனுக்குப்பிறந்த சம்ருத்தியைக்கண்டினியராகிறார்.

(தானேயாகிநிறைந்து) இருவருங்கூடப்பரிமாறப்புகுந்து தானே பெற்றானாயிராநின்றான்.

( எல்லாமித்யாதி ) சகலலோகங்களும் அந்தலோகங்களுக்குண்டான மநுஷ்யாதிகளும் தானேயாய்நின்றான். சர்வேஶ்வரனானானென்றபடி. சர்வேஶ்வரனாச்சுது மிப்போதோவென்னில்; ஓம், அப்படியே. ரக்ஷகனாய்க்கொண்டேயிறே அவனுக்கு ஸ்வரூபம். ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணியல்லது நியந்தாவாகவொண்ணாதே. இவரைப்பெறுவதற்குமுன்பு தன்னுடைய ஈஶ்வரத்வமடையக் கண்ணோ

தாரகம்போலேகாணும்கிடந்தது. ஆத்மாத்தான் நித்யனாயிருக்கச்செய்தே, பகவத்ஜ்ஞாநம் பிறவாதபோது "அஸந்நேவ ஸ பவதி" (அஸந்நே வஸபவதி) என்னலாய், அதுபிறந்தபோது "ஸந்தமேநம் ததோ விது:" (ஸந்தமேநம்ததோவிது:) என்னலாம்படியிருக்கிறுப்போலேகாணு மவனுமிருப்பது. ப்ரதிசம்பந்தியை யபேக்ஷித்துக்கொண்டிருக்கை யிரண்டு தலைக்குமொக்கும். "நானுன்னையன்றியிலேன் - நீயென்னையன்றியிலை" என்கிறபடியே - இவன்சேஷபூதனாய்க்கொண்டுளனும், அவன்சேஷியாய்க்கொண்டுளனும்.

(தானேயானென்பானாகி) யானென்பான்தானேயாகி. சர்வவிஷயமாக நிற்கும்நிலையொழிய இந்தவ்யக்திவிசேஷத்தில் நிற்கும்நிலையைச் சொல்லுகிறது. (யானென்பான்-தானேயாகி) நானென்று நாமமாத்ரமான நான்தானென்னலாம்படியானேன். தம்மைத்தடவிப்பார்த்தவிடத்தில் காண்கிறிலர், அவன்தலையாலே சுமக்கக்காண்கிறவித்தனை. அவனும் தன் தலையிலே பாரதந்த்ர்யத்தை யெறட்டுக்கொண்டு இவர்தலையிலே ப்ராதாந்யாஹங்காரத்தை வைக்கையாலே யிவரையே காண்கிறவித்தனை. விசிஷ்டவஸ்துவில் விசேஷ்ய ப்ராதாந்யத்தாலே விசேஷணமாத்ரமான தம்மைக்காண்கிறிலராய்த்து. கார்யாவஸ்த்தையோடு காரணாவஸ்த்தையோடுவாசியற வஸ்துவிசிஷ்டமாயிருக்கச்செய்தேயும், ப்ரஹ்மமே உபாதாநமென்னக்கடவோமிறே. தத்கதமான விகாராதிகள் வருமென்று சங்கித்து, அவற்றை விசேஷணம்சத்தே யொதுக்குகிறதும் அவனுக்கு தோஷாஸ்பர்ஸத்துக்காக. ஆனாலும் வஸ்துத்தானொன்றென்னலாயிருக்குமிறே; ஸ்வாபாவிகசம்பந்தம் கண்ணழிவற்றிருக்கையாலே. கடபடாதிகளைப்போலே ப்ருதக்ஸ்த்திதியுண்டாயிருக்கிறதன்றே, ப்ரகார ப்ரகாரிபாவத்தாலே சொல்லுகிறதிறே; ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தைப்பற்றிக்கிடக்குமோபாதியாய்த்து.

இப்படிவஸ்துவிருக்கையாலே (தன்னைத்தானே துதித்து) "வசஸாம் வாச்யமுத்தமம்" (வசஸாம்வாச்யமுத்தமம்) என்கிறபடியே - அஹமர்த்தமுமவனளவும்சென்று காட்டக்கடவதாய், அஹம்சப்தமு மவனளவும்சென்று காட்டக்கடவதாயிறேயிருப்பது. இவர்பக்கலிலே பிறக்கச்செய்தேயும் அவன்செய்தானென்று அவன்றலையிலே யேறிடலாயிருக்குமிறே. நான் ஸ்துத்யனாகில்கிடீர் ஸ்தோதாநானாவது.

(எனக்கித்யாதி) "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:) என்கிற பொதுவானநிலையன்றிக்கே எனக்கு நிரதிசயபோக்யனானவனே; "கொடியேன்பருகின்னமுதே" என்கிறபடியே. "தன்னைத்தானேதுதித்து" என்கிறவிடத்தில் தம்மைக்கண்டிலர்; இங்குத்தாமுளராகவும் தமக்கினிதாகவும் தொடங்கிற்று. தாம்பாடினகவிகேட்டு அவனினியனாயிருக்கிறவிருப்பு தமக்கினிதாயிருக்கிறபடி. (திருமாலிருஞ்சோலைக்கோனே) கீழ்ச்சொன்ன ரஸ

வத்பதார்த்தங்களோபாதியாய்த்துத் திருமலையில்நிற்கிறநிலையும். "திருமாலிருஞ்சோலையங்கட்டியைக் கரும்பின்றவின்சாற்றை" என்னக்கடவதிறே. (திருமாலிருஞ்சோலைக்கோனேயாகி) உபயவிபூதியோகத்தால் வந்த வேற்றத்துக்கு மவ்வருகேயோரேற்றம்போலே திருமலையையுடையனுகையால்வந்தவேற்றம். (கோனேயாகி) இவரைப்பெற்றபின்பாய்த்துரக்ஷகத்வம் பூர்ணமாய்த்து. இல்லையாகில், ஸ்ரீவைகுண்டத்திலிருப்போடுதிருமலையில் நிலையோடு வாசியற்றுப்போமிறே. (நின்றொழிந்தான்) இங்கேநின்றபின்பாய்த்துப் பரகுபரகற்றது. க்ருதக்ருத்யனுயிராநின்றான்.

(என்னைமுற்றுமுயிருண்டே) என்னுயிரைமுற்றுமுண்டே. விபுவானவன் அணுத்ரவ்யத்தைபுஜிக்கை தனக்கேற்றமாம்படியாகவாய்த்து இத்தலையானபடி ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (தானேயித்யாதி) "என்னைமுற்றுமுயிருண்டு-தானேயாகிநிறைந்தெல்லாவுலகுமுயிரும் தானேயாய்" என்றுதொடங்கி "கோனேயாகி நின்றொழிந்தான்" என்றந்வயமுகேநாவதாரிகை (தம்மோடித்யாதி.)

அவதாரணார்த்தம் (இருவரித்யாதி.)

கீழ்வாக்யத்தால்பலிதம் (சர்வேஸ்வரனித்யாதி) ஆழ்வாரைப்பெற்றபின்பு சர்வேஸ்வரனுனென்றபடி. "எல்லாவுலகுமுயிரும்" என்றதிலே இவருமந்தர்ப்பூதரிறே. அந்வயமுகேநசங்கையை பரிஹரிக்கிறார் (ஓமப்படியேயித்யாதி) "அப்படியே" எனறத்தையுபபாதிக்கிறார் (ரக்ஷகனுயித்யாதி) இதுக்கு * அகாரவாச்யத்வத்திலேநோக்கு. வ்யதிரேகமுகேந பரிஹாரம் (ரக்ஷ்யவர்க்கேத்யாதி) ஏதத்விவரணம் (இவரையித்யாதி) என்னுதல், ப்ரணயித்வத்தைப்பற்ற பரிஹாராந்தரமாதல். கண்ணெணுந்தாரகம்போலேயென்றது - கண்ணெணுந்தார்க்கு விளக்கஸஹ்யமாகையாலே, விளக்கில்லாமல் அந்தகாராவ்ருதமாய் ஒருத்தருக்கு மொருபதார்த்தமும் தெரியாதாப்போலே, ஈஸ்வரத்வமும் அசிதரவேத்யமாய் அஸஹ்யமா யிருக்குமென்றபடி. இவரைப்பெறுவதற்குமுன்பு ஈஸ்வரத்வமஸத்கல்பமாய், இவரைப்பெற்றபின்பு சர்வேஸ்வரனுனென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாகக்காட்டுகிறார் (ஆத்மாத்தானித்யாதி) ஆனாலும் "அஸந்நேவ" என்றும் "ஸந்தமேநம்" என்றும் சேதநனைச்சொன்னுப்போலே அவனைச்சொல்லலாமோவென்ன (ப்ரதிசம்பந்தியையித்யாதி) ப்ரதிசம்பந்திசாபேக்ஷத்வத்துக்குப்ரமாணம் (நானுன்னையித்யாதி) "நன்றுக । நானுன்னையன்றியிலேன் கண்டாய்நாரணனே । நீயென்னையன்றியிலை -" வெறுவியனுய் ப்ரகாரதயா சேஷபூதனுனநான், பரிபூர்ணனுய் ப்ரகாரியாய் சேஷியாயிருக்கிற வுன்னையொழிய சத்தையுடையேனல்லேன், இப்படியிருக்கிறநீயும், என்னையொழிய ப்ரகாரியாய் சேஷியாய் பரிபூர்ணனுமாய்க்கொண்டுளனு மவனல்லையென்று சப்தார்த்தம். நாலாந்திருவந்தாதி, "இன்றுகநானேயேயாக" இத்யாதி. இதுக்கர்த்தம் (இவன்சேஷபூதனுயித்யாதி.)

வக்ஷ்யமாணார்த்தாநுகுணமாக வன்வயம் (யானென்பான் தானேயாகியென்று) "எல்லாவுலகுமுயிரும் தானேயாய்" என்றதிலே தாமுமந்தர்ப்பூதரன்றே, "தானேயானென்பானுகி" என்றதுக்குக்கருத்தேதென்ன (சர்வவிஷயமாக வித்யா

தி) "யானென்பான் தானேயாகி" என்றதுக்குசப்தார்த்தம் (நானென்றித்யாதி) சேஷபூதனென்று நாமமாத்ரமுடையநான் சேஷியென்னலாம்படியானேனென்றபடி. பலிதம் (தம்மையித்யாதி வாக்யத்வயம்) காண்கிறிலர் - தம்மைசேஷமாகக்காண்கிறிலரென்றபடி. "தம்மை" இத்யாதிவாக்யத்வயவிவரணம் (அவனுமித்யாதி) இவரையேகாண்கிறவித்தனை - இவரை சேஷியாகக்காண்கிறவித்தனையென்றபடி. "தானேயானென்பானுகி" என்றதுக்கு - ப்ரணயித்வத்தைப்பற்ற பாவமருளிச்செய்து, வாஸ்தவமான சரீரசரீரிபாவத்தையிட்டு தாத்பர்யாந்தரம் (விசிஷ்டேத்யாதி) விசிஷ்டவஸ்துவில் விசேஷ்யப்ராதாந்யத்துக்கு நியாமகம்(கார்யாவஸ்த்தையோடித்யாதி) விசிஷ்டமாயிருக்கச்செய்தேயுமென்றது - சிதசித்விசிஷ்டமாயிருக்கச்செய்தேயுமென்றபடி. ப்ரஹ்மமே - விசேஷ்யமான ப்ரஹ்மமேயென்றபடி. விசேஷ்யப்ராதாந்யத்தாலே ப்ரஹ்மமே உபாதாநமாகில். விசிஷ்டம் காரணமென்னும் விகாராதிகள் விசேஷணகதங்களென்றும் கொள்ளுகிறதென்னென்ன (தத்கதமானவித்யாதி) தத்கதமான - சிதசித்கதமான. (ஒதுக்குகிறதும்) என்றசஸப்தம் - "விசிஷ்டம் காரணமென்கிறதுவும்" என்றதுக்த சமுச்சயபரம். எல்லாமென்றாலும் சேதநேஶ்வரபேதம் ஸித்தமாயிருக்க, "தானே" என்னலாமோவென்ன (ஆனாலுமித்யாதி) ஆனாலும் - பேதமுண்டானாலுமென்றபடி. "ஸ்வாபாவிகஸம்பந்தம் கண்ணழிவற்றிருக்கையாலே" என்றத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறார் (கடபடாதிகளையித்யாதி) ப்ருதக்ஸ்த்தித்யபாவத்துக்கு த்ருஷ்டாந்தம் (ஜாதிகுணங்களித்யாதி)

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி) தாம் கவிபாடியிருக்க, "தானே துதித்து" என்பானென்னென்ன (வசஸாமித்யாதி) "அஹம்சப்தமவனளவும்காட்டும்" என்றதுக்குப்ரமாணம் (வசஸாம்வாச்யமுத்தமமென்றது) அஹமர்த்தமவனளவும் சென்றுகாட்டுகையாவது - தத்பரதந்த்ரமாமிருக்கை. "கார்யாணாம்காரணம் பூர்வம்வசஸாம்வாச்யமுத்தமம் । யோகாநாம்பரமாம்ஸித்திம்பரமம்தேபதம்விது:" (கார்யாணும்காரணம்பூர்வம்வசஸாம்வாச்யமுத்தமம் । யோகாநாம்பரமாம்ஸித்திம்பரமம்தேபதம்விது:) இதிஜிதந்தாயாம். அஹமர்த்தமவனளவும் காட்டக்கடவதாயென்றது - அர்த்தாத்வந்தது. இத்தால்பாவம் (இவர்பக்கலிலேயித்யாதி) தானே துதித்தென்னுதே, "தன்னை" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (நான் ஸ்துத்யனுகிலித்யாதி) இத்தால் - ஸ்துத்யன் தானானவோபாதி ஸ்தோதாவும் தானே யென்றுகருத்து.

"எனக்கு" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (சர்வரஸ இத்யாதி) தமக்குபோக்யனாயிருக்குமோவென்ன (கொடியேனித்யாதி) "தன்னைத்தானே துதித்து" என்று வைத்து, "எனக்கு" என்று ஸ்வார்த்ததை தோற்றச்சொல்லுகிற தென்னென்ன (தன்னைத்தானேயித்யாதி) அதாவது - ப்ரபந்தகர்த்ருத்வத்தில் தமக்கந்வயமில்லை, அந்தப்ரபந்தமத்தலைக்கு போக்யமானதுகண்டு தாமுகக்கிறாரென்றுகருத்து. பலிதம் (தாம்பாடினவித்யாதி.)

பூர்வபதத்தோடே ஸஹபடித்ததுக்குபாவம் (கீழ்ச்சொன்னவித்யாதி) திருமலையில் நிலைபோக்யமாயிருக்குமோவென்ன (திருமாலிருஞ்சோலையங்கட்டியையித்யாதி) "எல்லாவுலகுமுயிரும்தானே" என்றத்தோடேகூட்டிபாவாந்தரம் (உபயவிபூதீத்யாதி.)

"தேனேயாகி" என்றத்தை "என்னைமுற்றுமுயிருண்டு" என்றத்தோடேகூட்டிபாவமாதல், அவதாரணார்த்தமாதல் (இவனைப்பெற்றவித்யாதி) இதுக்குநியாமகம் (இல்லையாகிலித்யாதி)

"நின்றொழிந்தான்" என்றதுக்குபாவம் (இங்கேநின்றபின்பித்யாதி) பரகுபரகு - வ்யாகுலதை. "பரகுபரகற்றது" என்றதின்விவரணம் (க்ருதக்ருத்யேத்யாதி.)

அணுவானவாத்மாவை "முற்றும்" என்கிறதென்னென்ன (விபுவானவித்யாதி) இத்தலையானபடியென்றது - அவன் ஸ்வாபிப்ராயத்தாலே மதித்திருந்தபடியென்றபடி.

என்னைமுற்று முயிருண்டு - தானேயாகிநிறைந்தென்றுதொடங்கி, நின்றொழிந்தானித்யந்வய: ............................................................*

---

# மூன்றாம்பாட்டு.

---

என்னைமுற்றுமுயிருண்டென்மாயவாக்கையிதனுட்புக்
கென்னைமுற்றுந்தானேயாய்நின்றமாயவம்மான்சேர்
தென்னன்றிருமாலிருஞ்சோலைத்திசைகைகூப்பிச்சேர்ந்தயா
னின்னம்போவேனேகொலோவென்கொலம்மான்றிருவருளே.

## ஆறாயிரப்படி.

( என்னை ) என்னை புஜித்தருளுகிறான். இந்தஹேயமான ப்ரக்ருதியினுள்ளேபுகுந் தென்னை புஜித்து என்னை முற்றும் தானேயானான். இப்பேறுபெறுகைக்கு ஹேதுவென்னென்னில்; அவன் சேர் தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பப்பெற்றேன், என்னுடனிப்படியேகலந்து பரிமாறியும் பின்னையும் கலந்து பரிமாறுதானாய், அடிதொட்டுக்கலந்து பரிமாறுகையிலே பாரித்தருளாநின்றான், இன்னமிதுக்குமேலுமொரு சம்ஶ்லேஷமுண்டோ, திருவுள்ளமென்றான் என்கிறார். .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னளவன்றியே என் தேஹத்தையு மாதரம்பண்ணி, அத்தாலே ஸந்துஷ்டனாய் ப்ரதிஷ்டிதனுகாநின்றா னென்கிறார்.

என்னை - என்னை. முற்றும் - சர்வப்ரகாரத்தாலும். உயிருண்டு - ஆத்மாநுபவம்பண்ணி. அவ்வளவில்லில்லாதே, என் - என்னுடைய. மாயம் - அஜ்ஞாநாதிகளுக்கு ஹேதுவாய்க்கொண்டு. ஆக்கையிதனுள் - ப்ரக்ருதிகார்யமாய் ப்ரத்யக்ஷஸித்ததோஷத்தையுடைத்தான பந்தகமான சரீரத்துக்குள்ளே. புக்கு-புக்கு. என்னை-அபிமாநிஜீவனான வென்னையும். முற்றும் - அநுபந்தியான சரீராதிசமஸ்தவஸ்துவையும்பற்ற. தானேயாய் - அஹந்தாமமதாதிகள் இத்தலையில்நடையாடாதபடி தானேயபிமாநியாய். நின்ற - அத்தாலே க்ருதக்ருத்யனாய்நின்ற. மாயம் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடைய. அம்மான் - நிருபாதிகஸ்வாமியானவன். சேர் - பொருந்திவர்த்திக்கிற தேசமாய். தென் - தெற்குதிக்குக்கு. நன் - ஶ்லாக்யமாயிருக்கிற. திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையாகிற திருமலையிலேநிற்கிற. திசை - திக்கைநோக்கி. கைகூப்பி - சேஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி. சேர்ந்தயான் - கிட்டினநான். அவ்வளவன்றியே, அவன்தேசத் தளவன்றியே, இன்னம் - அத்திக்

கையுமாதரிக்கும்படியானவளவுபிறந்தபின்பு. போவேனேகொலோ - ஒருகந்தவ்ய பூமியுண்டாய்ப்போகிறேனோ. அம்மான் - நிருபாதிகசேஷியா யிருக்கிறவனுடைய. திருவருள் - அபிநிவேசங்கள். என்கொல் - என்னாயிருக்கிறது.

இதிற்காட்டில் வேறு சில ப்ராப்யங்களுண்டாய் அவற்றை யுபகரிக்கப்பாரிப்பாரைப்போலே யிராநின்றதென்றுகருத்து. தென்னனென்று - அத்தேசத்தில் ராஜாவைச்சொல்லவுமாம். ......................................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அவனுக்குத் தம்பக்கலுண்டான வபிநிவேசத்தினுடைய வெல்லையில்லாமையை யருளிச்செய்கிறார்.

( என்னைமுற்றுமுயிருண்டு ) "யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜஃ) என்கிறவேற்றத்தோபாதியும் போருமாய்த்து இவருயிரை யெங்கும்புக்கநுபவிக்கப் பெறுகையால்வந்த வேற்றம். ( என்மாயவாக்கை ) என்னுடையவாத்மவஸ்துவை யநுபவித்து அவ்வளவிலே தான் தவிருவானோ யிருந்தானோ. "அழுக்குடம்பு" என்றும் "பொல்லாவாக்கை" என்றும் "புண்ணைமறையவரிந்து" என்றும் சொல்லுகிறபடியே – "இதுஹேயம்" என்று இவர்தாமருவருத்துப் புறப்பட்டு நில்லாநின்றார்; இவரிகழாநிற்கச்செய்தே அவன் இதுத்தேஶ்யமென்று மேல்விழாநின்றான். ( உள்புக்கு ) தம்நெஞ்சாலே யித்தை யிவராருவருத்துப் புறப்பட்டு நின்றார். ( புகுந்தென்னாதே ( புக்கு ) என்கிறது - அத்தோடு தமக்குத் தொற்றற்றிருக்கிறபடி தோற்றுகைக்காக. ) அதாவது - அவன்தலை துலுக்குப் பெறுமளவும் பார்த்தாய்த்து இவரிருக்கிறது. "மங்கவொட்டு" என்னுமளவும் அவனித்தை விடமாட்டாமையாலே உள்ளே புகுராநின்றான். ( இதனுள்புக்கு ) அநாதிகால மசித்தோடே முகம்பழகிப்போந்தவனிறேயிவன்; சேதநத்வாரா குந்தி யடியிட்டுநிற்குமவனிறே யவன்; அவன் மேல்விழாநின்றான். தனக்கு ப்ரகாரமான வாத்மவஸ்துவுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு தனக்கு ப்ரகாரமாமதிறேயிது. "அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய" (அநேகஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய) என்னக்கடவதிறே. (என்னைமுற்றும்தானேயாய்) இப்படி ஆத்மவஸ்துவோடு அசித்தோடு வாசியற எங்கும்புக்கு வ்யாபிக்கையாலே ( தானே ) என்னத் தட்டில்லையிறே. இவர் நான் என்னுமத்தையும் கொண்டான். இவர் மமகாரவிஷயத்தையும் கொண்டான். ஈஶ்வரனுக்குங்கூட விளாக்குலைகொண் டநுபவிக்கவொண்ணாதபடி யானாராய்த்து. ( நின்ற ) "அந்தர்பஹிஶ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்தித:" ( அந்தர்ப்பஹிஶ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்த்திதஃ என்கிற பொதுவானநிலையன்றிக்கே. ( மாயமித்யாதி ) ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய சர்வேஶ்வரனும்கூட "தண்ணீர், தண்ணீர்" என்றுகிட்டும்படியான தேசமாய்த்து. ( தென்னன்தி

ருமாலிருஞ்சோலை) தென்ன னென்று - அங்குத்தைக்கு ப்ரதாநனைச் சொல்லி, அவனதான திருமலையென்னுதல்; அன்றிக்கே, தெற்கில் திக்கிலேயாய் நன்றானவென்னுதல். (திசைகைகூப்பிச்சேர்ந்தயான்) அவன்விரும்பின திக்கை விரும்பினராய்த்து இவரும். ஒருதிக்குப்பட்டவிறே இவர் விரும்புவது. அதாவது - அவனையுகந்து, அவ்வழியாலே அவன் விரும்பின தேசத்தையுகந்து, அத்தோடு சம்பந்தமுடைய திக்கை யுகந்து, இப்படி அவனோடு சம்பந்தசம்பந்திகளளவும்வர வுகக்கும்படி கைகூப்பப்போந்தநான். அவன்று ஸிவளையுகந்து இவரோடு சம்பந்தமுடையதேஹத்தை விரும்புகிறுப்போலேயாய்த்து. "என்னெண்டானுன்" என்றாரிறே அடியிலே. (இன்னம்போவேனேகொலோ) எனக் கித்திக்குக்கவ்வருகு கந்தவ்யபூமியுண்டோ. ஒருதிக்குப்பட்ட நானினியவ்வருகுபோவேனோ இவனிப்படிகிடந்து படுகைக்கு. இனி யவ்வருகுபோகையாவது - திருமலையில் சம்பந்தத்தை யறுத்துக்கொள்ளுகையிறே.

(என்கொலம்மான்திருவருளே) சர்வேஶ்வரனைப்பற்றிவரும்போது நிர்விஷயப்ரமமுண்டாமாகாதே. என்செய்யாதானுய்த் தானிவனிங்ஙன்கிடந்து படுகிறதென்றபடி. இவர்திறத்திலெல்லாம் செய்தும், ஒன்றும்செய்யாதாரைப்போலே "எத்தைச்செய்வோம்" என்றிராநின்றானாய்த்து. ..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (என்னைமுற்றுமித்யாதி.) "இன்னம்போவேனேகொலோவென்கொலம்மான்திருவருள்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனுக்கித்யாதி.)

ஆத்மா அணுவாயிருக்க, "முற்றும்" என்றதுக்குபாவம் (யஸ்யஸேத்யாதி.) "என் உயிரை - முற்றும் - உண்டு" என்றந்வயிப்பது. என்னாத்மாவை யாவத்தும நுபவித்தென்றபடி. உண்டு - அநுபவித்து. எங்கும்புக்கென்றது - ஸ்வரூபஸ்வபாவங்களைப்பற்ற.

"மாயவாக்கை" என்றதுக்கு பாவம் (என்னுடையவித்யாதி.) "இதனுள்" என்றதுக்குபாவம் (அழுக்குடம்பித்யாதி.) மாயவாக்கை - நஶ்வரமானசரீரம். மாய - நஶ்வரமான. "உள்புக்கு" என்றதுக்குபாவம் (இவரிகழாநிற்கவித்யாதி.) ஆனுலிவர்புறப்பட்டாரோவென்ன (தம்நெஞ்சாலேயித்யாதி.) ஜிகுப்ஸையானுல் நெஞ்சாலே புறப்படுகிறதென், தாமே புறப்படுகிறதுக்கென்னென்ன (அதாவதித்யாதி.) அதாவதென்றது - வார்த்தைப்பாடு. ஆனுலிவர்க்கு பாதந்த்ரனானவன் தலைதுலுக்காதிருக்கிறதென்னென்ன (மங்கவொட்டித்யாதி.) "இதனுள்புக்கு" என்றதிலே வ்யாக்யாதாவினீடுபாடு (அநாதிகாலமித்யாதிவாக்யத்ரயம்.) அப்படி சேதநத்வாரா குந்தி யடியிட்டிருக்குமோவென்ன (தனக்குப்ரகாரமானவித்யாதி.) இப்படி சேதநத்வாரா அசித்திலே அநுப்ரவேசித் திருக்கைக்கு ப்ரமாணம் (அநேநேத்யாதி.)

"என்னைமுற்றுமுயிருண்டென்மாயவாக்கையிதனுள்புக்கு" என்றுவைத்து, மீளவும் "என்னை முற்றும் தானேயாய்" (என்னலாமோவென்ன இப்படி ஆத்மேத்யாதி;) ஹேதுஹேது மத்பாவமாகையாலே விரோதமில்லையென்றபடி. விவரண

ம் (இவர்நானென்னுமித்யாதி.) "உயிருண்டு" என்றத்தைப்பற்ற (இவர்நானென்னுமத்தையுமித்யாதி.) "மாயவாக்கை" என்றத்தைப்பற்ற (இவர் மமகாரேத்யாதி.) "என்னைமுற்றும்தானேயாய் -" என்னைப்பற்றவும் மதநுபந்தியான சரீராதி சமஸ்தவஸ்துவையும் பற்றத் தானே யபிமானியாயென்னுதல்; என்னாத்மாமுற்றும் தானேயாயென்னுதலென் றர்த்தத்வயம். "என்னைமுற்றும்" என்றதுக்கு, "என்னை" என்று - ஆத்மாவாகவும், "முற்றும்" என்று - தேஹமாகவுமருளிச்செய்து, என்னாத்மாவை முற்றும் என்றர்த்தாந்தரவிவக்ஷயா பாவம் (ஈஸ்வரனுக்குமித்யாதி;) இப்பக்ஷத்தில், இப்பதங்கள் "என்னைமுற்றுமுயிருண்டு" என்றதினநுபாஷணமாகக்கடவது. விளாக்குலைகொள்ளுகை - கபளீகரிக்கை. "நின்ற" என்றதுக்கு பாவம் (அந்தரித்யாதி.) அதாவது - "நின்ற" என்றத்தால் ஈஸ்வரனுக்கு ஆஶ்ரிதர்பக்கல் விசேஷபக்ஷபாதம் தோற்றுகிறதென்றபடி.

"மாயவம்மான்" இத்யாதிக்கர்த்தம் (ஆஸ்சர்யமானவித்யாதி.) "சேர்" என்றதினர்த்தம் (தண்ணீர்தண்ணீரித்யாதி.) தண்ணீர்தண்ணீரென்றது - தாஹித்தவன் "தண்ணீர், தண்ணீர்" என்று நீரைத் தேடிக்கொண்டு வருமாபோலே, போக்யதாதிசயத்தாலே அபிநிவேஶத்தோடே கிடக்கும்படியானவென்றபடி.

திக்கை அஞ்சலிபண்ணுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (அவன்விரும்பினவித்யாதி.) ரஸோக்தி (ஒருதிக்குப்படவித்யாதி.) திக்குப்பட - அடைவுபட. திக்குப்பட விரும்புகையாவ தின்னதென்கிறார் (அதாவதித்யாதி.) இதக்கு த்ருஷ்டாந்தம் (அவன்றானித்யாதி.) அவளையும் அவரோடு சம்பந்தமுடையதேசத்தையும் விரும்பு மென்றதுக்கு ப்ரமாணம் (என்னெண்டானித்யாதி;) நான், தன்னையும் தன்னோடு சம்பந்தமுடைய தேசத்தையும் விரும்புவேனாகில், அவனும், என்னையு மென்னோடு சம்பந்தமுடைய வூரையும் விரும்பாநின்றானென்றிறே யிதுக்குப்பொருள்.

"இன்னம்" என்றதுக்குபாவம் (எனக்கித்யாதி.) விவரணம் (ஒருதிக்கித்யாதி.) போனால் விரோதமேதென்ன (இனியவ்வருகித்யாதி.) "இன்னம் போவேனேகொலோ-" இன்னம்விட்டுப்போவேனோ வென்று சப்தார்த்தம்.

"அம்மான்திருவருள் - என்கொல்" என்றந்வயிப்பது. அம்மான் றிருவருள் என்னம்பாயிருந்ததென்று சப்தார்த்தம். "அருள்" என்று - வ்யாமோஹமாக பாவம் (சர்வேஸ்வரனையித்யாதி.) அதாவது-நான் சரமாவதிசேஷமாகையாலே தன்னைவிட ப்ரசங்கமற்றிருக்க, விடில்செய்வதென்னென்று அதிசங்கைபண்ணும்படியான வ்யாமோஹமிருந்தபடி யென்னென்றபடி. "அருள்" என்று - கொடையாக பாவாந்தரம் (என்செய்யாதானுயித்யாதி.) அதாவது - சேஷத்வசீமாபூமியிலே நிலைநிற்கும்படி யுபகரித்தும் ஒன்றும் செய்யாதவனைப்போலே பரகு பரகென்கிறதுக் கவதியென்னோ வென்றபடி. ஏதத்விவரணம் (இவர்திறத்திலித்யாதி.) நிர்விஷயப்ரமம் - நிராலம்பநப்ராந்தி..................................................*

## நான்காம்பாட்டு.

என்கொலம்மான்றிருவருள்களுலகுமுயிருந்தானேயாய்
நன்கென்னுடலங்கைவிடான்ஞாலத்தூடேநடந்துழக்கித்
தென்கொடிசைக்குத்திலதமாய்நின்றதிருமாலிருஞ்சோலை
நங்கள்குன்றங்கைவிடானண்ணுவசுரர்நலியவே.

## ஆறுயிரப்படி.

(என்கொலம்மான்) என்னுடைய ப்ரக்ருதியினுள்ளேபுகுந்து இவ்வாத்மாவை புஜித்தருளுகையுமன்றியே ஸர்வஜகதீச்வரனாயிருந்தான்; என்னுடைய ப்ரக்ருதிதன்னையுங்கூடத் தனக்கு போக்யமாகக்கொண்டு ஒருக்ஷணமும் கைவிடுகிறிலன்; இப்படி "என்னோடுள்ள ஸம்ச்லேஷம் பெறுகைக்கிடானதேசமேதோ" என்று தேடிக்கொண்டு, திருமலையிலே வந்துபுகுந்து, தான்கருதினபடியே அங்கே ஸம்ச்லேஷித்து ப்ரீதனாய், "இந்தஸம்ருத்தியெல்லாம் விளைவித்தது திருமலையிறே" என்றுகொண்டு, திருமலையையும் என்னுயிருமுடலும்போலே தனக்கு போக்யமாகக் கொண்டு கைவிடுகிறிலன், என்னுயிரையு முடலையும் திருமலையையு மநுபவித்து ப்ரீதனானான்; ப்ரதிகூலர் இந்த ஸம்ருத்திகண்டு பொறுக்கமாட்டாதே தறைப்படும்படி ப்ரீதனானானென்கிறார் ...... ......... ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்சரீரத்தை விரும்புகைக்கு ஹேதுவாகையாலே திருமலையையு மாதரித்து, இரண்டுஸ்த்தலத்தையும் கைவிடுகிறிலனென்கிறார்.

ஒருவனைப்பிடிக்கைக்கு ஊரைவளைப்பாரைப்போலே, என்னைப்பெறுகைக்காக, உலகும்-சர்வலோகங்களும். உயிரும்-சர்வப்ராணிகளும். தானேயாய்-தானேயாம்படி அந்தராத்மாவாய்க்கொண்டு வ்யாப்தனாய். அவ்வளவில்நில்லாதே, நண்ணா-தன்னையாச்ரயிக்கையில் விமுகரான. அசுரர்-அசுரப்ரக்ருதிகள். நலிய-நசிக்கும்படியாக. த்ரிவிக்ரமாபதாநமுகத்தாலே, என்னைலபிக்கைக்கு ஸ்த்தலம்தேடுவாரோபாதி, ஞாலத்தூடே-பூமிக்குள்ளே. நடந்துழக்கி-நடந்துமிருத்து. தென் - தெற்கென்கிறபேரை. கொள்-கொண்ட. திசைக்கு-திக்குக்கு. திலதமாய்நின்ற-சிரஸாவாஹ்யமாயிருக்கிற. திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையென்று பேராயிருக்கிற. நங்கள்-நம்போல்வார்க்கு. குன்றம்-அநுபாவ்யமானதிருமலையை. கைவிடான் - என்னைலபிக்கைக் கநுரூபஸ்த்தலமென்று விரும்பிக்கைவிடுகிறிலன். அதுவழியாக, என்னுடலம்-என்சரீரத்தையும். நன்கு-மிகவும். கைவிடான் - கைவிடுகிறிலன். அம்மான்-ஸ்வாமியானவனுடைய. திருவருள்கள்-உபகாரங்களான சிலப்ரகாரங்கள், என்கொல்-என்னாயிருக்கிறன... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - நான்காம்பாட்டு.

தம்முடைய திருமேனியிற்காட்டிலும் தம்மோடே பரிமாறலாம் நிலமென்று அவனுக்குத்திருமலையிலுண்டான வ்யாமோஹத்தை யருளிச்செய்கிறார்.

(என்கொலம்மான்திருவருள்கள்) சர்வேச்வரனுக்கு நிரதிசயப்ரீதியுண்டாமாகாதே!.

(உலகித்யாதி) என்னகுறையுண்டாய்த்தா னிப்படிகிடந்துபடுகிறான். (நன்கென்னுடலம்கைவிடான்) செருக்கனாயிருக்கும் ராஜபுத்ரன் நீசஸ்த்ரீகாற்கடையிலே துவளுமாபோலே. (நன்கென்னுடலம்) சர்வே

ஶ்வரன் தன்னைக்கேட்டார்க்குச்சொல்லுகிற வார்த்தையிருக்கிறபடி. ஆழ்வாரை "நமக்குத்தந்ததிருமேனியன்றோ" என்னுகின்றானாய்த்து. நன்கு-நன்றாக. மிகவுமென்றபடி. (என்னுடலம்) "இவருடைய மமகாரவிஷயமானதன்றோ நமக்குத்தேஶ்யம்" என்றிராநின்றான். என்னுடைய * அட்டங்கெழில்சம்பத்திலேதேனும் பாம்புசெத்ததோ என்னுநின்றான்.

(ஞாலத்தித்யாதி) எத்தனைகாலமூண்டு அவனிப்பேறுபெறுகைக்குழன்றுதிரிகிறது. சர்வசாதாரணனான ஸ்வாமியுடைய வ்யாபாரமெல்லா மெனக்கெனக்கென்னலாமிறே சேஷபூதர்க்கு. இந்த்ரனுக்கு "ராஜ்யம்பெற்றேன்" என்னவுமாய், மஹாபலிக்கு "ஔதார்யம்பெற்றேன்" என்னவுமாய், சிலர்க்கு "பொன்பயந்தேன்" என்னவுமாய், இவர்க்கு "எனக்காகச்செய்தான்" என்னவுமாயிருக்கிறதுகாணும். (தென்கொளித்யாதி) தெற்கில் திக்குக்கோ ராபரணமான திருமாலிருஞ்சோலை. (நங்கள்குன்றம்) ஆஶ்ரிதருடைய சங்கேதஸ்த்தலம். (நங்கள்குன்றம்கைவிடான் - நன்கென்னுடலம்கைவிடான்) திருமலையை ப்ராபகமாகவும் ஆழ்வார்திருமேனியை ப்ராப்யமாகவும் நினைத்திராநின்றான். ஆழ்வார் திருமேனியாயுத்தேஶ்யம், அதுபெறுகைக்காய்த்து திருமலையில்நிலை. (நண்ணாவசுரர்நலியவே) "நெடும்பகைதற்செய்யத்தானேகெடும்" என்னுமாபோலே, இவனிவ்விடத்தைவிடாதே வர்த்திக்க ஆசுரவர்க்கம் மூடிந்துபோய்த்து.

உலகுமுயிரும் தானேயாய் - ஞாலத்தூடே நடந்துழக்கி, தென்கொள்திசைக்குத் திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை நங்கள்குன்றம்-நண்ணாவசுரர்நலிய-கைவிடான்-நன்கென்னுடலம் கைவிடான்—என்கொலம்மான் திருவருள்கள் ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (என்கொலித்யாதி) "நன்கென்னுடலம் கைவிடான்-திருமாலிருஞ்சோலை நங்கள்குன்றம்கைவிடான்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தம்முடையவித்யாதி) பரிமாறலாம்நிலம் - சம்ஶ்லேஷிக்கைக்கு யோக்யமானதேசம்.

உக்தாநுபாஷணமென்கிறார் (சர்வேஶ்வரனுக்கித்யாதி.)

தம்முடம்பி லவன் வ்யாமோஹம் சொல்லுகிறவிடத்திலே, சர்வேஶ்வரத்வம்சொல்லுகிறதுக்குபாவம் (என்னகுறையித்யாதி) இப்படிகிடந்துபடுகிறான்-வ்யாமோஹம்பண்ணுகிறானென்றபடி.

"என்னுடலம்" என்றதுக்குபாவம் (செருக்கனித்யாதி) ஆவருகை - உலருகை. "நன்கு" என்றதுக்குபாவம் (சர்வேஶ்வரனித்யாதி) ஈஶ்வராபிப்ராயத்தாலே நன்கென்கிறதென்றபடி. நன்றானவுடலமென்று சப்தார்த்தம். வார்த்தைதன்னைக் காட்டுகிறார் (ஆழ்வாரையித்யாதி) "நன்கு" என்றதுக்கர்த்தாந்தரம் (நன்றாகவித்யாதி) நன்றானவென்றர்த்தமானபோது, * உடலுக்கு விசேஷணம்; மிகுதியானபோது, "கைவிடான்" என்றதுக்குவிசேஷணம். "என்" என்று மமகாரதூஷிதமானத்தை "நன்கு" என்னும்படியென்னென்ன (இவருடையவித்யாதி) பலிதம் (என்

னுடையவித்யாதி) அதாவது - த்யாஜ்யமான லீலாவிபூதி ததீயத்வாகாரத்தாலே யிவர்க்குத்தேஶ்யமானாப்போலே, த்யாஜ்யமானவிவர் திருமேனியும் இவர் சம்பந்தத்தாலே யுத்தேஶ்யமென்னாநின்றானென்றபடி. அடங்கெழில்சம்பத்தில் - கட்டடங்க நன்றானசம்பத்தில். உபயவிபூதியிலுமென்றபடி. பாம்புசெத்ததோ - த்யாஜ்யாம்ஶமழிந்ததோவென்றபடி.

இப்போது திருவுலகளந்தருளின வபதாநத்தைச்சொல்லுகிறதுக்கு பாவம் ( எத்தனைகாலமித்யாதி ) ஞாலத்தூடே நடந்துழக்குகிற திவர்க்காகவோவென்ன (சர்வசாதாரணனித்யாதி) "எனக்கெனக்கென்னலாம்" என்றத்தைக்காட்டுகிறார் (இந்த்ரனுக்கித்யாதி) சிலர்க்கு - திருமங்கையாழ்வார்க்கு.

சங்கேதஸ்த்தலம்-அநுபவஸ்த்தலம்.

இவரிடத்தில் வ்யாமோஹப்ரகரணத்திலே, "நங்கள்குன்றம் கைவிடான்" என்கிறதென்னென்ன (திருமலையையித்யாதி) விவரணம் (ஆழ்வாரித்யாதி)

திருமலையில் நிலையிவர்க்காகவாகில், நண்ணாவசுரர் நலியும்படியென்னென்ன (நெடும்பகையித்யாதி) நெடும்பகை - போக்கப்போகாதசத்ரு. தற்செய்ய-தான் செய்கிறத்தைச்செய்யவென்றபடி.

" திருமலை ப்ராபகமும் ஆழ்வார்திருமேனி ப்ராப்யமும் " என்னுமிடம்தோன்ற பாட்டுக்கந்வயமருளிச்செய்யாநின்றுகொண்டு, " என்கொலம்மான்றிருவருள்கள் " என்றதுக்கர்த்தாந்தரம் (உலகுமுயிருமித்யாதி) "என்கொலம்மான்றிருவருள்கள்" என்றது - அநுவாதமென்று மூந்தினவர்த்தம்; அநுவாதமானபோது, " நன்கென்னுடலம்கைவிடான் " என்று க்ரியை. இப்பாட்டுக்கு சேஷமென்றிரண்டாமர்த்தம்; இப்போது, வ்யாக்யாநத்திற்படியே யந்வயம்; "திருவருள்" என்றுக்ரியை.*

---

## ஐந்தாம்பாட்டு.

நண்ணாவசுரர்நலிவெய்தநல்லவமரர்பொலிவெய்த
வெண்ணாதனகளெண்ணுநன்முனிவரின்பந்தலைச்சிறப்பப்
பண்ணார்பாடலின்கவிகள்யானாய்த்தன்னைத்தான்பாடித்
தென்னாவென்னுமென்னம்மான்றிருமாலிருஞ்சோலையானே.

### ஆறாயிரப்படி.

( நண்ணா ) ப்ரதிகூலர் தறைப்படும்படியாகவும் தனக்கு நல்லரான வமரர் சம்ருத்தராம்படியாகவும், லீலோபகரணமாயும் போகோபகரணமாயுமிருந்த நிரவதிகசம்ருத்திக ளெம்பெருமானுக் குளவாயிருக்கச் செய்தே, இவையொழியவே அதின்மேலே சத்ய சங்கல்பனாயிருந்த வெம்பெருமான்றன்னாலும் சம்பாதிக்கவொண்ணாதே வாங்மநஸாகோசரமான வபர்யந்தசம்ருத்திக ளெம்பெருமானுக் குளவாக வேணுமென்று மநோரதியாநிற்கும் நன்முனிவர், " நம்முடைய மநோரததூரவர்த்தியான நிரவதிகசம்ருத்திக ளெம்பெருமானுக்கு விளையப்பெற்றோம், இனி நமக்கொரு குறையில்லை ". என்றுகொண்டு நிரவதிகநிர்வ்ருதியை யுடையராம்

படியாகவும், பண்ணார்பாடலான வின்கவிகளை யென்னையிட்டுப் பாடுவித்து இக்கவிகளாகிற வம்ருதத்தைப்பருகிக்களித்து, அம்ருதபாநம்பண்ணின வண்டுகள்போலே தென்னாதெனாவென்று திருமலையிலேநின்று பாடியருளாநின்றா னென்கிறார். ......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தம்மோடு சம்ஶ்லேஷித்து திருவாய்மொழி பாடக்கேட்ட ப்ரீதியாலே ரஸிகனாய் ஆளத்திவையாநின்றானென்கிறார்.

நண்ணா - பகவத்விஷயத்தைக் கிட்டக்கடவோமல்லோமென்று ப்ரத்யூஹராயிருக்கும். அசுரர் - ஆஸுரப்ரக்ருதிகள். நலிவெய்த - இவ்வதிசயம் பொறுக்கமாட்டாமல் விநாசத்தையடையவும். நல்லவமரர் - பக்திபரராய்க்கொண்டு அநுகூலரான தேவவர்க்கம். மிகவுமுகப்பாலே, பொலிவெய்த - சம்ருத்தியை லபிக்கவும். எண்ணாதனகள் - அவாப்தசமஸ்தகாமனுடைய குணவிபூதிக்குமேலே இதுக்குமுன் பெண்ண வறியாத அதிசயங்களை. எண்ணும் - ப்ரேமத்தாலே ஆசாஸியா நிற்கும். நல் - ஸ்நேஹயுக்தராய். முனிவர் - அநுபவசீலரான முனிவர்கள். கேட்டநுபவித்து, இன்பம்தலைச்சிறப்ப - ஆநந்தநிர்ப்பரராகவும். பண் - பண். ஆர்-நிறைந்த. பாடல் - இசையையுடைய. இன்கவிகள் - இனியகவிகளை. யானாய் - தனக்கு ப்ரகாரபூதனான நானாய்க்கொண்டு. தன்னை - * ஸ்தவ்யனாய் * ஸ்தவப்ரியனானதன்னை. தான்பாடி - ஸ்தோதாவாய்க்கொண்டு தானேபாடி. திருமாலிருஞ்சோலையான் - திருமாலிருஞ்சோலையானாய்நிற்கிற. என்னம்மான் - என் ஸ்வாமியானவன். தன்மேன்மைபாராதே, பாட்டில் ரஸாதிசயத்தாலே, தென்னாவென்னும் - தென்னா என்று ஆளத்திவையாநிற்கும்.

நலிவு - நாசம்.......................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவன் தம்மோடே கலந்து தம் வாயாலே திருவாய்மொழிகேட்ட ப்ரீதியுள்ளடங்காம லாநந்தித்து ஆளத்திவையாநின்றா னென்கிறார். "நன்கென்னுடலம்கைவிடான்" என்னுமளவன்றிக்கே என்னுக்திமாத்ரத்திலே களியாநின்றானென்கிறாரென்றுமாம்.

* நண்ணாவசுரர்நலிவெய்தநல்லவமரர்பொலிவெய்த எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்பவாய்த்து திருவாய்மொழி தானவதரித்தது. ஸ்துத்யனுடைய வவதாரம்போலேயாய்த்து ஸ்துதியினுடைய வவதாரமும்; "பரித்ராணாய" (பரித்ராணாய) "அகிலஜகத்பத்மபோதாய" (அகிலஜகத்பத்மபோதாய) என்னுமாபோலே. (நண்ணாவித்யாதி) ப்ரதிகூலநிரஸநத்துக்கு வேறொருகருவியெடுக்கவும்வேண்டாதே, அநுகூலரக்ஷணத்துக்கும் வேறொன்று தேடவும் வேண்டாதே, அநந்யப்ரயோஜநரா யிருப்பார்க்கு ஸ்வயம்ப்ரயோஜநமுமா யிருக்குமாய்த்து. (நண்ணாவசுரர்நலிவெய்த) அவ்யபதேஶ்யனுக்கு அநந்தரத்திலவன், தமப்பன்செய்ததைக்கேட்டு "இவனென்செய்தானானன்" என்றுகஹிர்த்தான் - "ஒருமதிளை வாங்குங்காட்டில் அத்தர்ஶநம் குலைந்த

தோ, திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்றும் வலியன விரண்டு மஹாப்ரபந்தங்களுண்டாயிருக்க" என்றுணுய்த்து; இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து. "விபரீதஸ்ததாஸுர:" (விபரீதஸ்ததாஸுர:) என்னக்கடவதிறே. பொருந்தாமையை யுடைய அசுரவர்க்கமானது மண்ணுண்ணும்படியாக. சம்பந்தமில்லையென்னவொண்ணுதே, "பொருந்தோம்" என்கையிறேயுள்ளது.

(நல்லவமரர்பொலிவெய்த) "விஷ்ணுபக்திபரோதேவ:" (விஷ்ணுபக்திபரோதேவ:) என்னக்கடவதிறே. அநுகூலரானவர்கள் உண்ணுதேதடிக்க. இவர்களுக்கு நன்மையாவது-பகவத்பக்தராயிருக்கை. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்னக்கடவதிறே.

(எண்ணுதனவித்யாதி) புறம்பொருவவொண்ணுதன சிலவற்றை யெண்ணுவார் சிலருண்டாய்த்து. "சர்வேஸ்வரன் ரக்ஷகன், அவனை யொழிந்ததடங்கலும் ரக்ஷ்யம்" என்றிருக்கையன்றிக்கே, உபயவிபூதியுக்தனுக்கு இன்னம் சிலவிபூதிவேணுமென்றும், சர்வகுணசம்பந்நனுக்கு இன்னம் சிலகுணங்கள் வேணுமென்றும் என்று இப்புடைகளிலே யெண்ணுவார் சிலருண்டாய்த்து; அவர்கள் (இன்பம்தலைச்சிறப்ப) திருவாய்மொழியவதரித்தபின்பு "அவனுக்கு குணவிபூதிகள்போராது" என்றிருந்த விழவுதீர்ந்து, அத்தால் நிரதிசயாநந்திகளாக. (நன்முனிவர்) அவனுடைய சம்ருத்தியை மநநம்பண்ணும் ஸ்வபாவராயிருக்கை. அன்றிக்கே, "திருவாய்மொழியை யொழிய வேறொருசம்பத்துவேண்டா" என்று இதுவே மநநம்பண்ணி ஹ்ருஷ்டராம்படியாகவும்.

(பண்ணார்பாடல்) பண்ணோடே சேர்ந்த பாட்டல். புஷ்பமானது பரிமளத்தோடே அலருமாபோலே, பண்ணுமிசையும் மிகுந்திருக்குமாய்த்து. (இன்கவிகள்) இசையும்பண்ணுமொழியவே கொர்க்குக்கழிந்த சுளைபோலே கவிதானே யினிதாயிருக்குமாய்த்து. (யாணுய்த்தன்னைத்தான்பாடி) பிதாவானவன் புத்ரனுக்கு பசுவை நீர்வார்த்துக் கொடுத்து அவன்பக்கலிலே தான்மீள நீரேற்றுப் பசுவைப் பெறுமாபோலே, சுதனை வார்த்தையைக் கற்பித்து அவன்சொல்லக்கேட்டு இவனினியனுமாபோலே. தான் பாடினுகில் ஸ்ரீகீதையோடொத்துப்போம். நம்பிதிருவழுதிநாடுதாசர், "அருள்கொண்டாடும்" என்கிறபாட்டிலே, "ஸ்ரீகீதையையப்யஸித்தானொருவன் சந்த்யாஸதஸ்ஸிலேசென்றால் பலருமாக நாழியரிசியைக்கொடுத்து விப்ரவஸிக்கமாட்டாமையாலே 'புறந்திண்ணையிலேகிட' என்பர்கள்; திருவாய்மொழிகற்றொருவிண்ணப்பம்செய்வான் சென்றால், சர்வேஸ்வரனகப்படப் புறப்பட்டெதிர்கொண்டு அகமொழித்துக்கொடுத்து அமுதுபடியுமெடுத்துவிட்டு சத்கரிப்பர்கள்" என்றாராம். "பண்டேபரமன்பணித்த" என்று இவரங்கீகரிக்கையாலே அந்த ஸ்ரீகீதைதானும் வீறுபெற்றதிறே.

(தென்னாவென்னும்) செருக்காலே "தென்னா, தென்னா" என்று ஆளத்திவையாநிற்குமாய்த்து; சம்சாரிசேதநனுக்கு பகவல்லாபமுண்டானால் "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று சாமகாநம்பண்ணுமாபோலே; "அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்கிறவன் தைர்யபங்கம்பிறந்து பாடாநிற்குமாய்த்து. (என்னம்மான்) சுதவசநமினிதாம்போது ப்ராப்தியுண்டாகவேணுமிறே; அதுக்கடியான ப்ராப்தியைச்சொல்லுகிறதாய்த்து.

(திருமாலிருஞ்சோலையானே) இவரைப்பாடுவித்தமுக்கோட்டை. "பாட்டினாலுன்னையென்னெஞ்சத்திருந்தமை - காட்டினாய்கண்ணபுரத்துறையம்மானே" என்று அவரைப்பாடுவித்தமுக்கோட்டையிறேயது. தாம்பாடினகவிகளினினிமையை யநுசந்தித்தார், இவை தாமடியாகப்பிறந்தனவென்று சொல்லலாயிருந்ததில்லை, இதுக்கடியென் என்றுபார்த்தார், அவன்தன்னெஞ்சிலே புகுந்திருந்து பாடுவித்தானாயிருந்தது. "கண்ணபுரத்துறையம்மான்" என்று கவிபாடுவித்த மூக்கோட்டையைச் சொல்லுகிறார் ............................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (நண்ணாவித்யாதி.) இவர்திருமேனியை விரும்புகிற ப்ரகரணத்திலே திருவாய்மொழியைக்கேட் டினியனாகையைச் சொல்லுகிறதென்னென்ன; த்வேதா வருளிச்செய்கிறார் (அவன் தம்மோடேயித்யாதி வாக்யத்வயத்தாலே;) "மாயக்கவியாய்," "தன்னைத்தானேதுதித்து" இத்யாதியாலே ப்ரஸ்துதமாகையாலே யருளிச்செய்கிறாரென்றபடி. "நன்கென்னுடலம் கைவிடான்" என்றத்தைப்பற்ற (தம்மோடேகலந்தென்றது.) பரிஹாராந்தரம் (நன்கென்னுடலமித்யாதி.) அதாவது - திருமேனியெல்லாம் வேண்டாதே உக்திமாத்ரத்திலே களியாநின்றானென்றபடி. ஆளத்தியாவது - காநத்துக்கு பூர்வரங்கமானவாலாபம்.

நவிவெய்த - விநாசத்தை யடையும்படியாக. நவிவு - விநாசம். எய்துகை- ப்ராபிக்கை. பொலிவு - வ்ருத்தி. தலைச்சிறப்ப - மிகவுமதிசயிக்கும்படியாக. பலிதம் (ஸ்துத்யனுடையவித்யாதி.) ஸ்துத்யனுடைய வவதார மநுகூலரக்ஷண ப்ரதிகூலநிரஸநங்களுக்கு ஹேதுவாயிருக்குமோவென்ன (பரித்ராணாயேத்யாதி.) சாதுபரித்ராணாதிகளுண்டாகிலிறே ஜகத்பத்மபோதம் வருவதென்னும் கருத்தாலே யருளிச்செய்கிறார் (அகிலேத்யாதி.)

"இன்பம்தலைச்சிறப்ப" என்னுமளவுக்கும் பாவம் (ப்ரதிகூலேத்யாதி.) கருவி - சாதநம். அதாவது - ஆயுதம்.

திருவாய்மொழி ப்ரதிகூலநிரஸநத்துக்கு ஹேதுவென்னுமதுக்கு சம்வாதம் (அவ்யபதேஶ்யனுக்கித்யாதி.) எப்படி சர்ஹித்தானென்ன (ஒருமதிளை யித்யாதி வாக்யத்வயம்.) நெஞ்சுளுக்கும்படி - நெஞ்சிடிபடும்படி. அவ்யபதேஶ்யன் - க்ரிமிகண்டன். அநந்தரத்திலவன் - அவன்மகன். அநந்தரத்திலவன் அசுரனோவென்ன (விபரீத இத்யாதி) "ௐௌலோகேஷு தைவ ஆஸுர ஏவச । விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ்ததாஸுர:." (த்வௌபூதஸர்கௌலோகேஷு தைவஆஸுரஏவச । விஷ்ணுபக்திபரோதேவோவிபரீதஸ்ததாஸு

ாஃ) "வரித்ராணாயஸாயூநாம் விநாஶாய சதுஷ்க்ருதாம் । யீமஸம் ஸ்தாபநாமாய ஸம்பவாமியுகெயுகெ" (பரித்ராணயஸாதூநாம் விநாஶாயசதுஷ்க்ருதாம் । தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமியுகேயுகே) இதி கீதாயாம். "தமொலிஜகத்பதமபொயாயாவ்ருதநா। தெவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம்மஹாத்மநா" (தமோகிலஜகத்பத்ம போதாயாச்யுதபாநுநா । தேவகீபூர்வசந்த்யாயாமாவிர்ப்பூதம்மஹாத்மநா) இதி பஞ்சமேம்ஶே, சப்தார்த்தம் (பொருந்தாமையையித்யாதி.) "அசுரர்" என்றுதே, "நண்ணுவசுரர்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (சம்பந்தமித்யாதி.) (உள்ளது) இழக்கைக்கென்றபடி.

"நல்லவமரர்" என்கிற தாரையென்ன (விஷ்ணுபக்தித்யாதி.) சப்தார்த்தம் (அநுகூலராயித்யாதி.) விவரணம் (இவர்களுக்கித்யாதி.) அமரர் - அநுபவபரர். "அமரர்" என்றபோதே பகவத்பக்தரென்று சித்தமானாலும், நல்லராகையாலே "அமரர்" என்று ஹேதுகர்ப்பவிசேஷணமாகையாலே புநருக்திதோஷமில்லை கருத்து. உண்ணுதே தடிக்கைக்கு இது தாரகமோவென்ன (தொண்டர்க்கித்யாதி.)

அவையேதென்ன (சர்வேஶ்வரனித்யாதி) முனிவர்-மநநசீலர்; "முநிர் மநநஶீல:" * நன்மைக்கு - * எண்ணுதனகளெண்ணுகையே நன்மையென்றும், திருவாய்மொழி வ்யதிரிக்தசம்பத்து வேண்டாவென்கை நன்மையாவதென்று மர்த்தத்வயம்.

முந்தினவர்த்தத்தில், இன்பமாவது-ஈஶ்வரனுடைய குணவிபூதி ப்ரதிபாதகமான திருவாய்மொழியுண்டாகையால் வந்தவாநந்தம்; இரண்டாமர்த்தத்தில், திருவாய்மொழியாகிற நிரதிசயசம்பத்தால்வந்தவாநந்தம். இவர்கள் திருவாய்மொழியாலே நிரதிசயாநந்திகளாம் ப்ரகாரத்தை விசதமாக வருளிச்செய்கிறார் (திருவாய்மொழியித்யாதி) மநநசீலதையிலே நன்மையேதென்ன (அவனுடையவித்யாதி)

ஆர்தல் - சேர்தலும், மிகுதியும். இவ்வர்த்தத்வயத்தையு மடைவே யருளிச்செய்கிறார் (பண்ணோடேசேர்ந்தபாடலென்றும், புஷ்பமானதித்யாதியாலும்) "பண்ணும்-பாடலும்-ஆர்" என்றந்வயிப்பது. பண்-ஸ்வரம். இசை-ராகம். "இன்" என்றதுக்குபாவம் (இசையுமித்யாதி) தொக்கு - த்வக். மேல்தோல். சக்கையென்றபடி.

இதுக்கு த்ருஷ்டாந்தம் (பிதாவானவனித்யாதி யானுய்த் தன்னைத்தான்பாடினுலுகக்கும்படியென்னென்ன (சுதனையித்யாதி; என்னுதல், த்ருஷ்டாந்தாந்தரமாதல். இவ்விடத்திலே, "முக்தஸ்தநந்தயமுகாத்ப்ரதமோதிதாவாமவ்யக்தவர்ணமதுராஸ்வததேஹிமாத்ரே । ஸ்ரீரங்கதத்ப்ரதிமமௌக்த்யக்ருதாஸ்திரமே த்வத்கர்ணவர்த்மநிவமேதம்ருதஸ்யதாராம்" (முக்தஸ்தநந்தயமுகாத்ப்ரதமோதிதாவாமவ்யக்தவர்ணமதுராஸ்வததேஹிமாத்ரே । ஸ்ரீரங்கதத்ப்ரதிமமௌக்த்யக்ருதாஸ்திரமே த்வத்கர்ணவர்த்மநிவமேதம்ருதஸ்யதாராம்) என்கிறதநுசந்தேயம். தான் பாடாதே இவரையிட்டுப்பாடுகிற தென்னென்ன (தான்பாடினுனுகிலித்யாதி) ஸ்ரீகீதையைப்பற்ற வித ஶ்லாக்யமென்னுமதுக்கைதிஹ்யம் (நம்பியித்யாதி) ஆனாலும் சரமஶ்லோகத்தாலே ஸ்ரீகீதைக்கதிசயமில்லையோவென்ன (பண்டேயித்யாதி.)

இதுக்கு த்ருஷ்டாந்தம் (சம்சாரிசேதநனித்யாதி) "தென்னு" என்கைக்கடி-"அம்மான்" என்றது.

"யானொய்த்தன்னைத்தான்பாடித் திருமாலிருஞ்சோலையான்" என்றதுக்குபா வம் (இவரையித்யாதி) முக்கோட்டை - மூகாம்பிகை. அதுகவித்வாபாதகம். இதுக்கு த்ருஷ்டாந்தம் (பாட்டினலித்யாதி) அவரை-திருமங்கையாழ்வாரை. அது-திருக் கண்ணபுரம். அதுபோலே யிதுவுமென்றபடி. திருமொழி எட்டாம்பத்து பத்தாந் திருமொழி ஒன்பதாம்பாட்டு, "நாட்டினாய்" இத்யாதி. எடுத்தபாசுரத்துக்கர்த்தம் (தாம்பாடினவித்யாதி)

நவிவெய்தும்படியாகவும், பொலிவெய்தும்படியாகவும், இன்பம் தலைச்சிறக்கும்படியாகவும், பண்ணார்பாடலென்றுதொடங்கி, தென்னாவென்னுமித்யந்வய:.*

---

# ஆறாம்பாட்டு.

திருமாலிருஞ்சோலையானேயாகிச்செழுமூவுலகுந்தன்
னொருமாவயிற்றினுள்ளேவைத்தூழியூழிதலையளிக்குந்
திருமாலென்னையாளுமால்சிவனும்பிரமனுங்காணா
தருமாலெய்தியடிபரவவருளையீந்தவம்மானே.

## ஆறாயிரப்படி.

(திருமாலிருஞ்சோலையானே) த்ரைலோக்யமெல்லாம் தன்சிறுவயிற்றிலேவைத்து யுகந்தோறும் ரக்ஷித்தருளும் ஸ்வபாவனாய், ஸ்ரிய:பதியாய், ப்ரஹ்மருத்ராதிகளா லநவரதாபிஷ்டுத சரணயுகளனாய், தத்ஸமீஹித பலப்ரதனாய், ஸர்வேஸ்வரனாயிருந்த திருமாலிருஞ்சோலையான், எனக்குப்பித்தனாய் என்னைப்பிரிகிறிலனென்கிறார்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரஹ்மருத்ராதிகளுக்கு முபகாரகனாய் ஸ்ரிய:பதியானவன், திருமலையில்நின்று என்னையடிமைகொள்ளுகைக்கு வ்யாமுக்தனாயிராநின்றானென்கிறார்.

சிவனும்-ஜ்ஞாநாதிகனானருத்ரனும். பிரமனும்-ப்ரஹ்மாவும். காணாது-காணப்பெறாதே. அரு - பெறுதற்கரிதான. மால்-அதிசயிதபக்தியை. எய்தி-உடையராய்க்கொண்டு. அடி-திருவடிகளை. பரவ-ஸ்தோத்ரம்பண்ண. அருளையீந்த-தன்நிரவதிக க்ருபையாலே அபேக்ஷிதப்ரதாநம்பண்ணின. அம்மான் - சர்வாதிகனாய். செழு-விலக்ஷணமான. மூவுலகும்-ஜகத்ரயத்தையும். தன்-அகடிதகடனாசமர்த்தனான தன்னுடைய. ஒரு-அத்விதீயமாய். மா - அடக்கினவிடந்தெரியாம லடக்கவல்லசக்திமாஹாத்ம்யத்தையுடைய. வயிற்றினுள்ளே-திருவயிற்றினுள்ளே ஒருபுடையிலே. வைத்து-வைத்து. ஊழியூழி-கல்பந்தோறும். தலை-தலையாக. அளிக்கும்-ரக்ஷிக்குமவனாய். திருமால் - இந்தசேஷித்வ ரக்ஷகத்வங்களுக்கு உபபாதகமான ஸ்ரிய:பதித்வத்தையுடையவன். திருமாலிருஞ்சோலையானேயாகி-திருமாலிருஞ்சோலையிலே நிலையுடையனாய்க்கொண்டே. என்னை-என்னை. ஆளும் - அடிமைகொள்ளுகையிலே. மால்-பெரும்பித்தனாயிராநின்றான்.

ஒருமாவென்று-ஏகதேசமான அத்யல்பஸங்க்யையைச்சொல்லிற்றாகவுமாம்.*

## ஈடு - ஆறும்பாட்டு.

ஸ்ரீயঃபதியானவன் திருமலையிலே நின்றருளி யென்னையாளுகையி லே வ்யாமுக்தனானனென்கிறார்.

( திருமாலிருஞ்சோலையானேயாகி - என்னையாளுமால் ) திருமலை தனக்கு வஸ்தவ்யபூமியாகக்கொண்டு நிற்கிறவன், என்னை யடிமைகொள் ளுகைக்காக வென்பக்கல் வ்யாமோஹ மொருவடிவுகொண்டாப்போலே யிருக்கிறவன். (செழுமூவுலகும்) கட்டளைப்பட்ட த்ரைலோக்யத்தையு ம். (ஒருவித்யாதி) அத்விதீயமாய்ச் சிறிதான வயிற்றிலேவைத்து, கல்ப ந்தோறும் கல்பந்தோறும் தலையாகரக்ஷிக்கும். ப்ரளயாபத்தில் ஜகத்துக் குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே என்னையொழியத் தனக்குச் செல்லாதானாயிருக்கை. ( திருமால் ) ஸ்ரீயঃபதி. ( என்னையாளுமால் ) என்னையடிமைகொள்ளுகைக்காகப் பிச்சுத்தா னொருவடிவு கொண்டாப் போலேயிருக்குமவன். ( சிவனும் பிரமனு மித்யாதி ) ப்ரஹ்மருத்ராதிக ள், காணப்பெறாமையாலே நிரதிசயபக்தியுக்தராய்த் திருவடிகளை அடை வுகெடவேத்த, அவர்களுக்கு முகந்தோற்றாமே கடக்கநின்று அருளைப் பண்ணிக்கொடுக்கும் சர்வேச்வரன், எனக்குக் கண்ணுக் கிலக்காம்படி திருமலையிலே வந்துநின்று என்னையடிமைகொள்ளுகையிலே பெரும்பித் தனானன். ........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( திருமாலிருஞ்சோலையித்யாதி. ) "திருமால் - திருமாலிரு ஞ்சோலையானேயாகி-என்னையாளுமால்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரீ யঃபதியித்யாதி.)

"செழுமூவுலகும்" என்றுதொடங்கி "திருமால் - சிவனும் பிரமனும் கா ணாதருமாலெய்தி யடிபரவவருளையீந்தவம்மான் - திருமாலிருஞ்சோலையானேயாகி- என்னையாளும்மால்" என்றந்வயித்தர்த்தம் ( திருமலைதனக்கித்யாதி. ) "சோலை யானேயாகி-" சோலையையுடையனாய்க்கொண்டு நிற்கிறவென்றபடி. "ஆளும்" எ ன்றது - அமுந் ப்ரத்யயம். ஆளுகைக்காகவென்றபடி. மாலையுடையவனென்னாதே "மால்" என்றதுக்குபாவம் ( வ்யாமோஹமித்யாதி. )

"மா" என்று - விபரீதலக்ஷணையாய், அல்பமானவென்றபடி. தலையாக-ம்ர லாக்யமாக. பதப்ரயோகத்துக்கு பாவம் ( ப்ரளயாபத்திலித்யாதி. )

இவர்பக்கல் வ்யாமோஹ ப்ரகரணத்துக்குச்சேர ( அவர்களுக்கு முகந்தோ ற்றாமே கடக்கநின்று ) என்கிறார். அடியிலந்வயித்தத்தைப் பின்னையும் காட்டுகிறார் ( எனக்கித்யாதி. ) ........................................................................*

---

## ஏழாம்பாட்டு.

அருளாயி யென்னம்மானேயென்னுமுக்கணம்மானுந்
தெருள்கொள்பிரமனம்மானுந்தேவர்கோனுந்தேவரு
மிருள்கள்கடியுமுனிவருமேத்துமம்மான்றிருமலை
மருள்கள்கடியுமணிமலைதிருமாலிருஞ்சோலைமலையே.

## ஆறாயிரப்படி.

(அருளாயி) இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருமலையை யாஶ்ரயித்திறே வந்ததென்றுகொண்டு, திருமலையைநின்றேத்துகிறார். ..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தம்மை யங்கீகரிக்கைக்காக வவன் வந்துநின்ற திருமலையினுடைய வைலக்ஷண்யத்தைப் புகழ்ந்தருளுகிறார்.

என்னம்மானே - என்னுடைய ஸ்வாமியானவனே. அருளாஈ - உன்னுடைய க்ருபையைத் தந்தருளவேணும். என்னும் - என்றுகொண்டு. முக்கணம்மானும்-த்ரிணேத்ரனாய் ஈஶ்வராபிமாநியான ருத்ரனும். தெருள்கொள் - ஸ்ரஷ்ட்ருத்வாத்யுபயுக்தமான ஜ்ஞாநாதிகுணத்தையுடைய. பிரமனம்மானும் - ப்ரஹ்மாவாகிற ஸ்ருஜ்யஜகத்பதியும். தேவர்கோனும் - தேவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரனும். தேவரும் - த்ரயஸ்த்ரிம்ஶத்கோடிதேவர்களும். இருள்கள் - ஸ்வரூபபுருஷார்த்த விஷயமான ஜ்ஞாநாபாவம், அந்யதாஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம் முதலான தமஸ்ஸுக்களை. கடியும் - புராணத்யுபதேசமுகத்தாலே போக்கக்கடவரான. முனிவரும் - பரமருஷிகளும். ஏத்தும் - ஸ்தோத்ரம்பண்ணும்படியான. அம்மான் - ஸ்வாமியானவனுடைய வாசஸ்த்தாநமான. திருமலை - திருமலையாய். மருள்கள் - ப்ராப்திப்ரதிபந்தகமான அவித்யாதி சகலப்ரமங்களையும். கடியும் - போக்கக்கடவதாய். மணி-நிரதிசயபோக்யமாம்படி விலக்ஷணமான. மலை - மலை. திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையென்று திருநாமமான. மலையே - திருமலையிறே. .......................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

தம்முடைய விஸ்ஸம்ருத்திக்கெல்லாமடி திருமலையானபின்பு, இத்தேசந்தானே நமக்கு ப்ராப்யமென்று திருமலையைக் கொண்டாடுகிறார்.

அருளாயியென்பர்கள் - ப்ரசாதத்தைப்பண்ணி யருளென்பர்கள். (என்னம்மானே) நீயருளாதொழிந்தால் புறம்பு எங்களுக்குப்புகலுண்டோ; ப்ராப்தனான நீ யருளவேண்டாவோவென்பர்கள். இப்படி சொல்லுகிறவர்கள்தா னாரென்னில் (முக்கணித்யாதி) லலாடநேத்ரனாய் ஈஶ்வராபிமாநியான ருத்ரன், அவனுக்குங்கூட ஜ்ஞாநப்ரதனாய் ஜநகனாகையால் வந்தவேற்றத்தையுடைய சதுர்முகன், தேவஜாதியை சநியும் புதனும் மெய்க்காட்டுக்கொள்ளுகிற விந்த்ரன், தங்களை யுடையனாகை அவனுக்கேற்றமாம்படி யிருக்கிற தேவர்கள், அஜ்ஞாநாந்தகாரத்தை வாஸனையோடே போக்கியிருக்கும் ஸ்மர்த்தாக்களான ருஷிகள், இவர்களடங்கலு மொருமிடறுசெய் தேத்தும்படியாக சர்வேஶ்வரன் தான்விரும்பிவந்து மேல்விழுந்து படுகாடுகிடக்கும் தேசமாய்த்து. (மருள்கள்கடியும் மணிமலை) ப்ராப்யவிரோதியானவற்றை யடையப்போக்கும் தேசமாய்த்து. அதாகிறது - திருமலையை யொழிந்ததொன்றே ப்ராப்யமென்று பிறக்கும் புத்தியைத் தவிர்த்துத்தருமாய்த்து. இதெல்லா மெதுதாலென்னில்; மற்றுமுண்டோ (திருமாலிருஞ்சோலைமலையே. )..................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( அருளாயீயித்யாதி. ) "மணிமலை திருமாலிருஞ்சோலை மலையே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( தம்முடையவித்யாதி. )

"என்னம்மானே-அருளாயீ-என்னும் முக்கணம்மானும்" என்று கூட்டுவது.

ஸ்வாமித்வத்தைச்சொல்லி சம்போதிக்கிறவர்களுடைய ஹார்த்தபாவம் (நீயருளாதொழிந்தா லித்யாதிவாக்யத்வயத்தாலே.)

தெருள்கொள் - தெருளையுடையவென்றபடி.

ஸ்மர்த்தாக்களான - ஸ்ம்ருதி கர்த்தாக்களான. படுகாடுகிடக்கும் - வெட்டி விழுந்த காடுபோலே கிடக்கும்.

"மருள்கள்" என்று - அவித்யாதிகளாகவருளிச்செய்து, அர்த்தாந்தரம் (அதாகிறதித்யாதி) அதாகிறதெனறது-மருள்கள் கடிகையாவதென்றபடி. மருள் - தெருள் - ப்ராப்யாந்தரஜ்ஞாநம். மணிமலை - அழகியமலை. ஸ்வயம்புருஷார்த்தமானமலையென்றபடி ........................................................................*

---

# எட்டாம்பாட்டு.

திருமாலிருஞ்சோலைமலையேதிருப்பாற்கடலேயென்றலையே
திருமால்வைகுந்தமேதண்டிருவேங்கடமேயெனதுடலே
யருமாமாயத்தெனதுயிரோமனமேவாக்கேகருமமே
யொருமாநொடியும்பிரியானென்னூழிமுதல்வனொருவனே.

## ஆறாயிரப்படி.

( திருமாலிருஞ்சோலை ) விளைந்தசம்ருத்திதானேதென்னில்; இதென்கிறார்.

திருமாலிருஞ்சோலை, திருப்பாற்கடல், திருநாடு, திருமலைதொடக்கமாகத் தானெழுந்தருளியிருக்கும் திருநகரிகளெல்லாவற்றிலுமுள்ள ஸம்ப்லேஷத்தினால் ப்ரீதனுமாபோலே, என்னுடைய வவயவங்களிலே யோரோரவயவத்தோடுள்ள ஸம்ப்லேஷத்தினாலே ப்ரீதனாய், என்னை யொருக்ஷணமும் பிரியில் தரிக்கமாட்டுகிறிலன்; ஒருவனுடைய வபிநிவேசமிருக்கும்படியேயிது! என்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருமலைதொடக்கமான திவ்யதேசங்களோடொக்க வென்னுடைய சர்வாவயவங்களையும் விரும்பி யொருக்ஷணைகதேசமும் பிரிகிறிலன், இவனொருவனாயிருக்கிறானே! என்று விஸ்மிதராகிறார்.

திருமாலிருஞ்சோலைமலையே-திருமாலிருஞ்சோலைமலையையும். திருப்பாற்கடலே-திருப்பாற்கடலையும். அவற்றோடொக்க, என்றலையே - என் தலையையும். திருமா

ல் - " ஶ்ரியாஸார்த்தம் " (ஸ்ரியாஸார்த்தம்) என்கிறபடியே ஸ்ரியஃபதியாய்க்கொண்டிருக்கிற. வைகுந்தமே - பரமபதத்தையும். தண்—ஸிரமஹரமான. திருவேங்கடமே-பெரியதிருமலையையும். அப்படியே, எனதுடலே-என்சரீரத்தையும். அரு-துஸ்தரமாய். மா-அதிசயிதையாய். மாயத்து - ஆஶ்சர்யமான ப்ரக்ருதியோடே சம்ஸ்ருஷ்டமான. எனதுயிரே - என்னுத்மாவையும். மனமே-மநஸ்ஸையும். வாக்கே-வாக்கையும். கருமமே-க்ரியையையும். ஒருமாநொடியும் - ஒருக்ஷணத்திலொருமாப்பொழுதும். பிரியான்-பிரிகிறிலன். என்னூழிமுதல்வன்-என்னைலபிக்கைக்காக காலோபலக்ஷித சகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனுனவன். ஒருவனே! - ஒருவனுயிருக்கிறனே!.

கீழ்லேகாரங்கள் - எண்ணுதல், அவையே அஸாதாரணமாம்படி விரும்பினபடியாதலாயிருக்கிறது. நொடி - க்ஷணம் ....................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருமலைதொடக்கமானகோயில்களெல்லாவற்றிலும் பண்ணுமபிநிவேசத்தை யென்னவயவங்களிலேபண்ணி ஒருக்ஷணமும் பிரிகிறிலன், இவன்படியிருந்தபடியென்! என்கிறுர்.

(திருமாலிருஞ்சோலைமலையித்யாதி) தெற்கில் திருமலையையும், திருப்பாற்கடலையும், இவருடைய உத்தமாங்கத்தையுமொக்கவிரும்பினுன்; ஸ்ரீவைகுண்டத்தையும், வடக்கில்திருமலையையும், இவர்திருமேனியையுமொக்கவிரும்பாநின்றுன். (திருமால்வைகுந்தம்) " ஶ்ரியாவஸார்த்தஂஜகத்பதிঃ " (ஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதிঃ) என்கிறபடியே (அம்மிதுநத்துக்குத்தகுதியான தேசம்) ஆக, இரண்டுதிருமலைகளிலும் பரவ்யூஹங்களிலும் பண்ணும்விருப்பத்தையடைய விவர்திருமேனியொன்றிலும் பண்ணுநின்றுனென்றபடி. (அருவித்யாதி) இவருடைய ஆத்மவஸ்துவிலும் மநோவாக்காயங்களிலுமொக்க விரும்பாநின்றுன். அவதாரணத்தால்-அதுதன்னிலும் க்ரமத்தாலன்றிக்கே க்ஷணகாலமுமிடைவிடாதே சௌபரியைப்போலே அநேகம் வடிவுகொண்டு நில்லாநின்றுனுய்த்து. (அருவித்யாதி) ஆத்மவஸ்துவென்றெரு வ்யபதேசமாத்ரமாய், அநாதிகாலமசித்திலே கலசி அத்தாலே அசித்ஸமனுயிறேயிருக்கிறது. அருவென்கையாலே - "மமமாயாதுரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே ஒருவரால் கடக்கவரிதாயிருந்துள்ள அசித்தோடே கலசிக்கிடக்கிற வாத்மவஸ்துவிலும். (மனமேவாக்கேகருமமே) கீழ், இதுதன்னை ஒன்றுகவிரும்பினபடி சொன்னுர்; இங்கு தனித்தனியே யெல்லாவற்றிலுமொக்க ஏககாலத்திலே விருப்பத்தைப்பண்ணினபடியைச் சொல்லுகிறுர். (ஒருமாநொடியும்பிரியான்) ஒருக்ஷணத்தி லேகதேசமும் பிரிகிறிலன். ஒன்றில் நின்று மொன்றில் கால்வாங்கிப்போயநுபவிக்கிறிலன். ((என்னூழிமுதல்வனொருவனே) என்னிடத்தி லபிநிவிஷ்டனுகைக்காக காலோபலக்ஷித சகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனுன அத்விதீயனுனவன். சம்ஹாரகாலத்தில் சகலசேதநாசேதநங்களுக்கும் தன்னையொழியச் செல்லாதாப்போ

லேயாய்த்து இவர்திருமேனியையொழியத் தனக்குச்செல்லாதேயிருக்கிறபடி. கார்யகாரணோபயாவஸ்த்த சிதசித்துக்களுடைய சத்தை தன்னதீநமாம்படியிருக்கிறவன் தன்னுடையசத்தை யென்சரீராதீநமாம்படியிரா நின்றான்.) (என்னாழிமுதல்வனொருவனே!) (என்பக்கலிலே யபிநிவிஷ்டனான சர்வேச்வரனுடையபடியிருந்தபடியென்!,) இச்சபலனையே பெரியவீச்வரனென்கிறது?, இவனுமொருவனே! என்கிறார் ...............*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (திருமாலித்யாதி) "அருமாமாயம்" என்றுதொடங்கி "பிரியானாழிமுதல்வனொருவனே!" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (திருமலையித்யாதி.)

பூர்வார்த்தத்துக்குத்திரண்டபொருள் (ஆகவித்யாதி.)

"நொடியும்பிரியான்" என்னுமளவுக்கும் பாவம் இவருடையவித்யாதி)

அவதாரணத்தாலென்றது - "உயிரே, மனமே, வாக்கே, கருமமே" என்றவதாரணத்தாலென்றபடி.

உயிரொன்றதே "அருமாமாயத்து" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஆத்மவஸ்துவித்யாதி) "கருமம்" என்று - காயத்தைலக்ஷிக்கிறது. "மாமாயம்" என்றது - எல்லைகாணவொண்ணாத ப்ரக்ருதியென்றபடி. "அரு" என்றதுக்கர்த்தம் (அருவென்கையாலேயித்யாதி.)

கீழே "எனதுடலே" என்றுவைத்து, திரியவும் "கருமம்" என்பானென்னென்ன (கீழிதுதன்னையித்யாதி) அதாவது-கீழே, கரணசஹிதமான வவயவியைவிரும்பினபடி சொல்லிற்று; இங்கு, கரணங்களையு மவயவியையும் தனித்தனியே விரும்பினபடி சொல்லுகிறதென்றபடி. ஒன்றாக - சமமாக.

நொடி-க்ஷணம். மா-அதிலேசதேசம். தமிழர், "மாநொடி" என்று - நொடியிலஷ்டமாம்சமென்பர்கள். பலிதம் (ஒன்றில்நின்றுமித்யாதி.)

"என்னாழிமுதல்வன்" என்றதுக்கர்த்தம் (இச்சபலனையேயித்யாதி) "ஒருவனே!" என்றதுக்கர்த்தம் (இவனுமித்யாதி)

"உயிரே" இத்யாதி சதுஷ்டயத்திலும் "ஒருமாநொடியும்பிரியான்" என்றத்தை யந்வயிப்பது. இரண்டுதிருமலையைச்சொன்னது - உகந்தருளின நிலங்களெல்லாவற்றுக்கு முபலக்ஷணம். "திருமாலிருஞ்சோலைமலையே" என்றுதொடங்கி "எனதுடலே, அருமாமாயத்தெனதுயிரே - ஒருமாநொடியும்பிரியான், மனமே - ஒருமாநொடியும்பிரியான்" என்று, "உயிரே" இத்யாதிசதுஷ்டயத்திலும் "ஒருமாநொடியும்பிரியான்" என்றத்தை யந்வயித்து, "என்னாழிமுதல்வனொருவனே" என்று அந்வயமாதல்; அன்றிக்கே, "திருமாலிருஞ்சோலைமலையே" என்றுதொடங்கி "என்தலையே - ஒருமாநொடியும்பிரியான், திருமால்-எனதுடலே - ஒருமாநொடியும்பிரியான்" என்றுதொடங்கி, "ஒருமாநொடியும்பிரியான்" என்றத்தை எல்லாவற்றிலு மந்வயித்துக்கொண்டு, என்னாழிமுதல்வனொருவனே என்றந்வயமாதல். "மலையே, திருப்பாற்கடலே" இத்யாதி ப்ரதமாவிபக்தியையெல்லாம் த்விதீயையாக்கி, மலையையும் திருப்பாற்கடலையும் என்று இப்படி முடியச்சொல்லிக்கொள்வது. அருமாமா

யத்தேனதுயிர் - கடக்கவரிதாய் மஹத்தாய் அபரிச்சிந்நமாய் ஆஶ்சர்யரூபமான ப்ரக்ருதியோடே சம்ஸ்ருஷ்டமான வென்னுத்மாவையுமென்றபடி. "ஒரு-நொடி-மாவும்பிரியான்" என்றந்வயிப்பது. ஒருக்ஷணத்திலொருமாப்பொழுதும் பிரிகிறிலன். நொடி-க்ஷணம் ......................................................*

## ஒன்பதாய்பாட்டு.

ஊழிமுதல்வனொருவனேயென்னுமொருவனுலகெல்லா
மூழிதோறுந்தன்னுள்ளேபடைத்துக்காத்துக்கெடுத்துழலு
மாழிவண்ணனென்னம்மானந்தண்டிருமாலிருஞ்சோலை
வாழிமனமேகைவிடேலுடலுமுயிருமங்கவொட்டே.

### ஆறாயிரப்படி.

(ஊழிமுதல்வன்) நமக்கிந்த சம்ருத்தி யெல்லாம் திருமலையாலே வந்த சம்ருத்திகிடாய், நெஞ்சே, இனி திருமலையைக் கைவிடாதேகிடாய் என்று நெஞ்சைக்குறித்துச் சொல்லி, "இவ்வாத்மாவினுடைய நிகர்ஷம்பாராதே யித்தோடே கலந்தருளினுயேயாகிலும், என்னுடைய ஹேயமான இந்த ப்ரக்ருதியி லபிநிவேசத்தை விட்டருளவேணும்" என்று எம்பெருமானை ப்ரார்த்திக்கிறுர். ......................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஹேதுபூதனுன சர்வேஶ்வரன், தம்முடைய சரீராதிகளை விரும்பினபடியைக்கண்டு அத்தை விடும்படிக்கிடாக, "அவனெழுந்தருளிநிற்கிற திருமலையையாஶ்ரயி, ஒருக்காலும் கைவிடாதேகொள்" என்று தந்திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறுர்.

ஊழி - காலோபலக்ஷித சமஸ்தவஸ்துக்களுக்கும். முதல்வனொருவனே - ஒருவனே காரணபூதனுக. என்னும் - "ஏகமேவ" (ஏகமேவ) என்று காரணவாக்யங்களிலே சொல்லப்பட்ட. ஒருவன் - அத்விதீயனுய். உலகெல்லாம் - சமஸ்தலோகங்களையும். ஊழிதோறும் - ஸ்ருஷ்ட்யாத்யநுகூல காலந்தோறும். தன்னுள்ளே - தன் சங்கல்பைகதேசத்துக்குள்ளே. படைத்து - ஸ்ருஷ்டித்து. காத்து-ரக்ஷித்து. கெடுத்து - சம்ஹரித்து. உழலும் - இதுதானே யாதனையாகநடத்தும். ஆழிவண்ணன் - அபரிச்சிந்ந ஸ்வபாவனுய். என்னம்மான் - இந்த ப்ராப்திமுகத்தாலே எனக்கு ஸ்வாமியானவனுடைய. அம் - தர்ஶநீயமாய். தண் - ஶ்ரமஹரமான. திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையை. மனமே - நெஞ்சே. உடலுமுயிரும் - நமக்கு த்யாஜ்யமான தேஹப்ராணுதிகள். மங்க - மங்கும்படியாக. ஒட்டு - செறிந்தாஶ்ரயிக்கப்பாராய். கைவிடேல் - நம்காரியம் செய்துமுடிக்குந்தனையும் கைவிடாதேகொள். வாழி - இத்தாலே நீ வாழ்வாயாகவேணும்.

ஆழிவண்ணனென்று - அபரிச்சிந்நபோக்யமான விக்ரஹத்தையுடையவனென்றுமாம்......................................................*

ஈ௫ - ஒன்பதாம்பாட்டு.

நமக்கிந்த சம்பத்தெல்லாம் திருமலையாலே வந்ததாய்த்து, திருமலையைக் கைவிடாதே கொள்ளென்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

(ஊழிமுதல்வனொருவனேயென்னுமொருவன்) காலோபலக்ஷிதசகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனானவனொருவனுமே என்று "ஸதெவ" (ஸதேவ) இத்யாதி ப்ரமாணங்களாலே சொல்லப்படுகிற ஒருவன். கார்யாகாரமான விதனையவழிந்தவன்று இவற்றைத்தன்மேலே யெறட்டுக்கொண்டு நிற்கிறவன்கிடீர் இப்போதென்னுடம்பிலே வந்துதங்குகிறான். காரணாவஸ்த்தையில் சிதசித்துக்களுடைய சத்தை தன்னதீநமாம்படியிருக்குமவன் ஸ்வஸத்தை யென்னதீநமாம்படி யிராநின்றான்.

காரணாவஸ்த்தையில் சத்தையைநோக்கிவிட்டால் பின்னையோதானிவை தன்னைத்தான் நோக்கிக்கொள்ளுகிறது (உலகெல்லாமித்யாதி) நாமரூபங்களைக் கொடுத்துவிட்டால், பின்னைத்தான் தங்கள்கார்யம் தாங்கள் செய்கிறார்களோ. இத்தால் சொல்லிற்றாய்த் தென்னென்னில்; எல்லாவவஸ்த்தையிலு மிவரையொழியத் தரிப்பானாயிருக்கிறிலன். ப்ரளயாத்யாபத்துக்களி லிவற்றுக்குத் தன்னையொழிய ஸ்த்திதியில்லாதாப்போலே, தானிவரையொழியில் தரிக்கமாட்டானா யிராநின்றான். (ஆழிவண்ணன்) கம்பீரஸ்வபாவனென்னுதல்; கடல்போலே ஸ்ரமஹரமான வடிவைக்காட்டி யென்னை சம்சாரப்ரளயத்தில் நின்று மெடுத்தவ னென்னுதல்.

(அந்தண்டிருமாலிருஞ்சோலை) அவனுக்குங்கூட தர்ஸநீயமாய் ஸ்ரமஹரமான தேசம். (வாழிமனமேகைவிடேல்) நெஞ்சே, நாஞ்சொல்லுகிற சம்ருத்தி யுனக்கு மாறாதிடுக. அவனிப்படி நம்பக்கலிலே மேல்விழுந்து விரும்புகையாகிற சம்ருத்திக்கெல்லாம் ஹேது திருமலையாய்த்து; இத்தை யொருக்காலும் கைவிடநினையாதேகிடாயென்கிறார் தந்திருவுள்ளத்தைப்பார்த்து.

அவனும் தன் திருவுள்ளத்தைக் குறித்து "ஆழ்வாரைத்தந்தது அவருடைய திருமேனியாயிருக்கும், நீயுமத்தை யொருக்காலும்விடாதேகிடாய்" என்றான்; "பிரானே, அங்ஙனொண்ணாது, இத்தைத்தவிரவேணும்" என்று நிர்ப்பந்திக்கிறார் (உடலுமுயிருமங்கவொட்டு) சரீரமும் ப்ராணனும் மங்கும்படி இசையவேணும். இது அத்திருமலைபோலே யுபாதேயமாயிருப்பதொன்றன்று, சால ஹேயமா யிருப்பதொன்று; இத்தை மங்கவிசையவேணும். மங்கவொட் டென்கையாலே - "இதுக்குமுன்புத்தை ஆழ்வாருடைய விருப்பு ப்ராரப்த சேஷத்தாலல்ல, பகவதபிப்ராயத்தாலே" என்னுமிடம் தோற்றுகிறது. ஈஸ்வரன் பற்றிவிடேனெ

ன்றிருக்கையாலே யிருந்தாரென்கிறது; "உடலம்கைவிடான்" என்று ரிறே. ................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (ஊழியித்யாதி.) "அந்தண்டிருமாலிருஞ்சோலைவாழி மனமே" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை (நமக்கித்யாதி.) இந்த சம்பத்தெல்லாமென்றது - நாமவனைப்பெறுகிற வதிசயமெல்லாமென்றபடி.

"என்னும்" என்றது - ப்ரமாணப்ரசித்தி. பதப்ரயோகத்துக்குபாவம் (கார்யாகாரமானவித்யாதி.) இவ்வாக்யத்தால் பலிதம் (காரணாவஸ்த்தையிலித்யாதி.)

"தன்னுள்ளே படைத்து" என்றதுக் கர்த்தம் (காரணாவஸ்த்தையில் சத்தையையித்யாதி.) "காத்துக்கெடுத்துழலும்" என்றதுக்கர்த்தம் (நாமரூபங்களையித்யாதி.) கீழ்வாக்யவிவரணம் (ப்ரளயாத்யாபத்துக்களிலித்யாதி.) வண்ணம்-ஸ்வபாவமும், நிறமும். "என்னம்மான்" என்றதுக்கு பாவம் (என்னைசம்சாரத்திலித்யாதி.)

"வாழி" என்றதுக்கர்த்தம் (நெஞ்சேநாமித்யாதி.) "கைவிடேல்" என்றதுக்கர்த்தம் (அவனிப்படியித்யாதி.)

மேலுக்கவதாரிகை (அவனுமித்யாதி.) பத்தாம்ப்பாட்டில் "நங்கள்கோனே" என்கிற சம்போதநத்தை "உடலுமுயிரும்மங்கவொட்டு" என்கிறவிடத்திலும் கூட்டிக்கொள்வது. இத்தால் பலிதம் (இதத்திருமலையித்யாதி.) இப்போது "மங்கவொட்டு" என்றதுக்கு பாவம் (மங்கவொட்டென்கையாலேயித்யாதி.) "பகவதபிப்ராயத்தாலே" என்றத்தை விவரிக்கிறார் (ஈஸ்வரனித்யாதி.) இப்படி யவன் விடாரேவென்ன (உடலமித்யாதி.)

என்னம்மானுடைய வந்தண்திருமாலிருஞ்சோலையென்றபடி...............*

---

# பத்தாம்பாட்டு.

மங்கவொட்டுன்மாமாயைதிருமாலிருஞ்சோலைமேய
நங்கள்கோனேயானேநீயாகியென்னையளித்தானே
பொங்கைம்புலனும்பொறியைந்துங்கருமேந்திரியமைம்பூத
மிங்கிவ்வுயிரேய்பிரகிருதிமானாங்காரமனங்களே.

## ஆறாயிரப்படி.

(மங்கவொட்டு) தாமிப்படி ப்ரார்த்திக்கச்செய்தேயும் தம்முடைய ப்ரக்ருதியிலுள்ள லோபத்தினாலே எம்பெருமான் தம்முடையசொல்லை யாதரியாதிருக்க;

அவனுக்கிதினுடைய ஹேயதையை ப்ரதர்ஶிப்பித்து, இந்தஹேயமான ப்ரக்ருதியி லபிநிவேசத்தை யவஶ்யம் விட்டருளவேணுமென்று பின்னையு மபேக்ஷிக்கிறார் ....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி திருவுள்ளத்தாலே திருமலையை யாஶ்ரயித்திருக்கச்செய்தேயும் அவனுடைய வத்யபிரிவேஸூத்தை நிவர்த்திப்பிக்கைக்காக ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய ஹேயதையைபரிகணித்து, ஏவம்பூதையான வுன்னுடைய மாயை நசிக்கும்படி யநுமதிபண்ணி யருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

திருமாலிருஞ்சோலை-திருமாலிருஞ்சோலைமலையிலே. மேய-நித்யவாசம்பண்ணி. நங்கள்கோனே-என்போல்வார்க்கு ஸ்வாமியானவனாய். யானேநீயாகி-நானேயெனக்கு பரிஹரித்துக்கொள்ளுமாபோலே வேறுபாட்றநீதானேயாய். என்னை-என்னை. அளித்தானே-ரக்ஷித்தவனே. பொங்கு - போக்யதையாலே கிளர்ந்துபுலப்படுகிற. ஐம்புலனும்-சப்தாதிவிஷயங்களைந்தும். பொறியைந்தும் - அதிலேயகப்படுத்துகைக்குக் கரணமானநேத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும். கருமேந்திரியம்-அவ்விஷயங்களில் ப்ரவர்த்திக்கைக்கு ஹேதுவான கர்மேந்த்ரியங்களைந்தும். ஐம்பூதம்-சப்தாத்யாஶ்ரயமாயும் இந்த்ரியாஶ்ரய சரீராரம்பகமாயுமுள்ள ப்ருதிவ்யாதிபூதங்களைந்தும். இங்கு-சம்சாரதசையில். இவ்வுயிரோய்-ஜீவனோடே அத்யந்தசம்ஸ்ருஷ்டமான. பிரகிருதி-மூலப்ரக்ருதி. மான் - வ்யவசாயஹேதுவானமஹான். ஆங்காரம்-அபிமாநஹேதுவான அஹங்காரம். மனங்கள்-சங்கல்பநிதாநமானமநஸ்ஸு, ஆகிற. உன்மாமாயை - உன்னுடைய அத்யாஶ்சர்யமான ப்ரக்ருதிப்ராக்ருதங்களானதுகள். மங்கவொட்டு-மங்கும்படியிசைந்தருளவேணும்..................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இப்படி யிவர் நிர்ப்பந்திக்கச்செய்தேயும் ஆனைக்குப்பாடுவாரைப்போலே கேளாதிருந்தான்; அதுக்கடி - "சாந்துபூசுவார் பரணியையுடைத்தோபூசுவது, இதென்சொன்னீரானீர்" என்ன; திரியவும், மங்கவொட்டென்கிறார்.

(உன்மாமாயை-மங்கவொட்டு) ஒருவராலும் தப்பவொண்ணாதபடி நீபந்தித்த ப்ரக்ருதியை மங்கவிசை. "த்யாஜ்யமென்றறிந்தபின்பு உம்முடைய சரீரத்தை நீரோயுபேக்ஷிக்குமத்தனையன்றோ,நாமிசையவேண்டுகிறதென்" என்ன; சர்வசக்தியான நீபிணைத்தபிணையை அசக்தனான நான் விடவோ - "ஜஜஊயாஉ-ுாஈத)யா" (மமமாயாதுரத்யயா) என்றிலேயோ.

(திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே) பரமபதம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டு நீதிருமலையிலேவந்து முற்பாடனாய்நிற்கிறது நான்சொன்னபடி காரியம்செய்வதாகவன்றோ, நீநினைத்தபடி காரியஞ்செய்யப்பார்த்தாயாகில் பின்னையவ்விருப்பிலே யென்னையழைத்துக்கொள்ளாயோ. திருமலையிலேவந்துநின்று என்னுடையசேஷத்வத்தையும் உன்னுடைய சேஷித்வத்தையு மெனக்கறிவித்தவனே.

(யானேநீயாகியென்னையளித்தானே) என்னபிசந்தியை நீயுடையையாய் என்காரியம் செய்யக்கடவநீ, இப்போது நானிரக்கவிருக்கிறதென்; நானபேக்ஷியாதிருக்க இதுக்குமுன்பெல்லாம் நீயேயன்றோ என்னுடைய ரக்ஷணங்கள் பண்ணிப்போந்தாய்.

இப்படிசொல்லச்செய்தேயும், இத்தைத்தவிர்த்துக்கொடுக்க நினையாமையாலே பேசாதிருந்தான்; நான் நிர்ப்பந்திக்கச்செய்தேயும் கேளாதாரைப்போலே பேசாதேயிருக்கிறதென் என்ன; "நான்பேசாதிருக்கிறேனல்லேன், நீர் 'ஹேயம்' என்றுசொல்லுகிற விதுதான் நமக்குபாதேயமாயிராநின்றது, ஆகையாலே ஹேயோபாதேயவிபாகம் பண்ணமாட்டுகிறிலோம், அறிந்தநீர் ஹேயமென்கிறதுதன்னை யெனக்கின்னதென்றுசொல்லீர் நான்கழித்துத்தர" என்றான்; ஆகில் கேட்கலாகாதோவென்று சொல்லுகிறார் (பொங்கைம்புலனித்யாதி) "உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும் பழுதேயா । முணர்வைப்பெறவூர்ந்து" என்று அவன்றானிவர்பக்கல் செய்தத்தை யிப்போதவனுக்கு இவர்தாம் தெரிவிக்கிறார். ஒருகர்மம்செய்தது செய்யமாட்டாமையில்லையிறே வ்யாமோஹம்; அதுபோலு மன்றிக்கே இதுநிலைநிற்குமதிறே. சேதநனைத்தந்தாமுக்குரியரல்லாதபடி விக்ருதராம்படிபண்ணவல்ல சப்தாதிகளைந்தும், வறைநாற்றத்தைக்காட்டிச் சிலபதார்த்தங்களைத் தப்பாதபடி யகப்படுத்துமாபோலே இச்சேதநனை அவ்விஷயங்களிலேகொடுபோய் மூட்டிமுடிக்கவற்றான ஜ்ஞாநேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், ப்ருதிவ்யாதிகள், கார்யாவஸ்த்தமான சித்வஸ்துவைப்பற்றிக்கிடக்கிற ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், மநஸ்ஸு, ஆக இவையாகிற வுன்னுடைய மாமாயையைமங்கவொட்டு. காரணாவஸ்த்தமானதுதானே அவஸ்த்தாந்தராபந்நமாகையிறே கார்யமாகையாகிறது.... ........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (மங்கவொட்டித்யாதி.) திரியவும் "மங்கவொட்டு" என்றதுக்கவதாரிகை (இப்படி யித்யாதிவாக்யத்ரயம்.) ஆனைக்குப்பு - சதுரங்கம். அதுக்கடி - கேளாதிருக்கைக்கடி.

"மா" என்றதுக்கர்த்தம் (ஒருவராலுமித்யாதி.) "உன்" என்றதுக்கு பாவம் (த்யாஜ்யமென்றித்யாதி.) அப்படி விடப்போகாதோ வென்ன (மமமாயேத்யாதி.)

தேஹநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறவிடத்திலே "திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே" என்றதுக்குபாவம் (பரமபதமித்யாதிவாக்யத்வயம்.) "திருமாலிருஞ்சோலை" இத்யாதிக்கு பாவாந்தரம் (திருமலையிலேயித்யாதி.) அதாவது-திருமலையிலேவந்துநின்று உன்சேஷித்வத்தை யறிவித்த நீ ப்ராப்தியையும் பண்ணித்தரவேணுமென்றபடி.

என்னபிசந்தியை நீயுடையையாயென்றது - நானெனக்கு நன்மைபார்க்கும் நினைவை நீயுடையையா யென்றபடி. "என்னையளித்தானே" என்றதுக்கர்த்தமாதல், விவரணமாதல் (நானபேக்ஷியாதிருக்கவித்யாதி.)

மேலுக்கவதாரிகை (இப்படிசொல்லச்செய்தேயுமித்யாதி.) இப்படி சொல்லச்செய்தேயுமென்றது - "மங்கவொட்டு" என்றர்த்திக்கச்செய்தேயுமென்றபடி. இவருடைய ஜ்ஞாநவைசத்யத்திலே யீடுபடுகிறார் (உணர்வுமித்யாதி.) கர்மவஸ்யராகையாலே யிவர்க்கவனறிவிக்கலாம், சர்வஜ்ஞனுக் கிவரறிவிக்கவேண்டுவானே

ண்ணென்ன் ( ஒருகர்மமித்யாதி. ) கர்மத்துக்கு மீட்சியுண்டு, வ்யாமோஹத்துக்கு மீட்சியில்லை என்று கர்மத்திற்காட்டில் வ்யாமோஹத்துக் கேற்றமருளிச்செய்கிறார் ( அதுபோலுமித்யாதி. ) ஆக, வ்யாமோஹத்தாலே யவனறியாதிருக்க இவர் தெரிவிக்கவேண்டிற்றென்று கருத்து. பொங்குதல் - கிளம்புதலாய், ( விக்ருதராம்படி பண்ணவல்ல ) என்றபடி. வரூநாற்றம் - வறுத்த த்ரவ்யநாற்றம். சில பதார்த்தங்களை - பெருச்சாளிமுதலானவற்றை. இங்கு - சம்சாரத்திலே. இவ்வுயிர் - கார்யாவஸ்த்தமான சித்வஸ்து. ஏய்கை - பொருந்துகை.

“ மாமாயை ” என்று - மூலப்ரக்ருதியைச் சொல்லுமொழிய, சரீரத்தைச் சொல்லுமோவென்ன ( காரணாவஸ்த்தமானதித்யாதி; ) ஆகையாலே சொல்லலாமென்றபடி. “இங்கிவ்வுயிரோய் பிரகிருதி ” என்று - மூலப்ரக்ருத்யம்ஸத்தைச் சொல்லுகிறது. “ மாமாயை ” என்று - சரீரத்தைச்சொல்லுகிறது.

திருமாலிருஞ்சோலைமேயநங்கள்கோனே, யானேநீயாகி யென்னையளித்தானே, பொங்கைம்புலனுமென்றுதொடங்கி, மானாங்கார மனங்களான - உன்மாமாயையை - மங்கவொட்டு இத்யந்வயம்.........................................................*

# பதினொன்றாம்பாட்டு.

மானாங்காரமனங்கெடவைவர்வன்கையர்மங்கத்
தானாங்காரமாய்ப்புக்குத்தானேதானேயானானைத்
தேனாங்காரப்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துண்
மானாங்காரத்திவைபத்துந்திருமாலிருஞ்சோலைமலைக்கே.

## ஆறாயிரப்படி.

(மானாங்காரம்) நான்சொன்னபடியே செய்தருளும் ஸ்வபாவனானவாறே, தனக்கத்யந்த மபிமதமாயிருந்த விப்ரக்ருதியி லபிநிவேசத்தை விட்டருளி பெரியசெருக்கோடேகூட வென்னுள்ளேபுகுந்து கலந்தருளின வெம்பெருமான் என்னோடுகலந்து பரிமாறுகையாலவனுக்குள்ள கர்வத்தைச்சொல்லுகிறதாய், எம்பெருமானை ப்ரதிபாதித்த வாயிரம்திருவாய்மொழியிலும், பெரியகிளர்த்தியோடேயெழுந்த வித்திருவாய்மொழி திருமாலிருஞ்சோலையை ப்ரதிபாதிக்கிறதென்கிறார்......... .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக இவரர்த்தித்தபடியே ஈஶ்வரனுடைய விரோதிநிரசநோத்யோகத்தைச்சொல்லிக்கொண்டு, அதுவே யித்திருவாய்மொழிக்குப்பலமாக வருளிச்செய்கிறார்.

மானாங்காரமனம் - மஹதஹங்கார மநஃப்ரமுகமான சரீரசம்பந்தம். கெட - நசிக்கும்படியாகவும். வன்கையர் - ப்ரபலமான. ஐவர் - இந்த்ரியங்களைந்தும். மங்க - ஸ்வவிஷயங்களோடே மங்கிப்போம்படியாகவும். தானாங்காரமாய் - தானேபெரிய வபிமாநத்தையுடையனாய்க்கொண்டு. புக்கு - புகுந்து. தானேதானேயானானை - என்

ணுத்மாவும் தானேயாய் ஆத்மீயமும் தானேயானவனை. தேனுங்காரம் - வண்டுகளுடைய செருக்கையுடைத்தான. பொழில்-பொழிலையுடைய. குருகூர்ச்சடகோபன்-திருநகரிக்கு நிர்வாஹகரானவாழ்வார். சொல்லாயிரத்துள்-அருளிச்செய்தவாயிரத்துள். திருமாலிருஞ்சோலைமலைக்கே-திருமாலிருஞ்சோலைமலைக்கேயான. இவைபத்தும்-இவைபத்தும். மானுங்காரத்து-மஹதஹங்காரோபலக்ஷித சமஸ்தவிரோதிநிவ்ருத்தியிலே தாத்பர்யம்.

இப்பத்தும் அப்யஸித்தார்க்கு மஹதஹங்காராதிகள் தானேகழியுமென்று கருத்து. இது அறுசீராசிரியவிருத்தம் .........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், மஹதஹங்கார விஷயமான வித்திருவாய்மொழி திருமலையிலே சொல்லிற்றென்கிறார்.

(மானுங்காரமனங்கெட) மஹான், அஹங்காரம், மநஸ்ஸு என்று சொல்லுகிறவிவை கெடும்படியாக. இவைப்ரக்ருதிக்கு முபலக்ஷணம். (ஐவர்வன்கையர்மங்க) கர்மேந்த்ரியங்களுக்கும் சப்தாதிகளுக்கு முபலக்ஷணம். (வன்கையர்-பெருமிடுக்கர்.) பின்னை அவனிதுக்குச்சொல்லிற்றென்னென்னில்; இதில்பண்ணுகிற நிர்ப்பந்தத்தைத் தவிருகிறோமென்னத்தீருமிறே. அவன் "செய்கிறோம்" என்றுதலைதுலுக்கினால் பின்னைப் பெற்றதாயிருக்கத் தட்டில்லையே. (தானித்யாதி) தானெனக்கபிமாநியாய்ப்புக்கென்னுதல், பெரியசெருக்கோடே புக்கென்னுதல். (தானேதானேயானை) ஆத்மாத்மீயங்களி லெனக்குண்டான வபிமாநத்தைத்தவிர்த்துத்தானே யபிமாநியானவனை. அன்றிக்கே, இத்தலையிலர்த்தித்வத்தையொழியத் தானே யர்த்தியுமாய், இதுக்கபிமாநியும் தானேயானவனென்னுதல். (தேனுங்காரமித்யாதி) வண்டுகளினுடைய வபிமாநமேயான பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான வாழ்வாரருளிச்செய்த வாயிரத்திலும், மஹதாதிரூபமான ப்ரக்ருதி நிரஸநார்த்தமாகச்சொன்ன விப்பத்துமென்னுதல்; பெரியசெருக்கோடேசொன்ன விப்பத்துமென்னுதல். (திருமாலிருஞ்சோலைமலைக்கே) திருமலைவிஷயமாகவாய்த்துச் சொல்லிற்று; அழகரைச்சொன்னவிடமுண்டாகில் அதில் கல்பகதருவைச்சொன்னவோபாதி. திருமலையிலுள்ளதடைய வுத்தேஶ்யமாகக் கடவதிறே; "எம்பெருமான் பொன்மலைமேலேதேனுமாவேனே" என்றும் சொன்னார்களிறே.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( மானுங்காரமித்யாதி ) "மானுங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (மஹதித்யாதி) மஹதஹங்காரவிஷயமான வென்றது-மஹதாதிதோஷ ப்ரதிபாதகமானவென்றபடி.

( சப்தாதிகளுக்கும் ) என்கிறவிடத்தில், ஆதிசப்தத்தாலே - ததாஶ்ரயங்களான பூதங்களும் தத்க்ராஹகங்களான ஜ்ஞாநேந்த்ரியங்களும் சொல்லப்படுகிறது.

(கர்மேந்த்ரியங்களுக்கும்) என்கிறபாடமுண்டானபோது, “ஐவர்” என்று - ஜ்ஞாநேந்த்ரியங்களைச்சொல்லுகிறது.

மேலுக்கவதாரிகை (பின்னையவனித்யாதி) பின்னையென்றது - இவர் “மங்கவொட்டு” என்று ப்ரார்த்தித்தபின்பென்றபடி. இதுக்குச்சொல்லிற்றென்னென்னிலென்றது - “மங்கவொட்டு” என்றர்த்தித்ததுக் கவன்சொன்ன தென்னென்னிலென்றபடி. இதில் - இந்தத்திருமேனியில். தவிருகிறேனென்ற மாத்ரத்திலே தீருமோவென்ன (அவன்செய்கிறேனென்றித்யாதி) தானெனக்கபிமாநியாய் - தானென்கார்யத்துக்கெல்லாம் நிர்வாஹகனுயென்றபடி. “தானேதானே” என்றவீப்ஸைக்கர்த்தம் (ஆத்மாத்மீயங்களிலித்யாதி) அதாவது-ஆத்மாவுக்கும் ஆத்மீயத்துக்கும் தானேயபிமாநியென்றபடி. இதுக்கு - ப்ரக்ருதிசம்பந்த நிவ்ருத்திக்கு. “தானுங்காரமாய்ப்புக்கு” என்றதினிரண்டாமர்த்தம் - இவர்விரோதிநிவ்ருத்தியைப்பண்ணுகிறேனென்கிற கர்வத்தோடே புக்கென்றபடி. “புக்கு” என்றது-இசைந்தென்றபடி.

“மானுங்காரத்திவைபத்தும்” என்றதினிரண்டாமர்த்தத்தில், மஹத்வம் - அஹங்காரவிசேஷணம். செருக்கோடேசொன்னவென்றது-விரோதி நிவ்ருத்திக்காகச்செருக்கோடே சொன்னவென்றபடி.

அவதாரணார்த்தம் (திருமலைவிஷயமாகவித்யாதி) “தானேதானேயானென்னைச்சொன்ன” என்றிருக்க, “திருமலைவிஷயமாக” என்பானென்னென்ன (அழகனாயித்யாதி) இப்படியாகிலும் சொல்லுகிறதென்னென்ன (திருமலையிலித்யாதி) திருமலையிலுள்ளதெல்லா முத்தேஶ்யமோவென்ன (எம்பெருமானித்யாதி) பெருமாள்திருமொழி, “உம்பருலகு” இத்யாதி. என்னுயனுனவனுடைய ஶ்லாக்யமானதிருமலைமேலேயுள்ள தேதேனுமொரு பதார்த்தமாகவு மமையுமென்றபடி.

ஆக, இவர் “மங்கவொட்டு” என்றதுக்கு அவன்செய்த தென்னென்ன; “மானுங்காரமனங்கெட ஐவர்வன்கையர்மங்கும்படியாகத்தானுங்காரமாய்ப்புக்கு” என்கையாலே - ப்ரக்ருதிசம்பந்த நிவ்ருத்தியைப்பண்ணித்தருகிறேனென்று தலைதுலுக்கினுனென்றபடி. “வன்கையரான - ஐவர்” என்றந்வயிப்பது. ப்ரபலரான விஷயங்களைந்தையுமென்றபடி. தேன்-வண்டு. ....................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(செஞ்சொற்கவிகாள்)

ஈத்ருக்ஸ்வாத்மஹாவாஸ்ரயஹ்ருதயதயா, ஸ்வஸ்துதௌ ப்ரேரகத்வாத், ஸ்வாஶ்ரிதஸ்வாத்மதாநப்ரதயா, ஸ்வஸ்துதௌகர்த்ருஹாவாசகத்வ வஸ்யாநுக்யயோகாத், ஸ்வஹவியஸவியஸ்யாநவக்வேந, தேவ ஶ்ரீஶாநத்ராநஸக்ராஞ்ஜநவஹிகரேஷித்வாத்யோகஸஞ்ஜநாத்॥ (௧௧௦)

(அத்யாஶ்சர்யஸ்வபாவாத்த்ருதயகததயா) மாமாயன்மாயக்கவியாய் வந்தென்னெஞ்சுமுயிருமுள்கலந்து - ஆஶ்சர்ய சேஷ்டிதங்களை யுடையனுய்க்கொண்டு ஆஶ்ரிதருடைய ஹ்ருதயகதனுயிருக்கையாலும்; (ஸ்வஸ்துதௌப்ரேரகத்வாத்) தானேயானென்பானுகித் தன்னைத்தானே துதித்து - ஸ்வவிஷயஸ்தோத்ரத்திலே ஆஶ்ரி

தனை ப்ரேரிக்குமவனாகையாலும்; (ஸ்வாமித்வாத்) நின்றமாயவம்மான்சேர் - எல்லார்க்கும் நிருபாதிகஸ்வாமியாகையாலும்; (ஸர்வபூதாந்தரநுகததயா) உலகுமுயிரும்தானேயாய் - சர்வபூதங்களுக்கு மந்தராத்மாவாய் நிற்கையாலும்; (ஸ்வஸ்துதௌகர்த்ருபாவாத்) யானுய்த்தன்னைத்தான்பாடி - அப்படியே ஆஸ்ரிதர்க்கு மந்தராத்மதயா விருந்து தன்னைத்தானே ஸ்துதிக்குமவனாகையாலும்; (ஆபத்பந்துத்வயோகாத்) செழுமூவுலகும் தன்னொருமாவயிற்றினுள்ளே வைத்தூழியூழிதலையளிக்கும் - ப்ரளயந்தோறும் எல்லாலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷிக்குமவனாகையாலும்; (பஹுவிதஸவிதஸ்த்தாநவத்வேந) அம்மான்திருமலை மருள்கள் கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே, திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேயித்யாதி - பஹுவிதங்களான ஸ்ரீவநாத்ரி க்ஷீராப்தி வைகுண்ட வேங்கடாசலாஸ்ரித சிரஸ்ஸரீராத்ம மநோவாக்கர்மங்களிலே சர்வதாவர்த்திக்குமவனாகையாலும்; மேலிரண்டுபாட்டிலும், "ஊழிமுதல்வனொருவனேயென்னு மொருவனுலகெல்லாமூழிதோறும்தன்னுள்ளேபடைத்துக்காத்து" என்றும், "நங்கள்கோனே யானேநீயாகி யென்னையளித்தானே" என்றும் ரக்ஷகத்வ ஸ்வாமித்வாதிகளைத் தானே யருளிச்செய்கையாலே இவை கீழே வ்யாக்யாத மாகையாலே, சங்க்ருஹீதமாய்த்தென்று திருவுள்ளம்; ஏவம்பூதனான ஸ்ரீவநாத்ரியிலெம்பெருமான், ஆஸ்ரிதருடைய சரீரப்ரப்ருதிகளினு மத்யந்தமாதரம்பண்ணுநின்றானென்று "செஞ்சொற்கவிகாள்" என்கிறதசகத்திலே சடகோபரருளிச்செய்தாரென்கிறார் ......................(௯௰)

## திருவாய்மொழிநூற்றந்தாதி.

செஞ்சொற்பரன்றனதுசீராருமேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்றவாஞ்சைதனின் - விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக்கைவிடுவித்துக்கொண்ட
திண்டிறல்மாறன்னந்திரு. (௯௭)

(செஞ்சொல்பரன்) இதில், அவன், தேஹசபலனா யாதரிக்க, இவர் "விரோதியான சரீரத்தைவிடுவி" என்று விடுவித்துக்கொண்டமைபேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; தம்மோடே வந்து கலந்து தமக்குப் பரதந்த்ரனாய்த் தந்திருமேனியிலே யத்யபிநிவிஷ்டனாய்த் திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொடுபோகவேணுமென்று அவன் தந்திருமேனியிலே மிகவும்பண்ணுகிற சாபலத்தைக்கண்டு, "நம்பக்கலாதராதிசயத்தாலேயன்றோ இவன் நம்முடம்பை யாதரிக்கிறது" என்று பார்த்து, "இதில் தோஷமறியாமல் ராகாந்தனாயிருக்கிற விவனுக்கு இதின்தோஷத்தை யுணர்த்தவே யித்தைத்தவிரும்" என்று நினைத்து, இதின் தோஷங்களை அவனுக் கறிவிக்க, அபிமதவிஷயத்தி லழுக்குகப்பாரைப்போலே அதுதானே யவனுக்கு மேல்விழுகைக்குடலாக, "எனக்கிதுவு மபிமதமாயிருக்கும், ஆனபின்பு இத்தைக்கழிக்கவேணும்" என்று இவர் அவன்திருவடிகளிலே தலையைமடுத்துச் சரணம்புக, இவர்நிர்வகைபார்க்குமவனாகையாலே "இவர்க்கநபிமதமாகில் வருந்தியு மித்தைக் கழித்துக்கொடுக்கக் கடவோம்" என்று தலைதுலுக்க, "நம்சொலவைப்பரிபாலிப்பதே!, இதொரு சீலமிருந்தபடியே!" என்று தலைதுலுக்குகிற * செஞ்சொற்கவியிலர்த்தத்தை "செஞ்சொல்பரன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

( செஞ்சொல்பரன் ) "செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற தேவர்களுய கன்" என்கிறபடியே - செவ்வியசொல்லான திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப் படுகிற சர்வஸ்மாத்பரனுன சர்வேஸ்வரன், இதுதான் * செவிக்கினியசெஞ்சொல் லிறே. ( சீராரும்மேனிதனில் ) * தனிச்சிறையில்விளப்புற்று அஸ்நாதையாயிருந்த பிராட்டிவடிவைக்காண வாசைப்பட்டாப்போலே, * பிறவியஞ்சிறையிலே ஜ்ஞாந பக்த்யாதிகள் விஞ்சியிருக்கிற விக்ரஹத்திலே. ( வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைத னின் விஞ்சுதலேக்கண்டு ) அதாவது - "வஞ்சக்கள்வனுகையாலே - நெஞ்சுமுயிரு மவையுண்டு தானேயாகிநிறைந்தான்" என்றும், "என்னைமுற்றுமுயிருண்டு" என் றும், "என்னைமுற்றுமுயிருண்டென் மாயவாக்கையிதனுட்புக்கு" என்றும், "என் கொலம்மான்றிருவருள்கள் - நன்கென்னுடலம்கைவிடான்" என்றும், "திருமாலி ருஞ்சோலைமலேயே" என்றுதொடங்கி "ஒருமாநொடியும் பிரியான்" என்றும், இப்படி யிவர்திருமேனியை மேல்விழுந்து அத்யாதரம் பண்ணுகிறபடியைக்கண்டு; "உடலுமுயிரும்மங்கவொட்டு" என்றும், "பொங்கைம்புலனும்" என்றுதொட ங்கி "மானுங்காரமனங்கள் - மங்கவொட்டு" என்றும், இதின்தோஷதர்ஸநபூர்வ கமாக அவனைக்காற்கட்டித் தன்காற்கட்டைவிடுவித்துக்கொண்டபடியென்கை. கை விடுவித்துக்கொள்ளுகையாவது - அவனைக் காலேக்கட்டிக் கையை விடுவித்துக்கொ ண்டாரென்றபடி. ( கைவிடுவித்துக்கொண்ட திண்டிறல்மாறன் ) சர்வசக்தி, "சரீ ரத்தோடே கொடுபோகவேணும்" என்று கரக்ரஹணம்பண்ண, இவர், சரணக்ரஹ ணம்பண்ணி விடுவித்துக்கொண்ட த்ருடமான சக்தியையுடைய ஆழ்வார். (நந்திரு) "ஸ உ வஸாக்விகஜநஸ்ய" ( ஸம்பச்சஸாத்விகஜநஸ்ய ) என்னும்படி ஆழ்வா ரான மாறன் நம்முடைய சம்பத்து......................................................(கஎ)

பத்தாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - கஎ.—பாட்டு - ௬0௬௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### திருமாலிருஞ்சோலை-ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

( திருமாலிருஞ்சோலை ) "இப்படி யபிநிவிஷ்டனாய்க்கொண் டென்னோடுகலந்து பரிமாறுகைக்கு ஹேதுவென்" என்று எம்பெருமானைக் கேட்டால், அங்ஙனே அபிநிவிஷ்டனாயிருந்த வவனாலும் பரிக்லப்தமான ஹேதுக்களிலொரு ஹேதுவு மென்பக்கலுண்டாகச் சொல்லவொண்ணாது, இனியென்பக்கலில்லாத ஹேதுவை யென்பக்கலிலே யத்யாரோபித்துச்சொல்லப்பார்க்கிலும் ........................................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், ஈழேதாமபேக்ஷித்தபடியிலே ஈஸ்வரன் கார்யம்செய்வதாக வறுதியிட்டபடியைக்கண்டு, "இப்படிநம்பக்கல் வ்யாமோஹம்பண்ணுகைக்கும் நாமபேக்ஷித்தகாரியம் செய்யும்படி பரதந்த்ரனாகைக்கும் நம்பக்கலொரு ஹேதுவில்லை, நிர்ஹேதுகமாக நம்மைவிஷயீகரித்தருளினானித்தனை" என்றறுதியிட்டு, அதுக்கடியானவனுடைய யாத்ருச்சிகாநுகூல்ய நிபந்தநமான பூர்ணாங்கீகாரத்தையும், அங்கீகாரஸ்த்தைர்யத்தையும், சுகமத்வாதிசயத்தையும், புருஷார்த்தப்ரதத்வத்தையும், ப்ராப்திப்ரதிபந்தக நிவர்த்தகத்வத்தையும், போகரஸப்ரதத்வத்தையும், நித்யாநுபாவ்யத்வத்தையும், நிரவதிகஸர்வப்ரகாரபோக்யத்வத்தையும், நிர்ஹேதுகோபகாரகதவத்தையும், நித்யகைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையு மநுசந்தித்து, ஏவம்பூதனான சர்வேஸ்வரன் நிருபாதிகபூர்ணவிஷயீகாரத்தைப்பண்ணி சமஸ்தவிரோதியும் நிரஸ்தமாம்படி திருப்பேரிலே ஸந்நிஹிதனாய் நிரதிசயாஹ்லாதகரமான வநுபவத்தைப்பிறப்பித்தான், இதொருசீலாதிசயமே! என்று மிகவும் ஹ்ருஷ்டராகிறார் ......... ........................................*

### ஈடு.

தம்மைக்குறித்து சர்வேஸ்வரனுக்குண்டான பாரதந்த்ர்யத்தைப்பேசினார் * அருள்பெறுவாரடியாரிலே; அந்தப்பாரதந்த்ர்யந்தன்னை முடியநடத்தினபடியைச்சொன்னார் * செஞ்சொற்கவியில்; "நீர்சொன்னபடியே செய்யக்கடவோம்" என்று தலைத்துலுக்கினானிறே.

இவர்தம்மைத் திருமேனியோடே கொடுபோவதாகத் தேங்கின தேக்கமிறே நடுவுள்ளது, அதொழியக் கொடுபோவதாக வற்றவன்றே பதறத்தொடங்கினன்; "செழும்பறவைதானேறித்திரிவான்" என்று-திருவடிதிருத்தோளிலே யேறிவந்திறே இவரைவிஷயீகரித்தது; அத்திருவடிதிருத்தோளிலேவந்திவரைக் கொடுபோவதாகப்பார்த்தான். சிலரை ஆதிவாஹிககர்த்தாக்களை வரவிட்டுக்கொடுபோம், சிலரைப் பெரியதிருவடியை வரக்காட்டிக்கொடுபோம்; திருவடிதிருத்தோளிலேவந்து தானே கொடுபோமவரிறேயிவர்; "ஊஹம்ஸ்மராமி மத்பக்தம்நயாமி" (அஹம்ஸ்மராமி மத்பக்தம்நயாமி) என்கிறபடியே. *கள்வன்கொல்லிற்பிராட்டியை யாளிட்டுக்கொடுபோமன்றிறே யிவரையுமாளிட்டுக்கொடுபோமது. [நானிலம் இத்யாதி] "சம்சாரமாகிற பாலைநிலத்தைக்கழித்துப்போந்தோம், 'நசபுநராவர்த்ததே' (நசபுநராவர்த்ததே) என்கிறதேசத்திலே புகுந்தோம்" என்றுதானேசொல்லித் தேற்றிக்கொண்டிறேபோவது.

ஆகவிப்படி தம்மை யவ்வருகேகொடுபோகையிலே பதறுகிறபடியை யநுசந்தித்தார்; "இவனிப்படி நம்பக்கல் பதறுகைக்கடியென்" என்றுபார்த்தார்; தம்பக்கலொன்றும்கண்டிலர். முதலிலே தம்பக்கலிலே அத்வேஷத்தையும் பிறப்பித்து, அதடியாக விசேஷகடாக்ஷத்தைப்பண்ணி, தம்பக்கலிலே யிச்சையையும்பிறப்பித்து, "தானேயுபாயம்" என்னும்புத்தியைப் பிறப்பித்து, அஸஹ்யாபசாரபஹுளராயிருக்கிற தம்முடைய வபசாரங்களை யடையப்பொறுத்து, விஷயங்களிலே ப்ரவணராய்ப்போந்ததம்மை "பலநீகாட்டிப்படுப்பாயோ" என்று தாமேசொல்லும்படிபண்ணி, தன்னாலல்லது செல்லாமையைப்பிறப்பித்து, தானேவந்து அவ்வருகே கொடுபோவானாக த்வரிக்கிறபடியை யநுசந்தித்து; "இன்றிப்படி நம்மையாதரிக்கிறவிவன் அநாதிகாலம் நம்மைவிட்டாறியிருந்தபடியெங்ஙனே, இன்றிப்படி யாதரிக்கைக்குத்தான் ஹேதுவென்" என்று பார்த்தார்; தம்பக்கலொரு ஹேதுகண்டிலர். இப்பேறு தாமடியாகவந்ததொன்றல்லாமையாலே தம்பக்கலொரு வாசிகண்டிலர்; முன்புத்தையிற்காட்டில் இப்போது தமக்கோரேற்றமுண்டாக நினைத்திருக்குமவரன்றே. முன்பேதொடங்கி நெடுங்காலமிவரைப்பெறவேணுமென்றிருக்கிறவன் இவர்க்கிப்போதொன்றைச்செய்தானாக நினைத்திரானே.

"இனிசர்வஜ்ஞனான வவனாகிலு மிதுக்கொரு போக்குச்சொல்லுமாகில் அவனைக்கேட்போம்" என்றுபார்த்து, "இன்றிப்படி யித்தை சிரசாவஹிக்கிறதேவர் முன்பு அநாதிகால மித்தைக்கைவிட்டிருப்பானென், இப்போதித்தை யாதரிப்பானென்" என்றுகேட்டார்; "உம்முடைய பக்கல் அத்வேஷமடியாகச்செய்தோம்" என்னமாட்டானே; தானறிய அதுவும் தன்னாலேவந்ததாகையாலும், அதுதான் பேற்றுக்கிடான சாதநமாகப்போராமையாலும். இனி ரக்ஷகனானவனுக்கு நெடுநாள் ரக்ஷ்யவ

ர்க்கத்தைவிட்டிருந்த விதுக்குச்சொல்லலாவதொன்றில்லையே பிற்பாட்டனதுக்கு லஜ்ஜிக்குமதுக்குமேற்பட; ஆகையாலே சொல்லலாவதொரு மறுமாற்றம் காணுமையாலே கவிழ்ந்துநின்று காலாலே தறையைக் கீறிநின்றான்.

முதலிலே ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணித் தன்பக்கலிலே யிச்சையைப்பிறப்பிக்கைக்கு வழியிட்டுவைத்தான்; அவ்வழியாலே யிச்சையைப்பிறப்பித்தான்; தன்பக்கலிலே உபாயபாவத்தை யெறட்டுக்கொண்டு * பொய்ந்நின்றஞானந்தொடங்கி யிவ்வளவாகத் தன்பக்கலிலே வரநிறுத்தினன்; பரபக்திதொடங்கி பரமபக்திபர்யந்தமான தசாவிசேஷங்களைப் பிறப்பித்தான்.

"இதுதன்னை முன்பே செய்யாவிட்டதென்" என்ன; "இதுக்குச்சொல்லலாவதொன்றில்லாமையாலே நிருத்தரனாய் நிற்கிறனித்தனை" என்றுபார்த்து, இப்படியவன் தம்பக்சல்பண்ணின விஷயீகாரத்தையும் அதுக்கடியானவவனுடைய க்ருபாதிகுணங்களையுமநுசந்தித்து, "இதொரு நிர்ஹேதுக விஷயீகாரமிருக்கும்படியே!" என்று அதிலே ஆழங்காற்பட்டு விஸ்மிதராய் ஹ்ருஷ்டராய்க்களிக்கிறார் ........................*

## ஜீயர் அரும்பதம்.

திருமாலிருஞ்சோலைப்ரவேசே, வர்த்திஷ்யமாண சங்கதிக்காக வ்ருத்தாநுவாதம் (தம்மைக்குறித்தித்யாதி) திருமேனியோடே யிராநிற்க முடியநடத்தினபடியென்னென்ன (நீர்சொன்னபடியித்யாதி.)

"மானுங்காரமனங்கெட" என்று சாற்றுப்பாட்டிலேயன்றோ தலைதுலுக்கினது, நடுவொன்பதுபாட்டிலும் செய்ததென்னென்ன (இவர் தம்மையித்யாதி) நடுவு - ஒன்பதுபாட்டிலும். அதொழிய-திருமேனியொழிய. அற்றவன்றே - அறுதியிட்டவன்றே. பதறுகிற ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (செழும்பறவையித்யாதி.)

ஆதிவாஹிகரை வரவிட்டன்றோ கொடுபோவதென்ன (சிலரையித்யாதி) ஆதிவாஹிகர்த்தாக்கள் - அதிவஹநகர்மத்துக்குக் கர்த்தாக்களென்றபடி. திருவடிதிருத்தோளிலேவந்து தானேகொண்டுபோம் என்னுமதுக்கு ப்ரமாணம் (அஹம்ஸ்மராமீத்யாதி வாக்யம்) "நயாமி" என்கிறதிலேநோக்கு.

இவரையு மாளிட்டுக்கொடுபோகவொண்ணாதோவென்ன (கள்வன்கொல்லித்யாதி) அப்படிதானே கூட்டிக்கொண்டுபோனானேவென்ன (நானிலமித்யாதி) இதுக்குபாவம் (சம்சாரமித்யாதி) திருவிருத்தம். இதுக்கு, புணர்ந்துடன்போக்கென்னுந்துறை. இப்பாட்டில் நாயகன் வைஷ்ணவனேயாகிலும் ஈஸ்வரனுக்கு முபலக்ஷணம். நானிலம் வாய்க்கொண்டு-நாலுவகைப்பட்ட பூமியை வாயிலேவைத்துக்கொண்டு. நன்னீரறமென்று - நிஸ்ஸாரமாம்படியென்று. கோதுகொண்ட - கோதாக்கின. வேனலஞ்செல்வன்-உஷ்ணகிரணனுனவாதித்யன். சுவைத்தமிழ்பாலை-சுகவத்துமிழ்ந்தபாலைதேசத்தை. கடந்த பொன்னேயென்று - நாயகியை சம்போதிக்கிறபடி. கானிலந்தோய்ந்து விண்ணோர்தொழுங்கண்ணன் வெஃகாவுது என்று-ப்ராப்யதேசத்தைக் காட்டுகிறபடி. இதுக்கு ஸ்வாபதேசத்திலேபாவம் (சம்சாரமாகிறவி

த்யாதிவாக்யம்) கானிலம்தோய்ந்து - பூமியிலே கால்பாவிநின்று. உது - அதூரவிப்ரக்ருஷ்டம். அம்பூமித்யாதி-அழகியபூவையும் தேனையுமுடைய வழகியசோலையைவ் வருகே யிருக்குமது. எப்பாலைக்கும் சேமத்ததே - எல்லாவவஸ்தைக்கும் க்ஷேமமுடைத்தென்றபடி.

கீழ்ச்சொன்னபடியை யநுவதிக்கிறார் (ஆகவிப்படியித்யாதி) அத்வேஷாதிகள் தம்பக்கலுண்டாயிருக்க "கண்டிலர்" என்பானென்னென்ன (முதலிலேயித்யாதி) "என்னைத்தீமனங்கெடுத்தாய்" "அமலங்களாகவிழிக்கும்" "மருவித்தொழும் மனமேதந்தாய்" "நின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாய்" "விண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்" "நின்னலாலிலேன்காண்" "விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்" என்றவற்றைப்பற்ற (அத்வேஷத்தையித்யாதி சபதக்ரமமும்) "அறுக்கும்வினையாயின" என்றத்தைப்பற்ற (அஸஹ்யாபசாரேத்யாதி) என்னுதல். "இன்றென்னைப்பொருளாக்கி" இத்யாதியைப்பற்ற (இன்றிப்படியித்யாதி) காணுமைக் கடியேதென்ன (இப்பேறித்யாதி) "வாசிகண்டிலர்" என்கிறதென், ப்ராவண்யமுண்டேயென்ன (முன்புத்தையித்யாதி) இவர் நினைவாலில்லாவிட்டாலு மவன்னினைவாலேயொரு சுக்ருதமில்லையோவென்ன (முன்பேதொடங்கியித்யாதி) ஒன்றைச்செய்தானாக - இவாபண்ணின சுக்ருதமடியாக வொன்றைச்செய்தானாக வென்றபடி.

"ஒன்றெனக்கருள்செய்ய வுணர்த்தலுற்றேனே" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இனி சர்வஜ்ஞனவித்யாதி) இவன் நிருத்தரனானமைக்கு ஹேத்வந்தரம் (இனி ரக்ஷகனனவனுக்கித்யாதி) மதுமாற்றம் - ப்ரத்யுத்தரம். கவிழ்ந்துநின்று காலாலே தறையைக்கீறினனென்றது - "உணர்த்தலுற்றேன்" என்றவநந்தரம், அவன்வார்த்தையின்றிக்கே "உற்றேனுகந்துபணிசெய்து" என்று தாமேசமாஹிதராகையாலே ஸித்தம்.

அவன் நிருத்தரனானபின்பு தாமே சமாஹிதரானபடியைக் காட்டுகிறார் (முதலிலேயித்யாதி.)

"என்னெஞ்சநிறையப்புகுந்தான்" என்றத்தைப்பற்ற (அவன்தம்பக்கலித்யாதி) "காரேழ்" இத்யாதியாலே ரக்ஷணம்சொன்னபோதே க்ருபாதிகுணங்களும் ஸித்தம். "இன்றென்னைப்பொருளாக்கி" என்றத்தைப்பற்ற (நிர்ஹேதுகவிஷயீகாரமென்றது) "அமுதுண்டுகளித்தேன்" என்றத்தைப்பற்ற (ஹ்ருஷ்டராய்க்களிக்கிறாரென்றது.)........................................................................*

---

## எட்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்னத்
திருமால்வந்தென்னெஞ்சநிறையப்புகுந்தான்
குருமாமணியுந்துபுனற்பொன்னித்தென்பாற்
திருமால்சென்றுசேர்விடந்தென்திருப்பேரே.

## ஆறாயிரப்படி.

திருமாலிருஞ்சோலைமலையென்னு மிச்சொல்லைச் சொன்னேனெ ன்னுமிதுக்கு மேற்படச் சொல்லலாவதொரு ஹேது வென்பக்கலில்லை, இச்சொல்லித்தனையும் மெய்யே சொன்னேன ஹேதுவாக, குருமாமணி யுந்துபுனல் பொன்னித் தென்பாலான திருப்பேரைத்திருநகரியாகவுடை யனுயிருந்தவெம்பெருமான் பெரியபிராட்டியாரோடேகூட வென்னெஞ் சுநிறையப்புகுந்து இப்படி யென்னோடேகலந்து பரிமாறுவதே!, ஒருவ னுடைய வபிநிவேச மிருக்கும்படியே! என்கிறார். ........................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், யாத்ருச்சிகமாகத் திருமலையைப்போய்க் கிட்டுங்காட்டில் லக்ஷ்மீஸஹாயனுய்க்கொண்டு என்னெஞ்சிலேவந்து புகுந்தானென்கிறார்.

காட்டுவார்த்தை மர்யாதையிலே, திருமாலிருஞ்சோலை மலையென்றே னென் ன - திருமாலிருஞ்சோலையென்று சொன்னவளவிலே. திருமால் - ஸ்ரிய:பதியாய் பரிபூர்ணனுன தான். வந்து - சாபேக்ஷரைப்போலேவந்து. என்னெஞ்சம் - உக்திக் குக் கூட்டுப்படாதேயிருக்கிற வென்னெஞ்சுக்குள்ளே. "வாக்குக்கு பூர்வபாவியல் லவோமநஸ்ஸு" என்கிற ஸ்வாபிப்ராயத்தாலே, அவனும்தானுமாக. நிறைய - பரி பூர்ணமாக. புகுந்தான் - புகுந்தான். திருமால் - என்னெஞ்சிலே வருகைக்காக "ஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதி:" (ஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதி:) என்றவளோடேயொ ருதேசவிசேஷத்திலே யிருக்கிறவன். சென்றுசேர்விடம் - சென்றுகண்வளர்ந்தருளி னவிடம். குருமாமணி - அதிஸ்லாக்யமான மாணிக்கங்களை. உந்து - உந்துகிற. பு னல் - புனலையுடைய. பொன்னி - பொன்னியின். தென்பால் - தென்பக்கத்தில். தென்திருப்பேர் - தர்ஸநீயமானதிருப்பேர். ........................................*

## ஈடு - முதற்பாட்டு.

யாத்ருச்சிகமாகத் திருமலையைச் சொல்லுங்காட்டில் நிரபேக்ஷனு ன தான் பிராட்டியோடேகூடவந்து என்னுள்ளே புகுந்தருளினு னென் கிறார்.

(திருமாலிருஞ்சோலையித்யாதி) முன்பு அநாதிகால மீப்ஸவரனு க்குத் தம்பக்கல் பேரிட்டுக்கொள்ளலாவதின்றிக்கே யிருக்க இப்போதவ னுக்குப் பேரிட்டுச்கொள்ளுகைக் கடியான தின்னதென்கிறார். ஒரோதே சங்களில் மலைகளைச் சொல்லாநின்றால் ஒரோ விசேஷணங்களையிட்டுச் சொல்லக்கடவதாயிருக்குமிறே; அப்படியே, திருமாலிருஞ்சோலை மலை யென்றேன்.

(என்ன) மநஸ்ஸஹகாரமுமில்லைகிடீர், உக்திமாத்ரமே யென்ப க்கலுள்ளது. "இவன் சேஷபூதனுயிருந்தானுகில், உபாயபாவம் நம்பக் கலிலே யாயிருந்ததாகில், இவருடையபேறுநம்பேறுயிருந்ததாகில், சே தநனுனவாசிக்கு உக்திமாத்ரமுண்டாய்த்தாகில், இதுக்கவ்வருகுகொண்

கொர்யமென்" என்றிருக்குமவனிறே. இதுதானொருமலையிறே அவனுக்கு. உக்தியையில்லையென்னவொண்ணாதே; இதுக்கடி யாராயு மவனல்லனே. ராவணன்றம்பிக்கு மித்ரபாவமே யமையுமென்னுமவன், இதுக்கவ்வருகொன்றுவேணுமென்றிரானிறே. மலைகளினுடைய சாமாந்யம்கிடக்க, இவ்விசேஷத்தைச் சொல்லிற்று - இதிலுண்டான வாதராதிசயமன்றோவென்றிராநின்றானித்தவன். ஆக, இவர்க்கொன்றில்லை யென்னவுமாய், அவனுக்கிதொன்றுண்டென்னவுமாம்படி யிருக்கிறதிறே யிதுதானே. ( திருமால் ) அஹ்ருதயமாகச் சொன்னதுதன்னை ஸஹ்ருதயமாக்கிக்கொடுப்பாரு மருகேயுண்டென்கிறார். ( வந்து ) "அவன்வருவதே!" என்று இவர் விஸ்மயப்படாநிற்க, "பிபாஸைவர்த்தித்தவன் தண்ணீரிருந்தவிடத்தே வருமத்தனையன்றோ" என்றாய்த் தவன்வார்த்தை. க்ருபணராயிருப்பார் ப்ராப்யரிருந்தவிடத்தே வருமித்தனையன்றோ வென்றிராநின்றான். எல்லார்க்கு மபிகம்யனானவனுக்கு நானபிகம்யனானேன்! ; "ஸொஹ்மஜு - ஶபரீம்" ( ஸோப்யகச்சத் - ஶபரீம் ) என்னுமாபோலே. ( என்னெஞ்சம் ) அந்தவுக்தி சஹ்க்ருதமானவென்னெஞ்சிலே. ( நிறையப்புகுந்தான் ) விஷயாந்தரங்களுக் கவகாச மில்லாதபடி புகுந்தான்; அத்ரிபகவா னாச்ரமத்திலே, நான் ராமன், இவள் மைதிலி, இவன் லக்ஷ்மணன் என்று நமஸ்கரித்துநின்றாப்போலே; அக்காட்டில் பாழடையத் திரும்படி புக்காப்போலே என்னெஞ்சில் பாழ்தீரப்புகுந்தான்.

( குருவித்யாதி ) தான் விரும்பிச் சென்று சேரும் தேசமதுவாயிருக்கக்கிடீர் என்னெஞ்சிலேவந்து புகுந்த தென்கிறார். எல்லார்க்கும் ப்ராப்யனானவன்கிடீர் என்னை ப்ராப்யனாகக் கொள்ளுகிறான். பெருவிலையனாய் தர்ஶநீயமான ரத்நங்களைக்கொண்டுவந்து தள்ளா நின்றுள்ள புனலையுடைய பொன்னித் தென்கரையிலே. ப்ராப்யமான தேசமென்றபடி. "ஶுஷ்ஷாஷிஜநக" ( துக்தாப்திர்ஜநக ) இத்யாதிவத். ( புனல் ) ப்ரமஹரமான தேசத்தையுடையவன்கிடீர் இங்கேவந்து புகுருகிறான். (திருமால்சென்றுசேர்விடம்) பரமரஸிகனானவன், தானும் பிராட்டியுமாய் விரும்பிச்சென்று சேரும் தேசமதுவா யிருக்கச்செய்தே, அதுகிடக்க, திருமாலிருஞ்சோலைமலையென்றேன், இந்த அஹ்ருதயமான வுக்திமாத்ரத்தைக்கொண் டென்னுடைய ஹ்ருதயத்திலேவந்து புகுந்தான். கீழில் "திருமால்" என்றவிடம், புருஷகாரபாவத்தைச் சொல்லிற்று; மேலில் "திருமால்" என்றவிடம், உத்தரார்த்தத்தில் லக்ஷ்மீசம்பந்தத்தைச்சொல்லுகிறது.!.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (திருமாலிருஞ்சோலையித்யாதி) பூர்வார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (யாத்ருச்சிகமாகவித்யாதி) நிரபேக்ஷனென்றது - "திருமால்" என்றதிலே ஸித்தம்.

"திருமாலிருஞ்சோலைமலையென்றேன்" என்றதுக்குபாவம் (முன்பாதியித்யாதி.) "பேரிட்டுக்கைக்கொள்ளுகைக்கு" என்பானென், "திருமாலிருஞ்சோலை" என்று விசேஷிக்கையாலே புத்திபூர்வகமாயன்றோ விருக்கிறதென்ன (ஓரோதேசங்களிலித்யாதி) இத்தால்-வாசியறிந்துசொன்னேனல்லேனென்றபடி.

"என்ன" என்றதுக்குபாவம்(மநஸ்ஸஹகாரமுமித்யாதி) அஹ்ருதயோக்திமாத்ரத்தாலே புகுரக்கூடுமோவென்ன (இவன் சேஷபூதனித்யாதி) குணதிகனுகையாலே யிவன்பக்கலுள்ளத்தைப் போரப்பொலியக்கொள்ளுமென்னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் (இதுதானித்யாதி) "ஆகையாலே (இதுதானொருமலையிறேயவனுக்கு)" என்றுகூட்டுவது. அஹ்ருதயமானவுக்தியு மவனுக்கு பாரமென்று கருத்து. விவரணம் (உக்தியையித்யாதி) ஆனாலும் அஹ்ருதயம் ஸஹ்ருதயமாக நிருபித்துக்கொள்ளவேண்டாவோவென்ன (இதுக்கடியித்யாதி) அடியாவது - மநஸ்ஸஹகாரம். இதுக்கு நியாமகமேதென்ன (ராவணன்றம்பிக்கித்யாதி) "இதுதானொருமலையிறே" இத்யாதிவாக்யவிவரணம் (மலைகளினுடையவித்யாதி) "திருமாலிருஞ்சோலை" என்கிறவிசேஷணத்திலேநோக்கு. இவ்வாக்யங்களால்சொன்ன வர்த்தத்தைத் தொகுத் தருளிச்செய்கிறார் (ஆகவித்யாதி.)

"திருமாலிருஞ்சோலைமலையென்றேன்" என்றவநந்தரம் "திருமால்" என்றதுக்குபாவம் (அஹ்ருதயமாகவித்யாதி) "வந்து" என்றதுக்குபாவம் (அவன்வருவதேயித்யாதி) விவரணம் (க்ருபணராயித்யாதி) இத்தால்பாவம் (எல்லார்க்குமித்யாதி) அப்படி யவனபிசரித்தவிடமுண்டோவென்ன (சோப்யகச்சதித்யாதி) "[illegible]" (ஸோப்யகச்சன்மஹாதேஜாஸ்ஸபரீம்ஸத்ருஸூதநঃ। ஸபர்யாபூஜிதஸ்ஸம்யக்) இத்யாதி.

"நிறைய" என்றதுக்குபாவம் (விஷயாந்தரங்களுக்கித்யாதி) "புகுந்தான்" என்றதுக்குபாவம் (அத்ரிபகவானித்யாதி) சவிநயமாகப் புகுந்தானென்றபடி. "விஷயாந்தரங்களுக்கு" இத்யாதிவாக்யவிவரணம் (அக்காட்டிலித்யாதி)

உத்தரார்த்தத்துக்குபாவம் (தான்விரும்பியித்யாதி) "திருமால்" என்றதுக்குபாவம் (எல்லார்க்குமித்யாதி) சப்தார்த்தம் (பெருவிலையனுயித்யாதி) "குருமாமணிபுந்துபுனல்" என்றத்தால்பலிதம் (ஶ்லாக்யமானவித்யாதி) "உந்துபுனல்" என்றதுக்கு ஸமவாதம் (துக்தாப்திரித்யாதி) "[illegible]" (துக்தாப்திர்ஜநகோஜநந்யஹமியம்ஸ்ரீரேவபுத்ரீவரஸ்ஶ்ரீரங்கேஶ்வர ஏததர்ஹமிஹகிம்குர்யாமிதீவாகுலா। சஞ்சச்சாமரசந்த்ரசந்தமஹாமாணிக்யமுக்தோத்கராந் காவேரீலஹரீகரைர்வித ததீபர்[illegible]செய்யதாம்) இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. இதினுத்தரார்த்தமிங்கு விவக்ஷித[illegible]பொன்னி" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஶ்ரமஹரமானவித்யாதி.)

அந்வயித்தர்த்தம் (பரமரஸிகனுனவனித்யாதி) இருக்கால் "திருமால்" என்றதுக்குபாவம் (கீழிற்றிருமாலித்யாதி)

திருமால்சென்றுசேர்விடம்-குருமாமணியுந்துபுனல் பொன்னிதென்பால்-தென்திருப்பேராயிருக்கச்செய்தேயும் - திருமாலிருஞ்சோலைமலையென்றே னென்னத் திருமால்வந்தென்னெஞ்ச நிறையப்புகுந்தானித்யர்வயஃ ......................*

# இரண்டாம்பாட்டு.

பேரேயுறைகின்றபிரானின்றுவந்து
பேரேனென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான்
காரேழ்கடலேழ்மலையேழுலகுண்டு
மாராவயிற்றுனையடங்கப்பிடித்தேனே.

## ஆறாயிரப்படி.

(பேரேயுறைகின்றபிரான்) அகாரணமாக இன்றுவந்து இனிப்பேரேனென்று நெஞ்சுநிறையப்புகுந்தான்; இதற்குமுன்பிப்படி யென்னெஞ்சில் புகுந்தருளப்பெறுமையாலே சர்வஜகதீஸ்வரனாயிருந்துவைத்தும் சாபேக்ஷனாயிருந்தவன், இன்றென்னுள்ளே புகுரப்பெற்று நிரபேக்ஷனானெனென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், முன்புகுறைவாளனைப்போலே யின்றொருக்காலும் போகேனென்று என்னெஞ்சிலே பூர்ணனாய்ப்புகுந்தானென்கிறார்.

பேரே-திருப்பேரிலே. உறைகின்ற-நித்யவாசம்பண்ணுகிற. பிரான் - சர்வேஸ்வரன். இன்றுவந்து - முன்பு குறைவாளனாயிருந்தாப்போலே இன்று நிர்ஹேதுகமாகத்தானே சாபேக்ஷனாய்வந்து. பேரேனென்று-இனிப்போவென்றால் ஒருக்காலும்போகேனென்று. என்னெஞ்சு-என்னெஞ்சிலே. நிறைய-பரிபூர்ணமாம்படி. புகுந்தான்-புகுந்தான். ஆகையாலே, காரேழ் - புஷ்கலாவர்த்தகாதிகளான மேகங்களேழையும். கடலேழ்-சமுத்ரங்களேழையும். மலையேழ்-குலபர்வதங்களேழையுமுடைத்தான. உலகுண்டும் - லோகத்தையெல்லாம் அமுதுசெய்தும். ரக்ஷணத்தில்பாரிப்பாலே, ஆராவயிற்றுனை-நிறையாதவயிற்றையுடையானை. அடங்க-என்னுள்ளேபுகுந்து சர்வப்ரகார பரிபூர்ணனும்படியாகக்கொண்டு. பிடித்தேன் - அநுபவிக்கப்பெற்றேன் ..............................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தான் சர்வேஸ்வரனாய்வைத்து என்னோடு கலக்கப்பெறுமையாலே குறைவாளனானவன், இன்றுவந்து நிர்ஹேதுகமாக வென் ஹ்ருதயத்திலேபுகுந்து பூர்ணனானெனென்கிறார்.

(பேரேயுறைகின்றபிரான்) திருப்பேரிலேவந்து நித்யவாசம்பண்ணுகிற சர்வேஸ்வரன். (இன்றுவந்து) இதுண்டாமென்று நென்னேற்றறிவது தாமொருசாதநாநுஷ்ட்டாநம்பண்ணிவைத்தாராகிலிறே. (பேரே

னென்று) "பேரேன், பேரேன்" என்ருகின்றுனுய்த்து, "நீபோதிவுயோ, இருப்புதியோ" என்று கேட்பாருமின்றிக்கேயிருக்கச்செய்தே; இங்கு பிராட்டி தன்விஷயத்தில் சொல்லும்வார்த்தையைத்தா னென்விஷயத்திலே சொல்லாநின்ருன். "நான்போகேன்போகேன்" என்று சூழ்த்துக் கொடாநின்றுனுய்த்து தன்னையதிசங்கைபண்ணுவாரு மின்றிக்கேயிருக்க; "த்ரிபிஸ்தைர்ப்ராத்ருபிஸ்ஸபே" (த்ரிபிஸ்தைர்ப்ராத்ருபிஸ்ஸபே) (என்னெஞ்சு) "இவன்பேரிலென், இருக்கிலென்" என்றிருக்கிறவென் னெஞ்சு. (நிறையப்புகுந்தான்) பூர்ணமாம்படிபுகுந்தான்.

(காரித்யாதி) புஷ்கலாவர்த்தகாதி மேகங்களேழும், கடலேழும், மலைகளேழுமான ஜகத்தையெல்லாம் திருவயிற்றிலேவைத்து, பின்னையும் தன்னைவிஸ்வஸித்து, உடன்கிடந்தவனை மடிதடவினவனைப்போலே "நாமென்செய்தோமானோம்" என்றிருக்குமவனை. ஸ்ருஷ்டிதொடக்கமாக மோக்ஷபர்யந்தமாக ரக்ஷ்யவர்க்கத்தினுடைய சர்வவித ரக்ஷணத்தையும்பண்ணி, பின்னையும் "ஒன்றும்செய்யப்பெற்றிலோம்" என்றிருக்குமவனை. (அடங்கப்பிடித்தேனே) "நாமெல்லாம்செய்தோம்" என்று அவன் தெருட்டும்படிபண்ணிக்கொண்டேன். ப்ரளயத்திலகப்பட்ட ஜகத்தையெடுக்கையாவது - பின்னையும் சம்சாரத்தைப் பூண்கட்டுகையிறே; பரமபதத்தளவும்செல்ல நடத்தப்பெருமையாலே குறைபட்டிறேகிடப்பது; அவனென்னை அவ்வளவும் கொண்டுபோம்படி நான்சமைகையாலே அவனுடைய வயிறுவேசம் தீர்ந்ததாய்த்து. அவனுடைய பரிபூர்ண விஷயீகாரத்துக்குப் பாத்ரபூதனுனேனென்றபடி ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (பேரேயுளாகின்றவித்யாதி) "பேரேன்" என்றத்தைப்பற்ற (குறைவாளனுனவனென்றது) "இன்று" என்றத்தைப்பற்ற (நிர்ஹேதுகமாகவென்றது) "அடங்கப்பிடித்தேன்" என்றத்தைப்பற்ற (பூர்ணனுனேனென்றது.)

"இன்று" என்றதுக்குபாவம் (இதுண்டாமென்றித்யாதி) னென்னேற்று-முதல்நாள். ஆரைக்குறித்து "பேரேன்" என்கிருனென்ன (நீபோவுதியோவித்யாதி) இத்தால்பாவம் (இங்குப்பிராட்டியித்யாதி) இங்கு - இவ்வர்த்தவிஷயமாக. சொல்லும்வார்த்தையை - "அகலகில்லேனிறையும்" என்றுசொல்லும்வார்த்தையையென்றபடி. விவரணம் (நான்போகேனித்யாதி) சூழ்த்துக்கொடுக்கை - ஆணையிட்டுக்கொடுக்கை. ஆணையிட்டுக்கொடுத்ததுக்கு ப்ரமாணம் (த்ரிபிரித்யாதி) இந்தசபதம் ஸ்ரீவிபீஷணுழ்வானுடே. "அஹத்வா ராவணம்ஸங்க்யே ஸபுத்ரஜநபாந்தவம் । அயோத்யாம்நப்ரவேக்ஷ்யாமி த்ரிபிஸ்தைர்ப்ராத்ருபிஸ்ஸபே" (அஹத்வா ராவணம்ஸங்க்யேஸபுத்ரஜநபாந்தவம் । அயோத்யாம்நப்ரவேக்ஷ்யாமி த்ரிபிஸ்தைர்ப்ராத்ருபிஸ்ஸபே ) இதி யுத்தகாண்டே ஏகோநவிம்ஸே விபீஷணப்ரதிராமஃ. "என்னெஞ்சு" என்றதுக்குபாவம் (இவனித்யாதி) தன்பக்க லாதரமற்றிருக்கிற னெஞ்சென்றபடி.

* ஆராமையின்பாவம் (பின்னையுமித்யாதி) மடிதட்வுகை-மடியில் தநத்தை அபஹரிக்கை. இத்தால்பலிதம் (ஸ்ருஷ்டிதொடக்கமாகவித்யாதி) அதாவது-"உலகுண்டும்" என்று - மோக்ஷபர்யந்த ரக்ஷணோபலக்ஷணமாய், "ஆராவயிற்றானை" என்று - "உன்னடியார்க்கென்செய்வனென்றேயிருத்தி" என்கிறபடியே அவன்குணமாய், "அடங்கப்பிடித்தேன்" என்று - அவன்பூர்ணவிஷயீகார பாத்ரபூதனானேனென்றபடி.

(அடங்கப்பிடித்தேனே) என்றவநந்தரம் (அவனுடையபரிபூர்ண) இத்யாதி வாக்ய மநுசந்தேயம்.

"ஆராவயிற்றானை" என்றதுக்கு - மோக்ஷத்திலே கொடுபோகப்பெறுமையாலே குறைவுபட்டிருக்கிறவனை யென்றர்த்தாந்தரம் (ப்ரளயாபத்திலித்யாதி) இப்பக்ஷத்தில், "அடங்கப்பிடித்தேன்" என்றதுக்கர்த்தம் (நாமெல்லாமித்யாதிவாக்யம்) அதாவது-த்ருப்தனும்படி பண்ணிக்கொண்டேனென்றபடி. "அடங்கப்பிடித்தேன்" என்றத்தால்பலிதம் (அவனுடையவித்யாதி) என்னுதல் ..........................*

## மூன்றாம்பாட்டு.

பிடித்தேன்பிறவிகெடுத்தேன்பிணிசாரேன்
மடித்தேன்மனைவாழ்க்கையுணிற்பதோர்மாயையைக்
கொடிக்கோபுரமாடங்கள்சூழ்திருப்பேரா
னடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே.

### ஆறாயிரப்படி.

( பிடித்தேன் ) எம்பெருமானை யினியொருநாளும் விஶ்லேஷியாதபடி பற்றினேன், சுரநரதிர்யகாதி நாநாவித தேஹப்ரவேச ரூபஜந்மத்தையும் ஜந்மநிபந்தந துக்கத்தையும் போக்கினேன், தத்துக்கஹேதுவாய் அநாதிகாலந்தொடங்கி யின்றளவும் செல்லுகிற விந்தப்ரக்ருதிசம்பந்தத்தையும் நிவர்த்திப்பித்தேன், இப்படி திருப்பேரானடிசேர்வ தெனக்கெளிதாவதே! என்றுகளிக்கிறார்.......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதசுலபனான சர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் கிட்டுகை யெனக்கெளிதானபடி, அதடியாக சமஸ்ததுரிதமும் நிவ்ருத்தமாம்படியாய்த்தென்கிறார்.

கொடி - கொடிகளையுடைய. கோபுரம் - கோபுரங்களாலும். மாடங்கள்- மாடங்களாலும். சூழ் - சூழப்பட்ட. திருப்பேரான் - திருப்பேர் வாசஸ்தாநமாகவுடைய சுலபனானவனுடைய. அடி - திருவடிகளை. சேர்வது - சேருகை. எனக்கெளிதாயினவாறு - எனக்கெளிதானப்ரகார மிருந்தபடி. பிடித்தேன் - நிர்ஹேதுகமாக வவன்திருவடிகளை ப்ரதமத்திலே பிடிக்கப்பெற்றேன். அதடியாக, பிறவி-ஜந்மசம்பந்தத்தை. கெடுத்தேன் - அறுத்தேன். பிணி - அத்தால்வரும்துக்கங்களை. சாரேன் - சேரேன். மனைவாழ்க்கையுள் - சம்சாரத்தில். நிற்பது - நிற்கையாகிற. ஓர் மாயையை - அஜ்ஞாநத்தை. மடித்தேன் - நிவ்ருத்தமாக்கினேன். ..................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

அவன் தம்மோடே நிர்ஹேதுகமாகவந்து சம்ஶ்லேஷித்தபடியை யநுசந்தித்து, இவன்றிருவடிகளெனக்கிங்ஙனே யெளிதாவதே யென்கிறார்.

( பிடித்தேன் ) "தலைமேலதாளிணைகள்" என்று அவன் திருவடிகளைத் தலைமேலேகொண்டுவந்து வைக்கையாலே அவற்றை யுரக்கப்பிடித்துக்கொண்டேன். ( பிறவிகெடுத்தேன் ) ஜந்மத்தை மறுவலிடாதபடி போக்கினேன். ( கெடுத்தேன் ) [ கானேவொருங்கிற்றுங்கண்டிலம் ] எங்கேபோய்த்துக்கண்டிலேன். ( பிணிசாரேன் ) ஜந்மம் புக்கவிடத்தே புகக்கடவபிணியைக்கிட்டேன். (மடித்தேனித்யாதி) சம்சாரத்திலே நிற்கைக்கடியான மாயையுண்டு-மூலப்ரக்ருதி, அத்தைத்திரியவிடுவித்தேன்; தொடருகிறபாம்பைத் திரிய விடுவிப்பாரைப்போலே. எம்பெருமானர், உலாவியருளுகிறவர் முடியப்போகாதே நடுவேமீண்டருள, எம்பார் கதவையொருச்சரித்து, "திருமாலிருஞ்சோலையாகாதே திருவுள்ளத்திலோடுகிறது" என்ன; "ஆம், அப்படியே" என்றருளிச்செய்தார்.

( கொடியித்யாதி ) கொடிகளையுடைத்தான கோபுரங்களையும்மாடங்களையுமுடைத்தான திருப்பேரிலே நிற்கிறவனடிசேருகையாகிறது எனக்கெளிதாயினவாறே!. "அறுகம்புல்லையிட்டுக் கண்ணைப்புதைத்துக்கொள், சாணகச்சாற்றைக்குடி, தலையைக்கீழேநடு, காலைமேலேயெடு" என்று அருந்தேவைகளை சாஸ்த்ரம்சொல்லாநிற்க, எனக்கிங்ஙனே யிருப்பதொரு மூலையடிவழியுண்டாவதே!. ( எனக்கெளிதாயினவாறே! ) விஷயங்களின் காற்கடையிலே துவண்டுபோந்தவர் அவன்றிருவடிகளிலே கிட்டிக்கொடுநிற்கக் கண்டவித்தனை.................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. ( பிடித்தேனித்யாதி. ) "அடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவன்தம்மோடேயித்யாதி. )

நீரவன்றிருவடிகளைப் பிடிக்கவல்லீரானபடி யென்னென்ன ( தலைமேலித்யாதி. ) உரக்க - த்ருடமாக.

மறுவலிடாதபடி போக்கினதுக்கு ப்ரமாணம் ( கானேவித்யாதி; ) ஜந்மம் போனவழியும் காண்கிறிலேனென்று தாத்பர்யம். எடுத்தபாசுரத்துக்கர்த்தம் ( எங்கேபோய்த்தித்யாதி. )

சாரேன் - கிட்டேன்.

"பிறவிகெடுத்தேன்" என்றது - ஸ்த்தூலசரீர விமோசநமாய், "பிணிசாரேன்" என்று - தாத்காலிக புண்யபாபரூபகர்மங்களை. "தஸ்யப்ரியா ஜ்ஞாதய ஸுக்ருதமுபயந்தி । அப்ரியா துஷ்க்ருதம்" ( தஸ்யப்ரியாஜ்ஞாதயஸ்ஸுக்ருதமுபயந்தி । அப்ரியாதுஷ்க்ருதம் ) இத்யாதிப்படியே அநுகூலர்பக்கலிலும் ப்ரதி

கூல்ர்பக்கலிலும் பொகட்டபடியைச்சொல்லி, "மடித்தேன்மனைவாழ்க்கையுணிற்ப தோர்மாயையை" என்கிறவிது ஸூக்ஷ்மசரீர விமோசநத்தைச் சொல்லுகிறதென்ற படி.

திரியவிடுவித்தேனென்றது - அவன்தலை துலுக்குகையாலே மடித்தேனென் றபடி. மனைவாழ்க்கையுள் - சம்சாரத்தில். நிற்பதோர்மாயையை - நிற்கைக்கடியா ன வத்விதியமான மூலப்ரக்ருதியை. மடித்தேன் - (திரியவிடுவித்தேன்;) நிவ்ருத் மாக்கினேனென்றபடி. (தொடருகிறபாம்பை) என்றவிடத்திலே; "அர்ஜுநனபி ஷேகத்தை யெடுத்துக்கொண்டுபோய்ப் பின்னையும் தொடர்ந்துவருகிற நாகாஸ்த்ர த்தை க்ருஷ்ணன் நியமநத்தாலே திரியவிட்டாப்போலே" என்றதநுசந்தேயம். ப்ரா ஸங்கிகம் (எம்பெருமானுரித்யாதி.) "ஹ-ஞாஸ தவஷ-ம௫ஹெஜு" (புக்த்வா ஸுதபதம்கச்சேத்) என்கிறபடியே - அமுதுசெய்தவாந்தரம் நூறடி யுலாவவேண் டுகையாலே, அதுக்குறுப்பாக வுலாவியருளுகிறவனென்றபடி. "மடித்தேன்" என் று - நிவ்ருத்திப்ரஸக்தமாகையாலே, மீண்டருளினானென்றுகருத்து. ஒருச்சரித்து- ஒருபக்கமாகச் சாய்த்து.

"எளிதாயினவாறே" என்றதுக்குபாவம் (அறுகம்புல்லையித்யாதி.) "எ ணக்கு" என்றதுக்கு பாவம் (விஷயங்களினித்யாதி.) அருந்தேவைகள் - துரநு ஷ்ட்டேயங்களான சாதநங்கள். மூலையடிவழி - ஒருத்தரு மறியாத் சுகரோபாயம். துவண்டு - உலர்ந்து. .....................................................*

---

## நான்காம்பாட்டு.

---

எளிதாயினவாறென்றென்கண்கள்களிப்பக்
களிதாகியசிந்தையனாய்க்களிக்கின்றேன்
கிளிதாவியசோலைகள்சூழ்திருப்பேரான்
தெளிதாகியசேண்விசும்புதருவானே.

### ஆறாயிரப்படி.

(எளிதாயினவாறு) திருப்பேர்நகரானைப் பெற்று என்னுடைய சர்வகரணங்களோடுங்கூட நான் களிக்கின்றேன், இப்படி திருப்பேரிலே தானெழுந்தருளியிருக்கிற விருப்பை யெனக்குக்காட்டித் தந்தருளினவி வன் இனித் திருநாட்டையும் தந்தருளு மென்கிறார். .....................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், எனக்குப் பரமபதத்தைத் தருவானாயிராநின்றான், அத்தாலே எ ன்கண்ணும் நெஞ்சும் களிக்கும்படி ஆநந்தியாகாநின்றே னென்கிறார்.

எனக்கு ப்ராப்யலாபமெளிதானபடி, காலாந்தரத்தி லொருதேசவிசேஷத்தி லே போகாதே இக்காலத்திலே; என்கண்கள் - என்விடாய்த்தகண்களானவை. எளி தாயினவாறென்று - துர்லபமான ப்ராப்யம் சுலபமாவதே! என்று. களிப்ப - களிக் கும்படியாக. களிதாகிய - ஹர்ஷாவிஷ்டமான. சிந்தையனாய் - நெஞ்சையுடையே னாய்க்கொண்டு. களிக்கின்றேன் - ஆநந்தியாகாநின்றேன். அதுக்கடி, கிளிதாவிய-

கிளிகள்தாவும்படி செறிந்த. சோலைகள்சூழ் - சோலைகள் சூழ்ந்த. திருப்பேரான் - திருப்பேரிலே சுலபனாய்க்கொண்டு சந்நிஹிதனானவன். தெளிதாகிய - பரமஸத்த்வ மயமாகையாலே ப்ரகாசாத்மகமாய். சேண்விசும்பு - ப்ரஹ்மபதாதிகளிலு மவ்வரு கான பரமவ்யோமத்தை. தருவான் - தருவானானன்......................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

தமக்குப் பரமபதத்தைத் தருவானா யிருக்கிறவனுடைய நீர்மையை யநுசந்தித்து, என்கரணங்களும் களிக்க நானும் களியாநின்றேனென்கிறார்.

( எளிதாயினவாறு ) [ அரியதெளிதாகுமித்யாதி ] அரிதான பகவல்லாபமு மெளிதாகும். எங்கே கண்டோமென்றால் [ கரியதித்யாதி ] அவன்தானே அரைகுலையத் தலைகுலைய மடுவின்கரையிலேவந்துவிழவன்றோ ஆனைபெற்றது. ( எளிதாயினவாறென்று ) ஸுதுர்லபமானவிஷய மிங்ஙனே யெளிதாவதே! என்று, "காணக்கருது மென்கண்ணே" என்று விடாய்த்தகண்களிக்கும்படி. ( களிதாகியசிந்தையனாய் ) களித்த மநஸ்ஸையுடையனாய். * நெடியானேயென்று கிடக்குமென்னெஞ்சு களிக்கப்பெற்றது. ( களிக்கின்றேன் ) "கூவியுங்காணப்பெறேன்" என்றநானும்களியாநின்றேன். கரணங்களும் தாமுமொக்கவிடாய்த்தவர், கரணங்களும் தாமுமொக்கக் களிக்கப்பெற்றார்!.

( கிளிதாவியவித்யாதி ) நித்யவஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருப்பேரான். ( தெளிதித்யாதி ) * இருள்தருமாஞாலம்போலன்றிக்கே நாட்செல்லநாட்செல்லத் தெளிவைப்பண்ணக்கடவதாய், புநராவ்ருத்தியின்றிக்கே யிருக்கிற சேண்விசும்புண்டு - ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்கு மவ்வருகானபரமபதம், அத்தை யெனக்குத் தருகையிலே துணிந்திருந்தான். ..................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( எளிதாயினவித்யாதி. ) "தெளிதாகியசேண்விசும்பு தருவான் - என்கண்கள்களிப்பக் களிதாகியசிந்தையனாய்க் களிக்கின்றேன்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை ( தமக்கித்யாதி. )

"எளிதாயினவாறு" என்று பகவத்விஷய மெளிதாயிருக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் ( அரியதெளிதாகுமித்யாதி ) இரண்டாந்திருவந்தாதி இருபத்திரண்டாம்பாட்டு. எடுத்தபாசுரத்துக்கர்த்தம் ( அரிதானவித்யாதி. ) இப்பாட்டி. னுத்தரார்த்தத்துக்கவதாரிகை ( எங்கேகண்டோமென்றாலென்று. ) அதுக்கர்த்தம் ( அவன் தானேயித்யாதி. ) அரியதெளிதாகும் - அரியதான பகவல்லாபமு மெளிதாகாநிற்கும்; ஆற்றலால் - வஸ்துவை வஸ்த்வந்தர மாக்கவல்ல சக்தியோகத்தாலே, மாற்றி - ஸ்வரக்ஷணார்த்தமாக விவன்பண்ணும் ப்ரவ்ருத்திகளை யடையமாற்றி, பெருகமுயல்வானைப்பெற்றால் - தன்பேறாக விவனுடைய சர்வவித ரக்ஷணங்களையும் பண்ணுகையிலே மிகவு முத்ஸாஹியாநிற்கும் மஹாபுருஷனைப்பெற்றால், கரியதோர்வெண்கோ

ட்டுமொல்யானை - கறுத்தநிறத்தையும் வெளுத்தகொம்பையும் பெரியவடிவையுமுடைய வத்விதீயமான வானையானது, வென்றுமுடித்தன்றே - விரோதியான முதலையை ஜயித்தழியச்செய்தன்றே, தண்கோட்டுமாமலரால்தாழ்ந்து - குளிர்ந்த பொய்கைக் கரையிலே ஶ்லாக்யமான புஷ்பங்களைக்கொண்டு அவன்றிருவடிகளிலடிமைசெய்யப்பெற்றது. தாழ்ந்ததென்றபடி. கோடு - கரை. தண் - குளிர்த்தி.

களிதாகிய - களித்த. விவரணம் ( நெடியானேயித்யாதி. ) வ்யாக்யாதாவினீடோடு ( காணங்களுமித்யாதி. )

தாவிய - தத்தித்திரிகிற.

கிளிதாவியவென்றுதொடங்கி, விசும்புதருவானுயிருந்தான், ஆனபின்பு, எளிதாயினவென்றுதொடங்கி, களிக்கின்றேனித்யந்வயః.................................*

# ஐந்தாம்பாட்டு.

வானேதருவானெனக்காயென்னோடொட்டி
யூனேய்குரம்பையிதனுட்புகுந்தின்று
தானேதடுமாற்றவினைகடவிர்த்தான்
றேனேய்பொழிற்றென்றிருப்பேர்நகரானே.

## ஆறாயிரப்படி.

( வானேதருவான் ) நமக்கவன் திருநாட்டைத் தந்தருளுகைக்கு நம்பக்கலிலே ப்ரதிபந்தகங்க ளில்லையோவென்னில்;

திருப்பேர்நகரான், எனக்குவானேதருவானாய், நானொட்டேனென்னிலு மென்னைவென்று ப்ரஸஹ்யவாகிலும் புகுரக்கடவனா யொட்டிக்கொண்டு, அத்யந்த ஹேயமான வென்னுடைய விந்த ப்ரக்ருதியிலேபுகுந்து, தானே அந்த ப்ரதிபந்தகங்களையும் போக்கியருளினா னென்கிறார்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி புருஷார்த்தத்தைத் தருவானாக வெழக்கோலி சமஸ்த விரோதிகளையும் போக்கினானென்கிறார்.

தேனேய்-வண்டுசெறிந்த. பொழில்-பொழிலையுடைத்தாய். தென்-தர்ஶநீயமான. திருப்பேர்நகரான் - திருப்பேராகிற நகரத்திலேவர்த்திக்கிறவன். எனக்கு-எனக்கு. வானேதருவானாய் - பரமபதத்தையே தருவானாகக்கொண்டு சங்கல்பித்து. என்னோடு-என்னோடே. ஒட்டி-ப்ரதிஜ்ஞைபண்ணி. ஊனேய்-மாம்சம்செறிந்த. குரம்பையிதனுள் - கூடாயிருக்கிற இஶ்ஶரீரத்துக்குள்ளே. அபேக்ஷாநிரபேக்ஷமாக, இன்று-இன்று. தானே-தானே. புகுந்து-வந்துபுகுந்து. தடுமாற்றம் - தல்லைப்பிரிந்து தடுமாறுகைக்கடியான. வினைகள்-புண்யபாபங்களை. தவிர்த்தான்-போக்கினான்.

தேன்-மதுவுமாம்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திருப்பேர்நகரான் பரமபதத்தை யெனக்குத்தருவானாக என்னோடே பூணித்து, தானே விரோதிகளையும்போக்கினானென்கிறார்.

(வானேதருவானெனக்காய்) எனக்கு வானேதருவானாய். இங்கே வைத்துக் காரியங்கொள்ளுமத்தையும் தவிர்த்தான்; "ப்ரஹ்மாதிகள்குடியிருப்பு இவர்க்குத்தரமல்ல" என்று அத்தையும்தவிர்த்தான்; சம்சாரியானவெனக்கு நித்யசூரிகளிருப்பைத்தருவானாக. (என்னோடொட்டி) என்னோடேபூணித்து. நானிச்சியாதிருக்க "ஜராவணஜராஜ‌ம்வா" (அராவணமராமம்வா) என்றென்னோடு சமயம்பண்ணி. "எம்மாவீட்டுத்திறமும்செப்பம்" என்ற வென்னோடே உமக்கெம்மாவீடே தரக்கடவேனென்றொட்டி. (ஊனேயித்யாதி) "இவ்வுடம்போடே யும்மைக்கொடுபோகவேணும்" என்றுவிளம்பித்தோமாகில், இத்தையொழியக் கொடுபோகப்பார்த்தபின்பு இனியாறியிருப்பனோ வென்னாநின்றான். (ஊனேயித்யாதி) மாம்ஸப்ரசுரமாய் ஆத்மாவுக்கு ஆயதநமாயிருக்கிற வித்தேஹத்திலே, மேலெழக் கலக்கையன்றிக்கேவிடாயர் மடுவினுள்ளே புகுமாபோலே புகுராநின்றான். * எனதுடலே அருமாமாயத்தெனதுயிரே மனமேவாக்கேகருமமே ஒருமாநொடியும்பிரியாதே. (இன்று) நேற்றொருநினைவில்லை. (தானே) அகர்மவஶ்யனானதானே. இவர் அநாதிகாலம் தேஹத்தை விரும்பிவிடமாட்டாதே போந்தார்; இப்போதிவர்க்குத் தன்பக்கலிலே ருசிபிறந்தவாறே இத்தோடு தொற்றில்லாததானேயிதிலேவந்து புகுராநின்றான். (இதனுள்புகுந்து) அவனைப்போலே முன்னடிதோற்றுதொழியிலிறே இவரதில் தோஷதர்ஶநம்பண்ணுதொழிவது. (தானேயித்யாதி) புகுருகிறபோது தானேயாய், பின்னைத்தான் நானு மநுகூலிக்கப்பெற்றதோ. (தடுமாற்றமித்யாதி) தன்பக்கல்நின்று மென்னைப்பிரித்துத் தடுமாறும்படி பண்ணவல்ல பாபங்களைப்போக்கினான். அவையாவன - "பொங்கைம்புலன்" இத்யாதி. (தேனேயித்யாதி) மதுமிக்கபொழிலையுடைத்தான திருப்பேர்நகரையுடையவன்கிடீர் என்னுடைய சரீரத்திலேபுகுந்து க்ஷணகாலமும் விடமாட்டாதொழிகிறான், என்னகுறையுண்டா யிப்படிபட்டான் ... ... .. ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (வானேயித்யாதி) "திருப்பேர்நகரான்-வானேதருவானெனக்காயென்னோடொட்டி - தானேதடுமாற்ற வினைகள்தவிர்த்தான்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (திருப்பேர்நகரானித்யாதி) பூணித்து - ப்ரதிஜ்ஞைபண்ணி.

"வான்" என்றதுக்கர்த்தம் (இங்கேவைத்கித்யாதி.) "வானே" என்றவதாரணார்த்தம் (ப்ரஹ்மாதிகளித்யாதி.) சப்தார்த்தம் (சம்சாரியானவித்யாதி) காரியம்கொள்ளுமத்தையும - இன்னமொருப்பாபந்த மிடுவித்துக் கொள்ளுகையையு

மென்றபடி. விவரணம் ( நாணிச்சியாதிருக்கவித்யாதி. ) அப்படி யிச்சியாதிருந்தாரோவென்ன ( எம்மாவீட்டித்யாதி. )

“ தடுமாற்றவினைகள்தவிர்த்தான் ” என்னுமளவும் கடாக்ஷித்து “ என்னோடொட்டி ” என்றத்தால் பாவம் (இவ்வுடம்போடேயித்யாதி.) “𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑍇 𑌨𑌚𑌿𑌰𑌾𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑍃𑌣𑍋𑌮𑌿 𑌵𑌃। 𑌅𑌰𑌾𑌵𑌣𑌮𑌰𑌾𑌮𑌂 𑌵𑌾 𑌜𑌗𑌦𑍍𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌥 𑌵𑌾𑌨𑌰𑌾𑌃” ( அஸ்மிந்முஹூர்த்தேநசிராத்ஸத்யம் ப்ரதிஶ்ருணோமிவ: । அராவணமராமம்வா ஜகத்ரக்ஷ்யதவாநரா: ) இதியுத்தகாண்டே ஏகவிம்ஶதிதமே; “அராக்ஷஸம்” இதி பாடபேத:

சப்தார்த்தம் ( மாம்ஸேத்யாதி. ) குரம்பை - தேஹமும், குடிசையும். இவ்வர்த்தத்தை யருளிச்செய்கிறார் ( ஆத்மாவுக் காயதநமாயிருக்கிற வித்தேஹத்திலே யென்று. ) இது “ எனதுடலே ” என்கிறபாட்டில் ப்ரமேயத்தையநுவதிக்கிறதென்கிறார் ( எனதுடலேயித்யாதி. ) “ (ஒருமானொடியும்பிரியாதே) இதனுள்புகுந்து நின்றான் ” இதிவாக்யசேஷ:

“ தானே - ஊனேய்குரம்பையிதனுள்புகுந்து ” என்றுகூட்டிபாவம் (இவரநாதிகாலமித்யாதி.) தொற்று - சங்கம்.

அவன் போக்யமாகக்கொண் டுள்ளேபுகுர இவர் “இதனுள்” என்று தோஷதர்ஶநம்பண்ணுகிற தென்னென்ன ( அவனைப்போலேயித்யாதி. )

“ தானே ” என்றத்தை மேலேகூட்டி அவதாரணத்திலே நோக்காகபாவம் ( புகுருகிறபோதித்யாதி. ) பின்னைத்தானென்றது - விரோதிநிவ்ருத்தியிலே தானென்றபடி. “ ஊனேய்குரம்பை ” இத்யாதியாலே * செஞ்சொற்கவியில் ப்ரமேயத்தையும், “வினைகள்தவிர்த்தான்” என்று “மானாங்காரமனங்கெட” இத்யாதியிலர்த்தத்தையு மநுவதிக்கிறது. அவையாவனவென்றது - வினைகளாவனவென்றபடி.

போக்யமான தேசத்தையுடையவ னித்தேஹத்தைவிரும்புகிறான் என்றதுக்குஹார்த்தபாவம் (மதுமிக்கவித்யாதி.) “பேரேன்” என்றத்தைப்பற்ற ( க்ஷணகாலமுமென்றது.)

“ தேனேய்பொழில் தென்திருப்பேர்நகரான் - ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து - எனக்கு - வானேதருவானுப் - என்னோடொட்டி, தானே தடுமாற்றவினைகள்தவிர்த்தான் இத்யந்வய:.........................................................*

# ஆறும்பாட்டு.

திருப்பேர்நகரான்திருமாலிருஞ்சோலைப்
பொருப்பேயுறைகின்றபிரானின்றுவந்
திருப்பேனென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான்
விருப்பேபெற்றமுதமுண்டுகளித்தேனே.

## ஆறாயிரப்படி.

(திருப்பேர்) திருப்பேரையும் திருமாலிருஞ்சோலையையும் தனக்குக்கோயிலாக வுடையவன், தனக்கோ ரிருப்பிடமில்லாதாரைப்போலே

யின்றுவந்து "இருப்பேன்" என்றென்னை யிரந்துகொண்டு என்னெஞ்சு நிறையப்புகுந்தான்; பின்னையும் ஒருநாளைக்கொருநாளவனுக்கும் ஸ்ப்ருஹணீயனாய் நானுமவனுடைய குணங்களாகிற வம்ருதத்தைபுஜித்துக் களிக்கப்பெற்றேனென்கிறார் ..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அல்லாதவுகந்தருளினதேசங்களிற்காட்டில் என்னெஞ்சிலே யாதரித்துப் புகுந்தநுபவிக்க வநுபவித்து ஆநந்தியானேனென்கிறார்.

என்னைக்கிட்டுகைக்காக, திருப்பேர்நகரான்-திருப்பேர்நகரிலேயாய். அநந்தரம், ஆஸந்நமாக், திருமாலிருஞ்சோலை-திருமாலிருஞ்சோலையென்று திருநாமமான. பொருப்பேயுறைகின்ற-திருமலையிலே நித்யவாஸம்பண்ணுகிற. பிரான்-மஹோபகாரகன். இன்று-இன்று. ஒருஹேதுவின்றிக்கேயிருக்க, வந்து-தானேவந்து. இருப்பேனென்று - "இங்கேயிருக்கக்கடவேன்" என்று சங்கல்பித்து. என்னெஞ்சுநிறைய-என்னெஞ்சுபூர்ணமாம்படி. புகுந்தான்-புகுந்தான். விருப்பேபெற்று - அவனுடைய நிரதிசய பஹுமாநத்தை ஒருபடிப்படப்பெற்று. அமுதமுண்டு-குணாநுபவரூபமான அம்ருதபாநத்தைப்பண்ணி. களித்தேன் - ஆநந்தியானேன்......................*

## ஈடு - ஆறும்பாட்டு.

தனக்கிருப்பிடமான கோயில்க ளநேகமுண்டாயிருக்க ஓரிடமில்லாதாரைப்போலே என் ஹ்ருதயத்திலே நிர்ஹேதுகமாக ப்ரார்த்தித்து வந்து புகுந்தானென்று ப்ரீதராகிறார்.

(திருப்பேர்நகரான்) திருவயோத்யையைப்போலேயாய்த்து.(திருமாலிருஞ்சோலைப்பொருப்பேயுறைகின்றபிரான்) "[Grantha] " (அதிகம்புரவாஸாச்ச) என்னுமாபோலே ; "[Grantha]; " (ஜஹௌசதுஃகம்புரவிப்ரவாஸாத்) திருச்சித்திரகூடத்திற்போலே யாய்த்து. [[Grantha]] [ குபேரஇவநந்தநே ] குறைவற்றவன் உத்யாநத்திலே வர்த்திக்குமாபோலேயாய்த்து. சர்வப்ரகாரத்தாலும் குறைவற்றவனுக்கிறே லீலாரஸத்தி லந்வயமுள்ளது. (இன்றுவந்து) இவ்வரவுக்கு நேற்றொரு நினைவின்றியே யிருக்கவந்து கொடுநிற்கக்கண்டதத்தனை. (இருப்பேனென்று) "இருப்பேன், இருப்பேன்" என்னாநின்றானாய்த்து. "[Grantha]," (இஹைவஸரதோர்நேகாஸ்த்வயா ஸார்த்தமநிந்திதே,) [[Grantha]] [இஹவத்ஸ்யாமிஸௌமித்ரேஸார்த்தமேதேநபக்ஷிணா] "ஜயர்கோற்கீழேவர்த்திக்கவேணுமென்று நினைத்திருந்தோம், நடுவிலாய்ச்சிக்கு ப்ரியமில்லாமையாலேபோந்தோம், இனிமேலுள்ளநாள் இவர்சிறகின்கீழே வர்த்திக்கப்பாராநின்றோம்" என்றானிறே. (என்னெஞ்சுநிறையப்புகுந்தான்) "இருந்திடுவோனுக்கு" என்றிராத வென்னெஞ்சிலே நிறையப்புகுந்தான். (வி

ருப்பெபெற்று) அஜ்ஞாநுவர்த்தநம்பண்ணுமையாலுண்டான த்வேஷ கார்யமாகவன்றிக்கே; "தாநஹம்‌த்விஷதः" (தாநஹம்த்விஷதः) என்றிருப்பது மோரிருப்புண்டிறே, அங்ஙனன்றிக்கே, அவனுடைய விருப்பத்தையுடையேனாய். (அமுதமுண்டுகளித்தேனே) விஷபோஜநத்தைப்பண்ணி நாகத்துக்குப்போகாநிற்க நடுவேநின்றுகளிக்கையன்றிக்கே. (அமுதமுண்டுகளித்தேனே) (அவனுடையகொண்டாட்டமாகிற வம்ருதபாநத்தைப்பண்ணிக்களித்தேனென்னுதல், அவனுடைய குணம்ருதபாநத்தைப்பண்ணிக் களித்தேனென்னுதல்.) க்ஷுத்ரவிஷயப்ராவணனாய் நரகத்துக்கு க்ருஷியைப்பண்ணிவைத்துக் களிக்குமதிறேயது. அதாவது-"அணிமென்குழலாரின்பக்கலவி யமுதுண்டார்" என்றபடி. (களித்தேனே) "நாவலிட்டுழிதருகின்றோம்" என்று செருக்காலே களிக்கிறகளிப்பேயிறேயிது. யமாதிகள்தலையிலே யடியிட்டுக் களிக்கப்பெற்றேன்.........*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (திருப்பேரித்யாதி) "திருப்பேர்நகரான்" என்றுதொடங்கி "என்னெஞ்சுநிறையப்புகுந்தான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (தனக்கிருப்பிடமானவித்யாதி) இரண்டுதிருப்பதியைச்சொன்னது - கோயில்களுக்கெல்லாமுபலக்ஷணம். "இன்று" என்றத்தைப்பற்ற (நிர்ஹேதுகமாகவென்றது) "இருப்பேனென்று" என்றத்தைப்பற்ற (ப்ரார்த்தித்துவந்தென்றது.)

ஊரையும் மலையையும் சொன்னதுக்கு ஸ்வாரஸ்யம் (திருவயோத்யையித்யாதி) "பொருப்பேயுறைகின்ற" என்ற ஏவகாரவர்த்தமாநங்களாலே - திருப்பேர்நகரைப்பற்றத் திருமலையிலிருப்பு போக்யமாயிருக்குமென்றபடி. இதுக்குத்ருஷ்டாந்தம் (அதிகமித்யாதி ப்ரமாணத்ரயமும்) "[Grantha script] (தர்மஜ்ஞம்சித்ரகூடஸ்யமந்தாகிந்யாஸ்சஸோபநே। அதிகம்புரவாஸாச்சமந்யேதவசதர்ஸநாத்,) "[Grantha script] (ஸுரம்யமாஸாத்யது சித்ரகூடம்நதீஞ்சதாம்மால்யவதீம்ஸுதீர்த்தாம்। நநந்தராமோம்ருகபக்ஷிஜுஷ்டம்ஜஹௌசதுःகம்புரவிப்ரவாஸாத்,) "[Grantha script] (ஸுபகஸ்சித்ரகூடோயம் கிரிராஜோபமோகிரிः। யஸ்மிந்வஸதிகாகுத்ஸ்த்தःகுபேரஇவநந்தநே) இத்யயோத்யாகாண்டே. இதுக்கர்த்தம் (குறைவற்றவனித்யாதி) "குறைவற்றவன்" என்றுசப்தமில்லையேயென்ன (சர்வப்ரகாரத்தாலுமித்யாதி.)

இதுக்கு த்ருஷ்டாந்தம் (இஹைவேத்யாதி) "[Grantha script] (இஹைவாஸ்ரமேகோஸ்த்வயாஸார்த்தமஹந்திதே। லக்ஷ்மணேநசவத்ஸ்யாமிமாம்ஸோகःப்ரதக்ஷ்யதி) இத்யயோத்யாகாண்டே. "[Grantha script]

𑌧𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌬𑌹𑍁𑌮𑍃𑌗𑌦𑍍𑌵𑌿𑌜𑌮𑍍 । 𑌇𑌹 𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌸𑌾𑌰𑍍𑌧𑌮𑍇𑌤𑍇𑌨 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾 " ( இதம்புண்யமிதம்மேத்யமிதம்பஹும்ருகத்விஜம் । இஹவத்ஸ்யாமி ஸௌமித்ரே ஸார்த்தமேதேநபக்ஷிண ) இத்யாரண்யகாண்டே. "பக்ஷிண" என்றதுக்கர்த்தம் (ஜயரித்யாதி) கோல் - ஆஜ்ஞை. "𑌨𑌦𑍇𑌂𑌭𑌾𑌯𑍍𑌯𑍋𑌤𑌾𑌤" (நதேம்பாமத்யமாதாத) என்றத்தைப்பற்ற ( நடுவிலாய்ச்சியென்றது ) ப்ரியமில்லாமையாலேயென்றது - " 𑌕𑌼𑌕𑍇𑌯𑍍𑌯𑌾𑌃𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 " (கைகேய்யா꞉ப்ரியகாரணாத்) என்றத்தைப்பற்ற.

"விருப்பே" என்றவவதாரணார்த்தம் (ஆஜ்ஞாநுவர்த்தநமித்யாதி) விவரணம் ( தாநஹமித்யாதி ) " 𑌤𑌾𑌨𑌹𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃 𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌨𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌷𑍁 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌨𑍍 । 𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑍍𑌯𑌜𑌸𑍍𑌰𑌮𑌶𑍁𑌭𑌾𑌨𑌾𑌸𑍁𑌰𑍀𑌷𑍍𑌵𑍇𑌵 𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 " ( தாநஹம்த்விஷத꞉க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ) இதிகீதாயாம். (த்வேஷபரிஹாரமாகவன்றிக்கே) இதிபாடே, த்வேஷநிர்வர்த்தநார்த்தஞ்ச கிஞ்சநாவஸ்த்தாநமஸ்தி - மத்யமாவஸ்த்திதி꞉; தாம்விநா, "𑌤𑌾𑌨𑌹𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃" ( தாநஹம்த்விஷத꞉ ) இதி த꞉கேநாவஸ்த்தாநம்சகிஞ்சநாஸ்தி; தச்சவிநா ததத்யாதரவிஷயோபூத்வேத்யர்த்த꞉.

" அமுதமுண்டு " என்றதுக்கு வ்யாவர்த்யம் ( விஷபோஜநத்தையித்யாதி ) (நடுவேநின்றுகளிக்கையன்றிக்கே) பகவதநுபவத்தாலே களிக்கப்பெற்றேனென்றபடி. ஏதத்விவரணம் (க்ஷுத்ரவிஷயேத்யாதி) நரகத்துக்கு க்ருஷிபண்ணிக்களிக்கையாவதேதென்ன (அதாவதித்யாதி) " அணிமென்குழலாரின்பக்கலவியமுது " என்கையாலே - அதுவு மல்பசந்தோஷஹேதுவென்று கருத்து.

விஷயாநுபவத்தால்வந்த களிப்பிருக்கும்படியென்னென்ன (நாவலித்யாதி) இதுக்கர்த்தம் (யமாதிகளித்யாதி) நாவலிட்டு - அறைகூறி. நாவலென்றும் அறையோவென்றும் - ஜயித்தவன்சொல்லும்வார்த்தை ...... ...............................*

---

# ஏழாம்பாட்டு.

உண்டுகளித்தேற்கும்பரொன்குறைமேலைத்
தொண்டுகளித்தந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்
வண்டுகளிக்கும்பொழில்சூழ்திருப்பேரான்
கண்டுகளிப்பக்கண்ணுணின்றகலானே.

## ஆறாயிரப்படி.

(உண்டு) என்னுளடங்காதே பொங்கிப்புறப்படுகிற பரமபக்த்யவஸாநரூபமாய் இவ்வாத்மாவினுடைய பகவச்சேஷத்வ ப்ரதிபாதகமான திருமந்த்ரத்தினல் ப்ரதிபாத்யமாயிருந்த பகவத்கைங்கர்யைக ரதித்வத்தைப்பெற்றநான் * கண்களாரளவும்நின்று கண்டுகளிக்கும்படியாகத் திருப்பேரானென்கண்ணுள் நின்றகலான், இப்படி அவனைபுஜித்துக்களிக்கப்பெற்றவெனக்கு இனிமேல் அநவாப்தமாய் அவாப்தவ்யமாயிருப்பதொரு ப்ராப்யமுண்டோவென்கிறார் ...... ....................... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இங்கு நித்யாநுபவம்பண்ணும்படி ஸந்நிஹிதனானவனை யநுபவித்துக்களிக்கிறவெனக்கு மேலென்னகுறையுண்டென்கிறார்.

வண்டுகளிக்கும்-வண்டுகளானவை மதுபானத்தைப்பண்ணிக்களிக்கும். பொழில்சூழ் - பொழில்சூழ்ந்த. திருப்பேரான் - திருப்பேர்நகரான். கண்டுகளிப்ப-தன்னை சதாதர்ஸநம்பண்ணிக்களிக்கும்படி. கண்ணுள்நின்று - என்கண்ணுக்குவிஷயமாய்நின்று. அகலான் - போகிறிலன். உண்டுகளித்தேற்கு - இப்படி நித்யாநுபவம்பண்ணிக்களித்தவெனக்கு. உம்பர்-மேலொருதேச விசேஷத்திலேபோய்ப் பண்ணுமநுபவத்தில். என்குறை - குறைகிடந்ததேது. மேலைததொண்டு - அதிகமான தாஸ்யரஸமானது. உகளித்து - உகளித்து. அந்தி - முடிவிலே. தொழும்சொல்லு-"நம இத்யேவவாதிந:" (நமஇத்யேவவாதிந:) என்கிறபடியே தொழுகைக்கு வாசகமான நமஸ்ஸப்தத்தைச்சொல்ல. பெற்றேன் - பெற்றேன்.

உகளித்தல்-மிகுதல்... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவனுடையவாதரத்தாலே தமக்குண்டான கார்த்தார்த்யத்தை யருளிச்செய்கிறார்.

(உண்டுகளித்தேற்கும்பரென்குறை) இப்படியநுபவித்துக் களிக்கப்பெற்ற வெனக்கொருகுறையுண்டோ. அவனுடையகுணங்களையநுபவித்து * மயர்வறமதிநலமருளப்பெற்றவெனக்கு மேல்வேண்டுவதொன்றுண்டோவென்றிருக்கிறார். ஜ்ஞாநலாபமுண்டானபின்பு " அவ்வருகில் ப்ராப்திபெற்றிலோம் " என்று வருவதொருகுறையுண்டோ. உம்பரென்றது – மேலென்றபடி.

(மேலைத்தொண்டித்யாதி) மேலானதாஸ்யரஸமதிசயித்து. " யேநயேநதாதாகச்சதி " (யேநயேநதாதாகச்சதி) என்கிறரஸத்தை யநுபவித்து. " ஸேவாஸ்வவ்ருத்தி: " ( ஸேவாஸ்வவ்ருத்தி: ) என்றதுபோலன்றிறே ஸ்வரூபாநுரூபமானது. (தொண்டுகளித்து) தொண்டாலே உகப்புத்தலைமண்டையிட்டு. அதினுடைய சரமதசையிலே " நமஇத்யேவவாதி ந: " (நமஇத்யேவவாதிந:) என்று புத்திபூர்வகமாகச் சொல்லுவதொன்றுண்டு, அப்பாசுரத்தைச் சொல்லப்பெற்றேன். அதாவது-ப்ரீதிவழிந்த சொல்லாலே திருவாய்மொழிபாடி யடிமைசெய்யப்பெறுகை.

(வண்டித்யாதி) வண்டுகள் மதுபானம்பண்ணிக்களிக்கிற பொழிலாலேசூழப்பட்ட திருப்பேரிலேவர்த்திக்கிறவன். ஜ்ஞாநாதிகரோடு திர்யக்குக்களோடு வாசியறக்களிக்கும் தேசம். (கண்டுகளிப்ப) " மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்கள் " என்றுவிடாய்த்தகண்கள் கண்டுகளிக்கும்படியாக. (கண்ணுள்நின்றகலானே) நான்போகச்சொல்லிலும் கண்வட்டத்தில்நின்று மகலுகிறிலன்; விஷயப்ரவணர் போகச்சொன்னாலும்

தூணைக்கட்டிக்கொண்டு போகாதாப்போலே. இப்படியவனை யநுபவித்துக் களிக்கப்பெற்ற வெனக்கு மேலொருகுறையுண்டோ ..........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (உண்டித்யாதி) "விருப்பேபெற்று" என்கிறபதத்திலேசொன்னவர்த்ததை யநுபாஷித்துக்கொண்டு, "உண்டுகளித்தேற்கு" என்றுதொடங்கி "அந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அவனுடையவித்யாதி) "கண்ணுள்நின்றகலான்" என்றத்தைப்பற்ற (ஆதரத்தாலேயென்றது) கார்த்தார்த்யத்தை - க்ருதார்த்ததையை.

கீழ்வாக்யவிவரணம் (அவனுடையவித்யாதி) பங்க்யந்தரம் (அவனுடையவித்யாதி) என்னவுமாம். இப்படி யநுபவித்தென்றது - "கண்ணுள்நின்றகலான்" என்றத்தைப்பற்ற. * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனுடையகுணங்களை யநுபவிக்கப்பெற்ற வெனக்கென்றுயோஜிப்பது. * மயர்வறமதிநலமருளப்பெற்ற மாத்ரமே போருமோ, ப்ராப்தியும் வேண்டாவோவென்ன (ஜ்ஞாநலாபமித்யாதி.)

விவரணம் (யேநயேநேத்யாதி) "மேலே" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஸேவேத்யாதி) அதவா, பராநுவர்த்தநம் ஹேயமன்றோவென்ன (ஸேவேத்யாதி) என்னவுமாம். "ஸத்யாந்ருதாப்யாம் ஜீவேத ந ஶ்வவ்ருத்த்யா கதாசந । ஸேவா ஶ்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்" (ஸத்பாந்ருதாப்யாம் ஜீவேதநஸ்வவ்ருத்யாகதாசந । ஸேவாஶ்வவ்ருத்திர்வ்யாக்யாதாதஸ்மாத்தாம்பரிவர்ஜயேத் ) இதிமாநவே தர்மஶாஸ்த்ரே. "மேலானதாஸ்யரஸம்" இத்யாதியின்விவரணம் (தொண்டாலேயித்யாதி) தொண்டுக்குக்களிப்பாவதேதென்ன (தொண்டாலேயித்யாதி) என்னவுமாம்; களித்து - அதிசயித்து. ஸ்வபோக்த்ருத்வம் வரப்போகிறதோ வென்கிறவதிசங்கையாலே "நம இத்யேவ வாதிந:" (நமஇத்யேவவாதிநஃ) என்பர்களென்றபடி. "முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் ஶ்வேதத்வீபவாஸிநாம் । பத்தாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந:" (முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேத த்யச்ச்வேதத்வீபவாஸிநாம் । பத்தாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டாநமஇத்யேவவாதிநஃ) மேலைத்தொண்டாவதேதென்ன (அதாவதித்யாதி) அன்றிக்கே, "அந்திதொழும்சொல்லுப்பெற்றேன்" என்றதுக்கு பாவாந்தரம் (அதாவதித்யாதி)" என்று ஒருருவிலே யருளிச்செய்வர். புகவதநுபவாந்தத்திலேதொழுஞ் சொல்லாவது-பக்திபலாத்காரத்தாலே கையுமஞ்ஜலியுமாய்த் திருவாய்மொழிபாடுகையென்றபடி.

"உண்டுகளித்தேற்கு" என்றபதத்தைக்கடாக்ஷித்து "வண்டுகளிக்கும் என்றபதப்ரயோகத்துக்குத் தாத்பர்யம் (ஜ்ஞாநாதிகரோடித்யாதி.)

"கண்டுகளிப்ப" என்றதுக்குபாவம் (மெய்கொள்ளவித்யாதி) போகச்சொன்னாலும் போகாததுக்கு த்ருஷ்டாந்தம் (விஷயப்ரவணரித்யாதி.)

அந்வயமுகேநபாவம் (இப்படியவனையித்யாதி.)

வண்டுகளிக்குமென்றுதொடங்கி, கண்ணுணின்றகலான் - மேலைத்தொண்டுகளித்தந்திதொழும் சொல்லுப்பெற்றேன்-உண்டுகளித்தேற் கும்பரொன்குறை என்றந்வயம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

# எட்டாம்பாட்டு.

---

கண்ணுணின்றகலான்கருத்தின்கட்பெரிய
னெண்ணினுண்பொருளேழிசையின்சுவைதானே
வண்ணநன்மணிமாடங்கள்சூழ்திருப்பேரான்
திண்ணமென்மனத்துப்புகுந்தான்செறிந்தின்றே.

## ஆறாயிரப்படி.

(கண்ணுள்நின்றகலான்) வாங்மநஸாகோசர ஸ்வரூபனாய், பரம போக்யபூதனாயிருந்த திருப்பேரான், கண்ணுள்நின்றகலான்; தன்னாலும் விஸ்லேஷிக்கவொண்ணாதொருபடி யென்னெஞ்சிலேபுகுந்துசெறிந்தான், இன்னமிவ்வளவன்றிவனுடைய பாரிப்பென்கிறார்... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரத்தாலும் நிரதிசயபோக்யனாய்க்கொண் டென்னெஞ்சிலே த்ருடமாகப்புகுந்தானென்கிறார்.

கண்ணுள்நின்று - பாஹ்யமானகண்ணுக்கு நித்யாநுபவவிஷயமாய். அகலான்-அகலுகிறிலன். இவன் நினைவைப்பார்த்தவிடத்தில், கருத்தின்கண் - இங்குநின்று மொருதேசவிசேஷத்தேறக்கொடுபோ யநுபவிக்கைக்கீடானபாரிப்பில். பெரியன்- பெரியனாயிராநின்றான். எண்ணில் - "தாந்தாமறிய" என்றெண்ணுமளவில். நுண்பொருள் - அதிஸூக்ஷ்மமான ஸ்வபாவங்களையுடையனாய். தானே-தானே. அநுபவிக்குமளவில், ஏழிசையின்சுவை - சப்தஸ்வரசாரஸ்யத்தையுடையனாய். வண்ணம்- நாநாவர்ணமாய். நன்மணி-ஸ்லாக்யமான மாணிக்கங்களாலேசமைந்த. மாடங்கள் சூழ்-மாடங்கள்சூழ்ந்த. திருப்பேரான் - திருப்பேரிலேவர்த்திக்கிறவன். என்மனத்து-தன்னைப்பெறுகைக்கு விடாய்த்தவென்னெஞ்சிலே. திண்ணம் - நிர்ஹேதுகமாக. இன்று-இன்று. செறிந்து-த்ருடமாம்படி. புகுந்தான்-புகுந்தான்.....................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

நிரதிசயபோக்யபூதனான திருப்பேர்நகரான் என்பக்கலிலே வ்யாமோஹத்தைப்பண்ணி ஒருநாளும் போகாதபடி யென்னெஞ்சிலேவந்து புகுந்தானென்கிறார்.

(கண்ணுள்நின்றகலான்) (சதாதர்ஸநத்துக்கு விஷயமாகாநின்றான்.) சதாதர்ஸநத்துக்கு வேறுதனக்கொரு விபூதியுண்டென்றிருக்கிறிலன். (கருத்தின்கட்பெரியன்) உபயவிபூதியோகத்தால்வரு மைஸ்வர்யத்தையடையத்தீர்த்து, இவரை யவ்வருகே கொண்டுபோகையிலும், ஆதிவாஹிகரை நியமிக்கையிலும், தான்முற்பாடனாய்க்கொண்டுபோகையிலும் பாரியாநின்றான். ஸங்கல்பத்தி லவன் த்வரிக்கிறபடி. நம்மாலெண்ணிமுடியுமளவல்ல - இயத்தாரஹிதன். இதுதான் "யஸ்யாமதம்" என்கிறபொதுவாலல்ல, ஸங்கல்பத்தி லேங்ஙனேயிருக்கும்; "என்மனத்துப்புகுந்தான்"

என்கிறத்தோடு சேரவேணுமிறே (கருத்தின்கண்பெரியன்) என்கிறவித்தும். (எண்ணிறுண்பொருள்) அவன்தானே யிப்படி மேல்விழில் விழுமித்தனை போக்கித் தாந்தாமேயறியப்பார்ப்பார்க்கு அறியப்போகாது. அறியவரியன் என்று கைவாங்கியிருக்கலாம் வஸ்துவன்று (ஏழிசையின்சுவைதானே) வருந்தியும் மேல்விழவேண்டும் விஷயமாய்த்து. இது ரஸ்யதையிருந்தபடி.

(வண்ணமித்யாதி) இதுமேன்மையிருந்தபடி. (என்மனத்து - செறிந்து - புகுந்தான்) "ஐநந்யாஸாவஜெணாஹஂ" (அநந்யாராகவேணாஹம்) என்கிறவிஷயத்திற்போலே பிரிக்கவொண்ணாதபடி புகுந்தான்; "எனதாவியுள்கலந்த" என்னுமாபோலே.

"சர்வாதிகனானவ னிப்படிநம்பக்கல் மேல்விழக்கூடுமோ" என்று தாமு மதிசங்கைபண்ணினர்; அதுக்குவேறுபோக்கடிகண்டிலர் (திண்ணம்) நிஸ்சிதம். இதில் கண்ணழிவில்லை .. ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கண்ணுள்நின்றித்யாதி) "ஏழிசையின்சுவைதானே - திருப்பேரான் - கண்ணுள்நின்றகலான், கருத்தின்கட்பெரியன் - என்மனத்து - செறிந்து - புகுந்தான்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிரதிசயபோக்யபூதனானவித்யாதி)

"கண்ணுள்நின்றகலான்" என்றதுக்குபாவம் (சதாதர்ஸ'த்துக்கித்யாதி)

"கருத்தின்கட்பெரியன்" என்றதுக்கு - நினைவில்வந்தால் பெரியனென்று சப்தார்த்தம். இத்தால் - பஹுமநோரதங்களைப் பண்ணுநின்றனென்று தாத்பர்யம். இவ்வளவைவிவக்ஷித்து இவனுடைய பஹுவான மநோரதமேதென்ன (உபயவிபூதித்யாதி) "கருத்தின்கட்பெரியன்" என்றதுக்கு - என்னுடைய நினைவில் பெரியவனென்றாய், அவன்பாரிக்கிறபாரிப்பு நம்மாலெண்ணிமுடிக்கப்போகாதென்றர்த்தாந்தரம் (நங்கார்யத்திலித்யாதி) அன்றிக்கே, "கருத்தின்கட்பெரியன்-" நம்விஷயத்தில் கார்யவிசாரத்தாலே பெரியவனென்றபடி. இதனைக்காட்டுகிறார் (உபயவிபூதீத்யாதி) இத்தால்பலிதம் (நங்கார்யத்திலித்யாதி) என்றிங்ஙனும் சொல்லுவர்கள். எண்ணிமுடிக்கப்போகாதென்றத்தால்பலிதம் (இயத்தாரஹிதனென்று) முடியுமளவல்ல இயத்தாரஹிதனென்று ஏகவாக்யம். "கருத்தின்கட்பெரியன்" என்றதுக்கு- மநோரதத்தால் பெரியவனென்று கொள்ளவேணுமோ, ஸ்வரூபாபரிச்சேத்யதையைச்சொல்லவொண்ணாதோவென்ன (இதுதானித்யாதி) இதுதான் - இந்த இயத்தாராஹித்யந்தான். "யஸ்யாமதம்" என்கிறஸ்ருதி ஸித்தமான ஸ்வரூபாபரிச்சேத்யத்வத்தாலன்றென்றபடி. பின்னையெதிலேயென்ன (நங்கார்யத்தில்த்யாதி) இதுக்கு நியாமகமேதென்ன (என்மனத்தித்யாதி) என்னுதல்; அன்றிக்கே, "கருத்தின்கட்பெரியன்" என்று - விசாராவிஷயபூதனென்று சொன்னாலோவென்ன (என்மனத்தித்யாதி) என்னுதல்.

"எண்ணிலுண்பொருள்" என்றதுக்கு - எண்ணிக்கையில்வந்தால் ஸூக்ஷ்மமானவஸ்துவென்று சப்தார்த்தமாய், ஸ்வயத்நசாத்யனல்லாமையைச்சொல்லுகிறதென்கிறார் (அவன்தானேயித்யாதி.)

லிழையும்கூட்டிக்கொண்டு "ஏழிசையின்சுவைதானே" என்றதுக்கவதாரிகை (அறியவரியனித்யாதி) ஏழிசையின்சுவைதானே - சப்தஸ்வரத்தினுடைய ரஸமானவனென்று சப்தார்த்தம். இந்தசப்ததசையுட்கொண்டு இத்தால்பலித்தபாவம் (வருந்தியுமித்யாதிவாக்யத்வயம்.)

ஊரினுடைய போக்யதையைவர்ணித்து, இப்படிப்பட்ட வூரையுடையவனென்கையாலே (இதுமேன்மையிருந்தபடி) என்கிறார். நாநாவர்ணமாய் ஶ்லாக்யமான மாணிக்கங்களாலேசமைந்த மாடங்கள்சூழ்ந்த திருப்பேரிலே வர்த்திக்கிறவனென்று சப்தார்த்தம்.

செறிந்து - பிரிக்கவொண்ணாதபடி. "செறிந்து" என்றதுக்குபாவம் (அநந்யேத்யாதி) "ஶக்யா லோபயிதும் நாஹம் ஐஶ்வர்யேண தநேந வா । அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" (ஶக்யாலோபயிதும்நாஹமைஶ்வர்யேணதநேநவா | அநந்யாராகவேணாஹம்பாஸ்கரேணப்ரபாயதா) இதிஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதிஸீதா. பிரிக்கவொண்ணாதபடி புகுந்தானென்றதுக்கு ப்ரமாணம் (எனதாவியித்யாதி.)

"திண்ணம்" என்று நிஸ்சயிக்கைக்கு சம்சயமேதென்ன (சர்வாதிகனித்யாதி) "இன்று" என்கையாலே - நேற்றில்லையென்றபடி.

எண்ணினும்பொருளென்றுதொடங்கி, திருப்பேரான் - கண்ணுணின்றகலான், கருத்தின்கட்பெரியன் - இன்று - என்மனத்து - செறிந்து - புகுந்தான், திண்ணம் இத்யந்வய:. கருத்தின்கட்பெரியன் - பாரிப்பில் பெரியனாயிருக்குமவன்; எண்ணினும்பொருள்-தாந்தாமறியவென்றெண்ணுமளவில் அதிஸூக்ஷ்மமான ஸ்வபாவங்களையுடையவன் என்று உரையில் சப்தார்த்தம்... ... ... ... ... ... ... *

---

## ஒன்பதாம்பாட்டு.

இன்றென்னைப்பொருளாக்கித்தன்னையென்னுள்வைத்தா
னன்றென்னைப்புறம்போகப்புணர்த்ததென்செய்வான்
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ்திருப்போா
னென்றெனக்கருள்செய்யவுணர்த்தலுற்றேனே.

### ஆறாயிரப்படி.

( இன்றென்னை ) திருப்பேர்நகரானின்றென்னை ஸ்வவிஷய திவ்யஜ்ஞாநவானாக்கித் தன்னையென்னுள்ளேவைக்கைக்குஹேதுவென், இதற்குமுன்பிப்படிசெய்யாதொழிகைக்கு ஹேதுவென் என்று அவனைநான் கேட்கிறேன், இதற்கோருத்தரம் வல்லனாகில் சொல்லுவானென்கிறார். ஒருக்ஷணம்பிரியில் தரிக்கமாட்டாதே மதேகதாரகனாயிருக்கிறவிவன் இதுக்குமுன்பு அநாதிகாலமெல்லா மென்னைவிட்டெங்ஙனே தரித்திருந்தானென்று கேட்கிறானொன்றுமாம்... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "இன்று நிர்ஹேதுகமாக வுபகரித்தவன்முன் புபேக்ஷித்ததுக்கு ஹேதுவென்" என்று கேட்கவேண்டியிருந்ததென்கிறார்.

இன்று - ப்ரதமகடாக்ஷம்பண்ணினவிதுக்குப் பின்பானவிக்காலம். என்னை-முன்பு "அஸந்நேவ" என்னும்படிகிடந்தவென்னை. பொருளாக்கி - "ஸந்தமேநம்" என்னும்படி வஸ்துவாக்கி. தன்னை - விலக்ஷணபோக்யபூதனான தன்னை. என்னுள்-ஹேயமானவென்னெஞ்சுக்குள்ளே. வைத்தான் - தானேகொடுவந்துவைத்தான். அன்று - அந்தகடாக்ஷத்துக்கு முன்பானவன்று. என்னை - தானிட்டவழக்காம்படி பராதீநனானவென்னை. புறம்போக - தன்பக்கலிலே விமுகனாய் விஷயாந்தரங்களிலே கைகழிந்துபோம்படி. புணர்த்தது - சங்கல்பித்தது. என்செய்வான் - எதுசெய்வானாக. குன்றென்ன - குன்றென்றுசொல்லலாம்படி. திகழ்மாடங்கள்சூழ்-விளங்குகிறமாடங்கள்சூழ்ந்த. திருப்பேரான் - திருப்பேரான். ஒன்று - இவையிரண்டிலுமொன்றுக்குஹேதுவை. எனக்கருள்செய்ய - எனக்கு அருளிச்செய்கைக்காக. உணர்த்தலுற்றேன் -"தன்திருவுள்ளத்திலே படும்படியறிவிக்கவேணும்" என்று உத்யோகித்திருந்தேன்.

ஒன்றுசொல்ல மற்றையது தத்வ்யதிரேகஸித்தமென்று கருத்து. நிர்ஹேதுகவிஷயீகாரத்துக்குஹேது ப்ரஶ்நம்பண்ணில் சர்வஜ்ஞனுக்கு முத்தரமில்லையிறே.*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"இன்றென்னைவிஷயீகரிக்கைக்கும் முன்பென்னை யுபேக்ஷிக்கைக்கும் காரணமென்" என்று கேட்கவேண்டியிருந்தேனென்கிறார்.

ஆக, சர்வேஶ்வரன் தம்மைப்பரமபதத்திலே கொடுபோவதாக விரைகிறபடியைக்கண்டு "இன்றென்னளவல்லாதபடி த்வரிக்கிறதேவர் இதுக்குமுன்பு நெடுநாள்விட்டு ஆறியிருந்தபடியெங்ஙனே" என்று அவன்றன்னைக்கேட்கிறார். இன்றிப்படி விரைகிறமை மெய்யாகில் முன்புவிட்டாறியிருக்கக்கூடாதென்கிறார். [ ந த்வாமி ஹஸ்தாம்ஜாநீதே ] [ நத்வாமி ஹஸ்த்தாம்ஜாநீதே ] என்று நடுவேசிலர் சொல்லவேண்டும்படியாய்த்து - எழுந்தருளியிருந்தவிடமறியாமையாலே ஆறியிருந்தாரித்தனைபோக்கி, அறிந்தாலொருக்ஷணமாறியிருப்பரோ. இதுதா னென்வார்த்தை கொண்டறியவேணுமோ [கமலலோசநே] [கமலலோசநே] உம்முடையகண்ணழகேயன்றோ இதில் ப்ரமாணம். [ராமஃ] அவரையறியாதொழியவேணுமோ. "நஜீவேயம்க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" ( நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம் ) என்றிறே யவரிருப்பது. [ராமஃகமலலோசநே] [ ராமஃகமலலோசநே ] அவரையறியாமையுமில்லை, உம்மை நீர்கண்ணாடிப்புறத்திலும் கண்டறியாமையுமில்லை. [கமலலோசநே] [கமலலோசநே] அன்றிக்கே, ஆஶ்ரிதராகத்தா னிக்கண்சிவப்பும் சீற்றமுமெல்லாமென்னுதல்.

( இன்றென்னைப்பொருளாக்கி ) அஸத்கல்பனான வென்னை இன்றொரு வஸ்துவாம்படிபண்ணி "பொருளல்லாதவென்னை" என்றாரிறே.

(தன்னை) சத்துக்களுக்கும் ஸ்ப்ருஹணீயனானதன்னை. (என்னுள்வைத்தான்) தன்னைப்பிறர்க் கவகாசமில்லாதபடி முற்றூட்டாக வென்னுள்ளே கொடுவந்துவைத்தான். (அன்று) அவன் விசேஷகடாக்ஷம்பெறுவதற்கு முன்புள்ளநாளை யெல்லாவற்றையும் சொல்லுகிறார். இன்றென்கிறது - * மயர்வறமதிநலமருளப்பெற்ற வதுக்குப்பின்புண்டானகாலத்தை. (என்னைப்புறம்போகப்புணர்த்ததென்செய்வான்) (பரதந்த்ரனானவென்னைப் புறம்போகப்பண்ணிற்றென்செய்கைக்காக. பாஹ்யனாகப்பண்ணுகையாகிறது - உபேக்ஷிக்கை.) "இழந்தநாளிழந்ததுமவனாலே, பெற்றவின்றுபெற்றதுமவனாலே" என்றிருக்கிறார். பரதந்த்ரவஸ்து செல்லநிற்கவற்றோ, வரநிற்கவற்றோ.

( குன்றித்யாதி ) இப்படி மதிப்பனானவன். மலைகளைச்சேரவைத்தாப்போலே விளங்காநின்றுள்ள மாடங்கள்சூழ்ந்ததிருப்பேரான். (ஒன்றெனக்கருள்செய்ய) முன்புகைவிட்டதுக்கு ஹேதுசொல்லவுமாம், இன்றென்னை விஷயீகரித்ததுக்கு ஹேதுசொல்லவுமாம். (உணர்த்தலுற்றேனே) இதுக்கொரு மறுமாற்ற மருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பம்செய்ய வேண்டியிராநின்றேன்.

" இதுநாம் சொல்லவேணுமோ, நீரே அறியீரோ " என்றான்; " * அடியேனறியேன், சர்வஜ்ஞான தேவரருளிச்செய்யவேணும் " என்றார். " ஆனால், நாமும்முடையநெஞ்சிலே புக்கிருக்கிறவிடத்தில் சம்வதித்திருந்தீர், அத்தாலேகாணும் " என்றான்; "ஓம், அதுதானுண்டோ, * யானொட்டி யென்னுளிருத்துவம்" என்றார்; "அதில்லையாகிலும் புகுந்தபின்பு நம்மையாதரித்தீரோ" என்றான்; "'மருவித்தொழும் மனமேதந்தாய்' என்று அதுவும் தேவர்செய்தவித்தனை" என்றார்; " ஓங்காணும், அதில்லையாகிலும் நம்மோடொக்க விஷயாந்தரங்களையும் விரும்பாதேயிருந்தீரோ " என்றான், " 'என்னைத்தீமனங்கெடுத்தாய்' என்று அதுவும் தேவரோயன்றோ " என்றார்; "இவையொன்றுமில்லையாகிலும் நாம்தந்த * மதிநலத்தை வளர்த்துக்கொடுபோந்தீரோ" என்றான், "'காதல்கடல்புரைய விளைவித்தகாரமர்மேனி' என்று அதுவும் தேவரீரோயன்றோ " என்றார்; இப்படியிவர் முடியத்தொடர்ந்தவாறே பெருங்கடல் மண்டினாப்போலே போக்கற்றான். "இதுக்கு ஈச்வரன்சொன்னவுத்தரமென்" என்று ஜீயர்பட்டரைக்கேட்க; "'இவர்தலையிலே யொருபழியையேறட்டு நெடுநாளிழந்த நாம்சொல்லுவதென்' என்று லஜ்ஜாவிஷ்டனாய் காலாலே தரையைக்கீறிநிற்கு மித்தனைபோக்கி வேறுத்தரமுண்டோ " என்றருளிச்செய்தார். அதாவது - " முன்பு ருசியில்லாமையாலே " என்னமாட்டான், "இப்போது சாதநாநுஷ்டாநம் பண்ணுகையாலே" என்னமாட்டான். ஆனால் பின்னை ஈஸ்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யாதிகள் வருதல் சர்வமுக்திப்ரசங்கம்வருதல் செய்யாதோவென்னில்; அதுசெய்

யாது, அடியிலே அத்வேஷமும் இச்சையும் பிறக்கைக்குத்தான் க்ருஷிப ண்ணி அது பக்வமாமளவும் பார்த்திருக்கிறவனாகையாலே. அவன்கேட்ட துக்கொரு மறுமாற்றம் சொல்லக்காணாமையாலே "அறிந்தோம், இதுக் குஹேது இங்ஙனேயாகவேணும்" என்றுபார்த்தார் - "தன்னுடையஸ்பர் ஶம் ப்ரதிகூலமாகைதவிர்ந்து விலக்காதசமயம் பார்த்திருந்தானாதல், த ன்னையொழிந்தவற்றில் சாதநபுத்தி தவிருமளவும் பார்த்திருந்தானாதலா கவடுக்கும்" என்றுபார்த்தார். ஆனால்இதுதன்னை அவனுத்தரமாக வருளிச் செய்யாதொழிவானென்னென்னில்; "சைதந்யப்ரயுக்தமாய் வருகிற அ த்வேஷத்தை சாதநமென்னமாட்டானே, உபாயபாவம் தன்தலையிலேயா ய்த்தே, நெடுநாள் இவர்தலையிலே பழியிட்டிழந்திருந்த நாமெத்தைச் சொல்லுவது" என்றுபேசாதேயிருந்தான். "ஹ்ரீரேஷாஹிமமாதுலா" (ஹ்ரீரோஷாஹிமமாதுலா) என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜித்துநிற்குமவனி றே; இவர்தாமெடுத்துவைத்து வார்த்தைசொல்லும்படியாய்த்து அவ னிலை. சைதந்யப்ராயுக்தமான ருசிதான் ஸ்வரூபாதிரேகியன்றிறே. "உம் முடையப்ராப்யம் பெற்றீராகில் உமக்கிதுவந்தவழி யாராயவேணுமோ, உம்முடைய ப்ராப்யம் பெற்றீராகில் அதுவேயமையாதோ" என்ன, அ துவே யமையுமென்கிறார்; தேங்காய்க்கிளநீர்புக்கவழியாராய்ந்தன்றிறே விடாய்த்தவ னிளநீர்குடிப்பது... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (இன்றென்னையித்யாதி.) "இன்றென்னை" என்றுதொட ங்கி "புணர்த்ததென்செய்வான் - உணர்த்தலுற்றேன்" என்னுமளவும்கடாக்ஷித்த வதாரிகை (இன்றென்னையித்யாதி) அவதாரிகாந்தரம் (அதவேத்யாதி) மூன்றாமவ தாரிகை (இன்றிப்படியித்யாதி) (இன்றென்னை) இத்யாதிமூந்தினவவதாரிகை, ஸ்வ கதசிந்தாபரம்; (அதவா) இத்யாதி த்விதீயாவதாரிகை, ஈஶ்வரனைக்குறித்து ப்ரஶ் நபரம்; (இன்றிப்படி) இத்யாதிமூன்றாமவதாரிகை, அதிசங்காபரம். "(அறியிருக்க க்கூடாது) ஆகையாலிதுவும்பொய்யோ" என்றுகருத்து. அன்றிக்கே, அவதாரிகை யிரண்டாய், இத்தால்பலித்தபாவம் (இன்றிப்படியித்யாதி) என்றுமாம். "(கூடா து) இதுக்கடியென்னென்கிறானென்றபடி" என்றிப்போதுபாவம்.

"உணர்த்தலுற்றேன்" என்றுகேட்டதுக்கு பரிஹரிக்கும்படியென்னென்ன (நத்வாமித்யாதி) தடஸ்தரோபரிஹரிக்கவேணும், அவனால் பரிஹரிக்கப்போகாதென் றபடி. "நக்வாமிஹஸ்தாம்ஜாநீதே ராமஃகமலலோசநே। தேநத்வாந்நாநயத்யாஶுஶசீமிவபுரந்தரஃ" (நத்வாமிஹஸ்த்தாம்ஜாநீதே ராமஃகமலலோச நே। தேநத்வாந்நாநயத்யாஶுஶசீமிவபுரந்தரஃ) இதிஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதி ஹநுமான். இஶ்லோகத்துக்குபாவம் (எழுந்தருளியித்யாதி) "கமலலோசநே" (கமலலோசநே) என்றதுக்குவாஸனை (இதுநானித்யாதிவாக்யத்வயம்) இதுதான்- அறிந்தாலொருக்ஷணமாறியிராரொன்னு மதுதானென்றபடி. இதில்ப்ரமாணம்- ஆறி யிரான் என்னுமதில் ப்ரமாணமென்றபடி. ப்ரமாணம்-நியாம மென்றபடி. "ராமஃ" என்றதுக்குபாவம் (அவனாயித்யாதி) அவரெப்படியிருப்பரொன்ன (ஈஜீவேயமித் யாதி) "அஸிதேக்ஷணாம் - விநா" (அஸிதேக்ஷணும் - விநா) என்கையாலே-

உம்முடைய கமலலோசநங்களை விட்டிருக்கவல்லரோவென்றபடி. பதத்வயத்துக்கும் தந்த்ரேணபாவம் (அவனையித்யாதி) " கமலலோசநே " (கமலலோசநே) என்றதுக்கர்த்தாந்தரம் (அன்றிக்கே ஆனெதிராகவித்யாதி) இந்தத்விதீயார்த்தத்துக்கு, ப்ரணயரோஷத்தால்வந்த சிவப்பையும் சீற்றத்தையும்சொல்லுகிறது. * கமல சப்தத்துக்கு - செந்தாமரையர்த்தம்; முந்தினவர்த்தத்துக்கு, " ஸிதபத்ரநிபேக்ஷணம் " (ஸிதபத்ரநிபேக்ஷணம்) என்றதுக்குப்போலே " கமலலோசநே " (கமலலோசநே) என்றதுக்கும் - நெய்தல்போன்ற கருங்கண்ணையுடையவளென்றுபொருள்.

(அஸத்கல்பனென்னை) என்கிறதுக்கு இங்குசப்தமேதென்ன (பொருளல்லாதவித்யாதி.)

"ஏழிசையின்சுவைதானே" என்றதுக்கநுகுணமாக "தன்னை" என்றதுக்கர்த்தம் (சத்ருக்களுக்குமித்யாதி) முற்றூட்டாக - எல்லாமேகபோகமாக.

புறம்போக-விஷயப்ரவணனுய்ப்போக. புணர்த்தது - ப்ரக்ருதியையிட்டுமயக்கினது. கீழுக்கெல்லாம்பாவம் (இழந்தநாளித்யாதி) இரண்டு மவனாலேயென்கிறதென்னென்ன (பரதந்த்ரேத்யாதி.)

குன்றென்றுசொல்லலாம்படி விளங்குகிற மாடங்கள்சூழ்ந்த திருப்பேரானிதிசப்தார்த்தஃ. "திருப்பேரான்" என்றது - சம்போதநை. தாத்பர்யம் (இப்படியித்யாதி.)

"ஒன்று" என்றதுக்குபாவம் (முன்பித்யாதி) உணர்த்தலுற்றேன்-அறிவிக்கவிசாரியாநின்றேனென்றபடி.

"உணர்த்தலுற்றேன்" என்றவநந்தரம் "உற்றேனுகந்துபணிசெய்து" என்று தாமே ஸமாஹிதராகையாலே அவன் நிருத்தரனானது ஸித்தமாகையாலே, நிருத்தரனானபடியைப் பாக்கவுபபாதிக்கிறார் (இதுநாம்சொல்லவித்யாதி) (இதுநாம்சொல்லவேணுமோ) இத்யுத்தரப்ரத்யுத்தரங்கள் - பலிதங்கள். நம்மோடொக்க விஷயாந்தரங்களையும் விரும்பாதிருந்தீரோயென்றது - நம்பக்கல் ப்ராவண்யம் நடவாநிற்கச்செய்தே விஷயாந்தரங்களி லபிநிவேசம்கலந்து வரவில்லையேயென்றபடி.

சிலவார்த்தைகளையிவர்க்குச்சொல்ல, இவர் அதுக்கெல்லா மந்யதாசித்தி சொல்ல, நிருத்தரனும் ப்ரகாரத்தைக்கீழேசொல்லி, இங்ஙனன்றிக்கே அநாதிகாலமிவரைக் கைவிட்டிருந்தகுற்றம் தன்மேலேயாய் அவ்வழியாலு மவன் நிருத்தரனானப்ரகாரத்தை ஆப்தசம்வாதத்தாலே தர்ஸிப்பிக்கிறார் (இதுக்கீஸ்வரனித்யாதி) அதுவென், ருச்யாதிகளில்லாமையாலே யென்னவொண்ணாதோவென்ன (அதாவதித்யாதி) அதாவது - உத்தரமில்லாமையாவதென்றபடி. " (மாட்டான்) ஆகையாலே நிர்ஹேதுகம்" என்றபடி. ஆனால் - நிர்ஹேதுகமானாலென்றபடி. இப்படி யிவன்நிருத்தரனானவிவர்கேட்டசங்கைக்கு சமாதாநம்பண்ணினாரானென்ன; தாமே சமாதாநம்பண்ணிக்கொண்டு போகிறானென்கிறார் (அவன்கேட்டதுக்கித்யாதி) ஸ்பர்ஸமென்றது - ரக்ஷணமென்றபடி. இது தன்னையென்றது - அத்வேஷத்தையும் சாதநபுத்திதவிருகையையுமென்றபடி. "இவர்தலையிலே" இத்யாதிவாக்யவிவரணம் (நெடுநாளித்யாதி) " ஆகையாலே (நெடுநாள்) " எனறுகூட்டுவது. " பழியிட்டு இழந்திருந்தநாம் " என்கைக்கு தன்மேலே குறையாக நினைத்திருக்குமோவென்ன (ஹ்ரீரோஷா

ஹீத்யாதி) "ப்ரஸீத து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா । யதீத்ருஶைரஹம் விப்ரைருபஸ்தேயைருபஸ்தித: ।" (ப்ரஸீதந்துபவந்தோ மேஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶைரஹம்விப்ரைருபஸ்த்தேயை ருபஸ்த்தித:) இத்யாரண்யகாண்டே. அவன் லஜ்ஜாவிஷ்டனான ப்ரகாரத்தினெல்லையை யருளிச் செய்கிறார் (இவர்தாமித்யாதி) "ஆகையாலே (இவர்தாமெடுத்துவைத்து)" என்று கூட்டுவது. எடுத்துவைத்து - லஜ்ஜையினாலே கவிழ்ந்திருந்தவனை யெடுத்துப்பிடித் தென்றபடி. இவர்க்கத்வேஷமேயன்றிக்கே ருசியுமுண்டே. அதுசாதநமாகாதோ வென்ன (சைதந்யேத்யாதி) சாக்ஷாத்ப்ரஸங்கத்துக்குத்தரம் (உம்முடையவித்யாதி) ப்ராப்யம்பெற்றால் வந்தவழியாராயவேண்டா என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (தேங் காய்க்கித்யாதி.)

குன்றென்னத்திகழ்மாடங்கள் சூழ்திருப்பேரான் - இன்றென்னைப்பொரு ளாக்கியென்றுதொடங்கி, உணர்த்தலுற்றேனே இத்யந்வய: ... ... ... ... *

## பத்தாம்பாட்டு.

உற்றேனுகந்துபணிசெய்துனபாதம்
பெற்றேனீதேயின்னம்வேண்டுவதெந்தாய்
கற்றார்மறைவாணர்கள்வாழ்திருப்பேராற்
கற்றாரடியார்தமக்கல்லலில்லாவே.

### ஆறாயிரப்படி.

(உற்றேன்) எம்பெருமான், ஒருத்தரம்காணாமை "உம்முடைய திறத்தில் நான்செய்தசெயலெல்லாம நீர்சொன்னபடியே நிர்ஹேதுகமா கவேசெய்தேன், அதுநிற்க, இனிநான் செய்யவேண்டுவதென்" என்ன;

உன்திருவடிகளைப்பெற்றேன், பெறுகிறேன், உகந்துபணிசெய் துகொண் டுன்திருவடிகளைப்பெற்றேன், இன்னமுன் திருவடிகளிலடிமை செய்யு மிதுவே யெனக்குவேண்டுவதெந்தாய் என்று ஆழ்வார்சொல்ல; எம்பெருமானும், "அப்படியேசெய்கிறோம்" என்றருளிச்செய்ய; ஆழ் வாரும், திருப்பேர்நகரான் திருவடிகளைப்பற்றினார்க் கொருதுஃகமில்லையா காதேயென்கிறார் ... ... ... ... ... ... ... ... ... ... *

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், கைங்கர்யப்ரதிசம்பந்தியான வவன்திருவடிகளை யடிமைசெய் துபெற்றேன், யாவதாத்மபாவி யெனக்கிதுவேயமையுமென்கிறார்.

உற்றேன்-நிர்ஹேதுகமாக உன்றிருவடிகளைக் கிட்டினேன். அத்தாலே, உக ந்து-ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு. பணிசெய்து-வாசிகமானவடிமைசெய்து. உனபா தம்பெற்றேன்-பரமப்ராப்யபூதனான வுன்திருவடிகளைப்பெற்றேன். எந்தாய்-க்ருபா திகபந்துவானவனே. ஈதே-இவ்வடிமையே. இவ்வாத்மாவுக்கு, இன்னம் - உள்ளத னையும். வேண்டுவது - அபேக்ஷிதம். இதுண்டாகவே, கற்றார் - ஆசார்யமுகத்தாலே

ஜ்ஞாதவ்யங்களை அப்யஸித்தவர்களாய். மறை - ஶ்ருதமான வேதார்த்தங்களை. வாணர்கள் - நிர்வஹிக்க சமர்த்தரானவர்கள். வாழ் - பகவதநுபவத்தோடேவாழுகிற. திருப்பேராற்கு-திருப்பேரிலேவர்த்திக்கிறவுனக்கு. அற்றார்-அநந்யார்ஹமான. அடியார்தமக்கு-அடியார்தமக்கு. அல்லல் - அநுபவப்ரதிபந்தக துஃகங்கள். நில்லாவே-தன்னடையேநில்லாதிறே,

அற்றாருக்கடியாரென்றுமாம் ......................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இவர்கேட்ட விதுக்கொரு ஹேதுகாணாமையாலே நிருத்தரனாய், "உமக்குமேல்செய்யவேண்டுவதென்" என்ன ப்ரீதிபூர்வகமாக வடிமை செய்யப்பெற்றேன், இதுவே யின்னம்வேண்டுவதென்கிறார்.

"அவன்றானேசெய்தான்" என்னுமன்று அவனுக்கு வைஷம்யமும் நைர்க்ருண்யமும் சர்வமுக்தியும் ப்ரசங்கியாதோவென்னில்; இத்தலையில் ருசியை யபேக்ஷித்துச்செய்கையாலே அவனுக்கவைதட்டாது. அதுஹேதுவென்று ஈஶ்வரனுக்குத்தரமானாலோவென்னில்; அது உபாயமாகமாட்டாது. பலவ்யாப்தமானதிறே உபாயமாவது; இந்தருசி அதிகாரி ஸ்வரூபமாகையாலே தத்விசேஷணமாமித்தனை. உபாயம் சஹகாரிநிரபேக்ஷமாகையாலும், இந்தருசி யுபாயமாகமாட்டாது. இது உபாயமாகாமையாலே இவர்க்கில்லையென்னலாம், சர்வமுக்திப்ரசங்கபரிஹாரார்த்தமாக வவனுக்குண்டென்னவுமாம்.

(உற்றேன்) கெடுமரக்கலம் கரைசேர்ந்தாப்போலே கிட்டிக்கொடுநின்றேன். (உகந்தித்யாதி) ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு திருவாய்மொழிபாடி உன்திருவடிகளை யநுபவிக்கப்பெற்றேன். உகந்துபணிசெய்கை-சாதநமாய், மேல் சாத்யமாகச்சொல்லுகிறதன்று; இரண்டும் ஏககாலத்திலேயுள்ளதாகையாலே. (ஈதேயின்னம்வேண்டுவது) இதுதானே மாறிமாறி யாவதாத்மபாவியாய்ச்செல்லுகையிறே. புநராவ்ருத்தியின்றிக்கேயொழிகையாவது - மீளாதொழிகை. அப்ராப்தமாயிருக்கிறதோவென்னில் (எந்தாய்) இவ்வநுபவம் ஸ்வரூபப்ராப்தமென்கிறது. இத்தலைக்கு சேஷத்வமும் தேவர்க்கு சேஷித்வமுமிறே ஸ்வரூபம்.

இவரபேக்ஷித்தபோதே அவனும் "செய்கிறோம்" என்ன, ப்ரீதராயருளிச்செய்கிறார் (கற்றார்) ஓராசநத்தின்கீழேயிருந்து போக்கினவர்கள். (மறைவாணர்கள்வாழ்) வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள் அநுபவித்து வர்த்திக்கிறதேசம். (திருப்பேராற்கு) ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முகத்தைமாறி ஸ்வகதமாகச்சொல்லுகிறானென்னுதல், திருப்பேரானான வுனக்கென்னுதல். (அற்றாரடியார்) திருப்பேர்நகரானுக்கற்றாரான வடியாரென்னுதல், அவனுக் கற்றவர்களுக்கடியாரென்னுதல். (அல்லலில்லாவே) ஒருதுஃகங்களு மிவர்கள்பக்கல் நில்லாது... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (உற்றேனித்யாதி) "உற்றேன்" என்று தொடங்கி "இன்னம் வேண்டுவது" என்னுமளவும் கடாக்ஷித்து, அதுக்கநுகுணமாக ப்ரச்நோத்தரமுக த்தாலே சங்கதி (இவர்கேட்டவித்யாதி.)

கீழ்ப்பாட்டி லுக்தமான சங்காபரிஹாரங்களை ஸ்த்தூணாநிகநந்யாயத்தாலே த்ருடீகரித்தருளுகிறார் (அவன்றானேயித்யாதி) அது-அந்தருசி. மாட்டாதபடி யெப் படியென்ன (பலவ்யாப்தமித்யாதி) இந்தருசிக்கு உபாயகோட்யந்தர்ப்பாவமில்லை யாகில் பின்னையெதிலே யந்தர்ப்பூதமென்ன (இந்தருசியித்யாதி) பரிஹாரந்தரம் (உ பாயம் சஹகாரியித்யாதி) "ஆக (இது உபாயமாகையாலே)" என்று கூட்டுவது.

பணிசெய்கையாவது - வாசிகமானவடிமைசெய்கை; அதாவது - திருவாய் மொழிபாடுகை; இத்தையருளிச்செய்கிறார் (ப்ரீதித்யாதி) உகந்துபணிசெய்கைபா தம்பெறுகைக்கு சாதநமோவென்ன (உகந்துபணிசெய்கையித்யாதி) இரண்டும் பல மென்றபடி. இரண்டு மேககாலத்திலேயுள்ளதாகையாலேயென்றது-திருவாய்மொ ழிபாடுகையும் அவன்றிருவடிகளைப்பெறுகையும் இங்கேயிருக்கச்செய்தேயுள்ளதா கையாலே யென்றபடி.

"நவபுநராவர்த்ததே" (நசபுநராவர்த்ததே) என்கிறதேசத்திலே எ ல்லாரும்போக வாசைப்படாநிற்க, நீர் "ஈதேயின்னம்வேண்டுவது" என்பானென் னென்ன (இதுதானேயித்யாதி) "(செல்லுகையிறே) வேண்டுவது" என்று கூட் டிக்கொள்வது. இதுமாறிமாறிச்செல்லுகை யாவதாத்மபாவியாகக்கூடுமோ, அபுந ராவ்ருத்தியன்றோ வேண்டுவதென்ன (புநராவ்ருத்தியித்யாதி) மீளாதொழிகை-அ விச்சேதேநமாறிமாறிவருகையென்றபடி. மீளாதொழிகையிறே, அத்தை "ஈதேயி ன்னம்வேண்டுவது" என்கிறதென்றபடி.

உபபாதநம் (இத்தலைக்கித்யாதி.)

மேலுக்கெல்லாமவதாரிகை (இவரபேக்ஷித்தவித்யாதி) போக்கினவர்கள்- அப்யஸித்தவர்கள். ஆசார்யமுகத்தாலே ஜ்ஞாதவ்யங்களை அப்யஸித்தவர்களாய், வேதத்துக்கு நிர்வாஹகரானவர்கள் வாழுகிற திருப்பேரென்று சப்தார்த்தம். வா ணர்கள் - நிர்வாஹகர்கள். "எந்தாய்" என்ற சம்போதநத்துக்குச்சேர (உனக்கென் னுதலென்றது) அற்றாரான வடியாரென்னுதல், அற்றாக்கடியாரென்னுதல். அல்ல ல்-துஃகம்.... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# ப தி னொ ன் றா ம் பா ட் டு.

நில்லாவல்லனீள்வயல்சூழ்திருப்பேர்மே
னல்லார்பலர்வாழ்குருகூர்ச்சடகோபன்
சொல்லார்தமிழாயிரத்துள்ளிவைபத்தும்
வல்லார்தொண்டராள்வதுசூழ்பொன்விசும்பே.

## ஆறாயிரப்படி.

(நில்லாவல்லல்) "அவன்றிருவடிகளை யாஸ்ரயித்தார்க்கல்லல் நி ல்லாவே, இதுநிஸ்சிதம்" என்றுகொண்டு இத்தையே பின்னையு மநுபா

ஷித்து, திருப்பேரை ப்ரதிபாதித்த வித்திருவாய்மொழி வல்லாரிட்ட வழககாம் திருநாடென்கிறார் ... ... ... ... .. ... ... .. *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக ஸ்வாராஜ்ய ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

அல்லல்-துக்கத்துக்கு. நில்லா - வாஸஸ்த்தாநமல்லாததேஸமாய். நீள்வயல் சூழ் - பெரியபரப்பையுடைத்தான வயல்களாலேசூழப்பட்ட. திருப்பேர்மேல் - திருப்பேர்விஷயமாக. நல்லார் - விலக்ஷணபுருஷராஞர். பலர் - பலரும். வாழ்-திருவாய்மொழிகேட்டுவாழுகிற. குருகூர்ச்சடகோபன் - திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய. சொல்லார் - சொல்லாய்ச்சேர்ந்திருக்கிற. தமிழ் - தமிழான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவைபத்தும்வல்லார் - இவைபத்தையும் அப்யஸிக்கவல்லரான. தொண்டர் - பாகவதரானவர்கள். ஆள்வது - தாங்கள்நிர்வாஹகராய் நடத்துமது. சூழ் - அபரிச்சிந்நமாய்க்கொண்டு வ்யாப்தமாய். பொன் - தேஜோமயமாய். விசும்பு - பரமவ்யோம சப்தவாச்யமான பரமபதம்.

இது கலித்துறை... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லாரிட்டவழக்கு பரமபதமென்கிறார்.

(நில்லாவல்லல்) துக்கங்களானவை, "இது நமக்குதேசமன்று" என்று தாமேவிட்டுப்போம்.

( நீள்வயலித்யாதி ) பெருத்தவயல்சூழ்ந்திருந்துள்ள திருப்பேர் மேலேயாய்த்துச்சொல்லிற்று. (நல்லாரித்யாதி) விலக்ஷணர்பலரும் தம்மையநுபவித் தினியராயிருக்கும் திருநகரியை யுடையராயிருக்கு மாழ்வாரருளிச்செய்தது. [நல்லார்நவில்குருகூர்] "ஸவ-ஹாஹிமதஃ" (ஸர்வதாபிகதஸ்ஸத்பிः) (சொல்லாரித்யாதி) சொல்சேர்ந்த தமிழானவாயிரமென்னுதல்; "வாெ)ெயெவஃய-ஈ" (பாட்யேகேயேசமதுரம்) என்கிறபடியே, இனிமைக்கும் சொல்லேயமைந்த தமிழானவாயிரமென்னுதல். (இப்பத்தும்வல்லார்தொண்டர்) இத்தையப்யஸிக்கவல்லார், "செஞ்சொற்கவிகள்" என்கிறபடியே வாசிகமான வடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்கள். (ஆள்வதுசூழ்பொன்விசும்பே) நிரதிசயதேஜோரூபமான பரமபதத்தையாய்த்து ஆளுவது; இத்திருவாய்மொழி யப்யஸித்தவர்கள் சென்றால், "ஆண்மின்கள்வானகம்" என்றாய்த்து அங்குள்ளார் சொல்லுவது ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நில்லாவல்லலித்யாதி) "வல்லார்தொண்டர், ஆள்வதுசூழ்பொன்விசும்பே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியையித்யாதி.)

"நில்லாவல்லல்" என்றது - அநுவாதமாதல்; "இப்பத்தும் வல்லாரான தொண்டர்பக்கல் - அல்லல்நில்லாது - ஆள்வதுசூழ்பொன்விசும்பு" என்று இப்பாட்டுக்கு சேஷமாதல்.

திருநகரியிலே விலக்ஷணர் பலருண்டென்னுமதுக்கு ப்ரமாணம் (நல்லாரித்யாதி) நவிலுகை - வர்த்திக்கையும், சொல்லுகையும். திருவிருத்தம். உக்தார்த்தத்துக்கு சம்வாதம் (சர்வதேத்யாதி) "ஸர்வதோபிகதஸ்ஸத்பிஸ்ஸமுத்ர இவ" (ஸர்வதாபிகதஸ்ஸத்பிஸ்ஸமுத்ரஇவ) இத்யாதி, ஸங்க்ஷேபே.

"சொல்லார்" என்றதுக்கு - சொல்செறிந்தவென்னுதல்; ஆர்தல் - அமைதலாய், சொல்தானே யமைந்தவென்னுதலென்றர்த்தத்வயம். "பாட்யே கேயே ச மதுரம் ப்ரமாணைஸ்த்ரிபிரந்விதம் । ஜாதிபிஸ்ஸப்தபிர்யுக்தம் தந்த்ரீலயஸமந்விதம்" (பாட்யேகேயேசமதுரம்ப்ரமாணைஸ்த்ரிபிரந்விதம் । ஜாதிபிஸ்ஸப்தபிர்யுக்தம் தந்த்ரீலயஸமந்விதம்) இதிபாலகாண்டே.

"பொன் - சூழ் - விசும்பு" என்றந்வயிப்பது. தேஜஸ்ஸாலேசூழ்ந்த ப்ரமபதமென்றபடி. பொன் - தேஜஸ்ஸு. பலிதம் (இத்திருவாய்மொழியித்யாதி)

நீள்வயல்சூழென்றுதொடங்கி, இப்பத்தும்வல்லார் தொண்டர்பக்கல்-அல்லல்நில்லா, அவர்களாள்வது - பொன் - சூழ் - விசும்பே இத்யந்வய:. இத்தால்-இப்பத்தை யப்யஸித்தவர்களுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பலமாகச் சொல்லுகிறதென்றபடி ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

## ( திருமாலிருஞ்சோலைமலை. )

லக்ஷ்மீகாந்தத்வயோகாத், விபதி ஸகிதயா, திவ்யதேஶஸ்த்திதத்வாத்,
மோக்ஷோத்யோகாத், ததர்த்தம் க்ருதஶபததயா, ஸர்வதஸ்ஸந்நிதாநாத், ।
த்ருஷ்ட்யந்தஸ்ஸந்நிவாஸாத், உதிதவிதாநத, ஸ்வஸ்வஹாவப்ரகாஶா, த்வாதிகவா,
த்ராஷ்ட்ரீ த்ருஷ்ட்யயோந்நயந்நயிதஶ்ரீவதிஸ்வஹ்ருத்யமாயி ॥ (கககக)

(லக்ஷ்மீகாந்தத்வயோகாத்) திருமால்வந்து - பெரியபிராட்டியாருக்கு வல்லபனாகையாலும்; (விபதிஸகிதயா) காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டும் - ப்ரளயாபத்ஸகனாகையாலும்; ( திவ்யதேசஸ்த்திதத்வாத் ) கொடிக்கோபுரமாடங்கள் சூழ்திருப்பேரான்-கொடிகளாலே யலங்க்ருதங்களான கோபுரப்ராஸாதங்களாலே சூழப்பட்ட திருப்பேரிலே யெழுந்தருளியிருக்கையாலும்; (மோக்ஷோத்யோகாத்) சேண்விசும்புதருவானே - பரமபதத்தைத்தர வுத்யுக்தனாயிருக்கையாலும்; (ததர்த்தம்க்ருதசபததயா) வானேதருவானெனக்கா யென்னோடொட்டி - தந்நிமித்தமாக சபதம் பண்ணுமவனாகையாலும்; (ஸர்வதஸ்ஸந்நிதாநாத்) திருப்பேர்நகரானித்யாதி-திருப்பேர், திருமாலிருஞ்சோலை, ஆஸ்ரிதஹ்ருதயம், இதுகளிலே சந்நிஹிதனாயிருக்கையாலும்; (த்ருஷ்ட்யந்தஸ்ஸந்நிவாஸாத்) கண்ணுள்நின்றகலானே - அவர்களுடை

யகண்வட்டத்தில் நின்றும் போரமாட்டாமையாலும்; (அதிவிதரணத:) கருத்தின் கட்பெரியன் - அவர்களுக்கு வாஞ்சாதிகமாகத் தன்னையநுபவிக்கக்கொடுக்குமவனுகையாலும்; (ஸ்வஸ்வபாவப்ரகாஶாத்) இன்றென்னைப்பொருளாக்கியித்யாதி-இஸ்ஸம்சாரிசேதநனைத் தானநாதிகாலமநாதரித்து இன்றாதரிக்கைக்குத் தன்னுடைய ஸ்வாதந்த்ர்ய காருண்யங்களொழிய வேறுப்ரதாநகாரணமில்லையென்று தன் ஸ்வபாவத்தை ப்ரகாஶிப்பிக்குமவனுகையாலும்; (ஸ்வாமித்வாத்) ஈதேயின்னம் வேண்டுவதெந்தாய் - சர்வருக்கும் நிருபாதிகஸ்வாமியாகையாலும்; திருப்பேர்நகரெம்பெருமா னிச்சேதநவிஷயத்திலே ஸ்வேச்சையாலே தானே சந்துஷ்டனுகிறானென்று "திருமாலிருஞ்சோலைமலை" என்கிறதசகத்திலே ஆழ்வாராலே தெளிவிக்கப்பட்டதென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (கககூ)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

திருமால்தம்பால்விருப்பஞ்செய்கின்றநேர்கண்
டருமாயத்தன்றகல்விப்பானென் - பெருமானீ
யின்றென்பாற்செய்வானென்னென்னவிடாருற்றுநின்றான்
துன்னுபுகழ்மாறனைத்தான்சூழ்ந்து. (கூஅ)

(திருமால்தம்பால்விருப்பம்) இதில், இப்போதாதரிக்கிறதேவர் அநாத்யநாதரஹேதுசொல்லுமென்று மடிபிடித்துக்கேட்க; அவன் அதுக்கொன்றும்சொல்லாமல் நிருத்தரனுனபடியை யருளிச்செய்கிறவாழ்வார் ஸ்ரீஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; முதலிலே அத்வேஷத்தைப்பிறப்பித்து ஆபிமுக்யத்தையுண்டாக்கி ஆஶ்ரயணருசியைவிளைத்து தானேயுபாயமாய்த் தன்திருவடிகளில் ப்ரேமத்தையும் பரமபக்திபர்யந்தமாக முற்றுவித்து தன்னாலல்லது செல்லாதபடிபண்ணி நாம்சொன்னபடியே செய்வானுகச்சமைந்து இப்படிதலையாலே சுமவாநின்றதுக்கடியேதென்று அவனைக்கேட்க; அவன் நிருத்தரனாய்க் கவிழ்தலையிட்டுநிற்க; "நிர்ஹேதுகமாகாதே!" என்று ப்ரீதராய், தம்மையவ னங்கீகரித்தபடியையும், அங்கீகாரஹேதுவான வவன்க்ருபாதிகுணங்களையு மநுசந்தித்து, "இதொருநிர்ஹேதுக விஷயீகாரமிருந்தபடியே!" என்று வித்தராகிற * திருமாலிருஞ்சோலைமலையிலர்த்தத்தை "திருமால்தம்பால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(திருமால்தம்பால்விருப்பம்செய்கின்றநேர்கண்டு) "[illegible] வாஸா [illegible]" (அதிகம்புரவாஸாச்சமந்யேதவசதர்ஶநாத்) என்னும்படி ஸ்ரிய:பதியானவன் தம்முடையவிஷயத்திலே அத்யாதரம்பண்ணுகிறபடியைக்கண்டு. அதாவது - "திருமால்வந்தென்னெஞ்சநிறையப்புகுந்தான்" என்றும், "இன்றுவந்துபேரேனென்றென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், "திருப்

பேரானடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே " என்றும், " தெளிதாகியசேண்விசும்புதருவானே " என்றும், " வானேதருவானெனக்காயென்னோடொட்டி யூனேய் குரம்பையிதனுள்புகுந்து இன்றுதானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான் " என்றும், " இன்றுவந்திருப்பே னென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான் " என்றும், " உண்டுகளித்தேற்கு " என்றுதொடங்கி " கண்டுகளிப்பக்கண்ணுள்நின்றகலான் " என்றும், " கருத்தின்கட்பெரியன் " என்றும், " திண்ணமென்மனத்துப்புகுந்தான்செறிந்தின்றே " என்றும், இப்படி மேன்மேல னத்யாதரத்தைப்பண்ணினபடியென்கை; ஏவம்வித நிர்ஹேதுக வ்யாமோஹத்தை தர்ஸித்து. (அருமாயத்தன்றகல்விப்பானென்பெருமால் நீயின்றென்பால் செய்வானென்னென்ன) அன்றநாதிகாலம் துரத்யயமான ப்ரக்ருதியிலே யிட்டுவைத்தகற்றிவிடுவானென், இன்று நிர்ஹேதுகமாக நிரவதிக வ்யாமோஹத்தை, சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாய் நிரஸ்தஸமஸ்தஹேயனானநீ, அஜ்ஞனாய் அசக்தனாய் ஹேயஸம்ஸர்க்கார்ஹனாயிருக்கிற வென்விஷயத்தி லிப்படி செய்வானென்னென்றுகேட்க. " இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான் - அன்றென்னைப்புறம்போகப்புணர்த்ததென்செய்வான் - குன்றென்னத்திகழ்மாடங்கள் சூழ்திருப்பேரா- னென்றெனக்கருள்செய்யவுணர்த்தலுற்றேன்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி. இப்படி அநாத்யநாதரஹேதுசொல்லென்று மடியைப்பிடித்துக்கேட்க, அவனும் சிலஹேதுபரம்பரைகளை யிவருத்தரத்துக்கு ப்ரத்யுத்தரமாகச் சொல்லிக்கொடுபோர, இவர்தம் நாவீறுடைமையாலே அவனை நிருத்தரனாம்படிபண்ண (என்னவிடருற்றுநின்றான்) இப்படியிவரருளிச்செய்ய, மேல்போக்கடிகாணாமல் தறையைக்கீறிக் கவிழ்தலையிட்டு ஸ்தப்தனாய்நின்றான். இடராவது - அதிகோக்திசொல்லமாட்டாத ஆகுலம். (துன்னுபுகழ்மாறனைத்தான்சூழ்ந்து) "இதுநிர்ஹேதுகமாகாதே!" என்று அவன் விஷயீகாரத்தலே விக்ருதராய் அத்தாலேவந்த சம்ருத்தமான யஶஸ்ஸையுடையவாழ்வாரை, அந்தயஶஸ்ஸோபாதியாகத் தானும்சூழ்ந்து - இடருற்றுநின்றான்!. " சர்வஜ்ஞனும்நிருத்தரனாய்நிற்பதே! " என்று இவர்க்கீடுபாடாயிருக்கிறது... ... ... ... ... ... ... ... ... (கூஅ)

பத்தாம்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - கூஅ.—பாட்டு - ௬0அ0.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### சூழ்விசும்பு-ப்ரவேஸங்கள்.

### ஆறுயிரப்படி.

(சூழ்விசும்பு) இப்படி நிர்ஹேதுகமாக வெம்பெருமானேடே சம்ப்ஸ்லிஷ்டரான வாழ்வார், தாம் திருநாடேற வெழுந்தருளும்படியையும், தாமெழுந்தருளும்போது சர்வலோகங்களும் தம்மைக்கொண்டாடும்படியையும் திருவுள்ளத்தாலே ப்ரத்யக்ஷீகரித்து, அந்யாபதேசத்தாலே பேசுகிருர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிறுதியாக பகவத்விஷயமாகத் தமக்கநுபவப்ராவண்யரூபமான பரபக்திநடந்தபடியை யருளிச்செய்து, அநுபவத்தி லவ்விதரானவிவர்க்கு பரிபூர்ணநுபவத்தில் ப்ராவண்யாதிசயம்பிறக்கைக்குறுப்பாக விவனைக்கொண்டுபோ யநுபவிப்பிப்பதாகநினைத்து, அர்ச்சிராதிமார்க்கம்முதலாக ப்ராப்திபர்யந்தமான ப்ரயோஜநாம்சத்தை பாஜ்ஞாநவிஷயமாம்படி ப்ரகாசிப்பிக்கநினைத்த சர்வேஸ்வரனுடைய போக்யகுணபூர்த்தியையும், நிருபாதிக சேஷித்வத்தையும், அநந்யார்ஹதாபாதகத்வத்தையும, போக்யத்வபூர்த்தியையும், அதிக்கடியான ஸ்ரீய:பதித்வத்தையும், சேஷித்வசிஹ்நத்தையும், சமுத்ரசாயித்வாதிகளால்வந்த சர்வாதிகத்வத்தையும், ஆஸ்ரிதஸௌலப்யத்வத்தையும், பரமபதநிலயத்வத்தையும், சத்காரத்தையு மநுபவித்து, ஏவம்பூதனை சர்வேஸ்வரன், முக்தராய்ப்போகிற பாகவதர்க்கு கந்தவ்யமான அர்ச்சிராதிமார்க்கத்தையும், அங்குண்டான ஆதிவாஹிக சத்காரப்ரகாரங்களையும், தேசவிசேஷப்ராப்தியையும், நித்யசூரிபரிஷதந்தர்ப்பாவத்தையு மபரோக்ஷிப்பிக்க, அதிலே அத்யந்தஹ்ருஷ்டராய், தாமபரோக்ஷித்த க்ரமத்திலே முக்தராய்ப்போகிற பாகவதருடைய சத்காரப்ரகாரத்தை யருளிச்செய்கிருர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

### ஈடு.

பரமயோகிகளுக்குப் பிறக்கக்கடவதான பரபக்தி யிவர்க்குப்பிறந்து, தத்ப்ரகாரங்களை யித்திருவாய்மொழியளவும்வர வநுபவித்து, இனியிங்கிருந்தநுபவிக்குமதொன்றல்லாமையாலே "பரமபதத்தேறப்போ

கவேணும்'' என்று மநோரதிக்கிறவிவரை, தம்மிற்காட்டில் சடக்கெண க்கொடுபோகவேணும் என்று விரைகிற வீஸ்வரன்; அங்குத்தை யநுப வத்துக்கிடாம்படி மிகவும் விடாய்பிறக்கைக்காக, தன்னுடைய ஸ்வரூப ரூபகுணவிபூதிகளைக் கண்ணாலேகண்டாப்போலே விசதமாக ப்ரகாசிக் கும்படி பண்ணியருளினன். அதாவது - வேதாந்தங்களில் ப்ரசித்தமான வர்ச்சிராதிமார்க்கத்தையும், சரீரவிஸ்லேஷ சமயத்தில்வரும் க்லேசமெ ல்லாமாறும்படி தான்வந்து முகங்காட்டும்படியையும், மார்க்கஸ்த்தரான புருஷர்களுடைய சத்காரங்களையும், அம்மார்க்கத்தாலேபோய்ப் புகக்க டவ பரமபதத்தையும், நித்யசூரிகள்வந் தாதரிக்கும்படியையும், பிராட் டிமாரும் ஸ்ரீவைகுண்டநாதனும் எதிரேவந்தாதரிக்கும்படியையும், நித் யசூரிகள்சேவிக்கப் பிராட்டிமாரோடே வீற்றிருந்தருளுகிறபடியையும், பரமப்ராப்யரான நித்யசூரிகள்நடுவே தாமாநந்தநிர்ப்பரராயிருக்கும்படி யையும்காட்டி யருளக்கண்டு ப்ரீதராய், அத்தை அந்யாபதேசத்தாலே பேசி யநுபவிக்கிறார். தமக்கவன்பண்ணிக்கொடுத்தபேற்றை வைஷ்ண வர்களெல்லாரும் பெற்றார்களாகப்பேசினவிது - அந்யாபதேசமாவது; அதுதனக்கு ப்ரயோஜநம் - இங்குள்ளார் " நமக்குமாழ்வார்பேறுதப்பா து " என்றிருக்கைக்காக... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

சூழ்விசும்புப்ரவேசே, அடியேதொடங்கி யித்திருவாய்மொழியளவு மிவர் க்குண்டான வாகாரங்கள் பரபக்த்யவஸ்த்தையில் விளையுமவையென்றருளிச்செய் யாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழியிலிவர்க்குண்டானவாகாரம் பரஜ்ஞாநாவ ஸ்த்தையில் விளையுமதென் றருளிச்செய்கிறார் (பரமயோகிகளுக்கித்யாதி) உக்தத் தைவிவரிக்கிறார் (அதாவதித்யாதி) அதாவதென்றது - விசதமாக ப்ரகாசிக்கும்படி பண்ணியருளுகையாவ தென்றபடி. வேதாந்தங்களில் ப்ரசித்தமானவென்றது - "தேர்ச்சிஷமேவாபிஸம்பவந்தி" (தேர்ச்சிஷமேவாபிஸம்பவந்தி) இத்யாதி யைப்பற்ற. "தேவயாநபதாஸ்ஸர்வேமுக்திமார்க்காபிலாஷிணः" (தேவ யாநபதாஸ்ஸர்வேமுக்திமார்க்காபிலாஷிணः) "ஸலக்ருஷ்ணகதிஹ்யேதே" (ஸலக்ருஷ்ணகதிஹ்யேதே) "அர்ச்சிராதிநாதத்ப்ரதிதே:" (அர்ச்சிராதி நாதத்ப்ரதிதே:) "முக்தோர்ச்சிர்த்திந" (முக்தோர்ச்சிர்த்திந) இத்யாதிகளு மிங்கேயநுசந்தேயம். "ஹார்த்தாநுக்ருஹீத:" (ஹார்த்சாநுக்ருஹீத:) என்ற த்தைப்பற்ற (தான்வந்துமுகங்காட்டும்படியையுமென்றது) "தொழுதனருலகர்கள்" என்றுதொடங்கி "வாசலில்வானவர்-எமதிடம்புகுதுக" என்னுமளவும் கடாக்ஷித்து (மார்க்கஸ்த்தரானவித்யாதி) "மாதவன்வைகுந்தம்புகவே" என்றத்தைப்பற்ற (அ ம்மார்க்கத்தாலேயித்யாதி) "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என் றத்தைக்கடாக்ஷித்து (நித்யசூரிகளித்யாதி.) "வந்தவரெதிர்கொள்ள" என்றத்தை ப்பற்ற (பிராட்டிமாருமித்யாதி) "மாமணிமண்டபத்தந்தமில்பேரின்பத்தடியரோ டிருந்தமை" என்றத்தைக்கடாக்ஷித்து (நித்யசூரிகள்சேவிக்கவித்யாதியும், பரமப் ராப்யரானவித்யாதியும்.)

அந்யாபதேசமாவதேதென்ன (தமக்கவனித்யாதி) "ஆழியான்றமர்" "மாதவன்றமர்" இத்யாதியாலே - ஸ்ரீவைஷ்ணவர்களைச்சொல்லுகையாலே, அந்யாபதேசமென்றபடி. அந்யாபதேசத்தாலே சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன (அதுதனக்கித்யாதி.) ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# ஒன்பதாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

சூழ்விசும்பணிமுகிற்றூரியமுழக்கின
வாழ்கடலலைதிரைகையெடுத்தாடின
வேழ்பொழிலும்வளமேந்தியவென்னப்பன்
வாழ்புகழ்நாரணன்றமரைக்கண்டுகந்தே.

### ஆறாயிரப்படி.

திருநாடேறப்போகையிலே ப்ரவ்ருத்தரான ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டுகந்து, அசேதநமான மேகங்களுங்கூட, இவர்கள் போகக்கடவிய வாகாசத்தையெல்லாம் பூஷித்துக்கொண்டுகின்று தூர்யகோஷத்தைப்பண்ணின, கடல்களாகிறவை திரைகளாகிற கையெடுத்தாடின, இப்படி சர்வலோகங்களும் மங்களமான செயல்களைச்செய்தனவென்கிறார் ... *

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அர்ச்சிராதிமார்க்கசமநந்திலொருப்பட்டவர்களாய் போக்யகுணபூர்ணனான சர்வேஶ்வரனுடைய சேஷபூதரான பாகவதரைக்கண்டு சராசராத்மகமான ஜகத்துக்குண்டான ப்ரீதிவிகாரத்தை யருளிச்செய்கிறார்.

என்னப்பன் - எனக்கஸாதாரணபந்துவாய். வாழ்புகழ் - ஆநந்தாவஹமான குணப்ரதையையுடைய. நாரணன்றமரை - நாராயணனுக் கஸாதாரணபந்துக்களான சேஷபூதரை. கண்டுகந்து - கண்டுப்ரியப்பட்டு. சூழ்விசும்பு - சர்வப்ரதேசத்திலும்சூழ்ந்த வாகாசத்திலே. அணிமுகில் - திரண்டுதோன்றினமேகங்களானவை. தூரியம்முழக்கின - தூர்யகோஷத்தைப்பண்ணிற்றின. ஆழ்கடல் - அகாதமானகடல்களானவை. அலைதிரை - அலைந்துவருகிறதிரையை. கையெடுத்தாடின - கையாகவெடுத்து ஆடிற்றின. ஏழ்பொழிலும் - சப்தத்வீபங்களும். வளம் - உபஹாரரூபமான நல்லவஸ்துக்களை. ஏந்திய - ஏந்திற்றின.

வளமென்று - புதுக்கணிப்பாகவுமாம்... ... ... ... ... ... ... *

### ஈடு - முதற்பாட்டு.

பரமபதத்துக்குப்போக உபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்ட ப்ரீத்யதிசயத்தாலே ஸ்த்தாவரஜங்கமங்களுக்குண்டான விக்ருதியையருளிச்செய்கிறார்.

(சூழ்விசும்பு) பூமியைச்சூழும்படி யிடமுடைத்தான வாகாசத்திலே. (அணிமுகில்) ஆபரணமான முகிலென்னுதல், ஆகாசப்பரப்படங்கலு மணியப்பட்ட முகிலென்னுதல். (தூரியமுழக்கின) தூர்யகோஷத்தைப் பண்ணிற்றின. (சூழ்விசும்பித்யாதி) காந்தப்பரொப்பித்துநின்று பெரியமண்டபங்களிலேநின்று கொட்டுமாபோலேகாணு மிவையிருக்கிறது. [ஊ௱ஂஜமா௺-௺௵ாஃ] [மந்தமஜகர்ஜுர்ஜலதா:] இவன்போக்குக்கடியான வவன்வரவிலேபிறந்த விக்ருதியிறேயிது; இவன்றன் போகப்புக்கால் சொல்லவேண்டாவிறே. அவற்றுக் கபிமாநிகளான இந்த்ரவருணபர்ஜந்யங்களைச்சொல்லிற்றாகவுமாம். (ஆழ்கடல்) எல்லாவற்றையும் தன்னுள்ளே யடக்கவற்றான அளவுடையகடல், தைர்யபங்கம்பிறந்து அலையாநின்றுள்ள திரையாகிறகையையெடுத்துக் கூத்தாடிற்றின. (ஏழ்பொழிலும்வளமேந்திய) சப்தத்வீபங்களும் புதுக்கணித்தன. உபஹாரங்களை தரித்தனவென்றுமாம். இதெல்லா மாரைக்கண்டென்னில் (என்னப்பன்) எனக்குப்பரமபந்துவானவன். இவர்களோடுநிருபாதிகசம்பந்த மவனுக்குண்டானால், அவனோடு சம்பந்தமுள்ளவை யெல்லாவற்றுக்கு மாதரிக்கவேண்டியிருக்குமிறே; ராஜபுத்ரன்போகாநின்றால் ராஜசம்பந்தமுடையார்க்கெல்லா மங்கீகரிக்கவேண்டுமாபோலே. (வாழ்புகழ்நாரணன்) ஆஶ்ரிதர்வாழும்படிபண்ணவற்றான கல்யாணகுணங்களையுடைய சர்வேஶ்வரன். அவன்றன்னைக்கண்டோவென்னில்; (அவன்றமரைக்கண்டு) அவன்கேட்குமென்னும் ப்ரீதியாலேயோவென்னில் (உகந்தே) ப்ரீதிப்ரேரிதராய்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (சூழ்விசும்பித்யாதி) "வளமேந்திய" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (பரமபதத்துக்கித்யாதி) ஸ்த்தாவரம்-கடல். ஜங்கமம்-முகில்.

விசும்பு - விசும்பிலே. ஆபரணமான - விசும்புக்காபரணமானவென்றபடி. அணியப்பட்ட - வ்யாபிக்கப்பட்ட. "அணி" என்று - ஒப்பனையாக மூன்றாமர்த்தம். ஆகாசத்திலே அலங்க்ருதமான மேகங்கள் கர்ஜிக்கிறபோதெப்படியிருக்கிறதென்ன (காந்தப்பரித்யாதி) காந்தப்பர் - கந்தர்வர்கள். ஒருசேதநன் போம்போதிதெல்லாம் கூடுமோவென்ன (மந்தமித்யாதி) "[Grantha quotation] ( மத்யராத்ரேகிலாதாரேஜாயமாநேஜநார்த்தநே । மந்தம்ஜகர்ஜுர்ஜலதா:புஷ்பவ்ருஷ்டி முசோத்விஜ) இதிபஞ்சமேம்ஶே த்ருதீயே. சேதநன்போம்போ திதெல்லாம் கூடுமென்னுமத்தை யிசைவிக்கிறார் (இவன்போக்குக்கித்யாதி)

பாட்டுக்கவதாரிகாந்தரம் (அவற்றுக்கித்யாதி) (விக்ருதியையருளிச்செய்கிறார்) என்றவாக்யாநந்தரம், இவ்வாக்யத்தை யநுசந்திப்பது. அவற்றுக்கென்றது-கடலுக்கும் முகிலுக்குமென்றபடி. கடலுக்கபிமாநி-வருணன். "முகில்" என்றத்தாலே - இந்த்ரபர்ஜந்யர்களைச்சொல்லுகிறது.

"வளம்" என்றது - உபஹாரமும் சம்பத்தையும்சொல்லும். த்விதீயார்த்தத்துக்கு, தத்ரஸ்த்தரைச்சொல்லுகிறது.

இத்தால்பாவம் (இவர்களோடித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (ராஜபுத்ரவித்யாதி.)

என்னப்பனென்றுதொடங்கி, உகந்து - சூழ்விசும்பணிமுகிலித்யாரப்ய, வளமேந்தியவித்யந்வயঃ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

# இரண்டாம்பாட்டு.

நாரணன்றமரைக்கண்டுகந்துநன்னீர்முகில்
பூரணபொற்குடம்பூரித்ததுயர்விண்ணி
னீரணிகடல்கணின்றார்த்தனநெடுவரைத்
தோரணநிரைத்தெங்குந்தொழுதனருலகே,

## ஆறாயிரப்படி.

(நாரணன்) நாரணன்றமரைக்கண்டு மேகங்களுகந்தன, ஆகாசசரரானதேவாதிகள் ஆகாசத்திலே பூர்ணகும்பங்களைப் பூரித்தார்கள், நீரணிகடல்கள் நின்றார்த்தன, நெடுவரைபோலேயிருந்த தோரணம்நிரைத்தெங்கும் தொழுதனருலகர்களென்கிறார் ...... ........... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிருபாதிகசேஷியான நாராயணனுக்கு சேஷபூதரானவர்களைக் கண்டு லோகத்தார் சத்கரித்தப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

நாரணன்றமரைக்கண்டு - நிருபாதிகசேஷியான நாராயணனுக்கு சேஷபூதரானவர்களைக்கண்டு. உகந்து-உகப்பையுடைத்தாய். நல்நீர்முகில்-சுத்தமானஜலத்தாலே பூர்ணமானமேகமானது. உயர் - த்வாரவேதிகைகளிற்போலே உயர்ந்த. விண்ணில் - ஆகாசத்திலே. பூரணம்-பூர்ணமான. பொற்குடம் - பொற்குடங்களாக. பூரித்தது - நிறைத்தது. நீரணி - நீரைவஹிக்கிற. கடல்கள்-கடல்களானவை, நின்று-ஒருபடிப்பட்டுநின்று. ஆர்த்தன - கோஷித்தன. நெடுவரை - நெடுவரைகளாகிற. தோரணம்நிரைத்து - தோரணங்களைநிரைத்து. உலகு - உலகிலுள்ளார். எங்கும், தொழுதனர் - தொழுதனர்.

முகிலென்கிறவொருமை - ஜாதிபரம். இவ்விரண்டுபாட்டாலும் - அந்தரிக்ஷபர்யந்தமான பூலோகமானது உகந்தாதரித்தபடியை ப்ரதர்ஸிப்பித்தாராய்த்து. உலகமென்று - லோகப்ரதாகரை லக்ஷிக்கிறது... ... ... ... ... ... ... *

## ஈடு - இரண்டாம்பாட்டு.

மேலுண்டான லோகங்கள்பண்ணின சத்காரங்களை யருளிச்செய்கிறார்.

( நாரணனித்யாதி ) நிருபாதிகசேஷியானவனுடையாரைக்கண்டு, நல்லநீரையுடைத்தான மேகங்களானவை, உகப்பாலே, உயர்ந்தவாகாச

த்திலே பூர்ணகும்பங்களாகச்சமைக்கப்பட்டன. முற்படக்கண்டுகொந்தன, பின்பு அவைதாமே பூர்ணகும்பங்களாய்த்தினவென்கை. "ஒருக்கால் தூர்யகோஷம்பண்ணினோமிறே" என்றிருக்கிறனவில்லை. ஆகாசசரரான தேவர்களாலே ஆகாசமெல்லாம் பூர்ணகும்பம் வைக்கப்பட்டதென்றுமாம். (நீரித்யாதி) நீராலே யணியப்பட்டகடல்கள், "ஒருக்காலாடினோம்" என்றிராதே, ஹர்ஷத்தாலே நிரந்தரமாகவார்த்துக்கொண்டன. (நெடுவரையித்யாதி) அவ்வோலோகங்களிலுள்ளார், நெடியவரைபோலேயிருந்துள்ள தோரணங்களைநட்டுத் தாங்களும் தொழுதார்கள். * உலகமென்பதுயர்ந்தோரையிறே. அங்குள்ளாரைச்சொன்னபடி. "஛த்ர சாமரவாணிஸ்து" (சத்ரசாமரபாணிஸ்து) என்கிறபடியே ஹர்ஷத்தாலேயெல்லாவடிமைகளும் செய்யாநின்றூர்கள் ................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (நாரணனித்யாதி) "நெடுவரைத்தோரணம் நிரைத்தெங்கும்தொழுதனருலகே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை(மேலுண்டானவித்யாதி)

"நன்னீர்முகில்-உகந்து-உயர்விண்ணில்-பூரணபொற்குடம் பூரித்தது" என்றந்வயித்தர்த்தம் (நல்லநீரையித்யாதி) சமைக்கப்பட்டன - சமைந்தனவென்றபடி. "உகந்து" என்றதுக்கர்த்தாந்தரம் (முற்படவித்யாதி) முன்பு தூர்யகோஷம்பண்ணினதுபோராதோவென்ன (ஒருக்காலித்யாதி) "பூரணபொற்குடம்பூரித்தது" என்றதுக்கர்த்தாந்தரம் (ஆகாசசரரானவித்யாதி) ஆகாசசாரிகளுகந்து பூர்ணகும்பங்களாகப்பண்ணினூர்களென்றபடி. பூரித்தது-நிறைத்தது. பூரணபொற்குடம்-பூர்ணகும்பங்களாகவென்றபடி.

அணியப்பட்ட-செறியப்பட்ட. "நின்று" என்றதுக்கர்த்தம் (நிரந்தரமாகவென்று.)

"தொழுதனர்" என்றதுக்குச்சேர, உலகர்கள் என்னவேண்டாவோவென்ன (உலகமென்பதித்யாதி) உயர்ந்தோரை - உத்க்ருஷ்டரை. உயர்ந்தோரன்றிக்கேதத்ரஸ்த்தரெல்லாரையும் சொல்லவுமாமென்கிறூர் (அங்குள்ளாரைச் சொன்னபடியென்று) கீழ்வாக்யவிவரணமாய், ஏகார்த்தமாதல். "தோரணம்நிரைத்து, தொழுதனர்" என்றபதத்வயத்துக்கும்பாவம் (சத்ரேத்யாதி) "஛த்ரசாமரவாணிஸ்து லக்ஷ்மணோநுஜகாமஹ । ஜநோபப்ராதரம்ப்ராதாரதமாஸ்த்தாயப்ருஷ்ட்டதঃ" (சத்ரசாமரபாணிஸ்துலக்ஷ்மணோநுஜகாமஹ। ஜநகோபப்ராதரம்ப்ராதாரதமாஸ்த்தாயப்ருஷ்ட்டதঃ) இத்யயோத்யாகாண்டே... ... ... ... ... ...*

---

## மூன்றாம்பாட்டு.

தொழுதனருலகர்கடூபநன்மலர்மழை
பொழிவனர்பூமியன்றளந்தவன்றமர்முன்னே
யெழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள்
வழியிதுவைகுந்தர்க்கென்றுவந்தெதிரே.

## ஆறாயிரப்படி.

(தொழுதனருலகர்கள்) பூமியன்றளந்தவன்றமர்முன்னே தூபந ன்மலர்மழைபொழிவனர், ஸ்ரீவைகுண்டத்தேறப்போவார்க்கு வழியிது வென்று எதிரோவந்து "இங்ஙனேயெழுந்தருளவொண்ணாதோ" என்று இருமருங்கும் முனிவர்கள் நின்றிசைத்தனரென்கிறார் ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்யார்ஹதாபாதகனான த்ரிவிக்ரமனுக்கு சேஷபூதரானவர்க ள் சந்நிதியிலே ஆதிவாஹிகலோகத்திலுள்ளார் சத்கரித்த ப்ரகாரத்தை யருளிச் செய்கிறார்.

அன்று - மஹாபலி " என்னது " என்றபிமாநித்தவன்று. பூமி அளந்தவன்- பூமியை யநந்யார்ஹமாம்படி யளந்தவனுடைய. தமர் - சேஷபூதருடைய. முன் னே - சந்நிதியிலே. தூபம்-தூபபூர்வகமாக. நல்மலர்மழை - நன்றான புஷ்பவர்ஷத் தை. பொழிவனர் - பொழிவாராய்க்கொண்டு. உலகர்கள் - அவ்வோலோகங்களி லுள்ளார். தொழுதனர் - தங்கள்சேஷத்வாநுரூபமாக அஞ்சலிபந்தம்பண்ணினார்க ள். முனிவர்கள் - அந்தலோகங்களில் வாங்நியதியுடையரான மூனிவரானவர்கள். அந்நியதியைத்தவிர்ந்து, வைகுந்தர்க்கு - ஸ்ரீவைகுண்டத்துக்குப்போமவர்களுக்கு. வழி-வழி. இதுவென்று-இதுவென்றுசொல்லி. எதிரே வந்து - எதிரோவந்து. எழுமி ன் - "எழுந்தருளலாகாதோ". என்று - என்று. இருமருங்கு - இரண்டுபக்கத்திலும் நின்று. இசைத்தனர்-சாதரமாகச்சொன்னார்கள்... ... ... ... ... ... ...*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ஆதிவாஹிகலோகங்களிலுள்ளாரெதிரோவந்து புஷ்பவ்ருஷ்டியை ப்பண்ணிக்கொண்டாடுகிறபடியை யருளிச்செய்கிறார்.

(தொழுதனருலகர்கள்) ஆதிவாஹிகலோகங்களிலுள்ளார், கைப டைத்தப்ரயோஜநம் பெற்றோம்" என்றுதொழுதார்கள். தூபத்தையும் நல்லமலர்மழையையும் ப்ரயோகித்துத் தொழாநின்றார்கள். (பூமியன்ற ளந்தவன்றமர்முன்னே) ஸ்ரீவாமநனாய்த் திருவுலகளந்தருளின செயலுக் குத்தோற்றடிமைபுக்கவர்கள் என்றாய்த்து அவர்களாதரிக்கிறது. "மூவ டிமண்கொண்டளந்தமன்னன் சரிதைக்கேமாலாகிப்பொன்பயந்தேன்" என்னுமவர்போல்வாருண்டே. அவன் திருவுலகளந்தருளின நினைவை சப்ரயோஜநமாக்கினவர்களென்றாய்த்து அவர்களாதரிக்கிறது.

(எழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள்) "இங்கேயெழு ந்தருளவேணும்" என்று இரண்டருகும்நின்று சொன்னார்கள். முனிவர் களென்றது - வாங்நியமம் தவிர்ந்தமைக்குசூசகம்; மௌநத்துக்குவிஷய ம் புறம்பேயிறே என்றிருந்தார்கள். (வழியிதுவைகுந்தர்க்கென்றுவந்தெ திரே) பரமபதத்துக்குப்போவார்க்கு வழியிதுவென்று எதிரோவந்துசொ ன்னார்கள். "ஜமதஸ்ராஷ்வெதெ" ( ஜகதப்ஸராப்வதே ) என்று-விவக்ஷிதா

டையப்போகக்கடவதாய்க்கிடக்கிறவழி, இன்றிதுண்டாகிறதன்றே. "பாகவதவிஷயத்தில் கிஞ்சித்கரித்து நம்சத்தையுண்டாகவேணும்" என்று எதிரோதந்தாமுடைய வெல்லைகளைக்கடந்து வந்தாதரித்தார்கள். (வைகுந்தர்க்கு) தேசாந்தரகதனைராஜா ஸ்வதேசத்திலேபுகுமாபோலே, அங்குநின்றும் பிறிகதிர்ப்பட்டுப்போந்தாராயிருக்கிறபடி.

(பூமியன்றளந்தவன்றமர்முன்னே - தூபநன்மலர்மழைபொழிவனராய்க்கொண்டு-முனிவரான-உலகர்கள்-தொழுதனர்; வைகுந்தர்க்கு-வழியிது-என்று-எதிரே-வந்து-எழுமினென்றிருமருங்கிசைத்தனர்......*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (தொழுதனரித்யாதி) "உலகர்கள்" என்றுதொடங்கி "இசைத்தனர்" என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை (ஆதிவாஹிகேத்யாதி.)

புநரநுபாஷணத்துக்குபாவம் (ஆதிவாஹிகேத்யாதி.) தூபதையும் நன்மலர்மழையையும் பொழிவனராய்க்கொண்டு தொழுதனரென்றபடி. கீழையும்கடாக்ஷித்து "பூமியன்றளந்தவன்றமர்" என்றதுக்குபாவம் (ஸ்ரீவாமநனித்யாதி) இச்செயலுக்கப்படி தோற்றிருப்பாருண்டோவென்ன (மூவடியித்யாதி) மாலாகி-வ்யாமுக்தையாய். பொன்பயந்தேன் - விவர்ணையானேன். திருமொழி, "முன்னம்குறளுருவாய்" இத்யாதி. பலிதம் (அவன்திருவுலகித்யாதி) இச்செயலுக்குத்தோற்று ஆரேனுமடிமைபுக் குஜ்ஜீவிப்பர்களோவென்னும் நினைவாலேயாய்த்தவன்திருவுலகளந்தருளிற்று; இவர்களப்படிசெய்தா லவன்நினைவு சப்ரயோஜநமாமென்றபடி.

இசைக்கை - சொல்லுகை. "முனிவர்கள்" என்றுவிசேஷித்து, "இசைத்தனர்" என்றதுக்குபாவம் (முனிவர்களென்றதித்யாதி) முனிவரானால் வாங்நியமம் தவிரலாமோவென்ன (மௌநத்துக்கித்யாதி) "[Grantha text] ” (ஜபமத்யேகுருர்வாபிவைஷ்ணவோயஸ்ஸமாகத꞉ । ஸம்பாஷணதிபூஜாந்தம் தஸ்யக்ருத்வாநுமாந்யச ) என்னக்கடவதிறே.

வைகுந்தர்க்கு - வைகுந்தம்புகுவார்க்கு. ப்ரஸித்தமானமார்க்கத்தை யிவர்கள்சொல்லுகிறதென்னென்ன (ஜகதஇத்யாதி) "[Grantha text]" (ஶுக்லக்ருஷ்ணகதீஹ்யேதேஜகதஶ்ஶாஶ்வதேமதே । ஏகயாயாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததேபுந꞉) இதி ஸ்ரீபகவத்கீதாயாமஷ்டமே. கீழே "வைகுந்தர்க்கு" என்றதுக்கு - வைகுந்தம்போவார்க்கு என்றருளிச்செய்து, இங்கே வைகுந்தத்துள்ளவர்களென்று விவக்ஷித்து, இங்குநின்றும்போகிறவர்களை யிங்ஙன்சொல்லுகிறதென்னென்ன (தேசாந்தரேத்யாதி.)

பூமியன்றளந்தவன்றமர்முன்னே - தூபநன்மலர்மழைபொழிவனராய்க்கொண்டு - முனிவரான - உலகர்கள் - தொழுதனர், வைகுந்தர்க்கு - வழியிது - என்று - எதிரே - வந்து - எழுமினென்றிருமருங்கிசைத்தனர் இத்யந்வய꞉..............*

# நான்காம்பாட்டு.

எதிரெதிரிமையவரிருப்பிடம்வகுத்தனர்
கதிரவரவரவர்கைநிரைகாட்டின
ரதிர்குரன்முரசங்களலைகடன்முழக்கொத்த
மதுவிரிதுழாய்முடிமாதவன்றமர்க்கே.

## ஆறாயிரப்படி.

(எதிரெதிர்) மதுவிரிதுழாய்முடிமாதவன்றமர்க்கு, "இவர்களொருக்காலிங்கேபர்யவஸிக்கப்பெறுவதுகாண்" என்னுமாசையாலே, இமையவரெதிரெதி ரிருப்பிடம்வகுத்தனர், அர்ச்சிராத்யாதிவாஹிககணங்கள், "பார்த்தருளீர், பார்த்தருளீர்" என்றென்று கைநிரைகாட்டினர், கடலிரைத்தாப்போலே முரவபணவாதிவாத்யங்கள் சர்வலோகங்களு மபிபூரிதமாம்படி முழக்கப்பட்டனவென்கிறார்... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யதாபூர்ணனான ஸ்ரீயஃபதியினுடைய சேஷபூதரைக்கண்டு தேவலோகத்திலுள்ளார் சத்கரித்தபடியை யருளிச்செய்கிறார்.

மதுவிரி - மதுவைவிகஸிக்கிற. துழாய்முடி - திருத்துழாயைத் திருமுடியிலேயுடைய. மாதவன்றமர்க்கு - ஸ்ரீயஃபதிக்கு சேஷபூதரானவர்களுக்கு. இமையவர் - அநிமிஷராய்க்கொண்டு, தேவர்கள். எதிரெதிர் - இவர்கள் போகிறவழிக்குமுன்னே. இருப்பிடம் - வாஸஸ்த்தாநமான உபகார்யைகளை. வகுத்தனர்-சமைத்தார்கள். கதிரவர் - த்வாதசாதித்யர்களும். அவரவர்-தந்தாமடைவிலே. "ரஶ்மிபிரூர்த்வமாக்ரமதே" (ரஶ்மிபிரூர்த்வமாக்ரமதே) என்கிறபடியே, கைநிரைகாட்டினர் - கிரணங்களாகிறகைகளை நிரையாகக்கொடுத்தார்கள். முரசங்கள் - அவர்கள் ப்ரவர்த்திப்பித்தமுரசங்கள். அதிர்குரல் - அதிருகிறகுரலானவை. அலைகடல்-அலைகிறகடலின். முழக்கொத்த - முழக்கொத்தன... .. ... ... ... ... ... *

## ஈடு - நான்காம்பாட்டு.

மேலில் லோகங்களில் தேவர்கள், இவர்கள்போகிறவழிகளிலே தங்குகைக்குத் தோப்புகள் சமைத்தும் வாத்யாதிகோஷங்களைப்பண்ணியும் கொண்டாடுகிறபடியை யருளிச்செய்கிறார்.

(எதிரெதிரித்யாதி) பார்த்தபார்த்தவிடமெங்கும், "இவர்களிங்கேதங்கிப்போவர்களோ, இங்கேதங்கிப்போவர்களோ" என்னும்நசையாலே, தேவர்கள் தோப்புச்சமைத்தார்கள். இமையவரென்று-ஸ்வபாவகதநமன்று, தோப்புச்சமைக்கையிலுண்டான த்வரையாலே கண்விழித்திருக்கிறபடி; இளையபெருமாள் அடிமைசெய்கைக்குறுப்பாக வுறங்காதிருந்தாப்போலே. இவர்களங்கே புக்குத்தங்குகிறார்களன்றிறே, தந்தாம் ஸ்வரூபலாபத்துக்குக்கிஞ்சித்கரிக்கிறபடியிறே; ராஜாக்களொருக்கால்

கண்டுசிரித்து "அழகிது" என்றுபோகைக்காக மானுவிசமைப்பாரைப் போலே. (கதிரித்யாதி) ஆதித்யர்கள், நிலைவிளக்குப்போலே "இங்ஙனே யெழுந்தருள, இங்ஙனேயெழுந்தருள, பார்த்தருள, பார்த்தருள" என்று கைகளைநிரையே காட்டினார்கள். அர்ச்சிராதிகளான ஆதிவாஹிக கணங்களாகவுமாம். ((கதிரவர்) தேஜோவிசிஷ்டர்.) (அதிரித்யாதி) அங்கேகால்தாழ்வர்களென்று, அதுகேளாதபடி, அதிராநின்றுள்ள த்வநியையுடையமுரசங்கள், அலையையுடைத்தானகடல்போலே முழங்கிற்றின; அன்றியே, இங்கேதங்குகையிலுண்டான வாதராதிசயந்தோற்ற வாத்ய கோஷங்களைப்பண்ணினார்களென்றுமாம். (மதுவிரியித்யாதி) கொட்டோசையாலும், ஆள்களெதிரேசென்று சொல்லுகையாலும், சென்றவிவர்களுக்கொப்பித்தபடியே கொடுக்கைக்காகப் பிராட்டியோடேகூட அழித்தழித்தொப்பிக்கிறபடி. (மாதவன்றமர்க்கே) "பிராட்டிபுருஷகாரமாகப் பற்றினவர்கள் பிராட்டிமுன்னாக வடிமைசெய்கைக்குவாராநின்றார்கள்" என்று ஒப்பிக்கிறபடி. ஸ்ரிய:பதியினுடைய வொப்பனையழகிலே யகப்பட்டு அடிமைபுக்கவர்களுக்கென்னுதல்.)

(எதிரொதிரித்யாதி) இங்கு "வைஷ்ணவர்கள்" என்றதுவே ஹேதுவாகப்பங்குபெறாதே திரியுண்ட வைஷ்ணவர்களை அங்குள்ளாரெதிர்கொண்டு இருப்பிடங்கள் கொடுக்கப்படுகிறபடி!. மிளகாழ்வான் படைவீட்டிலே அகரத்துக்குச்செல்ல, "நீ ஆந்தராளிகன், உனக்குப்பங்கில்லை" என்ன, "நன்மையில் குறையுண்டாய்ச்சொல்லுகிறிகோளோ, அன்றோ" என்ன, "நன்மையில் குறையில்லை, இதிறேஹேது" என்ன, "நம்நெஞ்சிலில்லையாகிலும் இவர்கள் வைஷ்ணவர்களென்று கைவிடப்பெற்றோமிறே" என்று புடைவையைமுடிந் தெறட்டுக்கூத்தாடினான்.............*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (எதிரொதிரித்யாதி) "எதிரொதிரிமையவர்" என்றுதொடங்கி "முழக்கொத்த" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (மேலுள்ளலோகங்களிலித்யாதி) இருப்பிடம் - (தோப்பு) வாத்யாதிகோஷங்கள் - வாத்யகோஷாதிகளென்றபடி. ஆத்சப்தத்தாலே - "கைநிரைகாட்டினர்" என்றத்தைச்சொல்லுகிறது.

"எதிரொதிர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (பார்த்தபார்த்தவிடமித்யாதி) இருப்பிடம் வகுக்கிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (இவர்களிங்கேயித்யாதி) தேவர்களென்னாதே "இமையவர்" என்றதுக்குபாவம் (இமையவரொன்றித்யாதி) கார்யபரதையாலே கண்விழித்திருந்தபேருண்டோவென்ன (இளையபெருமாளித்யாதி) அவர்களிப்படிசெய்கைக்கு அதிதவனாயோடேபோகிறவர்கள் தங்குவர்களோவென்ன (இவர்களங்கேயித்யாதி) உக்தத்துச்குத்ருஷ்டாந்தம் (ராஜாக்களித்யாதி) மானுவிசமைக்கை - மஹாநவமிக்கு ராஜதவாரங்களிலே அலங்கரிக்கை.

"கதிரவர்" என்று தேஜஸ்ஸையிட்டு விசேஷிக்கிறதுக்குபாவம் (ஆதித்யர்களித்யாதி) நிலைவிளக்குப்போலேயென்றது - "கதிரவர்" என்றபதசக்தியைப்பற்ற. நிரையே - வரிசையாக.

இமையவர்கள் வகுத்த விருப்பிடத்தே கால்தாழ்வர்களென்று அதுகேளா தபடி யவ்வருகுள்ளாராலே முரசங்கள் முழக்கப்பட்டனவென்னுதல், இருப்பிடம் வகுத்தவர்களே வாத்யங்களையும் கோஷிப்பித்தார்களென்னுதல்; இந்தவர்த்தத்வய த்தையுமருளிச்செய்கிறார் (அங்கே கால்தாழ்வர்களென் றித்யாதிவாக்யத்வயத் தாலே.)

“மதவிரிதுழாய்முடி” என்றவிசேஷணத்துக்குபாவம் (சொட்டோசையா னமித்யாதி) “மாதவன்” என்றத்தைப்பற்ற (பிராட்டியோடேகூடவென்றது) “ம துவிரி” என்று - புதுமையைச்சொல்லுகையாலே (அழித்தழிதென்றது) விரி-ப்ர வஹியாநின்றுள்ள. ஸ்ரீமேபிராட்டியும் தானுமா யொப்பித்தபடியைச்சொல்லி, தா னேயொப்பிக்கிறனென்று தாத்பர்யாந்தரம் (பிராட்டிபுருஷகாரமாகவித்யாதி.)

மநுஷ்யர்களுக்கு மேலானதேவர்கள் வைஷ்ணவர்கள் வாசியறிந்து சத்கரி க்கிறபடியையும், இங்கே எத்தனையேனும் தண்ணியரும் வைஷ்ணவர்களை யவமாந ம்பண்ணுகிறபடியையு மநுசந்தித்த வ்யாக்யாதாவினிடுபாடு (இங்குவைஷ்ணவர்க ளித்யாதி) வைஷ்ணவத்வமே ஹேதுவாகப் பங்குபெறுதாருண்டோவென்ன; ஐதி ஹ்யமருளிச்செய்கிறார் (மிளாழ்வானித்யாதி) ஆந்தராளிகன் - நடுவேயிருக்கிறவ ன். அதாவது-சம்சாரிகளுக்கும் முக்தர்க்கும் கூட்டல்லாத மத்யஸ்த்தரான முமு க்ஷுக்களென்றபடி.

மதுவிரியென்றுதொடங்கி, முழக்கொத்தவித்யர்வயஃ. முரசங்களதிருகிறமு ரலானவை அலைகிறகடலின் முழக்கொத்தன என்று உரையில் சப்தார்த்தம் ... ...*

# ஐந்தாம்பாட்டு.

மாதவன்றமரொன்றுவாசலில்வானவர்
போதுமிளைமதிடம்புகுதுகவென்றலுங்
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள்
வேதநல்வாயவர்வேள்வியுண்மடுத்தே.

## ஆறாயிரப்படி.

(மாதவன்றமர்) இவர்கள்போகிறவழியில் வர்த்திக்கும்தேவர்கள், இவர்கள் மாதவன்றமரென்றுகந்து, தந்தாமுடைய ஸ்த்தாநங்களையும் ஐஸ்வர்யங்களையும், இவர்களுக்கு “இவற்றைக்கொள்ளவேணும்” என்று சமர்ப்பித்தார்கள்; கீதங்கள்பாடினர் கின்னரர்கருடர்கள்; வேதநல்வாய வர், ஜ்யோதிஷ்டோமாதி யாகசித்தமானதங்கள் ஸம்ருத்தியைக்கொடு த்தார்களென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வழியில் வருணேந்த்ரப்ரஜாபதிகளானவர்கள், “ஸ்ரியஃபதியான வனுக்கு சேஷபூதர்” என்றாதரித்தப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

வானவர்-வருணேந்த்ரப்ரஜாபதிகளாகிற ஆதிவாஹிகதேவர்களானவர்கள். வாசலில்-தந்தாம்பதங்களில் தலைவாசலிலேவந்துநின்று. மாதவன்றமர்-ஶ்ரியஃபதிக்கு சேஷபூதர்களிவர். என்று-என்றுதரித்து. போதுமின் - "இங்ஙனேயெழுந்தருளுங்கோள்". எமதிடம்புகுதுக-எங்களதிகாரமான ஸ்த்தலங்களிலே ப்ரவேஶியுங்கோள். என்றலும்-என்று ஸபஹுமாநமாக ஸத்கரித்தவளவிலே. அவ்விடங்களில், கர்மஜதேவராய், வேதநல்வாயவர் - வேதோச்சாரணத்தாலே விலக்ஷணமுகரானவர்கள். வேள்வி-தங்கள்யாகாதிகர்மங்களை. உள் - "ஸபலமாகப்பெற்றதே" என்று சாதரமாய்க்கொண்டு. மடுத்து-இவர்கள்திருவடிகளிலே சமர்ப்பித்து. கின்னரர்-கிந்நரர்களும். கெருடர்கள்-கருடர்களும். கீதங்கள்பாடினர்-கீதங்களைப்பாடினார்கள் ...*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஆதிவாஹிககர்த்தாக்களான வருணேந்த்ராதிகளும் மற்றுமுள்ளாரு மிவர்களுக்குப்பண்ணும் சத்காரங்களை யருளிச்செய்கிறார்.

(மாதவன்றமரென்று) பிராட்டிபுருஷகாரமாக வாஶ்ரயித்த அந்தஃபுரபரிகரமன்றோவென்றுய்த்து அவர்கள் சொல்லுவது; ப்ரஹ்மசாரியெம்பெருமானைப்பற்றினவர்களன்றிறே. (வாசலில்வானவர்) வழியில் தேவர்கள். வாசல் - வழி. அவர்களாகிறார் - வருணேந்த்ரப்ரஜாபதிகள். (போதுமினெமதிடம்புகுதுகவென்றலும்) "இங்ஙனேயெழுந்தருளவேணும், எங்களதிகாரங்களைக் கைக்கொள்ளவேணும்" என்று ப்ரார்த்திக்கிறவளவிலே. (கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள்) கிந்நரர்களும் கருடர்களும் பாட்டுக்களைப்பாடினார்கள். கிந்நரதேசத்திலுள்ளாரும், கருடதேசத்திலுள்ளாரும் பாடினார்கள். (வேதநல்வாயவர்) மேலில் லோகங்களில் வைதிகராய்க்கொண்டு சமாராதநம்பண்ணுமவர்கள், தங்கள் சமாராதநபலங்களை யிவர்கள் திருவடிகளிலே சமர்ப்பித்தார்கள். நிரபேக்ஷராய்ப்போகிறவர்களுக்கு, தந்தாமதிகாரங்களைக்கொடுப்பார், பாடுவார், யாகபலங்களைசமர்ப்பிப்பாராகிறார்களிறே தந்தாமாதரத்தாலே. "ப்ரீதஃகஶ்சிந்முநிஸ்தாப்யாம் ஸம்ஸ்த்திதஃகலஶம்ததௌ" (ப்ரீதஃகஶ்சிந்முநிஸ்தாப்யாம் ஸம்ஸ்த்திதஃகலஶம்ததௌ) என்று தந்தாமுக்குள்ளவற்றைக்கொடுக்குமத்தனையிறே... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (மாதவனித்யாதி) "வாசலில்வானவர்" என்றுதொடங்கி "வேள்வியுள்மடுத்தே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (ஆதிவாஹிகேத்யாதி) மற்றுமுள்ளாரென்கிறது - "கின்னரர்" இத்யாதியைப்பற்ற.

"வாசலில்வானவர்" என்றதுக்கு - வழியில் தேவர்களென்றர்த்தமாயிருக்க, (வருணேந்த்ரப்ரஜாபதிகள்) என்கிறது - மேலே "எமதிடம்புகுதுக" என்று-எங்களதிகாரங்களைக் கைக்கொள்ளவேணுமென்கையாலே, அதிகாரிபுருஷர்களாவாரவர்களே என்றுநினைத்து. எமதிடம் - எங்களதிகாரமானஸ்த்தலங்களிலே, புகுதுக - ப்ரவேசியுங்கோள், என்றலும் - என்றவளவிலேயென்று சப்தார்த்தம்.

விவரணம் (இந்நரதேசத்திலித்யாதி.)

வேதநல்வாயவர் - வேதோச்சாரணத்தாலே விலக்ஷணமான வாயையுடையவர்கள். வேள்வி-யாகபலததை. "உள்-" உள்ளென்று - சப்தமியாய், அவர்களிடத்திலேயென்றபடி. மடுத்து - சமர்ப்பித்து என்றுசப்தார்த்தம். வேள்வியென்று-தத்பலத்தை லக்ஷிக்கிறது. வேள்வி-யாகம்.

மோக்ஷபலத்தைப்பற்றப் போகிறவர்களுக்கு க்ஷுத்ரபலத்தைக்கொடுத்தாலங்கீகரிப்பர்களோவென்ன (நிரபேக்ஷராயித்யாதி) அப்ராக்ருதமான தேசத்தையபேக்ஷித்துப்போகிறவர்களுக் காபாஸமான விவை ஸத்ருமமன்றேயென்ன (ப்ரீத இத்யாதி) "ஸ்ரீ தஃகஸ்ரீ நூ நிர்ணூஹ)ாஂஸஂஹ்ரீதஃகஜஶஂஜஊள । ஸ்ரஸ ஞாவஜஶாஂகஸ்ரீஜஊளதாஹ)ாஂஉஹாயஶாஃ" (ப்ரீதஃகஸ்ஸிச்முநிஸ்தாப்யாம் ஸம்ஸ்த்திதக்கலஶம்தளெ । ப்ரஸந்நோவல்கலாம்சஸ்ஸித்ததெளதாப்யாம்மஹாய ஶாஃ) இதிபாலகாண்டே குஶீலவஸ்லாகாயாம்... ... ... ... ... ... ... *

---

# ஆறம்பாட்டு.

---

வேள்வியுண்மடுத்தலும்விரைகமழ்நறும்புகை
காளங்கள்வலம்புரிகலந்தெங்குமிசைத்தன
ஆண்மின்கள்வானகமாழியான்றமரென்று
வாளொண்கண்மடந்தையர்வாழ்த்தினர்மகிழ்ந்தே.

## ஆறுயிரப்படி.

(வேள்வியுள்) இவர்சிலர் ஸ்வக்ருதமான யாகபலத்தைக்கொடுக்குமளவில், வேறேசிலர் தூபதீபாதிகளா லப்யர்ச்சநம்பண்ணினுர்கள்; சிலர், காளங்கள் வலம்புரிகலந்தெங்குமிசைத்தனர்; வாளொண்கண்மடந்தையர், இவர்களைக்கண்ட ப்ரீத்யதிசயத்திஞலே, இவர்கள் தாங்கள் வரப்புகுகிற மங்களத்திற்காட்டில் மேற்பட்டதொரு மங்களமில்லாமையாலே, ஆழியான்றமரானநீங்கள் ஆண்மின்கள் வானகமென்று இதுதன்னையே மங்களமாக வாசாசித்தார்களென்கிறுர் ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "சேஷித்வசிஹ்நமான திருவாழியையுடையவனுக்கு சேஷபூதரான நீங்கள் இந்த ஊர்த்வலோகத்தை நிர்வஹியுங்கோள்" என்று ஆதிவாஹிகமஹிஷிகள் வாழ்த்தினபடியை யருளிச்செய்கிறுர்.

வேள்வியுள்மடுத்தலும் - வைதிகர் சகலதர்மங்களை சமர்ப்பித்தவளவிலே. விரைகமழ் - பரிமளத்தைப்ரவஹிக்கிற. நறும் - சுகந்தமான. புகை - தூபங்களானவை. எங்கும் கலந்து - எங்கும்கலந்து. காளங்கள்-காளங்களையும். வலம்புரி - வலம்

புரிகளையும். இசைத்தனர் - த்வநிப்பித்தார்கள். இவர்களைக்கண்டப்ரீதியாலே, வாள்-ஒளியையுடைத்தாய். ஒண்-தர்ஶநீயமான. கண்-கண்களையுடைய. மடந்தையர்-தேவஸ்த்ரீகளானவர்கள். ஆழியான்-திருவாழியையுடைய சர்வேஶ்வரனுக்கு. தமர்-சேஷபூதரானநீங்கள். வானகம்-இந்தஸ்வர்க்காதிபதங்களை. ஆண்மின்கள் - ஆளுவதிகோளாகவேணும். என்று-என்று. மகிழ்ந்து - ப்ரீதியையுடையராய்க்கொண்டு. வாழ்த்தினர்-வாழ்த்தினார்கள் ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - ஆறும்பாட்டு.

சத்காரபூர்வகமாக தேவஸ்த்ரீகளுகந்து இவர்களை ஆசிர்வசநங்களைப்பண்ணினார்களென்கிறார்.

(வேள்வியுள்மடுத்தலும்) அவர்கள் தங்களுடைய யாகபலங்களை சமர்ப்பித்தவளவிலே, வேறேசிலர், அகில்தொடக்கமான த்ரவ்யங்களைக் கொண்டு நல்லபுகைகளை ப்ரவர்த்திப்பித்தார்கள். ( விரைகமழ் நறும்புகை ) பரிமளப்ரசுரமாகையாலே ஸ்ப்ருஹணீயமானபுகை. (காளங்களித்யாதி) அவர்கள்கொடுக்கிறவற்றை யிவர்கள் கைக்கொள்ளுகிறவளவிலே, வேறேசிலர்கள், காளங்களையும் வலம்புரிகளையும் கலந்து த்வநிப்பித்தார்கள். (கலந்தெங்குமிசைத்தனர்) மாறிமாறியெங்குமொக்க த்வநித்தன. (த்வநிக்கும்போது த்வநிப்பிப்பாரும் வேணுமிறே.) (ஆழியான்றமர்-ஆண்மின்கள்வானகம்) “சர்வேஶ்வரனுக்கு சேஷபூதரானநீங்கள் இவ்விட்த்தையாளிகோள்” என்றுய்த்து ஸ்தோத்ரம்பண்ணுவது. அவன்றானும் தன்விபூதியை “ ஹக்தாநாழ ” (பக்தாநாம்) என்றன்றோவிருப்பது. “ ஆளுகைக்குக்குறையென் ” என்பர்கள். (வாளொண்கணித்யாதி) ஆதிவாஹிக கர்த்தாக்களுடையமஹிஷிகள் வாழ்த்தினார்கள். தேசாந்தரம் போன ப்ரஜையைத் தாய்மார்குளிரப்பார்க்குமாபோலே,ஒளியையுடைத்தாய் அழகியகண்களாலே குளிரநோக்கினபடி. (மகிழ்ந்தே) பர்த்தாக்களநுவர்த்திக்கையாலே விஹிதமென்று செய்கிறார்களன்று, ப்ரீதியாலே செய்கிறார்கள். இங்கு பகவத்ஸம்பந்தமேஹேதுவாக நீசராலே பரிபூதனாய்ப்போந்தவன், சரீரவியோகசமநந்தரத்தில் தங்களுக்கவ்வருகில்லாதார் கொண்டாடும்படியிறே யிவன்பேறு!......................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (வேள்வியுளித்யாதி) “வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்து” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (சத்காரபூர்வகமாகவித்யாதி.)

“வேள்வியுள்மடுத்தலும்” என்கிறவிது - அநுவாதம். மடுத்தலும்-மடுத்தவளவிலே. சமர்ப்பித்தவளவிலேயென்றபடி.

“விரைகமழ்” என்றதுக்கும் * நறுமைக்கும்பேதமேதென்ன (பரிமளேத்யாதி) பரிமளத்தை ப்ரவஹிக்கிற ஸ்ப்ருஹணீயமான தூமங்களையென்றுசப்தார்த்த

ம். (ப்ரவர்த்திப்பித்தார்கள்) இத்யத்யாஹார்யம். விரை - பரிமளம். கமழுகை - பரம்புகை.

காளங்கள் - சிஹ்நங்கள். இசைத்தனர் - த்வநிப்பித்தார்கள். கலந்து - மாறி மாறியென்றபடி. த்வநித்தன - த்வநிப்பித்தார்கள்.

ஈஸ்வரவிபூதியை யிவர்கள்கொடுக்கலாமோவென்ன (அவன்ருனுமித்யாதி.)

"வாளொண்கண்மடந்தையர்" என்று அவர்கள் கண்களைவர்ணிக்கிறதுக்கு பாவம் (தேசாந்தரோத்யாதி) வ்யாக்யாதாவினிபாடு (இங்குபகவத்ஸம்பந்தமேயித்யாதி.)

வேள்வியுள் மடுத்தலும் விரைகமழ் நறும்புகையை ப்ரவர்த்திப்பித்தார்கள், காளங்கள் வலம்புரிகலந்தெங்கு மிசைத்தனர், ஆழியான்றமரானநீங்கள் - வானகம் - ஆண்மின்கள் - என்று வாளொண்கண் மடந்தையர் - மகிழ்ந்து - வாழ்த்தினர் இத்யந்வயஃ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஏழாம்பாட்டு.

மடந்தையர்வாழ்த்தலுமருதரும்வசுக்களுந்
தொடர்ந்தெங்குந்தோத்திரஞ்சொல்லினர்தொடுகடற்
கிடந்தவெங்கேசவன்கிளரொளிமணிமுடிக்
குடந்தையெங்கோவலன்குடியடியார்க்கே.

### ஆருயிரப்படி.

(மடந்தையர்) ஆஸ்ரிதபரித்ராணார்த்தமாகத் திருப்பாற்கடல் திருக்குடந்தை தொடக்கமாகவுள்ள தேசங்களிலேவந்து திருவவதாரம்பண்ணியருளின வெம்பெருமானுக்குக் குடியடியாரான விவர்களை யிப்படி மடந்தையர் வாழ்த்துமளவிலே, மருத்துக்களும் வசுக்களும் தந்தாமுடைய லோகங்களன்றியே லோகாந்தரங்களிலும் தொடர்ந்து தொடர்ந்து ஸ்துதித்தார்களென்கிருர் .........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ஷீரார்ணவசாயியாய் சர்வாதிகனாய் அர்ச்சாவதார சுலபனானவனுடைய சேஷபூதர்க்கு மருத்கணங்களும் வசுகணங்களும் பின்தொடர்ந்து ஸ்தோத்ரம்பண்ணினபடியை யருளிச்செய்கிருர்.

தொடுகடல்கிடந்த - அகாதமானகடலிலே கண்வளர்ந்தருளி. எம்கேசவன் - என்போல்வாரோடு ப்ரஹ்மாதிகளோடு நித்யசூரிகளோடு வாசியற எல்லார்க்குமுத்பாதகனானகேசவனாய். எங்களையநுபவிப்பிக்கிற, அந்தசேஷித்வசூசகமாய், கிளரொளி-கிளர்ந்துஒளியையுடைத்தாய்.மணிமுடி-மணிமயமானதிருவபிஷேகத்தையுடையனாய்க்கொண்டு. குடந்தையன்-திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற. கோவலன் - க்ருஷ்ணனுக்கு. குடியடியார்க்கு - சந்தாநமாக வடிமையானவர்களைப்பற்ற.

மடந்தையர்-தந்தாமுடையஸ்த்ரீகள். வாழ்த்தலும்-வாழ்த்தினவளவிலே. மருதரும்-மருத்துக்களும். வசுக்களும்-அஷ்டவசுக்களும். பகவதநுபவத்வரையாலே அவர்கள் சீக்ரகாமிகளாகையாலே, எங்கும் தொடர்ந்து-எங்கும்தொடர்ந்துசென்று-தோத்திரம்சொல்லினர்-ஸ்தோத்ரங்களைப்பண்ணினார்கள்.

தொடுதல்-தோண்டுதலாய், ஆழத்தைக்காட்டுகிறது... ... ... ... ...*

## ஈடு - ஏழாம்பாட்டு.

மருத்கணங்களும் வசுகணங்களும் தங்களெல்லைக்கப்பாலும் தொடர்ந்துசென்று இவர்களை ஸ்தோத்ரம்பண்ணினார்களென்கிறார்.

(மடந்தையர்வாழ்த்தலும்)அத்தேவஸ்த்ரீகள் புகழ்ந்தவளவிலே, மருத்கண்ங்களும் வசுகணங்களும். (தொடர்ந்தெங்கும்) தங்களெல்லைக்கப்பால் செல்லலாமிடமெங்கும், சென்று. (தோத்திரஞ்சொல்லினர்) புகழ்ந்தார்கள். ஒரு நிமேஷமாத்ரத்திலே ஒருலோகத்தில் நின்றும் லோகாந்தரத்தேறப்போமவர்களாகையாலே, தங்களெல்லைக்குள்ளில் புகழ்ந்தவளவால் ப்ர்யாப்தி பிறவாமையாலே தொடர்ந்துபுகழ்ந்தார்கள். அவர்கள் தாங்கள் சடக்கெனப்போகிற விதுக்கடியென்னென்னில்; தாங்கள், "கண்ணன்விண்ணூர்தொழவே சரிகின்றனசங்கம்" என்றும் "காண்பதெஞ்ஞான்றுகொலோ" என்றும் "மாகவைகுந்தம்காண்பதற்கென்மனமேகமெண்ணும்" என்றும் "உடன்கூடுவதென்றுகொலோ" என்றுமிருக்கையாலும், "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றிருக்குமவன் கருத்தறியுமவர்களாகையாலும். (தொடுகடற்கிடந்த) பரமபதத்தைக்கலவிருக்கையாகவுடையவன், அத்தைவிட்டு, ப்ரஹ்மாதிகளுக்கு முகங்கொடுக்கைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடி. (தொடுகடல்) தோண்டப்பட்டகடல். ஆழ்ந்தகடல். (எங்கேசவன்) ஆஸ்ரிதார்த்தமாக க்ருஷ்ணனாய்வந்தவதரித்து ரக்ஷித்தவன், அவதாரத்துக்குப் பிற்பாடரிழவாதபடி (திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவன். (எங்கோவலன்) க்ருஷ்ணன்தானேவந்து திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறானென்கிறது. மருதரும் வசுக்களும், அவன்போய்ப்பண்ணின க்ருஷியின் பலமன்றோவென்று கொண்டாடாகிற்பர்கள். (கிளரொளிமணிமுடி) மிக்கவொளியையுடைத்தாய் ஆதிராஜ்யசூசகமான திருவபிஷேகம். வ்யூஹவிபவங்களி லளவன்றிக்கே) திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையிலேதோற்று சந்தானமாக வெழுதிக்கொடுத்தவர்களன்றோ விவர்களென்றாய்த்து அவர்களாதரிப்பது.........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மடந்தையரித்யாதி) "மருதரும் வசுக்களும் தொடர்ந்தெங்கும்தோத்திரஞ்சொல்லினர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( மருத்கணங்களுமித்யாதி.)

"எங்கும் - தொடர்ந்து" என்றதுக்குபாவம் (தங்களெல்லையித்யாதி) தொடர்ந்து ஸ்தோத்ரம்பண்ணுவானென்னென்ன (ஒருநிமேஷேத்யாதி) (தாங்கள்காண்பதித்யாதி) அவனையும் பரமபதத்தையும் நித்யஸூரிகளையும் காணவேணுமென்கிற த்வரையாலும், அவன் கருத்தறியுமவர்களாகையாலும் த்வரித்துப்போகிறார்களென்றபடி.

பலிதம் (ஆழ்ந்தகடலென்று) "கோவலன்" என்கிறவிதுக்கு - நீர்மையிலே நோக்கு. "குடியடியார்க்கு" என்றது - கர்மணிஷஷ்ட்டியாய், குடியடியார்களையென்றபடி.

தொடுகடலென்றுதொடங்கி, தோத்திரம்சொல்லின ரித்யர்வயஃ...........*

---

# எட்டாம்பாட்டு.

குடியடியாரிவர்கோவிந்தன்றனக்கென்று
முடியுடைவானவர்முறைமுறையெதிர்கொள்ளக்
கொடியணிநெடுமெதிட்கோபுரங்குறுகினர்
வடிவுடைமாதவன்வைகுந்தம்புகவே.

## ஆறாயிரப்படி.

(குடியடியாரிவர்) குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று, இவரை, சேஷத்வ ஸாம்ராஜ்யத்திலே யபிஷிக்தரா யதுக்கு முடிசூடியிருந்த * அயர்வறுமமரர்கள் முறைமுறையெதிர்கொள்ள, வடிவுடைமாதவன் வைகுந்தம் புகுகைக்காக, இவர்கள்முன்னமே த்வஜபதாகாதிகளாலே யலங்க்ருதமான பெரியதிருக்கோபுரத்தைச்சென்று குறுகினார்களென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதசுலபனான க்ருஷ்ணனுடைய வடியாரென்கிற வாதரத்தாலே பரமபதவாசிகள் நாட்டெல்லையிலேவந்தெதிர்கொள்ள பரமபதத்தைக்கிட்டினபடியை யருளிச்செய்கிறார்.

இவர், கோவிந்தன்றனக்கு - ஆஸ்ரிதார்த்தமாக வவதீர்ணனான க்ருஷ்ணனுக்கு. குடியடியார் - அநந்யார்ஹமான குலத்தையுடைய அடியார். என்று-என்று. முடியுடை-ஈஸ்வரஞேபாதி அபிஷேகாதி ஸாரூப்யத்தையுடையரான. வானவர்-நித்யஸூரிகள். முறைமுறை-தந்தாம்ஸரங்கள் தப்பாமல். எதிர்கொள்ள - எதிர்கொள்ள. இவர்கள்வருகிறார்களென்று, வடிவுடை-அலங்க்ருதமான வடிவையுடையனாய். மாதவன் - "ஸ்ரியாஸாயஃ" (ஸ்ரியாஸார்த்தம்) என்று லக்ஷ்மியோடேகூடவெழுந்தருளியிருக்கிறசர்வேஸ்வரனுடைய. வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்திலே. புக-ப்ரவேசிக்கைக்குறுப்பாக. கொடியணி - தங்கள்வரவுக்கு அலங்காரமாக வெடுத்துக்க

ட்டினகொடியாலே அலங்க்ருதமாய். நெடுமதிள்-உயர்ந்தமதிளையுடைத்தான. கோபுரம்குறுகினர்-தலைவாசலிலேபுக்கார்கள்... ... ... ... ... ... ... ... *

## ஈடு - எட்டாம்பாட்டு.

ப்ரக்ருதிமண்டலத்துக்கவ்வருகே பரமபதத்துக்குப்புறம்பாக நித்யஸூரிக ளிவர்களை யெதிர்கொள்ளுகிறபடியை யருளிச்செய்கிறார்.

(குடியடியாரித்யாதி) அவனுடைய ஸௌலப்யத்திலேதோற்று சபரிகரமாக வெழுதிக்கொடுத்தவர்களென்றுய்த்து நித்யஸூரிகளாதரிப்பது. "குடந்தையெங்கோவலன்குடியடியார்" என்றதுகீழே; (குடியடியாரிவர்கோவிந்தன்றனக்கு) என்றதிங்கே. "இவர்கள்விபவங்களிலே ஆஸ்ரயித்தவர்கள், இவர்கள் உகந்தருளினநிலங்களிலே ஆஸ்ரயித்தவர்கள்" என்றுய்த்து அவர்கள் ஸ்லாகிப்பது. (முடியுடைவானவர்) அவன்றன்னோபாதியும் மதிப்பில் குறைவற்றவர்களாய்த் திவர்களையாதரிப்பார். அபிஷேகம் அவனுக்கும் நித்யஸூரிகளுக்கு மொக்குமாகில் வாசியென்னென்னில்; அவன் ரக்ஷகத்வத்துக்கு முடிசூடியிருக்கும், இவர்கள் அடிமை செய்கைக்கு முடிசூடியிருப்பார்கள். (முறைமுறையெதிர்கொள்ள) பர்யாயமாகவெதிர்கொள்ள. "யத்ர பூர்வே ஸாத்யாஃ" (யத்ரபூர்வேஸாத்யாஃ) என்றும் "அடியார்கள்குழாங்களை" என்றும் சொல்லுகிறபடியே-தங்களுக்குத்தேஸ்யரானவர்களுக் குத்தேஸ்யராகிறார்களிறேயிவர்கள்!.

(கொடியித்யாதி) இவர்கள் வருகிறார்களென்று, கொடிகளாலே யலங்க்ருதமாய் ஒக்கத்தையுடைத்தாய் பரமபதத்துக்கெல்லையான திருமதிளில் திருக்கோபுரத்தைச்சென்று கிட்டினார்கள். (வடிவுடைமாதவன்) "புத்ரேவ வஸுதேவோபூத்" (புவேவவஸுதேவோபூத்) என்று-கம்ஸவதத்துக்குப்பின்பு பிள்ளையைக்கண்ட ஸ்ரீவசுதேவனையும் தேவகியாரையும்போலவும், பெருமாளைக்கண்டசக்ரவர்த்தி "புநர்யுவேவ" (புநர்யுவேவ) என்று சொல்லப்பட்டாப்போலவும். (வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே) தங்கள் வரவாலுண்டான ஹர்ஷத்தாலே புதுக்கணித்தவடிவையுடைய ஸ்ரிய:பதியதான பரமபதத்திலே புகுகைக்காக. வந்துகிட்டினானென்றவாறே, தனக்கும் பிராட்டிக்கும் வடிவுஇட்டு மாறினாப்போலே யாமென்கை ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (குடியடியாரித்யாதி) "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ப்ரக்ருதிமண்டலத்துக்கித்யாதி) "கோபுரம்குறுகினர்" என்றதுக்குமுன்னாக "எதிர்கொள்ள" என்கையாலே (பரமபதத்துக்குப்புறம்பாக) என்கிறார்.

(இங்கே) என்றவநந்தரம், "இதுக்குக்கருத்தென்னென்னில்" என்றுகூட்டுவது. எடுத்தசந்தைக்கு வ்யுத்க்ரமேணபாவம் (இவர்களித்யாதி.)

"முடியுடை" என்றவிசேஷணத்துக்குபாவம் (அவன்றன்ஞேபாதியுமித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (யத்ரபூர்வே இத்யாதி) "ஸாய்ாஃ" (ஸாத்யாஃ) என்கையாலே (உத்தேஸ்யரென்கிறது.)

"கொடியணி" என்றது - ஸ்வபாவமன்று, சாபிப்ராயம்.

வடிவு-சௌந்தர்யம். "வடிவுடை" என்றதும் ஸாபிப்ராயமென்கிருர் (யுவேவேத்யாதி) "மஹொத்ஸவமிவாஸாத்யபுத்ராநநவிலோகநம் । யுவேவவஸுதேவோபூத் விஹாயாப்யாகதாம்ஜராம்" (மஹோத்ஸவமிவாஸாத்யபுத்ராநநவிலோகநம் । யுவேவவஸுதேவோபூத் விஹாயாப்யாகதாம்ஜராம்) இதிபஞ்சமேம்ஸே. "அஹம்புநர்த்தேவகுமாரரூபமலங்க்ருதம்தம்ஸுதமாவ்ரஜந்தம் । நந்தாமிபஸ்யந்நபிதர்ஸநேந பவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ" (அஹம்புநர்த்தேவகுமாரரூபமலங்க்ருதம்தம்ஸுதமாவ்ரஜந்தம் । நந்தாமிபஸ்யந்நபிதர்ஸநேந பவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ) இத்யயோத்யாகாண்டேத்வாதஸே. "வடிவுடை" என்றதுக்கு பாவாந்தரம் (தங்களித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (வந்துகிட்டிஞனித்யாதி.)

குடியடியாரென்றுதொடங்கி, வைகுந்தம்புகுகைக்காக - கோபுரம் குறுகினர் இத்யந்வயஃ ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# ஒன்பதாம்பாட்டு.

வைகுந்தம்புகுதலும்வாசலில்வானவர்
வைகுந்தன்றமரெமரெமதிடம்புகுதென்று
வைகுந்தத்தமரருமுனிவரும்வியந்தனர்
வைகுந்தம்புகுவதுமண்ணவர்விதியே.

## ஆறுயிரப்படி.

(வைகுந்தம்) வைகுந்தம்புகுமளவில், வாசலில்வானவர், "வைகுந்தன்றமராகையாலே யெங்களுக்கு ஸ்வாமிகளான நீங்களெங்களுடைய பகவத்கைங்கர்யைகரூபமான சம்ருத்திகளைக்கொள்ளவேணும்" என்று சமர்ப்பித்து, பகவத்குணாநுபவஜநித நிரதிசயப்ரீதிகாரித சர்வபரிசர்யைகபோகரான வமரரும், பகவத்குணாநுபவஜநித நிரதிசயப்ரீதியாலே அப்ரக்ருதிங்கதரா யொருப்ரவ்ருத்திபண்ணுகைக்கு க்ஷமரன்றியேயிருக்கும் முனிவரும், "பூமியுள்ளேயுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் திருநாட்டிலே வருகைக்கு நாமென்னபாக்யம்பண்ணினோமோ!" என்று விஸ்மயப்பட்டார்களென்கிருர் ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "ஸ்ரீவைகுண்டநாதனுடைய சேஷபூதரானவர்கள் நமக்குத்தேஸ்யர்" என்று, திருவாசல்காக்கும் முதலிகளானுராதரித்தபடியை யருளிச்செய்கிருர்.

வைகுந்தம்புகுதலும் - ஸ்ரீவைகுண்டத்திலேசென்று புக்கவளவிலே. வாசலில் - திருவாசல்காக்கும். வானவர் - முதலிகளானவர்கள். "வைகுந்தன்றமர் - "ஸ்ரீவைகுண்டநாதனுக்கு ஆதரணீயரானவர்கள். எமர் - நமக்குத்தேஶ்யர். எமதிடம்புகுது" - எங்களதிகாரத்திலேபுகுரவேணும்". என்று-என்று. வியந்தனர் - உகந்தார்கள். வைகுந்தத்து - அத்தேசத்திலே. அமரரும் முனிவரும் - கைங்கர்யபரராயும் குணநுபவபரராயுமிருக்கிற வமரரும்முனிவரும். மண்ணவர் - பூமியிலே சப்தாதிவிஷய ப்ரவணராயிருந்தவர்கள். வைகுந்தம்புகுவது - பரமபதத்தேபுகுவது. விதியே! - ஒருபாக்யமே! என்று. வியந்தனர் - உகந்தார்கள்.

வியந்தனரொன்கிறவிடம், "எதிரிடம்புகுதென்று - வியந்தனர்" என்றும் "அமரரும்முனிவரும் வியந்தனர்" என்றும் இரண்டிடத்திலு மந்வயிக்கிறது .........*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

பரமபதத்திலேசென்று திருவாசலில் முதலிகளாலே சத்க்ருதராய், அங்குள்ளநித்யசூரிகள் "பரமபதத்திலேவருவதே!, இதென்னபாக்யபலம்!" என்று விஸ்மயப்பட்டார்களென்கிறார்.

(வைகுந்தம்புகுதலும்) பரமபதத்தைச்சென்று கிட்டினவளவிலே; திருவாசல்காக்கும் முதலிகள், "ஸ்ரீவைகுண்டநாதனுடையா ரெங்களுடையஸ்வாமிகள், எங்கள்பதத்தைக் கைக்கொள்ளவேணும்" என்றுய்த்தவர்கள்பாசுரம். "பயிலுந்திருவுடையார்யவரேலும் - எம்மையாளும்பரமர்" என்றவிவரைப்போலேயாய்த்தங்குள்ளாருமிருப்பது. திருவாசலில்முதலிகள், எதிரேவந்து சத்கரித்து, கையைக்கொடுத்து, கொண்டுபுக்கு, தங்கள்கைப்புடைகளிலேயிருத்தி, திருக்கையிலே பிரம்பையும் கொடுப்பர்களாய்த்து. சென்றுபுகுகிறவர்களுக்கும் கைங்கர்யமே உத்தேஶ்யம், அங்கிருக்கிறவர்களுக்கும் கைங்கர்யமே யாத்ரையாகையாலே, இவர்கள்கொள்ளுவதுமது, அவர்கள்கொடுப்பதுமது. (புகுது) என்றது-புகுதுகவென்றபடி. (வைகுந்தத்தமரரும்முனிவரும்) ஸ்ரீபராழ்வானையும் இளையபெருமாளையும்போலே, குணநிஷ்டரும் கைங்கர்யநிஷ்டரும். (வியந்தனர்) விஸ்மயப்பட்டார்கள். (வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே!) கடலில் நீர் சஹ்யத்திலே யேறக்கோத்தாப்போலே, சம்சாரிகள் பரமபதத்திலே புகுரும்படிக்கிடாக பாக்யத்தைப்பண்ணுவதே! என்று விஸ்மயப்பட்டார்கள் ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (வைகுந்தமித்யாதி) "வாசலில்வானவர்" என்றுதொடங்கி "விதியே!" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (பரமபதத்திலேயித்யாதி) பரமபதத்திலேவருவதேயென்றது - மண்ணவராய்வைத்து விண்ணவராவதேயென்றபடி.

இங்குநின்றும் போகிறவர்களை, நித்யசூரிகள் "எமர்" என்னக்கூடுமோவென்ன (பயிலுந்திருவித்யாதி) புகுதென்று - கைக்கொள்ளவேணுமென்று. கைக்கொ

ண்டால் தாங்கள்கொடுக்கும் வரிசையேதென்ன (திருவாசலிலித்யாதி) கைப்பு டை - வாசல்காப்பாரிருக்குமிடம். பிரம்பைக்கொடுக்குமது அதிசயமாகக்கூடுமோ வென்ன (சென்றித்யாதி.)

"புகுது" என்றுசொன்னவளவிலே, வைகுந்தத்தமரரும் முனிவரும் "வை குந்தம்புகுவது மண்ணவர்விதியே!" என்றுவியந்தனரென்றபடி. அமரர்-கைங்கர்ய நிஷ்டர். முனிவர் - குணநிஷ்டர்.

வைகுந்தம்புகுதலுமென்றுதொடங்கி, முனிவரும் - வைகுந்தம் புகுவது ம ண்ணவர்விதியே! என்று - வியந்தனர் இத்யந்வயஃ ... ... ... ... ... ... *

---

# பத்தாம்பாட்டு.

விதிவகைபுகுந்தனரென்றுநல்வேதியர்
பதியினிற்பாங்கினிற்பாதங்கள்கழுவினர்
நிதியுநற்சுண்ணமுநிறைகுட்விளக்கமு
மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே.

## ஆறுயிரப்படி.

(விதிவகை) நம்முடையபாக்யத்தினாலேயிங்கேபுகுந்தனரென்று, அஸ்கலிதஜ்ஞாநரான * அயர்வறுமமரர்கள், தங்கள்திருமாளிகைகளிலே யதோசிதமாக விவர்களுடைய திருவடிகளை விளக்கினார்கள்; சிரகாலவிர ஹிதபுத்ரஸந்தர்ஸநத்தினாலே ஜநநீப்ரீதையாமாபோலே, இவர்களைக்க ண்டு ப்ரீதைகளாய், அந்தப்ரீத்யதிசயத்தினாலே, சரத்காலத்தில் பரிபூர் ணசந்த்ரமண்டல ஸத்ருஸமான திருமுகமண்டலங்களையுடையரான பெ ரியபிராட்டியும் ஸ்ரீபூமிப்பிராட்டியும் நப்பின்னைப்பிராட்டியும், தங்களு டைய திவ்யபரிசாரிகைகளோடேகூட, தங்களுக்கு பரமதநமான ஸ்ரீசட கோபனும் நற்சுண்ணமும் நிறைகுட்விளக்கமும் மற்றும் மங்களமான சத்காரோபகரணங்களையெல்லா மேந்திக்கொண்டு வந்தெதிர்கொண்டா ர்களென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்ரீவைகுண்டநாதன் நியோகத்தாலே சூரிகளும் திவ்யாப்ஸரஸ் ஸுக்களு மாதரித்தபடியை யருளிச்செய்கிறார்.

விதிவகை - நம்முடைய பாக்யரூபமான வீஸ்வரநியோக ப்ரகாரத்திலே. பு குந்தனர் - வந்துபுகுந்தார்கள். என்று - என்றுப்ரீதராய். நல்வேதியர்-விலக்ஷணஸ் வரூபராய் " ஸாய்ஸந்திதேவாஃ " (ஸாத்யாஸ்ஸந்திதேவாஃ) என்று வேதாந் தவேத்யரானசூரிகள். பதியினில்-தந்தாமுடைய திவ்யஸ்த்தாநங்களிலே. பாங்கினி ல்-சோபசாரமாக. பாதங்கள்கழுவினர்-அவர்திருவடிகளை விளக்கினார்கள். நிதியும்-

"[illegible]" (தரம்மதீயம்) என்கிறபடியே ஆஸ்ரிதர்க்கு நிதியான திருவடிநிலைகளையும். நற்சுண்ணமும்–திருமேனியோட்டை ஸ்பர்ஸத்தாலே விலக்ஷணமான திருச்சூர்ணத்தையும். நிறைகுடம்-பூர்ணகும்பங்களையும். விளக்கமும்-மங்களதீபங்களையும். இவர்கள் தர்ஸநத்தாலே, மதி - பூர்ணசந்த்ரனைப்போலேவிளங்குகிற. முகம்-முகத்தையுடையராய். மடந்தையர்-தங்கள் பாரதந்த்ர்யஸூசகமான மடப்பத்தையுடைய திவ்யாப்ஸரஸ்ஸுக்கள். வந்து-எதிரேவந்து. ஏந்தினர்-ஏந்தினார்கள்.........*

## ஈடு - பத்தாம்பாட்டு.

நித்யஸூரிக ளிவர்களைக்கொண்டாடும்படியை யருளிச்செய்கிறார்.

(விதிவகைபுகுந்தனரென்று) "வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே!" என்று இவர்கள் சொல்லுகிறது வார்த்தையன்றென்று, வேறே சிலர் "இவர்களிங்கேவந்து புகுரப்பெற்றது நாம்பண்ணினபாக்யபலமன்றோ" என்பர்கள். விஷயங்கள் நடையாடுகிற சம்சாரத்திலேயிருந்து வைத்து அநந்யப்ரயோஜநராய், பகவத்குணாநுபவம் பண்ணப்பெற்ற மஹாபுருஷர்களாய், "விண்ணுளாரிலும்சீரியர்" என்கிற விவர்களிங்கேவந்து புகுரப்பெற்றது நாம்பண்ணினபாக்யபலமன்றோவென்பர்கள். "வைகுந்தம்புகுவது" என்றதங்கு, இங்கு (புகுந்தனர்) என்கையாலே - தங்கள்பாக்யத்தைக்காட்டுகிறது. (நல்வேதியர்) "[illegible]" (யத்ரர்ஷயஃப்ரதமஜாயேபுராணாஃ) "[illegible]" (யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவாஃ) "[illegible]" (தத்விப்ராஸோவிபந்யவோஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே) என்று வேதங்களாலே ப்ரதிபாத்யரானவர்கள். (பதியினில்) அநந்தவைநதேயாதிகள் தங்கள் திருமாளிகைகளிலே கொடுபுக்கு. (பாங்கித்யாதி) "இவனொருசம்சாரிசேதநன், நாம் அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தர்" என்றுவாசிவையாதே, இவனை ஸிம்ஹாஸநத்திலேயுயரவைத்து, அவர்களுககுப் பாங்காகத்தாங்களிருந்து திருவடிகளைவிளக்குவர்கள்.

(நிதியித்யாதி) அவ்வளவிலே, பகவத்பரிசாரிகைகள்வந்தெதிரேற்பர்கள். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நிதியான திருவடிநிலைகளையும், திருச்சுண்ணப்ரசாதத்தையும், நிறைகுடங்களையும் மங்களதீபங்களையுமேந்தி. (மதிமுகமடந்தையர்) தேசாந்தரம்போனப்ரஜைவந்தால் தாய்முகம்குளிர்ந்திருக்குமாபோலே, ஹர்ஷத்தாலே, பூர்ணசந்த்ரனைப்போலேயிருக்கிற முகங்களையுடையவர்கள் வந்தெதிர்கொண்டார்கள் ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (விதிவகையித்யாதி) "நல்வேதியர்- விதிவகைபுகுந்தனரென்று-பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (நித்யஸூரிகளித்யாதி.)

"மண்ணவர்விதி" என்னாதே, சாமாந்யமாக "விதிவகை" என்றதுக்குபாவம் (வைகுந்தமித்யாதி) விவரணம் (விஷயங்களித்யாதி) கீழே - அவர்கள்பாக்யத்தாலேயென்றுசொல்லி, இங்கே - நம்முடையபாக்யமென்கைக்கு நியாமகமேதென்ன (வைகுந்தமித்யாதி) அதாவது - கீழைப்போலன்றிக்கே, "புகுந்தனர்" என்று - ப்ரவேஶத்தை ப்ரத்யக்ஷமாகக்காட்டுகையாலே, தத்தேதுவான ஸ்வபாக்யத்தைக்காட்டுகிறதென்றபடி.

நல்வேதியர் - ஸ்ரீபுருஷஸூக்தாதிகளில் ப்ரதிபாத்யரானவர்களென்றபடி. வைதிகத்வத்தில் நன்மையாவது - ஸ்ரீபுருஷஸூக்தாதிப்ரதிபாத்யத்வம். "ப்ரதம ஜாঃ - ருஷயঃ" (ப்ரதமஜாঃ-ருஷயঃ) என்கையாலே - நித்யாஸங்குசிதஜ்ஞாநரென்கிறது. புராணாঃ - பகவதநுபவத்தாலே யிளகிப்பதித்தவர்கள். புராபிநவாঃபுராணாঃ என்றபடி. விப்ராஸঃ - மேதாவிநঃ. தத்விபந்யவঃ - பகவத்விஷயஸ்துதிபராঃ. ஜாக்ருவாம்ஸঃ - பகவதநுபவைகாக்ராঃ. சமிந்ததே - விளங்காநின்றார்களென்றபடி.

மேலுக்குபாவம் (அவ்வளவிலேயித்யாதி.) தாத்பர்யம் (தேசாந்தரமித்யாதி.)

நல்வேதியர் - விதிவகைபுகுந்தனரென்று - பதியினில் பாங்கினில் பாதங்கள்கழுவினர், நிதியுமென்றுதொடங்கி, வந்து - ஏந்தினர் இத்யந்வயঃ ...............*

---

# பதினொன்றாம்பாட்டு.

வந்தவரெதிர்கொள்ளமாமணிமண்டபத்
தந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை
கொந்தலர்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொற்
சந்தங்களாயிரத்திவைவல்லார்முனிவரே.

## ஆறாயிரப்படி.

(வந்தவர்) சர்வேஶ்வரனாய் ஸ்ரியঃபதியாயிருந்த வெம்பெருமான் றானும் வந்தெதிர்கொள்ளத் திருமாமணிமண்டபத்திலேசென்று அந்தமில்பேரின்பம் விளையும்படியாக * அயர்வறுமமரர்களோடேகூடத் தாமிருந்தமையைச்சொன்ன வித்திருவாய்மொழியைவல்லார், அந்தமில்பேரின்பத் தடியரோடிருக்கப் பெறுவரென்கிறார் ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவதநுபவத்தை யருளிச்செய்கிறார்.

அவர்-லக்ஷ்மீஸஹாயரானவவர்தாமே. வந்து - வந்து. எதிர்கொள்ள - எதிர்கொள்ள. மாமணிமண்டபத்து - திருமாமணிமண்டபத்திலே. அந்தமில்-முடிவின்றியே. பேர்-அபரிச்சிந்நமான. இன்பத்து - ஆநந்தத்தையுடைய. அடியரோடு - ஸூரிகளோடேகூடி. இருந்தமை-இருந்தப்ரகாரத்தை. கொந்தலர் - பூங்கொத்துஅலருகிற.

பொழில்-பொழிலையுடைய. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்ததாய். சந்தங்கள்-சந்தஸ்ஸுக்களான வ்ருத்தபேதங்களையுடைய. ஆயிரத்து-ஆயிரத்து. இவை-இப்பத்தையும். வல்லார்-அநுசந்திக்கவல்லவர்கள். முனிவர்-பரமபதத்திலே பகவத்குணமநநசீலராவர்கள்.

சந்தஸ்ஸுக்களென்று - வேதமாகவுமாம்.

வந்தவரெதிர்கொள்ளவென்று - ப்ரதாநரான விஷ்வக்ஸேநாதிகளாகவுமாம்.

இது கலிவிருத்தம் ......................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியப்யசித்தவர்கள் நித்யசூரிகளோடொப்பரென்கிறார்.

(வந்தவரெதிர்கொள்ள) பிராட்டியோடேகூட வெம்பெருமான் முன்வந்தெதிர்கொள்ள. அப்ராக்ருதரான * அயர்வறுமமரர்களென்னவுமாம். (மாமணிமண்டபத்து) ஆநந்தமயமான திருமாமணிமண்டபத்திலே. (அந்தமில்பேரின்பத்து) * அநந்தக்லேஶபாஜநத்துக் கெதிர்த்தட்டிறே; சம்சாரத்தில் சுகமென்று ப்ரமிக்குமித்தனை, துக்கமேயுள்ளது. பாண்டு ஒருவன்மேலே அம்பைவிட, " சம்சாரத்திலாயிரம்கூற்றிலொரு க்ஷணமாய்த்து சுகமுள்ளது, அத்தனையும் புஜிக்கவொட்டிற்றிலையே" என்றானிறே. (அடியரோடிருந்தமை) "அடியார்கள்குழாங்களை-உடன்கூடுவதென்றுகொலோ" என்று ஆசைப்பட்டபடியேயிருந்தமை. (கொந்தலரித்யாதி) நித்யவசந்தமான சோலையையுடைத்தான திருநகரியையுடைய வாழ்வாரருளிச்செய்த. போக்கிலே யொருப்பட்டவாறே திருநகரியே தொடங்கிப்போலேகாணும் சோலைசெய்வது.( சந்தங்களாயிரத்து) சந்தஸ்ஸுக்களையுடைத்தான வாயிரமென்னுதல், சந்தோரூபமான வாயிரமென்னுதல். (இவைவல்லார்முனிவரே) இப்பத்தை யப்யஸிக்கவல்லார், அத்தேசத்திலே பகவத்குணாநுபவம்பண்ணி அதிலேவித்தராய் அதுக்கவ்வருகு கால்வாங்கமாட்டாதேயிருக்கு மவர்களைப்போலேயாவர்கள்...*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (வந்தவரித்யாதி) "இவைவல்லார்முனிவர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

"அவர்-வந்து-எதிர்கொள்ள" என்றந்வயித்து; "அவர்" என்றதச்சப்தம் ப்ரக்ருதபராமர்ஶியாகையாலே, "வடிவுடைமாதவன்" என்று - கீழே ஸ்ரியஃபதி ப்ரஸ்துதனாகையாலே; அத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் (பிராட்டியோடித்யாதி) "நல்வேதியர்" என்று - சூரிகளும் ப்ரஸ்துதரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அப்ராக்ருதரானவித்யாதி) ஆக, "அவர்" என்று - பிராட்டியு மீஶ்வரனுமாதல், நித்யசூரிகளுமாதலென்றர்த்தத்வயம்.

இத்தால்பாவம் (அநந்தேத்யாதி) சம்சாரத்தில் சுகமில்லையோவென்ன (சம்சாரத்திலித்யாதி) சம்சாரத்திலே துக்கமேயுள்ளதென்றதுக்குசம்வாதம் (பாண்டு வித்யாதி) ஒருவன்மேலே - ம்ருகமாயிருந்தருஷிமேலே. (என்றுனிறே) அம்புபட்டவனென்றபடி. ஒருருஷி, மானுய், தானும் தன்னுடைய ஸ்த்ரீயுமாய்க்கொண்டு சம்ஶ்லேஷித்துக்கொண்டிருக்கிறவளவிலே, பாண்டு அவன்மேலே அம்பைவிட, அந்தபாண்டுவைப்பார்த்து, "பாவி, சம்சாரத்தில் சுகமேயில்லை, உண்டானுலும் ஆயிரம்கூற்றிலொருக்ஷணமாய்த்து சுகமுள்ளது, அம்மாத்ரத்தையும் புஜிக்கவொட்டிற்றிலை" என்றுனிறே யென்றபடி. இருந்தமை - இருந்தப்ரகாரத்தை. பரமாத்மாவோடேகூடுகையன்றே வுத்தேஶ்யம், அடியரோடிருக்கை யுத்தேஶ்யமோவென்ன (அடியார்களித்யாதி,)

இப்போது "கொந்தலர்" என்கிறதென்னென்ன (போக்கிலேயித்யாதி.) சந்தஸ்ஸுக்களை - லக்ஷணங்களை. சந்தோரூபமான - வேதரூபமான. "முனிவர்" என்றதுக்கர்த்தம் (இப்பத்தையித்யாதி) கொந்தலர்-கொத்துக்கொத்தாகவலருகிற. முனிவர்-மநநசீலரானவர்கள். "சொல்" என்றது - சொன்னவென்றபடி.

"அந்தமில் பேரின்பத்து" என்றது - ஆழ்வார்க்கு விசேஷணமாதல், * அடியார்க்கு விசேஷணமாதல்... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(சூழ்விசும்பு.)

ஸ்வாமித்வாத், ஶ்ரீஶ நாராயண இதி யஶஸா, விக்ரமாக்ராந்த விஷ்டபாநாம்,
ஶ்ரீமத்த்வாத், சக்ரவத்த்வாத், ஜலநிதிஶயநாத், கோபபாவாத், வைகு
ண்டஸ்வாமிபாவாத், த்ரிவிதநிஜஜநாநந்திநா ஸ்வம் லோகம்
ப்ராபயந் ஸ்வாந் ப்ரதிதிகமயாம் ஶ்ரீஶடாரிர்பபாஷே ॥ (ககஉ)

(ஸ்வாமித்வாத்) எழ்பொழிலும்வளமேந்திய வென்னப்பன் - சர்வஸ்வாமியாகையாலும்; (ஶ்ரீஶநாராயணஇதியஶஸா) நாரணன்றமரைக்கண்டுகந்து-சர்வநியந்தாவாகையாலும்; (விக்ரமாத்விஷ்டபாநாம்) பூமியன்றளந்தவன் - த்ரிவிக்ரமரூபத்தைக்கொண் டெல்லாலோகங்களையு மளக்கையாலும்; (ஶ்ரீமத்வாத்) மதுவிரிதுழாய்முடிமாதவன், மாதவன்றமரொன்று - ஶ்ரியஃபதியாகையாலும்; (சக்ரவத்வாத்) ஆழியான்றமரென்று - திருவாழியை திவ்யாயுதமாக வுடையனுகையாலும்; (ஜலநிஶயநாத்) தொடுகடல்கிடந்த - கம்பீரமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகையாலும்; (கோவிந்தபாவாத்) கோவிந்தன்றனக்கென்று - எல்லார்க்கும் சுலபனும்படி க்ருஷ்ணனுய்வந்தவதரிக்கையாலும்; (வைகுண்டஸ்வாமிபாவாத்) வைகுந்தன்றமரெமர், விதிவகைபுகுந்தனரித்யாதி - பரமபதத்துக்கும் அவற்றிலுள்ளசூரிகளுக்கும் நிர்வாஹகனுகையாலும், எம்பெருமான் ஆஶ்ரிதஜநங்களை யர்ச்சிராதிகதியாலே * தன்னுடைச்சோதியை யடைவிப்பிக்கிறுனென்று * சூழ்விசும்பணிமுகிலிலே சட்கோபருளிச்செய்தாரொன்கிறுர்... ... ... ... ... ... ... ... *

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

சூழ்ந்துநின்றமால்விசும்பில்தொல்லைவழிகாட்ட
ஆழ்ந்ததனைமுற்றுமநுபவித்து - வாழ்ந்தங்
கடியருடனேயிருந்தவாற்றையுரைசெய்தான்
முடிமகிழ்சேர்ஞானமுனி. (கூகூ)

( சூழ்ந்துநின்ற ) இதில், அர்ச்சிராதிமார்க்க சத்காரத்தையடையக்காட்ட வநுபவித்தருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இவரை அமர்ந்தநிலமான பரமபதத்திலே கொடுபோய்வைத்து, இவரும் தானுமாக வநுபவிப்பதாக சர்வேஸ்வரன்விசாரித்து, இவர்க்கர்ச்சிராதிமார்க்கத்தையும், அங்குள்ளார்பண்ணும் சத்காரவிசேஷங்களையும், பரமபத ப்ராப்தியையும், அங்குள்ளார்வந் தெதிர்கொண்டு சத்கரிக்கும் கட்டளைகளையும், தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும், இவர்க்குக்கண்டநுபவிக்கலாம்படி பரஜ்ஞாநதசையைப்பிறப்பித்துக்காட்டிக்கொடுக்க, இவரும், கட்டடங்க வவற்றைக்கண்டநுபவித்து, தாம் பெற்றபேற்றை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * சூழ்விசும்பணிமுகிலின ர்த்தத்தை "சூழ்ந்துநின்றமால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட) கீழிவரைச்சூழ்ந்துகொண்டு நிருத்தரனுய்நின்ற சர்வேஸ்வரன், "ஏஷாஸாத்ருஶ்யதே" (ஏஷாஸாத்ருஶ்யதே) இத்யாதிப்படியே பரமாகாசத்தில் "ஜகதஶ்ஶாஶ்வதேமதே" (ஜகதஶ்ஶாஶ்வதேமதே) என்று பூர்வமார்க்கமான அர்ச்சிராதிமார்க்கத்தைக்காட்ட, அமந்த்ரஜ்ஞோத்ஸவகோஷம்போலே ஏறப்பெறுகிற வெழுச்சியை சூசிப்பிக்கிற மேகசமுத்ரபேரீகீத காஹளசங்காஸீஸ்துதி கோலாஹலம் செவிப்படும்படியையும், "அலங்காரவிதிம்க்ருத்ஸ்நாம்காரயாமாஸவேஶ்மந:" ( அலங்காரவிதிம்க்ருத்ஸ்நாம்காரயாமாஸவேஶ்மந: ) என்கிறபடியே அங்குள்ள ஆதிவாஹிக சத்காரக்ரமத்தையும், மேல்நித்யசூரிகள் ப்ரத்யுத்கதராய் சத்கரிக்கும் க்ரமத்தையும், த்வாராத்யக்ஷராதரிக்கும் க்ரமத்தையும், திவ்யாப்ஸரஸ்ஸத்கார க்ரமத்தையும், சர்வேஸ்வரனும் பெரியபிராட்டியாரு மாதரிக்கும்படியையும், திவ்யசூரிபரிஷத்திலேயிருந்து ஆநந்தநிர்ப்பரரா யநுபவிக்கும்படியையும். (தொல்லைவழிகாட்ட) என்று - அதிலேயிவ்வளவு மநுவர்த்தித்தபடி. (ஆழ்ந்ததனைமுற்றுமநுபவித்து) அதிலேயாழங்காற்பட்டு, அவன்காட்டினதெல்லாவற்றையும் கட்டடங்கவநுபவித்து. அதாவது - "சூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின - ஆழ்கடலலைதிரைகையெடுத்தாடின" என்றும், "நாரணன்றமரைக்கண்டுகந்துநன்னீர்முகில் - பூரணபொற்குடம்பூரித்ததுயர்விண்ணில்" என்றும், "தொழுதனருலகர்கள்" என்றுதொடங்கி "வழியிதுவைகுந்தர்க்கென்றுவந்தெதிரே" என்றும், "எதிரெதிரிமையவர்" என்றுதொடங்கி "மதுவிரிதுழாய்முடிமாதவன்றமர்க்கே" என்றும், "மாதவன்றமரென்று வாசலில்வானவர்" என்று தொடங்கி "வேதநல்வாயவர் வேள்வியுண்மடுத்தே" என்றும், "வேள்வியுண்மடுத்தலும்" என்றுதொடங்கி "வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே" என்

றும், "மடந்தையர்வாழ்த்தலும்" என்றுதொடங்கி "குடந்தையன்கோவல்ன்குடிய டியார்க்கே" என்றும், "குடியடியார்" என்றுதொடங்கி "வடிவுடைமாதவன்வைகு ந்தம்புகவே" என்றும், "வைகுந்தம்புகுதலும்" என்றுதொடங்கி "வைகுந்தம்புகுவ துமண்ணவர்விதியே!" என்றும், "விதிவகை" என்றுதொடங்கி "மதிமுகமடந்தை யரேந்தினர்வந்தே" என்றும், "வந்தவரெதிர்கொள்ளமாமணிமண்டபத் தந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும், இப்படிமுழுது மநுபவித்தபடியென்கை. (வாழ்ந்து) இவ்வநுபவத்தையடைவே யநுபவித்து க்ருதார்த்தராய். (அங்கடியருட னேயிருந்தவாற்றையுரைசெய்தான்) பரமபதத்திலே ஆநந்தமயமான திருமாமணி மண்டபத்திலே அநந்தகருட விஷ்வக்ஸேந ப்ரமுகராயுள்ளவடியாரோடே ஆநந்த நிர்ப்பரராயிருந்த ப்ரகாரத்தை யருளிச்செய்தார். ( முடிமகிழ்சேர்ஞானமுனி ) * முடியுடைவானவரோடேகூடுகையாலே முடியையுடையராய். ப்ரபந்தம் தலைக்க ட்டுகையாலே ஆழ்வாரே அளகபந்தத்திலே வகுளபந்தத்தையுடையராய்த் தலை க்கட்டினபடியை யருளிச்செய்கிறார். அவன் * மதுவிரிதுழாய்முடிமாதவன், இவர் (முடிமகிழ்சேர்ஞானமுனி) பரஜ்ஞாநத்தையுடைய பராங்குசமுநியானவர். (அடிய ருடனேயிருந்தவாற்றை யுரைசெய்தான்) * சூழ்விசும்பணிமுகில்தொடங்கி "அடி யரோடிருந்தமை" என்னுமளவுமருளிச்செய்தார், எல்லாரும் விஸ்வஸித்துஜ்ஜீவி க்கைக்காக... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௯௯)

பத்தாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - ௯௯.—பாட்டு - ௧0௯௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### முனியே-ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( முனியேநான்முகனே ) இப்படி * அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்த வாழ்வார், தாமிந்த ப்ரக்ருதியிலேயிருந்தவிருப்பைக் காணுயென்று ஏங்கிக்கூப்பிடுகிறார்... ... ... ... ... ... ... ... *

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், கீழ் அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய் தேசவிசேஷத்திலேபுக்குத் திருமாமணிமண்டபத்திலேயேறி சூரிபரிஷத்திலே அந்தர்ப்பவித்து நிரதிசயாநந்தயுக்தனுய்க்கொண்டு முக்தனிருக்குமிருப்பை அபரோக்ஷிப்பிக்க பரஜ்ஞாநத்தாலே யிதுதம்முடையபேறுக சாக்ஷாத்கரித்து அநுபவித்தவர், அந்த சமாதிகொலேந்தவாறே முன்பிருந்த சம்சாரத்தை தர்ஶித்து "கொடுவுலகங்காட்டேலே" என்று தாமஞ்சியிருந்த சம்சாரத்தை தர்ஶித்து மிகவுமார்த்தராய், அபரோக்ஷஸித்தமான விப்பேற்றைப்பெற்றல்லது தரிக்கமாட்டாதபடி பரமபக்தரூபமான நிரவதிகாபிநிவேசம்பிறந்து இவ்வளவும் நம்மைப்புகுர நிறுத்தினவன் தானேமுழுக்க நிர்வஹிப்பானுக வேறிட்டுக்கொண்டு பெரியதிருவடிதிருத்தோளிலே சந்நிஹிதனுய்த் தந்தலேயிலே திருவடிகளைவைத்து பலப்ரதாநத்திலே அதித்வரிதனும்படியையநுசந்தித்து, அவ்வநுசந்தாநபாவநத்வத்தாலே அபரோக்ஷஸித்தனுன சர்வேஶ்வரனுடைய உபகாரமான போக்யவிக்ரஹத்தையும், லக்ஷ்மீவல்லபத்வத்தையும், சர்வகாரணத்வத்தையும், சமஸ்தவஸ்து ப்ரகாரயோகத்தையும், அதிசயிதபோக்யத்வத்தையும், அத்யந்தப்ரணயித்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும், சர்வாந்தராத்மத்வத்தையும், சமஸ்தப்ரதாநத்வத்தையும், பரிபூர்ணபோகப்ரதத்வத்தையு மநுபவித்து, ஏவம்விசிஷ்டனுன சர்வேஶ்வரனுடைய சந்நிதியிலே தம்முடையவார்த்தியும் அபிநிவேசாதிசயமும் தோற்றும்படி அவனுடைய வுபகாரகத்வாதிகளைச்சொல்லி மறுக்கவொண்ணுதபடி பிராட்டிதிருவாணையிட்டு, " சர்வப்ரகாரரக்ஷகனுனநீ யெனக்கு பூர்ணுநுபவத்தைத்தரவேணும் " என்று மிகவும்கூப்பிட, அவனும் இவருடையவரவுக்கீடாக குணவிக்ரஹவிபூதி பரிபூர்ணனுய்க்கொண்டு பிராட்டியோடுங்கூட ஏகரஸமாம்படி சம்ஶ்லேஷித்த ப்ரகாரத்தையநுபவித்து, இனியிந்தப்பேற்றுக்குத்தட்டில்லையென்று நிஷ்கர்ஷித்து, தாம் அவாப்த சமஸ்தபலரானபடியைப்பேசி முடித்தருளுகிறார் ......................................................................*

ஈ ௫.

பரமபதத்திலேபுக்கு "அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்று நிரதிசயாநந்தயுக்தரா யத்திரளிலேயிருந்தவிருப்பு ஜ்ஞாநாநுசந்தாநமாத்ரமாய் பாஹ்யசம்ஶ்லேஷத்துக்கு யோக்யமன்றிக்கேயிருக்கிற விதுக்குமேலே, "இல்லைகண்டீரின்பம்" என்றும் "பிறப்பாம்பொல்லாவருவினைமாயவன்சேற்றள்ளல்பொய்நிலம்" என்றும் தாம்பிறர்க்குபதேசிக்கிற சம்சாரத்திலே ப்ரக்ருதிபத்தராயிருக்கிறபடியைக்கண்டு, மேருசிகரத்திலே நிர்த்துஃகனாய் சுகோத்தரனாயிருக்கிறவொருவன், துஃகபஹுளமாய் துஸ்தரமாய் பேராழமாய் ஓரிடத்திலும் ஸ்த்திதியின்றிக்கேயிருக்கும்படியான பாதாளத்திலேவிழுந்து நோவுபடுமாபோலே அவஸந்நராய், அதுக்குமேலே, தமக்கவன்பண்டுகைவந்தபடியையும், தன்னைப்பெறுகைக்குபாயம் தானேயல்லதின்றிக்கே யிருக்கிறபடியையும், தன்தலையிலே யொருசாதநத்தை யேறட்டுக்கொண்டநுஷ்ட்டிக்கு மவனுக்கும் தன்கைபார்த்திருக்கவேண்டும்படி சர்வரக்ஷகனாயிருக்கிறவிருப்பையுமநுசந்தித்து, அக்ஷணத்திலே பெருமையாலே "இப்படியிருக்கிறவன் நம்மையிங்ஙனே நோவுபடவிட்டுவைப்பதே!" என்று மிகவுமவஸந்நராய், மாதாபிதாக்கள் சந்நிதியுண்டாயிருக்க பசியாலும் தாஹத்தாலும் நோவுபடுகிற ஸ்தநந்தயப்ரஜை ஆர்த்தியின்மிகுதியாலே தாய்பேரைச்சொல்லிக் கூப்பிடுமாபோலே, * வளவேழுலகிற்படியையுடையதாம், தம் ஸ்வரூபத்தையநுசந்திக்க க்ஷமரன்றிக்கே, தூதர்வாயிலிட்டு நீட்டுகையுமன்றிக்கே, அவன்றன்னெதிரேநின்று பிராட்டியாணையிட்டுத் தலைக்கற்றுச்சொல்லும்படியான வாற்றாமையோடே, நிர்க்ருணருடைய ஹ்ருதயங்களுங்கூட விரங்கும்படியாகவும், அவனுக்குத்தம்மை ரக்ஷித்தல்லது பரமபதத்திலுமிருப்பரிதாம்படியாகவும், காட்டுத்தீயிலே யகப்பட்டாரைப்போலே ஆர்த்தத்வநியோடே பெருமிடறுசெய்து கூப்பிட்டு, "[Grantha script] " (ஸாகாம்ருகாராவணஸாயகார்த்தா ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்)என்கிறபடியே-தரிக்கமாட்டாமையாலே அவன்றிருவடிகளிலே சரணம்புக; பரமதயாளுவாகையாலே "இவரையிப்படியே நோவுபடவிட்டுவைத்தோமாகாதே!" என்று இவரிலுங்காட்டில் தான்நொந்து,பிராட்டியோடேகூடப் பெரியதிருவடிமேலே இவரபேக்ஷித்தபடியே பூர்ணமாகவந்துதோற்றி, இவருடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தையுமறுத்து, "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்று இவராசைப்பட்டபடியே அத்திரளிலே புகப்பெற்று, "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்றும் "அவாவற்றுவீடுபெற்ற" என்றும் இவர்தாமே சொல்லும்படி இவர்விடாயும்தீர்ந்து இவருக்கு மவ்வருகான தன்விடாயும்தீரும்படி சம்ஶ்லேஷித்தருளினனென்கிறார்.

இப்ப்ரபந்தத்துக்கு ப்ரமேயமானவஸ்து-சர்வேஸ்வரன்; இப்ப்ரபந்தம் - * அவாவிலந்தாதி; * மயர்வறமதிநலமருளப்பெற்றவர் - கவிபாடினார். இனி இவருடைய வவதாரந்தான்-சர்வேஸ்வரனுடைய வவதாரத்தோபாதி சாதுக்களுடைய சுக்ருதபலம் ...............................*

## ஜீயர் அரும்பதம்.

முனியேநான்முகன்ப்ரவேஶ, கீழோடேசங்கதி (பரமபதத்திலேயித்யாதி) ஜ்ஞாநாநுசந்தாநமாத்ரமாய் - அநுசந்தாநரூப ஜ்ஞாநமாத்ரமாய். பரமபதத்திலே பரமாநந்த யுக்தரானவர் ப்ரக்ருதிபத்தராய் நோவுபடுகைக்கு த்ருஷ்டாந்தம் (மேருவித்யாதி) பேராழம் - அத்யகாதம். "என்னையுயிர்வேறின்றி யொன்றாகவே" இத்யாதியைப்பற்ற (தமக்கவன்பண்டிதயாதி) "ஆவிக்கோர்பற்றுக்கொம்புநின்னலாலறிகின்றிலேன்" என்றத்தைப்பற்ற (தன்னைப்பெறுகைக்கித்யாதி) "மேவித்தொழும்பிரமன்சிவன்" இத்யாதியைப்பற்ற (தன்தலையிலேயித்யாதி) "என்பொல்லாக்கனிவாய்" இத்யாதிகளாலே அவன்பேரைச்சொல்லிக் கூப்பிடுகிறதுக்கு த்ருஷ்டாந்தம் (மாதாபிதாக்களித்யாதி) தூதர்வாயிலிட்டுநீட்டுகை - தூதர்முகேந வறிவிப்பிக்கை. தலக்கற்று-லஜ்ஜையற்று. தலக்கு-லஜ்ஜை. ஆற்றல்மிக்கா லவனைசரணம்புக்காருண்டோவென்ன (ஶாகாம்ருகாஇத்யாதி) யுத்தகாண்டே ஷஷ்டிதமே, "தெவ யக்ஷ கந்தர்வ ... " (தேவத்யமானுஷபிதாஸ்சவீராஃநாநத்யமாநாபயஶல்யவித்தாஃ) இதிபூர்வார்த்தம். "அந்தோ!" என்றத்தைப்பற்ற (இவரிலுங்காட்டில் தான் நொந்தென்றது.) "என்னவா" என்கிறவிவருடைய அவாத்தான், "கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே" என்றும் "பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து" என்றும்-பிராட்டியோட்டைச் சேர்த்தியிலே யுன்னைக்காணவேணுமென்றும் பெரியதிருவடியைமேற்கொண்டுவந்து தோற்றவேணுமென்று மிருக்குமதாகையாலே, அததீருகைக்காகப் பிராட்டியோடும் பெரியதிருவடியோடும்வந்து தோற்றினனென்கிறார் (பிராட்டியோடித்யாதி) "வீடுபெற்ற" என்றத்தைப்பற்ற (ப்ரக்ருதிசம்பந்தத்தையுமறுத்தென்றது.)

ப்ரபந்தபரிஸமாப்தியாகையாலே யிப்ப்ரபந்தத்திலே யெல்லார்க்கும் ருசிபிறக்கைக்காக ப்ரமேயப்ரமாண ப்ரமாத்ருவைலக்ஷண்யங்களையும், இவரவதாரவைலக்ஷண்யத்தையு மருளிச்செய்கிறார் (இப்ப்ரபந்தத்துக்கித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) .........................................................................................*

---

பத்தாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

முனியேநான்முகனேமுக்கண்ணப்பாவென்பொல்லாக்
கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமேயென்கள்வா
தனியேனாருயிரேயென்றலைமிசையாய்வந்திட்
டினிநான்போகலொட்டேனென்றுமாயஞ்செய்யேலென்னையே.

## ஆறாயிரப்படி.

நிகிலபுவநநிர்மாணத்ராண ஸம்ஹரணாதிலீலனாய், நிரவதிகசௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்யயௌவநாத்யபரிமிதோதாரகுணஸாகரனாயிருந்த வுன்னுடைய சௌந்தர்யாதிகுணங்களைக்காட்டி யென்னைத் தோற்பித்தடிமையாக்கி, எனக்கொருவனுக்கு முன்னுடையகுணங்களையே தாரகமாக்கி, என்னெஞ்சம் நிறையப்புகுந்திருந்தவுன்னை இனிநான் போகவொட்டேன், இனி பண்டுபோலே யுன்னுடையகுணசேஷ்டிதாதிகளை யென்னெஞ்சிலேகாட்டி வஞ்சித்து, என்னையொன்றும் மறப்பிக்கவொண்ணாது, இனிமெய்யேவந்து கலந்தருளவேணுமென்றுகொண்டு, தம்முடையவபேக்ஷிதம்செய்தல்லதெம்பெருமானுக்குத் திருநாட்டிலுங்கூட விருக்கவொண்ணாததொருபடி, பெரியவார்த்தியோடே பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிறார் ......................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஸ்ருஷ்ட்யாதிமுகத்தாலே யடியேபிடித் துபகாரகனாய்ப்போந்து வடிவழகைக்காட்டி ருசியைப்பிறப்பித்து உன்னையொழியச் செல்லாதபடியாக்கி என்னையநுபவிப்பிப்பதாக த்வரித்துவந்து சந்நிஹிதனானநீ, இனி குணாவிஷ்காரத்தாலே வஞ்சித்து அகலப்போக நினைசயயேனென்கிறார்.

நாமரூபவிபாகாநர்ஹமாய், சிதசிதவிசேஷிதமாய்க்கொண்டு ஸம்ஹ்ருதமாய், "ஸதேவ" (ஸதேவ) "ஏகமேவ" (ஏகமேவ) என்னும்படி ஏகீபவித்துக்கிடக்கிறதசையிலே, "ஈஶ்வராயநிவேதிதம்" (ஈஸ்வராயநிவேதிதம்) என்கிறபடியே ஆஸ்ரயணார்த்தமாகக்கொண்டு சேதநர்க்குக் கரணகளேபரங்களைக்கொடுப்பதாக * தயமாநமநாவாய்க்கொண்டு, முனியே-ஸ்ருஷ்டிப்ரகாரத்தை மநநம்பண்ணுமவனாய். மஹதாதிரூபஸமஷ்டியை ஸ்வயமேவஸ்ருஷ்டித்து, அண்டாந்தர்வர்த்தியான வ்யஷ்டிஸ்ருஷ்டியைப்பண்ணுகைக்காக, நான்முகனே - "ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே" (ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமித்வாமாவிஶ்யப்ரஜாபதே) என்கிறபடியே சதுர்முகனை சரீரமாகவுடையையாய். ஸம்ஹ்ருதிஸமயத்தில் ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய வுபஸம்ஹாரார்த்தமாக, முக்கண்ணப்பா-சக்திஸூசகமான த்ரிணேத்ரத்தையுடையனாய் அதிப்ரவ்ருத்த கரணருடைய வுபஸம்ஹாரத்தாலே உபகாரகனானருத்ரனை சரீரமாகவுடையையாய். அவர்களிருவர்க்கும் நடுவே ரக்ஷகனானதசையிலே, என்-எனக்கு. கனி-உன்பக்கலிலே ருசிபிறக்கைக்கடியான பக்வபலம்போலேபோக்யமான. வாய்-அதரத்தையும். தாமரை-தாமரைப்பூப்போலே தர்ஶநீயமான.கண்-கண்ணையுமுடைத்தாயிருப்பதொரு. பொல்லா-தொளையாத. கருமாணிக்கமே - கருமாணிக்கம்போலே யிருக்கிறவடிவையுடையையாய், என்-அநாதியாக ஆத்மாபஹாரம்பண்ணிப்போந்த சோரனானவென்னையும். கள்வா-அவ்வழகாலே யறியாதபடிவஞ்சித்து அபஹரித்துக்கொண்டவனாய். தனியேன்-அப்ராப்தபலனாகையாலே தனிமைப்பட்டவெனக்கு. ஆருயிரே-குணாவிஷ்காரத்தைப்பண்ணித் தன்னையொழியச்செல்லாதபடி யெனக்குப்பரிபூர்ணப்ராணனானவனே. "செழும்பறவைதானேறித்திரிவான தாளிணையென்தலைமேலே" என்னும்படி, என்-என். தலை - தலைக்கு. மிசையாய் - மேலாய்க்கொண்டு. வந்திட்டு - வந்துசமைந்து.

இனி - சம்ஸாரதோஷத்தோடே புருஷார்த்தத்தையு மாவிஷ்கரித்து ஆர்த்தியையும் அபிநிவேசத்தையும் ஜநிப்பித்தபின்பு. நான்-உன்னாலே லப்தஜ்ஞாந ப்ரேமனாய்க் கொண்டு அதித்வரிதனாய் உன்த்வரையையு மறிந்திருக்கிறநான். போகலொட்டேன்-முன்புபோலே நீயகன்றுபோகவிசையேன். என்னை-உன்னைப்பெறுவிடில் முடியும்படியானவென்னை. ஒன்றும்-சம்சாரதசையில் விஷயாந்தரங்களைக்காட்டி அந்யபரனாக்கினவோபாதியாதல், ருசிபிறந்தபின்பு குணாவிஷ்காராதிகளைப்பண்ணி ஆஶ்வஸிப்பித்தவோபாதியாதல் சிறிதும். மாயஞ்செய்யேல்-வஞ்சியாதொழியவேணும்.

## ஈடு - முதற்பாட்டு.

நிர்ஹேதுகமாக வுன்னுடைய சௌந்தர்யாதிகளைக்காட்டி யெனக்குன்னையொழியச்செல்லாதபடிபண்ணி யென்னை துஸ்ஸஹமான சம்சாரத்திலேவைத்து, நீபோய்ப் பண்டுபோலே யொருகுணாவிஷ்காரத்தைப்பண்ணிவிடவொண்ணாதென்கிறார்.

(முனியே) "𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌜𑍍𑌜𑌲𑌾𑌨𑌿𑌤𑌿" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்மதஜ்ஜலாநிதி) என்றும் "𑌸𑍃𑌷𑍍𑌟𑍌 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌪𑌾𑌲𑍍𑌯𑌞𑍍𑌚 𑌪𑌾𑌤𑌿 𑌚 । 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌚𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑌂𑌹𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃" (ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்விஷ்ணுःபால்யஞ்சபாதிச । உபஸம்ஹ்ரியதேசாந்தேஸம்ஹர்த்தாசஸ்வயம்ப்ரபுः) என்றும் "𑌸 𑌏𑌵 𑌸𑍃𑌜𑍍𑌯𑌃 𑌸 𑌚 𑌸𑌰𑍍𑌗𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸 𑌏𑌵 𑌪𑌾𑌤𑍍𑌯𑌤𑍍𑌤𑌿 𑌚 𑌪𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 𑌚 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑌿𑌰𑌶𑍇𑌷𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑍋 𑌵𑌰𑌦𑍋 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌃" (ஸஏவஸ்ருஜ்யஸ்ஸசஸர்க்ககர்த்தா ஸஏவபாத்யத்திசபால்யதேச । ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்டோவரதோவரேண்யः) என்றும் "𑌮𑌮𑍈𑌵𑌾𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇" (மமைவாம்ஶோஜீவலோகே) "𑌅𑌂𑌶𑍋 𑌨𑌾𑌨𑌾𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍" (அம்ஶோநாநாவ்யபதேஶாத்) என்றும்சொல்லுகிறபடியே - சிதசித்விசிஷ்டனான தனக்கே ஸ்ருஷ்டிசம்ஹாரங்களாகையாலே, "𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌪𑍍𑌸𑍁 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌆𑌪𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑌿 𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌤𑍇𑌜𑍋 𑌵𑌾𑌯𑍌 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌵𑌾𑌯𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌆𑌕𑌾𑌶𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌷𑍁 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌦𑍌 𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌰𑍍𑌮𑌹𑌤𑌿 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌮𑌹𑌾𑌨𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌮𑌸𑌿 𑌲𑍀𑌯𑌤𑍇, 𑌤𑌮𑌃 𑌪𑌰𑍇 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍀𑌭𑌵𑌤𑌿" (ப்ருதிவ்யப்ஸுப்ரலீயதே, ஆபஸ்தேஜஸிலீயந்தே, தேஜோவாயௌலீயதே, வாயுராகாஶேலீயதே, ஆகாஶமிந்த்ரியேஷு இந்த்ரியாணிதந்மாத்ரேஷு தந்மாத்ராணிபூதாதௌலீயந்தே, பூதாதிர்மஹதிலீயதே, மஹாநவ்யக்தேலீயதே, அவ்யக்தமக்ஷரேலீயதே, அக்ஷரம்தமஸிலீயதே, தமःபரேதேவஏகீபவதி) என்றுகொண்டு - தன்னோடேவிபக்தமானவித்தை "𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍" (பஹுஸ்யாம்) என்று சங்கல்பித்து விபக்தமாக்கி, தமஶ்ஶப்தவாச்யமாக்கி, அத்தை அக்ஷரமாக்கி, அக்ஷரத்தில்நின்றும் அவ்யக்தத்தையுண்டா

க்கி, அவ்யக்தத்தில்நின் றும் மஹானையுண்டாக்கி, மஹாநில் நின்றும் அஹங்காரத்தையுண்டாக்கி, அஹங்காரத்தில் நின்றும் பூததந்மாத்ரங்களையுண்டாக்கி, அவற்றைபூதங்களாக முற்றுவித்து, அண்டஸ்ருஷ்டிபர்யந்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணுவதாயுள்ள திவ்யசங்கல்பத்தையுடையனாய், பகவச்சப்தவாச்யனாய், பரப்ரஹ்ம பரமாத்மாதிசப்தங்களினாலே வேதாந்தங்களிற்சொல்லப்பட்ட, ஸ்வரூபேணாவஸ்த்திதனாயிருந்த பரமபுருஷனென்றவாறு. (முனியே) "ஸஹகாகீநாமெ௨த" (ஸஏகாகீநரமேத) என்கிறபடியே – சகலபதார்த்தங்களும் தந்தாமுடைய நாமரூபங்களையிழந்து ப்ரஹ்மத்தினுடைய நாமமும் ரூபமுமேயாய் அசித்கல்பமாய்க்கிடந்தாப்போலே, சர்வேஸ்வரனானதானும் இவற்றைப்பிரிந்து அசித்கல்பனானபடியைச்சொல்லுகிறது. (முனியே) "தெதாராவணநீதாயா ஸீதாயாஃ ஶத்ருகர்ஶநஃ। இயெஷவஉ௨வேஷ்டும்சாரணாசரிதெபதி" (ததோராவணநீதாயாஸ்ஸீதாயாப்ஶத்ருகர்ஶநஃ। இயேஷபதமந்வேஷ்டும் சாரணாசரிதேபதி) என்று – கடல்கொண்டவஸ்துவை நாடுகைக்குத் திருவடிபிச்சித்தாப்போலேயன்றோ, உருமாய்ந்தப்ரஜைகளையுண்டாக்க நீமநநம்பண்ணிற்று. ("வஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்றுமஹதாதிவிசேஷாந்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணுவதான மாநஸமான சங்கல்பத்தையுடையையாயிருந்துள்ள சர்வாதிகனே.) நானில்லாதவன்று நிர்ஹேதுகமாக வென்னையுண்டாக்கினநீ, நானுண்டாய் நோவுபடுகிறவின்றெனக்குதவவேண்டாவோ. (முனியே!) "அம்மே!" என்பானைப்போலே. அதாகிறது-கரணகளேபர விதுரமா யிவைகிடந்தவன்றுண்டாக்கினாய், ஆசைப்பட்டவெனக்கின்றுதவலாகாதோ. நீநினைக்குமன்றோ உதவலாவது, நான் நினைக்குமன்றுதவலாகாதோ. "ஶாகாம்ருகாராவணஸாயகார்த்தாஜக்முஃஶரண்யம் ஶரணம்ஸ்மராமம்" (ஶாகாம்ருகாராவணஸாயகார்த்தாஜக்முப்ஶரண்யம் ஶரணம்ஸ்மராமம்) என்றும் "ராக்ஷஸைஸ்ஸர்வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூஃ। ஶரண்யம்ஶரணம்யாதாராமம்தஶரதாத்மஜம்" (ராக்ஷஸைஸர்வத்யமாநாநாம் வாநராணும் மஹாசமூஃ। ஶரண்யம்ஶரணம்யாதாராமம்தஶரதாத்மஜம்) என்றும் சொல்லுகிறபடியே-உன்னையொழிய வொருபுகலில்லாதார்க் குதவுமவனன்றோ வென்கிறார்.

(நான்முகனே) "யொப்ரஹ்மாணம்விதயாதிபூர்வம்" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) என்று ப்ரஹ்மாவைஸ்ருஷ்டித்து, ஜீவத்வாரா அநுப்ரவேஸித்து, சேதநரானபுருஷர்கள் அசேதநமான ஸ்வம்ஸ்வம் சரீரங்களைக்கொண்டு தந்தாம் நினைவுக்குத்தக்கபடி கமநாகமநாதிசேஷ்டிதங்களைப்பண்ணுமாபோலே, ஸ்வஶரீரபூதனான சதுர்முகனுக் கந்தர்யாமியாய், அவனைக்கொண்டுமற்றும் சங்கல்பாநுகுணமாக தேவதிர்யங்மநுஷ்யஸ்த்தாவரரூபமான ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணினபடியைச் சொ

ல்லுகிறது. இத்தால் - இவன் நினைத்தவன்றேதேனுங்கொண்டு கார்யங் கொள்ளலாமாகாதேயென்கை. இருந்துபடைக்குமாஸநத்தோபாதி ப்ரஹ்மா; அசேதநமான மஹதாதிகளைக்கொண்டு ஸ்ருஷ்டித்தத்தோடு சேதநனை ப்ரஹ்மாவைக்கொண்டு ஸ்ருஷ்டித்தத்தோடு வாசியில்லையிவனுக்கு; சேதநனென்றும் அசேதநங்களென்றும் தன்னில்தான் வாசியுண்டேயாகிலும், அவனைக்குறித்துப்பரதந்த்ரமாமிடத்திலிரண்டுமொக்கும். தேவதிர்யங்மநுஷ்யனென்றும் ப்ராஹ்மணக்ஷத்ரிய வைஶ்யனென்றும் ஸ்வசரீரங்களைக்காட்டும் சப்தங்களாலே அவற்றில் வேறாயிருந்துள்ள தாங்களும் சொல்லப்பட்டாப்போலே, இங்கும், "யஸ்யாத்மா ஶரீரம்-யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்" (யஸ்யாத்மாஸரீரம் - யஸ்யப்ருதிவீஸரீரம்) என்றும் "ஜகத்ஸர்வம் ஶரீரந்தே" (ஜகத்ஸர்வம்ஸரீரந்தே) "தாநி ஸர்வாணி தத்வபுः" (தாநிஸர்வாணிதத்வபுः) "தத்ஸர்வம் வை ஹரேஸ்தநுः" (தத்ஸர்வம்வைஹரேஸ்தநுः) என்றும் சொல்லுகிறபடியே-சரீரவாசிசப்தம் சரீரபர்யந்தம் ஸ்வார்த்தாபிதாநம்பண்ணக்கடவதான ந்யாயத்தாலே, ஸ்வசரீரபூதனை சதுர்முகனைக்காட்டக்கடவ சதுர்முகசப்தத்தாலே-அவனில்வேறாய் அவனுக்கு ஆத்மாவாயிருந்த வெம்பெருமான் சொல்லப்படுகையாலே, "நான்முகனே" என்னும்சொல்லாலே எம்பெருமானை சம்போதிக்கிறது.

(முக்கண்ணப்பா) "யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதநம்" (யஸ்யப்ரஹ்மசக்ஷத்ரஞ்சஉபேபவதஓதநம்) "ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்" (ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்) என்றும்சொல்லுகிறபடியே-ஸம்ஹார்யங்களோடேகூட ஸம்ஹாரகனையும், ஸம்ஹரிக்கிற ஸர்வேஶ்வரனுக்கு சரீரபூதனை த்ரிணேத்ரனுடையபேரான சப்தத்தினாலே-அவனில் வேறாய் அவனுக்கந்தராத்மாவான வெம்பெருமானை சம்போதிக்கிறது. (அப்பா) உபகாரம். ஸ்ருஷ்டியிலுமுபகாரமிறே ஸம்ஹாரம். நாலுநாள்கழித்து ஸ்ருஷ்டிக்கிலும் சத்தைகிடக்கும், சடக்கென ஸம்ஹரியாவிடில் சத்தையிழக்கவேண்டும்படி தீம்பிலேயாய்த்துக் கைவளர்வது. எங்ஙனேயென்னில்; தந்தாம் கையைக்கொண்டு கண்ணைக்கலக்கிக்கொள்வாரைப்போலே, ஸ்ருஷ்டித்தஸ்ருஷ்டிபேற்றுக்குட்டலன்றியே தீம்புக்குட்டலானவாறே,சிறுப்ரஜைகளைக் கையிலும்காலிலும் விலங்கிட்டுரக்ஷிக்கும்மாதாபிதாக்களைப்போலே,கரணகளேபரவிதுரமாக்கி ஸம்ஹரித்திட்டுவைக்கையு முபகாரமாயிருக்கிறபடி; "ததா ஸம்ஹாரகः" (ததா-ஸம்ஹாரகः) என்கிறபடியே. "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் । ந ப்ரஹ்மா। நேஶாநः। நேமே த்யாவாப்ருதிவீ। ந நக்ஷத்ராணி । நாபோ நாக்நிர்ந ஸோமோ ந ஸூர்யः॥ ஸ ஏகாகீ ந ரமேத। தஸ்ய த்யாநாந்தஸ்ஸ்தஸ்யைகா கந்யா தஶேந்த்ரியாணி" (ஏகோஹவைநாராயணஆஸீத்।நப்ரஹ்மா।நேஸாநः।நே

மேத்யாவாப்ருதிவீ । நக்ஷத்ராணி। நாபோ நாக்நிர்நஸோமோநஸூர்ய:। ஸஏகாகீநரமேத । தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்யைகாகந்யாதஸேந்த்ரியாணி) இத்யாரப்ய "[illegible]" (அதபுநரேவநாராயணஸ் ஸோந்யம் காமம்மநஸாத்யாயீத। தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்யலலாடாத் ஸ்வேதோபதத்। தாஇமாஆப:। தத்திரண்மயமண்டமபவத் । தத்ரப்ரஹ்மாசதுர்முகோஜாயத ॥ அதபுநரேவநாராயணஸ்ஸோந்யம்காமம்மநஸாத்யாயீத। தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்யலலாடாத்ஸ்வேதோபதத் । ஸ்வேதாத்புத்புதமபவத்। புத்புதாத்த்ர்யக்ஷஶ்ஶூலபாணி:புருஷோஜாயத ) என்று சொல்லுகிற மஹோபநிஷத்வாக்யத்தை ப்ரத்யபிஜ்ஞைபண்ணுவிக்கிறது - (முனியேநான்முகனே முக்கண்ணப்பா) என்று. ("[illegible]" (ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்தகரணீம்) இத்யாதி.)

(என்பொல்லாக்கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே) ஸ்ருஷ்டிக்கும் ஸம்ஹாரத்துக்கும் நடுவு, பருந்திருஞ்சினுப்போலே யிருஞ்சிக்கொண்டுபோவர்களிறே ரக்ஷகரில்லாவிட்டால்; அதுக்காக, ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்த்தாக்களாய் ஆதிதேவர்களாயுள்ள ப்ரஹ்மருத்ரர்கள்நடுவே தானிக்ஷ்வாகுவம்ஶ்யரோடும் யதுவம்ஶ்யரோடு மொத்ததரத்தனுய்க்கொண்டு திருவவதாரம்பண்ணினுப்போலே, ஆதிதேவனுய் விஷ்ணுநாமாவாய் ஸ்வஸ்வரூபத்தினுலே திருவவதாரம்பண்ணி ரக்ஷிக்கும்படியைச் சொல்லி ஸம்போதிக்கிறது. கண்ணற்றுச்செய்யவேண்டுவதொன்ருகையாலே ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களுக்காளிடும், ரக்ஷணமாகிறதுதானே தண்ணளிபண்ணிச் செய்யவேண்டுவதொன்ருகையாலே வேருளிடவொண்ணுது, ஆளிட்டாலும் வேறுசிலரால் ரக்ஷிக்கவொண்ணுது; "[illegible]" (நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்) என்றும் "[illegible]" (நஸம்பதாம்ஸமாஹாரேவிபதாம்விநிவர்த்தநே। ஸமர்த்தோத்ருஶ்யதேகஶ்சித் தம்விநாபுருஷோத்தமம்) என்றும் சொல்லுகிறபடியே. (என்பொல்லா வித்யாதி) "நான்முகனே, முக்கண்ணப்பா" என்கிறவிடத்தில் கண்ணைச் செம்பிளித்துக்கொண்டுபோய் விசேஷ்யத்திலே யிளைப்பாறினுர்; இங்கு, விசேஷணமே உத்தேஶ்யமானபடியைச்சொல்லுகிறது (என்பொல்லாக்கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே) என்று. ஆழ்வார்கள் தாங்கள்

திருமேனிக்கப்பால் போகவறியார்களிறே; இத்தை சுபாஶ்ரயமாகச்சொல்லாநிற்கச்செய்தே, இத்தைவிட்டு திவ்யாத்மஸ்வரூபத்தளவும்போவென்கிறது - இத்தைவிடச்சொல்லுகிறதன்று, திவ்யாத்மஸ்வரூபத்தளவும் போவானென்கையிலே தாத்பர்யம். (பொல்லா) என்கிறவித்தை (கருமாணிக்கம்) என்றத்தோடேசேர்ப்பது. (பொல்லா—கருமாணிக்கம்) என்று—கண்ணெச்சில் வாராமைக்குக் கரிபூசுகிறுராதல், அழகில் விஸஜாதீயதையாலேயாதல் பொல்லாவென்கிறது. (கனிவாய்) "அவாக்யநாதரः" (அவாக்யநாதரः) என்கிறதத்த்வம், அநுகூலரைக்கண்டு தைர்யபங்கம்பிறந்து ஸ்மிதம்பண்ணிநிற்கும்படியைச்சொல்லுகிறது; "ஸ்வகர்மாநலதப்தாநாம் த்யாயிநாம்கேதஶாந்தயே" (ஸ்வகர்மாநலதப்தாநாம் த்யாயிநாம்கேதஶாந்தயே) என்னும்படியே. (தாமரைக்கண்) வினவப்புக்குவிக்கித்தடுமாறினல், குறையும்தலைக்கட்டும் கண்ணைச்சொல்லுகிறது; "அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய" (அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய) என்னும்படியே. (கருமாணிக்கமே) சம்சாரத்தில்விடாய்தீர அணைக்குமுடம்பைச்சொல்லுகிறது; "ஏஷஸர்வஸ்வபூதஸ்து" (ஏஷஸர்வஸ்வபூதஸ்து) என்னும்படியே. தாமரைபூத்ததொரு மாணிக்கம் ஸ்மிதம்பண்ணினப்போலேயாய்த்து வடிவிருப்பது.

(என்கள்வா) என்னிசைவின்றிக்கே யென்னை யபஹரித்தவனே. கர்மத்தினலே ஈஶ்வரனுடையதான வாத்மாவை முன்தோற்றுதேநின்ற பஹரிக்கும் இவன்; வடிவைக்காட்டி யிவனையபஹரிக்கும்அவன். சர்வேஶ்வரனுக்கும் தன்வஸ்துவைக் களவுகண்டுகொள்ளவேண்டும்படிக்கீடாயிறே இவனுடையவென்னினுரமிருப்பது. ஸ்ரீஜநகராஜன்பெண்பிள்ளையை நீர்வார்ப்பித்துத் தனக்காக்கினப்போலேயிறே ஆத்மாவைத் தனக்காக்கிக்கொள்ளுகையாவது.

(தனியேனருயிரோ) என்னிசைவின்றிக்கே யென்னைவிஷயீகரித்தவளவோ, உன்சுவட்டையறிவித்துப் பிரிந்தாலும் முடியாதபடி குணவிஷ்காரத்தாலே தரிப்பித்தவனே. (தனியேன்) சம்சாரிகளோடுபொருந்தாமையும், ப்ராப்யதேசத்தில்புகப்பெறுமையும். பிராட்டி அசோகவநிகையில் ராக்ஷஸிகள்நடுவேயிருந்தாப்போலேகாணும் இவர்க்கு சம்சாரிகள் நடுவேயிருக்கிறவிருப்பு. (ஆருயிரோ) உன்னைப்பிரிந்துபொருந்தாத சம்சாரத்திலேயிருந்தவெனக்கு ப்ராணஹேதுவாயுள்ளவனே.

(என்தலைமிசையாய்வந்திட்டு) "செழும்பறவைதானேறித்திரிவானதாளிணையென்தலைமேலே" "தலைமேலதாளிணைகள்" என்றுசொல்லுகிறபடியே - பூர்ணமாகவந்துதோற்றி. நிர்ஹேதுகமாகவந்தென்றும். (ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணுகிறவிடத்தில் உனக்கு ஜகத்தால் செய்யப்பட்டதொன்றில்லாதாப்போலே, என்னை யிவ்வளவாகப் புகுரநிறுத்தினவுனக் கென்னல்செய்யப்பட்டதொன்றில்லை. இனிமேலுள்ளது முனக்

கேபரமென்கை.) (இனி) உன்னைக்காட்டினமாத்ரமன்றியே, பரமபதத்தில் சுவட்டையுமறிவித்தபின்பு. (நான்) வழிச்சுவடறிந்தநான். (போகலொட்டேன்) தம்முடைய செல்லாமையாலும் ப்ராப்தியாலும் தடுக்கவும்வளைக்கவுமுரியரானபடி; “ஶ்ரேஷ்யே புரஸ்தாச்சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீததி” (ஶ்ரேஷ்யேபுரஸ்தாச்சாலாயாம்யாவந்மேநப்ரஸீததி) என்னும்படி. (போகலொட்டேன்) வரும்போதுன்ஸ்வாதந்த்ர்யத்தாலே வரலாமத்தனையல்லது, போம்போதுன்கார்யமுன்னதோ. இவர்க்கிப்படி சொல்லலாகிறது - ஸர்வஜ்ஞனறியத் தமக்குண்டான த்வரையாலேயும், அபேக்ஷித்தவளவிலே இவர்கார்யம் செய்யப்பெறாத பிற்பாட்டுக்கு “ஹ்ரீரேஷா ஹி மமாதுலா” (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்றுலஜ்ஜிக்குமவனாகையாலுமிறே.

(ஒன்றும்மாயஞ்செய்யேல்) உன்னையறிவதுக்குமுன்பு, த்யாஜ்யமானவிஷயங்களைக்காட்டி அதுவேயமையும் என்னப்பண்ணினாய்; உன்னையறிந்தபின்பு, குணங்களையாவிஷ்கரித்து, “உம்பரென்குறை” என்றும் “ஈதேயின்னம் வேண்டுவதெந்தாய்” என்னவும்பண்ணினாய்; அப்படியே, இனி ஒருகுணாவிஷ்காரத்தைப்பண்ணி, (அவ்வழியாலே) நான்பெற்றேனாகப்பண்ணி என்னைவஞ்சியாதேகொள். அங்ஙன்வேண்டுவானென்னென்ன (என்னையே) “ஏஹி பஶ்ய ஶரீராணி” (ஏஹிபஶ்யஶரீராணி) என்கிறபடியே - விரஹம்தின்றுசேஷித்த வுடம்பைக்காட்டுகிறார். அங்குசரீரமாத்ரமவர்களுக்கு; இவர்க்குஸ்வரூபநாசமிறே ...... ........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (முனியேயித்யாதி) “என்தலைமிசையாய்வந்திட்டு- என்பொல்லாக்கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே - தனியேனாருயிரே - ஒன்றும்மாயஞ்செய்யேல்” என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (நிர்ஹேதுகமாகவித்யாதி.)

“முனியே” என்றதுக்கு - “பஹு ஸ்யாம்” (பஹுஸ்யாம்) என்றுநினைக்குமவனென்றர்த்தம் சொல்லக்கோலி, இப்படி பஹுபவந சங்கல்பவிசிஷ்டனைச்சொன்னால் நிர்விகாரஶ்ருதிவிரோதம்வந்ததேயென்னில்; சிதசித்விசிஷ்டவேஷேண சங்கல்பமாகையாலே விரோதமில்லையென்று விவக்ஷித்து, சிதசித்விசிஷ்டவேஷேண ஸ்ருஷ்ட்யாதிகளென்னுமதுக்கு பலப்ரமாணங்களையும் காட்டுகிறார் (சர்வம்கல்வித்யாதி) “இதம் - ஸர்வம்” என்று-ஸ்தூல சிதசித்விசிஷ்டப்ரஹ்மத்தைச்சொல்லுகிறது, ப்ரஹ்மசப்தத்தாலே - சூக்ஷ்மசிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்தைச்சொல்லுகிறது. இதெல்லாமவனாகைக்கு ஹேதுசொல்லுகிறது - “தஜ்ஜலாந்” என்று. அவனிடத்திலேபிறக்கையாலும், அவனிடத்திலேலயிக்கையாலும், அவனாலே ரக்ஷிக்கப்படுகையாலும், இதெல்லாமவனென்கிறதென்றபடி. “ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்” இத்யாதிஶ்லோகத்வயம், ப்ரதமேம்ஶே த்விதீயே. “ஸ்ருஷ்டௌஸ்ருஜதிசாத்மாநம்” என்றது - சூக்ஷ்மசிதசித்விசிஷ்டனானதன்னை ஸ்ருஷ்டிகாலத்திலே ஸ்தூல சிதசித்விசிஷ்டனாக ஸ்ருஷ்டிக்கிறானென்றபடி. “பால்யஞ்சபாதிச” என்று-ரக்ஷிக்கப்படுகிறவஸ்துவும், ரக்ஷிக்கிறவனுமவனென்றபடி. உபஸம்ஹ்ரீயதஇதி-சம்

ஹரிக்கப்படுகிறவனும் சம்ஹரிக்கிறவனும் நியந்தாவான தானேயென்றபடி. (ஸஏ வேத்யாதி) "ஸஏவஸ்ரூஜ்ய ஸ்ஸசஸர்க்கர்த்தா ஸ ஏவ பாத்த்யத்திசபால்யதேச ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்டோவரதோவரேண்ய:" (ஸஏவஸ்ருஜ்யஸ்ஸசஸர்க்கர்த்தாஸ ஏவபாத்த்யத்திசபால்யதேச। ப்ரஹ்மாத்யவஸ்த்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்ட்டோவரதோவரேண்ய:) இஶ்ஶலோகத்துக்கர்த்தம் - ப்ரஹ்மத்வ விஷ்ணுத்வ ருத்ரத்வாத்யவஸ்த்தைகளாலே ஸ்ரஷ்டாக்களும் ஸ்ருஜ்யரும் ரக்ஷ்யரும் ரக்ஷகரும் சம்ஹார்யமும் சம்ஹாரகனும் சர்வத்தையும் சரீரமாகவுடையனாய், சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களையு டையனான விஷ்ணுவேயென்று - "அத்திச" என்றசஶப்தம்-அநுக்தசமுச்சயமாய், "அத்யதேச" (அத்யதேச) என்று-ஸம்ஹ்ரீயதேயென்றபடி. "த்வ்யேகயோர்த்விவசநைகவசநே" (த்வ்யேகயோர்த்விவசநைகவசநே) என்கிறசூத்ரத்தில், "த்வ்யேகயோ:" (த்வ்யேகயோ:) என்கிறவிது - த்வித்வைகத்வயோ: என்று பாவப்ரதாநமானாப்போலே, "ப்ரஹ்மாத்யவஸ்தாபி:" (ப்ரஹ்மாத்யவஸ்த்தாபி:) என்றதுவும் பாவப்ரதாநமாய், ப்ரஹ்மத்வாத்யவஸ்த்தாபி: என்கிறது. "அஶேஷமூர்த்தி:" என்றது - ஹேதுகர்ப்பவிசேஷணம். "வரிஷ்ட:, வரத:, வரேண்ய:" (வரிஷ்ட்ட:, வரத:, வரேண்ய:) என்கிற பதத்ரயங்களாலும் - சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களைச்சொல்லுகிறது. ஆனால், ப்ரஹ்மமும் இவையு மேகமோவென்ன; ப்ரமாணத்வயம் (மமைவாம்ஶ இத்யாதி) "மமைவாம்ஶோஜீவலோகேஜீவபூதஸ்ஸநாதந:। மந:ஷஷ்டாநீந்த்ரியாணிப்ரக்ருதிஸ்தாநிகர்ஷதி" (மமைவாம்ஶோஜீவலோகேஜீவபூதஸ்ஸநாதந:। மந:ஷஷ்ட்டாநீந்த்ரியாணிப்ரக்ருதிஸ்த்தாநிகர்ஷதி) இதி ஶ்ரீகீதாயாம்பஞ்சதஶே. ஜீவலோகேவர்த்தமாந:-ஜீவபூத:-மமைவசரீரபூத இத்யர்த்த:. சாரீரகமீமாம்ஸாயாம்த்விதீயாத்யாயே த்ருதீயபாதே, "அம்ஶோநாநாவ்யபதேஶாதந்யதாசாபிதாஶகிதவாதித்வமதீயதஏகே" (அம்ஶோநாநாவ்யபதேஶாதந்யதாசாபிதாஶகிதவாதித்வமதீயதஏகே) அஸ்யார்த்த:- ஜீவாத்மபரமபுருஷாம்ஶ:, குத:, நாநாவ்யபதேஶாத் - ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச இத்யாதி நாநாவ்யபதேஶாத். அந்யதாச, "தத்த்வமஸி" இத்யாதிநா ஐக்யோபதேஶாச்ச [தாஶகிதவாதித்வமதீயதஏகே] [அபிதாஶகிதவாதித்வமதீயத ஏகே] "ப்ரஹ்மதாஶா:, ப்ரஹ்மதாஸா:, ப்ரஹ்மேமேகிதவா:" (ப்ரஹ்மதாஶா:, ப்ரஹ்மதாஸா: ப்ரஹ்மேமேகிதவா:) இத்யாதர்வணிகா: ப்ரஹ்மணோதாஶகிதவாதித்வமதீயதே. ததஶ்சஸர்வஜீவவ்யாபித்வேநாபேதோவ்யபதிஶ்யத இத்யர்த்த:. ஏவமுபயவ்யபதேஶமுக்யத்வஸித்தயேஜீவோயம் ப்ரஹ்மணோம்ஶ: இத்யப்யுபகந்தவ்ய இதி. ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே, முந்தர சம்ஹாரக்ரமத்தைச்சொல்லிக்கொண்டு ஸ்ருஷ்டியையருளிச்செய்கிறார் (ப்ருதிவ்யப்ஸு இத்யாதி) சுபாலோபநிஷதி. ப்ருதிவியானது ஸ்வகாரணமான ஜலங்களிலே சம்ஸ்ருஷ்டையாகாநின்றதென்றபடி. லீயதே என்கிற லயசப்தம்-நாசபரமன்று, "லீஶ்லேஷணே" (லீஶ்லேஷணே) என்கிறதாதுவிலே சம்சர்க்கத்தைச்சொல்லுகிறது. மேலில்லயசப்தங்களுக்கும் - இதுவேயர்த்தம். ஆகாசமிந்த்ரியேஷு என்றது - ஆகாசத்துக்கு இந்த்ரியங்கள் காரணமல்லாமையாலே ஸ்வாந்தர்க்கதேதரபூதசதுஷ்டயத்தையுமுடைய வாகாசமிந்த்ரியங்களுக் காப்யாயகமாய்க்கொண்டு அவற்றிலே கூடுமென்றபடி. இந்த்ரியாணிதந்மாத்ரேஷு என்றது - இந்த்ரியங்களுக்கு தந்மாத்ரைகள் காரணமல்லாமையாலே அவற்றிலே லயம்கூடாமையால், அவ்விந்த்ரியங்க

ள், தந்மாத்ரைகளிலே சம்ஸ்ருஷ்டங்களாகாநின்றனவென்றபடி. தந்மாத்ராணி பூதாதௌலீயந்தே என்றது - தந்மாத்ரைகளும் அவற்றோடுகூடின விந்த்ரியங்களும் மஹத்தத்த்வகார்யமான வஹங்காரத்திலே லயியாநின்றனவென்றபடி. அதாவது- ஆகாசம், தந்மாத்ராவஸ்த்தையையடைந்து, ஸ்வகாரணமானபூதாதியிலே லீநமாம்; இந்த்ரியங்கள், ஸ்வகாரணமான சாத்த்விகாஹங்காரத்திலே லீநமாமென்றபடி. இங்கு, பூதாதியென்கிறது - தாமசாஹங்காரபரமல்ல, அஹங்காரமாத்ரபரம். "நான்முகனே, முக்கண்ணப்பா" என்கிறபதங்களில் – சத்வாரகமாக பரமபுருஷன்சொல்லப்படுகையாலே, "முனியே" என்கிறபதத்திலே - அத்வாரகமாக பரமபுருஷனைச்சொல்லுகிறதென்னு மிடந்தோற்ற (ஸ்வரூபேணாவஸ்த்திதனாயிருந்துள்ள) என்கிறார்.

"முனியே" என்றதுக்கர்த்தாந்தரம் (ஸஏகாகீத்யாதி) அதாவது-வெறுப்புடையவனேயென்னுதல்; துறந்தவனேயென்றாய், ஜகத்தையிழந்து தனியனாய் *தயமாநமநா வென்றிருக்குமவனேயென்னுதல். முனிவு-வெறுப்பும், துறக்கையும். "முனியே" என்றபதப்ரயோகத்துக்கு ஸத்ருஷ்டாந்தமாகபாவம் (ததோராவணேத்யாதி) சுந்தரகாண்டே ப்ரதமஶ்லோகஃ. இல்லாதவன்று உண்டாக்குகைக்குமநநம் பண்ணினத்தைச்சொன்னதுக்குபாவம் (நானில்லாதவித்யாதி) " ஆகையாலே (நானில்லாதவன்று) " என்றுகூட்டுவது.

"முனியே" என்றஸ்வரத்துக்குபாவம் (அம்மேயென்பாரைப்போலேயென்று) "அம்மேயென்பாரைப்போலே" என்றுசம்பந்தம்சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் (அதாகிறதித்யாதி) ஏதத்விவரணம் (நீநினைக்குமன்றோவித்யாதி) காரணத்வத்தைச்சொல்லுகிற விப்பதத்திலே அவனுடைய சரண்யத்வமும் பலிதமென்றுவிவக்ஷித்து, அதுக்குபாவம் ( ஶரகாம்ருகா இத்யாதி )யுத்தகாண்டே ஷஷ்டிதமே, "தேவய்மாநாஃபதிதாஸ்சவீராநாநத்யமாநாபயஶல்யவித்தாஃ" (தேவத்யமாநாஃபதிதாஸ்சவீராநாநத்யமாநாபயஶல்யவித்தாஃ) இதிபூர்வார்த்தம்.

"முனியே" என்கிறவித்தால் சம்ஹாராவஸ்த்தைசொல்லிற்றே, இப்பதத்தாலேதுசொல்லுகிறதென்ன; வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குபயுக்தமாக சமஷ்டிபுருஷனான ப்ரஹ்மாவுக் கந்தராத்மாவாயிருக்குமிருப்பைச் சொல்லுகிறதென்கிறார் (யோப்ரஹ்மாணமித்யாதி) ஜீவத்வாரா அநுப்ரவேசித்தென்றது - ப்ரஹ்மாவாகிற ஜீவத்வாரா ப்ரஹ்மசரீரத்திலே அநுப்ரவேசித்தென்றபடி. ஜீவத்வாரா அநுப்ரவேசித்தென்றது-வஸ்துத்வநாம பாக்த்வங்களுக்காக. அந்தர்யாமியாயென்றது-சதுர்முகவாசிசப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி யவனுடைய ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் ஸ்வாதீநமாயிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. பதப்ரயோகத்துக்குபாவம் (இத்தாலிவனித்யாதி) "நான்முகனே" என்றதுக்குபலிதம் (இருந்துபடைக்குமித்யாதி) " ஆசநத்தோபாதி " என்று ப்ரஹ்மாவை அசித்ப்ராயமாக்கலாமோவென்ன; ஈஶ்வரனைப்பார்த்தாலப்படிசொல்லலாமென்கிறார் (அசேதநமானவித்யாதி) எல்லாமென்றாலும் அசேதநத்தைப்பற்ற சேதநனுக்கு வாசியில்லையோவென்ன ( சேதநனென்றுமித்யாதி ) " நான்முகனே " என்கிறசப்தத்தாலே சர்வேஶ்வரனைச்சொல்லும்வழியேதென்ன (தேவதிர்யகித்யாதி) தாங்களும் - சேதநரும். அபிதாநம் - ப்ரதிபாதநம். (யோப்ரஹ்மாணமித்யாதி) ஶ்வேதாஶ்வதரே. (யஸ்யாத்மாஶரீரமித்யாதி) அந்தர்யாமிப்ராஹ்மணே. " ஜகத்ஸர்வம்ஶரீரந்தே ஸ்தைர்யந்தேவஸுதாதலம் । ஸலிலங்கோபவேவ்ரஸஸாஃதேஷுலோகாஸ்ஸ்வதக்ஷண " ( ஜகத்ஸர்வம்ஶரீரந்தே

ஸ்த்தைர்யந்தேவஸ்-தாதலம்| அக்நிஃகோபஃப்ரஸாதஸ்தேஸோமஶ்ஶ்ரீவத்ஸலக்ஷண) இதிராவணவதாநந்த்ரே ராமம்ப்ரதிசதுர்முகஃ. "யத்கிஞ்சித்ஸ்ருஜ்யதேயேநஸத்வ ஜாதேநவைத்விஜ। தஸ்யஸ்ருஜ்யஸ்யஸம்பூதௌ தத்ஸர்வம்வைஹரேஸ்தநுஃ। யாநிமூர்த்தாந்யமூர்த்தாநியாந்யத்ராந்யத்ரவாக்வசித்। ஸந்திவைவஸ்துஜாதாநி தாநிஸர்வாணிதத்வபுஃ" (யத்கிஞ்சித்ஸ்ருஜ்ய தேயேநஸத்வஜாதேநவைத்விஜ। தஸ்யவ்ருஜ்யஸ்யஸம்பூதௌ தத்ஸர்வம்வைஹரேஸ்தநுஃ। யாநிமூர்த்தாந்யமூர்த்தாநியாந்யத்ராந்யத்ரவாக்வசித்। ஸந்திவைவஸ்துஜாதாநி தாநிஸர்வாணிதத்வபுஃ) இதி ப்ரதமேம்ஶே.

த்ரிணேத்ரனை சம்ஹாரகாலத்திலே விசேஷாதிஷ்டாநம்பண்ணிக்கொண்டு அவ்வழியாலே யீஶ்வரன் சம்ஹரிக்கையைப்பற்ற, த்ரிணேத்ரசப்தத்தாலே அவனைச்சொல்லி சம்போதிக்கிறதென்கிறார் (யஸ்யேத்யாதி) கடவல்லியாம். ம்ருத்யுசப்தத்தாலே - அக்ந்யந்த கருத்ராதிகளைச்சொல்லுகிறது.

"அப்பா" என்றதுக்குபாவம் (அப்பாவித்யாதி) ஸ்ருஷ்ட்யாதிகளொழிய சம்ஹாரத்திலுபகாரமேதென்ன (ஸ்ருஷ்டியிலுமித்யாதி) அதெப்படியென்ன (நாலுநாளித்யாதி) உக்தார்த்தத்தை சங்காபரிஹாரரூபேண வருளிச்செய்கிறார் (எங்களேயென்னிலித்யாதி) ஸ்ருஷ்டியோபாதி சம்ஹாரமுமுபகாரமென்னுமதுக்குப்ரமாணம் (தத்தேத்யாதி) "ஏகஸ்த்வமஸிலோகஸ்யஸ்ரஷ்டாஸம்ஹாரகஸ்ததா। அத்யக்ஷஶ்சாநுமந்தாசகுணமாயாஸமாவ்ருதஃ" (ஏகஸ்த்வமஸிலோகஸ்யஸ்ரஷ்டாஸம்ஹார்க்ஸ்த்தா। அத்யக்ஷஶ்சாநுமந்தாசகுணமாயாஸமாவ்ருதஃ) இதிஜிதந்தாயாம்.

"முனியேநான்முகனேமுக்கண்ணப்பா" என்றத்தை ஶ்ருதியிலும் சொல்லிற்றென்கிறார் (ஏகோஹவைஇத்யாதி) மஹோபநிஷதி. இது "முனியேநான்முகனே முக்கண்ணப்பா" என்றமாத்ரத்துக்கு ப்ரமாணம். "தஸ்யத்யாநாந்தஸ்தஸ்ய" (தஸ்யத்யாநாந்தஸ்த்தஸ்ய) என்கிறஶ்ருதி - கல்பபேதவிஷயம்; ஶ்ருத்யந்தரத்திலே ருத்ரனுக்கு ப்ரஹ்மபித்ருகத்வம் சொல்லுகையாலே. த்யாநாந்தஸ்த்தஸ்ய-தான் பண்ணுகிற த்யாநத்துக்குள்ளே யிருக்கிறவனுக்கென்றபடி. "ஏகாகந்யா" என்று-மநஸ்ஸைச்சொல்லுகிறது.

ஸ்ரஷ்டாவையும் சம்ஹர்த்தாவையும் சொன்னவநந்தரம், விஷ்ணுவைப்பிரியச்சொன்னதுக்குபாவம் (ஸ்ருஷ்டிக்குமித்யாதி) இருஞ்சிறைப்போலே-அடித்தாப்போலே. (விஷ்ணுநாமாவாய்) என்றவிடத்திலே, "பரமாத்மாசஸர்வேஷாமாதாரஃபரமேஶ்வரஃ। விஷ்ணுநாமாஸவேதேஷு வேதாந்தேஷுசகீயதே" (பரமாத்மாசஸர்வேஷாமாதாரஃபரமேஶ்வரஃ| விஷ்ணுர்நாமாஸவேதேஷு வேதாந்தேஷுசகீயதே) என்றதநுசந்தேயம். "என்பொல்லா" என்றுதொடங்கி "கருமாணிக்கமே" என்னுமளவும - ரக்ஷணோபயோக்யாகாரங்களைச்சொல்லுகிறது. ப்ரஹ்மருத்ராந்தர்யாமியாய் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணினாப்போலே ரக்ஷணத்துக்கு மாளிடவொண்ணாதோவென்ன; த்வேதாபரிஹரிக்கிறார் (கண்ணற்றித்யாதி) கண்ணற்று -நிர்த்தயமாக. ஸ்ருஷ்டியில் கண்ணறுகையாவது - தத்தத்கர்மாநுகுணமாக தாரதம்யமுண்டாம்படி ஸ்ருஷ்டிக்கை. அப்படியொண்ணாதோவென்ன (நஹீத்யாதி) "ஸ்திதௌஸ்திதம்மஹாத்மாநம்பவத்யந்யஸ்யகஸ்யசித்" (ஸ்த்திதௌஸ்த்திதம்மஹாத்மாநம்பவத்யந்யஸ்யகஸ்யசித்) இத்யுத்தரார்த்தம். (நஸம்பதாமித்யாதி) ஶ்ரீவிஷ்ணுபுராணே:

"பொல்லாக்கனிவாய்" இத்யாதிவிசேஷணங்களுக்குபாவம் (நான்முகனேயித்யாதிவாக்யத்வயமும்) ஸ்வரூபகுணங்களிருக்க, திருமேனியைச்சொல்லுகிறதென்னென்ன (ஆழ்வார்களித்யாதி) இவ்விடத்தில், "யதோபாஸநம் பலமாகையாலே ப்ராதாந்யேந திவ்யமங்களவிக்ரஹத்தை விரும்பியிருப்பர்களாழ்வார்கள்" என்று சம்ப்ரதாயமாகவருளிச்செய்வர். ஆனால், சுபாஶ்ரயமான திவ்யமங்களவிக்ரஹத்தைவிட்டு திவ்யாத்மஸ்வரூபத்தை த்யாநம்பண்ணச்சொல்லுகிற வேதாந்தாதிசாஸ்த்ரத்தில், "விக்ரஹமில்லை" என்று தோற்றுநின்றதேயென்ன (இத்தையித்யாதி.)

பொல்லல் - துளைத்தலாய், துளையாதமாணிக்கம். அநுபபுக்தமான ரத்நம் போலேயிருக்கிறவடிவு. சிவப்புத்தோற்றுவது ஸ்மிதத்தாலே யாகையாலே யருளிச்செய்கிறார் (அவாக்யநாதர இத்யாதி) அவாகி - உக்திரஹிதः. ஸ்மிதம்சொல்லுகிறதுக்கு ப்ரமாணகதநமுகேநபாவம் (ஸ்வகர்மேத்யாதி) " [illegible] " (ஸ்வகர்மாநலதப்தாநாம் த்யாயிநாம்கேதஶாந்தயே । ஸ்வதந்தேந்துசயோத்தேநஹ்லாதயந்கோகணேநது) இதிஶ்ரீபௌஷ்கரே. கோகணேந-கிரணச்மூஹேநேத்யர்த்தः. இங்கே, உத்தரார்த்தத்திலேநோக்கு. "பூர்வகர்மாநலார்த்தாநாம்" என்றும் பாடமிருக்கையாலே, "ஸ்வகர்மாநலதப்தாநாம்" என்கிறவிது பாடபேதமென்று கண்டுகொள்வது.

"கனிவாய்" என்றத்தோடேகூட்டி "தாமரைக்கண்" என்றதுக்குபாவம் (வின்வவித்யாதி) "தாமரைக்கண்" என்கிறவர்க்குபாவம் - திருக்கண்களாலே குளிரநோக்கி யென்னார்த்தியைத்தீர்க்கவேணுமென்று விவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (அவலோகநேத்யாதி) " [illegible] " (தேவப்ரபந்நார்த்திஹரப்ரஸாதம்குருகேஶவ । அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய) இதிப்ரதமேம்ஶே ப்ரஹ்லாதः. * கருமையாலே - குளிர்த்தியைவிவக்ஷித்து, அதுக்குபாவம் (சம்சாரத்திலித்யாதி) அணைக்கிறதுக்குப்ரமாணம் (ஏஷஇத்யாதி) " [illegible] " (ஏஷஸர்வஸ்வபூதஸ்துபரிஷ்வங்கோஹநூமதः । மயாகாலமிமம்ப்ராப்ய தத்தஸ்தஸ்யமஹாத்மநः) இதியுத்தகாண்டே. "கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே" என்றத்தை ரூபகமாக வருளிச்செய்கிறார் (தாமரையித்யாதி)

"கள்வா" என்றதுக்குபாவம் (என்னிசைவித்யாதி) ஆத்மாபஹாரம்பண்ணுவானிவனாயிருக்க, அவனை "கள்வா" என்கிறதென்னென்ன (கர்மத்திலேயித்யாதிவாக்யத்வயம்) முன்தோற்றாதேநின்றென்றது - ஈஶ்வரனுடையதென்றறியாதேயென்றபடி. சேஷி சேஷவஸ்துவை ஸ்வீகரிக்கைகளவோ, "கள்வா" என்கிறதென்னென்ன (சர்வேஶ்வரனுக்குமித்யாதி) என்னாம் - மமதாபலம். த்ருஷ்டாந்தமுகேநவிவரணம் (ஶ்ரீஜநகராஜனித்யாதி.)

"என்கள்வா" என்றது - உபகாரமானப்போலே, "ஆருயிர்" என்றதும்பகாரமென்னுமத்தை யருளிச்செய்கிறார் (என்னிசைவித்யாதி) இவர்க்குத்தனிமையேதென்ன (சம்சாரிகளோடித்யாதி) உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் (பிராட்டியித்யாதி) சப்தார்த்தம் (உன்னையித்யாதி) தனிமைப்பட்டிருக்கிறவெனக்கு பரிபூர்ணப்ராணனவனேயென்றுசப்தார்த்தம்.

மூன்றினவர்த்தத்துக்கு; "தலைமிசை" என்று - தலைக்குமேலே யென்றாய், பூர்ணமாகவந்தென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, "தலைமிசையாய்-" இத்தலை, மிசையாய்-மிசையாம்படி, வந்து-நிர்ஹேதுகமாகவந்தென்றபடி.

* சூழ்விசும்பணிமுகில் ப்ரமேயத்தை யுபஜீவித்துக்கொண்டு, "இனி" என்றதுக்கர்த்தம் (உன்னையித்யாதி) "நான்" என்றதுக்கும் கீழ்ச்சொன்னத்தை யுபஜீவித்துக்கொண்டர்த்தம் (வழிச்சுவடித்யாதி) சுவடு - ரஸம். சேஷியானவனை "போகவொட்டேன்" என்று நிர்ப்பந்திக்கலாமோவென்ன (தம்முடையவித்யாதி) ஆர்த்தியாலு மநந்யகதித்வத்தாலுமென்றபடி. இப்படிவளைத்தபேருண்டோவென்ன (சேஷ்ய இத்யாதி) "𑌅𑌨𑌾𑌹𑌾𑌰𑍋𑌨𑌿𑌰𑌾𑌲𑍋𑌕𑍋𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍀𑌨𑍋𑌯𑌥𑌾𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 । 𑌶𑍇𑌷𑍍𑌯𑍇𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌯𑌾𑌂𑌯𑌾𑌵𑌨𑍍𑌮𑍇𑌨𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌤𑌿" (அநாஹாரோநிராலோகோ ஜ்ஞாநஹீநோயதாத்விஜ: | சேஷ்யேபுரஸ்தாச்சாலாயாம்யாவந்மேநப்ரஸீததி) இத்யயோத்யாகாண்டே சித்ரகூடேபரத:. சேஷியானவனை "போகவொட்டேன்" என்றுவளைக்கிறதுக்கு மூன்றாம்ஹேது (வரும்போதித்யாதி) ஆஸ்ரிதபாரதந்த்ர்யத்தாலு மவனைவளைக்கிறானென்றபடி. ஆர்த்தியையும் பாரதந்த்ர்யத்தையும் விவரிக்கிறார் (இவர்க்கிப்படியித்யாதி) "𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑍁𑌭𑌵𑌨𑍍𑌤𑍋𑌮𑍇𑌹𑍍𑌰𑍀𑌰𑍇𑌷𑌾𑌹𑌿𑌮𑌮𑌾𑌤𑍁𑌲𑌾 । 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑍈𑌰𑌹𑌂𑌵𑌿𑌪𑍍𑌰𑍈𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑍇𑌯𑍈𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌃" (ப்ரஸீதந்துபவந்தோமேஹ்ரீரேஷாஹிமமாதுலா | யதீத்ருஸைரஹம்விப்ரைருபஸ்தேயைருபஸ்தித:) இத்யாரண்யகாண்டேராம:.

"ஒன்றும்" என்றதுக்குபாவம் (உன்னையித்யாதி) "𑌏𑌹𑌿𑌪𑌶𑍍𑌯𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 । 𑌹𑌤𑌾𑌨𑌾𑌂𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌰𑍍𑌘𑍋𑌰𑍈𑌰𑍍𑌬𑌹𑍂𑌨𑌾𑌂𑌬𑌹𑍁𑌧𑌾𑌵𑌨𑍇" (ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் | ஹதாநாம்ராக்ஷஸைர்க்கோரைர்ப்பஹூநாம்பஹுதாவநே) இத்யாரண்யகாண்டே.

அவர்களைப்பற்றவேற்றமுண்டென்கிறார் (அங்கித்யாதி.)

ஆக, "முனியே" என்று - ஸமஷ்டிஸ்ருஷ்டியையும், "நான்முகனே" என்று - வ்யஷ்டிஸ்ருஷ்டியையும், "முக்கண்ணப்பா" என்று - ஸ்ருஷ்டிசம்ஹாரத்தையும், "கருமாணிக்கமே" என்னுமளவும் - பாலநத்தையும் சொல்லுகிறது..........*

## இரண்டாம்பாட்டு.

மாயஞ்செய்யேலென்னையுன் றிருமார்வத்துமாலைநங்கை
வாசஞ்செய்பூங்குழலாடிருவாணை நின்னாணைகண்டாய்
நேசஞ்செய்துன்னோடென்னையுயிர்வேறின்றியொன்றாகவே
கூசஞ்செய்யாதுகொண்டாயென்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ.

### ஆறாயிரப்படி.

(மாயஞ்செய்யேல்) பண்டுன்னைக்காணவேணுமென்றாசைப்பட்டுக் காணப்பெறாமையாலே நான் வ்யஸநப்படுமளவில், கண்ணாரக்கண்டாப்போலே விசதமாம்படி யென்னெஞ்சிலே யுன்னைக்காட்டி, காணவேணுமென்னு மபேக்ஷையைப்பிறப்பித்து, என்னுடைய வ்யஸநத்தை ஸ

மாதாநம்பண்ணினப்போலே செய்தருளவொண்ணாது; இனியுன்னைக்காட்டாதே வஞ்சித்தொளிக்கில், உனக்கு நிரவதிகஸம்பத்தாய் நிரவதிகபோக்ய பூதையாய் உன்னாலும் பஹுமந்தவ்யையாய் உன்திருமேனிக்கு வாசஞ்செய்யாநின்ற வழகியதிருக்குழல்களை யுடையளாயிருந்த பெரியபிராட்டிதிருவாணை, நின்திருவாணைகண்டாய்; சமஸ்தஹேயாஸ்பதமாயிருந்தவென்னை யருவராதே யென்பக்கலிலே யதிஸ்நேஹத்தைப்பண்ணி உன்னோடொன்றென்று சொல்லலாம்படி யென்னோடே கலந்தருளினாய்; ஆதலால், அதுபெறுவாணையன்று, இனிச்செய்கிறோம் என்னப்பற்றாது, ஈண்டெனவந்தென்னைக் கூவிக்கொள்ளா யென்கிறார் ........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தம்முடையகாரியஞ்செய்கைக்காக மறுக்கவொண்ணாதபடி வல்லபையான பிராட்டியுடைய திருவாணையிடுகிறார்.

முன்பு ஆர்த்தனுக்கூப்பிட்டதசைகள்தோறும்குணாவிஷ்காரமாத்ரத்தாலே ஆஶ்வஸிப்பித்து அகலநின்றாப்போலே, என்னை - க்ஷணகாலமும் உன்னைப்பிரியில் முடியுந்தசையானவென்னை. மாயஞ்செய்யேல் - இனி வஞ்சியாதொழியவேணும். "நாம் நினைத்தபடிசெய்கிறோம்" என்று ஸ்வாதந்த்ர்யம் கொண்டாடப்பார்த்தாயாகில். உன் - உனக்கு. திரு-நிருபாதிகசம்பத்தாகையாலேசர்வாதிகமான ஸ்வரூபத்துக்கு நிருபகபூதையாய், தானும் "அகலகில்லேன்" என்று விரும்பும்படியான. மார்வத்து - திருமார்புக்கு பரபாகமாம்படியாய். மாலை - ஹிரண்மயமான மாலைபோலே விக்ரஹத்துக்கு நிருபாதிகபூதையாய். நங்கை - உன்னோபாதி சமஸ்தகல்யாண குணபூர்ணையாகையாலே "[illegible]" (தர்ப்பண இவப்ரசுரம்ஸ்வதந்தே) என்கிறபடியே கண்ணாடியிலே நிழலெழுமாபோலே இக்குணங்களும்நிறம்பெறும்படிபண்ணுமவளாய்.வாசம்செய்-"[illegible]" (ஸர்வகந்த:) என்கிறவுனக்கும் அதிவாஸகரமாய். பூ-விலக்ஷணமான. குழலாள்-திருக்குழலையுடையளாய்க்கொண்டு. திரு - போக்யபூதையாகையாலே விபூத்யபிமாநியான லக்ஷ்மியினுடைய. ஆணை - கௌரவ்யமான ஆணையானது. நின் - சமஸ்தஜகத்தையும் உன்னாணையாலே நிர்வஹிக்கிறவுனக்கு. ஆணை - ஆணையாக. கண்டாய்-இப்படி யாணையிட்டு நிர்ப்பந்திக்கிறது த்வராயாலேயென்றுநினைத்து. நேசம்செய்து-நிர்ஹேதுகமாகஸ்நேஹித்து. உன்னோடு - ஹேயப்ரத்யநீகனான வுன்னோடே. என்னை - ஹேயஸம்ஸ்ருஷ்டனானவென்னை. உயிர்வேறின்றி - "உன்னதென்னதாவியு மென்ன துன்னதாவியும்" என்னும்படி ஆத்மபேதம்பிறவாதபடியாக. ஒன்றாகவே-அப்ருதக்ஸித்தியாலே ஏகப்ரதிபத்திபிறக்கும்படிக்கீடாக. கூசம்செய்யாது-என்னிகர்ஷத்தைப்பார்த்துக்கூசாதே. கொண்டாய் - அடியேபிடித் தங்கீகரித்தருளினாய். என்னை - இப்படி உன்ப்ரவ்ருத்தியறிந்திருக்கிற வென்னை. வந்து - என்முன்னேவந்து. கூவிக்கொள்ளாய் - "ஆழ்வீர், போதீரோ" என்று திருமிடற்றோசையைக்காட்டி யழைத்துக்கொண்டருளவேணும். அந்தோ! - ஐயோ! நீதானே த்வரிக்கிறகார்யத்துக்கு நானாணையிடவேண்டியிருப்பதே .................. ..................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தம்முடைய வபேக்ஷிதம்செய்தல்லது நிற்கவொண்ணாதபடி யவனுக்குத்திருவாணையிடுகிறார்.

(மாயஞ்செய்யேல்) கீழ் "மாயஞ்செய்யேல்" என்னச்செய்தேதி ரியவும் சொல்லுகிறதென்ன வாற்றாமைதான்!. இப்படியிவர் நிர்ப்பந்தித் தவிடத்திலும், "உம்மைமாயஞ்செய்யோம், 'மாஶுசঃ'" என்னுமையா லே மாயஞ்செய்யேல் என்றநுவர்த்திக்கிறது. (என்னை) இத்தாலுன்னு டைய லீலாவிபூதிமுடியாதுகிடாய். (மாயம்செய்யேலென்னை) "மாமேவயெப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே" (மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே) என்கிற வுன்வார்த்தையை விப்லவஸித்து, "அ லர்மேல்மங்கையுறைமார்பா — உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்று சரணம்புக்க வென்னைவஞ்சியாதேகொள்.

இப்படிநிர்ப்பந்திக்கச்செய்தேயும் "மாஶுசঃ" என்னுமையாலே அவனுக்கும் மறுக்கவொண்ணாதபடி பெரியபிராட்டியார் திருவாணையிடு கிறார் (உன்திரு) "விஷ்ணோஶ்ரீঃ" என்கிறபடியே நாட்டுக்கெல்லாம் சம்பத்தவன், அவன்றனக்கும் சம்பத்திவள். அன்றிக்கே, "விஷ்ணோঃ" என்னவுமாம். "திருவுக்குந்திருவாகிய" "ஶ்ரியஶ்ஶ்ரியம்" "த்வாம்ஹிஶ்ரியஶ்ஶ்ரியமுதாஹருதாரவாசঃ" (த்வாம்ஹிஶ்ரியஶ்ஶ்ரியமுதாஹருதாரவாசঃ) என்னும்படியே. மற்றைப்பக்ஷத்தில், "ஶ்ரீயாதேவঃ" (ப்ஶ்ரத்தயாதேவঃ) "யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜঃ" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜঃ) என்னும்படியே. ஆதார ப்ரதாநமாயிருத்தல், ஆதேயப்ரதாநமாயிருத்தல். ஆதேயத்துக்கு ஆதா ரத்தையொழிய ஸ்த்திதியுமில்லை; நிரூப்யத்துக்கு நிரூபகத்தையொழிய ஸ்வரூபஸித்தியில்லை; ஒன்றையொன்றொழியில் ஸ்வரூபஸித்தியில்லை; "தன்னகத்திருமங்கை தங்கியசீர்மார்வன்," "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) (மார்வத்துமாலை) கேவலம் சம்பத்தியாயிருக்கைய ன்றிக்கே, திருமார்வுக்கலங்காரமுமாயிருக்கை. மார்வுக்கலங்காரமவள், அவளுக்கலங்காரம்மார்வு; * பக்தாநாமிறே. (நங்கை) வடிவொழிய அல் லாத ஸ்வரூபகுணவிபூதிகளு மவளாலேயென்கை. ஜ்ஞாநைகாகாரதயா சாம்யம். (ஐஶ்வர்யாதிகுணங்களா லீஶ்வரனிலுமதிகையென்கை.) (நங் கை) "பதிம்விஶ்வஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய) என்கிறவனுக்கு மிவள்பூர்த் தியாலே பொரிபுறந்தடவவேண்டும்படியிருக்கை. அல்லாதாரிற்காட்டில் வ்யாவ்ருத்தியித்தனையுமிறே. ஶ்ரீமானுக்கு நிஶ்ஶ்ரீகர் ஶத்ருஶரல்லவிறே. (வாசஞ்செய்பூங்குழலாள்) நாற்றத்துக்கும் நாற்றம்கொடுக்குங்குழல். "ஸர்வகந்தঃ" (ஸர்வகந்தঃ) என்னும்வஸ்துவுக்கும் பரிமளங்கொடுக்கும் குழல். "ஸர்வகந்தঃ" (ஸர்வகந்தঃ) என்கிறவேற்ற மித்தலையாலேகாணு மவனுக்குவந்தது. ((பூங்குழல்) பூவையுடைத்தானகுழலென்னுதல், அ ழகியகுழலென்னுதல்.) (திருவாணைநின்னாணைகண்டாய்) (திருவினு டையவாணைகிடாய், என்கார்யம்செய்தல்லது இட்டவடிபேரவிடவொ ண்ணாதபடி யுனக்கிட்டவாணை. போகவல்லையாகில் போய்க்காணென்று

கருத்து.) சர்வாதிகனுகையாலே அல்லாதார்க்கெல்லா முன்னுடையவாணை; உனக்கு நீயுகந்தாராணையிடு மித்தனையிறே. "ᴗயாவஸீதயாெவெவஸுவெ஡ரவஸிாவ-ᴗநஉந" (மயாசஸீதயாசைவஸப்தோஸிரகுநந்தந) என்னும்படியாலே - பெரியபிராட்டியாராணை உன்னாணைகிடாயென்றுமாம்.

"நீரிட்டவாணை உம்முடையஸ்வரூபத்தோடு விருத்தங்காணும் (சேஷபூதரானல் நாம்செய்தபடி கண்டிருக்கவேணுங்காணும்" என்ன; அவிருத்தமென்கிறார் மேலித்திருவாய்மொழிகுறையும். அதாவது - ஆற்றாமையின் மிகுதியைச்சொல்லி பரிஹரிக்கிறார். "உமக்குப்பாரதந்த்ர்யம் ஸ்வரூபமானல் சேஷிசெய்தபடிகண்டிருக்கு மத்தனைகாணும்)" என்ன; "சேஷபூதனுளனாய்க்கண்டிருக்கவேணுமே!" என்று தம்முடையவில்லாமையை யுபபாதிக்கிறது மேலித்திருவாய்மொழியடைய. பாரதந்த்ர்யம் ஸ்வரூபமானல் ப்ருதக்ஸ்த்திதியும் ப்ருதக்ப்ரதிபத்தியுமுண்டோவென்கிறார் (நேசஞ்செய்து) பெரியபிராட்டியார்பக்கலிலும் பண்ணுதஸ்நேஹத்தை யென்பக்கலிலேபண்ணி. நான் ஸ்நேஹிக்கவிருந்தாயோ, என்விடாய்க்கடி உன்விடாயன்றோ. "அகலகில்லேனிறையும்" என்று அவள்செல்லாமைகண்டிறே யவள்பக்கல் ப்ரேமத்தைப்பண்ணிற்று. (உன்னோடென்னை) உன்னையறிந்தாயோ, என்னையறிந்தாயோ; * விழுமியவமரர் முனிவர்விழுங்கும் கன்னற்கனிநீ, அதுக்கெதிர்த்தலை அடியேன்; "இவனணுபரிமாணன், நியாம்யன்; நாம்விபு, நியாமகன்" என்றுபார்த்தாயோ. (உயிர்வேறின்றியொன்றாகவே) ஆத்மபேதமில்லாதபடியன்றோவென்னைப்பரிக்ரஹித்து. "உன்னதென்னதாவியுமென்னதுன்னதாவியும்" என்னும்படி என்னைப்பிரித்துக்காணவொண்ணுதபடியன்றோ நீதலையாலேசுமந்தது. "ஹாஸுெணஷஹாயயா" (பாஸ்கரேணப்ரபாயதா) என்கிறவிதுவும் அவிசதமாகப்பண்ணினன். (கூசஞ்செய்யாதுகொண்டாய்) சர்வஜ்ஞனனநீயும் வாசிவைத்துக்கலக்கவறிந்திலை. என்பக்கலயோக்யதைபாராதே பரிக்ரஹித்தாய். முதலிலே என்பூர்வவ்ருத்தம்பாராதே * மயர்வறமதிநலமருளினய்; பின்பு, * வளவேழுலகிலே "நானயோக்யன்" என்றகல, என்னையென்வழியிலேவிடாதே, உன்செல்லாமையைக்காட்டிச் சேர்த்துக்கொண்டாய். இப்படி அன்று செய்திலையாகில் இன்று க்லேசப்படாதொழியலாய்த்தே!.

(என்னைக்கூவிக்கொள்ளாய்வந்து) ஆனபின்பு, என்னையீண்டெனவந்தணுகப்பாராய். சாஸ்த்ரங்களாலறிவிக்குமளவுபோராது; குணவிஷ்காரமாத்ரத்தாலேபோராது; சாக்ஷாத்கரிக்குமளவுபோராது; உன்னைக்கிட்டி யநுபவிக்கும்படி பண்ணவேணும். (அந்தோ!) தன்னையொழியச்செல்லாமையைத்தானே விளைத்துக்கூப்பிட, வந்துமுகங்காட்டாதொழிவதே!.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு ( மாயம்செய்யேலித்யாதி ) " திருவாணைநின்னாணைகண்டாய் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தம்முடையவித்யாதி.)

அநுவாதத்துக்குபாவம் (கீழித்யாதி) பாவாந்தரமாதல், விவரணமாதல் (இப்படியித்யாதி) "என்னை" என்றது - என்னையொருவனையுமென்னுதல், சரணம்புகுந்தவென்னையென்னுதல்; இவ்விரண்டர்த்தத்தையு மருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதிவாக்யத்வயத்தாலே) இத்தாலென்றது-என்னையங்கீகரித்ததத்தாலென்றபடி. "சரணம்புகுந்தவென்னை" என்றவிரண்டாமர்த்தமருளிச்செய்கிறார் (மாமேவேத்யாதி) "𑌦𑍈𑌵𑍀𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌗𑍁𑌣𑌮𑌯𑍀𑌮𑌮𑌮𑌾𑌯𑌾𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾 । 𑌮𑌾𑌮𑍇𑌵𑌯𑍇𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂𑌤𑌰𑌨𑍍𑌤𑌿𑌤𑍇" (தைவீஹ்யேஷாகுணமயீமமமாயாதுரத்யயா।மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே) இதி ஸ்ரீகீதாஸு.

"உன்திரு" என்றதுக்கு - உனக்குத்திருவென்னுதல்; சேஷேஷஷ்ட்டியாய், உன்னுடையதிருவென்னுதல் என்று அர்த்தத்வயம். முந்தினவர்த்தம் (விஷ்ணோஸ்ஸ்ரீரித்யாதி) இரண்டாமர்த்தம் (விஷ்ணோ:என்னவுமாமென்று) அதாவது-விஷ்ணுவுக்கு சேஷபூதையென்னவுமாமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணத்ரயம் (திருவுக்குமித்யாதி) திருமொழி ஏழாம்பத்து ஏழாந்திருமொழி முதற்பாட்டு. "𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌵𑍈𑌷𑌾𑌜𑌗𑌨𑍍𑌮𑌾𑌤𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃𑌶𑍍𑌰𑍀𑌰𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀 । 𑌯𑌥𑌾𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑍇𑌯𑌂𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮" ( நித்யைவைஷாஜகந்மாதாவிஷ்ணோஸ்ஸ்ரீரநபாயிநீ। யதாஸர்வகதோவிஷ்ணுஸ்ததைவேயம்த்விஜோத்தம ) இதிப்ரதமேம்ஸேஷ்டமே. " 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍌𑌵𑌨𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌮𑌯𑌾𑌮𑍃𑌤𑍋𑌦𑌧𑌿𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑌿𑌯𑌃𑌶𑍍𑌰𑌿𑌯𑌂𑌭𑌕𑍍𑌤𑌜𑌨𑍈𑌕𑌜𑍀𑌵𑌿𑌤𑌂𑌸𑌮𑌰𑍍𑌥𑌮𑌾𑌪𑌤𑍍𑌸𑌖𑌮𑌰𑍍𑌥𑌿𑌕𑌲𑍍𑌪𑌕𑌮𑍍 " ( அசிந்த்யதிவ்யாத்புதநித்யயௌவநஸ்வபாவலாவண்யமயாம்ருதோததிம்। ஸ்ரியஸ்ஸ்ரியம்பக்தஜநைகஜீவிதம்ஸமர்த்தமாபத்ஸகமர்த்திகல்பகம் ) இதிஸ்தோத்ரரத்நே. " 𑌯𑌸𑍍𑌯𑌾𑌃𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌣𑌮𑌨𑍁𑌕𑍍𑌷𑌣𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌹𑍇𑌤𑍁𑌰𑌿𑌤𑌿𑌸𑌾𑌰𑍍𑌵𑌜𑌨𑍀𑌨𑌮𑍇𑌤𑌤𑍍। 𑌤𑌾𑌂𑌶𑍍𑌰𑍀𑌰𑌿𑌤𑌿𑌤𑍍𑌵𑌦𑍁𑌪𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌣𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌹𑍁𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂𑌹𑌿𑌶𑍍𑌰𑌿𑌯𑌃𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑍁𑌦𑌾𑌹𑍁𑌰𑍁𑌦𑌾𑌰𑌵𑌾𑌚𑌃 " (யஸ்யா:கடாக்ஷணமநுக்ஷணமீஸ்வராணாமைஸ்வர்யஹேதுரிதிஸார்வஜநீநமேதத் । தாம்ஸ்ரீரிதித்வதுபஸம்ஸ்ரயணாந்நிராஹுஸ்த்வாம்ஹிஸ்ரியஸ்ஸ்ரியமுதாஹுருதாரவாச:) இதி ஸ்ரீவைகுண்டஸ்தவே. " 𑌯𑌸𑍍𑌯𑌾𑌃𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌵𑍀𑌕𑍍𑌷𑌾𑌕𑍍𑌷𑌣𑌲𑌕𑍍𑌷𑌂𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌮𑌹𑍇𑌶𑌾𑌃𑌸𑍍𑌯𑍁𑌃 । 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌰𑌾𑌜𑌮𑌹𑌿𑌷𑍀𑌸𑌾𑌮𑌾𑌮𑌪𑌿𑌵𑍀𑌕𑍍𑌷𑌤𑌾𑌂𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌃 " ( யஸ்யா:கடாக்ஷவீக்ஷாக்ஷணலக்ஷ்யம்லக்ஷிதாமஹேஸா:ஸ்யு:। ஸ்ரீரங்கராஜமஹிஷீஸாமாமபிவீக்ஷதாம்லக்ஷ்மீ: ) இதிஸ்ரீகுணரத்நகோஸே. முந்தினவர்த்தத்துக்கு ப்ரமாணம் (ஸ்ரத்தயேத்யாதி) ஸ்ரத்தயா - லக்ஷ்ம்யா. தேவ: - த்யோதமாநஸ்ஸர்வேஸ்வர:. தேவத்வம் - ததாவிதமீஸ்வரத்வம். அஸ்நுதே-ப்ராப்நோதீத்யர்த்த:. " 𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌂𑌹𑌿𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋𑌯𑌸𑍍𑌯𑌸𑌾𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 । 𑌨𑌤𑍍𑌵𑌂𑌸𑌮𑌰𑍍𑌥𑌸𑍍𑌤𑌾𑌂𑌹𑌰𑍍𑌤𑍁𑌂𑌰𑌾𑌮𑌚𑌾𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌂𑌵𑌨𑍇" (அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா। நத்வம்ஸமர்த்தஸ்தாம் ஹர்த்தும்ராமசாபாஸ்ரயாம்வநே) இத்யாரண்யகாண்டே ராவணம்ப்ரதிமாரீச:. அர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமேணவிவரிக்கிறார் (ஆதாரேத்யாதி) ஆதாரப்ராதாந்யம்-சர்வாதார

பூதேஶ்வரனிடத்திலும், ஆதேயப்ராதாந்யம்-புஷ்பபரிமளத்திலும் கண்டுகொள்வது. “ [illegible] ” (ஆத்மவத்ஸர்வபூதாநாமஹம்பூதோஹரிஸ்ஸ்ம்ருத: । அஹமர்த்தம்விநாஹந்தாநிராதாராநஸித்த்யதி । அஹந்தயாவிநாஹம்ஹிநிருபாக்யோநஸித்த்யதி) என்கிறவசநத்தையுட்கொண்டு, உக்தார்த்தத்தைஸ்த்திரீகரிக்கிறார் (ஆதேயத்வக்கித்யாதிவாக்யத்ரயத்தாலே) “ [illegible] ” (அஹமர்த்தம்விநாஹந்தா) இத்யாதிஶ்லோகத்துக்கர்த்தம் - நிரூபிகையான வஹந்தையையொழிந்தபோது, நிரூப்யமானவஹமர்த்தமானது, உபாக்யாரூபமான நிரூபகதர்மமில்லாமையாலே நிரூப்யஸித்தியுண்டாகாது; ஆஶ்ரயமான வஹமர்த்தமில்லாதபோது, ஆஶ்ரயமான தர்மியையொழிய தர்மத்துக்கு ஸ்த்திதியில்லாமையாலே, அஹந்தைக்கு ஸ்வரூபஸித்தியில்லை; ஆகையாலே, தர்மத்தையொழிந்தபோது தர்மியை ப்ரதிபத்திபண்ணவொண்ணாது; தர்மியையொழிந்தபோது தர்மத்துக்கு ஸ்வரூபமே பிடித்தில்லையென்றபடி. நிருபாக்ய: - நிரூபகதர்மரஹித:. “ ஒன்றையொழிய வொன்றுக்கு ஸ்வரூபசித்தியில்லை ” என்னுமதுக்குப்ரமாணங்கள் (தன்னாகவித்யாதி) நாய்ச்சியார்திருமொழி, “மின்னாகத்தெழுகின்ற” இத்யாதி. தன்னாக - தானுளளாகைக்காக. தன்சத்தைபெறுகைக்காக, நித்யயுவதியான பெரியபிராட்டியார் “இறையும்-அகலகில்லேன்” என்று நித்யவாசம்பண்ணும் வீறுடையதிருமார்வுபடைத்தவர்க்கென்றபடி. “ [illegible] ” (சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸம்தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்) இதியுத்தகாண்டே.

“ உன்திரு ” என்றவநந்தரம், “மார்வத்துமாலை” என்றதுக்குபாவம் (கேவலமித்யாதி.) இவளை “மாலை” என்கையாலே-மார்வுக்குமாலையையொழிய சோபையில்லாமையாலும், மாலைக்கும் மார்விலிருந்தாலொழிய சோபையில்லாமையாலும், ததநுகுணமாகபாவம் ( மார்வுக்கலங்காரமித்யாதி ) மார்வு பிராட்டிக்கலங்காரமாகைக்கு அவளதீநமாயிருக்குமோவென்ன (பக்தாநாமித்யாதி) ஜிதந்தாயாம், “நதேரூபம்” இத்யாதி. “ [illegible] ” ( பரிஜநபரிபர்ஹாபூஷணாந்யாயுதாநிப்ரவரகுணகணஶ்சஜ்ஞாநஶக்த்யாதயஸ்தே । பரமபதமதாண்டாந்யாத்மதேஹஸ்ததாத்மாவரதஸகலமேதத்ஸம்ஶ்ரிதார்த்தஞ்சகர்த்த ) என்கிறவரதராஜஸ்தவஶ்லோகமு மநுஸந்தித்துக்கொள்வது.

இவளுடைய பூர்த்தியினெல்லை அவனுடைய ஸ்வரூபாதிகளுக்கும் பூர்த்தியுண்டாம்படியிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (வடிவொழியவித்யாதி) வடிவொழிய - அவன்வடிவுக்கலங்காரமன்றிக்கேயென்றபடி. நங்கை-ஸ்வரூபகுணவிபூதிகளால் பூர்ணையென்றபடி. உன்னுடையதிருவென்று-அவனுக்கு சேஷபூதையென்னலாமோ “ நரநாரீமயோஹரி: ” என்று ஈஶ்வரனோடைக்யம்சொல்லாநிற்கவென்ன (ஜ்ஞாநைகாகாரதயேத்யாதி) இவ்வாக்யத்துக்கு, (ஆதாரப்ரதாநமாயிருத்தல்) என்கிறவாக்யத்தோடேசங்கதி. “வடிவொழிய” இத்யாதி வாக்யவிவரணம்(பதிம்விஶ்வஸ்யேத்யாதி) கீழ்வாக்யத்தால்பலிதம் (அல்லாதாரிஸித்யாதி) அதாவது.

ப்ரஹ்மாதிகளிற்காட்டி லீஶ்வரனுக்குண்டான லக்ஷ்மீபதித்வாதிரூப வ்யாவ்ருத்தி தோற்றுகிறதென்றபடி. இத்தையுபபாதிக்கிறூர் (ஸ்ரீமானுக்கித்யாதி.)

"வாசம்செய்" என்றதுக்குபாவம் (நாற்றத்துக்கித்யாதி) விவரணம் (சர்வகந்த இத்யாதி) சாடு (சர்வகந்தஃ என்கிறவித்யாதி) இத்தலையாலேயென்றது - இந்தத்தலையில் மயிராலேயென்று ஸ்வபாவார்த்தம்.

உனக்கிடுமொணைதிருவாணைகண்டாயென்று முந்தினவர்த்தம்; உனக்குத்திருவாணையு முன்னுணையுமென்றிரண்டாமர்த்தம். முந்தினவர்த்தத்துக்கு, "நின்னுணை-திருவாணை" என்றந்வயம்; இரண்டாமர்த்தத்துக்கு, இருந்தபடியேயந்வயம். "வலைத்துவைத்தே னினிப்போகலொட்டேனுன்றனிந்திரஞாலங்களா லொளித்திடில் நின்திருவாணைகண்டாய்" என்று ஸ்ரீவிஷ்ணுசித்தரைப்போலே "திருவாணை" என்றால் போராதோ, "நின்னுணை" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன (சர்வாதிகேத்யாதி) இரண்டாமர்த்தம் (மயாசேத்யாதி) "ஊ தா∘ா கூ0ெகெ௫ெ௫யீ∘ஊாெராஷ∘கு-ரு-தா∘வ்ரு தி। ஃயாவஸீ தயாெவெவஸெ்தா ஸிாவ-நந நா" (மாதரம் ரக்ஷகைகேயீம் மாரோஷம்குருதாம்ப்ரதி । மயாசஸீதயாசைவஸப்தோஸிரகுநந்தந) இதி சித்ரகூடேபரதம் ப்ரதிராமஃ.

மேலுக்கவதாரிகை (நீரிட்டவித்யாதி) தம்முடையவில்லாமையை-சத்தையில்லாமையையென்றபடி. விஶ்லேஷமாத்ரத்திலே சத்தாஹாநியாமோவென்ன; "உயிர்வேறின்றி" இத்யாதியைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறூர் ( பாரதந்த்ர்யமித்யாதி ) இவ்வாக்யம், (நீரிட்டவாணை) இத்யாதிசங்கைக்கு பரிஹாராந்தரமாதல். "நேசம்செய்து" என்றதுக்கர்த்தம் (பெரியபிராட்டியாரித்யாதி) பலிதம் (நான்ஸ்நேஹிக்கவித்யாதி) பிராட்டிபக்கலிலும் பண்ணுதஸ்நேஹத்தைப்பண்ணினுனென்கைக்கு அவள்பக்கல் ஸ்நேஹம்பண்ணும் ப்ரகாரந்தானேதென்ன (அகலகில்லேனித்யாதி) "அவள்செல்லாமைகண்டு அவள்பக்கலிலே ஸ்நேஹத்தைப்பண்ணினு னென்னுமதுக்கு நியாமகம் - 'ஊவஸாத்ருல∘நஜீவிஷெ்' (மாஸாதூர்த்வம்நஜீவிஷ்யே) என்று அவள்வார்த்தையைத் திருவடிசொல்லக்கேட்டு 'நஜீெவயம்க்ஷணமெி' (நஜீவேயம்க்ஷணமபி) என்று பெருமாளருளிச்செய்தவிது" என்றருளிச்செய்வர்.

விவரணம் (விழுமியவித்யாதி) இத்தால்பலிதம் (இவனணுவித்யாதி) என்னுதல்; அன்றிக்கே, கீழே " போக்யனனவுன்னேடே ஹேயனனவென்னை " என்றருளிச்செய்து "விபுவாய்நியாமகனனவுன்னேடே அணுவாய் நியாம்யனனவென்னை" என்றர்த்தாந்தரம் (இவனணுவித்யாதி) என்னுதல். அதுக்கெதிர்த்தலையடியேனென்றது - "நீசனேன்நிறைவொன்றுமிலேன்" என்றிருக்கிறேன் நானென்றபடி.

விவரணம் (உன்னதித்யாதி) சம்ஶ்லேஷசமயத்தில் என்ஸ்வரூபம் நீயிட்டவழக்காகவும் உன்ஸ்வரூபம் நானிட்டவழக்காகவும் தலைதடுமாறுகவன்றே நீபரிமாறிற்றென்றபடி. தலையாலேசுமந்தது - தலைதடுமாறுகப் பரிமாறிற்றென்றபடி. இத்தால் பெரியபிராட்டியாரில் வ்யாவ்ருத்திதோற்றியிருக்கிறதென்கிறூர் (பாஸ்கரேணேத்யாதி) "கூநந )ராவவெணா ஹ∘ஹாக்ஷெரணவ்ர ஹாயயா" (அநந்யாராகவேணுஹம்பாஸ்கரேணப்ரபாயதா) இதிராவணம் ப்ரதிஸீதா. அவிஶதமாகப்பண்ணினுயென்றது - ப்ரபையென்றும் ப்ரபாவானென்றும் பேதமுண்டங்கு; அப்படியன்றிக்கே, ஏகவஸ்துவென்னலாம்படி பண்ணினுயென்றபடி.

"கூசம்செய்யாதுகொண்டாய்" என்றதுக்கர்த்தம் (சர்வஜ்ஞனுனவித்யாதி வாக்யத்வயமும்) அப்படி பரிக்ரஹித்தானேவென்ன; த்வேதாவருளிச்செய்கிறூர்

(முதலிலேயித்யாதிவாக்யத்வயத்தாலே) ஹார்த்தபாவம் (இப்படியன்றித்யாதி) உயிர்வேறின்றி - ஆத்மபேதமில்லாதபடி. ஒன்றாகவே - ஏகப்ரதிபத்திபிறக்கும்படிக்கீடாக. கூசம்செய்யாது - என்னயோக்யதையைப்பார்த்துக்கூசாதே. கொண்டாய்- அங்கீகரித்தருளினாயென்றுசப்தார்த்தம்.

" வந்து - கூவிக்கொள்ளாய் " என்றதுக்குபாவம் (சாஸ்த்ரங்களாலித்யாதி வாக்யசதுஷ்டயமும்) சாக்ஷாத்கரிக்கு மளவுபோராதென்றது-மாநஸசாக்ஷாத்காரம்போராதென்றபடி.

"அந்தோ!" என்றதுக்குபாவம் (தன்னையித்யாதி) ..........................*

# மூன்றாம்பாட்டு.

கூவிக்கொள்ளாய்வந்தந்தோவென்பொல்லாக்கருமாணிக்கமே
யாவிக்கோர்பற்றுக்கொம்புநின்னலாலறிகின்றிலேனான்
மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரனாதிக்கெல்லா
நாவிக்கமலமுதற்கிழங்கேயும்பரந்ததுவே.

## ஆறாயிரப்படி.

(கூவிக்கொள்ளாய்) ப்ரஹ்மேஶாநாதிகளுடைய ஸ்வரூபஸ்த்திதிப்ரவ்ருத்யைஸ்வர்யாதிகளும் த்வத்ப்ரஸாதாதீநமாதலால், என்னுடையவுஜ்ஜீவநத்துக்குபாயமும் நீயல்லது மற்றொன்றும் காண்கிறிலேன், நீயேயுன்றிருவடிகளிலே யென்னைவாங்கியருளி பிரானே உன் திருவழகைக்காட்டி யருளாயென்கிறார் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரஹ்மாதி சகலசேதநர்க்கு முத்பாதகமான திருநாபீகமலத்துக்கு மூலகந்தமான நீவந்து விஷயீகரித்தருளவேணுமென்கிறார்.

என்-எனக்கு நிரதிசயபோக்யமாய். பொல்லா-துளையாத. கருமாணிக்கமே-மாணிக்கம்போலே விலக்ஷணமானவடிவையுடையையாய். மேவித்தொழும்-தந்தாமுடைய பதஸித்த்யர்த்தமாகக்கிட்டி ஆஶ்ரயிக்கக்கடவரான. பிரமன் சிவனிந்திரன்-ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள். ஆதிக்கெல்லாம்-முதலானோர்க்கும். முதல்-முதலான. நாவிக்கமலம்-திருநாபீகமலத்துக்கு. கிழங்கே-கந்தபூதனாய். இப்படிஸ்ரஷ்டாவன்றியே, உம்பர்-மேலாய் அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கும். அந்ததுவே-அப்படியே சத்தாஸ்த்தித்யாதிகளுக்கு நிர்வாஹகனானவனே. ஆவிக்கு-என்னாத்மாவுக்கு. ஓர்-அபாஶ்ரயமாயிருப்பதொரு. பற்றுக்கொம்பு-உபக்நம். நின்னலால்-உன்னையொழிய. நான்-நான். அறிகின்றிலேன்-அறிகிறிலேன். ஆனபின்பு, வந்து-நீதானே வந்து. கூவி-அழைத்து. கொள்ளாய் - கொண்டருளவேணும். அந்தோ! - ஐயோ!, உன்காரியம் நான் சொல்லவேண்டுவதே! ... ..........................................*

ஈடு - மூன்றும்பாட்டு.

பெருமிடுக்கரான ப்ரஹ்மாதிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகளுக்கு மெல்லாம் நிர்வாஹகனானநீ, உன்னாலல்லது ஜீவிக்கவிரகின்றியே யிருக்கிறவென்னை ஐயோ!, வந்து விஷயீகரித்தருளா யென்கிறார்.

(கூவிக்கொள்ளாய்) கீழே "கூவிக்கொள்ளாய்" என்றவர், இங்கேயும் (கூவிக்கொள்ளாய்) என்கிறார்காணும்; தாஹித்தவன் "தண்ணீர், தண்ணீர்" என்னுமாபோலே. ஆற்றாமைமிக்குச் செல்லாநின்றாலும் பாசுரமிதுவல்லதின்றிக்கே யிருக்கிறபடி. கூவிக்கொள்ளுமளவும்போராது, வந்துகூவிக்கொள்ளவேணும். ஆற்றாமைமிக்காலும் நான்வந்துகிட்டுகை முறைமையன்று, உனக்கவத்யமுங்காணென்கிறார்; "ஶரௌஸ்துஸங்குலாம்க்ருத்வா" (ஶரைஸ்துஸங்குலாம்க்ருத்வா) * எழுதுமென்னுமிதுமிகையானவனுக்கு வருகை அஸஹ்யமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. வருகை அவனுக்கே வ்யவஸ்த்திதமாயிருக்கிறபடி. (அந்தோ! உனக்கு நிறமன்றென்று நான்சொல்லவேண்டுவதே!.

(என்பொல்லாக்கருமாணிக்கமே) (அதிலோகமான வடிவழகைக் காட்டி யென்னையீடுபடுத்தினவனே) நீயழைத்தபோது கண்டிருக்கலாய்த்திறே; நீநீயன்றிக்கேயிருந்தாயாகில், க்ரமத்திலேயழைக்க நினைத்தாயாகில், அழகைக்காட்டி அநந்யார்ஹமாக்கிற்றென். (என்பொல்லாக்கருமாணிக்கம்) துளையாதமாணிக்கம். அநுபபுக்தமான ரத்நமென்னுதல்; நாட்டொப்பான வழகன்றிக்கே விஸஜாதீயமாயிருக்கையாலேபொல்லாதென்கிறதென்னுதல்; த்ருஷ்டிதோஷபரிஹாரமென்னுதல். விலக்ஷணவிஷயமானாலும் ஸ்வரூபத்தைப்பார்த் தாறியிருக்கவேண்டாவோவென்னில்; அதுசெய்யுமிடத்தில் நானுன்னையொழிய வுளனாகவேணுமே (ஆவிக்கோர்பற்றுக்கொம்புநின்னலாலறிகின்றிலேன்நான்) உபக்நம் நியதமாயிருக்கிறபடி. கொடி, கொள்கொம்பையொழியநிற்கவற்றோ!. வேரையறுத்துப்படவொன்றால் படருமோ!. என்னாத்மாவுக்குஜ்ஜீவநஹேதுவாயிருப்பதொன்று உன்னையொழிய வேறுகாண்கிறிலேன்; "நசஸீதாத்வயாஹீநா" (நசஸீதாத்வயாஹீநா) என்கிறபடியே.

ஆனால் பேற்றுக்குடலாகநீரும் சிலசெய்தாலோவென்ன (மேவியித்யாதி) அல்லாதப்ரஹ்மாதிகளோ தங்கள்கார்யம் தாங்கள் செய்துகொள்ளுகிறார்கள்!. "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு" என்றுசொல்லாதவர்களுக்கு முதவுமவனே. ப்ரஹ்மாதிகள், "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு"என்று சொல்லவறியாமையாலே சொல்லார்கள்; நித்யஸூரிகள், அபிமாநம் புகுந்துபோகாமையாலும் இன்றுசொல்லவேண்டாமையாலும் சொல்லார்கள். (மேவித்தொழும்) அல்லாதபோது அந்யோந்யம் விருத்தராயிருப்பர்கள்; தங்களுக்கொருகார்யம்வந்தவாறே எல்லாரும் கூடித்தொழுவர்க

ள். அபிமாநரஹிதராய்த்தொழும் ப்ரஹ்மாதிகளுக்கெல்லாம் காரணமான திருநாபிகமலத்துக்குக்கிழங்கானவனே. ( மூதலானநாபிக்கமலக்கிழங்கே. )

(உம்பரந்ததுவே) அவர்களுக்குமேலான நித்யஸூரிகளுக்கும் அப்படிப்பட்ட ப்ராப்யவஸ்துவானவனே. அதுவென்று - ப்ரமாணப்ரசித்தியைச்சொல்லுகிறது. நித்யஸூரிகளோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியற நிர்வாஹகனுயிருக்கிறநீ - என்னை - வந்து - கூவிக்கொள்ளாய். ( இப்பாட்டால் - கீழும்மேலும்சொல்லுகிற சாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் கார்யகாரணபாவமென்னுமத்தை யருளிச்செய்தாராய்த்து; " ஸவ௱ஂவ ஹிஜஂஜ்ஹ " (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம)..................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (கூவிக்கொள்ளாயித்யாதி) " என்பொல்லாக்கருமாணிக்கமே - மேவித்தொழும் " என்றுதொடங்கி, உம்பரந்ததுவே, நான் - ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன், அந்தோ-வந்து-கூவிக்கொள்ளாய்" என்றக்ஷயவிவக்ஷயாவவதாரிகை (பெருமிடுக்கரானவித்யாதி.)

"கூவிக்கொள்ளாய்வந்தந்தோ" என்றுமீளவுமநுவதித்ததுக்குபாவம் (கீழேயித்யாதி) விவரணம் (ஆற்றாமையித்யாதி) "வந்து" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (கூவிக்கொள்ளுமளவுமித்யாதி) ஆற்றாமையுண்டானால் நீரோவந்துகிட்டவொண்ணாதோவென்ன (ஆற்றாமைமிக்காலுமித்யாதி) அப்படிதானேகிட்டுகை முறையன்றோவென்ன; அன்றென்கிறதுக்குப்ரமாணம் ( சரைஸ்த்வித்யாதி ) " [illegible] " (ஶரைஸ்துஸங்குலாம்க்ருத்வாலங்காம்பரபலார்த்தந꞉ । மாம்நயேத்யதிகாகுத்ஸ்த்தஸ்தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) இதி ஸுந்தரகாண்டே மாருதிம்ப்ரதிஸீதா-இவர்சென்றுகிட்டுகை யிவர்ஸ்வரூபத்துக்கு விருத்தமானமாத்ரமேயன்று, அவனுக்கு மஸஹ்யமென்கிறார் (எழுதுமென்னுமித்யாதி) இத்தால்பலிதம் (வருகையித்யாதி.)

" அந்தோ! " என்று விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவம் ( உணக்கித்யாதி. )

"பொல்லாக்கருமாணிக்கம்" என்றதுக்குபாவம் ( நீயழைத்தபோதித்யாதி ) நீநீயன்றிக்கேயிருந்தாயாகிலென்றது - நீ அபோக்யனாயிருந்தாயாகிலென்றபடி. "என்" என்றதுக்குபாவம் (க்ரமத்திலேயித்யாதி) சப்தார்த்தகதநார்த்தமாக ப்ரதீகோபாதாநம் (என்பொல்லாவித்யாதி) விவரணம் (அநுபபுக்தமானவித்யாதி) அநுபபுக்ததையும், வைஜாத்யமும், த்ருஷ்டிதோஷாபஹ்நுத்யர்த்தமாரோபிதமான பொல்லாங்கும், ஆகமூன்றர்த்தம்.

" ஆவிக்கோர்பற்றுக்கொம்பு " இத்யாதிக்கவதாரிகை (விலக்ஷணேத்யாதி) " உன்னையொழிய ஆவிக்கோர்பற்றுக்கொம்பறிகின்றிலேன் " என்றதுக்குபாவம் (உபக்நமித்யாதி) உபக்நம் நியதமாயிருக்கிறபடியென்றது - " நின்னலாலறிகின்றிலேன் " என்கையாலே. பற்றுக்கொம்பு - உபக்நம் - அந்திகாஶ்ரயம். கொள்கொம்பு - சுள்ளிக்காலென்றபடி. பலிதம் (கொடியித்யாதி) விவரணம் (வேரையித்யா

தி) வேரையறுத்து - ஆதாரத்தைவாங்கியென்றபடி. சப்தார்த்தம் (என்னுத்மாவுக் கித்யாதி) அவனையொழிய தரிக்கமாட்டாதென்னுமதுக்கு ப்ரமாணம் (நசஸீதேத் யாதி) "நசஸீதாத்வயாஹீநாநசாஹமபிராகவ। முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" (நசஸீதாத்வயாஹீநாநசாஹமபிராகவ। முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணஃ.

"மேவித்தொழும்" இத்யாதிக்குபாவம் (அல்லாதவித்யாதி) "பிரமன்சிவன்" இத்யாதிச்கும் "உம்பரந்ததுவே" என்றதுக்கும்பாவம் (ஆவிக்கோரித்யாதி) சொல்லாதபடியெப்படியென்ன (ப்ரஹ்மாதிகளித்யாதி) அபிமாநம் - ஸ்வக்ஷரணே ஸ்வாந்வயம். எப்போது மவனேயென்றிருக்கையாலேயென்று சொல்லவேண்டாமையாலுமென்றபடி. "மேவி" என்றதுக்குபாவம் (அல்லாதபோதித்யாதி) அல்லாதபோது - கார்யமில்லாதபோது. "மேவி" என்றதுக்கு - அந்யோந்யம்கூடி என்றர்த்தமருளிச்செய்து, அபிமாநரஹிதராயென்று அர்த்தாந்தரம் (அபிமாநரஹிதேத்யாதி) "பிரமன் சிவனிந்திரனுதிக்கெல்லாம் - முதலான - நாவிக்கமல - கிழங்கே" என்றந்வயிப்பது. இந்திரனுதிக்கெல்லாம் - இந்திரன்முதலானுரெல்லார்க்கும், முதல்-காரணபூதமான, நாவிக்கமலக்கிழங்கே - திருநாபீகமலத்துக்கு கந்தபூதனுனவனே; உம்பர் - ப்ரஹ்மாதிகளுக்கும் மேலான அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யசூரிகளுக்கும், அந்ததுவே - (அப்படிப்பட்ட ப்ராப்யவஸ்துவானவனே) என்றபடி. அப்படிப்பட்ட-உபயலிங்கவிசிஷ்டமாய் சுபாஸ்ரயமான. ப்ரமாணப்ரஸித்தியையென்று - "ஸதாபஶ்யந்தி" (ஸதாபஸ்யந்தி) இத்யாதி ப்ரஸித்தியைச்சொல்லுகிறது.

அந்வயமுகேநபாவம் (நித்யசூரிகளோடித்யாதி.)

மேவித்தொழும் என்றுதொடங்கி, அந்ததுவே - என்பொல்லாக்கருமாணிக்கமே, ஆவிக்கோர்பற்றுக்கொம்பு - நான் - நின்னலாலறிகின்றிலேன். வந்து-கூவிக்கொள்ளாய் - அந்தோ! இத்யந்வயஃ ........................................................*

---

## நான்காம்பாட்டு.

உம்பரந்தண்பாழேயோவதனுண்மிசைநீயேயோ
வம்பரநற்சோதியதனுட்பிரமனரனீ
யும்பரும்யாதவரும்படைத்தமுனிவனவனீ
யெம்பரஞ்சாதிக்கலுற்றென்னைப்போரவிட்டிட்டாயே.

### ஆறுயிரப்படி.

(உம்பரந்தண்) ப்ரக்ருதிபுருஷ மஹதஹங்கார ப்ருதிவ்யாதிபூத சதுர்முக ருத்ரதேவாதி ஸ்த்தாவராந்த சேதநாசேதநாத்மக சமஸ்தவஸ்துக்களினுடைய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்யாதிகளுக்கும் நீயே நிர்வாஹகனுயிருந்துவைத்து, என்னுடைய பரமத்தையும் நானே நிர்வஹிக்கக்கடவேனுகப் பார்த்தருளினுயாகில் என்னைக்கைவிட்டாயென்கிறுர் ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரவிசிஷ்டனானநீ ப்ரகாரபூதனான வென்னுடைய காரியம் நிர்வஹிப்பதாக வேறிட்டுக்கொண்டுவைத்து, என்னையிந்த விபூதியிலே போரவிட்டாயித்தனையன்றோவென்று ஆர்த்தராய்க்கூப்பிடுகிறார்.

உம்பர் - பூதமான மஹதாதிகளுக்கெல்லாம் ப்ரதாநகாரணமாகையாலே மேலாய். அம்-உனக்கு லீலோபகரணமாகையாலே விலக்ஷணமாய். தண்-குணத்ரய ஸாம்யாவஸ்த்தமாகையாலே குளிர்ந்திருப்பதாய். பாழேயோ-போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கு. அதனுள், மிசை, நீயேயோ, இப்படி ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டனாய்க்கொண்டு, அம்பரம் - அண்டகாரணமான ஆகாசம். நல் - விலக்ஷணமான. சோதி - தேஜஸ்ஸுமுதலானபூதங்களை ஸ்ருஷ்டித்து தத்ப்ரகாரியாய். அதனுள் - பூதாரப்தமான வண்டத்துக்குள்ளே. பிரமனரன் - ப்ரஹ்மருத்ராதிகளை உத்பாதித்து தத்தத்ப்ரகாரவிசிஷ்டனானவன். நீ-நீ. உம்பரும்-ப்ராணிஜாதங்களுக்குமேலானதேவர்களையும். யாதவரும்-மநுஷ்யாதி சகலசேதநரையும். படைத்தமுனிவனவன் - தத்தத்கர்மவிபாகமநநம்பண்ணி ஸ்ருஷ்டித்தவன். நீ - நீ. இப்படியாயிருக்க, எம் - ப்ரகாரபூதனானவென்னுடைய. பரம்-தேஹத்தை. சாதிக்கலுற்று - நிர்வஹிப்பதாகவேறிட்டுக்கொண்டு. ப்ராப்திபர்யந்தமாக வபரோக்ஷிப்பித்து, என்னை - உன்னையொழியச்செல்லாதவென்னை. பின்னையும், போரவிட்டிட்டாய் - இங்கேபோரவிட்டிட்டுவைத்தாய்.

ஓ என்கிறவசை - “ நீ ” என்னுமிடந்தோறும்கூட்டி, ஒரொன்றே ரக்ஷிக்க ஹேதுபோந்திருக்க அநாதரித்தாயென்று கூப்பிடுகிறவார்த்தியை ஸூசிப்பிக்கிறது.*

## ஈடு - நான்காம்பாட்டு.

சர்வநிர்வாஹகனானநீ, என்காரியம் நானேபண்ணிக்கொள்வேனாகப் பார்த்தருளினாயாகில், என்னைக்கைவிட்டாயல்லையோவென்கிறார்.

(உம்பரந்தண்பாழேயோ) மஹதாதிகார்யங்களுக்கெல்லாம் காரணமாகையாலே மேலாய், தன்னுடைய ஏகதேசத்தாலே கார்யவர்க்கத்தைப் பிறப்பிக்கவற்றான சக்தியையுடைத்தாய், விசித்ரபரிணாமியாய், சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளலாம் நிலமாயிருந்துள்ள மூலப்ரக்ருதிக்கு நிர்வாஹகனானவனே. (உம்பர்) மேல். (அந்தண்) அழகிதுமாய்க்குளிர்ந்திருக்கை. (ஸ்ருஷ்டிசக்தியாகிறவழகும் விசித்ரபரிணாமித்வமாகிற நன்மையுமுடைத்தாயிருக்கை.) (பாழ்) க்ருஷிக்குயோக்யமாயிருக்கை. காரணாவஸ்த்தமாய்நின்று ஸ்வகார்யத்தாலே சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைக்கவற்றென்னுமிடத்தைச்சொல்லுகிறது. (உம்பரந்தண்பாழேயோ) சௌக்ல்யமென்றுகொண்டு நிஷ்கர்ஷகசப்தத்தாலே தர்மத்தைப்பிரியச்சொல்லுமாபோலே பிரியச்சொல்லப்போகாது பகவானுக்கு ப்ரகாரமானவற்றையென்கிறது. (உம்பரந்தண்பாழேயோ) என்கிறவித்தால் - சேதநர்க்கு ப்ரகாரமாய் அவ்வழியாலே ஈப்ரவரனுக்கு ப்ரகாரமாகையன்றிக்கே, “ யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம் ” ( யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யப்ருதிவீஶரீரம் ) என்கிறபடியே சேதந

வ்யதிரிக்தமான வசித்துக்கு மவனையொழிய நிர்வாஹகரில்லையென்கை. (பாழேயோ) என்கிறவித்தால் - சுத்தபேதம்கொள்ளுகிற மீமாம்ஸகரையும், ஸ்வரூபேண தாதாத்ம்யம்கொள்ளுகிற மாயாவாதிகளையுமழிக்கிறது.

(அதனுள்மிசைநீயேயோ) அதிலேபத்தமாய்நிற்கிற விலக்ஷணமான வாத்மதத்வத்துக்கு நிர்வாஹகனானவனே. சூக்ஷ்மசிதசித்வஸ்து சரீரிகாரணமாகையாலே காரணாவஸ்த்தைசொல்லிற்று. இத்தால்-விசேஷணப்ராதாந்யம்சொல்லும் ந்யாயவைசேஷிகபக்ஷமும், விசேஷணத்துக்கு அபாரமார்த்யஞ்சொல்லும் மாயாவாதிபக்ஷமும் ஆழ்வார்க்கு பக்ஷமல்லவென்றதாய்த்து. (நீயேயோ) என்கிறவித்தால்-சேதநனையொழிய அசேதநத்துக்கு ஸ்த்திதியில்லாதாப்போலே, ஈஶ்வரனையொழியவாத்மாவுக்கு ஸ்த்திதியில்லையென்கிறது.

(அம்பரநற்சோதி) (அம்பரம்-ஆகாஶம். நற்சோதி-விலக்ஷணதேஜஸ்ஸு) அல்லாதபூதங்களுக்கு முபலக்ஷணமிரண்டும்; "யதம்புவைஷ்ணவஃகாயஃ" (யதம்புவைஷ்ணவஃகாயஃ) என்று ஜலத்தைச்சொல்ல அல்லாதபூதங்களுக்கு முபலக்ஷணமானாப்போலே.

(அதனுள் பிரமனரனீ) பஞ்சீகரித்தபூதங்களாலே ஸ்ருஷ்டமான அண்டாந்தர்வர்த்திகளான ப்ரஹ்மருத்ராதிகளும் நீயிட்டவழக்கென்கிறது.

(உம்பரும்யாதவரும் படைத்தமுனிவனவனீ) தேவர்களையும்மற்றுள்ளாரையும் படைத்தமுனியாக ப்ரஸித்தனானவன்நீ. "பிரமனரன்நீ" என்ற சாமாநாதிகரண்யம் கார்யகாரணபாவநிபந்தநம்; "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்மதஜ்ஜலாநிதி) என்னுமாபோலே. சகலபதார்த்தங்களையும் கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டிக்கைக்காக பூர்வகர்மங்களை யநுசந்திக்குமவனிறே - முனியாகிறான்; "ததஸ தேவ ஸங்மநோகுருதஸ்யாமிதி" (ததஸதேவஸங்மநோகுருதஸ்யாமிதி) இத்தால் — ஸ்த்தூலசிதசித்வஸ்துசரீரத்வத்தாலே கார்யத்வம் சொல்லிற்றாய்த்து.

(எம்பரம்சாதிக்கலுற்றென்னைப்போரவிட்டிட்டாயே) என்கார்யம் நீயேசெய்வதாக வேறிட்டுக்கொண்டு, அத்தையுபேக்ஷித்து, அசேதநத்தைப்பொகடுமாபோலே பொகட்டாயென்னுதல்; சகலத்தையும் நிர்வஹிக்கிறநீ என்னையொருவனையும் நானென்கார்யம் செய்வேனாகப்பார்த்து, உன்பக்கலில்நின்றும் போரவிட்டு உபேக்ஷித்தாயென்னுதல். (என்னை) உன்னாலல்லது செல்லாதவென்னை. (போரவிட்டிட்டாயே) அவன் பக்கலினின்றும் பிறிகதிர்ப்பட்டுப்போந்தாராயிருக்கிறபடி. குணம்நடையாடாததேசத்திலே தள்ளினாயென்கிறார். ஜ்ஞாநவைசத்யத்தைப்பண்ணி ப்ராப்தியளவும் ப்ரவர்த்தியாதிருக்கிறவிது, நளன் தமயந்திக்கு வழிகாட்டிவிட்டாப்போலே யிருக்கிறதுகாணும் ..................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (உம்பரித்யாதி) பாட்டையெல்லாம்கடாக்ஷித்தவதாரிகை (சர்வநிர்வாஹகனைவித்யாதி.)

ப்ரக்ருதி மேலாயிருக்கும்ப்ரகாரத்தையும், இதுக்கு அழகும் குளிர்த்தியுமின்னதென்னுமத்தையும், "பாழே" என்றதுக்கர்த்தத்தையு மருளிச்செய்கிறார் (மஹதாதித்யாதி) ப்ரக்ருதி, போகமோக்ஷங்களை விளைக்கும்படியென்னென்ன (காரணவஸ்த்தமாயித்யாதி) காரணத்வாவஸ்த்தமாய்—கார்யோந்முகமாய்நின்றென்றபடி. "படஸ்ய ஸௌக்ல்யம்" (படஸ்யஸௌக்ல்யம்) என்னுமாபோலே பிரித்துச்சொல்லாதே, "பாழேயோ" என்று சமாநாதிகரிக்கிறதெதுக்கென்ன (ஸௌக்ல்யமென்றித்யாதி) இத்தால்பலிதம் (உம்பரந்தணித்யாதி) இத்தால்-பகவத்வ்யதிரிக்தவிஷயங்களில் நிஷ்கர்ஷகசப்தம் தர்மிபோதகமாகமாட்டாது, பகவத்விஷயத்தில் நிஷ்கர்ஷகசப்தமும் பகவத்பர்யந்தமாயிருக்குமென்றுகருத்து. சப்தம், நிஷ்கர்ஷகமென்றும் அநிஷ்கர்ஷகமென்றும் த்விவிதம். நிஷ்கர்ஷகமாவது - "படஸ்ய ஸௌக்ல்யம்" (படஸ்யஸௌக்ல்யம்) என்னுமது; அநிஷ்கர்ஷகமாவது-"ஸுக்ல: பட:" (ஸுக்லஃபடஃ) என்னுமது. நிஷ்கர்ஷகசப்தமும், வைவக்ஷிகநிஷ்கர்ஷகமென்றும், நியதநிஷ்கர்ஷகமென்றும் த்விவிதம். வைவக்ஷிக நிஷ்கர்ஷகமாவது - "ஸுக்ல: பட:" (ஸுக்லஃபடஃ) என்று அநிஷ்கர்ஷகமாகச்சொல்லாமல் அத்தை "படஸ்ய ஸுக்ல:" (படஸ்யஸுக்லஃ) என்று நிஷ்கர்ஷகமாகச்சொல்லுகை; நியதநிஷ்கர்ஷகமாவது - "கந்தவதீ ப்ருதிவீ" (கந்தாப்ருதிவீ) என்று அநிஷ்கர்ஷகமாகச்சொல்லப்போகாதே "ப்ருதிவ்யா கந்த:" (ப்ருதிவ்யாம்கந்தஃ) என்றுநிஷ்கர்ஷகமாகச்சொல்லலாம்படியிருக்கை. ஆக, த்விவிதநிஷ்கர்ஷகசப்தங்களும் லோகத்தில் தர்மமாத்ரபோதகமொழிய தர்மிபோதகமாகமாட்டாது. ஈஸ்வரனிடத்தில் வந்தால் "புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச - ரஸோऽஹமப்ஸு கௌந்தேய" (புண்யோகந்தஃப்ருதிவ்யாஞ்ச - ரஸோஹமப்ஸுகௌந்தேய) என்று-ப்ருதிவியினுடைய புண்யகந்தமும் ஜலத்தில்ரஸமும் நானேயென்றிருக்கையாலே, உபயவிதநிஷ்கர்ஷகசப்தங்களும் பகவத்பர்யந்தமாயிருக்குமென்றபடி. இஸ்ஸாமாநாதிகரண்யத்தால் பலித்தவம்சத்தை யருளிச்செய்கிறார் (பாழேயோவென்கிறவித்யாதி) "பாழேயோ" என்று சரீரசரீரிபாவ சம்பந்தம்சொல்லுகிற வித்தாலென்றபடி. ஸ்வரூபேண தாதாத்ம்யம்கொள்ளுகிற மாயாவாதி, ஜீவனோடே ப்ரஹ்மத்துக் கைக்யம்சொல்லுகையொழிய ப்ரக்ருதியோடே ஐக்யம்கொள்ளான்.

அதனுள் - ப்ரக்ருதியிலே. அதிலேவர்த்திக்கிறவென்றபடி. "மிசை" என்று-விலக்ஷணமான ஆத்மாவைச்சொல்லுகிறது. "உம்பரும்" இத்யாதிபதத்வயத்துக்கும்பாவம் (ஸூக்ஷ்மசிதசிதித்யாதி.) "அதனுள்மிசைநீயே" என்றத்தால்பலிதத்தையருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதியாலே) இத்தாலென்றது - "அதனுள்மிசைநீயேயோ" என்கிறவித்தாலென்றபடி. விசேஷணப்ராதாந்யமென்றது - விசேஷணபூதஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம்சொல்லுமென்றபடி. விசேஷணத்துக் கபாரமார்த்யமென்றது - விசேஷணபூதஜீவனோடே ப்ரஹ்மத்துக்குண்டான பேதாபாரமார்த்யம் சொல்லுமென்றபடி. "நீயேயோ" என்று - ஆத்மாவை யீஸ்வரனோடு சமாநாதிகரிக்கிறதுக்குபாவம் (நீயேயோவித்யாதி.)

அம்பரநற்சோதி - ஆகாசமும் விலக்ஷணமானதேஜஸ்ஸும் நீயென்றபடி. ஒன்றிரண்டைச்சொன்னது மற்றவற்றுக்கு முபலக்ஷணமாமோவென்ன, த்ருஷ்

டார்ந்தம் (யதம்ப்வித்யாதி) "யஉ உ-ஹெவெஷவஃகாயஜ்தோவிவ்ஜவஸ-ரா | வஷுாகாராஸமுஉ ஜுூ-தாவவ-தாஸு ஹஜிஸம-ா" (யதம்புவைஷ்ணவஃகாயஸ்ததோவிப்ரவஸுந்தரா | பத்மாகாராஸமுத்பூதா பர்வதாப்த்யாதிஸம்யுதா) இதி த்விதீயாம்ஸேத்வாதஸே.

அதனுள் பிரமனரனீ - ஆகாசம் தேஜஸ்ஸமுதலான பஞ்சபூதாரப்தாண்டாந்தர்வர்த்திகளான ப்ரஹ்மருத்ராதிகளும் நீயிட்டவழக்கென்றபடி.

"படைத்த" என்கையாலே பலிதமானதோரர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் (பிரமனரனீயித்யாதி) கார்யகாரணபாவ நிபந்தநமென்னுமதுக்கு ப்ரமாணம் (சர்வமித்யாதி) சாந்தோக்யே. "முனி" என்றதுக்கர்த்தம் (சகலேத்யாதி) "முனி" என்றதுக்குப்ரமாணம் (ததஸதித்யாதி) இதுக்கர்த்தம் - "அஸதெவ-தத்" (அஸதேவ-தத்) நாமரூபவிபாகாநர்ஹ ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டதயா அஸச்சப்தவாச்யமானவந்தப்ரஹ்மமே, "ஸத்-ஸ்யாமிதி" நாமரூபவிபாகார்ஹ ஸ்த்தூலசிதசித்விசிஷ்டதயா ஸச்சப்தவாச்யமாகக்கடவனென்று, "மநோகுருத" மநஸ்ஸைப்பண்ணிற்று. சங்கல்பித்ததென்றபடி; இயம் ஸ்ருதிஃயஜுஷி.

"அம்பரநற்சோதி" என்றுதொடங்கி "முனிவனவனி" என்னுமளவுக்கும்பாவம் (இத்தால்ஸ்த்தூலேத்யாதி) முனிவனவனி - ஸ்ருஷ்டிக்குறுப்பாக பூர்வகர்மவிபாகங்களை மநநம்பண்ணுமவன் நீயென்று சப்தார்த்தம்.

எம்பரம் - என்கார்யம். "சாதிக்கலுற்று" என்றது - நீசாதிக்கலுற்றென்னுதல், நான் சாதிக்கலுற்றென்னுதல். நீசெய்வதாகவேறிட்டுக்கொண்டென்று முந்தினவர்த்தம்; நான் செய்வேனாகப்பார்த்தென்றிரண்டாமர்த்தம்.

"போரவிட்டிட்டாயே -" உன்பக்கல்நின்று மகன்றுபோம்படி யுபேக்ஷித்துப் பொகட்டுவிட்டாயென்று சப்தார்த்தம். அவனுக்கு சரீரபூதராய் அவனோடேகூடியிருக்கச்செய்தே, "போரவிட்டிட்டாய்" என்கிறதென்னென்ன (குணமித்யாதி) அவன்போரவிட்டானோவென்ன வருளிச்செய்கிறார் (ஜ்ஞாநவைஸத்யத்தையித்யாதி) "ஊஷவ நூாவிஉஹ-ாணாஜெஷயா-த-வமெகாவஸுாநு" (ஏஷபந்தாவிதர்ப்பாணுமேஷயாத்யுபகோஸலாந்) என்றத்தைப்பற்ற (நளனித்யாதி)... ...*

## ஐந்தாம்பாட்டு.

போரவிட்டிட்டென்னைநீபுறம்போக்கலுற்றாற்பின்னையா
ளைக்கொண்டெத்தையந்தோவெனதென்பதென்யானென்பதென்
றீரவிரும்புண்டநீரதுபோலவென்னாருயிரை
யாரப்பருகவெனக்காராவமுதானாயே.

### ஆறாயிரப்படி.

(போரவிட்டிட்டு) உம்முடையபரத்தை நான் நிர்வஹிக்கத்தவிர்ந்தால் அந்தபரத்தை நீரேநிர்வஹித்துக்கொள்ளலாகாதோவென்னில்; நீ என்னைக்கைவிட்டு உபேக்ஷித்தால் பின்னையாரைக்கொண் டெத்தைச்

செய்வது, நானென் றென்றுண்டோ, என்னுடையதென் றென்றுண்டோ, அடையமுடிந்ததிறே; ஆனபின்பு, அக்நிஸந்தப்தமானவிரும்பு தாபம்தீரும்படி நீரைப்பருகினப்போலே, உன்னைப்பிரிந்த வென்னுடைய சந்தாபமெல்லாம் தீரும்படி யுன்னைப்பருக எனக்காராவமுதானய், இனிக்குறையும் நீயேசெய்தருளாயென்கிறார் ......... ...... ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், எனக்கு நிரவதிகபோக்யபூதனய்வைத்து நீயென்னை யுபேக்ஷிக்கப்பார்த்தால் எனக்கொரு உஜ்ஜீவநமுண்டோவென்கிறார்.

தீர - தன்காய்ச்சல்தீரும்படி. இரும்பு-இரும்பானது. உண்ட-உண்ட. நீரது போல-நீர்போலே. என்னுருயிரை-என்னுத்மாவின். ஆர-விடாயெல்லாம்தீர பரிபூர்ணமாக. பருக-பருகுகைக்கு. எனக்கு-எனக்கு. ஆரா - த்ருஷ்ணைதொடாத. அமுதானயே-அம்ருதமானயே. இப்படியிருக்க, நீ - உன்வாசியறிந்து புஜிக்கும்படிபண்ணி ப்ராப்திபர்யந்தமாக ப்ரகாசிப்பித்தநீ. போரவிட்டு - அத்தைக்கொலைத்துப்போரவிட்டு. இட்டு - அசேதநவதநாதரித்து. என்னை—அநந்யகதியானவென்னை. புறம்-உனக்குப்புறம்பானவிஷயாந்தரத்திலே. போக்கலுற்றல் - போக்கநினைத்தால். பின்னை-சர்வசக்தியானநீ அநாதரித்தபின்பு. யான்-அசக்தனனநான். ஆரைக்கொண்டு-புருஷார்த்தசாதகராயிருப்பார் மற்றுரைக்கொண்டு. எத்தை-எந்தபுருஷார்த்தத்தை. அந்தோ! - ஐயோ!. சாதிப்பேன், எனதென்பதென் - என்னதென்கைக்கொருகாரணுதிகளில்லை. யானென்பதென் - நானென்கைக்கொரு ஸ்வதந்த்ரனுனகர்த்தாவில்லை.

இனிவேறுண்டோவென்றுகருத்து. ஆரைக்கொண்டெத்தை என்கிறவ்ருத்தோக்தியிலே விஷண்ணராகிறார். "இரும்புண்டநீர்போ லென்னுத்மாவை முற்றப்பருகினன்" என்கிறபடியே நீபூர்ணமாகபாநம்பண்ணுகைக்குறுப்பாக' உன்போக்யதையை யெனக்கு ப்ரகாசிப்பித்தாயென்னவுமாம் ......................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

சர்வரக்ஷகனனநீ யுபேக்ஷித்தால், என்கார்யம் நான்செய்யவோ, பிறர்செய்யவோ, முடிந்தேனிறே யென்கிறார்.

(போரவிட்டிட்டு) உன்பக்கலினின்றும் பிறித்துபேக்ஷித்து. (என்னை) அநந்யகதியானவென்னை. (நீ) ஸ்ருஷ்டியேதொடங்கி இவ்வளவும் வரப்புகுரநிறுத்தின நீயென்னுதல், சர்வரக்ஷகனனநீயென்னுதல். (என்னை) அஜ்ஞாநாசக்திகளுக்கெல்லையானவென்னை. (நீ) ஜ்ஞாநசக்திகளால் பரிபூர்ணனனநீ. அக்கரையேறமாட்டாதானெருவனை யமுக்கினப்போலேயிருக்கிறதுகாணும். ( என்னைநீ ) கண்ணும்காலுமின்றிக்கேயிருப்பதொருத்தன், கண்ணும்காலுமுடையனயிருப்பதொருத்தன், ஆருக்கார்வழிகாட்டுவானென்கிறது; " நைவகிஞ்சித்பரோக்ஷந்தேப்ரத்யக்ஷோஸிநகஸ்யசித் " ( நைவகிஞ்சித்பரோக்ஷந்தேப்ரத்யக்ஷோஸிநகஸ்யசித் ) என்னும்படியே. (நீ) * ஆட்பார்த்துழிதரும்நீ. * எதிர்சூழல்புக்குத்திரியும் நீ. (புறம்போக்கலுற்றல்) புறம்பேபோக்குகையிலே யத்யவஸித்தால். என்கார்யம் நான்செய்வேனகப்பார்த்து என்னையுபேக்ஷித்தால். (பின்னை

யானுளைக்கொண்டெத்தை) சர்வசக்தியானநீ அநாதரித்தபின்பு, அசக்த னநான் எந்தவுபாயத்தைக்கொண்டு என்னபுருஷார்த்தத்தை சாதிப்ப து. ஆரைக்கொண்டென்கிறது - புருஷார்த்தம் பெறுவதொருசேதநனு லே, அசேதநக்ரியாகலாபாதிகளாலன்றென்னுமிடம் தோற்றுகைக்காக. (அந்தோ!) "மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்றவுன க்கு நானுபதேசிக்கவேண்டுவதே!. (எனதென்பதென் யானென்பதென்) முடிந்தேனிறே என்கிறார். (நானேமுடிந்தேன், இனிக்கரணங்களும்போ ய்த்திறேயென்கிறார்.)

(தீரவித்யாதி) அக்நிஸந்தப்தமான விரும்பு காய்த்தல்தீர நீரை நிஸ்ஶேஷமாக புஜிக்குமாபோலே, என்னாத்மவஸ்துவைச் சமையபுஜிக் கைக்காக, எனக்குன்னுடைய நிரதிசயபோக்யதையைக்காட்டி யென்னை யகப்படுத்தினாய். (என்னாருயிராரப்பருக) என்விடாய்தீரக்கலந்தா யென்றிருந்தேன், உன்விடாய்தீரவாயிருந்ததிறே. உனக்காகவாகாதே யுன்னைக்காட்டிற்று. அன்றிக்கே, விபக்திவ்யத்யயம்; என்னாருயிரானது உன்னையாரப்பருகவென்னவுமாம்; அப்போது, காய்ந்தவிரும்பு அக்காய் த்தல்தீரும்படி நீரைப்பருகுமாபோலே, என்னாருயிரானது என்சந்தாப மெல்லாம்தீரும்படி யுன்னைபுஜிக்க எனக்குப்பண்டு நிரதிசயபோக்யனு னவனே யென்றுமாம்.

வ்யாக்யாநாந்தரம்—(எனதென்பதென்யானென்பதென்) பேறும் மதானுல் சாதநமுமும்முடையதலையிலே யாகவேண்டாவோவென்ன; எ னக்குப் பரிகரமாயிருப்பதொன்றுண்டென்பதோ ரர்த்தமுண்டோ, ப்ரு தக்ஸ்த்திதியோக்யமாயிருப்பதொருநானுண்டோ, சரீரரக்ஷணம் சரீரி யையொழியச்செய்வாருண்டோ .............................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (போரவிட்டிட்டித்யாதி) "போரவிட்டிட்டென்னை" என் றுதொடங்கி "யானென்பதென்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சர்வரக்ஷ கேத்யாதி.)

"போரவிட்டிட்டு" என்று - முழுச்சொல்லு; (உன்பக்கலினின்றும் பிரித்து பேக்ஷித்து.)

"என்னை" என்றதுக்கர்த்தாந்தரமாதல், அநந்யகதியானவென்னை யென்றத் தால் பலிதமாதல் (அஜ்ஞாநேத்யாதி.)

"ஸ்ருஷ்டியேதொடங்கி" என்றவாக்யவிவரணம் (ஜ்ஞாநசக்திகளாலித்யா தி) "புறம்போக்கலுற்றால்" என்றத்தைக்கடாக்ஷித்து கீழெக்கெல்லாம்பாவம் (அக் கரையேறவித்யாதி.)

ஜ்ஞாநசக்திகளுண்டானு லுமக்குச்செய்யவேணுமென்கிற நிர்ப்பந்தமென் னென்ன (கண்ணும்காலுமித்யாதி) அவனப்படி ஜ்ஞாநாதிபூர்ணனுயிருக்குமோவெ ன்ன (நைவகிஞ்சிதித்யாதி) ஜிதந்தாயாம், "நைவகிஞ்சித்பரோக்ஷந்தேவ

த்ய்க்ஷாஸி நகஸ்யசித் । நைவகிஞ்சிதஸித்தந்தேநசஸித்தோஸிகஸ்யசித் ” (நைவகிஞ்சித்பரோக்ஷம்தேப்ரத்யக்ஷோஸிநகஸ்யசித் । நைவகிஞ்சிதஸித்தந்தேநசஸித்தோஸிகஸ்யசித் ) “ தே-கிஞ்சித்பரோக்ஷம்-ந ” ( தே-கிஞ்சித்பரோக்ஷம்-ந ) உனக்குச்சற்றும் மறைந்திருப்பதில்லை; எல்லாவற்றையு மொருக்காலே அபரோக்ஷிக்கவல்ல வடிவையுடையவனென்கை; “ த்வம்கஸ்யசித்-ப்ரத்யக்ஷோநாஸி ” (த்வம்கஸ்யசித்-ப்ரத்யக்ஷோநாஸி) நீயொருவர்க்கும் சாக்ஷாத்கரிக்க நிற்கிறுயல்லை; உபயத்தாலும் பலித்தது, நீயறியாததொன்றுமில்லை, நானறிவதொன்றுமில்லையென்றபடி. “சர்வரக்ஷகனுனநீ” என்றதின்விவரணம் (ஆள்பார்த்தித்யாதிவாக்யத்வயம்.)

விவரணம் (என்கார்யமித்யாதி.)

எத்தைக்கொண்டென்னுதே, “ஆரைக்கொண்டு” என்கிறதென்னென்ன (ஆரைக்கொண்டென்கிறதித்யாதி.)

“அந்தோ!” என்றதுக்குபாவம் (மாமேகமித்யாதி.)

“பேறும்மதானுல் சாதநமு மும்முடையதலையிலேயாக வேண்டாவோவென்ன; (எனதென்பதென் யானென்பதென்) எனக்கு பரிகரமாயிருப்பதொன்றுண்டென்பதோரர்த்தமுண்டோ, ப்ருதக்ஸ்த்திதியோக்யனுயிருப்பானொருநானுண்டோ, சரீரரக்ஷணம் சரீரியை யொழியச்செய்வாருண்டோ” என்று இவ்வளவும் - “எனதென்பதென் யானென்பதென் ” என்றதுக்கர்த்தமாகவிவக்ஷித்து, அத்தால்பலிதம் (முடிந்தேனிறேயென்று) “ என்னதென்கிறதேது, நானென்கிறதெது, என்னதென்கைக்கொரு பரிகரமில்லை, யானென்கைக்கொரு ஸ்வதந்த்ரனுனகர்த்தாவில்லை” என்று உரையில் சப்தார்த்தம்.

“இரும்பு-தீர-நீர்-உண்டதுபோல” என்றர்வயிப்பது. தீர-காய்த்தல்தீர.

“எனக்காராவமுதானுய்” என்னுமளவுக்கும்பாவம் (என்விடாயித்யாதி) இத்தால்பலிதம் (உனக்காகவித்யாதி) விபக்தி வ்யத்யயமென்றது - “ஆருயிரை” என்றத்விதீயையை “ஆருயிர்” என்று ப்ரதமையாக்கியென்றபடி. அப்போதென்றது-இந்தபக்ஷத்தில் சப்தநிர்வாஹமென்றபடி. முந்தினபக்ஷத்தில், * இரும்பு * எம்பெருமானுக்கு த்ருஷ்டாந்தம்; இரண்டாம்பக்ஷத்தில், ஆழ்வார்க்கு த்ருஷ்டாந்தம்.

தீரவிரும்புண்டவென்றுதொடங்கி, எனக்காராவமுதானவனே-போரவிட்டிட்டென்றுதொடங்கி, எனதென்பதென் யானென்பதென் - அந்தோவித்யந்வயඃ. “எத்தை” என்றவநந்தரம், “சாதிப்பது” என்றத்யாஹார்யம் .......................*

---

# ஆறாம்பாட்டு.

---

எனக்காராவமுதாயெனதாவியையின்னுயிரை
மனக்காராமைமன்னியுண்டிட்டாயினியுண்டொழியாய்
புனக்காயாநிறத்தபுண்டரீகக்கட்செங்கனிவா
யுனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பாவென்னன்பேயோ.

## ஆறாயிரப்படி.

(எனக்காராவமுதாய்) சௌந்தர்யாதி சர்வகுணங்களினாலும் உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு போக்யமானாப்போலே யெனக்கு போக்யமாயிருந்துவைத்து, அத்தனையேயன்றியே என்னுடைய ப்ரக்ருதியையும் என்னுடைய வாத்மாவையும் நிரவதிகமான வபிநிவேசத்தோடே புஜித்தருளினநீ, பிரானே, என்னைப்பொகடாதே கொள்ளாயென்கிறார் ............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பிராட்டிபக்கல் ப்ரணயியானாப்போலே யென்பக்கலிலும் நிரதிசய ப்ரணயத்தையுடையநீ, உன்போக்யதையை ப்ரகாசிப்பித்து புஜிப்பித்தாய், இனி முழுக்கநிர்வஹித்து விடவேணுமென்கிறார்.

புனக்காயா - தன்னிலத்திலலர்ந்த காயாம்பூப்போன்ற. நிறத்த - நிறத்தையுடையையாய். புண்டரீகம் - புண்டரீகம்போலேயிருக்கிற. கண் - திருக்கண்ணையும். செங்கனிவாய் - சிவந்ததிருப்பவளத்தையுமுடைய. உனக்கேற்கும் - உனக்கநுரூபமான. கோலம் - வடிவையுடையளாய். மலர் - பூவில்பிறப்பாலே நிரதிசயபோக்யபூதையாய். பாவைக்கு - ஸ்த்ரீத்வாநுரூபமான வாத்மகுணத்தையுடைய லக்ஷ்மிக்கு. அன்பா - அன்பையுடையையாய். என்னன்பேயோ - என்னன்புதானொருவடிவாயிருக்கிறவனே. எனக்கு - எனக்கு. ஆராவமுதாய் - நிரதிசயபோக்யனாய். எனதாவியை - ஹேயமான வென்னுடைய ப்ரக்ருதியையும். இன்னுயிரை - விலக்ஷணமானவாத்மாவையும். மனக்கு - ஹ்ருதயத்துக்கு. ஆராமை-த்ருப்திபிறவாதபடிவிரும்பி. மன்னி - நிரந்தரமாக. உண்டிட்டாய் - புஜித்தாய். இனி - இனித்தொடங்கி. உண்டொழியாய் - நீகுறையும் புஜிப்பித்தேவிடவேணும்.

ஈஸ்வரனுக்கு நிருபாதிகபோக்த்ருத்வமும் சேதநனுக்கு போக்யத்வமுமிறே ஸ்வாபாவிகம்; அதினுடைய வநுபவஜநித ப்ரீதியாலே வருகிறபர்யவஸாநமிறே சேதநபோக்த்ருத்வமும், ஈஸ்வரபோக்யத்வமும். ஆகையிறே, "அஹமந்நம்" என்று-ஸ்வரூபத்தைநிர்த்தேசித்து, "ஊஹஊஹ" (அந்நமந்நம்) என்று - இவனுடைய போக்யத்வத்தையும் ஈஸ்வரனுடைய போக்த்ருத்வத்தையும்சொல்லி, "ஊ" (அத்மி) என்று - சைதந்யப்ரயுக்தமான பர்யவஸாநத்தாலே சேதநபோக்த்ருத்வத்தையும் சொல்லிமுடித்தது ............................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

பெரியபிராட்டியார்பக்கல்போலே என்பக்க லத்யந்தாபிநிவிஷ்டனாய், என்ப்ராக்ருதியிலு மாத்மாவிலு மத்யாதரத்தைப்பண்ணி புஜித்தநீ, என்னையுபேக்ஷியாதே ஈண்டெனவிஷயீகரித்தருளாயென்கிறார்.

(எனக்காராவமுதாய்) தேவஜாதியினுடைய உப்புச்சாறுபோலன்றியே, (சதாஸேவ்யமாய்) நித்யசூரிகளெல்லாருங்கூட வநுபவிக்குமுன்னை சம்சாரியானவெனக்குத்தந்தாய்.

(எனதாவியை) என்னதென்னுமதுவேஹேதுவாக, அபிமதவிஷயத்திலழுக்குகக்கும் காமுகனைப்போலே, என்னுடம்பைவிரும்பினாய். (இன்னுயிரை) பகவதபிப்ராயத்தாலே தவதவநாறுகிறபடி. அன்றிகே, செவ்வாய்க்கிழமையை மங்களவாரமென்னுமாபோலே, ப்ரக்ருதியோடே சம்பந்திக்கையாலே தண்ணிதென்றுசொல்லுகிறாராகவுமாம். (மனக்காராமையித்யாதி) (மனக்கு) மநஸ்ஸுக்கு. (ஆராமை) அமையாமை. (மன்னியுண்டிட்டாய்) நிரந்தரமாக புஜித்தாய். (இனியுண்டொழியாய்) நீ தொடங்கினகார்யத்தையும், நடுவேகுறைகிடக்கவிடாதே, விஷயீகரித்துவிடாய். (நீ ஆரம்பித்தகார்யத்தில் குறைகிடப்பதுண்டோ) நீயிவ்வளவு புகுரநிறுத்துகைக்கு நான் ஸஹகரித்ததுண்டோ. உன்காரியத்துக்குன்னைவேண்டிக்கொள்ளவேணுமோ. இவருடையவம்ருதத்துக்கு போக்த்ருத்வமுண்டுகாணும்!.

(புனக்காயாவித்யாதி) இவ்வாத்மாவையும் இதினுடையசரீரத்தையும் விரும்புகை உனக்குச்சேருமோ, நீயுகந்தார்க்குச்சேருமோ. (புனக்காயாநிறத்த) தன்னிலத்திலலர்ந்த காயாப்போலேயாய்த்து வடிவிருப்பது. (புண்டரீகக்கண்) வாத்ஸல்யாம்ருதவர்ஷியாயாய்த்துக்கண்களிருப்பது. (செங்கனிவாய்) சிவந்துகனிந்தாய்த்து முறுவலிருப்பது. பிராட்டிவிரும்பும் துறைகளிறேயிவை. (புனக்காயாவித்யாதி) அக்காயாதாமரைபூத்துக் கனியப்பழுத்தாப்போலேயாய்த்து, திருமேனியும் திருக்கண்ணும் திருப்பவளமுமிருப்பது. (உனக்கேற்கும்) இவனோபாதி வாசாவிமர்த்திக்கைக்கும்பொறுத சௌகுமார்யத்தையுடையவள். இப்படிப்பட்டவுனக்கு சத்ருஶமான வழகையுடையளாய், புஷ்பத்தில் பரிமளத்தைவடித்து வகுத்தாப்போலேயிருக்கிறபிராட்டிக்கு ஸ்நிக்தனானவனே. உனக்கேற்கும்கோலமென்று - அவ்வழகையிங்கே யதிதேசிக்கிறார். ந்யாயாதிதேசம்பண்ணுகிறார். (கோலமலர்ப்பாவைக்கன்பாவென்னன்பேயோ) அவள்பக்கலன்பனென்று தோற்றியிராநின்றது, தம்முடையபக்கலன்பென்றும் அதுடையனென்றும் தெரிக்கப்போகிறதில்லை; ஜ்ஞாதாவை ஜ்ஞாநமென்னுமாபோலே. " தத்³கு³ணஸாரத்வாத்து தத்³வ்யபதே³ஶ꞉ " (தத்குணஸாரத்வாத்துதத்வ்யபதேஶ꞉ ................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (எனக்காராவமுதித்யாதி) கோலமலர்ப்பாவைக்கன்பாவென்னன்பே - எனதாவியையின்னுயிரை மனக்காராமைமன்னி யுண்டிட்டாயினியுண்டொழியாய்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (பெரியபிராட்டியாரித்யாதி.)

"எனக்கு" என்றதுக்குபாவம் (தேவஜாதியித்யாதி.)

" ஆவியை " என்னாதே " எனது " என்றதுக்குபாவம் (என்னதென்னுமித்யாதி.)

"இன்னுயிர்" என்று தம்மைஶ்லாகிக்கலாமோவென்ன; த்வேதாபாவம் (ப கவதபிப்ராயத்தாலே யித்யாதிவாக்யத்வயமும்) தவதவஙாறுகையாவது - மிகவும் தபோகந்தியாயிருக்கை. அதாவது - பாரதந்த்ர்யகந்தியாய் ஶ்லாக்யமாயிருக்கை. "ஃஸெ0ஜாறா_த-ஙாஸஹெ) தவவஸ்ஜா ந-வாஔ நாக" ( அஸந்தேஶாத்துரா மஸ்யதபஸஶ்சாநுபாலநாத் ) என்றவிடத்திலே பாரதந்த்ர்யமிறே தபஸ்ஸென்றது. அமையாமை-த்ருப்திபிறவாமல்.

உண்டிட்டாய் - உண்டாய். இனி உண்டொழியாய் - இனி விஷயீகரித்துவி டாய். இத்தால்பாவம் (நீயிவ்வளவித்யாதி) "உண்டிட்டாய்" என்றத்தைப்பற்ற (உ ன்காரியத்துக்கித்யாதி) "ஆராவமுதானவனே - உண்டிட்டாய்" என்கையாலேபாவ ம் (இவருடையவித்யாதி.)

ஞேழையும்கூட்டிக்கொண்டு "கோலமலர்ப்பாவைக்கன்பா" என்னுமளவுக்கு ம்பாவம் (இவ்வாத்மாவையுமித்யாதி) நீயுகந்தார்க்குச்சேருமோ - ஹேயனானவென் னை விரும்புகை நீயுகந்தவிஷயமான பிராட்டிக்குச்சேருமோவென்றபடி. "புனக் காயா" இத்யாதியை "உனக்கேற்கும்" இத்யாதியோடேகூட்டிபாவம் (பிராட்டிவி ரும்புமித்யாதி) உத்ப்ரேக்ஷிக்கிறார் (புனக்காயாவித்யாதி.)

அவனவயவங்களைப்போலே இவளுடைய விக்ரஹாதிகளை வர்ணியாமல், "உனக்கேற்கும்" என்றத்தால்பலித்தபாவம் (இவனோபாதியித்யாதி) வாசாவிமர்த் திக்கைக்கும் பொறுதவென்றது - "வாஜாஙா-ஜூஜ" (பாதாருந்துதம்) இத்யா தியைப்பற்ற. சப்தார்த்தம் (இப்படிப்பட்டவித்யாதி) வடித்து - வடிக்கட்டி. வகுத் தாப்போலே - ஆக்ருதியாக்கினாப்போலே. ( இவனோபாதி ) இத்யாதிவாக்யத்தோ டே (உனக்கேற்கும்) இத்யாதிவாக்யத்துக்குச்சேர்த்தி. அவ்வழகென்றது - "புனக் காயா" இத்யாதியைக்கடாக்ஷித்து. அதிதேசிக்கிறார் - ஏறிடுகிறார். அதிதேசிப்பது சர்வதாசாம்யமுண்டானவிடத்திலேயன்றோ, காளமேகநிபஶ்யாமமான நிறம் முத லானவற்றை * ஹிரண்யவர்ணையான விவளிடத்திலே யதிதேசிக்கக்கூடுமோவெ ன்ன (ந்யாயாதிதேசமித்யாதி) அதாவது - ஸ்வரூபாதிதேசம் பண்ணுகிறதன்று, அ வனைப்போலே இவளும் அழகுடையவளென்கிறதென்றபடி. ஸ்வரூபாதிதேசமென் றும், ந்யாயாதிதேசமென்றுமிரண்டு. ஸ்வரூபாதிதேசமாவது- சர்வதாஸாம்யம்கொ ள்ளுகை;ந்யாயாதிதேசமாவது-அதுபோலே இதுவும் ஶ்லாக்யமாயிருக்குமென்கை.

"அன்பா" என்னாதே "என்னன்பே" என்றதுக்குபாவம் (அவள்பக்கலித்யா தி) அன்பனென்று - அன்பையுடையவனென்று. அன்புதானாகச்சொல்லுவானென் னென்ன (ஜ்ஞாதாவையித்யாதி) இதுக்குப்ரமாணம் (தத்குணேதி) "தஜூ-ணஸா ரஃவா_த-தஜ்)வஜெஶஃவ்ராஜூவக" ( தத்குணஸாரத்வாத்துதத்வ்யபதேஶ꞉ ப்ராஜ்ஞவத் ) இதிஶாரீரகமீமாம்ஸாஸூத்ரம். துஶப்தஶ்சோத்யம் வ்யாவர்த்தயதி. தத் குணஸாரத்வாத் - விஜ்ஞாநகுணஸாரத்வா தாத்மநஸ்தத்வ்யபதேஶ꞉. விஜ்ஞாநமிதி வ்யபதேஶ꞉. ப்ராஜ்ஞவத்-யதா "ஸ-த)ஂஜ்ஞா_நஂ-நஂ-ஹ" (ஸத்யம்ஜ்ஞாநம நந்தம்ப்ரஹ்ம) இதி விபஶ்சித꞉ப்ராஜ்ஞஸ்யஜ்ஞாநஶப்தேந வ்யபதேஶ꞉, தத்வதித் யர்த்த꞉.

உத்தரார்த்தத்தை யநுசந்தித்து பூர்வார்த்தத்தை யநுசந்திப்ப தந்வயம். இ னி யுண்டொழியாய் என்று - க்ரியை ........................................*

# ஏழாம்பாட்டு.

கோலமலர்ப்பாவைக்கன்பாகியவென்னன்பேயோ
நீலவரையிரண்டுபிறைகவ்விநிமிர்ந்ததொப்பக்
கோலவராகமொன்றாய்நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய்
நீலக்கடல்கடைந்தாயுன்னைப்பெற்றினிப்போக்குவனே.

## ஆறாயிரப்படி.

(கோலமலர்ப்பாவைக்கு) பெரியபிராட்டிபக்கலிலும் ஸ்ரீபூமிப்பிராட்டிபக்கலிலும்பண்ணும் வ்யாமோஹத்தை யென்பக்கலிலேபண்ணிக்கொண்டென்னை புஜித்தருளின வுன்னைப்பெற்று இனிவிடுவேனோ வென்கிறார் ......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷகனாக வுன்னைப்பெற்றுவைத்து, இனிவிடுவேனோவென்கிறார்.

கோலம்-வடிவழகையும். மலர்-போக்யதையையுமுடையளான. பாவைக்கு-பிராட்டிக்கு. அன்பாகிய-உகப்பானவத்தாலே. என்-என்பக்கலிலும். அன்பேயோ-அதிப்ராவண்யத்தையுடையயாய். "ஸமுத்திதோநீலஇவாசலோமஹாந்" (ஸமுத்திதோநீலஇவாசலோமஹாந்) என்கிறபடியே, நீலவரை-நீலரத்நகிரியானது. இரண்டுபிறை-இரண்டுபிறையை. கவ்வி-கவ்வி. நிமிர்ந்ததொப்ப - எழுந்திருந்தாப்போலே. கோலம்-விலக்ஷணமான வடிவழகையுடைத்தாய். ஒன்று-அத்விதீயமாயிருப்பதொரு. வராகமாய் - மஹாவராஹமாய். நிலம்-பூமியை. ப்ரளயத்திலேபுக்கு முழுகியெடுத்து, கோட்டிடைக்கொண்ட-திருவெயிற்றிலேவைத்த வபதாநத்தாலே. எந்தாய்-என்னை சம்சாரத்தில்நின்று மெடுக்குமாகாரத்தை ப்ரகாசிப்பிக்கும் ஸ்வாமியாய். நீலம் - உன்வடிவின் நிழலீட்டாலேநீலமான. கடல் - கடலை. கடைந்தாய்-கடைந்து அருந்தொழில்செய்து ஆஸ்ரிதரைரக்ஷித்தவனே. உன்னை-இப்படிபுருஷகாரபூர்வகமாக எனக்குநல்லையாய் என்னைரக்ஷிக்குமவனானவுன்னை. பெற்று - லபித்துவைத்து. இனி-கைபுகுந்தபின்பு. போக்குவனோ - நழுவவிடுவேனோ.

நீலக்கடலென்று - நீலரத்நத்தையுடைய கடலென்றுமாம் .................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

(நான் பெரியபிராட்டியார் பரிக்ரஹமாகையாலே) ப்ரளயார்ணவமக்நையான ஸ்ரீபூமிப்பிராட்டியையெடுத்து அவளோடே சம்ஶ்லேஷித்தருளினாப்போலவும், கடலைக்கடைந்து பெரியபிராட்டியாரோடே சம்ஶ்லேஷித்தருளினாப்போலவும், சம்சாரார்ணவமக்நனான வென்னையெடுத்தென்னோடே சம்ஶ்லேஷித்தருளி என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணின வுன்னைப்பெற்றுவைத்து இனித்தப்பவிடுவேனோ வென்கிறார்.

(கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ) (பிராட்டிப க்கல் ஸ்நேஹாதிசயத்தாலே அந்த ஸ்நேஹமேஹேதுவாக அவள்பரிக்ர ஹமான வென்பக்கலிலே அதிப்ரவணனானவனே) பட்டர் சரமதசையி லே யருளிச்செய்தவார்த்தை - “ (ரஹஸ்யத்தின்படியாயிருந்தபடிகண்ட தே) இப்பாட்டை நம்முடையார் த்வயத்தோடேயநுசந்திப்பது-பெரிய பிராட்டியார்க்கு ஸ்நேஹியாகையாலே அவள்பரிக்ரஹமானநமக்கு அன் பனும் என்றநுசந்திப்பது” என்று ( ஜீயரைக்குறித்தருளிச்செய்கிறார் ) “ திருமாலென்னையாளுமால் ” என்னும்படியே தம்முடையவன்புக்கடி சொல்லுகிறார். அந்தஃபுரபரிகரமன்றோ, என்னன்புக்கடியில்லையோ.

(நீலவரையித்யாதி) ஓரஞ்சநகிரி யிரண்டுபிறையைக்கவ்வி நிமிர் ந்தாப்போலே. பிறையில் மறுவோபாதியாய்த்துத் திருவெயிற்றிற்கிடந் தபூமி. (கோலவராகம்) * மாசுடம்பில் நீர்வாராநின்றநிலையிறே இவர்க் காலத்திவழிக்க விஷயமாய்த்து. “பாசிதூர்த்துக்கிடந்தபார்மகள்” என் கிறபடியே - ப்ரணயிநி அழுக்கோடேயிருக்கத் தாமானபடியே வருவரா கில் ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமாமித்தனையிறே. அவனழிவுக்கிட்ட வடிவுக்கிறே யிவராலத்திவழிக்கிறது. (ஒன்றாய்) வராஹசஜாதீயமாத்ர மென்னுதல்; த்ரைலோக்யத்தையும் கண்செறியிட்டாப்போலே விம்மவ ளர்ந்தபடியாலே அத்விதீயமென்னுதல். ( நிலங்கோட்டிடைக்கொண்ட வெந்தாய் ) ப்ரளயங்கொண்டபூமியை அண்டபித்தியிலேபுக்குத் திரு வெயிற்றிலேகொண்டு உத்தரித்தாப்போலே, சம்சாரார்ணவங்கொண்ட வென்னையெடுத்தவனே.

(நீலக்கடல்கடைந்தாய்) பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக்க டைந்தவனே. (நீலக்கடல்) கடைகிறவனுடைய நிழலீட்டாலேயாதல்; சகலௌஷதிகளையும் பொகடுகையால்வந்தநிற வேறுபாடாதல்; நிறத்தா லே-நீலரத்நத்தைச்சொல்லிற்றாய், தத்ப்ரசுரமான ரத்நாகரமென்னுதல்.

(உன்னைப்பெற்றினிப்போக்குவனோ) ஸ்ரீபூமிப்பிராட்டியை லபிக் கைக்குப்பண்ணின வ்யாபாரத்தையும், பிராட்டியை லபிக்கைக்குப்பண் ணின வ்யாபாரத்தையும், என்னைப்பெறுகைக்காகப்பண்ணி, என்னைக்கி ட்டப்பெற்றபின்பு உன்னைப்போகவிடுவனோ. நீ க்ருஷிபண்ணினபலத்தி லே யந்வயித்தநான் கைப்பட்டசம்பத்தைவிட்க்ஷமனோ.................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கோலமலரித்யாதி) பூம்யுத்தரணத்தையும் சமுத்ரமதநத்தை யுமருளிச்செய்கிறவருடைய பாவத்தை விசதீகரியாநின்றுகொண்டு, “உன்னைப்பெ ற்றினிப்போக்குவனோ” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நான்பெரியபிராட்டியா ரித்யாதி.)

வடிவழகையும் போக்யதையையுமுடையளான பிராட்டிக்கன்பனானவத்தா லே என்பக்கலினு மதிப்ராவண்யத்தையுடையவனேயென்று சப்தார்த்தம். பிராட்

டிபக்கல் ஸ்நேஹாதிசயத்தாலே அவள் பரிக்ரஹமான வென்பக்கலிலே யதிப்ரவணனுயிருக்குமென்னுமதுக்கு சம்வாதம் (பட்டரித்யாதி) த்வயத்தோடேயென்றது- த்வயார்த்தத்தோடேயென்றபடி. அநுசந்திக்கும்ப்ரகாரமேதென்ன (பெரியபிராட்டியார்க்கித்யாதி) பெரியபிராட்டியார்க்கு ஸ்நேஹியானது தம்முடையவன்புக்கடியோவென்ன (திருமாலென்னையித்யாதி) என்னையடிமைகொள்ளுகையிலே வ்யாமோஹத்தையுடையவனென்று வ்யாமோஹத்துக்கவள் பரிக்ரஹத்தை யடியாகச் சொன்னப்போலே, இங்கும் அன்புக்கடியாக வத்தையேசொல்லுகிறானென்றபடி.

விவரணம் (அந்தஃபுரேத்யாதி) "மால்" என்று - வ்யாமோஹம்.

தார்ஷ்டாந்திகத்தில் சொன்னபூமிக்கு உபமாநமாம் த்ருஷ்டாந்தத்தில் சப்தமேதென்ன (பிறையிலித்யாதி.)

ஈஸ்வரன் பரிக்ரஹித்ததாகையாலே வந்தகோலமென்னுதல், ப்ரணயித்வகுணத்தால்வந்தகோலமென்னுதல்; முந்தினத்தையருளிச்செய்கிறார் (மாசுடம்பிலித்யாதி) இரண்டாவது (பாசிதூர்த்தித்யாதி) நாய்ச்சியார்திருமொழி. மாசுடம்பில்- அழுக்குடம்பில். பாசிதூர்த்து - பாசியடைத்து. முந்தினவர்த்தவிவரணம் (அவனழிவுக்கித்யாதி) அழிவுக்கிட்டவடிவுக்கு - தன்மேன்மையைவிட்டு நீர்மையைக்கொள்ளுகைக்காகக்கொண்ட வராஹவேஷத்துக்கென்றபடி. ஆலத்திவழிக்கை - ஆலத்தியெடுக்கை. த்ருஷ்டிதோஷபரிஹாரம்பண்ணுகையென்றபடி.

"ஒன்றாய்" என்றதுக்கு, முந்தினது - அல்பத்திலே; இரண்டாவது-மஹத்வத்திலே. கண்செறியிட்டாப்போலே - மறைத்தாப்போலே. விம்மவளர்ந்த-அதிகமாகவளர்ந்த.

(ப்ரளயார்ணவமக்நயான) இத்யாத்யவதாரிகா வாக்யத்திற்சொன்னபாவத்தை யிங்கேவிசதீகரிக்கிறார் (ப்ரளயங்கொண்டவித்யாதி.)

திருப்பாற்கடலையன்றோகடைந்தது, "நீலக்கடல்" என்கிறதென்னென்ன; த்ரேதாபரிஹரிக்கிறார் (கடைகிறவனுடையவித்யாதி.)

"எந்தாய்" என்றத்தை - "நீலக்கடல்கடைந்த-எந்தாய்" என்று மேலில்பதத்திலும்கூட்டிபாவம் (ஸ்ரீபூமியித்யாதி.)

"பெற்றினிப்போக்குவனோ" என்றதுக்குபாவம் (நீக்ருஷியித்யாதி) ... ...*

# எட்டாம்பாட்டு.

பெற்றினிப்போக்குவனோவுன்னையென்றனிப்பேருயிரை
யுற்றவிருவினையாயுயிராய்ப்பயனாயவையாய்
முற்றவிம்மூவுலகும்பெருந்தூறாய்த்தூற்றிற்புக்கு
முற்றக்கரந்தொளித்தாயென்முதற்றனிவித்தேயோ.

## ஆறாயிரப்படி.

(பெற்றினி) புண்யபாபரூபகர்ம தத்பலபோக்த்ருசேதந கர்மபலபோகோபகரண ப்ரக்ருதி சர்வஜகதந்தராத்மபூதனாய், சர்வஜகத்காரணமாய், சர்வைரத்ருஶ்யனாயிருக்கிற விருப்பையுங்கூட வெனக்குக்காட்டித்

தந்தருளி எனக்குதாரகனாயிருந்த வுன்னைப்பெற்று இனிவிடுவேனோவெ ன்கிறார் ......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், த்ரவகமனும்படி சர்வாந்தராத்மாவாய் எனக்குதாரகனான வுன் னைப்பெற்றுவைத்துக் கைவிடுவேனோவென்கிறார்.

உற்ற, இருவினையாய் - இரண்டுவகைப்பட்ட புண்யபாபரூபகர்மங்களுக்கு நிர்வாஹகனாய். உயிராய்-கர்மவஶ்யனான ஆத்மாவுக்கு நியந்தாவாய். அவையாய்ப் பயனாய்-அந்தக்கர்மங்களாலுண்டான சுகது:கங்களுக்கு ப்ரதாதாவாய்க்கொண்டு. இம்மூவுலகும் - இந்தஜகத்ரயம். முற்ற-எல்லாமாகிற. பெருந்தூறாய் - பெரியதூற் றை ப்ரகாரமாகவுடையையாய். தூற்றிற்புக்கு - கர்மநிபந்தநமாக ப்ரவேஶித்தார்க் குப்புறப்படவழியில்லாத பெருந்தூற்றிலே ஸ்வஸங்கல்பத்தாலே ஸ்வதந்த்ரனாய் ப்ரவேசித்து. முற்றக்கரந்து-ஒருப்ரகாரத்தாலு மறியவொண்ணாதபடி. ஒளித்தாய்-சூக்ஷ்மபூதனாய்க்கொண்டு மறைந்துநிற்குமவனாய். என் - எனக்குன்னைக்கிட்டுகைக் கு. முதல்தனிவித்தேயோ - ப்ரதமசுக்ருதமான அத்விதீயகாரணமானவனே. உன் னை - எனக்குநிருபமமாய் அபரிச்சிந்நமான ப்ராணபூதனாயிருக்கிறவுன்னை. பெற்று- கைபுகுரப்பெற்றுவைத்து. இனி-உன்னைவிடில் முடியும்படியானவவஸ்த்தை பிறந்த பின்பு. போக்குவனோ-விடவிரகுண்டோ.

ஓவென்கிறவசை - விடில்செய்வதென் என்கிற விஷாதத்தைக்காட்டுகிறது*

## ஈடு - எட்டாம்பாட்டு.

அத்யந்த துர்ஜ்ஞேயனான வுன்னைப்பெற்றுவைத்து இனிவிடவு பாயமில்லையென்கிறார்.

(பெற்றினிப்போக்குவனோவுன்னை) ஒரச்சில்லாக்காசாய்ப்போய் த்தாகில் போகிறதென்றிருக்கிறேனோ. அத்யந்தவிஸஜாதீயனா யிருந்த வெனக்குமிகவும் தாரகனான வுன்னைப்பெற்றுவைத்து இனிவிடுவேனோ. (உன்னை) உன்னைநீயறியாயோ. (என்தனிப்பேருயிரை) (உபமாநரஹித னாய், விபுவாய், எனக்குதாரகனாயிருக்கிறவனை) “வரில்பொகடேன், கெ டில்தேடேன்” என்றிருக்கிறவாத்மாவினளவோ. “ உன்னை ” என்கிறத் தை உபபாதிக்கிறதுமேல். “உலகங்கட்கெல்லாமோருயிரேயோ” என்கி றபடியே - சர்வாத்மாவானவுன்னை. பெற்றினிப்போக்குவனோவென்கிற து-இதரலாபங்களில் வ்யாவ்ருத்தி; என்தனிப்பேருயிரையென்கிறது - த ம்மில்வ்யாவ்ருத்தி.

(உற்றவிருவினையாய்) உன்னையொழிய வேறுசிலகர்மங்களை ஸ்வ தந்த்ரமாக நினைத்திருந்தேனாகிலன்றோ உன்னைவிடலாவது. ஆத்மாவை ப்பற்றிவிடாதே கிடக்கிற புண்யபாபரூபகர்மங்களுக்கு நிர்வாஹகனாய். (உயிராய்) அநுஷ்ட்டாதாதான் உன்னதீநமன்றாகிலன்றோ உன்னைவிட லாவது. அநுஷ்ட்டாதாவானவாத்மாவுக்கு நிர்வாஹகனாய். (பயனாயவை யாய்) கர்மபல முன்னையொழிய சித்திக்குமென்றிருந்தேனாகிலன்றோவி டலாவது. அக்கர்மபலத்துக்கு நிர்வாஹகனாய். (முற்றவிம்மூவுலகும்

பெருந்தூறாய்) (இவையெல்லாமாகிற த்ரைலோக்யமாகிற தூற்றையுண்டாக்கி) த்யாஜ்யமான சம்ஸாரந்தான் உன்னையொழிய வேறென்று நினைத்திருந்தேனாகிலன்றோ விடலாவது. பெருந்தூறென்கிறது - சம்ஸாரம். புக்கவிடமும் போந்தவிடமும் தெரியப்போகாதேயிருக்குமென்று. (அதாவது - துர்ஜ்ஞேயஸ்வபாவமாயிருக்கை.) (தூறாய்) சம்ஸாரத்தையுண்டாக்கி. (தூற்றில்புக்கு) இதினுள்ளேபுக்கு. (முற்றக்கரந்து) நீ வ்யாபியாததோ ரிடமுண்டாகிலன்றோவிடலாவது. (ஒளித்தாய்) "யமாத்மா ந வேத" (யமாத்மாநவேத) என்கிறபடியே வ்யாப்யங்களறியாதபடிநின்றாய். கண்ணுக்குவிஷயமானாயாகில் பிழையேனோ.

(என்முதல்தனிவித்தேயோ) அல்லாதார்க்கு வெளியிடாதேயிருந்து எனக்குவெளியிட்டவனே. (முதல்தனிவித்தேயோ) நானோரடிவரநின்றேனாகி லாறியிருக்கலாய்த்திறே. எனக்கு ப்ரதமஸுக்ருதமானவனே.

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (பெற்றினியித்யாதி) "முற்றக்கரந்தொளித்தாய்-பெற்றினிப்போக்குவனோ" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (அத்யந்தேத்யாதி.)

"உன்னை" என்று - விலக்ஷணனானவுன்னையென்னுதல், துர்ஜ்ஞேயனானவுன்னையென்னுதல்; முந்தினத்தைக்காட்டுகிறார் (ஓரச்சில்லாவித்யாதி) இரண்டாவது-மேலே (உன்னைநீயறியாயோ) என்றதிலேகண்டுகொள்வது. அச்சில்லாக்காசு-முத்திரையில்லாதகாசு. "உற்றவிருவினையாய்" என்றுதொடங்கி "முதற்றனிவித்தேயோ - என்தனிப்பேருயிரை-உன்னைப்பெற்றுவைத்து, இனிப்போக்குவனோ" என்றன்வயமுகேநபாவம் (அத்யந்தவிஸஜாதீயனாயித்யாதி.)

"பேருயிர்" என்றதுக்குபாவம் (வரில்பொகடேனித்யாதி) ஆத்மாவுக்குமாத்மாவென்றபடி. உபபாதிக்கிறது மேலென்றது - "என்தனிப்பேருயிரை" என்றுதொடங்கி மேலென்றபடி. "தனி" என்றதுக்குபாவம் (உலகங்கட்கெல்லாமித்யாதி) இதரலாபங்களிலென்றது - த்விவிதமான வைஶ்வர்யலாபத்தை. தம்மிலென்றது-கைவல்யத்திலென்றபடி.

"உற்றவிருவினையாய்" என்றதுக்குபாவம் (உன்னையொழியவித்யாதி) உற்ற-உற்றிருக்கிற.

"உயிராய்" என்றதுக்குபாவம் (அருஷ்ட்டாதாவித்யாதி.)

இதுக்குபாவம் (கர்மபலமித்யாதி) பயனாயவையாய் - அந்தப்பயனாயென்றபடி. பயன்-பலம். அக்கர்மபலத்துக்கு-புண்யபாபரூபகர்மத்தினுடைய வந்தபலத்துக்கென்றபடி.

முற்றவுமான விம்மூவுலகுமென்கிற பெருந்தூற்றையுண்டாக்கியென்று சப்தார்த்தம். தூறாய்-தூற்றையுண்டாக்கி. "ஆய்" என்றது - ஆக்கியென்றபடி. தாத்பர்யம் (த்யாஜ்யமானவித்யாதி) சம்ஸாரமென்னாதே, "பெருந்தூறு" என்கிறதென்னென்ன (பெருந்தூறென்கிறதித்யாதி) தூற்றில்புக்கு-சம்ஸாரத்திலேபுக்கு, முற்றக்கரந்து - எங்கும் வ்யாபித்து, ஒளித்தாய் - துர்ஜ்ஞேய ஸ்வபாவனாயிருந்தாயென்று சப்தார்த்தம். இத்தால்பாவம் (கண்ணுக்கித்யாதி.)

"என்" என்றதுக்கு பாவம் (அல்லாதார்க்கித்யாதி) தனி - அத்விதீயமான, முதல்வித்துண்டு-ப்ரதமசுக்ருதம், அதுக்குக்காரணமானவனேயென்று சப்தார்த்தம்

உற்றவிருவினையாயென்றுதொடங்கி, முதல்தனிவித்தேயோ-என்தனிப்பேருயிரான - உன்னை - பெற்றினிப்போக்குவனோ வித்யந்வயஃ ......................*

## ஒன்பதாம்பாட்டு.

முதற்றனிவித்தேயோமுழுமூவுலகாதிக்கெல்லா
முதற்றனியுன்னையுன்னையெனைநாள்வந்துகூடுவனுன்
முதற்றனியங்குமிங்குமுழுமுற்றுறுவாழ்பாழாய்
முதற்றனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவிலீயோ.

### ஆறாயிரப்படி.

(முதல்தனி) நான் ஜகதாகாரனாயிருக்கிற விருப்பைக்கண்டேனாகில் இனி மற்றபேக்ஷிதமென்னென்னில்; எனக்கதுவேயமையாது, நீ ஜகதாகாரனாயிருக்கிற விருப்பன்றியே, இவற்றோடொரு கலப்பின்றியே திருநாட்டிலே நீயாயிருக்குமிருப்பைக் காணவேணுமென்கிறார் ...........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், காரணகார்யோபயாவஸ்த்தமான சகலசேதநாசேதநங்களுக்கும் ப்ரகாரித்வாதிகளாலே ப்ரதாநனாய், தத்வ்யாவ்ருத்தமான விலக்ஷணஸ்வரூபகுணாதிகளையுடைய வுன்னையென்றுவந்து கிட்டக்கடவேனென்கிறார்.

முழுமூவுலகு-அவிகல்பபூர்ணமான ஜகத்த்ரயம். ஆதிக்கெல்லாம் - முதலான சமஸ்தவஸ்துக்களுக்கும். முதல்-ப்ரதாநமான நிமித்தகாரணமாய். தனிவித்தேயோ-சஹகாரிநிரபேக்ஷமாய் அத்விதீயகாரணமான உபாதாநமாய். அங்குமிங்கும்-கார்யபூதமானஜகத்தில் அண்டாத்பஹிர்ப்பூதமாயும் அந்தர்க்கதமாயுமிருக்கிற. முழுமுற்றுறு—பூர்ணமான சமஸ்தபதார்த்தங்களையும் வ்யாபித்து. முதல்தனி-அத்விதீயகாரணமாய். வாழ் - போகமோக்ஷங்களாகிறவாழ்ச்சிக்கு. பாழாய் - விளைநிலமான மூலப்ரக்ருதிக்கு நியாமகனாய். முதல் - ப்ரக்ருதிப்ராக்ருதநியந்த்ருத்வத்தாலே ப்ரதாநமாய். தனி - அசித்ஸ்வபாவ வ்யாவ்ருத்தியாலே நிருபமமாய். சூழ்ந்தகன்று-தர்மபூதஜ்ஞாநமுகத்தாலே வ்யாப்தமாய்க்கொண்டு. ஆழ்ந்துயர்ந்த-பத்துத்திக்கிலுமுண்டாய். முடிவிலீயோ-நித்யமான ஆத்மவர்க்கத்துக்கு நியந்தாவானவனே. முதல்-இப்படி சர்வப்ரதாநனாகக்கொண்டு. தனி-நிருபமமான. உன்னை - உன்னை. உன்னை - அந்தஜகதாகாரத்திலன்றியே அத்யந்தவ்யாவ்ருத்தமான விலக்ஷணஸ்வரூபகுணவிசிஷ்டனாய்க்கொண்டிருக்கிறவுன்னை. நான் - ப்ராபித்தநுபவிக்கப்பெறுமையாலே பெருவிடாய்ப்பட்டிருக்கிறநான். எனைநாள்-எந்நாள். வந்துகூடுவன்-வந்துகூட்க்கடவேன் ..........................................................................*

ஈடு - ஒன்பதாம்பாட்டு.

" 'தாநிஸர்வாணிதத்வபுঃ' (தாநிஸர்வாணிதத்வபுঃ) 'யஸ்யாத்மாஶரீரம்-யஸ்யப்ருதிவீஶரீரம்' (யஸ்யாத்மாஶரீரம்-யஸ்யப்ருதிவீஶரீரம்) 'தத்ஸர்வம்வைஹரேஸ்தநுঃ' (தத்ஸர்வம்வைஹரேஸ்தநுঃ) என்னும்படியே - எங்கும்வந்து முகங்காட்டலாம்படி ஜகச்சரீரனுயிருக்கிறவிருப்பைக்காட்டித்தந்தோமிறே " என்ன; அது உகந்தார்க்கு முகவாதார்க்கும் பொதுவாயிருந்தது, ஆகாராந்தரமில்லையாகிலன்றோ " அதுவேயமையும் " என்றுறியிருக்கலாவது, திருநாட்டிலே வ்யாவ்ருத்தமாக பரிபூர்ணமாயிருக்கிற விருப்பைக்காணவேணுமென்கிறார்.

( முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம் ) ரக்ஷிக்கவென்றுபுக்கால் ரக்ஷ்யவர்க்கம் சஹகரிக்கவேண்டாதவனே. மூவுலகுதொடக்கமான ஒன்றொழியாம லெல்லாவற்றுக்கும் த்ரிவிதகாரணமுமானவனே. (முதல்) நிமித்தகாரணம். (தனி) ஸஹகாரிகாரணம். (வித்து) உபாதாநகாரணம்.

(முதல்தனியித்யாதி) ப்ரதாநனுய், ஒப்பின்றிக்கே - குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணனுயிருந்த நீயானவுன்னை, என்றுவந்துகூடுவென். ( எனைநாள்வந்துகூடுவென் ) அவன்கொடுத்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபத்தையுணர்ந்தார்க்கு, தன்னைப் பிராட்டிமாரோபாதியாகப் பேசலாயிருக்கிறபடி. (நான்) பரமபதத்தில் சுவட்டறிந்தநான். அசாதாரணவிக்ரஹமாசைப்பட்டநான்.

(முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்) ப்ரதாநமாய், உபமாநரஹிதமாய், அங்குமிங்குமான மஹதாதிகள்முழுதிலும். (முற்று) எங்கும். (உறு) உற்று. எங்குமொக்கவ்யாபித்து. (வாழ்பாழாய்) சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைக்குமதாகை.

(ஒன்பதாம்பாட்டு) இன்னம், " 'தாநிஸர்வாணிதத்வபுঃ' (தாநிஸர்வாணிதத்வபுঃ) 'யஸ்யாத்மாஶரீரம்-யஸ்யப்ருதிவீஶரீரம்' (யஸ்யாத்மாஶரீரம் – யஸ்யப்ருதிவீஶரீரம்) 'தத்ஸர்வம்வைஹரேஸ்தநுঃ' (தத்ஸர்வம்வைஹரேஸ்தநுঃ) என்னும்படியே - எங்கும்வந்து முகங்காட்டலாம்படி ஜகச்சரீரனுயிருக்கிற விருப்பைக்காட்டித்தந்தோமிறே" என்ன; அது உகந்தார்க்கு முகவாதார்க்கும் பொதுவாயிருந்தது, ஆகாராந்தரமில்லையாகிலன்றோ "அதுவேயமையும்" என்றுறியிருக்கலாவது, திருநாட்டிலே வ்யாவ்ருத்தமாக பரிபூர்ணமாகவிருக்கிற விருப்பையும் காணவேணுமென்கிறார்.

(முதல்தனிவித்தேயோ) முதல்-நிமித்தகாரணம். தனி-சஹகாரிகாரணம், வித்து - உபாதாநகாரணம். (முழுமூவுலகாதிக்கெல்லாம்) மூ

வுலகென்கையாலே - "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்" என்று மூன்றுவகைப்பட்ட அண்டத்தைச்சொல்லுகிறது; மூழுவென்கையாலே - " 𑌅𑌣𑍍𑌡𑌾𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌯𑍁𑌤𑌾𑌨𑌿 𑌚 । 𑌈𑌦𑍃𑌶𑌾𑌨𑌾𑌂 𑌤𑌥𑌾 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍋𑌟𑌿𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑌾𑌨𑌿 𑌚 " ( அண்டாநாம்துஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச । ஈத்ருஶாநாம்ததாதத்ரகோடிகோடிஶதாநிச ) என்றுசொல்லப்பட்ட - அஸங்க்யாதமான அண்டங்களைச்சொல்லுகிறது; * ஆதிசப்தத்தாலே-இவ்வண்டங்களுக்குக் காரணமான ஆவரணங்களைச்சொல்லிற்று. ஆக, மூவுலகுதொடக்கமான ஒன்றொழியாமலெல்லாவற்றுக்கும் த்ரிவிதகாரணமுமானவனேயென்றது.

(முதலித்யாதி) ப்ரதாநனாய், ஒப்பின்றிக்கே-குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணனாய், ஜகச்சரீரியாயிருக்கிறவுன்னை. ஆக, இவ்வளவும்-லீலாவிபூதிவிசிஷ்டனாயிருக்கிற விருப்பைச்சொல்லிற்று; மேல்-நித்யவிபூதியிலே சூரிபோக்யமாயிருக்கும் வடிவழகைக்கண்டநுபவிக்கவேணுமென்கிறார் (உன்னை) நித்யவிபூதியோகத்தைச்சொல்லுகிறது. "உன்னை" என்ன நித்யவிபூதியோகத்தைக்காட்டுமோவென்னில்; காட்டும்; " ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக் । கண்டசதிர் " என்கிறபடியே-அவனையு மவளையும்சொல்லவே த்ரிபாத்விபூதியுமடங்கிற்றிறே. (உன்னை) " முடிச்சோதியாயுனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ " என்று விகல்பிக்கலாம்படியிருக்கிற திருவபிஷேகமும், "மாயன்குழல்" என்னும்படியான திருக்குழலும், "கோளிழைத்தாமரையும் கொடியும்பவளமும்வில்லும்। கோளிழைத்தண்முத்தமும்தளிரும்குளிர்வான்பிறையும் । கோளிழையாவுடையகொழுஞ்சோதிவட்டங்கொல்" என்னும்படியான அழகியதிருமுகமும், நாய்ச்சிமாருடைய ஹஸ்தாபரணங்களாலே முத்ரிதமாய் * க்ரமுகதருணக்ரீவாகம்பு ப்ரதிமமான திருக்கழுத்தும், * கற்பகக்காவனநற்பலதோள்களும், பெரியபிராட்டியார்க்குக் கோயிற்கட்டணமாய் நித்யாநுபவம்பண்ணச்செய்தேயும் "அகலகில்லேன்" என்னும்படி அவளைப்பிச்சேற்றும்படி * குருமாமணிப்பூண்குலாவித்திகழும் திருமார்வும், "உள்ளத்துணின்றுலாகின்றதே" என்கிறபடியே - நித்யமுக்தர் ஹ்ருதயங்களிலே அழகுசெண்டேறுகிற * திருவுதரபந்தமும், ஸௌந்தர்யசாகரமிட்டளப்பட்டுச்சுழித்தாப்போலேயிருக்கிற திருவுந்தியும், ஒருவிசேஷணமிடவொண்ணாதே "அல்குலும்" என்னும்படியிருக்கிற அல்குலும் சிற்றிடையும், சந்த்யாராகரஞ்சிதமான ஆகாசம்போலேயிருக்கத் திருவரைபூத்தாப்போலேயிருக்கிற * அந்திபோல்நிறத்தாடையும், * ரம்பாஸ்தம்பாதி கம்பீரமான திருத்தொடைகளும், தாமரைநாளம்போலே கண்டகிதங்களான திருக்கணைக்கால்களும், * சங்கரதாங்ககல்பகத்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சநமாய் நாய்ச்சிமாருங்கூட்டக்கூசித் தொடவேண்டும்படி மெல்லடியாய் "தேனேமலரும்" என்கிறபடியே நிரதிசயபோக்யங்களான திருவடிகளையும் உடையையாய், * ஏழுலகும்தனிக்கோல்செல்லவீற்

பிருந்தருளுகிறவுன்னை. (எனைநாள்வந்துகூடுவன்) என்றுவந்துகிட்டக் கடவேன். * மயர்வறமதிநலமருளப்பெற்றவராகையாலே பிராட்டிமா ரோபாதியாகப்பேசலாயிருக்கிறபடி. (நான்) அவ்வடிவைக்காணவாசை ப்பட்டநான்.

(முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்) ப்ரதாநமா ய், உபமாநரஹிதமாய், அங்குமிங்குமான மஹதாதிகள் முழுதிலும். (மு ற்று) முற்றும். எங்குமென்றபடி. (உறு) உற்று. வ்யாபித்து. (வாழ்பா ழாய்) சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கீடாகக் கருநிலமாயுள்ள ப்ரக்ருதிதத்த்வத்துக்காத்மாவாய். (முதலித்யாதி) ப்ரக் ருதியைப்பற்றத்தான் ப்ரதாநமாய் நியாமகமாய். (தனி) உபமாநரஹித மாய். (சூழ்ந்து) ப்ரக்ருதி ப்ராக்ருதங்களடையவ்யாபித்து. வ்யாபிக்குமி டத்தில் (அகன்ருழ்ந்துயர்ந்த) ஜ்ஞாநத்தாலே பத்துதிக்கும்வ்யாபித்து. (முடிவிலீயோ) அபரிச்சேத்யமான ஆத்மதத்த்வத்துக்கு நிர்வாஹகனு னவனே. (முடிவிலீ) முடிவென்று - நாசமாய், ப்ரக்ருதிபோலே நச்வ ரமன்றிக்கே நித்யமான வாத்மதத்த்வமென்றுமாம்.

முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்- முழுமூவுல காதிக்கெல்லாம்-முதல்தனிவித்தாய் - முதல்தனிசூழ்ந்தகன்ருழ்ந்துயர்ந் தமுடிவிலியாயிருக்கிற - முதல்தனியுன்னைக்கண்டேன்; தேசவிசேஷத்தி லே சூரிபோக்யனாயிருக்கிறவுன்னை எனைநாள்வந்துகூடுவன்நான். காரண கார்யோபயாவஸ்த்தமான சிதசித்துக்களுக்கு நிர்வாஹகனாயிருக்கிற வி ருப்பைக்காட்டி யநுபவிப்பித்த விவ்வளவுபோராது, அசாதாரணவிக்ர ஹயுக்தனாய் ஒருதேசவிசேஷத்திலிருக்கு மிருப்பைக்கண்டநுபவிக்கவே ணுமென்றதாய்த்து..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (முதல்தனியித்யாதி) "முதல்தனியங்குமிங்கும்" என்று தொடங்கி, "முதல்தனியுன்னைக்கண்டேன், உன்னை எனைநாள்வந்துகூடுவன்நான்" என்றவற்றைக்கடாக்ஷித்து, உத்தர ப்ரத்யுத்தர ரூபேணுவதாரிகை (தாநிசர்வாணீ த்யாதி) இப்ப்ரமாணங்களெல்லாம் முதற்பாட்டிலே லிகிதங்கள். காட்டித்தந்தோ மிறேயென்ன்வென்றது - இப்பாட்டுத் தன்னைப்பற்ற. ஆகாராந்தரம் - அசாதார ணவிக்ரஹம்.

பலிதம் (ரக்ஷிக்கவென்றித்யாதி) "மூவுலகாதி-முழுதுக்கு-எல்லாம்" என்ற ந்வயிப்பது. "த்ரிவிதகாரணமுமானவனே" என்றதின்விவரணம் (முதல்நிமித்தகா ரணமித்யாதி.)

"ஒப்பின்றிக்கே" என்றத்தைவிவரிக்கிருர் (குணவிபூத்யாதிகளாலித்யாதி) "உன்னையுன்னை" என்கிறவீப்ஸைக்கர்த்தம் (நீயானவுன்னையென்று.) சேருவன் எ ன்னுதே, "கூடுவன்" என்றதுக்குபாவம் (அவன்கொடுத்தவித்யாதி) கூடுகை-சம்ச்ல லேஷிக்கை. விவரணம் (அசாதாரணேத்யாதி) அர்த்தாந்தரமாதல்.

அங்குமிங்குமான - கார்யகாரணுவஸ்த்தமான. (மஹதாதிகள்) என்றவிடத்தில், ஆதிசப்தத்தாலே-அஹங்காராதி கார்யங்களைச்சொல்லுகிறது. "முற்று,உறு" என்ற பதத்வயத்தையும்கூட்டி அர்த்தம் (எங்குமொக்க வ்யாபித்தென்று) வாழ்பாழாய்-போகமோக்ஷங்களாகிற வாழ்ச்சிக்கு விளைநிலமான மூலப்ரக்ருதிக்கு ஆத்மாவானவனேயென்று சப்தார்த்தம்.

மத்யே ஒருஸ்ரீவைஷ்ணவரெழுந்தருள, புநஸ்சவருளிச்செய்கிறார் (இன்னமித்யாதி.)

மூவுலகுதொடக்கமான வொன்றொழியாமலெல்லாவற்றிற்கும்) என்று சாமாந்யேநசொன்னத்தை இங்கேநன்றாக விவரிக்கிறார் (மூவுலகென்கையாலேயித்யாதி) "[illegible]" (த்ரைலோக்யமேதத்க்ருதகம் மைத்ரேயபரிபட்யதே। ஜநஸ்தபஸ்ததாஸத்யமிதிசாக்ருதகத்ரயம் । க்ருதகாக்ருதயோர்மத்யேமஹர்லோக இதிஸ்ம்ருத:॥ஶூந்யோபவதிகல்பாந்தே யோத்யந்தம்நவிநஶ்யதி) தத்ராவ, "[illegible]" (அண்டாநாந்துஸஹஸ்ராணாம்ஸஹஸ்ராண்யயுதாநிச । ஈத்ருஶாநாம்ததாதத்ரகோடிகோடிஶதாநிச ) இதித்விதீயேம்ஶே. "[illegible]" (பூதேப்யோண்டம் ) என்றிருக்கையாலே (இவ்வண்டங்களுக்குக்காரணமான) என்கிறார். ஆவரணங்களாவன - "[illegible]" (வாரிவஹ்ந்யநிலாகாஶைஸ்ததோபூதாதிநாபஹி:। வ்ருதம்தஶகுணைரண்டம்பூதாதிர்மஹதாததா । மஹாந்தஞ்சஸமாவ்ருத்யப்ரதாநம்ஸமவஸ்த்திதம் ) என்றவை.

முந்தினயோஜநையில், "உன்னையுன்னை" என்றது - (நீயானவுன்னை) என்றபடி; இரண்டாம்யோஜநையில், "உன்னை -" ஜகச்சரீரியானவுன்னை. கண்டேனென்று - அத்யாஹார்யம்.

உன்னை - அசாதாரண திவ்யவிக்ரஹவிசிஷ்டனானவுன்னை, எனை ஈாள்வந்து கூடுவனென்றபடி. காட்டுகைக்குஹேது - நித்யவிபூதியெல்லா மிருவருடையவுமபிமாநாந்தர்ப்பூதராகையென்கிறார் (ஒண்டொடியாளித்யாதி) ஆக, "உன்னை"என்று - சாதாரணவிக்ரஹவிசிஷ்டதையையும், இரண்டாம் "உன்னை" என்றது - அசாதாரண விக்ரஹவிசிஷ்டதையையும் சொல்லுகிறது.

நிகமநமாகையாலே "உன்னை" என்கிறபதத்தில் விவக்ஷிதமான விக்ரஹவைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (முடிச்சோதியித்யாதி) (குழலும்) என்றவிடத்திலே - "[illegible]" ( அந்தம்தமஸ்திமிரநிர்மிதம் ) இத்யாதியும், (நாய்ச்சிமாருடைய) இத்யாதிவாக்யத்திலே - "[illegible]" (ரமயதுஸமாம்) இத்யாதியும், (கோயிற்கட்டணம்) என்றவிடத்திலே - "[illegible]" (மலயஜஶஶிலிப்தம்மாலதீதாமதல்பம்) இத்யாதியும், (சௌந்தர்யசாகரம்) இத்யாதிவாக்யத்திலே - "[illegible]" (ஸௌந்தர்யாக்யாஸரிதுரஸி) இத்யாதியும், (சந்த்யாராகரஞ்சிதமான இத்யாதிவாக்யத்தி

லே - " ஹாடகாம்ஸுபரிவேஷ " (பர்மஸ்த்தலாம்ஸுபரிவேஷ) இத்யாதியும், (ரம்பாஸ்தம்ப) இத்யாதிவாக்யத்திலே - "ரம்பாஸ்தம்பா:கரிவரகரா:" (ரம்பாஸ்தம்பா:கரிவரகரா:) இத்யாதியும், (தாமரைநாளம்போலே) இத்யாதிவாக்யத்திலே - " ஸ்ரீரங்கேஸயஜங்கேப்ரேம்ணாக்ராதும் " ( ஸ்ரீரங்கேஸயஜங்கேப்ரேம்ணுக்ராதும் ) இத்யாதியும் அநுஸந்தேயம். க்ரமுகதருணக்ரீவாகம்புப்ரதிமமானவென்றது - கமுகினுடைய விளங்கழுத்துக்கும் சங்கத்துக்குமொத்த திருக்கழுத்தென்றபடி. கோயிற்கட்டணம் - அந்த:புரம். குருமாமணிப்பூண் - ஸ்லாக்யமாய்ப் பெருவிலையனுயிருக்கிற ஸ்ரீகௌஸ்துபமும் பதக்கமும் குலாவிக்கொண்டுவிளங்காநின்றுள்ள வழகிய திருமார்வுமென்றபடி. அழகுசெண்டேறுகிற - வையாளிவிடுகிற. இட்டளப்பட்டு - சங்குசிதஸ்த்தலத்திலேதேங்கி. அல்குல் - நிதம்பம். பர்மஸ்த்தலம் - ஸ்வர்ணபூமி; " காங்கேயம்ஹாடகம் புரம் " (காங்கேயம்பர்மகர்புரம்) இத்யமர:. ஆதிசப்தத்தாலே - ஆனைதுதிக்கைமுதலானவற்றைச் சொல்லுகிறது. ஸ்ரீபூமிகளுடைய ஸ்பர்ஸத்தாலே கணைக்கால்கள் மயிர்க்கூச்செறிந்திருக்கையாலே (தாமரைநாளம்போலே கண்டகிதங்களான) என்கிறர்.

சேருவன் என்னுதே "கூடுவன்" என்றதுக்குபாவம் (மயர்வறவித்யாதி.)

அகன்று - எட்டுதிக்கிலும் வ்யாபித்து. ஆழ்ந்துயர்ந்த-கீழும்மேலும் வ்யாபித்த. அபரிச்சேத்யமானவென்றது - அஸங்க்யாதமானவென்றபடி.

அந்வயங்காட்டுகிறர் ( முதல்தனியங்குமித்யாதி ) அந்வயத்தால்பலித்தபாவம் (காரணகார்யேத்யாதி.)

(நீயானவுன்னை) என்றபக்ஷத்திலே, முடிவிலீயோ - உன்னை யுன்னை யெனை நாள்வந்துகூடுவன் என்றந்வயம்..........................................................*

---

# பத்தாம்பாட்டு.

---

சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவில்பெரும்பாழேயோ
சூழ்ந்ததனிற்பெரியபரநன்மலர்ச்சோதியோ
சூழ்ந்ததனிற்பெரியசுடர்ஞானவின்பமேயோ
சூழ்ந்ததனிற்பெரியவென்னவாவறச்சூழ்ந்தாயே.

## ஆறாயிரப்படி.

( சூழ்ந்தகன்று ) இப்படி எம்பெருமானுக்கும் மறுத்தருளவொண்ணுததொருபடி பிராட்டிதிருவாணையையும் தன்திருவாணையையுமிட்டு நிர்ப்பந்தித்துக்கொண்டு ஆர்த்தஸ்வரத்தாலே கூப்பிடுமளவில், தாம் மநோரதித்தபடியே எம்பெருமானுமெழுந்தருள, அவனைக்கண்டு; மஹதஹங்காராதிக ளெல்லாவற்றையும் வ்யாபித்து அவற்றிற்காட்டிலும் பெரிதான மூலப்ரக்ருதிக்கும், அத்தையும் வ்யாபித்து அதிலும் பெரிதான முக்தாத்மாவுக்கும், அதிலும்பெரிதான வுன்னுடைய சங்கல்பஜ்ஞாநத்துக்கு மாத்மாவாயிருந்தநீ, அந்தசங்கல்ப ஜ்ஞாநத்திற்காட்டிலும் பெரி

தாயிருந்த வென்னுடைய விடாயெல்லாந்தீரும்படி, அந்தஜகதாகாரனு னபடியன்றியே நீயானபடியே வந்துசூழ்ந்தாய், என்னுடையமநோரத மு மொருபடியே முடிந்ததென்கிறார் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தத்த்வத்ரயத்துக்கு மவ்வருகாம்படியான வென்னபிநிவேசமா னது கெடும்படியாக சர்வப்ரகார பரிபூர்ணனாய்க்கொண்டு சம்ஶ்லேஷித்தாய் என் று, தமக்கு சாயுஜ்யஸித்தமான பரிபூர்ணபோகப்ரதாநம்பண்ணினபடியை யருளிச் செய்கிறார்.

சூழ்ந்து-கார்யவர்க்கத்தை யடங்கச்சூழ்ந்து. அகன்று-வ்யாபித்து விஸ்தீர் ணமாய். ஆழ்ந்துயர்ந்த - கீழும்மேலுமுண்டாகையாலே பத்துதிக்கிலும் ஸங்கிஹித மாய். முடிவில் - உத்பத்திவிநாஶரஹிதமாகையாலே நித்யமாய். பெரு - சமஸ்தகா ர்யங்களுக்கு மவ்வருகாகையாலே அபரிச்சிந்நமாய். பாழே - போகமோக்ஷங்களைவி ளைக்க நல்தறையான ப்ரக்ருதியை ப்ரகாரமாகவுடையையாய். அந்தப்ரக்ருதிதத்த் வத்தை, சூழ்ந்து-ஸ்வஜ்ஞாநத்தாலே வ்யாபித்துக்கொண்டு. அதனில்-அதிற்காட்டி ல். பெரிய-பெருத்து. பரம்-ஏகரூபத்வாதிகளாலேமேலாய். நல்-ஸ்வயம்ப்ரகாசத்வா திவைலக்ஷண்யத்தையுடைத்தாய். மலர்-விகாஸஸ்வபாவமான. சோதி - ஜ்ஞாநப்ர பையையுடைய ஆத்மாவை ப்ரகாரமாகவுடையையாய். சூழ்ந்து-இந்தப்ரக்ருதிபுரு ஷர்க ளிருவரையும்வ்யாபித்து. அதனிற்பெரிய-அதுக்கவ்வருகாய். சுடர்-கல்யாண குணங்களாலுஜ்ஜ்வலமான. ஞானவின்பமே - ஜ்ஞாநாநந்தலக்ஷணஸ்வரூபத்தையு டைய நியந்தாவானவனே. சூழ்ந்து-அந்ததத்த்வத்ரயத்தையும்வளைத்துக்கொண்டு. அதனிற்பெரிய-அதுக்கவ்வருகாம்படியாயிருக்கிற. என் அவா - என்னபிநிவேசமா னது. அற-சமிக்கும்படியாக. சூழ்ந்தாயே-ஸ்வரூபகுணவிக்ரஹபூஷணயுத மஹிஷீ பரிஜநஸ்த்தாந விசிஷ்டனாய்க்கொண்டு பரிபூர்ணனானவுனக்குள்ளேயாம்படி சாயுஜ் யபோகத்தைத்தந்தாயிறே. ஓ! - ஓ! ஓரதிசயமே! என்று அடிதோறும் ஹ்ருஷ்ட ராகிறார் ....................................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

எம்பெருமானுக்கிவரபேக்ஷிதம்செய்தல்லது நிற்கவொண்ணாதப டி பெரியபிராட்டியாராணையிட்டுத்தடுத்துப் பெரியவார்த்தியோடே கூப் பிட்டிவர் ப்ரார்த்தித்தபடியே பரிபூர்ணனாய்க்கொண்டு வந்து சம்ஶ்லே ஷித்தருளக்கண்டு, அபரிச்சேத்யமான ப்ரக்ருதிதத்த்வத்திலும் ஆத்மதத் த்வத்திலும் உன்னுடைய சங்கல்பரூபஜ்ஞாநத்திலும் பெரிதான வென் னுடைய விடாயெல்லாந்தீரவந் தென்னோடேகலந்தாய், என்னுடையம நோரதமு மொருபடிமுடியப்பெற்றேனென்கிறார். இனி இல்லையென்னு ம்படி என்னைவிடாய்ப்பித்து அதுக்கவ்வருகானவிடாயை யுடையையாய்க் கொண்டு என்னோடேகலந்த வுன்னுடையவிடாயு மொருபடிகெட்ட் தேயென்கிறாராகவுமாம்; “[Grantha script quotation]” (அங்கேபரதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே) என்னும்படியே.

(சூழ்ந்தித்யாதி) இப்போது ப்ரக்ருதிபுருஷர்களைச்சொல்லுகிறது, தம்முடையவபிநிவேசம் பெரியவற்றிலும் பெரியதென்கைக்காக. அவற்றுக்கு மீச்வரனையொழிய ப்ருதக்ஸ்த்திதியில்லாமையாலே அவ்வளவும்சொல்லுகிறது. ஸ்வகார்யமான மஹதாதிகளைப்பத்துதிக்கிலும் புக்கெங்குமொக்கவ்யாபித்து, நித்யமாய் அபரிச்சேத்யமாய் சேதநர்க்கு புருஷார்த்தத்தை விளைத்துக்கொள்ளலாம்நிலமான ப்ரக்ருதிதத்த்வத்துக்காத்மாவானவனே.

(சூழ்ந்தித்யாதி) அத்தையும் வ்யாபித்து, அதிற்காட்டில் பெரிதாய், அதுக்குநியந்தாவாகையாலே மேலாய், விகாராதிகளில்லாமையாலே விலக்ஷணமாய், விகஸ்வரதேஜோரூபமான ஆத்ம வஸ்துவுக்கு மாத்மாவானவனே.

(சூழ்ந்தித்யாதி) அவையிரண்டையும் வ்யாபித்து, அவற்றுக்கு நிர்வாஹகமாய் சங்கல்பரூபமாய் சுகரூபமான ஜ்ஞாநத்தையுடையவனேயென்று சங்கல்பரூபஜ்ஞாநத்தைச்சொல்லுதல்; "சுடர்ஞானவின்பமே" என்று - ப்ரகாசரூபனுமாய் சுகரூபனுமானவனேயென்று எம்பெருமானைச்சொல்லுதல்.

( சூழ்ந்தித்யாதி ) தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டு அவைகுளப்படியாம்படி பெரிதானவென்னுடைய வபிநிவேசத்தை, அதிலும்பெரிய வுன்னபிநிவேசத்தைக்காட்டி வந்து சம்ச்லேஷித்தாயே!. என்னுடையகூப்பீடு மொருபடியோவும்படிபண்ணிற்றே!. [அங்கே பரதமாரோப்ய முதித꞉ பரிஷஸ்ஜே] [அங்கேபரதமாரோப்யமுதிதঃபரிஷஸ்ஜே] என்று - மீண்டுபுகுந்து ஸ்ரீபரதாழ்வானை மடியிலேவைத்து உச்சியைமோந்துகந்தணைத்தாப்போலே யாய்த்து இவருடைய விடாய்கெடும்படிகலந்தது ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (சூழ்ந்தித்யாதி) "அவாவற" என்றது - தம்முடையவவா, அற - போம்படியென்னுதல்; தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டிருக்கிற தம்முடையவவா, அற-அல்பமாம்படி; அதாவது-தம்முடையவபிநிவேசம் குளப்படியென்னும்படி கடல்போன்ற வாதரத்தோடேவந்து கலந்தாயென்னுதல். இந்தவர்த்தத்வயத்தையும் விவக்ஷித்து அடைவே யவதாரிகாத்வயம் (எம்பெருமானுக்கித்யாதி) இந்தவிரண்டுயோஜநையும், "துயரறுசுடரடி" என்று உபக்ரமத்திலே யருளிச்செய்தத்தை உபஸம்ஹரிக்கிறுரென்னுமிடம் தோன்றுகிறது. அவதாரிகாத்வயத்துக்கும் த்ருஷ்டாந்தமாதல், த்விதீயாவதாரிகைக்கு த்ருஷ்டாந்தமாதல் (அங்கேபரதமித்யாதி) "முதித꞉" ( முதிதঃ ) என்றபதம், த்விதீயாவதாரிகைக்குச்சேரும். "முதித꞉" ( முதிதঃ ) என்கையாலே - "கதாந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா" (கதாந்வஹம்ஸமேஷ்யாமி பரதேநமஹாத்மநா) என்றபெருமாள் விடாய்தீர்ந்தமை தோற்றுகிறது. "தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த்த꞉ சிரஸ்யாக்ஷிபத

யம்தழ।கூஜெஹா தரோஸோவ)ீ-ஜி தவேரிஷஹ்ஜெ" (தம்ஸமுத்தாப்ய காகுத்ஸ்தஶ்சிரஸ்யாக்ஷிபதம்கதம் । அங்கேபரதமாரோப்யமுதித:பரிஷஸ்வஜே) இதியுத்தகாண்டே சரமே.

ப்ராப்திதசையிலே ப்ரக்ருதிபுருஷர்களைச்சொல்லுவானென்னென்ன (இப்போதித்யாதி) இப்போது - ப்ராப்திதசையிலே. ஆனால் "பாழேயோ, சோதியோ" என்று சமாநாதிகரணமாகச் சொல்லுவானென்னென்ன (அவற்றுக்குமித்யாதி) "அகன்றுழ்ந்துயர்ந்து - சூழ்ந்த" என்றந்வயிப்பது. சப்தார்த்தம் (ஸ்வகார்யமான வித்யாதி.)

"பரம்" என்றதுக்கர்த்தம் (அதுக்குநியந்தாவித்யாதி.)

"சுடர்" என்கிறவிதுக்கு - (சங்கல்பரூபமாய்) என்றர்த்தம்சொன்னது-அப்ரதிஹதத்வரூபௌஜ்ஜ்வல்யத்தை சங்கல்பமுடைத்தாகையாலே. "சுடர் - இன்ப-ஞானமேயோ" என்றபடி. முந்தினவர்த்தத்துக்கு, "ஞானமேயோ" என்றது - ஜ்ஞாநத்துக் காஸ்ரயமானவனேயென்றபடி; இரண்டாமர்த்தத்தில், "சுடர்ஞானவின்பமேயோ" என்று - ப்ரகாசரூபஜ்ஞாநஸ்வரூபனுமாய் சுகரூபனுமானவனேயென்றபடி. "சுடர்ஞானம்" என்று - ப்ரகாசரூபஸ்வரூபஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது.

த்விதீயாவதாரிகைக்குச்சேரவர்த்தம் (தத்த்வத்ரயத்தையுமித்யாதி) தத்த்வத்ரயத்தையுமென்றது - "சுடர்ஞானவின்பம்" என்றதினிரண்டாமர்த்தத்தைப்பற்ற. முந்தினவவதாரிகைக்குச்சேரவர்த்தம் (என்னுடையகூப்பீடுமித்யாதி.) இதுக்குதாஹரணம் (அங்கேயித்யாதி) "அற" என்றால் - அல்பத்வவாசகமாமோவென்னில்; மேருசிகரஸ்த்தனானவன் கீழுள்ள ஸர்ஷபாதிகளையில்லையென்றால் அபாவவாசகமன்றிக்கே அல்பத்வவாசகமாமாபோலே, வாசகமாமென்றபடி..........................*

---

# பதினொன்றாம்பாட்டு.

அவாவறச்சூழரியையயனையரனையலற்றி
யவாவற்றுவீடுபெற்றகுருகூர்ச்சடகோபன்சொன்ன
வவாவிலந்தாதிகளாலிவையாயிரமுமுடிந்த
வவாவிலந்தாதியிப்பத்தறிந்தார்பிறந்தாருயர்ந்தே.

## ஆறாயிரப்படி.

(அவாவறச்சூழ்) ப்ரஹ்மருத்ராதி ஸர்வாத்மாக்களுக்கு மந்தராத்மபூதனாய், சமஸ்தஹேய ப்ரத்யநீகனாய், அநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணநிதியாய், அப்ராக்ருத ஸ்வாஸாதாரண திவ்யரூப பூஷணாயுதமஹிஷீ பரிஜநஸ்த்தாந விசிஷ்டனாயிருந்த வெம்பெருமானையலற்றி அவாவற்று நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராய், அவனைப்பெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன வவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் அவற்றிலே தம்முடைய வபேக்ஷிதம்பெற்று விடாய்தீர்ந்தபத்து, இவற்றையறிந்தார், பிறந்துவைத்தே * அயர்வறுமமரர்களுக்கும்மேற்பட்டாரென்கிறார்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பலாவாப்திப்ரகாரத்தை ப்ரதிபாதித்துக்கொண்டு, இத்திருவாய்மொழிக்குப்பலமாக, இதில் ஜ்ஞாநமுடையவர்களுடைய ஜந்மோத்கர்ஷத்தை யருளிச்செய்கிறார்.

அவா-ஆஸ்ரிதருடையவபிநிவேசம். அற-தீரும்படி. சூழ் -நிரவதிகசம்ஸ்லேஷம்பண்ணுகையாலே. அரியை - விஸ்லேஷதுஃகநிர்ஹரணஸ்வபாவனாய். அயனை- "காஸ்ரு௦ஜெஜிநிஃ" (கார்யம்ஜைமிநிஃ) என்கிறமர்யாதையாலே முக்தப்ராப்யதயா, பூர்வபக்ஷதயாஸங்கிதனான ஹிரண்யகர்ப்பனுக்கும் அந்தராத்மாவாய். அரனை-அப்படிபசுபதிமதப்ராப்யனான ருத்ரனுக்கும் அந்தராத்மாவான பரமப்ராப்யபூதனை. அலற்றி-ப்ராபிக்கையிலுண்டான த்வரையாலேகூப்பிட்டு ப்ராப்திபலஸித்தியாலே. அவாவற்றுவீடுபெற்ற, குருகூர்ச்சடகோபன்சொன்ன, அவாவில், அந்தாதிகளால், இவையாயிரமும்-இவை ஆயிரமும். முடிந்த - அதிபரபக்திருபமாகமுடிந்த. அவாவில்—அவாவிலே. அந்தாதி-அந்தாதிகளான. இப்பத்து-இப்பத்தையும். அறிந்தார்-அநுசந்தித்து. பிறந்தாருயர்ந்தே.

வஸ்யபுத்திபண்ணும்படியான அவா அறும்படியாகத் தன்குணாதிகளாலேசூழ்ந்து ஹரித்துக்கொள்ளுமவனென்றுமாம்.

இது கலிவிருத்தம் ........................................................................*

இப்படி ப்ரபந்தத்திலே ஸ்ரியஃபதியான நாராயணனுக்கு ப்ரகாரபூதனான சேதநனுக்கு உபாயத்வேந ப்ரவ்ருத்தனாய்க்கொண்டு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுமென்கிற மஹாவாக்யார்த்தத்தினுடைய வவாந்தரார்த்தரூபமான ப்ராப்யப்ரஹ்ம ஸ்வரூபாதிகளாயுள்ள அர்த்தபஞ்சகத்தையும் தத்ப்ரகாரவிசிஷ்டமாம்படி சமர்மமாக வருளிச்செய்து தலைக்கட்டினாராய்த்து. இதில், முதற்பத்திலு மிரண்டாம்பத்திலும் - ரக்ஷகத்வ போக்யத்வ விசிஷ்டமான சேஷித்வஸ்வரூபஞ்சொல்லுகையாலும், மூன்றாம்பத்திலும் நாலாம்பத்திலும் - ததேகாநுபவத்வ ததேகப்ரியத்வரூபமான சேஷத்வ ஸ்வரூபஞ்சொல்லுகையாலும், இந்நாலும் அநுவ்ருத்தமாக இந்தசேஷித்வ சேஷத்வங்களினுடைய வசாதாரண்யத்தைச்சொல்லுகையாலும், ப்ரதமாக்ஷரத்திலே சேஷித்வத்தைச்சொல்லி, த்ருதீயாக்ஷரத்திலே சேஷத்வாஸ்ரயத்தைச்சொல்லி, அவதாரணார்த்தமான உகாரத்திலே உபயோஸ்ஸம்பந்த தாஸ்யத்தைச்சொல்லுகிற ப்ரணவார்த்தத்தை ப்ரதிபாதித்ததாய்; அநந்தரம், அஞ்சாம்பத்திலே - உபாயஸ்வரூபத்தையும், ஆறாம்பத்திலே - உபாயவரணத்தையும், ஏழாம்பத்திலே - விரோதிஸ்வரூபத்தையும், எட்டாம்பத்திலே- தந்நிவ்ருத்திப்ரகாரத்தையும் சொல்லுகையாலே - சாப்தமாகவு மார்த்தமாகவும் ஸித்தமான நமஸ்நாமநவானான ஈஸ்வரனுடைய வுப்ரயபாவத்தையும், நமஸ்ரூபமான சரணாகதிஸ்வரூபத்தையும், ஆத்மாத்மீயஸித்தமான அஹங்கார மமகாரரூப விரோதிஸ்வரூபத்தையும், தந்நிஷேதத்தையும்சொல்லுகிற நமஸ்ஸப்தார்த்தத்தை ப்ரதிபாதித்ததாய்; ஒன்பதாம்பத்திலும் பத்தாம்பத்திலும்-சர்வவிதபந்துத்வ கைங்கர்ய ப்ரதிசம்பந்தித்வாதிவிசிஷ்டமான பலாவாப்தியைச்சொல்லுகிற சரமபதார்த்தத்தை ப்ரதிபாதித்ததாய்; ப்ரபந்த ஸங்க்ரஹமான முதற்பாட்டிலருளிச்செய்த க்ரமத்திலே சர்வசாஸ்த்ர சங்க்ரஹமான மூலமந்த்ரார்த்தத்தை இப்ப்ரபந்தத்திலே விஸ்தரேண ப்ரதிபாதித்தாராய்த்து.

இன்னமும், ப்ரதமத்திலே - ஸ்ரியஃபதித்வ நாராயணத்வங்களை ப்ரதிபாதித்து, நாராயணனுடைய சீலசௌலப்யாதிகளாயும் ஜ்ஞாநாதிகளாயுமுள்ள குணங்களை பஹுஶஃ ப்ரதிபாதித்து, உத்தமமான க்ரியாபதத்தாலேபமாகப்பண்ணுகையாலும், விரோதிபூத ரஹிதமான புருஷார்த்தரூப பகவத்கைங்கர்யாவாப்தியை ப்ரதிபாதிக்கையாலும், வாக்யத்வயாத்மகமான சரணாகதிஸ்வரூபத்தையும் விசதீகரித்தருளினாராய்த்து.

இவ்வுபாயவரணம் ததிதர சகலநிவ்ருத்தியுக்தமாயிருக்குமென்றும், உபாயபூத குணவிசிஷ்டனாய் அத்விதீயனாயிருக்குமென்றும் ப்ரதிபாதித்து, உபாயகார்யமான சமஸ்தவிரோதிநிவ்ருத்தியையும், பலஸித்திநிபந்தந தாதர்த்யத்தையும் ப்ரதிபாதிக்கையாலே-சரமஶ்லோகார்த்தத்தையும் விசதீகரித்தருளினாராய்த்து.

ஆக, சர்வப்ரகார பகவச்சேஷபூதனாய், அநந்யப்ரயோஜநனாய், அநந்யஸாதநனான இவ்வதிகாரிக்கு ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யத்ரயத்தையும் ஸப்ரகாரமாக ப்ரகாசிப்பிக்கையாலே, இப்ப்ரபந்தமானது விலக்ஷணரான சாத்விகாக்ரேஸரர்க்கு நித்யாநுசந்தேயமாகக்கடவது............................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், * அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய், * உயர்வறவுயர்நலமுடையனாய், சௌந்தர்யாதிவிசிஷ்டமான நித்யமங்கள விக்ரஹயுக்தனாய், அபரிமித திவ்யபூஷணபூஷிதனாய், சர்வாயுதோபேதனாய், லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், அஸ்த்தாநேபயசங்கிகளான அநந்தவைநதேயாதிகளாலே அநவரதபரிசர்யமாண சரணநளினனாய், ஸ்ரீவைகுண்டநிலயனாய், சர்வேஶ்வரனாய், ஸ்வவிபூதிபூதரான ப்ரஹ்மருத்ராதிகளுக் கந்தராத்மாவாய், தன்னைக்காணவேணுமென்று விடாய்த்தாஶ்ரயிக்கு மவர்களுடைய விடாய்தீர சம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனான வெம்பெருமானைக்காணவேணுமென்று கூப்பிட்டு அவனைப்பெற்று நிர்த்துஃகராய், நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகரான ஆழ்வாருடைய பக்திபலாத்கார பூர்வகமாகப்பிறந்தது ஆயிரந்திருவாய்மொழியும்; அவற்றில்வைத்துக்கொண்டு, கீழ்ச்சொன்னவைபோலன்றிக்கே பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடியான பரமபக்தியாலேபிறந்த வந்தாதியான வித்திருவாய்மொழிவல்லார், சம்சாரத்திலேபிறந்துவைத்தே * அயர்வறுமமரர்களோடொப்பரென்கிறார்.

(அவாவறச்சூழரியை) சர்வாபேக்ஷிதப்ரதனான சர்வேஶ்வரனை. தம்முடையவபிநிவேசம்கெட வந்துகலந்தபடியாலே வேறொருவிசேஷணமிடாதே அதுதன்னையேசொல்லுகிறார். (அயனையரனை) ஸ்வவிபூதிபூதரான ப்ரஹ்மருத்ரர்களுக் கந்தராத்மாவானவனை. அவாவறச்சூழ்கையாவது - தன்னைக்காணவேணுமென்று விடாய்த்த வாஶ்ரிதருடைய விடாய்தீர சம்ஶ்லேஷிக்கை. (அயனை, அரனை) என்கிற விஸ்ஸாமாநாதிகரண்யத்தால் - ப்ரஹ்மருத்ரர்கள்பக்கல் ஈஶ்வரத்வசங்கையை யறுக்கிறார். அவர்களுடைய சத்தாஸ்த்திதி ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் ஈஶ்வராதீநமா

கையாலே அவர்களுக்குப் பாரதந்த்ர்யமேஸ்வரூபம்; நிர்வாஹகத்வம் கர்மாதிநமாய் வந்தவித்தனே. இஸ்ஸாமாநாதிகரண்யத்தில் ஜ்ஞாநமின்றியே எளியராயிருப்பார்க்கு நிர்வஹிப்பதும் சிலபுடைகளுண்டு - (அயனையரனை - அவாவற்று - அரியை — அலற்றி — வீடுபெற்ற) என்னுதல்; (அயனையரனை - அவாவறச்சூழரியை — அலற்றி, அவாவறச்சூழ்வீடுபெற்ற) என்னுதல். (அலற்றியவாவற்றுவீடுபெற்ற) கூப்பிட்டு அவனைப்பெற்று நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகராகையாலே நிர்த்துஃகரான ஆழ்வாரருளிச்செய்த. (அவாவிலந்தாதிகளாலிவையாயிரமும்) பக்திபலாத்காரத்தாலேபிறந்த வாயிரந்திருவாய்மொழியிலும். இவருடைய ஸ்ரீமைத்ரேயபகவான் அவா. அவா உபாத்யாயராக நடத்தநடந்தவாயிரம். ஆழ்வார்க்குப்பின்பு நூறுயிரம் கவிகள்போருமுண்டாய்த்து; அவர்கள் கவிகளோடு கட்லோசையோடு வாசியற்று அவற்றைவிட்டு இவற்றைப்பற்றித்துவளுகைக்கடி - இவருடைய பக்த்யபிநிவேசம்வழிந்து புறப்பட்டசொல்லாகையிறே. (முடிந்தவவாவிலந்தாதியிப்பத்து) தரிக்கவொண்ணுதபடியான பரமபக்தியாலே பிறந்ததாய்த்து இத்திருவாய்மொழி. இவ்வவாவுக்குதவிற்றிலனுகில் ஈஸ்வரனுக்கும் சைதந்யமின்றிக்கேயொழியும். * சூழ்விசும்பணிமுகிலுக்குக்கீழ், பரபக்தியாலேசென்றது; * சூழ்விசும்பணிமுகில், பரஜ்ஞாநத்தாலே; இத்திருவாய்மொழி, பரமபக்தியாலே. பகவத்ப்ரஸாதம்பாதியும் தாங்கள் பாதியுமாகச்சொல்லுமவர்களுக்கு, சரீராவசாநத்திலே இப்பரபக்த்யாதிகளுண்டாம்; இவர் அடியிலே * மயர்வறமதிநலமருள்ப்பெறுகையாலே எழுந்தருளியிருக்கச்செய்தேயுண்டாய்த்தின. கர்மஜ்ஞாநாநுக்ருஹீதையான பக்தியினுடைய ஸ்த்தாநத்திலே சர்வேஶ்வரனுடைய வருள்நின்று, அதடியாகப்பிறந்த பரபக்த்யாதிகளிறேயிவரது. (அறிந்தார்பிறந்தாருயர்ந்தே) இத்தையறிந்தவர்கள், சம்சாரத்திலேபிறந்துவைத்தே நித்யசூரிகளோடொப்பர். (பிறந்தேயுயர்ந்தார்) சர்வேஶ்வரனுடைய அவதாரத்தோபாதி இவர்களுடையபிறப்பும் ..................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (அவாவறவித்யாதி) ப்ரபந்தபரிஸமாப்தியாகையாலே இப்ப்ரபந்தப்ரதிபாத்யதாத்பர்யத்தை சங்க்ரஹித்துக்கொண்டு, "அவாவறச்சூழரியை" என்று தொடங்கி "இப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்து" என்னுமளவுமுண்டான வர்த்தங்களையும் சேரப்பிடித்தருளிச்செய்து, இதுகற்றார்க்குப்பலஞ்சொல்லுகிறதென்று இப்பாட்டுக்கு சங்கதியருளிச்செய்கிறார் (அகிலேத்யாதி) "மனனகமலமற" என்கிறபாட்டைக்கடாக்ஷித்து (அகிலஹேயேத்யாதி) "சுடரடி" என்றத்தைக்கடாக்ஷித்து (சௌந்தர்யாதீத்யாதி) "பலபலவேயாபரணம்" இத்யாதியைப்பற்ற (அபரிமிதேத்யாதி) "ஒண்சங்கதைவாளாழியான்" இத்யாதியைப்பற்ற (சர்வாயுதேத்யாதி) "தேவிமார்" இத்யாதியைப்பற்ற (லக்ஷ்மீபூமீத்யாதி) "அயர்வறுமமரர்கள்" இத்யாதியைப்பற்ற (அஸ்த்தாந இத்யாதி, சர்வேஸ்வரனுயென்னுமளவும்.) "அயனையரனை" என்றத்தைப்பற்ற (ஸ்வவிபூதீத்யாதி) இவ்விடத்திலே, " ஷாஹ்ராதிக்ஷாதி

யஃகாலஸ்ததைவாகிலஜந்தவஃ । விபூதயோஹரேரேதாஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவஃ" (ப்ரஹ்மாதக்ஷாதயஃகாலஸ்ததைவாகிலஜந்தவஃ । விபூதயோஹரேரேதாஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவஃ) என்றதநுஸந்தேயம். "அவாவறச்சூழரியை" என்றத்தைப்பற்ற (தன்னைக்காணவேணுமென்றித்யாதி) அலற்றி - (கூப்பிட்டு) அவாவற்று - (நிர்த்துஃகராய்) வீடுபெற்ற - (நிரஸ்தஸமஸ்தப்ரதிபந்தகரான) "அவாவிலந்தாதிகளாலிவையாயிரமும்" என்றத்தைப்பற்ற (பக்திபலாத்காரேத்யாதி.)

"அவா" என்று - சாமாந்யமாகையாலே, இச்ஶப்தம் "தாவதார்த்திஃ" (தாவதார்த்திஃ) இத்யாதிப்படியே தத்ததிகாராநுகுணமாக சகலாபேக்ஷிதங்களையும் சொல்லலாகுகையாலே (சர்வாபேக்ஷிதப்ரதனை) என்கிறார். அவாவறச்சூழ்-சர்வாபேக்ஷிதப்ரதனை, அரியை-சர்வேஶ்வரனை. "அவாவற-ஆஶ்ரிதருடைய வபிநிவேசம்தீரும்படி. சூழ் - சம்ஶ்லேஷியாநிற்கிற, அரியை-விஶ்லேஷதுஃக நிர்ஹரணஸ்வபாவனானவனை" என்று உரையில் சப்தார்த்தம். நாராயணாதிசப்தங்களிருக்க, அவற்றைவிட்டு, "அவாவறச்சூழ்" என்று இத்தையே நிரூபகமாகச்சொல்லுவானென்னென்ன (தம்முடையவபிநிவேசமித்யாதி.) கீழே சதுர்விதாதிகாரிகளுடைய வவாவறச்சூழ் என்றருளிச்செய்து, இங்கே கேவல முமுக்ஷுக்களுடைய வவாவறச்சூழென்றர்த்தாந்தரம் (அவாவறச்சூழ்கையாவதித்யாதி) இது அவதாரிகையிற்சொன்ன வர்த்தத்தைவிவரித்தபடி. "அயனையரனை" என்கிற சாமாநாதிகரண்யம் சரீராத்மபாவ நிபந்தநமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸ்வவிபூதிபூதரானவித்யாதி) இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (அயனையரனையென்கிறவித்யாதி) அவர்களை, ஸ்ருஷ்டிசம்ஹாரங்களுக்கு நிர்வாஹகராய் ஈஶ்வரத்வேந சாஸ்த்ரங்கள்சொல்லாநிற்க, சரீரசரீரிபாவேந அவர்களுக்கு பாரதந்த்ர்யம் சொல்லக்கூடுமோவென்ன (அவர்களுடையவித்யாதி) புடைகள் - ப்ரகாரங்கள். அவைகளேவையென்ன (அயனையித்யாதி) கீழ்வாக்யத்வயவிவரணம் (அயன்விஷயத்திலு மித்யாதிவாக்யத்வயம்) "அயனை யரனை-அவாவற்று-அவாவறச்சூழரியை-அலற்றி-வீடுபெற்ற" என்றிரண்டாம்யோஜனை. இதுக்கர்த்தம்-அயன்விஷயத்திலும் அரன்விஷயத்திலும் தாம் ஸ்நேகமற்று தம்முடைய விடாய்தீர சம்ஶ்லேஷிக்கும் சர்வேஶ்வரனை யலற்றிவீடுபெற்றவென்று. "அயனையரனை-அவாவறச்சூழரியை-அவாவற்றுவீடுபெற்ற" என்றயோஜனைக்கர்த்தம்-அயனுடையவு மரனுடையவு மபிநிவேசமறும்படி அவர்களோடே சம்ஶ்லேஷிக்கும் சர்வேஶ்வரனையலற்றியென்னுதல்; சேதநர்க்குண்டான வவாவானதறும்படி சேதநரோடே சம்ஶ்லேஷித்த சர்வேஶ்வரனையலற்றியென்னுதல்; இந்தயோஜநாத்வயத்திலும் "அயனையரனை" என்கிற ஐகாரம்-அவ்யயம்.

அவாவிலந்தாதிகளாலிவையாயிரமும்-அவாவாலேயுண்டான வந்தாதிகளான விவையாயிரத்திலுமென்றபடி. அவாவில்-அவாவாலேயென்றபடி. ஆல் - அசை. தத்வார்த்தங்களையெல்லாம் ஸ்ரீபராஶரபகவான் மேன்மேலுமுபபாதித்தது - ஸ்ரீமைத்ரேயபகவான் ப்ரஶ்நம்பண்ணினபின்பாகையாலே, அந்த மைத்ரேயபகவான் ஸ்தாநத்திலே பக்தியென்கிறார் (இவருடையவித்யாதி) அதாவது - "பராஶரம் முநிவரம் க்ருதபௌர்வாஹ்ணிகக்ரியம் । மைத்ரேயஃ பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச" (பராஶரம்முநிவரம்க்ருதபௌர்வாஹ்ணீகக்ரியம் । மைத்ரேயஃபரிபப்ரச்சப்ரணிபத்யாபிவாத்யச) என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்துக்கு ஸ்ரீமைத்ரேயபகவான் மூலமானாப்போலே, இப்ப்ரபந்தத்துக்கும் இவருடையவவாமூலமெ

ன்றபடி. ரீத்யந்தரேணபாவம் (அவாவுபாத்யாயராகவித்யாதி) அவா-பக்தி. பக்திபூர்வகமாகப்பிறந்ததாகையாலே இப்ப்ரபந்தங்களுக்கு லோகபரிக்ரஹமுண்டாய்த்தென்கிறுர் (ஆழ்வார்க்குப்பின்பித்யாதி.)

முடிந்தவவா - சரமமானவவா. பரமபக்தியென்றபடி. "முடிந்தவவா" என்றதுக்குபாவம் (இவ்வவாவுக்கித்யாதி.)

இதுமாத்ரமோ பரமபக்தியாலே பிறந்ததென்னவருளிச்செய்கிறுர் (சூழ்விசும்பித்யாதி சரீராவசாநத்திலேயன்றோ பரமபக்தியுண்டாவது, இதுக்குமுன்னேயுண்டாகக்கூடுமோவென்ன (பகவத்ப்ரசாதமித்யாதி) ஆனுல், கர்மஜ்ஞாநங்களாலேயன்றோ பக்தியுண்டாவதென்ன (கர்மஜ்ஞாநேத்யாதி.)

பிறந்திருக்கச்செய்தே உத்கர்ஷமுண்டாகக்கூடுமோவென்ன (சர்வேஶ்வரனுடையவித்யாதி) அதாவது-சர்வேஶ்வரனுடைய வவதாரமநுக்ரஹ நிபந்தநமாகையாலே உத்கர்ஷஹேதுவானுப்போலே, இவருடையபிறப்பு முத்கர்ஷஹேதுவென்றபடி. (ஆழ்வார்க்குப்பின்பு) இத்யாதிவாக்யத்திலே, "விஷ்ணோர்தேஹிபராஶரா திமுநிபி:ப்ரோக்தா:ப்ரபந்தா:பரா:பக்த்யாவஹிதேதயாபிஸகலம் த்யக்த்வாத்ரரக்கேஶ்வரா: | பக்தாநேவபராங்குஶாதிபுருஷாம்ஸ்தத்தத்ப்ரதிபந்நாம்ஶ்சதாநத்யாத்ருத்யஸதோபலாளயதியத்தத்ஜ்ஞாபநம்தத்ப்ரியே" (வித்யங்தேஹிபராஶராதிமுநிபி:ப்ரோக்தா:ப்ரபந்தா:பரா:பக்த்யாவஹிதேதயாபிஸகலம்த்யக்த்வாத்ரரங்கேஶ்வர8 । பக்தாநேவபராங்குஶாதிபுருஷாம்ஸ்தத்தத்ப்ரதிபந்தாம்ஶ்சதாநத்யாத்ருத்யஸதோபலாளயதியத்தத்ஜ்ஞாபநம்தத்ப்ரியே) என்றபெரியஜீயர் திவ்யஸூக்திரநுஸந்தேயா ...........................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( முனியேநான்முகனே. )

ப்ரஹ்மேஶாந்த:ப்ரவேஶாத், ஜலநிதிஸுதயா ஸந்நிரோத்ரவ்யபா
வாத், திவ்யஶ்ரீவிக்ரஹத்வாத், உபமிதநதயா, த்ருஷ்டிவைஶிஷ்ட்யபாவாத்,
பத்மாபத்ம்யக்ஷ, ஸ்ப்ருஷ்டநாரணகாரணத்வ:, பாண்யபாவேசித்வாத்,
ந்ருஷ்டத்வாத், ந்ருஸிம்ஹாவேஶாத் ஸர்வஸித்திஸம்ஜிஜ்ஞாஸ்ய நாத்விஶ்வ॥ (௧௧௬)

(ப்ரஹ்மேஶாந்த:ப்ரவேஶாத்) முனியேநான்முகனே முக்கண்ணப்பா-ப்ரஹ்மருத்ரர்களுக் கந்தராத்மாவாய் நிற்கையாலும்; (ஜலநிதிஸுதயாஸந்நிரோத்தவ்யபாவாத்) திருமார்வத்துமாலைநங்கை வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணை - திருமார்வுக்கலங்காரமாய் * சர்வகந்தனை தனக்கும் வாஸனையையுண்டாக்கும்படியான திருக்குழற்கற்றையை யுடையளாகையாலே தன்க்கத்யந்தாபிமதையான பெரியபிராட்டியார்மேலே மறுக்கவொண்ணுதவாணையிட்டு இச்சேதநனுலே வளைக்கப்படுமவனுகையாலும்; (திவ்யஶ்ரீவிக்ரஹத்வாத்) என்பொல்லாக்கருமாணிக்கமே-விலக்ஷண

மான நீலரத்நம்போலேயிருக்கிற திருமேனியையுடையனுகையாலும்; (அகிலதநுத யா) உம்பரந்தண்பாழேயோவித்யாதி - ஸூக்ஷ்மசிதசித்பஞ்சபூததத்தாரப்த ப்ரஹ்மாண்ட ததந்தர்வர்த்தி ப்ரஹ்மருத்ரேந்த்ராதிதேவத திதரபதார்த்தங்களையெல்லாம் சரீரமாகவுடையனுகையாலும்; (அத்ருப்தபீயூஷபாவாத்) எனக்காராவமுதானுயே- அநுபவிக்க வநுபவிக்க த்ருப்திவாராதபடி நிரதிசயபோக்யனுயிருக்கையாலும்; (பத்மாபந்தத்வ) உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கன்பா - “ ராகவெ(ா)ஹ்தி வெெஹம் தஞ்ஜஸி தக்ஷணா ” (ராகவோர்ஹதிவைதேஹீம்தஞ்சேயமஸிதேக்ஷணா) என்கிறபடியே - சர்வப்ரகாரத்தாலும் தனக்குயோக்யையான் பெரியபிராட்டியாருக்கு வல்லபனுகையாலும்; (பூம்யுத்தரணகரணத:) கோலவராக மொன்ருய் நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய் - தர்ஶநீயமான வராஹரூபத்தைக்கொண்டு பூமியையுத்தரித்தருளுகையாலும்; (புண்யபாபேஶித்ருத்வாத்) உற்றவிருவினையாயுயிராய்ப்பயனுய் - புண்யபுண்யகர்மதத்போக்த்ரு ஜீவதத்பலங்களுக்கு நிர்வாஹகனுகையாலும்; ஈஶித்ருத்வாத் என்கிறவித்தாலேதானே, மேலிற்பாட்டில் “முதல்தனிவித்தேயோ” என்றுசொல்லுகிற காரணத்வமும் ஸங்க்ருஹீதமாகிறது; (முக்தேர்த்தாதா) என்னவாவறச்சூழ்ந்தாயே - “ அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே ” ( அங்கேபரதமாரோப்யமுதித:பரிஷஸ்வஜே ) என்கிறபடியே - ஸ்ரீபரதாழ்வானை மடியிலேவைத்து உச்சிமோந்துகொண் டுகேந்தணைத்தாப்போலே, தம்முடையமநோரதமும் பூர்ணமாம்படி வந்துகலந்த வெம்பெருமான்ருனே மோக்ஷப்ரதனுமாய், முக்தப்ராப்யனுமாகிருனென்னு மிவ்வர்த்தத்தை * முனியேநான்முகனிலே, முநிஶ்ரேஷ்டரான வாழ்வார் வெளியிட்டாரென்றுகொண்டு, “வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ” (வைகுண்டேதுபரேலோகேஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதி: । ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மாபக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ) என்கிறபடியே-ஸ்ரீவைகுண்டத்திலே ஸ்ரீபூமிநீளைகளோடேகூட சேஷசேஷாஶந கருடப்ரமுக நாநாவிதபரிஜந பரிசாரிகா பரிசரிதசரணயுகளனுய்க்கொண்டு * ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்தருளுகிற வெம்பெருமான்றிருவடிகளிலே, “ஒழிவில் காலமெல்லாமுடனுய்மன்னி । வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்” என்றுமநோரதித்தபடியே - சர்வதேச சர்வகால சர்வாவஸ்த்தோசித சர்வவிதகைங்கர்யங்களையும்பெற்று க்ருதார்த்தராருரென்கிருர் ... ... ... ... ... ... ... (௧௧௩)

இப்படிசரமஶதகத்திலே பத்துதஶகங்களாலும் ப்ரதிபாதிதங்களான வர்த்தங்களை சங்க்ரஹித்தருளுகிருர்.

ஸர்வம் ஶ்ரீநாதம், வ்ரஜஜநஸிதஹரா, ஸாநுகம்பாஹ்வாநம், ஸம்ப்ராவம் ஹ்ருதிஸ்தம், பஹுவிதஜநந க்ரியம், ஶ்ரீஶஶாஸி । தீவ்ராஸ்ர்ஸ்ய்சாதிரம்பராந, ஸ்வஜநத நகுஜாத்ராடிரம், ப்ராஹவாஜோ வேஸ்வாதுஷம், ஸர்வாவிர்பூதவஸரணிம், மோக்ஷதம்ஶேஷ்ஸோ மஹ்ருஷி॥ (௧௧௪)

ஆஶ்ரிதருக்கு நல்லதுணையாகவும், பொல்லாவழியில்வரும் க்லேஶங்களைப் போக்குமவனும், அஸ்தாநே ஸ்நேஹத்தாலே சங்கிக்கப்படுமவனும், தன்னைபஜித்தபேர்களாலே சுப்ராபனும், பஹுவிதபஜந ப்ரகாரங்களையுடையனும், ஆஶ்ரிதருக்கு ஸ்வாத்மப்ரதாநத்திலே அத்யந்தம் த்வரையையுடையனும், அவர்களுடைய சரீரத்திலே யத்யாதரயுக்தனும், அவர்கள்விஷயத்திலே ஸ்வேச்சையாலே சந்துஷ்டனும், ஆஶ்ரிதனை அர்ச்சிராதிமார்க்கத்தாலே நயிப்பிக்குமவனும், மோக்ஷப்ரதனும் முக்தப்ராப்யனுமான வெம்பெருமானை சத்பதவீஸஹாயனாக சரமஶதகத்திலே சடகோபர் ஸ்தாபித்தருளினாரென்கிறார்... ... ... ... ... ... (௧௧௪)

இப்ப்ரபந்தத்தில் பத்துஶதகங்களாலும் ப்ரதிபாதிதங்களான ப்ரதாநார்த்தங்களை ப்ரதர்ஶிப்பித்தருளுகிறார்.

இஷ்டம் ஸேவ்யம், ஸௌஹார்த்யம், ஶுபஸுபகதநும், ஸர்வபோக்யப்ரகர்ஷம், ஶ்ரேயஸ்தத்தேதுதாநம், ப்ரபந்நஸுலபம், ஸ்வாஶ்ரிதாநிஷ்டஜிஷ்ணும், ஸங்கல்பாநுவர்த்தம், நிருபதிஸுஹ்ருதம், ஸத்பதவ்யாம்ஸஹாயம், ஶ்ரீஶம் ப்ராஹ ஸ்வப்ராப்தௌ ஸ்வயமிஹ கரணம் ஸ்வப்ரபந்தே ஶடாரி:॥

(௧௧௫)

சேவாயோக்யனும், சேவிக்குமளவி லத்யந்தமினியனும், திவ்யமங்களவிக்ரஹயுக்தனும், சர்வபோக்யாதிசாயியாயும், புருஷார்த்ததுபாயபூதனும், ப்ரபந்நசுலபனும், ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தகனும், ஆஶ்ரிதேச்சாநுவர்த்தியாயும், சர்வர்க்கும் நிருபாதிக சுஹ்ருத்தாயும், சத்பதவீஸஹாயனுமான வெம்பெருமானை, ஸ்வப்ராப்தியிலே ஸ்வயமேவோபாயபூதனாக, ஸ்வப்ரபந்தமான திருவாய்மொழியிலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறார்... ... ... ... ... ... ... ... (௧௧௫)

இவ்வாழ்வாரருளிச்செய்த நாலுதிவ்யப்ரபந்தங்களுக்கும் தாத்பர்யத்தை ஒருஶ்லோகத்தினாலே ப்ரகாஶிப்பித்தருளுகிறார்.

ஆத்யே ஸ்வீயப்ரபந்தே ஸம்ஜிஜ்ஞிவாந் ஸம்ஸ்ருதே துஸ்ஸஹத்வம், த்வைதீயீகே ஸ்வரூபாத்யவிகலமநுபவந் த்ருஷ்டதுஷ்டி:। தார்தீயீகே ச ராகம் பகவதநுபவே ஸ்வஸ்ய ஜாதம் ஜகாத, துர்யே ஸ்வேஷ்டம் பகவதநுபவாதாவிமுக்திம் ஶடாரி:॥ (௧௧௬)

ஆழ்வார், ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்திலே, சம்சாரத்தினுடைய துஸ்ஸஹதையை யருளிச்செய்தார்; த்விதீயமான திருவாசிரியத்திலே, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபாதிகளை ஸ்பஷ்டமாகக்கண்டநுபவித்தருளினார்; த்ருதீயமான திருவந்தாதியிலே, எம்பெருமானுடைய வநுபவத்தில் தமக்குண்டான வநுராகாதிசயத்தை ப்ரகாசிப்பித்தருளினார்; துரீயமான திருவாய்மொழியிலே, தாம்மநோரதித்தபடியே அநுபவித்து மோக்ஷத்தையும் பெற்றாரென்கிறார்... ... ... (௧௧௬)

புநஶ்ச, இரண்டுஶ்லோகத்தாலே, திருவாய்மொழியிலே ஆழ்வாரருளிச்செய்த வர்த்தவிஶேஷங்களை சங்க்ரஹித்தருளுகிறார்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] (௧௧௭)

ஶ்ரியஃபதியாய் சர்வஸ்வாமியாய், நிரவதிககாருண்ய வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌலப்ய சர்வஜ்ஞத்வ சர்வசக்தித்வ சத்யசங்கல்பத்வ க்ருதஜ்ஞத்வ ஸ்த்திரத்வ பரிபூர்ணத்வ பரமோதாரத்வாதி கல்யாணகுணங்களையுடைய வெம்பெருமான்றிருவடிகளிலே ஆத்மரக்ஷாபர சமர்ப்பணம்பண்ணின நமக்கினி கர்த்தவ்யாந்தரமென்ன, என்னதான்சுலபமன்று, இனிவரப்புகுகிற க்லேசந்தானென்ன, ஆருக்குத்தான் வாக்விஷயமிதுவென்கிற வத்யவஸாயத்தையுடையவர்கள் சர்வோத்தரரென்று, சரமப்ரபந்தமான திருவாய்மொழியிலே ஸ்த்தாபித்தருளினாரென்கிறார். (௧௧௭)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] (௧௧௮)

சரீராதிரிக்தனான ஜீவாத்மாவென்ன, தத்ப்ராப்யனான பரமாத்மாவென்ன, தத்ப்ராப்த்யுபாயங்களான பக்திப்ரபத்திகளென்ன, தத்பலமான ஸ்வச்சந்தகைங்கர்யபர்யந்த பரிபூர்ண பகவதநுபவமென்ன, தத்விரோதியான ப்ரக்ருதிசம்பந்த தஜ்ஜந்ய பகவதபசார பாகவதாபசார தத்பலபூத நரகாதிமஹாக்லேஶங்களென்ன, இவ்வர்த்தபஞ்சகவிஷயமாகவும், இவற்றையறிந்த ஶ்ரீவைஷ்ணவர்களுடைய ப்ரபாவவிஷயமாகவும், தத்ஸேவையாலே வரக்கடவதான மநோநைர்மல்ய விஷயமாகவும், சாஸ்த்ரங்களிலே ஜ்ஞாதவ்யங்களாய் அத்யந்த சாரங்களானவர்த்தங்களையெல்லாம் த்ராமிடவேதமான திருவாய்மொழியிலே பரமகாருணிகரான ஆழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார்.... … … … … … … … … (௧௧௮)

மேலிரண்டுஶ்லோகத்தாலே, ஆழ்வாருடைய பக்திபரீவாஹமான திருவாய்மொழியினுடைய தாத்பர்யப்ரகாசிகையாகத் தாமருளிச்செய்த விந்தரத்நாவலியானது, ஶ்ரீரங்கநாதனுக்கும் தத்தாஸரான ஶ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஹ்ருதயஹர்ஷிணியாகாநிற்கிறதென்கிறார்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] (௧௧௯)

ஸத்ஸம்ப்ரதாயபரம்பரையாலே சமதிகதமாய் சர்வவர்ணயோக்யமாய் த்ராமிடவேதமான திருவாய்மொழியிலே ருசியையுடையராய், அத்தாலேபரிசுத்தமநஸ்கரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, இப்ப்ரபந்த வ்யாக்யாநத்தாலே வேங்கடநாததேசிகர் நிரவதிகசந்தோஷத்தை யுண்டாக்கினர்; இதினுடைய சமீசீநதையிலே எம்பெருமானலே * மயர்வறமதிநலமருளப்பட்ட சடகோபர்தானேசாக்ஷி; அதவா, இவர்க்கு * மயர்வறமதிநலமருளின சர்வஜ்ஞனன வெம்பெருமான்றனேசாக்ஷி; ஈஷதவத்யத்தோடேகூடிலும் ஆஸ்ரிதரிடத்திலே அவிசால்யமான க்ருபையையுடையனகையினலே பொறுத்தருளுவன்; ஆகையால், நமக்குவருவதொரு தப்பில்லையென்றுகருத்து... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௧௧௧)

ஶோகஶ்ஶ்லோகத்வமாகா³தி³தி வத³தி ஜக³த்ஸ்யோ ப்ராயாணோ ப்ராத்³ய
ஷ்டா²நாக ஶ்லோகநாயாந்தஹவாரஸபரீவாஹத ஸ்ராவ்யவேதா³ந்த, । வே
தா³ந்தாசார்யக்ருப்தப்ரஹத்ததப்ரஹவிதே³ஷ்வேஷு ஸாக்ஷ்யதேயம் ப்ரத்யா
தாத்பர்யரத்நாவளி, ப்ரணவகணாப்ஜநீரஜஹ்ருத்ஸு ॥ (௧௨௦)

"ஶோகஶ்ஶ்லோகத்வமாகத꞉" (ஸோகஸ்ஸ்லோகத்வமாகத꞉) என்கிறபடியே - வால்மீகிமஹர்ஷிக்கு ஸோகந்தானே ஸ்லோகமானப்போலே, ஆழ்வாருடைய * மயர்வறமதிநலமாகிற சமுத்ரத்திலுதிதமாய், பஹுவிதகல்லோலயுத பகவதநுபவபரீவாஹமான திருவாய்மொழியில்நின்றும், வேதாந்தாசார்யதாசம்பத்தையுடையராய் எல்லாராலும் பஹுமதராய் சர்வஜ்ஞரான வேங்கடநாததேசிகராலே சாரோத்தாரேண சங்க்ருஹீதையாய், நிர்மலகுணையான தாத்பர்யரத்நாவலியானது, ரங்கபூரமணனுக்கு ஹ்ருதயரஞ்சநியாகாநிற்கிறது. "நிம்பவ்ருத்திர்ஹ்ருத்கீர்ணோநக்ருத꞉பரிதப்யதே" (நிம்பவ்ருத்திபிருத்கீர்ணோநகுத꞉பரிதப்யதே)(௧௨௦)

ஶடாரிஸூக்திதாத்பர்யரத்நாவளிரியம் ஶுபா⁴ ।
விஶ்ருதா வேங்கடேஶேந விது³ஷா விது³ஷாம்வரே ॥

வேதா³ந்ததே³ஶிககி³ராம் மஹநீயஸூக்திம்
ஸாரம் வதே³த³ணிவ தி³வ்யமதி³ர்ஹநார்யா ।
தஸ்மிந்விஷ்டேந ஹோமஸம்ஸுவ்ருதேத
த்யஜ்யஸ்வ ஸஹ்ருத³யா ஹ்ருத³யாபஹஞ்சா ॥

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

முனிமாறன்முன்புரைசெய்முற்றின்பநீங்கித்
தனியாகிநின்றுதளர்ந்து — நனியாம்
பரமபத்தியாலைந்துபங்கயத்தாள்கோனை
யொருமையுற்றுச்சேர்ந்தானுயர்ந்து. (௧௦௦)

(முனிமாறன்) இதில், பரமபக்தியாலே பரப்ராப்தியானபடியைப்பேசின பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் * சூழ்விசும்பணிமுகிலிலே-பரமபதத்திலேபுக்கு நிரதிசயாநந்தயுக்தராய் நித்யசூரிகள் திரளிலேயிருக்கிறாராகத் தம்மையநுசந்தித்தவிது ஜ்ஞாநாநுசந்தாநமாத்ரமாய் பாஹ்யசம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே, மேருசிகரத்திலே சுகோத்தரமாகவிருந்தவன் பேராழமான பாதாளத்திலே தலைகீழாகத்தள்ளுண்டுவிழுந்து நோவுபடுமாபோலே, * அநந்தக்லேஶபாஜநமான சம்சாரத்திலே தாமிருக்கிறபடியைக்கண்டு, ஈஶ்வரனுக்குப் பண்டுபோலே பொருகுணவிஷ்காராதிகளால் பரிஹரிக்கவொண்ணாதபடி ஆற்றாமை தலையெடுத்து, ஒருதூதப்ரேஷணாதிகளாலேயிட்டு நீட்டுகையுமன்றிக்கே, தாமே அவன்முகத்தைப்பார்த்து, தம்மாலிது பரிஹரித்துக்கொள்ளப்போகா திருக்கிறபடியையும், சாதநாந்தரங்களை யநுஷ்ட்டித்தாலும் அவன்கைபார்த்திருக்கவேண்டுகிறபடியையும் சொல்லிக்கொண்டு, பெரியபிராட்டியாராணையிட்டுத்தடுத்தும் வளைத்தும் அவனைப்பெறவேண்டும்படி பரமபக்தி தலையெடுத்து, நிர்க்ருணருடைய ஹ்ருதயங்களுங்கூட விரங்கும்படியாகவும், அவனுக்குத்தங்காரியம் செய்தல்லது திருநாட்டில் குடியிருப்பரிதாம்படியாகவும் பெருமிடறுசெய்து கூப்பிட்டுப் பெரியவார்த்தியோடே திருவடிகளிலேசரணம்புக; பெரியதிருவடிதிருத்தோளிலே பெரியபிராட்டியாரோடேகூட விவரபேக்ஷித்தபடியே சர்வேஶ்வரன்வந்துதோற்றி, காற்கட்டான ப்ரக்ருதிசம்பந்தத்தையுமறுத்து, பரமபதத்திலேகொடுபோய், நித்யசூரிகளோடே யொருகோவையாக்கி, நித்யகைங்கர்யம்கொண்டருள; அத்தாலேதாம் நிரஸ்தப்ரதிபந்தகராய், ப்ராப்த சமஸ்த மநோரதரானபடியைச்சொல்லித் தலைக்கட்டுகிற * முனியேநான்முகனிலர்த்தத்தை "முனிமாறன்" இத்யாதியாலே யருளிச்செய்து தலைக்கட்டுகிறானென்கை.

(முனிமாறன்) சர்வேஶ்வரன், "முனியே" என்னும்படி சதவஸ்த்தமான சம்ஹ்ருதிசமயத்தில் சர்வசேதநரக்ஷணத்திலே * த்யாநாந்தஸ்த்தனாயிருக்குமாபோலே, இவரும், நித்யசம்சாரிகளாய் சம்சரித்து அசித்ப்ராயரான ஆத்மாக்கள்விஷயத்திலும் ரக்ஷணசிந்தைபண்ணிப்போருகையாலே - முனியென்கிறது; அன்றிக்கே, பகவத்விஷயத்திலே * எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரென்னுதல்; அன்றிக்கே, ப்ரக்ருதத்துக்குச்சேர, சர்வேஶ்வரன்விஷயத்திலே பரமபக்திபர்யந்தமாக நிரந்தரசிந்தாயுக்தராயிருக்குமவரென்னுதல்; இப்படி மநநசீலராயிருக்குமாழ்வார். (முன்புளாசெய்முற்றின்பம்நீங்கி) அதாவது - "களிதாகியசிந்தையனாய்க்களிக்கின்றேன்" என்றும், "விருப்பேபெற்றமுதமுண்டுகளித்தேனே" என்றும், "உண்டுகளித்தேற்கும்பரென்குறைமேலைத்தொண்டுகளித்தந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்" என்றும், "கண்ணுள்நின்றகலான்" என்றும், "உற்றேனுகந்துபணிசெய்துனபாதம் | பெற்றேன்" என்றும், "வந்தவரெதிர்கொள்ளமாமணிமண்டபத் | தந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும், இப்படி முன்புபேற்றைப்பெற்றதாகவருளிச்செய்த சமஸ்தாநந்தமும் நிரஸ்தமாய்ப்போய். அதெல்லாம் மாநசாநுபவமாத்ரமாய், ப்ரத்யக்ஷ சாக்ஷாத்காரத்திலே அபேக்ஷையுடையராய், அத்தை அப்போதேபெ

ருமல் மீளவு மஜ்ஞாநாவஹமான சம்சாரத்திலேயிருக்கக்கண்டு, பூர்வத்திலாநந்தமு பூர்வமாம்படிகழிந்ததென்கை. (தனியாகிநின்றுதளர்ந்து) * அந்தமில்பேரின்பத்தடியரான சூரிஸங்கங்களுடனேயிருந்ததும் ஸ்வப்நகல்பமாய், பழையசம்சாரத்தில் தனிமையேசேஷித்து. பிராட்டி, திருவயோத்யையிலேராவணாந்தகரானபெருமாளை, "பரதனும் தம்பிசத்ருக்கனனுமிலக்குமனோடுமைதிலியும்" என்னும்படி சேர்த்தியாயிருந்தநுபவித்து, பின்புபிரிந்து, "𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑌮𑌧𑍍𑌯𑍇𑌵𑌿𑌜𑌨𑍇𑌵𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌬𑌾𑌲𑍇𑌵𑌕𑌨𑍍𑌯𑌾𑌵𑌿𑌲𑌲𑌾𑌪𑌸𑍀𑌤𑌾" (காந்தாரமத்யேவிஜநேவிஸ்ருஷ்டாபாலேவகந்யாவிலலாபஸீதா) என்னும்படி தனியேநின்றுகூப்பிட்டாப்போலே, "தனியேனாருயிரே" என்றுதனியாகிநின்றுதளர்ந்து மிகவுமவசாதத்தையுடையராய்த்தறைப்பட்டு. அதாவது - "கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே-மாயஞ்செய்யேலென்னை" என்றும், "மாயஞ்செய்யேல்" என்றுதொடங்கி "திருவாணைநின்னாணைகண்டாய் - கூவிக்கொள்ளாய்வந்தந்தோ" என்றும், "ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்நான்" என்றும், "உம்பரந்தண்பாழேயோ-என்னைப்போரவிட்டிட்டாயே" என்றும், "எனக்காராவமுதானாயே" என்றும், "எனக்காராவமுதாயெனதாவியையின்னுயிரைமனக்காராமை மன்னியுண்டிட்டா யினியுண்டொழியாய்" என்றும், "கோலமலர்ப்பாவைக்கன்பாகியவென்னன்பேயோ - உன்னைப்பெற்றினிப்போக்குவனோ" என்றும், "பெற்றினிப்போக்குவனோவுன்னை" என்றும், "முதற்றனியுன்னையுன்னையெனைநாள்வந்துகூடுவன்நான்" என்றும், இப்படி ஆற்றாமையாலே அவஸந்நராய்க்கூப்பிட்டென்கை. (நணியாம்பரமபத்தியால்நைந்து) "அதனிற்பெரிய" என்னும்படி தத்த்வத்ரயங்களிலும் பெரிதாய், * முடிந்த அவாவானபரமபக்தியாலே பரிபக்வராய். நணி-பெருமை. அன்றிக்கே, (பரமபத்தியாலலைந்து) என்றுபாடமாய், முடிந்த அவாவாகிற வமுதவெள்ளமான ஆநந்தசாகரத்திலே மக்நராயலைந்தென்றுமாம். (பங்கயத்தாள்கோனை) (உத்தரவாக்யத்தில் கைங்கர்யப்ரதிசம்பந்தியான ஸ்ரிய꞉பதியை) (ஒருமையுற்று) "வீடுதிருத்தி" "விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்" என்றும் "வானேதருவானெனக்காயென்னோடொட்டி" என்றும் த்வரிக்கிற சர்வேஸ்வரன் திருவுள்ளத்தோடே சேரும்படி இவர்திருவுள்ளமும் த்வரித்து ஒருதலைத்தென்னுதல்; அன்றிக்கே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியுக்தராய்ப் பேற்றுக்கு த்வரித்து அவாவாலேகூப்பிட்டுப்போந்த விவர்திருவுள்ளமும், "𑌮𑍁𑌦𑌿𑌤𑌃𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑍇" (முதித꞉பரிஷஸ்வஜே) என்னும்படி "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்று இவரபிநிவேசம்தீர சம்ஸ்லேஷிக்கையாலே அவாவற்றுவீடுபெற்றப்ரகாரத்தையாகவுமாம். (பங்கயத்தாள்கோனையொருமையுற்று - உயர்ந்து - சேர்ந்தான்) அதாவது- "கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே ! சாலப்பலநாளடியேனின்னம்தளர்வேனோ" என்கிறவிழவுதீர, ஸ்ரிய꞉பதியானசர்வேஸ்வரனை, ஒருதலைத்த பரமபக்தியுக்தராய் அத்தாலே நித்யசூரிகளுச்ச்ராயத்தை இங்கேயுடையராய் ப்ரத்யக்ஷ சாக்ஷாத்காரமாம்படிகிட்டி, இருவருமானசேர்த்தியிலே, "அடிமைசெய்வார்திருமாலுக்கே" என்னும்படி அடிமைசெய்யப்பெற்றார்; அவனும், "[illegible]

தஃவபிஷஷ்வஜெ" ( அங்கேபரதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே ) என்று இவரைப்பெற்று ஹ்ருஷ்டனாக; இவரும், அத்தலையில் முகோல்லாசத்தைப்பெற்றநுபவித்து ஹ்ருஷ்டராகிறார்; அத்தையாய்த்து (ஒருமையுற்றுச்சேர்ந்தான்) என்கிறது. இத்தால் - " அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன் " என்றத்தைநினைக்கிறது.

" சாக்ஷாத்கரித்தபரமப்ராப்திக்கு தலைமிசையாய்வந்து தாள்களைப்பூண்டு போகாமல்தடுத்துத் திருவாணையிட்டுக் கூசஞ்செய்யாதுசெய்த பிழையற்றுக் கொம்பற்றக்கிகேடுபோரவிட்ட பெரும்பழிபுறம்புபோனால் வருமிழவு உண்டிட்டமுற்றீம்பு அன்புவளர்ந்த அடியுரம் உயிருறவுமுதல்ளவு துறக்கைகளாலே பெருவாணையல்லவாக்கின பேரவா குளப்படியாம்படி கடல்போன்ற வாதரத்தோடேசூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார்" என்றிறே ஆசார்ய ஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தது. " கண்டுகளிப்பவளவும் - பரஜ்ஞாநகர்ப்பபரபக்தி, இருந்தமையென்றது - பூர்ணபரஜ்ஞாநம், முடிந்த அவாவென்றது - பரமபக்தி, இவைஜ்ஞாநதர்ஶந ப்ராப்த்யவஸ்த்தைகள்" என்றும் இந்தபரபக்த்யாதிபேதத்தையு மருளிச்செய்தார். " ஏவம்விதமான பரமபக்தியாலே பரிபக்வராய் பலத்தோடேசேர்ந்தார் " என்கிற திருவாய்மொழியினர்த்தத்தை இப்ப்ரபந்தத்தி லிப்பாட்டாலே சேகரித்தருளினாராய்த்து... ... ... ... ... ... ... ... ... ... ... (௧00)

ஸ்ரீஷ்டி ஸ்ஹஸ்ராத்ஸம்வ்ராவ்தவெஷாஜயஷ்ஹஸாஶயம்।
ஸ்ரீமஹாவாத்ஸஹிஷ்ம்ஸ்ரீரவெஜ்டிமஸிம்ஹஜெ॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

பத்தாம்பத்தில் - பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - ௧00.—பாட்டு - ௧௧0௨.

---

## திருவாய்மொழியும்

### அதற்குண்டான வ்யாக்யாநங்களும்



